உ
கணபதி துணை

# சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்



## பதிகம்

குணவாயிற் கோட்டத் தரசு துறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்
ஒருமுலை யிழந்தாளோர் திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொ டெங்

---

### அரும்பதவுரை

#### காப்பு

கரும்பு மிளநீருங் கட்டிக் கனியும்
விரும்பும் விநாயகனை வேண்டி—அரும்பவிழ்தார்ச்
சேரமான் *செய்த சிலப்பதிகா ரக்கதையைச்
சாரமாய் நாவே தரி.

**அடி, 1.** குணவாயிற் கோட்டம் - திருக்குணவாயிற் கோயில்.

2. சேரலென்றது செங்குட்டுவனை. சேரற்கு இளங்கோவாகிய அடிகட்கென்க. இளங்கோவடிகள் தாம் துறந்திருந்து இக்காவியம் செய்தார்.

4. கொழுநிழற்கண் நின்று (எ) காட்டி.

---

### குறிப்பு

இந்நூலுட் சிலசில இடங்களில் அரும்பதவுரையாசிரியர் கொண்ட பாடம் வேருகவும் அடியார்க்குநல்லார் கொண்ட பாடம் வேருகவுமுள்ளன; பதிப்பிக்கப் பெற்றுள்ள தனி மூலப்பகுதிகள் அடியார்க்கு நல்லார் கொண்ட பாடத்திற்கு ஏற்றவை.

(மேற்கோள்) சிலப்பதிகாரம்: இப்பெயர் மென்றொடர்க்குற்றியலுகரம் இயல்பு கணத்துக்கண் திரிந்து வந்தது; (தொல். குற்றியலுகரப். 9, ந.) அடி, 4-9; 'இப்பகுதி புதுமையென்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள் (தொல். மெய். 7, இளம்.)

(பிரதிபேதம்) * 'சொன்ன சிலப்பதிகா ரக்கவியைச்'

கட்புலங் காண விட்புலம் போய
திறும்பூது †போலுமஃ தறிந்தரு ளீயென
அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்
‡யானறி குவனது பட்டதென் றுரைப்போன்
ஆரங் கண்ணிச் சோழன் மூதூர்ப்
பேராச் சிறப்பிற் புகார்நக ரத்துக்
கோவல னென்பானோர் வாணிக னவ்வூர்
நாடக மேத்து நாடகக் கணிகையொ
டாடிய கொள்கையி னரும்பொருள் கேடுறக்
கண்ணகி யென்பாண் மனைவி யவள்காற்
பண்ணமை ¶சிலம்பு பகர்தல் வேண்டிப்
பாடல்சால் சிறப்பிற் பாண்டியன் பெருஞ்சீர்
மாட மதுரை புகுந்தன னதுகொண்டு
மன்பெரும் பீடிகை மறுகிற் செல்வோன்
பொன்செய் கொல்லன் றன்கைக் காட்டக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லையீங் கிருக்கென் றேகிப்
பண்டுதான் கொண்ட சில்லரிச் சிலம்பினைக்
கண்டனன் பிறனோர் கள்வன் கையென
வினைவிளை கால மாதலின் யாவதும்
சினையலர் வேம்பன் றேரா னாகிக்
கன்றிய காவலர்க் கூஉய்க் கள்வனைக்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்கெனக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
நிலைக்களங் காணா ணெடுங்கணீ §ருகுத்துப்

---

8. கட்புலம் - கண்ணென்கின்ற புலம். விட்புலம் - விண்ணென்கின்ற இடம்.
13. பேராச்சிறப்பு - நீங்காத பெருமை.
15. நாடகமேத்தும் நாடகக்கணிகை - நாடகத்தை ஆடிச்சிறப்பிக்கும் கணிகை.
16. ஆடிய கொள்கையின் - இவன் ஆடிய கோட்பாட்டால்.
20. புகுந்தனன் - புகுந்தனனாய். 21. பீடிகை - வணிகர்தெரு.
24. யாப்புறவில்லை - பொருத்தமில்லை.
25. பண்டுதான்கொண்ட - முன்பு தான் களவிற்கொண்ட.
29. கன்றிய காவலர் - காவலில் தழும்பியவர்.
32. நிலைக்களம்-நிலையிடம். நெடுங்கணீருகுத்து - நெடுங்கண்ணால் நீர் உகுத்து.

---

அடி, 20. மாடமதுரை : 8:3, 9 : 76, 15 : 112; கலித். 35:17; புறநா. 32 : 5.
(பி - ம்.) † 'போலுமறிந்தரு' ‡ 'யானறிகுவனிது' ¶ 'பொற்சிலம்பு' § 'ருகுப்பப்'

பத்தினி யாகலிற் பாண்டியன் கேடுற
முத்தார மார்பின் முலைமுகந் திருகி
†நிலைகெழு கூட னீளெரி யூட்டிய
பலர்புகழ் பத்தினி யாகு மிவளென
வினைவிளை கால மென்றீ ரியாதவர்
வினைவிளை வென்ன விறலோய் கேட்டி
அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தேன்
ஆரஞ ருற்ற வீரபத் தினிமுன்
மதுரைமா தெய்வம் வந்து தோன்றிக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்தோய்
‡முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவனொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்துச்
சங்கம னென்னும் வாணிகன் மனைவி
இட்ட சாபங் கட்டிய தாகலின்
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
ஈரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் ¶வடிவி னல்லதை
ஈனோர் வடிவிற் காண்ட லில்லெனக்

---

33. பத்தினியாகலின் - ஆக்கலும் அழித்தலும் வல்லளாதலின்.
34. முலைமுகம் - முலையிடம்.
36. பலர்புகழ் பத்தினியாகும் இவளென்று சாத்தன் சொல்ல.
39. அதிராச் சிறப்பு - பகைவரால் அதிர்ச்சியில்லாத சிறப்பு.
40. கொன்றையஞ்சடைமுடி : ஆகுபெயர்.
40-41. (பாடபேதம்.) மன்றப் பொதியில் வெள்ளியம்பலம் - மன்றத்தின்கட் பொதியிலாகிய வெள்ளியம்பலம்.
42. வீரபத்தினி - சீறிய கற்புடையாள்.
46. பைந்தொடி : முன்னிலைப்பெயர். 47. சிங்காமை - சுருங்காமை.
46 - 9. கணவனொடு கட்டியதென்க. 50. கூந்தல் - கூந்தால்.
53. ஈனோர் - இவ்வுலகத்தின் மக்கள். காண்டல் இல்லென - காண்டல் இல்லையென்று சொல்ல.

---

அடி, 49 : மணி : 26. 31. அடி, 53. மு. 23 : 176; ஈனோர் : பெருங். 3. 24 : 207; மணி. 28 : 132. அடி, 50-53 : 23 : 173-6.

(மேற்.) அடி, 35-6. இது கற்பென்னும் பொருளது (தொல். பொருள். 53, ந.)

(பி - ம்.) † 'நிலைகிளர்' ‡ 'முதுவினை' ¶ 'வடிவினனல்லதை'

கோட்டமில் கட்டுரை கேட்டனன் யானென
அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி கார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென
முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய
தடிக ணீரே யருளுகென் றாற்கவர்
மங்கல வாழ்த்துப் பாடலுங் குரவர்
மனையறம் படுத்த காதையு நடநவில்
மங்கை மாதவி †யரங்கேற்று காதையும்
அந்தி மாலைச் சிறப்புச்செய் காதையும்
இந்திர விழவூ ரெடுத்த காதையும்
‡கடலாடு காதையும்
மடலவிழ், கானல் வரியும் வேனில்வந் திறுத்தென
மாதவி யிரங்கிய காதையுந் தீதுடைக்
கனாத்திற முரைத்த காதையும் வினாத்திறத்து
நாடுகாண் காதையுங் காடுகாண் காதையும்
வேட்டுவ வரியுந் தோட்டலர் கோதையொடு
புறஞ்சேரி யிறுத்த காதையுங் கறங்கிசை
ஊர்காண் காதையுஞ் சீர்சா னங்கை
அடைக்கலக் காதையுங் கொலைக்களக் காதையும்

---

56. உரை சால் பத்தினிக்கு - புகழ் அமைந்த பத்தினியை.

57. ஊழ் வினை - முறைமையாகிய பழவினை. உருத்துவந்து - வெளிப்பட்டுவந்து.

58. சூழ்வினை - சூழ்ந்த சிற்பத்தொழில்.

60. பாட்டுடைச் செய்யுள்-உருவாகிய பாட்டுக்களையுடைய காவியம்.

61. முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது - புகாரினும் மதுரையினும் வஞ்சியினும் நிகழ்தலான் மூவர்க்கும் உரியது.

62. அடிகளென்றது இளங்கோவடிகளை. என்றாற்கு - என்று சொன்னானாகிய அவனுக்கு.

63. மங்கலவாழ்த்து - கலியாண வாழ்த்து. 69. மடல் - பூ.

71. வினாத் திறத்து - கவுந்தியடிகள் வினாவிய திறத்தையுடைய.

73. தோடு அலர்.

---

அடி, 57. 'ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது' (இறை. 2, உரை): மணி. 26 ; 32.

(பி - ம்.) † 'யரங்கேற்றுக்காதை' ‡ 'கடலாட்டுக்காதையும்'

ஆய்ச்சியர் குரவையுந் தீத்திறங் கேட்ட
துன்ப மாலையு †நண்பக னடுங்கிய
ஊர்சூழ் வரியுஞ் சீர்சால் வேந்தனொடு
வழக்குரை காதையும் வஞ்சின மாலையும்
அழற்படு காதையு மருந்தெய்வந் தோன்றிக்
கட்டுரை காதையு மட்டலர் கோதையர்
குன்றக் குரவையு மென்றிவை யனைத்துடன்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
வாழ்த்து வரந்தரு காதையொ
டிவ்வா றைந்தும்
உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரைசா லடிக ளருள மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்
இது, பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்.

---

78. நண்பகல் நடுங்கிய - கண்ணகி நண்பகற்கண்ணே நடுங்கிய.
82. கட்டுரை - விளங்கச் சொல்லுதல்.
82-3. மட்டலர் கோதையர் குன்றக்குரவை - குறத்தியர் ஆடிய குரவை.
87. பாட்டும் உரையும் கலந்துவந்த காவியம்.

[1] வஞ்சிமூதூர் மணிமண்டபத்திடைத் தந்தையோடிருந்துழி அரசு வீற்றிருக்கும் திருப்பொறியுண்டென்று ஒரு நிமித்திகன் சொல்ல, முன்னோனாகிய செங்குட்டுவன் இருப்ப இவ்வாறு முறைபிறழக் கூறியது பொறாது குணவாயிற் கோட்டத்துக் கடவுளர் முன்னர்த் துறந்திருந்த இளங்கோவடிகளுக்குக் கண்ணகி வானவர்போற்றத் தன் கணவனோடு கூடியது கண்டு செங்குட்டுவனுக்கு உரைத்த குறவர் வந்து, 'எல்லா மறிந்தோய்! இதனை அறிந்தருள்' என்ற கூறிப்போக, பின்பு செங்குட்டுவனைக் கண்டு போந்து அடிகளுழை வந்த சாத்தன் அது பட்டவாறெல்லாம் கூற, அது கேட்டு, அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றென்பதூஉம், பத்தினிமகளிர் [2] பெய்யெனப் பெய்யுமழை யென்பதூஉம், ஊழ்வினை உருத்துவந்து ஊட்டுமென்பதூஉம் இக்கதையகத்து உண்மையின், அதனை யாம் ஒரு செய்யுளாகச் செய்வோமென்று இளங்கோவடிகள் கூற, 'மூவேந்தர் நாட்டினும் நிகழ்ந்த கதையாகலான் ஏனை இருவேந்தரியல்பும் வேத்தியலும் பொதுவியலும் எல்லாம் உணர்ந்த நீரே அருளவேண்டும்' என்று சாத்தன் சொல்ல, இம்முப்பது வகைத்தாகிய செய்யுளை இளங்கோ வடிகள் அருளக் கூலவாணிகன் சாத்தன் கேட்டனனென்க.

---

அடி, 84 : பு. வெ. சூ. 10.

[1] 30 : 173-5 முதலியவற்றைப் பார்க்க.

[2] "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" (குறள், 55.) (பி - ம்.) † 'நன்பக'

# அடியார்க்கு நல்லாருரை



## உரைப்பாயிரம்

குணவாயில்...........வாழ்வீரிங்கென் (30 : 202)

இவ்வியலிசைநாடகப் பொருட்டொடர்நிலைச் செய்யுளை அடிகள் செய்கின்ற காலத்து இயற்றமிழ்நூல் தொல்காப்பியமாதலானும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பா இலக்கணத்தனவாதலானும் அந்நூலின் முடிபே இதற்கு முடிபென்றுணர்க. அந்நூலிற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பாவும் இனமுமென †நான்கினீக்கிய பாவினைத் தொகைவரையறையான் இரண்டென அடக்கியும், விரிவரையறையான் ஆறெனவிரித்தும், அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுக வென்றுங்கூறிப் பின்பு அம்மை முதலிய ‡எட்டுவனப்பும் தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணமென்று கூறியவர், "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினும்" (தொல். செய். 239) என்பதனுல், குவிந்து மெல்லென்ற சொல்லானும் பரந்து வல்லென்ற சொல்லானும் அறம்பொருளின்பம் பயப்ப வீடென்னும் விழுமிய பொருள் பயப்ப ஒருகதைமேற் கொச்சகத்தானும் ஆசிரியத்தானும் வெண்பா வெண்கலிப்பாவானும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களானும் கூறுகவென்றமையான், இத்தொடர்நிலைச்செய்யுள் அங்ஙனங் கூறிய [1]தொடர்நிலையென வுணர்க.

முந்து நூல்களிற் காப்பியமென்னும் வடமொழிப்பெயர் இன்றேனும் ஆசிரியர், "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (தொல். எச்ச. 5) என்றார்; 'ஆகும்மே' என்ற இலேசினான் உய்த்துணரற்பாலதனை மாணாக்கன் ஐயந்தீர்தற்கன்றே பின்னும், "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" (தொல். எச்ச. 6) என்றாரெனக் கொள்க. அன்றியும் பெரியதனைப் பெருங்காப்பியம் என்றேகூறி மறுக்கவேண்டுதலானும், சான்றோர் செய்யுட்களிலும், "கூத்திய ரிருக்கையுஞ் சுற்றிய தாகக், காப்பிய வாசனை கலந்தவை சொல்லி" (பெருங். 4. 3 : 41-2) என இரண்டாம்

---

[1] இந்நூலைத் தொன்மையென்பர் (தொல். செய். 237, ந.)
(பி - ம்.) † 'நான்கினீக்கியப்பாவினை' ‡ 'எட்டுந்தொடர்'

ஊழியதாகிய [1] கபாடபுரத்தின் [2] இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பிய

---

[1] "ततो हेममय दिव्यं मुक्तामणिविभूषतं ।
मुक्ताकवाटं पाण्ड्यानां गता द्रक्ष्यथ वानराः ।

(கிஷ்கிந்தா காண்டம், 41 : 19) என்னும் **ஸ்ரீ வான்மீகி முனிவர்** திருவாக்கு இங்கே அறிதற்பாலது.

[2] இடைச்சங்கமும் மற்றை இரண்டு சங்கங்களும் இருந்த இடமுதலியவற்றைப் பின்வரும் ஆசிரியப்பாவானும் உணர்க :—" வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத், திந்நான் கெல்லையி னிருந்தமிழ் பயின்ற, செந்நாப் புலவர் செய்தியீண் டுரைப்பின், ஆடகக் குடுமி மாடக் கூடலின், முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையில், திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள், மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய், திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி, புவிபுகழ் மருதங் கவினிய முரஞ்சிப், பதிமுடி நாக னிதியின் கிழவன், இனையர்நா னூற்றுநாற் பத்தொன் பதின்மர், அனையர் நானூன் காயிர நூற்றெடு, நாற்பத்தொன் பதின்மர் பார்க்கிற்செந் தமிழோர், புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலும், முதுமை யடுத்த நாரையுங் குருகும், கதியுறச் செய்த களரியா விரையும், ஆங்கவ ரிருந்தது மதத்தொகை யாகும், ஈங்கிவர் தம்மை யிரீஇயபாண் டியர்கள், காய்சின வழுதிமுதற் கடுங்கோ னீரு, ஏசி லாவகை யெண்பத் தொன் பதின்மர், கவியரங் கேறினு ரெழுவ ராகும், மகத்துவ முடைய வகத்திய மிலக்கணம், வடுவறு காட்சி நடுவட் சங்கத், தகத்தியர் தொல் காப் பியத்தமிழ் முனிவர், இருந்தை யூரிற் கருங்கோழி மோசியார், எள்ளாப் புலமை வெள்ளூர்க் காப்பியன், இறவா விசையிற் சிறுபாண்டரங்கன், தேசிக மதுரை யாசிரியன் மாறன், தவரொப் பாய துவரைக் கோமான், தேருங் கவிபுனை கீரந்தை யாரிவர், ஒன்பதோடடுத்த வைம்பதின்ம ராகும், தவலருங் கேள்வித் தன்மைய ருள்ளிட், டிவர்மூ வாயிரத் தெழுநூற் றுவரே, வையகம் பரவச் செய்த செய்யுளும், இருங்கலி கடிந்த பெருங்கலித் தொகையொடு, குருகுவெண் டாளி தெருள்வியாழ மாலை, அந்நா ளிலக்கண மகத்திய மதனொடு, பின்னுட் செய்த பிறங்குதொல் காப்பியம், மதிநலங் கவின்ற மாபு ராணம், புதுநலங் கனிந்த பூத புராணம், வல்லிதி னுணர்ந்த நல்லிசை நுணுக்கம், தாவாக் காலந் தமிழ் பயின் றதுவும், மூவா யிரத்தோ டெழுநூற் றியாண்டு, பரீஇய சங்க மிரீஇயபாண் டியர்கள், வெண்டேர்ச் செழியன் முதலா விறல்கெழு, திண்டேர்க் கொற்ற முடத்திரு மாறன், முரசுடைத் தானை மூவா வந்தம், அரசுநிலை யிட்டோ ரைம்பத்தொன் பதின்மர், இவ்வகை யரசரிற் கவியரங் கேறினர், ஐவகை யரச ராயிடைச் சங்கம், விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக், கண்ணகன் பரப்பிற் கபாடபுர மென்ப, அருங்கடைச் சங்க மிருந்தோர் யாரெனிற், சிறுமே தாவியார் சேந்தம் பூதனார், அறிவுடை யரனார் பெருங்குன் றூர்கிழார், பாடல் சான்ற விளந்திரு மாறன், கூடலாசிரியர் நல்லந் துவனார், பரவுதமிழ் மதுரை மருதனிள நாகர், அவிர்கணைக் காயர் நவினக் கீரர், கீரங் கொற்றர் கிளர்தே னூர்கிழார், ஒருங்கலைமணலூரா சிரியர், நல்லூர்ப் புளியங் காய்ப்பெருஞ் சேந்தர், செல்லூராசிரியர் முண்டம் பெருங்குமரர், முசிறியா சிரியர் நீல கண்டனார், அசைவிரி குன்றத் தாசிரிய ரன்றி, நாத்தலங் கனிக்குஞ் சீத்தலைச் சாத்தர், முப்பா லுணரு முப்பூரி குடிகிழார், உருத்திர சன்மர் மருத்துவ

ஞரும், இருந்தையூர்க் கருங்கோழிமோசியாரும், வெள்ளூர்க் காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும், †மதுரையாசிரியன் மாறனாரும், துவரைக் கோமகனும், கீரந்தையாரும் என்றித் ‡தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற் பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியு முதலிய ¶செய்யுளிலக்கியம் ஆராய்ந்து செய்த [1] உதயணன் கதையுள்ளும், "கருதுவ தங்கொன் றுண்டோ காப்பியக் கவிகள் காம, வெரியெழ விகற்பித் திட்டார்" (1585) எனச் சிந்தாமணியுள்ளும், "நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்" (19 : 80) என மணிமேகலை யுள்ளும் பிறவற்றுள்ளும் கூறினமை யானும் சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலை யென்னும் தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியமென்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தெனவுணர்க.

இதனுள் முற்கூறிய வனப்பென்பது §பெரும்பான்மையும் பலவுறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகாதலின் பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டுபெருகிய தொடர்நிலைச் செய்யுட்கு

ராகிய, நாம நாற்கலைத் தாமோ தரனார், மாதவள னாரோ டோதுமிள நாகர், கடியுங் காமப் படியங் கொற்றனார், அருஞ்செய் லூர்வாழ் பெருஞ்சுவ னாருடன், புவிபுகழ் புலமைக் கபிலர் பரணர், இன்னாத் தடிந்த நன்னாக ரன்றியும், ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்துக், குரையிடை யிட்ட விரகர் கல்லாடர், பேர்மூல முணரு மாமூலர் தம்மொடு, விச்சை கற்றிடு நச்செள்ளை யார்முதல், தேனூற் றெடுப்பச் செந்தமிழ் பகர்ந்தோர், நானூற் றுவர்முத னாற்பத்தொன் பதின்மர், பீடுபெற வுலகிற் பாடிய செய்யுள், முத்தொள் ளாயிர நற்றிணை நெடுந்தொகை, அகநா னூறு புறநா னூறு, குறுந்தொகை சிற்றிசை பேரிசை வரியோ, டறம்புகல் பதிற்றுப்பத் தைம்பதோ டிருபான், பெறும்பரி பாடலுங் குறுங்கலி நூற்றைம், பதுமுத லாகிய நவையறுங் கலைகள், அக்கா லத்தவர்க் ககத்திய மதனொடு, மிக்கா மிலக்கணம் விளங்குதொல் காப்பியம், எண்ணூற் கேள்விய ரிருந்த தாயிரத், தெண்ணூற் றைம்பது வருடமென்ப, இடர்ப்படா திவர்களைச் சங்க மிரீஇயினர், முடத்திரு மாறன் முதலா வுக்கிரப், பெருவழுதி யீருப் பிறங்கு பாண்டிய, நரபதிகளாகு நாற்பத்தொன் பதின்மர், இவருட் கவியரங் கேறினர் மூவர், புவியிற் சங்கம் புகழ்வட மதுரை, ஆதிமுச் சங்கத் தருந்தமிழ்க் கவிஞர், ஓதிய செய்யுளுலவாப் பெரும்பொருள், வாளாக் கேட்குந் தோளாச் செவிக்கும், கேட்டுந் தெரியா வோட்டைநெஞ் சினுக்கும், நுழையாவாதலி னுழை புலன் றன்னொடும், விழைவார்க் குரைக்க வேண்டுவர் தெரிந்தே."—இச்செய்யுள் பாண்டி நாட்டிலுள்ள செவ்வூர்ச் சிற்றம் பலக்கவிராயரவர்கள் வீட்டிலிருந்த பழைய ஏட்டுப்புத்தகமொன்றில் எழுதப்பட்டிருந்தது. இவ்வகவலிலுள்ள சிலபகுதி மறுத்தற்குரியனவாக இருந்தும் ஒருசாராருடைய கொள்கை தெரிவதற்கு இங்கே பதிப்பிக்கலாயிற்று.

[1] இது பெருங்கதை யென்றும், கதை யென்றும் இவ்வுரையுள் மேல் எடுத்தாளப்படும்.

(பி - ம்.) † 'மதுரைப்பன்மாறனாரும்' ‡ 'தொடர்க்கத்தரான பதின்மருள்ளிட்ட' ¶ 'செய்யுளிலக்கியராராய்ந்த', 'செய்யுளிலக்கியமாராய்ந்த' § 'பெரும்பான்மையாய்ப்'

இவ்வெட்டும் அலங்காரமாயின; ஆகவே இக்காப்பியத்திற்கும் தோலென்பது ஒரு சொல்லலங்காரமாகவே யுணர்க.

இனி, இதன் செய்யுள் காதையென்று வழங்குதலிற் கதையை யுடையது காதையாமாகலின், ஆசிரியம் வெண்பா வெண் கலிப்பா என்னும் இவற்றோடு சிறுபான்மையான் ஒருசார் கொச்சகக்கலி மயங்கிவருதலானும், காண்டமெனக் குறிபெறுத லானும் இதனைக் கதையென்றல் வலியுடைத்தென்பார்க்கு அற்றன்று; கதையென்பது பொய்ப்பொருள் புணர்த்துக் கூறுவது; என்னை? "கதையெனக் கருதல் செய்யான் மெய் யெனத் தானுங் கொண்டான்" (சீவக. 2144) என்றமையா னும், வழக்கினுள்ளும் இஃது ஒரு கதை யென்பவாகலானும், "நாடகக் காப்பியம்" (மணி. 19 : 80) என்றலானும் கதை யென்பது அல்லது. இனி, அது நல்ல புலவராற் பொருளொடு புணராப் பொய்ம்மொழியால் நாட்டப்பட்டு வருவதாகலின், இஃது அவ்வாறன்றி யோனியென்னும் நாடகவுறுப்பும் நாடக மும் தழுவி, உள்ளோன் தலைவனாக உள்ளதொரு பொருள்மேற் சித்திரிக்கப்படாது பட்டாங்கு கிளந்து பலவினப் பாட்டான் வருதலின், ஈது அன்னதன்றென்பார்க்குக் காப்பியமென்றலு மாம்.

இனி இசைத்தமிழ்நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலா உள்ள தொன்னூல்கள் இறந்தன. நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல்களும் இறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் என்பனவற் றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தனபோலும். இறக்கவேவரும், † பெருங்கல முதலிய பிறவுமாம். இவற்றுட் பெருங்கலமாவது பேரியாழ்; அது கோட்டினதளவு பன்னிரு சாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிருசாணும், இப்பெற்றிக்கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும் பெற்று ஆயிரங்கோல் தொடுத்து இயல்வது; என்னை? "[1] ஆயிர நரம்பிற் றுதியா ழாகும், ஏனை யுறுப்பு மொப்பன கொளலே, பத்தர தளவுங் கோட்டின தளவும், ஒத்த வென்ப விருமூன் றிரட்டி, வணர்சா ணொழித்தென வைத்தனர் புலவர்" என நூலுள்ளும், "தலமுத லூழியிற் றானவர் தருக்கறப், புலமக ளாளர் புரிநரப் பாயிரம், வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச், செலவு முறை யெல்லாஞ் செய்கையிற் றெரிந்து, மற்றை யாழும் கற்றுமுறை பிழையான்" (4. 3 : 51–5) எனக் கதையினுள்ளும் கூறினாராகலாற் பேரியாழ் முதலிய ஏனவும் இறந்தனவெனக் கொள்க.

---

[1] "ஆயிர நரம்பிற் றுதியா ழாகும்" என்பதுமட்டும் பிங்கலத்தில் ஒரு சூத்திரமாகக் காணப்படுகின்றது.

(பி - ம்.) † 'அருங்கலம்'

இனித் தேவவிருடியாகிய குறுமுனிபாற் கேட்ட மாணாக்கர் பன்னிருவருள் சிகண்டி யென்னும் அருந்தவமுனி, இடைச் சங்கத்து அநாகுலனென்னும் தெய்வப் பாண்டியன் தேரோடு விசும்புசெல்வோன் திலோத்தமை யென்னும் தெய்வமகளைக் கண்டு தேரிற் கூடின விடத்துச் சனித்தானைத் தேவரும் முனிவரும் † சரியாநிற்கத் தோன்றினமையிற் சாரகுமாரனென அப்பெயர் பெற்ற குமரன் இசையறிதற்குச்செய்த இசைநுணுக்கமும், பாரசவமுனிவரில் ‡யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும், அறிவனார் செய்த பஞ்சமரபும், ஆதிவாயிலார் செய்த பரதசேனாபதீயமும், கடைச்சங்கமிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த முதனூல்களிலுள்ள வசைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்து இயன்ற மதிவாணர் நாடகத் தமிழ்நூலுமென இவ்வைந்தும் இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும் ஒருபுடை யொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக்கொள்க.

உலகத்துக் காப்பியஞ்செய்வோன் அறனும் பொருளும் இன்பமும் வீடும் கூறல் வேண்டுமன்றே; இந்நாடகக் காப்பியத்தினுள் அறனும் பொருளும் இன்பமும் கூறிச் சிறிதாயினும் வீடு கூறிற்றிலர்; என்னையெனின், "யானறிகுவனது பட்டதென்று" (பதி. 11) உரைத்த சாத்தனார் நாற்பொருளும் பயப்பப் பெருங்காப்பியமாகச் செய்யக் கருதியிருக்கின்றார்க்கு அடிகள், "நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" (பதி. 60) என உளப்பாட்டுத் தன்மையாற் கூறச் ¶சாத்தனார் இவர் ஏனையிருவேந்தரையும் புகழ்ந்துரையார் என்பது கருதி மூவேந்தர்க்கும் உரியதாகலின், "நீரே யருளுக" (பதி. 62) என்று ஏகார வினைப் பொருண்மையான் அவர் கருத்து நிகழ்ச்சி விளங்குவான் கூற, அவர் அதனையே துணிந்து தமது முத்தமிழ்க் கல்வியும் வித்தகக் கவியும் காட்டுதற்குத் தாம் வகுத்துக்கொண்ட மூவகை உள்ளுறையின் விளைவு தோன்ற, மங்கல வாழ்த்துப் பாடல் முதல் வரந்தருகாதையிறுதி முப்பது வகைத்தாக வரையறுத்து, அதனை அதிகாரமாகப் பொதிந்து முன்வைத்துப் பின்னர், அறனும் பொருளும் இன்பமும் கூறி அடைக்கலக்காதையிறுதிக்கண், "போதி யறவோன்......யளிப்பவும்" (103-4) எனக் கோவலன் முன் கண்ட கனவின்கண் நிகழ்ந்ததை எதிர்கால நிமித்தமாக மாடலற்குக் கூறுதலானும், நீர்ப்படையுள், "மாதவி........போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்" (103-8) என்றலானும், வாழ்த்தின்கண், "மாதவி தன்துறவுங் கேட்டாயோ தோழீ, மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழீ" (அடித்தோழியரற்று) எனத் தேவந்தி கூறுதலானும், வரந்தருகாதையில், "மணிமேகலையார், யாதவ டுறத்தற் கேதுவீங்குரை" (4-5) என "மையீரோதி" (10) முதல் "போதித் தானம் புரிந்

(பி - ம்.) † 'சரிய நிற்கத் தோன்றினமையிற் சயந்த குமாரனெனப் பெயர்பெற்ற' ‡ 'யமளேந்திரர் செய்த பஞ்ச மரபும்' ¶ 'சாத்தர்'

தறம் படுத்தனள்" (28) என்பதீருகப் பக்குவஞ்சொல்லி, "பருவ மன்றியும் பைந்தொடி நங்கை, திருவிழை கோல நீங்கினள்" (35-6) என்றமையானும் மணிமேகலை துறந்தாளென்பது உணர்ந்து அத்துறவினைப் பின்வைத்து அதனோடு நாற்பொருளும் பூரித்துப் பெருங்காப்பியமாக முடித்தலைக் கருதி அடிகள் சாத்தனார்க்கு இவ்வுரையை உரைத்துழி, அவர் மணிமேகலைபெயரான் அவள் துறவே துறவாக அறனும் வீடும் பயப்ப ஒரு காப்பியம் செய்தமைத்தனமெனக் கேட்டு, அவ்வடிகள் விரும்பி இவ்விரண்டினையும் ஒரு காப்பியமாக்கி உலகின்கண் நடாத்துவான் வேண்டவும் இருவர் செய்தலின், இரண்டாகி நடத்தனவென்க.

எழுத்தின் றிறனறிந்தோ வின்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
றெழுதத் துணிவதே யான்.

உரைப்பாயிரம் முற்றிற்று.

---

## அடியார்க்கு நல்லாருரைச் சிறப்புப்பாயிரம்[1]

(1) பருந்து நிழலுமெனப் பாவு முரையும்
பொருந்துநெறி யெல்லாப் பொருளும்—தெரிந்திப்
படியார்க்கு நல்லமிர்தம் பாலித்தா னன்னூல்
அடியார்க்கு நல்லானென் பான்.

(2) ஒருந் தமிழொரு மூன்று முலகின் புறவகுத்துச்
†சேரன் றெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்தபொருள்
ஆருந் ‡தெரிய விரித்துரைத் தானடி யார்க்குநல்லான்
காருந் தருவு மனையா னிரம்பையர் காவலனே.

(3) காற்றைப் பிடித்துக் கடத்தி லடைத்தக் கடியபெருங்
காற்றைக் குரம்பைசெய் வார்செய்கை போலுமற் கால [மெனும்
கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண்ண காங்கெயர் [கோனளித்த
சோற்றுச் செருக்கல்ல வோதமிழ் மூன்றுரை சொல்வித்ததே.

---

[1] இவை பண்டைடுக்காலத்தனவே; இயற்றியவர் பெயர் தெரியவில்லை. இவை ஒவ்வோருறுப்பின் உரையிறுதியிலும் இருந்தன; விரிவஞ்சி விடப்பட்டன.

(பி - ம்.) † 'சேரன் றெருகுத்த' ‡ 'தெளிய'

# ப தி க ம்



## அடியார்க்கு நல்லாருரை

### 1 - 2. குணவாயில்...........அடிகட்கு

அடிகளென்றது துறத்தலான். † அத்துறவின் வரலாறு யாதோ வெனின், குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலா தற்குத் திகழொளி ஞாயிற் றேழ்பரி நெடுந்தேர்ச் சோழன் றன்மக ணற் சோணையீன்ற மக்க ளிருவருள் முன்னோன் றன்னைப் பின்ன ரியற்றிப் பின்னோன் றன்னையும் பெருநம்பியாகென அன்னவர் தம்மொடு தென் னர் செம்பியர் தன்னடி போற்றத் தமனிய மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த பொங்கணை மீமிசை உவரித் திரையிற் கவரி யிரட்ட வேந்தனிருந்துழிச் சார்ந்த நிமித்திகன் அடிமுதல் முடிவரை நெடிதுநோக்கி யின்றோள் கழியப் பொன்றிகழுலகஞ் சேர்தி நீயெனச் சேரலற் குரைத்தவன் மைந் தரை நோக்கி நந்தாச் செங்கோ லந்தமிலின்பத் தரசா ளுரிமை இளை யோற் குண்டென வுளைவன னனிவெகுண் டழுக்காற் றெழுக்கத் திழுக்கு நெஞ்சினன் கண்ணெரி தவழ வண்ணலை நோக்குங் கொங்கவிழ் நறுந் தார்க் கொடித்தேர்த்தானைச் செங்குட்டு வன்றன் செல்ல னீங்கப் பகல் செல் வாயிற் படியோர் தம்மு னகலிடப் பார மகல நீக்கிச் சிந்தை செல் லாச் சேணெடுந் தூரத் தந்தமி லின்பத் தரைசாள் வேந்தாயினனென் பது. இக்கதையைப் பதிற்றுப்பத்தினுள் அஞ்சாம்பத்தின் முடிவின் கண், "வடவருட்கும்" (பதிகம்) என்னுங் கவியுள்ளும், இந்நூலுள் வாழ்த்தின்கண்ணும், வரந்தரு காதைக் கண்ணும் காண்க.

குணவாயில்-திருக்குணவாயிலென்பதோரூர்; அது வஞ்சியின் கீழ்த் திசைக்கண் உள்ளது; அஃது ஆகுபெயர். அது குணக்கண்வாயில் குணவாயில்; குணக்கின்கண்வாயில் குணவாயிலெனச் சாரியைபெறுதும் பெற்றும் வரினும் அமையும். என்னை? "ஏழ னுருபிற்குத் திசைப் பெயர் முன்னர்ச், சாரியைக் கிளவி யியற்கையு மாகும்" (தொல். உருபு. 29) என்றுராகலின். வாயிற்கோட்டமென்பது "லகார விறுதி னகார வியற்றே" (தொல். புள்ளி. 71) என்பதனால், ஏழனுருபின்கண் வந்த சாரியை லகார வீறு, வருமொழிமுதல் வல்லெழுத்து வர னகாரம் வேற்றுமைக்கண் திரிந்து றகாரமாயிற்றே போலத் ‡ திரிந்தது. கோட்டம்- அருகன் கோயில். அது "மஃகான் புள்ளிமு னத்தே சாரியை" (தொல்.

---

(பி - ம்.) † 'துறவிற்குக்காரணம்யாதோ' ‡ 'திரிந்துவாயிற் கோட்டமாயிற்று'

உருபு. 13) என்பதனுல் ஏழனுருபின்கண் சாரியை பெற்று, "அத்தே வற்றே யாயிரு மொழிமேல் ஒற்றுமெய் கெடுத றெற்றென் றற்றே" (தொல். புணர். 31) என்பதனுல் மகரங்கெட்டு, "அத்தி னகர மகர முனை யில்லை" (தொல். புணர். 23) என்பதனுல் அகரங்கெட்டு முடிந்தது. "அவற்றுள், மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்", "குற்றிய லுகரமு மற்றென மொழிப" (தொல். புணர். 2, 3) என்பவற்றுலும், "புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது, மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே" (தொல். புணர். 36) என்பதனுலும் வருமொழி அகார வுயிரேறிற்று. அரசு - அரசாட்சி. துறந்திருந்த : நிலைமொழியீற்றுக் குற்றுகரமும், முற்கூறியவாறே முடிந்தது. குடக்கோ வென்பது, "அகர விறுதிப் பெயர்நிலை முன்னர்,......ஒற்றிடை மிகுமே") "வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே" (தொல். உயிர்மயங். 1, 14, என்பவற்றுல், பெயரொடு பெயர் புணர்ந்து வல்லொற்று மிக்கது. கோச் சேரலென்பது, "ஓகார விறுதி யேகார வியற்றே" (தொல். உயிர். 87) என்பதனுல், ஓகாரவீற்றுப் பெயர்ச்சொல் அல்வழிக்கண் ஏகார வீற்று அல்வழியேபோல வல்லெழுத்துப் பெற்றுமுடிகவென்றலின் வல்லொற்று மிக்கது. சேரலென்றது அண்ணல், தோன்றல், திரையல், இளவலென்றுற் போல்வதோர் லகாரவீற்றுப் பெயர்ச்சொல்; அன்றியும் சேரலனென்னும் பெயர்த்திரிசொல் எனினும் அமையும். சேரலிளங்கோவென்பது "புள்ளி யீற்றுமுனுயிர்" என்பதனுல், லகாரவொற்றீற்று நிலைமொழி மேல் வருமொழி முதல் இகரவுயிரேறி முடிந்தது. கோவடிகட்கென்பது "எல்லா †மொழிக்கு முயிர்வரு வழியே, உடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்" (தொல். புணர். 38) என்பதனுல், வகரவுடம்படுமெய்யா யிற்று. அடிகட்கென்றது "ளகார விறுதி ணகார வியற்றே" (தொல். புள்ளி. 101) என்பதனுல், ணகாரம் வேற்றுமைக்கண் திரிந்து டகார மாயிற்றேபோல இதுவும் வேற்றுமைக்கண் திரிந்து டகாரமாயிற்று.

அரசென்பதற்கு இரண்டனுருபு விரித்துத் துறந்தென்னும் வினை யெச்சத்தோடும், துறந்தென்னும் வினையெச்சத்தை இருந்தவென்னும் பெயரெச்சத்தோடும் முடித்து அதனையும் அடிகளென்னும் பெயரோடே முடிக்க.

அரசாட்சியைத் துறந்து திருக்குணவாயிற் கோயிற்கண்ணே இருந்த குடதிசைக்கோவாகிய செங்குட்டுவனென்னும் சேரற்கு இளங் கோவாகிய அடிகட்கெனப் பண்பொட்டு விரித்துரைக்க.

இளமைப்பருவத்தே இராசபோகத்தைத் துறத்தல் அருமையால் துறந்தென்றும், அங்ஙனம் போகம் நுகர்ந்தவிடத்தே மீட்டும் தவ வுருத் தாங்கியிருத்தல் அருமையான் இருந்தென்றும் கூறினர்.

---

(பி - ம்.) † 'மொழியும்'

இம்முதலிரண்டடிக்கும் இத்துணையுங்கூறியது எழுத்துச்சந்தி முடிவும் சொல் முடிவும் எனக் கொள்க.

இனிப் பொருளாராய்ச்சி எண்வகைய :—அவை திணை, பால், செய்யுள், நிலம், காலம், வழு, வழக்கு, இடமென்பன. அவற்றுள், திணை இரண்டு ; ஆவன : அகத்திணை புறத்திணையென்பன. பால் பதினன்கு; ஆவன : கைக்கிளைமுதல் பெருந்திணையிறுவாய் [1]ஏழும், வெட்சிமுதல் பாடாண்டிணை இறுவாய் [2]ஏழும். செய்யுள் அறுவகை; ஆவன : வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடற்பா, மருட்பா வென்பன. நிலன் நால்வகை; ஆவன: முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலென்பன. காலம் பன்னிரண்டு ; ஆவன : [3]சிறுபொழுதாறும் [4]பெரும்பொழுதாறும். வழுபதினன்கு ; ஆவன : அகத்திணைவழுவேழும், புறத்திணை வழுவேழும். வழக்கு இருவகை ; ஆவன : நாடகவழக்கும், உலகியல் வழக்கு மென்பன. இடம் இருவகை; ஆவன : வழக்கிடமும், செய்யுளிடமும்.

இவற்றுள் நிறுத்தமுறையானே அகத்திணைப்பொருட்பகுதி முதலியன இப்பதிகச்செய்யுளுள் முடியாமையின், அவை முடியுமிடங் கூறுதற்கு,ஆசிரியர் அகப்பொருட்பகுதி கூறுவார், "மாயோன் மேய காடுறையுலகமும், சேயோன் மேய மைவரை யுலகமும், வேந்தன் மேய தீம்புனலுலகமும், வருணன் மேய பெருமணலுலகமும், முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல். அகத். 5) என முல்லைத் திணையை முதலாக நாட்டுதலின் அம்முறையே அகத்திணைப் பொருட்பகுதி முடியுமிடம் ஈண்டு எடுத்துக்காட்டப்படும்.

"முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின், இயல்பென மொழிப வியல்புணர்ந் தோரே" (தொல். அகத். 4) என்பதனால், முதற்பொருள் இருவகைப்படும். முல்லைத்திணை நிலமுதற்பொருள். "காருமாலையு முல்லை" (தொல். அகத். 6) என்பதனால், அத்திணைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும் கொள்ளப்படும். பெரும்பொழுது : "காரோ வந்தது" (26:118) என்பதனாற் காரும், சிறுபொழுது: "மாலை நீயாயின்" (7: 'பையுனோய்') என்பதனால் மாலையும் கூறினர். கருப்பொருள், "தெய்வ முணவே மாமரம் புட்பறை, செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ, அவ்வகை பிறவுங் கருவென மொழிப" (தொல். அகத். 18)

---

[1] கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, பாலைத்திணை, பெருந்திணையென்பன ; இவை அகத்திணை யெனப்படும்.

[2] வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாணென்பன ; இவை புறத்திணையெனப்படும்.

[3] மாலை, யாமம், வைகுறு, காலை, நண்பகல், எற்பாடென்பன.

[4] கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்பன.

என்பதனுலுணர்க. இந்நிலத்திற்குக் கருப்பொருள்: "கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்" (17: 'கன்று') என்பதனல் தெய்வமும், "அளை விலை யுணவின்" (16 : 3) என்பதனல் உணவும், "நீர்நசைஇ வேட்கை யின் மானின்று விளிக்கும்" (11 : 78) என்பதனல் மாவும், "கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தான்" (17 : 'செந்நிலை') என்பதனல் மரமும், "கான வாரணங் கதிர்வர வியம்ப" (13 : 37) என்பதனற் புள்ளும், "ஏறங் கோட்பறை" என்பதனற் பறையும், "கோகுல மேய்த்து" (17 : 'கோவா') என்பதனற் செய்தியும், "குட முதல்......வேண்டிய பெயரே" (17 : 'குடமுத') என்பதனல் முல்லையாழும், பண் : "முல்லைத் தீம் பாணி யென்றுள்" (17 : 'செந்நிலை') என்பதனற் சாதாரியும் கூறினர். உரிப்பொருள்: "புணர்தல் பிரித லிருத்த லிரங்கல், ஊட லிவற்றி னிமித்த மென்றிவை, தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல். அகத். 14) என்பதனுலுணர்க. "இருந்தேங்கி வாழ்வா ருயிர்ப் புறத்தாய்", "பேரருளி னீழல்" (7 : 'பிரிந்தார்') என்பவற்றல் இருத் தலும், இருத்தல் நிமித்தமும் கூறினர். பிறவுமென்றதனல் நிலமக்களும் நீர்நிலையும் வார்கொடியும் பூவும் கொள்ளப்படும். இவற்றுள், "இளைசூழ் கோவலர்" (16 : 4) என்பதனல் நிலமக்களும், "புடைநெறிப் போயோர் பொய்கையிற் சென்று" (11 : 169) என்பதனல் நீர்நிலையும், "ஆய் கொடிக் கவலையும்" (11 : 82) என்றதனல் வார்கொடியும், "காயாமலர் மேனி" (12 : 'ஆய் பொன்னரி'), "முல்லை நிகர் மலர்" (9 : 1-2) என்பவற்றுற் பூவும் கூறினர்.

குறிஞ்சித்திணை நிலமுதற்பொருள். பெரும்பொழுது: "அருவி யொலிக்கு......மலைகாண் குவம்" (25 : 6-7) என்பதனற் கூதிர்ப்பொழு தும், சிறுபொழுது: "குன்றத்துச் சென்று வைகியும்" (24: 'குருவி') என்றதனல் நள்ளியாமமும், கருப்பொருள்: "நீலப்பறவைமேல்......... புதல்வன் வரும்" (24: 'வேலனர்') என்பதனல் தெய்வமும், "ஐவன வெண்ணெலும்.........கொய்பூந் தினையும்" (11 : 80-81) என்பதனல் உணவும், "புலியொடு பொரூஉம் புகர்முகம்" (25 : 29) என்பதனல் மாவும், "கோங்கம் வேங்கை" (25 : 17) என்பதனல் மரமும், "கானக் கோழியுந் தேன்மொழிக் கிள்ளையும்" (25 : 54) என்பதனற் புள்ளும், "தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்" (24 : 'குருவி') என்ப தனற் பறையும், "கொய்பூந் தினையும்" (11 : 81), "நறவுக்கண்ணு டைத்த" (25 : 27) என்பவற்றுற் செய்தியும், "அந்தீங் குறிஞ்சி" (28 : 35) என்பதனல் யாழும், "குறிஞ்சி பாடுமின்" (24 : 'குருவி') என்பதனற் பண்ணும், உரிப்பொருள்: "அஞ்சலோம்பென்று நல னுண்டு", "நல்காதார்" (24 : 'ஆங்கொன்று') என்பனவற்றுற் புணர் தலும் புணர்தல் நிமித்தமும், "குன்றவருங்கண்டு நிற்க" (24: 'குருவி') "குறத்தியர் பாடிய" (27 : 224) என்பனவற்றல் நிலமக்களும், "அருவி யாடியு மகன்சுனை குடைந்தும்" (24 : 'குருவி') என்பதனல் நீர் நிலையும், "ஏல வல்லியு மிருங்கறி வல்லியும்" (25 : 41) என்பதனல் வார்

கொடியும், " விரவு மலர் தூவுமின் " (24 : 'குருவி') என்பதனுற் பூவும் கூறினர்.

மருதத்திணை நிலமுதற்பொருள். "இன்னிள வேனில் வந்த திவணென" (8 : 7) என்பதனுற் பெரும்பொழுதும், "வான்கண் விழியா வைகறை யாமத்து" (10:1) என்பதனுற் சிறுபொழுதும், கருப்பொருள்: "மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்கு" (14:94) என்பதனுல் தெய்வமும், "குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு" (10:123) என்பதனுல் உணவும், "கழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்" (10 : 121) என்பதனுல் மாவும், "மருதோங்கு முன்றுறை" (14 : 72) என்பதனுல் மரமும், "கம்புட் கோழியுங் கனைகுர லுரையும்" (10 : 114) என்பதனுற் புள்ளும், "தெண் கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த" (10 : 138) என்பதனுற் பறையும், "ஏரோடு நின்றோர்", "அரிந்துகால் குவித்தோர்" (10 : 135, 136) என்பனவற்ருற் செய்தியும், யாழ் : "அதிரா மரபின் யாழ்கை வாங்கி" (8 : 23) என்பதனுல் மருதயாழும், பண் : "வைகறைப் பாணியும்" (13 : 148) என்பதனுல் மருதப்பண்ணும், உரிப்பொருள் : "சிலம்புள கொண்மென" (9 : 73) என்பதனுல் ஊடலும், "விடுதலறியா விருப்பினன்" (3 : 174), "போற்ரு வொழுக்கம் புரிந்தீர்" (16 : 81) என்பனவற்ருல் ஊடனிமித்தமும், "கருங்கை வினைஞருங் களமரும்" (10:125), "சின்மொழிக் கடைசியர்" (10 : 130) என்பனவற்ருல் நிலமக்களும், "பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி" (10 : 78) என்பதனுல் நீர்நிலையும், "கோதை மாதவி" (14 : 113) என்பதனுல் வார்கொடியும், "வெண்பூ மல்லிகை.........தண்செங் கழுநீர்" (14 : 78–9) என்பதனுற் பூவும் கூறினர்.

நெய்தற்றிணை நிலமுதற்பொருள். பெரும்பொழுது : காரும், இருவகை வேனிலும் : இவை ஆசிரியர் எடுத்தோதாமையின் அடிகள் கூறிற்றிலர் போலும். சிறுபொழுது : "வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை" (7 : 'பையுணேய் கூர') என்பதனுல் மாலையும், கருப்பொருள் : தெய்வம் : "கடற்றெய்வங் காட்டிக் காட்டி" (7 : 'கரியமலர்') என்பதனுல் வருணனும், உணு : "விலைமீ னுணங்கற் பொருட்டாக" (7:'வலைவாணர்') என்பதனுல் மீன்விலையுணவும் கூறினர். மா, உமணர் பகடன்றி இந்நிலத்திற்கு விலங்கின்மையின் ஆசிரியர் கூறிற்றிலர் போலும். இனி முதலையும் சுருவும் மாவென்பர்[1]; "கெண்டை யஞ்சினை மேய்ந்து கிளர்ந்துபோய், முண்டகத்துறை சேர்ந்த முதலைமா, வண்டல் வார்கரை மாமகரக்குழாம், கண்டு நின்று கனலுங் கழியெலாம்" (சூளா. நாட்டு. 22) எனக் காட்டுவாருளராயினும், அவை மீனெனப்படுவவல்லது மாவெனப்படா; "பொறைமலி பூம் புன்னை" (7 : 'துறைமேய்') என்பதனுல் மரமும், "அன்னந்துணையோடாட" (7: 'அன்னம்') என்பதனுற் புள்ளும் கூறினர். பறை கூறிற்றிலர்; மீன்கோட் பறையென்க. 'கடல்புக்

[1] என்பவர் : இளம்பூரணரும், இறையனுரகப்பொருள் உரையாசிரியரும், அகப்பொருள் விளக்க ஆசிரியரும், வீரசோழியமுடையாரும்.

குயிர் கொன்று வாழ்வர்' (7 : 'கடல்புக்') என்பதனாற் செய்தியும், "சித்திரப் படத்துள்......குற்ற நீங்கிய யாழ்" (7 : முதற் கட்டுரை) என்பதனால் யாழும், பண் : "நுளையர் விளரி" (7 : 'நுளையர்') என்பதனால் விளரிப் பண்ணும், உரிப் பொருள் : "கொளைவல்லா யென்னுவி கொள்" (7 : 'நுளையர்') என்பதனால் இரங்கலும், "பேரருளினிழல், இருந்தேங்கி வாழ்வார்" (7 : 'பிரிந்தார்') என்பதனால் நிமித்தமும், "சேரிப் பரதர் வலைமுன்றில்" (7 : 'வாரித்தரள'), "பவளவுலக்கை" (7 : 'பவள'), "எறிவளைக ளார்ப்ப" (7 : 'எறிவளை') என்பனவற்றாற் பரதரும் பரத்தியரும் நுளையரும் நுளைச்சியருமாகிய நிலமக்களும், "ஈர்ந்தண்டுறை" (7 : 'நேர்ந்தநம்') என்பதனால் நீர்நிலையும், "அம்மெ னிணர வடும்பு காள்" (7 : 'தம்முடைய') என்பதனால் வார்கொடியும், "நறுஞாழல் கையி னேந்தி" (7 : 'நிணங்கொள்') என்பதனாற் பூவும் கூறினர்.

"சொல்லிய முறையாற் சொல்லவும் படும்" என்பதனாற் சொல்லாத முறையாற் சொல்லவும்படுமென அருத்தாபத்தி கோடலானும், "நடுவு நிலைத்திணையே நண்பகல் வேனிலொடு, முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (தொல். அகத். 9) என்பதனானும், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலையென்பதோர் படிவங் கொள்ளும், காலையெய்தினிர்" (11 : 64-7) என்பதனானும் போந்த இப்பெற்றித்தாகிய பாலைத்திணை நில முதற்பொருள். பெரும்பொழுது : "வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன், தானலந் திருகித் தன்மையிற் குன்றி" (11 : 62-3) என்பதனால் இருவகை வேனிலும், சிறுபொழுது : "படுங்கதி ரமயம் பார்த்திருந் தோர்க்கு" (13 : 16) என்பதனால் †நண்பகலும் கூறினர். கருப்பொருள் : தெய்வம், ஆசிரியர் புலப்பட எடுத்தோதிற்றிலரேனும், "கடுங்கதிர் திருகலின்" (12 : 1) எனவும், "வெங்கதிர் வேந்தன் தானலந் திருகி" (11 : 62-3) எனவும், "ஐயை கோட்டத் தெய்யா வொரு சிறை" (12 : 4) எனவும், "கொற்றவையுங் கொடுமரமுன் செல்லும்" (12 : 'கள்விலையாட்டி') எனவும் கூறுதலானும், பிறவாற்றானும் பருதியஞ்செல்வனும், திகிரியஞ் செல்வியுமெனக் கொள்க. உணா : "ஆரிடையத்தத் தியங்குந ரல்லது, மாரி வளம்பெறா வில்லேருழவர்" (11 : 209-10) என்பதனால், ஆறெறிந்தும் சூறை கொண்டும் உண்ணும் உணவாம். மா : "மானின்று விளிக்கும்" (11 : 78) என்பதனால் உழைமான் முதலியனவும், "அலறுதலை மராமு முலறுதலை யோமையும்" (11 : 75) என்பதனால் மரமும், "கான வாரணங் கதிர்வர வியம்ப" (13 : 37) என்பதனாற் புள்ளும், "துண்ணெனன் றுடியொடு" (12 : 'துண்ணெனன்') என்பதனாற் பறையும், "பொருள்கொண்டு புண்செயின்" (12 : 'பொருள்') என்பதனாற் செய்தியும், "செந்திறம் புரிந்த செங்கோட்டி யாழ்" (13 : 106) என்பதனால் யாழும், பண் : "ஆசான் றிறத்தின்" (13 : 112) என்பதனாற் காந்தார பஞ்சமமும் கூறினர் ; உரிப் பொருள் :

---

(பி - ம்.) † 'எற்பாடு'

“ தொடிவளைச் செங்கை தோளிற் காட்டி ” (13 : 33) எனவும், “ ஆரிடை யுழந்த மாதரை நோக்கி ” (13 : 30) எனவும் கூறினமையாற் போக்கும், வாளாது [1] “ போக்கெல்லாம் பாலை ” என்றலின் உடன் போக்கும் கொள்ளப்பட்டன. நிலமக்கள் : “ கண்ணிலெயினர் ” (12 : ‘ துண் ணென் ’) எனவும், “ இளமாவெயிற்றி ” (12 : ‘ இளமா ’) எனவும் கூற லின், எயினரும் எயிற்றியரும்; ஈண்டு நீரின்மை நிலை : “ நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்கும் ” (11 : 78) என்பதனாலும், “ நீரின்றி வேனிறெறுநிலம் பாலை ” (திவா. 5) என்பதனாலும் நீரின்மையே இந் நிலத்திற்குச் சிறப்பென உணர்க. “ அறுநீர்ப் பைஞ்சுனையாமறப் புலர் தலின், உகுநெற்பொரியும் வெம்மை ” (1) என அகப்பாட்டினும், “ மரையா மரல்கவர ” (6) எனக் கலியுள்ளும் கூறினார். “ ஆய்கொடிக் கவலையும் ” (11 : 82) என்பதனால் வார்கொடியும், “ கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன ” (12 : ‘ செம்பொன் ’) என்பதனாற் பூவும் கூறினார்.

இச்சொல்லப்பட்ட ஐந்திணையின் முதல் கரு உரிப்பொருளும் பிறவு மாகிய அகத்திணைப் பொருட்பயன் † உடம்பொடு புணர்த்தியுணர்த்திப் புறத்திணைப் பொருட்பயனும் பிறவும் இவ்வாறு † உடம்பொடு புணர்த்தி உணர்த்துங்காற் புனைந்துரைக்கப்பட்டுக் கேட்போர்க்கு இன்பம் பய வாது உணர்வு சலிக்குமாதலின் வந்தன வந்துழிக்காட்டுதலைக் கரு திற்று இவ்வுரையென்க.

இனி, இசைநாடகத் தமிழ்நூலது பகுதியும், இவைபோலப் பெரு வழக்கின்றுதலானும் நிலத்தோடும் கலத்தோடும் கண்டத்தோடும் கருவியோடும், நிலையோடும் இயக்கத்தோடும் இருவகை பலவகை விலக் குறுப்புக் கை கால் வட்டணை பொருள் யோனி விருத்தி சந்தி சுவை சாதி குறிப்பு சத்துவம் அவிநயம் சொல் சொல்வகை வண்ணம் வரி சேதமென்பனவற்றோடும் கதையோடும் பல கூத்துக் கூறுங்கால் உய்த் துணர்வில்லோர்க்குச் செவிச்சுவை பயக்குமாதலானும் ஈண்டு விரியாது விரித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக் கொள்க.

இனிப் பதிகச் செய்யுளுள், முதலீரடியும் போல யாண்டும் விரியா தது உரை பெருகுமென்பதனைக் கருதியெனக் கொள்க.

1 - 9. குணவாயில்......அறிந்தரு ணீயென

(இதன் பொருள்) திருக்குணவாயிற்கோயிற்கண்ணே அரசபோகத்

[1] “ போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சே ரூட லணிமருதம்—நோக்கொன்றி
இல்லிருக்கை முல்லை யிரங்க னறுநெய்தல்
சொல்லிருக்கு மைம்பாற் றுறை.”

இச்செய்யுள் நாற்கவிராய நம்பியகப் பொருள் விளக்கவுரையின் இறுதியிலும், திருவாய்மொழியீட்டின் “ அஞ்சிறையமடநாராய் ” என் பதன் அவதாரிகைக்குரிய ஜீயரரும்பதவுரையிலும் காணப்படுகின்றது; இன்ன நூலிலுள்ளதென்று தெரியவில்லை.

(பி - ம்.) † ‘ உடம்படு புணர்த்தி ’

தைத் துறந்து தவவுருத்தாங்கியிருந்த குடதிசைக்கோவாகிய செங் குட்டுவ னென்னும் சேரற்கு இளங்கோவாகிய அடிகட்குக் குறவரெல்லா ரும் திரண்டு சென்று எமதூர் மலைப்பக்கத்துப் பொன்போலும் பூவினை யுடைய வேங்கைமரத்தின் நிழற்கண்ணே ஒரு முலையிழந்து வந்து நின் ருள் ஒரு மாபத்தினி; அவள்பொருட்டு இந்திரன்றமர் ஈண்டி வந்து அவள் கொழுநனைக்காட்டி அவளோடும் அவர் எம் கட்புலம் காண விட் புலம்போயவது ஓர் அதிசயமாயிருந்தது; அதனை நீ அறிந்தருளுவா யாக என்ற அளவிலே யென்க.

குன்றக்குறவர்: ஏழனுருபுத்தொகை; குன்றம் - கொடுங்கோ ளூர்க்கு அயலதாகிய செங்குன்றென்னும் மலை. அது திருச்செங்கோ டென்பவாலெனின், அவரறியார்; என்னை? அத்திருச்செங்கோடு வஞ்சி நகர்க்கு வடகீழ்த்திசைக் கண்ணதாய் அறுபதின்காத ஆறுண்டாகலா னும், [1] அரசனும் உரிமையும் மலை காண்குவமென்று வந்து கண்ட அன்றே வஞ்சி புகுதலானும் அது கூடாமையினென்க.

பொலம்பூ - உவமத்தொகை. நலம் - குளிர்ச்சி. கிளர்தல் - மிகுதல். திரு மாபத்தினி - அழகிய வீரபத்தினி; குவ்வுருபு: பொருட்டு; அது "வரிசைக்கு வருந்தும்" (புறநா. 47 : 6) என்றாற்போல நின்றது. தமர் - தேவர். ஒடு: உடனிகழ்ச்சி. கட்புலம் - கண்ணினது அறிவு; கண்ணென்கின்ற புலமுமாம். விட்புலம் - விண்ணிடம். இறும்பூது - அதி சயம்; "இறும்பூது சான்ற" (20 : 55) என்றார் மணிமேகலையிலும்.

சென்றெனவும், நின்றளெனவும் வருவிக்க.

குறவர் கூடிப் பத்தினிக்கு ஈண்டி வந்து போய அது இறும்பூது போது மென்றாரனென்க.

ஈண்டி வந்து காட்டிக் காணப்போயவென்னும் பெயரெச்சம் அது வென்னும் சுட்டுப்பெயரோடு முடிந்தது.

போய அது போயதென விகாரம்.

இதனுட் பத்தினியென்பதூஉம், தமரென்பதூஉம், கொழுநனென் பதூஉம் குன்றக்குறவர் அறிந்தமை குன்றக்குரவையுட் காண்க.

இது மருட்கையென்னும் மெய்ப்பாடு.

## 10 - 11. அவனுழை......உரைப்போன்

(இ - ள்.) குறவர் இளங்கோவடிகளை நோக்கி அறிந்தருளென்ற அளவிலே செங்குட்டுவன் அதிசயித்து முகநோக்கப் பரிசில்காரணமாக வந்து அவனுழையிருந்த சாத்தன் அதனைக் குறிப்பான் அறிந்து அது விளைந்த தெல்லாம் யானறிகுவனென்று உரைக்கின்றவனென்க.

அதுவென்றது ஒருமுலையிழந்ததனை. பட்டது - விளைந்தது.

---

[1] அரசன் - செங்குட்டுவன்; உரிமை - வேண்மாள். இவர்கள் மலை கண்டவன்றே வஞ்சி புகுந்ததனை இந்நூற் காட்சிக் காதையிற் காண்க.

## 12 - 20. ஆரங்கண்ணி......புகுந்தனன்

(இ - ள்.) ஆத்தித்தாரையுடைய செம்பியனது பழைய நகரங்களில் வைத்து மாறுத விழவுச்சிறப்பினையுடைய புகாராகிய நகரத்திடத்துக் கோவலனென்று பெயர் கூறப்படுவானொரு வாணிகன் தன்னூர்க்கண் நாடகந்தானேத்தும் நாடகப் பொதுமகளாகிய மாதவியென்பாளோடு கூடிய ஒழுக்கத்தாலே பெறுதற்கரிய பொருள் தொலைதலின், அவன் மனைவி கண்ணகியென்று பெயர் கூறப்படுவாள்; அவளுடைய காலணியாகிய ஓசையமைந்த சிலம்பினை விற்றல்வேண்டித் தமிழினது பாடல் சிறந்த சிறப்பினையுடைய பாண்டியனது மிக்க புகழையுடைய மாட மதுரைக் கண்ணே சென்றுபுக்கானென்க.

நாடகமேத்துமென்றது - நாடகம் தான் இவளாற் சிறப்பெய்துதலின் ஏத்திற்றென்றவாறு. இனி ஏத்து நாடகமென மாறிப் பதினோராடலாக்கி உரைப்பினும் அமையும்; இனி நான்கனுருபு விரித்து உருப்பசி முதலியோர் யாவரும் ஏத்துமெனவுமாம். கணிகையர் பலராதலின், இவளை நாடகக்கணிகையென்றார்; பதியிலாளென்பது தோன்ற. ஆடுதல் - அனுபவித்தல்; "இளையார் விளையாட" (1349) என்றார் சிந்தாமணியினும். அரும்பொருள் - அறனும் இன்பமும் தரும் பொருள்; "அப்பொருள், துன்னுங் காலைத்துன் னுதன வில்லையே" (சீவக. 1923) என்றார் பிறரும். கேடுற - அழிவுற. "வஞ்சியும் வறிதே", "மதுரையும் வறிதே", "உறந்தையும் வறிதே" (சிறுபாண். 50, 67, 83) என்றாராதலின், இதனைப் பேராச் சிறப்பினையுடைய புகாரென்றார். காற்சிலம்பு பகர்தல் வேண்டியெனவே தலைக்கோல முதலிய அணிகள் அனைத்தும், முன்னமே தொலைந்தது விளங்கிநின்றது. சிறப்பிற் பாண்டியனென்றும், பெருஞ்சீர் மாடமதுரையென்றும் அடிகள் புகழ்ந்தார்; இவையும் பழவினையால் அழிந்த வென்னும் இரக்கம் தோன்ற. மாட மதுரை புகுந்தனனென்பது - காட்டினன்றி ஓர் ஊரின்கண் உயிரும் பொருளும் இழந்தானென்பது மேல் விளையத் தோன்றி நின்றது.

நகரத்து வாணிகன் கொள்கையாற் கேடுறுதலிற் பகர்தல் வேண்டி மனைவியோடு புகுந்தனனென்க.

## 20 - 22. அதுகொண்டு......காட்ட

(இ - ள்.) அங்ஙனம் முன்னுட் புகுந்தனனுய்ப் பிற்றைஞான்று அதனைக் கொண்டுபோய் விற்கைக்குப் பீடிகைமறுகிற் செல்கின்றவன் கூற்றுவன் வந்தாற்போல முன்வந்த பொற்கொல்லனைக் கண்டு அவன் கையிற் காட்டவென்க.

கண்டெனு ஒருசொல் வருவிக்க. அது கொண்டென்றார், அச்சிலம்பால் மேல்விளைவன தோன்ற; அது அநியாயபுரத்தே புகுகின்றவன் கூற்றத்தையும் உடன்கொண்டு புக்கான் என்றுற்போன்றிருந்தது. மன் : கழிவின்கண் வந்தது.

செல்வோன் கண்டு காட்டவென்க.

23 - 6. கோப்பெருந் தேவி......கள்வன் கையென

(இ - ள்.) அங்ஙனம் காட்டக்கண்ட பொற்கொல்லன் இப்பெருவிலைச் சிலம்பு கோப்பெருந்தேவிக்கே ஆவதன்றிப் பிறர் பூணுந்தரமல்லவாதலான், இதனை யான் அரசற்கு உணர்த்திவருந்துணையும் இக்கோட்டத்திருக்கவெனச் சொல்லிப்போய்த் தான் முன்பு பணிக்களரியில் வஞ்சித்துக் கொண்டு நிலை நிற்றலான் ஆராய்ச்சி சிறிது பிறந்துவருகின்ற சிலம்பினைப் பிறர்நாட்டு ஒரு கள்வன் கையிற் கண்டேனென்று அரசற்கு உரைப்பவென்க.

தான்கொண்டவென்றார், தன்னெஞ்சறியத் தான் கொண்டதனை இங்ஙனம் கூறினானென்பது தோன்ற. ஈங்கிருக்கவென்றார், பிறிதோரிடத்தாயின் ஊர்காவலர் ஆராய்வரென்று கருதினானென்பது தோன்ற. என்றேகியென்றார், அவன் கருத்தும் முயற்சியும் தோன்ற. சில்லரிச் சிலம்பினையென்றார், தொழிற் பன்மை தோன்ற. பிறனோர் கள்வன் கையிற்கண்டனனென்றார், தன்னையும் கள்வனென்றமை தோன்ற.

27 - 30. வினைவிளை.........ஈங்கென

(இ - ள்.) அங்ஙனம் அவன் சொல்லக்கேட்ட பாண்டியன் தான் முற்பவத்திற் செய்த தீவினை வந்து பலிக்கின்ற காலமாதலாலே ஒன்றையும் தேரானாய்க் காவலில் அடிப்பட்டோரை அழைத்து இவன்சொன்ன அக்கள்வனைக் கொல்ல அச்சிலம்பையும் அவனையும் இப்பொழுதே இங்கே கொண்டுவருவீராகவெனச் சொல்லக் கருதினவன் காமபரவசனாய் இச்சிலம்பு இவளூடல் தீர்க்கும் மருந்தாமென்னும் கருத்தால் வாய்சோர்ந்து கொன்று அச்சிலம்பை இப்பொழுதே கொணர்கவென்று கூறவென்க.

இதனானன்றே "தென்னவன் றீதிலன் றேவர் கோமான் கோயில், நல்விருந் தாயினான்" (29 : 'தென்னவன்') என்ற கருத்துமெனக் கொள்க. அச்சிலம்பெனக் கோப்பெருந்தேவி சிலம்பைச்சுட்டிக் கூறினானாயிற் கள்வனைக்கொன்று சிலம்பைக் கொணர்க என்றானெனினும் குற்றமில்லை; அக்கருத்தினானன்றே வழக்குரை காதையுள்ளும் "கள்வனைக்கோறல் கடுங்கோ லன்று" (64) என்றது மென்க. இங்ஙனங்கூறியது, "பாட்டிடை வைத்த குறிப்பி னானும், பாவின் றெழுந்த கிளவி யானும், பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும், பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென், றுரைவகை நடையே நான்கென மொழிப" (தொல். செய். 173) என்பதனானென்க. இதனை மேல் வருவனவற்றிற்கும் கொள்க.

இதனை ஆராயுநெறி பலவுளவாகவும், அவற்றில் ஒன்றையும் தேர்ந்திலனென்பார் யாவதும் தேரானாகியென்றார் ; முன்னர்க்[1]கைகுறைத்தல்

---

[1] பாண்டியன் தன் கைகுறைத்ததை மேற் கட்டுரைகாதை (42-53) யிலும், " நாடுவிளங் கொண்புகழ் நடுதல் வேண்டித்தன், ஆடுமழைத் தடக்கை யறுத்துமுறை செய்த, பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்" (தொல். களவு. 1, இளம். நம்பி. 45, உரை ; இ. வி. 495,

முதலிய முறைசெய்தோன் இதனைத் தேர்ந்திலனென்று அடிகள் இரங்கிக் கூறினர். கன்றிய காவலரென்றார், அவரும் முன்னர்த் தீது செய்யாரென்பது தோன்ற.

காலமாதலின் தேரானாகிக் கூஉய்க் கொன்று கொணர்கவென்று னென இயைக்க.

## 31 - 6. கொலைக்களப்.........இவளென

(இ - ள்.) அங்ஙனம் கொன்று கொணர்கவென்று அரசன்கூறக் கேட்ட காவலரும் வினைவிளைகாலமாதலிற் கொல்லக் கொலையிடத்தே பட்ட கோவலன் மனைவி தனக்கு நிலையிடம் காணாளாய் அவள்தான் பத்தினியாதலிற் பாண்டியன் முன்னர்ச்சென்று அவனுயிர் கேடுறக் கண்ணீர் உகுத்து அவனூரையும் தன்முலை முகத்தெழுந்த தீயை யுண்ணப்பண்ணிய பலரும் புகழப்படும் பத்தினிகாணும் இக்குறவர் சொன்னவளென்று கூறவென்க.

பாண்டியனும் கூடலும் கேடுற உகுத்து ஊட்டியவென்க. கண்ணும் முலையும் உகுத்த நீரானும் நெருப்பானும் அடுதலும் சுடுதலும் செய் தாள் என்பதாயிற்று. இக்கருத்தானன்றே வாழ்த்தினுள்ளும் "தொல்லை வினையாற் றுயருழந்தாள் கண்ணினீர், கொல்ல வுயிர்கொடுத்த கோவேந்தன்" என்பதூஉம்.

## 37 - 8. வினைவிளை.........என்ன

(இ - ள்.) நீர் முன்னை வினைவிளைகாலமென்று சொல்லிப்போந்தீர்; அவர்க்கு வினை விளைந்தகாலம் என்னையென்று அரசன் வினவவென்க.

## 38 - 54. விறலோய்.........யானென

(இ - ள்.) விறலோய், கேட்பாயாக; நடுக்கமில்லாத சிறப்பினை யுடைய மதுரையாகிய மூதூரிடத்து மன்றப்பொதியில்களில் இறைவன் உறைகின்ற வெள்ளியம்பலத்துள் யான் துயின்றேனாக, செறிந்த இருளின் கண்ணே அந்நகர்க்குக் காவற்றெய்வமாகிய மதுரைமாதெய்வம் பெரிய வருத்தமுற்ற வீரபத்தினி முன்னர் வந்து வெளிப்பட்டு நினது மிக்க சினத்தால் வெவ்விய அழலை நின்கொங்கையிடத்தே விளைவித்தோய்! பைந்தொடி! நுங்கட்கு முற்பட்ட நல்வினை முடிந்ததாகலான், நின் கணவனோடு நினக்கு முற்பிறப்பின்கண்ணே குன்றாத புகழை யுடைய நல்ல கலிங்கநாட்டுச் சிங்கபுரமென்னும் நகரின்கண் சங்கம

---

உரை, மேற்.) என்பதிலும், "எனக்குத் தகவன்று லென்பதே நோக்கித் தனக்குக் கரியாவான் றானாய்த் தவற்றை, நினைத்துத்தன் கைகுறைத் தான் றென்னவனுங் காணா, ரெனச்செய்யார் மாணா வினை" என்னும் 102-ஆம் பழமொழிச் செய்யுளிலும் காண்க. இதனை 547-ஆம் திருக் குறளுரையில் "தன்கைகுறைத்தான்" எனப் பரிமேலழகரும் குறிப் பித்தனர். இக்கதையையுட்கொண்டே "தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ" என்றார் பரஞ்சோதிமுனிவரும்.

னென்னும் வாணிகனுடைய [1]மனைவியிட்ட சாபம் இப்பிறப்பின் கண்ணே வந்து மூண்டதாகலின், நீண்டு செறிந்ததோர் கூந்தலை புடையாய்! நின்கணவனை இவ்வேளையன்றி நீ இனிப் பதினுலாநாட் பகல் நீங்கிய பொழுதிற் காண்பை; காணுங்கால் வானோர்வடிவிற் காண்பதல்லது மக்கள் வடிவிற் காண்பதில்லையென்று கூற அவ்வஞ்ச மற்ற கட்டுரையினையான் கேட்டேனென்று கூறவென்க.

கேட்டி: இகரவீற்று முன்னிலையொருமை வினைத்திரிசொல்; "இ ஐ ஆய்" (தொல். வினை. 26) என்னும் சூத்திரத்தான் முடிக்க. அதிராச் சிறப்பு - பகைவரால் நடுக்கமில்லாத சிறப்பு; "நீர்முற்றி மதில்பொரூஉம்" (கலித். 67) என்பதனுன் உணர்க. கொன்றையஞ் சடைமுடி, ஆகுபெயரான் இறைவன். பொது இல் - பொதியில்; உகர வீறு இகரமாய்த் திரிந்து உடம்படுமெய்யும் பெற்று, "கிளந்தவல்ல" (தொல். குற்றியலுகரப். 78) என்னும் அதிகாரப் புறனடையான் முடிந்தது. மன்றப் பொதியிலில் வெள்ளியம்பலத்தென்றது, பொன்னம் பலமும் உண்டாகலின்; என்னை? "கண்ணெலாங் கவர்வன கனக கூடமும், வெண்ணிலாச் சொரிவன வெள்ளி வேயுளும், தண்ணிலாத் தவழ்மணித் தலமுஞ் சார்ந்தரோ, மண்ணினு லியன்றில மதலை மாடமே" (நகரவருணனை, 7) என்றார் சூளாமணியுள்ளும். நள்ளிருள் - செறிந்தவிருள்; [2]உரிச்சொல் ஈறு திரிந்தது; இனி வினைத்தொகை யாக்கி அனுகரணத்தையுடைய இருளென்பதும் சிறந்தது; "நள்ளென் றிறுத்த நடுவுகொள் யாமத்து" என்றாராகலின். ஆரஞர் - பெரிய வருத்தம்; ஆவது கணவனை இழத்தல்; "மக்க ளிழந்த விடும்பையினு மனையா ளிழந்த விடும்பையினு, மிக்க விடும்பை வேல்வேந்தே விதவை யிடும்பை யெனவிளம்பித், தக்க வதனுலென்கழுத்திற் றாலி நீதந் தரு ளென்று, தொக்க மணிநீண் முடியானைத் தொழுது பின்னு மிவை சொல்லும்" (உத்தர. திக்கு. 137) என்றார் பிறரும். வீரபத்தினி: மறக் கற்புடையாள். கோப்பெருந்தேவி: அறக்கற்புடையாள்; ஆக[3]ஆறிய கற்புஞ் சீறியகற்புமெனக் கற்பு இருவகை. கொதி யழல் - வெவ்வழல். சீற்றம் - மிகுசினம். விளைத்தோய்: முன்னிலைத் தொழிற்பெயர். முதிர்தல் - முற்படுதல். எனவே நல்வினை முடிதலாலென்க. "ஏனை வினையுலப்ப" (நாலடி. 3) என்றார் பிறரும். இனி முதிர்வினையால் இவை முடிந்தவென்ன வழக்காருக்கினும் அமையும். பைந்தொடியும் கூந்தலும் அண்மைவிளி. சிங்கல் - குன்றல். வார்தல் - நெடுமை. ஒலி - தழைத்தல். எல்லை - பகற்பொழுது. கோட்டம் - வஞ்சம். கட்டுரை - பொருள் பொதிந்த சொல்; உறுதியையுடைய சொல்லுமாம். வினைவிளைவு யாதென்று வினவினுற்குப் பாண்டியன் வினைவிளைவு கூறிற்றிலர்; என்னை? அது கட்டுரைகாதையில் விளங்க உரைக்கட்படும்.

---

[1] மனைவி - நீலி; இவள் சாபமிட்ட செய்தி முதலியவற்றை இந்நூற் கட்டுரை காதையாலும், மணி. 26-ஆம் காதையாலும் உணர்க.

[2] உரிச்சொல்: நளி. [3] "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை, வண்டார் கூந்த லொண்டொடி கணவ" (பதிற். 90)

### 55 - 60. அரைசியல்...........செய்யுளென

அங்ஙனம் அரசனோடு சாத்தனார் கூறக்கேட்ட அடிகள் பொருட் பகுதியை மூவகை உள்ளுறையாக வகுத்துக் கூறுவார் :

(இ - ள்.) நூலொழுக்கிற்றுய அரசியலுட் சிறிது ஒழுக்கம் பிழைப் பினும் அவ்வரசரை அறக்கடவுள் தானே கூற்றமாய்க் கொல்லுமென் பதூஉம், புகழமைந்த கற்புடைமகளை மக்களேயன்றித் தேவரு முனி வரு முதலாயுள்ளோர் சென்றேத்துதல் இயல்பாகலும், முன்செய்த இரு வினையும் செய்த முறையே செய்தோனை நாடிவந்து உருக்கொண்டு நின்று நுகர்விக்கு மென்பதூஉமாகிய இம்மூன்று பகுதியும் இச்சிலம்பு காரணமாக முறைமையிற் பிறந்தனவாதலிற் சிலப்பதிகாரமென்னும் பெயரான் ஒரு காப்பியமாக நாம் நிறுத்துதுமென்று அவ்வடிகள் சொல்லவென்க.

அறம் - அறக்கடவுள். பத்தினிக்கு - பத்தினியை. உருத்து - உருக்கொண்டு; முதிர்ந்தென்றுமாம். வினை - தொழில். நாட்டுதும்; உயர்திணைக்கண் வந்த இடவழுவமைதித் தனித்தன்மை; அஃது உளப்பாட்டுத் தன்மைபோன்றிருந்தது. பாட்டுடைச் செய்யுள் - பல பாக்களோடு உரைப்பாட்டையும் இசைப் பாட்டையுமுடைய இயலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச்செய்யுள். அறம் கொல்லுமென்பது, "என்பி லதனை வெயில் போலக் காயுமே, அன்பி லதனை யறம்" (குறள், 77) என்பதனானுணர்க.

ஆவதூஉம், ஏத்தலும், ஊட்டலும் இச்சிலம்பு காரணமாகப் பிறந்தனவென ஒரு சொல் வருவித்து முடிக்க.

### 61 - 2. முடிகெழு...........யருளுகென் றற்கு

(இ - ள்.) முடிபொருந்திய தமிழ்நாட்டு வேந்தர் மூவர்க்கும் உரிய தாகலின், அடிகள் நீரே அருளிச் செய்கவென்று விளவிய சாத்தற் கென்க.

கெழுவென்னும் சாரியை, "லணவென வரூஉம் புள்ளி யிறுதிமு, னும்முங் கெழுவு முளப்படப் பிறவும், அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச், செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்" (தொல். குற் றியலுகரப். 76) என்னும் சூத்திரத்துள், அன்னமரபின் மொழியிடைத் தோன்றி என்பதனால் அவ்விருபுள்ளியீற்றுச் சொல்லும் அல்லாதனவும் சாரியை பெற்று முடிவனவுளவென்றாராகலின், புள்ளியீறல்லா தவழி வந்த சாரியைச் சொல்லெனக் கொள்க. சாரியையாவது சொல் தொடர்ந்து செல்லும் நெறிக்கண் நின்று அதற்குப் பற்றுக்கோடாகச் சிறிது பொருள் பயந்ததும் பயவாததுமாய் நிற்பது. அவற்றுள் இது சிறிது பொருள் பயப்ப நிற்பது; பொருந்துதலென்னும் பொருண்மைசாரும். மூவர்க்கும் உரியது, புகாரினும் மதுரையினும் வஞ்சியினும் நிகழ்ந்ததாகலின். அடிகள் : அண்மைவிளி. என்றற்கு - தான் பாடக்கருதி விளவின சாத் தற்கு; அங்ஙனம் கூறுது இங்ஙனம் கூறினரென்க. என்சொல்லிய

வாறேயெனின்,—இச்செய்கின்ற காப்பியம் மூவேந்தர்க்கும் உரியதென் பதனல், ஏனையோரை இவர் புகழ்ந்துரையாராகலின், யாம் காப்பியம் செய்யக்கடவேமென்பது கருதி நீரே அருளுகென ஏகாரவினைப் பொருண்மை தோன்ற இதுகருதி இதுசொன்னற்கு அவர் கருதிய பொருளிற்கு உடம்படாது சொல்லிற்கு உடம்பட்டாரென்பதாயிற்று.

இனித் தாம் வகுத்துக்கொண்டதனைக் கூறுவார்.

62 - 3. அவர் மங்கல வாழ்த்துப் பாடலும்

(இ - ள்.) அவர்மணத்தில் மகளிர் வாழ்த்துதலையுடைய பாடலும். மங்கலம் - கலியாணம். இதனை மங்கலவாழ்த்துக் காதையுமென்னது பாடலுமென்றது என்னையோவெனின்,—இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக்கலியால் வருதலானும், கதையையுடையது காதையாமாதலானும், அவ்வாறு இதிற் கதை நிகழ்ச்சியின்மையானும், வாழ்த்தும் உரையும் பாடலுமாய் வருதலானும் இங்ஙனம் பெயர் கொடுத்தாரென உணர்க. அஃது அற்றாக; மேலும் கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர்குரவை, துன்பமாலை, ஊர்சூழ்வரி, வஞ்சினமாலை, குன்றக்குரவை இவையிற்றையும் காதையென்றிலராலெனின்,—அவற்றைக் கூறுததும் சில வேறுபாடு கருதிப்போலும்; என்னை வேறுபாடெனின், அவை ஊத்த முடிவிற் கூறுதும்.

63 - 4. குரவர் மனையறம் படுத்த காதையும்

(இ - ள்.) இருமுதுகுரவரும் இவரை இல்வாழ்க்கையில் அடிப்படுத்தவேண்டி வேறுபடவிட்ட காதையும்,

64 - 5. நடநவின் மங்கை மாதவி யரங்கேற்று காதையும்

(இ - ள்.) ஐயாண்டில் தண்டியம்பிடித்து ஏழாண்டு நடம் நவின்ற மாதவி மங்கைப்பருவத்தே அரங்கேற்றின காதையும்,

66. அந்தி மாலைச் சிறப்புச்செய் காதையும்

(இ - ள்.) அந்திக்காலத்துமாலையைச் சிறப்புச் செய்த காதையும்,

67. இந்திர விழவூ ரெடுத்த காதையும்

(இ - ள்.) அந்நகரின்கண் இந்திரனுக்கு விழவெடுத்த காதையும்,

68. கடலாடு காதையும்

(இ - ள்.) அங்ஙனமெடுத்த விழவிறுதியிற் கடலாடின காதையும்,

69. மடலவிழ் கானல்வரியும்

(இ - ள்.) அங்ஙனம் கடலாடிய கோவலனும் மாதவியும் கழிக்கானலிடத்து யாழ்ப்பாட்டு நிகழ்த்திய கானல் வரியும்,

இஃது இசைப்பாவாற் பெற்ற பெயர். இதனுள்ளும் கதை நிகழாமை யுணர்க.

69 - 70. வேனில்வந் திறுத்தென மாதவி யிரங்கிய காதையும்

(இ - ள்.) இளவேனில்வந்து தலைப்பட்டதாகப் பிரிந்த மாதவி வருந்திய காதையும்,

70 - 71. தீதுடைக் கனாத்திற முரைத்த காதையும்

(இ - ள்.) கண்ணகி தான் கண்ட தீங்கையுடைய கனவின் திறத்தைத் தேவந்திக்கு உரைத்த காதையும்,

இது கலிவெண்பாட்டாகலின், "ஒருபொரு ளுதலிய வெள்ளடி யியலால், திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே" (தொல். செய். 153) என்பதனாற் கனாநிலையுரைத்தற் பொருண்முடிபாகிய பாவதனைக் கூறுதலிற் காதையாயிற்றென வுணர்க.

71 - 2. வினாத்திறத்து நாடுகாண் காதையும்

(இ - ள்.) கண்ணகியார் மதுரைமூதூர் யாதென வினாவின திறத்தையுடைய சோணாட்டின் வளனை அவர் கண்ட காதையும்,

இனிக் கவுந்தியடிகள் வினவின திறமெனவும், பிறர் வினவும் திறத்தையுடைய எனவும் அமையும்.

72. காடுகாண் காதையும்

(இ - ள்.) அங்ஙனம் மருதநிலமாகிய நாட்டினைக் கண்டு இன்புற்றவர் பாலை நிலமாகிய காட்டினைக்கண்டு துன்புற்ற காதையும்,

73. வேட்டுவ வரியும்

(இ - ள்.) வேட்டுவ மகளாகிய சாலினி கொற்றவை உருக்கொண்டாடிய கோலச்சாரியும்,

"இருவகை பல்வகை யென்னும் விலக்கோ, டரியவுறுப் புப்பதினொராட்டுக் - குரவைவரி, † சொக்க மவிநய நாடக மென்றிவற்றால், தக்கவனே யாடலா சான்" என்றமையான், வரியென்பது கோலச்சாரி; இது வேட்டுவ மகளாகிய சாலினி கொற்றவை யுருக்கொண்டு ஆடுதலின்; "கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப், பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ" (12: 'கொற்றவை') என்பதனாலறிக. கூத்துள் படுதலின், நாடக வரிப்பெயராய், வேட்டுவவரி நிகழ்தலின் இது வேட்டுவ வரியாயிற்று.

இது கூத்தாற்பெற்ற பெயர்.

73 - 4. தோட்டலர் கோதையொடு புறஞ்சேரி இறுத்த காதையும்

(இ - ள்.) கண்ணகியோடு மதுரைப் புறஞ்சேரியிற் சென்று விட்ட காதையும்,

74 - 5. கறங்கிசை யூர்காண் காதையும்

(பி - ம்.) † 'சோகம்', 'சேதம்'.

(இ - ள்.) முழங்காநின்ற முரசொலியையுடைய மதுரையைக் கோவலன் கண்ட காதையும்,

75 - 6. சீர்சா னங்கை யடைக்கலக் காதையும்

(இ - ள்.) அழகெல்லாமமைந்த கண்ணகியாகிய நங்கையை மாதரிபாற் கவுந்தியடிகள் அடைக்கலம் கொடுத்த காதையும்,

76. கொலைக்களக் காதையும்

(இ - ள்.) கோவலன் கொலைக்களப்பட்ட காதையும்,

77. ஆய்ச்சியர் குரவையும்

(இ - ள்.) தம் சேரிக்கு உற்பாதசாந்தியாக மாதரிமுதலாயுள்ள ஆய்ச்சியர் குரவைக்கூத்தாடின முறைமையும்,

"குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், எய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செழுநிலை மண்டலக் கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பதின் ருடலாகும்" எனவும் சொன்னாராகலின், இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர்குரவையெனக் கூத்தாற் பெற்றபெயர்.

77 - 8. தீத்திறங் கேட்ட துன்ப மாலையும்

(இ - ள்.) அங்ஙனம் அவன் கொலையுண்ட தீத்திறத்தைக் கண்ணகி கேட்டுத் துன்புற்ற இயல்பும்,

இதுவும் ஊர்சூழ்வரியும் சிறிது கதைநிகழ்ச்சியுளவெனினும் மருட்கையென்னு மெய்ப்பாடும் அவலம் அரற்றுக் கவலை கையாறென்னு மிவையும் (மணி. 30 : 116) நிகழ்தலியல்பினுன் இதனை மாலையென்றுரெனக்கொள்க.

78 - 9. நண்பக னடுங்கிய வூர்சூழ் வரியும்

(இ - ள்.) எல்லாரும் காண நாணிறந்து வெளிப்பட்டவுருவினொடு கண்ணகி ஊர்சூழவந்த ஊர்சூழ்வரியும்,

கண்ணகி ஊர்சூழவருவதனைப் பத்தினிப்பெண்டிர் கண்கூடாகக் காண்டலின் இஃது ஊர்சூழ்வரி யென்பதாயிற்று.

இதுவும் கூத்தாற் பெற்றபெயர்.

79-80. சீர்சால் வேந்தனொடு வழக்குரை காதையும்

(இ - ள்.) புகழமைந்த தென்னனேடு கண்ணகி வழக்குரைத்த காதையும்; உரைகாதை : வினைத்தொகை; இறப்பு.

80. வஞ்சின மாலையும்

(இ - ள்.) அங்ஙனம் தானுரைத்த வழக்கும் தோற்று உயிரும் தோற்ற நெடுஞ்செழியன் தேவியை நோக்கிக் கண்ணகி வஞ்சினங் கூறிய இயல்பும்,

வஞ்சினமாவது மேற்கோள். இக்கலிவெண்பாட்டுப்பத்தினித்தன்மைத்தாகிய ஒரு பொருளையே கருதிக்கூறிய இயல்புடைத்தாகலின், மாலையென்றுர்.

81. அழற்படு காதையும்

(இ - ள்.) அங்ஙனம் வஞ்சினங் கூறினவள்முலைமுகத்து எழுந்த தீ அவளேவிய இடமெங்கும் பட்டு எரித்த காதையும்,

81 - 2. அருந்தெய்வந் தோன்றிக், கட்டுரை காதையும்

(இ - ள்.) அங்ஙனம் அழற்படுதலின் அதற்காற்றுது மதுரைமா தெய்வம் அவ்வழல் தணித்தற்கு வந்து இவளது பவத்தொடர்பு கட்டு ரைத்த காதையும்,

82 - 3. மட்டலர் கோதையர் குன்றக் குரவையும்

(இ - ள்.) மதுவொழுக மலர்ந்த கோதையினையுடைய குறத்தியர் இவளை வேங்கை நிழற்கண் கண்டதற்கு உற்பாதசாந்தியாக முருக வேளை நோக்கி அக்குன்றின்கண் ஆடிய குரவையும்,

ஆய்ச்சியர் குரவையிற் கூறியது (77) இதற்குங்கூறுக. கோதை யென்று பாடம் கூறிக் கோதைக்கு அவர்கள் எடுத்த குரவையெனினும் அமையும்.

83. என்றிவை யனைத்துடன்

(இ - ள்.) என்று சொல்லப்பட்ட இவ்விருபத்துநான்குடனே,

84. காட்சி—(இ - ள்.) காட்சிக் காதையும்,

கற்காட்சியும், குறவர் [1] பாகுடக் காட்சியுமென்க.

84. கால்கோள்—(இ - ள்.) கற்கொண்ட காதையும்,

கற்கோள் கால்கோளென விகாரம்.

84. நீர்ப்படை—(இ - ள்.) அக்கொண்ட கல்லினைக் கங்கை யாற்று நீர்ப்படுத்தின காதையும்,

84. நடுகல்—(இ - ள்.) அக்கல்லினை நட்ட காதையும்,

85. வாழ்த்து—(இ - ள்.) அங்ஙனம் நடுங்கல்லான பிரதிட் டையும் விழவும் பெற்ற பத்தினிக்கடவுள் செங்குட்டுவனையும் நெடுஞ் செழியனையும் பெருங்கிள்ளியையும் வாழ்த்தின காதையும்,

85. வரந்தரு காதையொடு

(இ - ள்.) அங்ஙனம் வாழ்த்திய கடவுள் அவரோடு கனகவிசயர் முதலிய ஆரியமன்னருள்ளிட்டார்க்கு வரங்கொடுத்த காதையோடே,

ஒடு - ஒப்பலொப்புரை ; எண்ணொடுவுமாம். தருதல் - கொடை.

86. இவ்வா றைந்தும்

(இ - ள்.) முப்பதுமென்றெண்ணப்பட்ட,

---

[1] சீவக. 2708, ந.

87. உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்

(இ - ள்.) உரையிடையிட்டனவும் பாட்டுடையனவுமாகிய செய்யுளை, அனைத்துடன் காதையொடு இவ்வாறைந்தும் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளென்க. உம்மை : முற்று.

88. உரைசாலடிக ளருள

(இ - ள்.) புகழமைந்த இளங்கோவடிகள் அருளிச் செய்ய, அருளுகென்றுற்கு அருளவென்க.

88 - 9. மதுரைக் கூலவாணிகன் சாத்தன் கேட் டனன்.

(இ - ள்.) மதுரைக் கூலவாணிகனுக சாத்தன் கேட்டனன் ; கூலம் எண்வகைத்து ; அவை :—நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி ; பதினெண்வகைத்தென்பர் கூத்த நூலார்.

90. இது—(இ - ள்.) இவ்வரையறை

90. பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்.

(இ - ள்.) அறப்பால், பொருட்பால், காமத்துப்பாலாகிய அப்பால் களின் வகையைத் தெரிந்த செய்யுளின் பதிகத்தினது மரபு இதுவென்க.

என்னென்னும் அசைச்சொல் ஆசிரியப்பாவிற்கு முடிபு சிறப் புடைத்து.

அடிகட்கு அறிந்தருள் நீயென இருந்த சாத்தன் உரைப்போன் இவனென, வினைவிளைவு யாதென, விறலோய், கேட்டனன் யானென, அறங் கூற்றுவதூஉம் உயர்ந்தோரேத்தலும் ஊட்டுமென்பதூஉம் காரணமாகப் பெயரான் நாட்டுதும் யாம் ஒரு பாட்டுடைச் செய்யுளென, அருளுகென்றுற்கு அருளக் கேட்டனனென்க.

அறுபத்தெட்டாமடியுள், "கடலாடு காதையும்" எனக் குறளடியும், "வாழ்த்து வரந்தரு காதையொடு" (85) எனச் சிந்தடியும், "இவ்வா றைந்தும்" (86) எனக் குறளடியும் வந்து, "ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற், றேற்ற முச்சீர்த் தாகு மென்ப" (தொல். செய். 68) என்ற ஆசிரியர், "இடையும் வரையார் தொடையுணர் வோரே" (தொல். செய். 69) என்றதனுற் குட்டச் செந்தூக்காயிற்று.

இது நாற்பொருளுள்ளும் அகத்திணைக்கண்ணது இன்பமாகலா னும், புறத்திணைக்கண்ணது பொருளும் அறனுமாகலானும் வீடொழிந்த முடிபு கூறிநின்றது. அதனானன்றே, "மணிமே கலைமே லுரைப் பொருண் முற்றிய சிலப்பதிகாரம்" (நூற்கட்டுரை, 17–8) என்பா ரானதுவுமென்க.

பதிகம் முற்றிற்று.

# [1] உரைபெறு கட்டுரை



1. அன்றுதொட்டுப் பாண்டியனாடு மழைவறங்கூர்ந்து வறுமையெய்தி வெப்புநோயும் குருவும் தொடரக் கொற்கையி லிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு † சாந்தி செய்ய நாடுமலிய மழைபெய்து நோயும் துன்பமு நீங்கியது.

2. அதுகேட்டுக் [2] கொங்கிளங்கோசர் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்திசெய்ய மழைதொழில் என்றும் மாறாதாயிற்று.

3. அதுகேட்டுக் கடல்சூழ் இலங்கைக் கயவாகுவென் பான் நங்கைக்கு [3] நாட்பலிபீடிகைக் கோட்டமுந்துறுத்தாங்கு [4] அரந்தை கெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்க ளகவையின் ஆங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை யெடுப்ப மழைவீற் றிருந்து வளம் பல பெருகிப் [5] பிழையாவிளையுள் நாடாயிற்று.

4. அதுகேட்டுச் சோழன் பெருங்கிள்ளி [6] கோழியகத்து [7] எத்திறத்தானும் வரந்தருமிவளோர் பத்தினிக்கடவுளாகுமென நங்கைக்குப் பத்தினிக்கோட்டமும் சமைத்து [8] நித்தல்விழாவணி நிகழ்வித்தோனே.

---

1. உரைபெறுகட்டுரை - உரைத்துப்போதுகின்ற கட்டுரை.

2. கொங்கிளங்கோசர் - குறும்பு செலுத்துவார் சில வீரர்.

3. நாட்பலிபீடிகைக் கோட்டம் - நித்தலும் பலியிடும் இடத்தை யுடைய கோட்டம். 4. அரந்தை - துக்கம். 5. பிழையாவிளையுள் - குன்றுவிளையுள்.

6. கோழி . உறையூர். 7. எத்திறத்தானும் - வேண்டினர் வேண் டியவாறெல்லாம். 8. நித்தல்விழாவணி - நித்தமாகிய அணிவிழா.

---

† சாந்தி செய்தல் : பதிற். 9 : பதி. 15.

## 1. அன்றுதொட்டு......நோயுந்துன்பமுநீங்கியது

அன்றென்றது கதையை உட்கொண்டு நின்றது; "வெள்வா ளெறிந்தனன் விலங்கூ டறுத்தது, புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப, மண்ணக மடந்தை வான்றுயர் கூரக், காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன், கோவலன்" (16 : 213–7) என்றாராகலின்.

(இ - ள்.) பாண்டியனுடு அன்றுதொடங்கி மழைவறத்தன்மிக்கு அதனானே வறுமையுற்றுத் தொழுநோயும் குருவும் இடைவிடாது நலித லிற் கொற்கைக்கண் இருந்த இளஞ்செழியன் நங்கைக்கு ஆயிரம் பொற்கொல்லரைப் பலியிட்டுக் களவேள்வியாற் சாந்திசெய்து விழ வெடுத்தலானே அவன் நாடு மிகவும் மழைபெய்து முற்கூறிய வறுமை யும் நோயும் நீங்கிற்று.

வெப்பு - தொழுநோய்; "வெப்பின்முப்பழச்சுளை" (சீவக. 75) என்றாராகலின். இது வெதுப்பெனினும் அமையும்.

## 2. அதுகேட்டு......மாருதாயிற்று

(இ - ள்.) அங்ஙனம் செழியன் நன்மைசெய்து அவைநீங்குதலின் அதனைக்கேட்டுக் கொங்குமண்டிலத்து இளங்கோவாகிய கோசரும் நங் கைக்கு அங்ஙனம் சாந்தியும் விழாவும் செய்தலான் அவை நீங்குத லோடே மழை பெய்தற்றொழில் பெய்யுநாள் என்றும் வழுவாதாயிற்று.

பெய்யுநாளென்றது திங்கண்மும்மாரியை; பருவநாளெனினும் அமையும்.

## 3. அதுகேட்டு......நாடாயிற்று

(இ - ள்.) அதுகேட்டுக் கடலை அகழாகவுடைய இலங்காபுரத்துக் கயவாகு வென்று பெயர் கூறப்பட்ட அரசன் நங்கைக்கு அங்ஙனம் நாள்தோறும் பலிகொள்ளுதலையுடைய பலிபீடத்தை முந்தச்செய்து பின்பு கோட்டமும் அமைத்து முற்கூறிய துன்பங்களைக்கெடுத்து நமக்கு வேண்டும் வரங்களை இவள்தருமென்று துணிந்து ஆடித்திங்களிடத்தே ஆட்டைவிழாவாகத் தன் நகரவீதிதோறும் உலாச்செய்விக்க மழை குறைவின்றி நிலைபெறுதலானே அன்றே பொய்யாது விளையும் விளை விளையுடைய நாடாயிற்று அவன் நாடு.

பாடி - நகரி.

## 4. அதுகேட்டு......நிகழ்வித்தோனே

(இ - ள்.) அதனைக்கேட்டுச் சோழநாட்டு உறையூரிடத்தே பெருநற் கிள்ளி யரசனாகிய வளவன் இவள் பத்தினிக்கடவுளாதலின், எத்திறத் தானும் நமக்கு அரந்தையைக்கெடுத்து வரந்தருமெனக்கருதி நங் கைக்கு அங்ஙனம் கோட்டமும் அமைத்து நித்தல்விழவும் நடத்தினு னென்க.

எத்திறத்தானுமென்றார், இவள்பிறந்த உரிமைபற்றி. கோழியென் றது, ஒருகோழி நிலமுக்கியத்தால் யானையொடு பொருது அதனைப்போர்

தொலைத்தல் கண்டு அந்நிலத்திற்செய்த நகர்க்குப் பெயராயிற்று; "முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய, புறஞ்சிறை வாரணம்" (10 : 247–8) என்பர் மேலும். நித்தல் விழா - சீபலி. அரந்தை-துன்பம்.

உரைபெறுகட்டுரை - இவை முற்கூறிய கட்டுரைச் செய்யுள். "உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள், உரைசா லடிக ளருள" (பதி. 87–8) என்றமையால், காப்பியங்கட்குச் சிறுபான்மை இவ் வுறுப்புக்களும் சில வருமெனக் கொள்க. என்னை? "உரையும் பாடையும் விரவியும் வருமே" (தண்டி. பொது. 11) என்பது அணியிய லாகலின்.

உரைபெறுகட்டுரை முற்றிற்று.

## [1] நூற்சிறப்புப்பாயிரம்

### வெண்பா

நீடிருங் குன்ற நிழல்கா லு மண்டிலத்துக்
கோடுகோ டாய்த்தோன் றுங் கொள்கைத்தே—கூடலார்
கொண்டாடுஞ் செஞ்சொற் குடக்கோ முனிசேரன்
தண்டா வுரைமுத் தமிழ்.

### கட்டளைக்கலித்துறை

நலத்தகு நால்வரென் றேருதிய நான்முகத் தோன்படைத்த
குலத்ததி கார வணிகர் குலபதி கோத்ததமிழ்ப்
புலத்ததி கார ருறைபதி பூம்புகார் போற்றநின்ற
சிலப்பதி காரஞ் †செய் தானெடுஞ் சேரர் சிகாமணியே.

---

[1] இவ்விரண்டும் பழைய செய்யுட்களே; இயற்றியவர் பெயர் விளங்கவில்லை.

(பி-ம்.) † 'செய்தான்சேரனன்பர் சிகாமணியே'

## முதலாவது

# †புகார்க்காண்டம்

## (க) மங்கலவாழ்த்துப்பாடல்

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்
‡கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்
ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
மாமழை போற்றுது மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்
பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்
ஆங்கு,
பொதியி லாயினு மிமய மாயினும்

---

1. திங்களைப்போற்றுதும் திங்களைப்போற்றுதுமென்னும் அடுக்கு சிறப்பின்கண் வந்தது.

3. அங்கணுலகு - அழகிய உலகிடம்.

8. நாமநீர் - அச்சத்தைத் தருகின்ற கடல். 9. மேனின்று-எல்லாப் பொருளுக்கும் மேலாகநின்று.

11. வீங்குநீர் - நிறைந்த நீர்.

1 - 12. இவை நான்கு சிந்தியல் வெண்பாவும் செம்பியனையும் புகாரினையும் சிறப்பித்தன. 13. ஆங்கு - ஆதலால்.

---

அடி, 1-3: புறநா. 60. (மேற்.) இது குடைமங்கலம் (தொல். புறத். 30, இளம்.; 36, ந.) அடி, 4-6: இது திகிரியைப்புனைந்துரைத்தது (தொல். புறத். 36, ந.) அடி, 7-9: "மதிவாழி ரவிவாழி மழைவாழியே" (தக்க. 9, உரை); இத்தொடர், "திங்களைப் போற்றுதும்" என்பது முதலிய மூன்றையும் பின்பற்றிநிற்கும் முறை இங்கே அறிதற்பாலது.

(பி - ம்.) † 'புகார்காண்டம்' ‡ 'கொங்கலரார்ச'

பதியெழு வறியாப் பழங்குடி † கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
ஒடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே
அதனால்,
நாகநீ ணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில்
மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்
‡ ஈகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்
அவளுந்தான்,
¶ போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாண்மன்னோ
ஆங்கு,

---

16. பொதுவறு சிறப்பு - தனக்கே உரிய சிறப்பு.

14-9. பொதியில் இமயம் புகாரென்ற மூன்றனையும் ஒருவாற்றான் ஒப்புரைக்கின்றார்.

17. (பா) நிலைஇய - நிற்பதாக. 17 - 20. கேள்வியான் முழுதுணர்ந்தோர் அப்படிப் புகழினல்லது இம்மூன்றிடத்திற்கும் ஒடுக்கம் கூறார்; உயர்ந்தோருண்மையானென்க. புகார்ச்சிறப்புக் கூறியவாறு. 20. அதனால் - ஆதலால்.

21 - 2. நாகருலகத்துடனும் தேவருலகத்துடனும் போகம் நீள்புகழ் இவை பொருந்தும்.

23. மாக வான் - விண்ணின் மேகம். 24. ஈகை - பொன்.

26. போதிலார் திரு - போதில் நிறைந்த திரு; இவள்வடிவென வருவிக்க.

28 - 9. வழங்கிய பெருங்குணத்துக் காதலாள் - விளங்கிய பெருங்குணத்தாற் காதலித்தவள்.

இவளை முன்கூறிற்று; கதைக்கு நாயகியாதலின்.

---

அடி, 15: மலைபடு. 479.

(மேற்.) அடி, 21. "மேலைநாகர் கீழைநாகர் போன்மயங்கி வீழவே" (தக்க. 510, உரை.)

(பி - ம்.) † 'தழீஇய' ‡ 'ஈய்கை' ¶ 'போதில்வாழ்'

பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
ஒருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பான்
இருநிதிக் கிழவன்மக னீரெட்டாண் டகவையான்
அவனுந்தான்,
மண்டேய்த்த † புகழினான் மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென் பான்மன்னோ
அவரை,
இருபெருங் குரவரு மொருபெரு நாளால்
மணவணி காண மகிழ்ந்தனர் ‡ மகிழ்ந்துழி
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் ¶ கீந்தார் மணம்.
அவ்வழி,
முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்குடை
அரசெழுந்ததொர் படியெழுந்தன வகலுண்மங்கல வணியெழுந்தது
மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து

31-3. பெருமகன் முன்வைக்கப்பட்ட வணிகராகிய தன் கிளையோடு கூடி உயர்ந்த செல்வத்தினையுடையான்; இது [1] சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல்; எனவே தமக்குத் தாமே நிகராகிய வணிகரென்றவாறாயிற்று. மாசாத்துவான்: குடிப்பெயர்.

36. மண் தேய்த்த புகழ் - பூமி சிறுகும்படி வளர்ந்த புகழ். 36-9. மடவார் ஆயத்துக் கண்டேத்துஞ் செவ்வேளென்று கண்டார் கொண்டேத்தும் கிழமையான்.

43-4. யானையெருத்தத்தின்மேல் அணியிழையாரை இருத்தி மாநகர்க்கு அறிவித்தார்.

46. முருடு - மத்தளம்.

47. அகலுள் - ஊரிலே. மங்கலவணி எழுந்தது - மாங்கலிய சூத்திரம் வலஞ்செய்தது.

48. மாலைதாழ் சென்னித் தூண்.

[1] "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்" (குறள், 524.)

(பி-ம்.) † 'புகழுடையான்' ‡ 'மகிழ்ந்துழீஇ' ¶ 'கீய்ந்தார்மணம்'

நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டின ரொசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு † கோதையர்
ஏந்திள முலையின ரிடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தற் போலனறுங் கொடியன்னார்
காதலற் ‡ பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி
¶ அங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார் தங்கிய
இப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
உப்பாலைப் பொற்கோட் டுழையதா வெப்பாலும்
செருமிகு ‖ சினவேற் செம்பியன்
ஒருதனி யாழி § யுருட்டுவோ னெனவே.

---

50-53. சந்திரன் உரோகிணியைச்சேர அருந்ததியினது தகையாளைக் கோவலன் கலியாணம் பண்ணுவது.

54-9. விரையினர் மலரினராகிய விளங்குமேனியர்; பிறவுமன்ன. இவை வினைக்குறிப்புப்பெயர்.

60. இச்சொல்லப்பட்ட கொடியன்னார்.

63. உலகினருந்ததி: இல்பொருளுவமை.

66. உழையதாம்படி (68) உருட்டுவோனென (64) அமளியேற்றினா ரென்க.

---

அடி, 50: "அங்கணிருவிசும்பு விளங்கத் திங்கட், சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்து..........வதுவை மண்ணிய மகளிர்" (அகநா. 136.)

அடி, 56: "பலவகை விரித்த வெதிர்பூங் கோதையர், பலர்தொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்" (மதுரைக். 398-9.)

(பி-ம்.) † 'மேனியர்' ‡ 'பிரியாமைக் கவவுக்கை ஞெகிழாமை' ¶ 'அங்கண்விசும்பி னருந்துதி' ‖ 'நெடுவேற்' § 'யுருட்டுகோ'

### 1 - 3. திங்களை......அளித்தலான்

(இ - ள்.) நாம் திங்களைப் போற்றுவேம்; திங்களைப் போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின், தாது பரத்தல் செய்த மாலையையுடைய சென்னியுடைய குளிர்ச்சியையுடைய வெண்குடைபோன்று பொதுவற இவ்வுலகிற்கு அளிசெய்தலானென்க.

இது பண்பும் பயனும் கூடின உவமம். கொங்கு - தாது. அம் - அழகு, கண் - இடம். போற்றுதும் : பன்மைத் தன்மை; "அம்மாம்" (தொல். வினை. 5) என்னும் சூத்திரத்துக் கடதறவால் முடிந்தது.

இது "நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு" (தொல். புறத். 36.)

### 4 - 6. ஞாயிறு......திரிதலான்

(இ - ள்.) நாம் ஞாயிற்றைப் போற்றுவேம்; ஞாயிற்றைப் போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின், காவிரிநாட்டை யுடையானுடைய ஆழி போலப் பொலிவு பெற்ற கொடுமுடியையுடைய மேருவை வலமாகத் திரிதருதலானென்க.

திகிரி - ஆக்கினு சக்கரம்; இது தொழிலுவமம்.

### 7 - 9. மாமழை......சுரத்தலான்

(இ - ள்.) நாம் பெரிய மழையைப் போற்றுவேம்; பெரிய மழையைப் போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின், அச்சத்தைத் தரும் கடல் சூழுலகிற்கு அவன் அளிசெய்யுமாறுபோல மாருது மேலாய்நின்று தன் பெயலான் வளத்தைச் சுரத்தலானென்க.

நாம் : நாமமென உரிச்சொல் ஈறு திரிந்தது; புகழெனினும் அமையும்; ஏழ்வகைப் பெயருமாம். வேலி - சூழ்தல். அளி - கொடை. மேனின்று - மேலாய் நின்று. தான் : அசை. சுரத்தல் - இடைவிடாது சொரிதலுமாம். உலகிற்குச் சுரத்தலானென இயையும்.

### 10 - 12. பூம்புகார்......ஒழுகலான்

பூம்புகார் : விகாரம்; பூ - பொலிவு.

(இ - ள்.) நாம் புகாரைப் போற்றுவேம்; புகாரைப் போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின், மிக்க கடலை வேலியாகவுடைய உலகின்கண் அவன் குலம்புகழ்வார் இதனையும் புகழ்வாராகலினென்க.

உலகிற்கு - உலகின்கண்; உருபுமயக்கம்; "யாதனு......சாரும்" (தொல். வேற்றுமை மயங். 23) என்பதனுன் முடிந்தது; "தில்லைச்சூழ் பொழிற்கு" (திருச்சிற். 167) என்றாற்போல.

திங்களை முற்கூறினர், இத்தொடர்நிலைச் செய்யுட்குச் சிறந்த முதன் மொழி அதுவாகலான். இத்திங்கள் முதலியவற்று இவனளித்தல் முதலிய செய்கையொத்தலான், இவையும் இவனுற் சிறந்தனவென்பதாம். இறப்பப் புனைந்துரைத்தற்கு, "குடைநிழல் மரபு" (தொல். புறத். 36) என்றதனுல் கொடையும் திகிரியும் உயர்ச்சியும் புனைந்து கூறியவாருயிற்று.

13 - 9. ஆங்கு......முழுதுணர்ந்தோரே

(இ - ள்.) அப்படிப் போற்றினல்லது, மூனைவனூலின் முடித்த கேள்வியான் எனைத்துப் பொருளையும் உணர்ந்த பெரியோர், பொதியில் இமயம் புகாரென்னும் இம்மூன்றும் ஒருதன்மையவாதலான், ஆதியிற் றோன்றிச் சலிப்பின்றி நிலைபெற்றனவென்று கூறினல்லது, அவற்றிற்கு அந்தமுண்டென்று கூறார்; அவற்றில் உயர்ந்தோருண்டாகலானென்க.

ஆயினுமென்பது ஓர் எண்ணிடைச்சொல்; "கிளந்த வல்ல வேறு பிற தோன்றினும், கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே" (தொல். இடை. 48) என்னும் புறனடையாற் கொள்க. பதியெழுவறியா-பதியினின்றும் பெயர்தலை அறியாத; எனவே பகையின்மை கூறிற்று. பழங்குடி - தொன்மரபு; ஆதிகாலத்தேறிய குடியுமாம். கெழீஇய - பொருந்தின. பொதுவறுசிறப்பு - தனக்கே உரிய சிறப்பு. ஒடுக்கம் - முடிபு. உயர்ந்தோர் - முனிவனும், இறைவனும், அரசனும்; இனி, உயர்ந்தோர் அகத்தியனும் இருடிகளும் பழங்குடியிலுள்ளாரும் என்றுமாம்; என்றது இமயத்தோடும் பொதியிலோடுமுள்ள இருடிகளையும் புகாரிலுள்ள வணிகரையும் உவமித்தவாறும். உண்மையின் - உண்டாகலின். முடித்த கேள்வி - கரைகண்ட கேள்வி.

இவற்றாற் செம்பியன்சிறப்பும் புகார்ச் சிறப்பும் கூறியவாறாயிற்று.

20. அதனால் (இ - ள்.) அஃது அத்தன்மையதாகலான்.

என்றது புகார் நிலைபேறுடையதாகலாற் போகமும் புகழும் நிலைபேறுடையவென்றவாறு.

21 - 4. நாகநீணகரொடு......அகவையாள்

(இ - ள்.) சுவர்க்கம் [1]பவணமென்னும் இவற்றிற்குள்ள புகழும் போகமும் நிலைபெற்ற அப்புகாரென்னும் நகரின்கண் மழைபோல் வழங்கும் கையையுடைய மாநாய்கனுடைய குலத்திற்றோன்றிய கொம்புங்கொடியும் போல்வாள்; பன்னீராண்டிற்குட்பட்ட பிராயத்தாளாயினாளென்க.

நாகநீணகர் - சுவர்க்கம். நாகநாடு - பவணம். போகநீள்புகழ்: உம்மைத்தொகை; இருபெயர்க்கண் வந்தது; எதிர்நிரனிறை. மன்னும்-நிலைபெறும்; இடைநிலை விளக்கு. மாக வான்-விசும்பின் மேகம். மாநாய்கன்: சிறப்புப்பெயர். ஈகை - பொன்; வான்கொடி - வானவல்லி; பொன்மெய் வானவல்லியென்க. அவற்றோடுமொக்க மன்னும்புகாரெனினும் அமையும்.

25. அவளுந்தான் (இ-ள்.) அவள்தான். உம்மை: இசைநிறை.

26 - 9. போதிலார்......என்பாண்மன்னோ

(இ - ள்.) போதிற்பொருந்திய திருமகளுடைய புகழுடைய வடிவு இவள் வடிவையொக்குமென்றும், பழுதில்லாத அருந்ததியுடைய புகழை

[1] பவணம் - நாகலோகம். சுவர்க்கத்தினும் நாகலோகம் போகத்திற் சிறந்ததென்பது சைனநூற்றுணிபு.

யுடைய கற்பு இவள் கற்பையொக்குமென்றும் உலகின்மாதரார் தன்னைத் தொழுதேத்தும்படி விளங்கிய பெருங்குணங்களைக் காதலிப்பாள்; அவள் யாரெனிற் கண்ணகியென்று பெயர் கூறப்படுவாளென்க.

பெயரால் வேறுபடுமென்பதாம். திருவினள் : ஒரு பெயர். தீது - [1]பிறர் நெஞ்சு புகுதல். திறம் - கற்பு. மன்னும் : இடைச்சொல். புகழ் : இடைநிலை விளக்கு. பின்வருகின்ற இவளென்பதனை முன்னுங் கூட்டுக. மன்னும் ஓவும் இடைச்சொல்.

30 - 34. ஆங்கு......அகவையான்

(இ - ள்.) அப்புகாரினிடத்து † நெடுநிலமுழுவதையும தனியே ஆளும் கரிகாலனை முதற்குடியாகவைத்து எண்ணுதலையுடைய ஒப்பற்ற குடிகளின் மிக்கோங்கிய செல்வத்தையுடையான்; அவன் யாரெனின், தன்னுடைய பொருளை இல்லாதார்க்கருளும் மாசாத்துவானென்று பெயர் கூறப்படுவான்; அவ்விருநிதிக்கிழவனுடைய மகன் பதினாறாண்டிற்கு உட்பட்ட பிராயத்தானென்க.

பன்னிரண்டும் பதினாறுமாகிய பிராயத்தின் முதிர்தல் மரபன்மையின், அகவையாள் அகவையானென்றார். ஒப்பின்மையின் மிகுதி கூறுவார் ஒரு தனிக்குடியென்றார். ஓடு - இன்; உருபுமயக்கம்; உறழ்பொரு; இதுவும் புறநடையான் முடிந்தது. வருநிதி-நல்வினையாற் [2]கலத்தினும் காலினும் வருநிதி; நியாயத்தால் வரும் நிதியுமாம். பிறர்க்கு-பொருளற்றார்க்கு; நிதியற்றார்க்கும் நல்வினை செய்தார்க்குமென்றுமாம்.

பலர்க்கென்றும் பாடம்; அதற்கு இல்லாராகிய பலர்க்கென்க. ஆர்த்தும் - நிறைவிக்கும்; நுகர்விக்குமென்றுமாம். மாசாத்துவான் : இயற்பெயர். இருநிதிக்கிழவன் : சிறப்புப்பெயர்.

35. அவனுந்தான் (இ - ள்.) அவன்றான்.

ஈண்டும் உம்மை இசைநிறை.

36 - 9. மண்டேய்த்த......என்பான்மன்றோ

(இ - ள்.) மண்ணைத்தொலைத்த புகழினையுடையான், பண்ணைத் தொலைத்த மொழியினராகிய மதிபோலும் முகத்தினையுடைய மடவார் தம் காதலால் உலகிற் கண்டேத்தப்படும் செவ்வேளென்று அவனிசையைத் தமதாயத்தின்கட் பாராட்டிப் பரப்பிக் காமக்குறிப்பினால் உட்கொண்டு ஏத்துதற்குரியான்; அவன்யாரெனின், கோவலனென்று பெயர் கூறப்படுவானென்க.

'மண்தேய்த்த' என்றார், புகழ்வளரப் பூமி சிறுகலான்; மண் இடத்திற் சிறிது என்றார் [3]வள்ளுவனாரும். புகழினான் : எழுவாய். பண்டேய்த்த - பண்ணைக்கெடுத்த. செவ்வேளென்றார், வேள் இருவர் உளராகலின். முருகவேளைச் செவ்வேளென்றது, "ஞாயிறு கடற்கண் டாஅங்கு"

---

[1] மணி. 22 : 46. [2] 2 : 7. [3] குறள், 777.

(பி - ம்.) † 'நேமிநில'

(முருகு. 2) என்பதனால். போக்கி - எங்கும் போகப்பண்ணி; பரப்பி யென்றபடி. கொண்டு-காமக்குறிப்பினால் உட்கொண்டு. கிழமை-உரிமை.

இனி, மடவாரென்பதற்குப் பூமாதும் கலைமாதும் சயமாதும் புகழ் மாதும் புவிமாதுமென்று கூறி, இவர் அழகிற்கும் அறிவிற்கும் ஆண் மைக்கும் புகழுக்கும் பொறைக்கும் இவனென்று உட்கொண்டு ஏத்தும் கிழமை யானெனினும் அமையும்; "கலையின தகலமுங் காட்சிக் கின்ப மும், சிலையின தகலமும் வீணைச் செல்வமும், மலையினி னகலிய மார்ப னல்லதிவ், வுலகினி விலையென வொருவ னுயினான்" (சீவக. 411) என்றாற்போல.

இனி, மொழியினாலென்று பாடமாயின், மடவார்திரள் நடுவே மொழி யாலே புகழினான் செவ்வேளென்று இசையைப் பரப்ப ஏனையோரும் காதன்மையாற் கொடை அழகு வீரம் இவற்றிற்குரியான் யாவனெனிற் கோவலனென்று பெயர் சொல்லப்படுவானென்றலுமொன்று; இப்பொரு ளுக்கு, போக்கி - போக்கவென்க.

கண்ணகியை முற்கூறினார், பத்தினியை ஏத்துதல் உட்கோளா கலான்.

## 40 - 42. அவரை......மகிழ்ந்துழி

(இ - ள்.) அத்தன்மையாரைக் குரவர் இருவரும் ஒரு பெருநாளிலே மணவணி காணவேண்டி மனமகிழ்ந்தனர்; மகிழ்ந்த அளவிலேயென்க.

உழி - அளவு.

## 43 - 4. யானை......ஈந்தார் மணம்

(இ - ள்.) அவர் அணியிழையாரை யானையெருத்தத்து இருத்தி அம்மாநகர்க்கு இவர்மணமென்னும் மகிழ்ச்சியைக் கொடுத்தாரென்க.

எருத்தம் - புறக்கழுத்து. இரீஇ-இருத்தி. ஈந்தாரெனவே அறிவித்தா ரென்பதாயிற்று. சில மகளிரையணிந்து யானையேற்றி அறிவித்தல் மரபு.

## 45 - 7. அவ்வழி......அணியெழுந்தது

(இ - ள்.) அவ்விடத்து முரசு முதலிய இயம்பின: முருடு முதலிய அதிர்ந்தன; பணிலமுதலிய முழங்குதல் எழுந்தன; வெண்குடைகள் அரசனுயர்வு எழுந்தபடி எழுந்தன; மங்கலவணி ஊரெங்கும் எழுந்த தென்க.

முருடு - பத்தல்; மத்தளமுமாம். அகலுள் - தெருவுமாம்.

## 48 - 9. மாலைதாழ்......பந்தர்க்கீழ்

(இ - ள்.) மாலை தங்கிய சென்னியையுடைய வயிரமணித் தூண் நிரை பொருந்திய மண்டபத்து நீலப்பட்டு மேற்கட்டியின்கீழ் நிறுத்தின முத்தின் பந்தரிடத்தே யென்க.

நீல விதானங்கூறினார், முத்து ஒளிபெறுதல்நோக்கி; அஃது அக் காலத்து முத்து நோக்குவார் ஒப்புக்கு விரித்து நோக்குப. பூ - பொலிவு.

## 50 - 53. வானூர்......நோன்பென்னை

(இ - ள்.) மதியம் சகடணைந்த நாளிலே பார்ப்பான் மறையிற் சோதிடாங்கத்துள் வணிகர்க்குக் கூறியநெறியிலே சடங்குகாட்ட இவர் இங்ஙனம் தீவலம் செய்கின்ற இதனைக் காண்கின்றவர் கண்கள் முற் பவத்திற் செய்ததவம் யாதுகொலென்பாராயும்,

காண்கின்றவர்கள் நோன்பு என்னையெனினும் அமையும். சகடு - உரோகிணி. மாமுதுபார்ப்பான் - பிதாமகன்; புரோகிதனுமாம்.

54 - 5. விரையினர்......நோக்கினர்

(இ - ள்.) விளங்குமேனியர், விரையினராய் மலரினராய் உரையின ராய்ப் பாட்டினராய் ஒதுங்கிப்பார்த்த பார்வையினராயும்,

56 - 7. சாந்தினர்......சுண்ணத்தர்

(இ - ள்.) ஏந்திளமுலையினர், சாந்தினராய்ப் புகையினராய்க் கோதையராய்ச் சுண்ணத்தினராயும்,

58 - 9. விளக்கினர்......மூரலர்

(இ - ள்.) முகிழ்த்த மூரலர், விளக்கினராய்க் கலத்தினராய் முளைப் பாலிகையினராய்ச் நிறைகுடத்திட்ட கை புல்லினும் போதினும் நெகிழா மற் புணர்ந்தனராயும் நிரையினர்கள்.

[1] ஒருசொல் வருவிக்க.

60 - 68. போதொடு......எனவே

(இ - ள்.) கூந்தலையுடைய கொடியன்னார், இவளும் தன்காதலனைத் தன் கண்ணினும் நெஞ்சினும் பிரியாமற் புணர்வோளாக; இவள் காத லனும் இவளை அகத்திட்டகை †புல்லினும் போதினும் நெகிழாமற் புணர் வோனாக; இருவர் அன்பும் சருவதா ஒருவர் அன்பாகவென நினைந்து தம் வழிபடு தெய்வத்தை மனத்தால் வணங்கி அவ்வகையேத்திப் பின்பு சில மலரைத் தூவி, இப்பால் இமயத்திருத்திய வேங்கை பொற்கோட்டு உப்பாலிடத்தாயே நிற்பதாக; எப்பாலும் தன் போர்மேம்பட்ட வேலை யுடைய கரிகாலன் மாறில்லாத தன்திகிரியை உருட்டுவோனாகவெனச் சொல்லி, உலகில் அருந்ததியன்னாளை அமளியேற்றினாரென்க.

கொடியன்னார், பிரியாமல் நெகிழாமல் தீதறுகென ஏத்தித் தூவி அருந்ததியன்னாளை உழையதாக உருட்டுவோனாகவென அமளியேற் றினாரென்க.

இது பிராசாபத்தியம்.

பர மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

(க) மங்கலவாழ்த்துப்பாடல் முற்றிற்று.

---

[1]ஒரு சொல். 'ஆய்' என்பது

(பி - ம்.) † 'புல்லும்போதுநெகிழாமற்'

## இரண்டாவது

# மனையறம்படுத்த காதை

உரைசால் சிறப்பி னரைசுவிழை திருவின்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்
முழங்குகடன் ஞால முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்த தாகி
அரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎம்
ஒருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டம்
கலத்தினுங் காலினுந் தருவன †ரீட்டக்
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்
அத்தகு திருவி னருந்தவ முடித்தோர்
உத்தர குருவி னொப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங் காதற் கொழுநனும்
மயன்விதித் தன்ன மணிக்கலா லமளிமிசை
நெடுநிலை மாடத் திடைநிலத் திருந்துழிக்
கழுநீ ராம்பன் முழுநெறிக் குவளை

---

1. உரைசால் சிறப்பு - புகழமைந்த சிறப்பு.
2. பரதர் - கடலோடிகள்.
4. வழங்க - உபகரிக்க. தவா - கெடாத.
5. விருந்திற்றேம் - பரதேசங்கள்.
6. அத்தேயங்களிற் பொருள்களின் தொகுதிகூறுவார் தேம் ஒருங்கு தொக்கன்னவென்றார்.
8. குலத்திற் குன்றா - குலதருமத்திற் குன்றாத. செல்வர் - இருவர் பிதாக்களும்.
9 - 10. அத்தகு......தோன்றிய - அங்ஙனம் தக்க திருவினையுடைய அருந்தவமுடித்தோர் போகபூமியில் தோன்றுமாறுபோலத் தோன்றிய.

(7) கலத்தினும் காலினும் தருவனரீட்டுதலால் (5) விருந்திற்றேஎம் (6) ஒருங்குதொக்கன்னபண்டம் (4) வழங்கத் தவாஅப் பெருக்கத்ததாகி (1) அரசுவிழை திருவினையுடைய (2) கடலோடிகள் மலிந்தநகர் (10) உத்தர குருவினை யொக்கும்படி (9) செல்வர்க்குத் தோன்றிய (11) கண்ணகியும் கோவலனும்.

இவர் தோன்றுதலான் நகர் உத்தரகுருவை ஒத்தது.

---

அடி, 7. கலமும் காலும் : பெருங். 1. 47 : 180.
அடி, 12 : பெருங். 1. 33 : 103.
(பி - ம்.) † 'ரீட்டிக்'

அரும்பொதி யவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை
வயற்பூ வாச மளைஇ யயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் டோட்டுக்
கோதை †மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு மாதர்வாண் முகத்துப்
புரிகுழ லளகத்துப் ‡புகலேக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டுமகிழ் வெய்திக் காதலிற் சிறந்து
விரைமலர் வாளியொடு ¶வேனில்வீற் றிருக்கும்
நிரைநிலை மாடத் தரமிய மேறிச்
சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பொருந்தோ ளெழுதி
முதிர்கடன் ஞால முழுவதும் விளக்கும்
கதிரொருங் கிருந்த காட்சி போல
வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியன் மாலையொடு
கழுநீர்ப் பிணையன் முழுநெறி பிறழத்
தாரு மாலையு மயங்கிக் கையற்றுத்
தீராக் கதலிற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை
குழவித் திங்க ளிமையவ ரேத்த
அழகொடு முடித்த வருமைத் தாயினும்
§ உரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையின்

35. இருவரது புணர்ச்சி கூறுவார், 'தாரு மாலையு மயங்கி' என்றார். கையற்று - செயலற்று; புணர்ச்சியால் அவசமாகி.

(11) கண்ணகியும் கோவலனும் (13) இடைநிலத்திருந்துழித் (24) தென்றல் (25) கண்டுமகிழ்வெய்திச் சிறந்து (27) ஏறியிருந்து (29) எழுதிக் (35) கையற்றெனக் கூட்டுக.

இனி நயப்புக் கூறுகின்றது. 40. உரிதின் - உரித்தாக.

அடி, 29. மகளிர் தோளில் கரும்பினை எழுதல் : குறுந். 384 : 1; கலித். 63 : 7-8, 76 : 15. அடி, 31 : பெருங். 1. 32 : 22-3; இறை. 2, உரை.

(மேற்.) 38 : குழவியென்னும் இளமைப்பெயர் திங்களையடுத்து வரும் (தொல். மரபு. 24, பேர்.; நன். 387. மயிலை.)

(பி - ம்.) † 'மாதவிச்' ‡ 'பூவிலேக்கற்று' ¶ 'வேனில் வீற்றிருந்த, நெடுநிலை' § 'உரிதிதுநின்னோடு', 'உரிதினினின்னோடு'

பெரியோன் றருக திருநுத லாகென
அடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலின்
உருவி லாள னொருபெருங் கருப்புவில்
இருகரும் புருவ மாக † வீக்க
மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலின்
தேவர் கோமான் றெய்வக் காவற்
படைநினக் களிக்கவத னிடைநினக் கிடையென
அறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியும்
இறுமுறை காணா ‡மியல்பினி னன்றே
அஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா ¶வீத்தது
மாயிரும் பீலி மணிநிற §மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவும்
அன்ன நன்னுதான் மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை $நளிமலர்ச் செறியவும்
அளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழு மமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்
மடநடை மாதுநின் §மலர்க்கையி னீங்கா
துடனுறைவு மரீஇ யொருவா வாயின
நறுமலர்க் கோதைநின் னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்

---

42-5. காமனுக்கு வென்றி கொடுத்தலால் அவர் மேம்படுநரது முறைமை இவட்குக் கூறப்பட்டது.

46. இவளைத் திருமகளாக்கி அமிர்தின் முன்பிறத்தல் கூறப்பட்டது.

49-52. இவ்வாறு ஓர் உரிமையின்றியேயும் குமரவேள் தன்கையில் வேலொன்றையும் இரண்டாக்கித் தந்தது எம்மை வருத்தும் இயல்பினானன்றே.

55. (பா.) நன்னுதல் : முன்னிலைப் பெயர். 56. செறிதல்-ஒளித்தல்.

57. கிளி (61) நீங்காவாயின ; அதனால் (57) அளியவென்க.

58. குழைத்தல் - கூட்டுதல் ; இல்பொருளுவமை.

62. நலம்பாராட்டுநர் - ஒப்பிப்பார்.

63. மங்கலவணி - இயற்கையழகு.

---

(மேற்.) 42-5 : தக்க. 629, உரை.

(பி - ம்.) † 'வீய்த்தனன்' ‡ 'மியல் பினன்றே' ¶ 'வீத்தனன்' 'மஞ்ஞை, சாயற்கு' $ 'நளிர்மலர்' § 'மலர்க்கை நீங்கா, துடனுறைபு'

பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்
பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியும்
எல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொல்
நான நல்லகி னறும்புகை யன்றியும்
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொல்
திருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியும்
ஒருகாழ் †முத்தமொ டுற்றதை யெவன்கொல்
திங்கண்முத் தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவும்
இங்கிவை யணிந்தன ரென்னுற் றனர்கொல்
மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவா யாருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா விசையே யென்கோ
தாழிருங் கூந்தற் றையா நின்னையென்
றுலவாக் கட்டுரை பலபா ராட்டித்
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்துசெல் வுழிநாள்
வாரொலி கூந்தலைப் பேரியற் கிழத்தி
மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
உரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க

64. பிறிதணி அணிதலாற் பெற்ற பயன் என்? 66. எல் - ஒளி. என்னுற்றனர் - என்ன உறவுடையார்? 67. நானம்-நாற்றம். 68. மான் மதம் - புழுகு கத்தூரி முதலாயின. வந்ததை - வந்த உறவு. 70. உற்றதை - உறவு. 72. என்னுற்றனர் - என்ன பித்தேறினர். 81. உலவாமை - ஒழியாமை. 82. தருக்கி - மிக்கு. 84. (பா) பேரிற் கிழத்தி - கோவலன் மாதா. 85. கேண்மை - சுற்றத்தாரைப் பேணுதல். (பா) அறப்பரிகாரம் - துறந்தாரைப் பூசித்து அறத்தைப் பரிகரித்தல். 86. பெருந்தண் வாழ்க்கை இல்லறம். 87. வேறுபடு திருவின் - நானாவிதமான செல்வத்தோடே. வீறு - பெருமை. 88. உரிமைச் சுற்றம் - அடிமைத்திரள். ஒரு தனியாகப் புணர்க்கவென்க.

அடி, 77. மலையில் மணி பிறத்தல்: புறநா. 218: 2.
(பி-ம்.) † 'முத்துட னுற்றதை'

யாண்டுசில கழிந்தன விற்பெருங் †கிழமையிற்
காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென்.

வெண்பா

[1] ‡தூமப் பணிகளொன் றித் தோய்ந்தா லெனவொருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து—நாமம்
தொலையாத வின்பமெலா ந் துன்னினர் மண்மேல்
நிலையாமை கண்டவர்போ னின்று.

1-2. [2] உரைசால்......மா நகர்

(இ-ள்.) புகழமைந்த சிறப்பினையுடைய அரசரும் விரும்பும் செல்வத்தையுடைய பரதரான் மிகுதிபெற்ற பயன்மிக்க மாநகரென்க.

அரசென்பது, "குடிமை யாண்மை" (தொல். கிளவி. 56) என்னும் சூத்திரத்து 'நிலையினவாயினும், அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்' என்பதனுல் முடிந்தது; சிறப்பும்மை விரிக்க.

இனிப் பரதர் மிகுதி பெறுதற்குக் காரணமான நகரெனினுமாம். பயம் - மன்னர் விழைச்சி.

3-11. முழங்குகடல்......கொழுநனும்

(இ-ள்.) மாநகர், கலத்தானும் காலானும் ஈட்டுதலானே பெறுதற்கரியபொருளைத்தரூஉம் புதுமையையுடைய தீவு முதலிய தேயங்கள் வந்துகூடி ஒருங்குதொக்காற் போன்றுள்ள பண்டம் முழங்குகடல் சூழ்ந்த ஞால முழுதும் ஒக்கவரினும் வழங்கத் தொலையாத வளத்தினையுடையதாகலின், அங்ஙனம் அறத்திறுகிய பொருளால் [3] தலைப்படு தானத்தைச் செய்தோரெய்தும் உத்தர குருவினை யொக்கும்படி குலத்திற் குன்றுத செல்வர்க்குத் தோன்றிய பெரிய மலர்போலும் கண்ணையுடையாளும் அவள் காதலிக்கப்படும் கொழுநனுமென்க.

---

[1] இவ்வெண்பாவானது பல பிரதிகளில் இல்லை.

[2] இந்த "உரைசால் சிறப்பின்" என்னும் அடிக்குமுன்னர், "திருவின் செல்வியொடு பெருநில மடந்தையை, ஒருதனி யாண்ட செருவடு திண்டோம், கரிகாற் பெரும்பெயர்த் திருமா வளவனைப், பாலை பாடிய பரிசிலன் றெடுத்த, மாலைத் தாகிய வளங்கெழு செல்வத், தாறைந் திரட்டியு மாயிரங் குடிகளும், வீறுசான் ஞாலத்து வியலணி யாகி, உயர்ந்தோருலகிற் பயந்தரு தானமும், இல்லது மிரப்பு நல்லோர் குழுவும், தெய்வத் தானமுந் திருந்திய பூமியும், ஐய ருறையுளு மறவோர் பள்ளியும், விண்ணவ ருலகினி னண்ணிடு நகரமொ, டெண்ணுவரம் பறியா விசையொடு சிறந்த" என்னும் அடிகள் பதின்மூன்றும் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுச் சிலப்பதிகார மூலப்பிரதியில் இருந்தன.

[3] தலைப்படுதானம் - உத்தமதானம்; "அறத்தி னூற்றிய வரும் பெரும் பொருளைப், புறத்துறைக் குற்றமூன் றறுத்தநற் றவர்க்குக், கொள்கெனப் பணிந்து குறையிரந் தவர்வயின், உள்ளமுவந் தீவ துத்தம தானம்" (திவாகரம்)

(பி-ம்.) †'கேண்மையிற்' ‡'தூமப் பணிபலவுந்தோலாத வேலேந்து'

அத்தகு திருவினென்பதற்கு அவ்வளத்திற்குத் தக ஒழுகும் மனைவியோடேயெனினும் அமையும்.

அரும்பொருளாவன :—" நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும், காலின் வந்த கருங்கறி மூடையும், வடமலைப் பிறந்த மணியும் பொன்னும், குடமலைப் பிறந்த வாரமு மகிலும், தென்கடன் முத்துங் குணகடற் றுகிரும், கங்கை வாரியுங் காவிரிப் பயனும், ஈழத் துணவுங் காழகத் தாக்கமும், அரியவும் பெரியவும் " (185–92) எனப் பட்டினப்பாலையுட் சொன்னவும் பிறவும்.

" இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றினும், உரியதாகு மென் மனார் புலவர் " (தொல். அகத். 11) என்பதனாற் கலத்தினும் காலினு மென்றார் ; கலம் - மரக்கலம். கால் - வட்டை. இதனானே பின்னர் இருமர போரும் கலத்தொடுசேறல் பின்னர் ஊழிக்கு மரபெனக் கொள்க.

அருந்தவம் - ஈண்டுத் தானம். உத்தரகுரு - போகபூமி; அஃது அறு வகைப்படும் ; என்னை : " ஆதி யரிவஞ்ச நல்லரி வஞ்சம், ஏமத வஞ்ச மிரண வஞ்சம், தேவ குருவ முத்தர குருவமெனப், போக பூமி யறு வகைப்படுமே " (திவா. 12) என்றாராகலின். அதிற்பிறந்து [1] போக நுகருமாறு, [2] முடிபொருட்டொடர் நிலையுள் தானப்பயன் கூறும் வழிக் காண்க.

ஈட்டுதலால் ஒருங்குதொக்கன்ன பண்டம் வழங்கத் தவா வளத்த தென ஒட்டுக.

குலத்திற்குன்றுதல் - பூப்பின்கட்பிரிதல் ; அன்றி [3] நடுவின்றி நன் பொருள் வெஃகலுமாம். குலத்திற்குன்றாமை - " நெடுநுகத்துப் பகல் போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர், வடுவஞ்சி வாய்மொழிந்து, தம வும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ மிகைகொளாது, கொடுப்பதூஉங் குறைகொடாது " (பட்டினப். 206–10) என்பதெனக்கொள்க. செல்வர் - இருவர் பிதாக்களும்.

மாநகர், வளத்ததாகலின் ஒக்கும்படி செல்வர்க்குத் தோன்றிய கண்ணியும் கொழுநனுமென்க.

12 - 3. மயன்விதித் தன்ன......இருந்துழி

(இ - ள்.) அங்ஙனம் தோன்றிய கண்ணியும் கொழுநனும் மாடத்து இடைநிலைக்கண்ணே மயன் நிருமித்துவைத்தாற் போன்ற மணிக்கா லமளி மிசையே இருந்துழி யென்க.

உழி - அளவு. மயன் - தெய்வத்தச்சன். நெடுநிலை - எழுநிலை. இடைநிலம் - நாலாநிலம்.

---

[1] போகபூமியிற் பிறந்து போகம் நுகருதல்: " பதினா றாட்டைக் குமரனும் விதிவழிப், பன்னீ ராட்டைக் குமரியு மாகி, ஒத்த வன்பினு மொத்த நலத்தினும், கற்பக நன்மர நற்பய னுதவ, ஆகிய செய்தவத் தளவு மவ்வழிப், போக நுகர்வது போக பூமி " (திவாகரம்.)

[2] முடிபொருட் டொடர் நிலையென்றது அறம் முதலிய நாற்பயனை யும் கூறும் சீவகசிந்தாமணி முதலியவற்றை. [3] குறள், 171.

## 14-25. கழுநீ ராம்பல்......சிறந்து

(இ-ள்.) முழுநெறியாகிய மேதகு குவளையுடைய அரும்புகள் சுரும்பு இமிர இதழ் அவிழ்ந்த கழுநீர் முதலிய நீர்ப்பூக்களின் வாசத்தைக் கலந்துண்டு அவற்றின் வேருய கோட்டுப்பூ முதலியவற்றுள் தாழையினது விரிந்த வெள்ளிய தோட்டினையும் சண்பகப் பொதும்பரில் உண்டாகிய கோதைபோலும் மாதவிப்பூவின் தாதினையும் ஆராய்ந்துண்டு போந்து வாண்முகத்து மாதருடைய புரிந்த குழற்சியையுடைய அளகத்துண்டாகிய கலவைமணம் பெறுதற்கு ஏக்கற்றுப் புகுதற்கு வழி காணுமற் சுழலுகின்ற சுரும்பொடும் வண்டொடும் மணித்தாமத்தாலே ஒழுங்குபட நிரைத்து வகுத்த அழகினையுடைய சாளரக்குறும்புழையாற் செவ்வியறிந்து நுழைந்து புக்க மணவாய்த்தென்றலைக்கண்டு மகிழ்ச்சியெய்திப் புணர்ச்சியை விரும்பிக் காதன்மிகுதலா லென்க.

சாதிபற்றி ஆம்பலென்ருரெனினும் ஈண்டுக்கூறியது சேதாம்பலென உணர்க; இஃது அவற்ருேடு ஒருதன்மைத்தாகிய பகற்போதன்றெனினும் அவை விரியுங்காலத்து இது குவிதலின்மையிற் கலந்துண்டென்ருர். இதழ் ஒடிக்கப்படாதவெனவே செவ்விகூறிற்று; "தீநீர்ப் பெருங் குண்டு சுனைப்பூத்த குவளைக் கூம்புவிடு முழுநெறி" (116) என்ருர் புறப்பாட்டினும். கோதை-மாலை; ஒழுங்குமாம்; வெண்டோட்டுத்தாழையுமாம்; சண்பகப் பொதும்பர்க் கோதை மாதவியென்க. பொதும்பர்-மரச்செறிவு. இவை சண்பகத்தோடு மதர்தலின் தேர்ந்துண்டென்ருர்.

வாண்முகத்தளகமென்பாருமுளர். புகல்-புகுதற்கு. ஓடு: ஒருவினை. செவ்விபார்த்து நுழைந்து புக்கவென்க. செவ்வி-இவர்மகிழுஞ் செவ்வி.

பின்னின்ற உண்டென்பதனை அளைஇ உண்டெனவும், தேர்ந்துண்டெனவும் இரண்டிடத்தும் ஒட்டுக. அன்றி அளைஇ வண்டொடு புக்க தென்றலெனினும் அமையும். மணவாய்த்தென்றல்-மணத்தைத் தன்னிடத்தேயுடைய தென்றல்.

அளைஇ உண்டு தேர்ந்துண்டு ஏக்கற்றுத் திரிதரு சுரும்பொடும் வண்டொடும் புக்க தென்றலென்க.

## 26-7. விரைமலர்......ஏறி

(இ-ள்.) அங்ஙனம் அவர் காதன்மிகுதலாலே இடைநிலத்து நின்றும் மேல் நிரைத்துவகுத்த நிலங்களில் மணத்தினையுடைய மலர் வாளியோடே காமன்வீற்றிருக்கும் மேனிலமாகிய நிலாமுற்றத்தின்மேல் ஏறி யென்க.

வேனில்: ஆகுபெயராற் காமன். பகையின்றிக் கல்வியொடு செல்வத்திடை[1] நஞ்சுற்றகாமம் நுகர்ந்திருத்தலின், வாளியும் காமனும் வருந்தாதிருந்தமைதோன்ற வீற்றிருக்குமென்ருர்; இஃது உதாரமென்னுமலங்காரம்; என்னை? [2] "உதார மென்பதோதிய செய்யுளிற், குறிப்பி னொரு பொருணெறிப்படத் தோன்றல்" என்பது அணியியலாகலின்.

---

[1] சீவக. 11. [2] இது தண்டியலங்காரத்திலும் (பொது. 21) காணப்படுகின்றது.

28 - 31. சுரும்புணக் கிடந்த.........காட்சிபோல

(இ - ள்.) அங்ஙனம் நிலாமுற்றத்து ஏறினவர்கள், சுரும்புகள் உண்டற்குப் பாரித்து வைத்தாற்போலக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக் கண்ணே கடல்சூழ் ஞாலமுழுவதையும் விளக்கும் ஞாயிறும் திங்களும் சேர இருப்பக் கண்ட காட்சிபோல இருந்து கரும்பு வல்லியென்பனவற்றைப் பெரிய தோளிலே எழுதியென்க.

கரும்பையும் வல்லியையும் தோளில் எழுதியெனவே தொய்யிலொன்றையும் முலைமேலெழுதி யென்பதாயிற்று. பூவின்செவ்வி கூறுவார், சுரும்புணக்கிடந்த என்றார்.

இனி அதிகாரப் புறனடையால் (தொல். குற்றியலுகரப். 78) உகரங் கெடுத்து உண என்பதனைப் பெயர்ப்படுத்துச் சுரும்புகள்தாம் பலவகையுணவும் உளவழி அவ்வக்காலத்து ஆண்டுச் சென்று ஏறியும் இழிந்தும் சுழன்றும் மெய்வருந்தாது அவையெல்லாம் ஒருகாலத்து ஒருவழியுண்ணும் உணவுகிடந்த தன்மையொத்த பூஞ்சேக்கை யெனவும் அமையும். இது பூக்களின் சாதிப்பன்மையும் செவ்வியும் கூறிற்றுகும்.

மூதிர்தல் - முற்றுதல்; சூழ்தலுமாம்; " நீர்முற்றி மதில்பொரூஉம்" (கலித். 67 : 4) என்றார் பிறரும்; முதிர்ந்த கடலுமாம்.

ஒருங்கிருத்தல் : இல்பொருளுவமம். போல இருந்தென ஒரு சொல் வருவிக்க. இனிப் புணர்ச்சி கூறுவார்.

32 - 7. வண்டுவாய்.........கட்டுரை

(இ - ள்.) அங்ஙனமிருந்தவர்கள், வண்டுகள் புரிநெகிழ்க்க வாயவிழ்ந்த வெள்ளிய இதழையுடைய மல்லிகையினது பெரிய இளக்கத்தையுடைய மாலையோடே இதழொடியாது கட்டின கழுநீர்ப்பிணையலும் குலைந்தலைய மார்பிலிட்ட இவ்விருவகை மாலையும் மயங்கப்பட்டு இருவரும் செயலற்ற புணர்ச்சியிறுதிக்கண்ணே கோவலன் திருமகளைப்போல் வாளுடைய முகத்தை நோக்கித் தனது அறிவு முதலியனவற்றைக் குறியாத நலம்பாராட்டலென்னும் பொருள்பொதிந்த உரையைக் கூறுமென்க.

நிலாவிரிந்த : உவமைத்தொகை ; ஒளியுமாம். விரியல் - மலர்ச்சி. பிறழ - சரிய. மயங்கி - மயங்கப்பட்டு ; இடக்கர். தீரா : தீர்தலென்னும் விடற்பொருண்மையெதிர்மறை. கூறும் : முற்று. ஓர் : இடைச்சொல்..

இனிக் குறியாக் கட்டுரை - முன் கருதப்படாத கட்டுரை யெனினும் பொருந்தும். " குறியா வின்ப மெளிதினின்.........எய்தும் " (அகநா. 2) என்றார் ; கட்டுரை - நலம்பாராட்டலென்னும் பொருள் பொதிந்த உரை.

ஏறியிருந்து எழுதிப் பிறழ மயங்கிக் கையற்றுக் கூறுமென்க.

அக்கட்டுரை மேற்கூறுவார்.

38 - 41. குழவித் திங்கள்.........ஆகென

(இ - ள்.) பிறை, இறைவன் இமையவர் ஏத்தாநிற்கத் தன்முடிக்கு அழகு செய்தல் காரணத்தாற் சூடிய பெறுதற்கருமையுடைத்தெனினும்

அதனை அவன் நினக்குத் திருநுதலாகத் தரக்கடவன்: அஃது எற்றுலெனின் அப்பிறை நின்னோடு உடன்பிறப்பு உண்டாகலின் நினக்கு உரித்தாதலானென்க.

பெரியோன் - இறைவன். உரிது - உரித்து; "உரிதினிற், கொண்டாங்குப் பெயர்தல் வேண்டும்" (10) என அகப்பாட்டினும் கூறினர்.

திங்கட்குழவியென்றது "சொல்லிய வல்ல பிறவவண் வரினும்" (தொல். மரபு. 110) என்னும் மரபியற் புறனடையான் முடியும். "அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே" (கடவுள் வாழ்த்து) என்றார் புறப்பாட்டினும். அருமைத்து: அஃறிணை வினைக்குறிப்பு முற்று. தருகவென்றது சூடின் பிறை இரண்டுகலையாதலின், அதனை எண்ணாட்டிங்களாக்கித் தருக வென்பது கருத்து; என்னை? "மாக்கடனடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" (குறுந். 129) என்றாராகலின்.

இதனுன் மேற்கூறுகின்ற கரும்பையும் வச்சிரத்தையும் அவ்வவ் வுறுப்புக்கட்கேற்பத் திருத்தி ஈக்க அளிக்கவென்பதாயிற்று; என்றது கரும்பிற்கு நிறனும், வச்சிரத்துக்கு நேர்மையும் உண்டாக்கி என்றவாறு.

இஃது எதிரது போற்றலென்னும் தந்திரவுத்திவகை.

இங்ஙனங் கூறினர்; பிறை திருவொடு பாற்கடலிடைப் பிறத்தலின், இவளைத் திருமகளாக மதித்து.

42 - 5. அடையார் முனையகத்து.........ஈக்க

(இ - ள்.) அநங்கன் போர்செய்தற்கு எடுத்த ஒப்பில்லாத கருப்பு வில் ஒன்றையும் நினக்குக் கரிய இருபுருவமாகத் திருத்தித் தரக்கடவன்; அஃது எற்றுலெனின், பகைவர் முனையிடத்தே தம்மை மேம்படுப்பார் சிலர்க்குப்படைக்கல முதலியகொடுத்தல் அரசர்க்கு இயல்பாதலானென்க.

தன்னுல் ஒறுக்கப்படாத தெவ்வரை அழிக்குங்கால் இவருறுப்பாகிய படைக்கலங்கொண்டன்றி அழிக்கலாகாமையின், இங்ஙனம் கூறினர். ஈக்க: "ஈத்துவக்கும்" (குறள், 228) என்றாற்போல நின்றது. முனிவராகிய முரட்பகையை அழித்தற்கு வல்வில்லே வேண்டுதலின், ஒரு பெருங்கருப்பு வில்லென்றார். என்றது, காமனுக்குக் [1]காமநூலும் [2]ஆலையும் வில்லாதலின், அதன் வன்மை கூறினர். ஒருபெருங்கருப்புவில் இருகரும்புருவமாகவென்றது [3]சேமவில்லையும் கூட்டி; "வானோர்... வேண்டினான்" (சீவக. 2065) என்றாராகலின்.

---

[1] காமநூல் - பூவிசேடம்; இதனை மன்மத தந்திரமென்பர் வடநூலார்; இது மன்மதனுக்கு வில்லென்பதை அரவிஜயத்திற்காண்க; "கயக்க ணின்ற பூவின் மிக்க காம காண்டங் கன்னல்வில்" (கந்த. காமதகன. 62) என்பதும் இங்கே கருதற்பாலது.

[2] ஆலை - கரும்பு. [3] தக்க. 23, உரை.

### 46 - 8. மூவாமருந்தின்.........இடையென

(இ - ள்.) இந்திரன் அசுரரையழித்துச் சுரரைக் காத்தற்காக எடுத்த வச்சிரப்படையை நினக்கு இடையாகவெனத் திருத்தித் தரக் கடவன்; அஃது எற்றுலெனின், இமையவர்க்கு மரணமின்மையைப் பயக்கும் அமிழ்திற்கு நீ முற்பிறத்தலானென்க.

ஆகவென ஒருசொல் வருவிக்க. மூவா : மூத்தவென்னும் பெயரெச்ச எதிர்மறை. எனவே மூப்புக்கும் பிணிக்கும் மருந்தென்பதாயிற்று; என்றது அமிர்தத்தை. மருந்தின் : உருபுமயக்கம். நீ அமுதாகலின், நினக்கு முன்னர் வச்சிரம் பிறத்தலானெனினும் அமையும்.

வச்சிரமும் அமுதமும் கடல்கடைகின்ற காலத்துப் பிறந்தவெனப் புராணம் கூறும்; வச்சிரம் இருதலைச்சூலமாய் நடுவுபிடியாயிருத்தலான் அதனிடையை [1] நுசுப்புக்கு உவமங்கூறுப.

இறைவன் காமன் இந்திரனென்னுமிவர், பிறை கரும்பு வச்சிரமென்னுமிவற்றை நுதல் புருவம் இடையாகத் தருக ஈக்க அளிக்க உடன்பிறப்புண்மையிற் பண்புண்டாகலின் முன்னர்த் தோன்றலினென உய்த்துரைக்க.

### 49 - 52. அறுமுக வொருவன்......ஈத்தது

(இ - ள்.) முருகவேள் தன்கையில் அழகிய சுடரையுடைய நெடிய வேலொன்றையும் நின்முகத்து மழைக்கண் இரண்டுமாம்படி ஈதற்குக் காரணம் வேறில்லையாகவும் ஈத்தது யான் இறந்துபடுமுறைமையைத் தன்கண்ணுற் காணவேண்டுதல் காரணத்தானென்க.

" துள்ளுநர்க் காண்மார் " (கலித். 4 : 5) என்றாற்போல. பெறு முறையின்றியும் - அவ்வாறு தான் ஈத்தற்கு உரிமையின்றாகவும். வேலொன்று இரண்டாக ஈத்தல் - நிருமித்துத் தருதல் : " ஒக்கிய முருகன் வைவேலொன்றிரண் டனைய கண்ணுள் " (சீவக. 1291) என்றாராகலின்.

இனிப் பெறுமுறையின்றியும் என்பதற்குத் தனக்குப் பெறுங்கூறு ஒன்றும் இல்லையாகவுமெனினும் அமையும். இறுமுறை - முடியுமுறை; வருந்துந்தன்மை யெனினும் அமையும்.

இவை [2]புகழுவமையலங்காரம்; அஃதாவது " இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும், பிறையேர் திருநுதலும் பெற்ற - தறை புனல்சூழ், பூவலயந் தாங்கு மரவின் படம்போலும், பாவைநின் னல்குற் பரப்பு " (தண்டி. பொருள். 5) எனவரும்.

இவற்றுட் கட்புலனுய் எழுதப்படும் உறுப்புக்களைப் பாராட்டி, இனிக்கட்புலனுயும் ஆகாதுமாய் எழுதப்படாதன பாராட்டுவான்.

### 53 - 61. மாயிரும் பீலி......ஒருவாவாயின

(இ - ள்.) நன்னுதால், மாதே, மயிற்குலம் நின்னுடைய சாயற்கு

---

[1] கம்ப. கங்கைப். 34.

[2] புகழுவமையாவது உவமையைப் புகழ்ந்து உவமிப்பது.

எதிர்ந்து வந்து பொருது தோற்றுத் தண்ணிய காட்டிடத்தே போய் ஒடுங்கா நிற்கவும், அன்னம் மெல்லிய நடையினைக் கண்டு எதிர்ந்து வந்து தோற்றுத் தனது நடையழிந்து நல்ல நீர்பொருந்தின பண்ணை யிற் செறிந்த மலரிற் புக்கு மறையவும், சிறிய பசிய கிள்ளைகள்தாம் குழலிசையினையும் யாழிசையினையும் அமுதத்தினையும் கலந்து குழைத்தாலொத்த நினது முதிராத மழலைக்கிளவிக்கு எதிர்ந்து வந்து தோற்றனவாயும் நின்னை வழிபட்டு அக்கிளவி கற்பக்கருதி நினது கையினின்றும் நீங்காவாய் நின்னுடனே வெறுப்புத்தோன்றாமல் உறை தலையும் பொருந்திப் பிரியாவாயினவாகலின், அவை அளிக்கத்தக்கன காணென்றானென்க.

மாயிரு : "கோயில்" (சீவக. 155) போலநின்றது ; அதிகாரப் புற னடைவிதி (தொல். குற்றியலுகரப். 78) மா - கருமை. இருமை- பெருமை. மணி - நிலமணி. சாயல் - மென்மை (தொல். உரி. 29). தண்கான் - இழிந்த காடு. நன்னுதல், "எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே, நின்ற வீற்றய னீட்டம் வேண்டும்" (தொல். விளிமரபு. 27) என்பதனால் நீட்டித்தது. நளி - செறிவு. செறிதல் - ஒடுங்குதல். குழைத்த : இல்பொருளுவமை ; "கரும்புந் தேனு மமுதும் பாலுங் கலந்த தீஞ்சொல்" (சீவக. 2438) என்றாற்போல. இனிக்குழைத்த : குழைவித்த வெனினும் அமையும் ; வருத்தியவென்பதாம் ; "குழை முற்றின வாழைக் கொழுங்கனி குழைத்தும்" என்றாராகலின். மாது : முன்னிலை ; விளி ; "ஓவுமுவ்வு மேயொடு சிவணும்" (தொல். விளி மரபு. 5) என்பதனான் முடிந்தது.

அடையவும், செறியவுமே இவை ஒருவாவாயினவாகலான் அளிய வென்க.

கிளியும் இவள் வளர்ப்பன பலவாகலாற் பன்மை கூறினார்.

62 - 4. நறுமலர்க் கோதை......எவன்கொல்

(இ - ள்.) இத்தன்மையையாகிய கோதாய், நின்னைப் புனைந்து அழகு செய்யுமகளிர் குற்றமற்ற நினது புனையாத அழகன்றியும் வேறு சில அணிகளை அணிந்ததனாற்பெற்ற உதவி யாதுதானென்றானென்க.

"ஐயா யாகும்" (தொல். விளிமரபு. 4) என்பதனாற் கோதை கோதாயென விளியேற்றது. மங்கலவணி - மாங்கலியமென்பாருமுளர்.

65 - 6. பல்லிருங் கூந்தல்......என்னுற்றனர்கொல்

(இ - ள்.) பலவகைத்தாகிய கூந்தலிற் சிலமலரைப் பெய்தலே யன்றி அதன்மேலும் ஒளிபொருந்தி அவிழ்கின்ற மாலையைப் புனைதற்கு அந்த மாலையோடு அவர்கள் என்ன உறவுடையார்களோவென்றா னென்க. சின்மலர்-மங்கலமலர்; [1]கற்புமுல்லை முதலியவை; [2]அருச்சனை மலருமாம்.

---

[1]சீவக. 680, ந.; தக்க. 119- [2]சீவக. 164.

67 - 8. நான் நல்லகில்......எவன்கொல்

(இ - ள்.) அவர், கூந்தற்கு நெய்யையுடைய நல்ல அகிற்புகையை யூட்டுதன்மேலும் மான்மதச் சாந்தை அணிதற்கு அதனோடு தமக்குள தாகிய அந்தக் கண்ணோட்டம் யாதுதானென்றானென்க.

மான்மதம் - கத்தூரி.

69 - 70. திருமுலைத் தடத்திடை......எவன்கொல்

(இ - ள்.) அவர் அழகிய முலைத்தடத்தின்மேல் தொய்யிலெழுது தன் மேலும் தனிமுத்துவடத்தைப் பூட்டுவதற்கு அதனோடு அவர்க் குண்டான [1] கெழுதகைமை யாதுதானென்றானென்க.

திரு - [2] முலைமேற்றோன்றும் வீற்றுத்தெய்வம். தடம் - பரப்பு. தொய்யில் - பத்திக்கீற்று. காழ் - வடம்; முத்தக்காழெனா மாற்றுக.

71 - 2. திங்கள்......என்னுற்றனர்கொல்

(இ - ள்.) இங்ஙனமாகிய மங்கலவணியும் சின்மலரும் அகிற்புகை யும் தொய்யிலும் பாரமாய் அரும்பவும் வருந்தவும் இவ்விடத்து இவை கண்டு வைத்தும் பிறிதணியும் மாலையும் சாந்தும் முத்தும் அணிந்தா ராகலின், அவர்கள் என்னபேய் கொண்டார்களோவென்றானென்க.

73. மாசறுபொன்னே (இ - ள்.) கட்கு இனிமையான் மாசற வோடிய பொன்னை யொப்பாய்;

வலம்புரிமுத்தே (இ - ள்.) ஊற்றின் இன்பத்தான் முத்தை யொப்பாய்; மரபின் தூய்மை கூறுவான் [3] வலம்புரி முத்தென்றான்.

74. காசறு விரையே (இ - ள்.) உயிர்ப்பின் இனிமையாற் குற்றமற்ற விரையையொப்பாய்;

கரும்பே (இ-ள்.) சுவையின் இனிமையாற் கரும்பை யொப்பாய்;

தேனே (இ - ள்.) இனிய மொழியை யுடைமையால் தேனை யொப்பாய்;

இவற்றாற் சொல்லியது, ஒளியும் ஊறும் நாற்றமும் சுவையும் ஓசை யுமாகலின், "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண் டொடி கண்ணே யுள" (குறள், 1101) என நலம் பாராட்டப்பட்டன.

75 - 81. அரும்பெறற் பாவாய்......பாராட்டி

(இ - ள்.) பாவாய், மருந்தே, மடமகளே, தையால், நின்னை யான் மணியேயென்கோ! அமுதேயென்கோ! இசையேயென்கோ வெனச் சொல்லித் தொலையாத நலம் பாராட்டாகிய பொருள் பொதிந்த உரை யைப் பல பாராட்டியென்க.

---

[1] கெழுதகைமை-உரிமை.

[2] "ஆமணங்கு குடியிருந் தஞ்சுணங்கு பரந்தனவே" (சீவக. 171)

[3] "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" (ஆத்திரையன். பொது.)

உயிர்மருந்து - மிருத சஞ்சீவினி. இவற்றுற் சொல்லியது என்னே யெனின்,—காட்சியின் உயிர் மயக்குறுதலிற் கொல்லியிற் பாவாயென் றும், அவ்வாறு அழியுமுயிரை இமைப்பிற் றருதலின் ஆருயிர்மருந்தே என்றும் கூறி, மலையிடைப் பிறக்குமணி குழையாமையின் அதிற்பிறவா மணியே யென்பேனோ! அலையிடைப் பிறக்கும் அமிர்திற்கு இவ்வடிவின் மையின் அதனிற் பிறவாத அமுதே யென்பேனோ! யாழ் கட்கு இன்னு தாகலின் அதனிடைப்பிறவாத இசையே யென்பேனோவெனத் [1] தெரி தரு தேற்றவுவமை யென்னும் அலங்காரமும், மலை கடலென [2] விரோத மும், பின்வரு நிலையென்னும் அலங்காரமும் புலப்படுத்திருரென வுணர்க.

82 - 3. தயங்கிணர்......செல்வுழிநாள்

(இ - ள்.) வயங்கிணர்த்தாரோன் இங்ஙனம் கோதையொடு தருக்கி மகிழ்ந்து செல்லாநின்ற நாளிலே ஒருநாள்,

[3] தயங்கல் வயங்கலிரண்டும் விளக்கமாதலிற் பரியாயமென்னும் அலங்காரமும், தலையாய எதுகைத்தொடையின்பமும் புலப்படுத் தினமையுணர்க.

84 - 90. வாரொலி......கண்ணகி தனக்கென்.

(இ - ள்.) நீண்டு ஒலித்த கூந்தலையுடைய வீரபத்தினியை இரு நிதிக் கிழவன் மனைக்கிழத்தி, சுற்றந்தழாலோடே துறவறத்திற்குச் செய்யும் பரிசாரமும் விருந்தினரைப் புறங்கண்டு புகுத்தலும் ஒழிந்த செய்கைகளுமாகிய இவற்றேடு பொருந்திய இல்வாழ்க்கையைப் [4] பல படைப்பாகிய செல்வத்தோடே நடத்திக் கைவந்து உயர்ச்சி பெறுதலைக் காணவேண்டி அடிமைத்திரளோடே வேறே கூட்ட, அத்தைக் கண்ட கண் அங்ஙனம் காட்சிதரும் சிறப்பினையுடைய கண்ணகிக்கு இற்பெருங் கிழமையிற் சிலவாண்டு கழிந்தனவென்க.

மறப்பு - பொச்சாப்பு. இதனை எல்லாவற்றேடு மொட்டுக.

இதன் கருத்து :—கேண்மையோடெனவே சுற்றந்தழாலும், அறப் பரிசாரமுமெனவே அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும் துற

---

[1] தண்டி. பொருள். 5.

[2] தண்டி. பொருள். 54.

[3] 'இளங்கோவடிகள் மனையறம்படுத்த காதையுள், 'தயங் கிணர்.....செல்வுழி' என்றவற்றுள், தயங்கல் வயங்கல் இரண்டும் விளக்கமாதலின் அதற்கு விரித்துரை யெழுதிய அடியார்க்கு நல்லாரா கிய ஆசிரியர் அதனையும் பரியாயமென்னும் அலங்காரமாகக் குறித் தார்; அஃது இப்பொருளணியுள் முந்துறக்கூறிய பொருட்பின்வருநிலை யுள் அடங்குமென்றறிக' (மாறன். 199, உரை.)

[4] "படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும், உடைப்பெருஞ் செல்வர்" (புறநா. 188)

வோர்க் கெதிர்தலும் என்பதாயிற்று. இவற்றோடே பொருந்திய வாழ்க்கையெனவே அருளுடைமை, அன்புடைமை, இனியவை கூறல் முதலிய இல்லறப்பகுதி யெல்லாம் அடங்கும். இக்கருத்தானன்றே, **கொலைக்களக்காதையிற்** கண்ணகியார், "அறவோர்க் களித்தலு மந்தணரோம்பலும், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" (71 - 3) என்றதுமென்க.

கூந்தலையுடைய பேரியற்கிழத்தி யெனினும் அமையும்; பேரியற்கிழத்தி - கோவலன்மாதா.

கண்ணகிக்குச் சில யாண்டு கழிந்தனவெனவே மாதவிக்குப் பல யாண்டு கழிதலும் கொள்ளப்பட்டது. இன்னும் மேற் **கனாத்திற முரைத்த காதையில்,** தேவந்தி, "கண்ணகி நல்லாளுக் குற்றகுறையுண்டென்று" (41) என்புழி எச்சவும்மை விரிக்க, இவட்கு அவள் இளமைப்பருவந்தொடங்கி நிகழும் பார்ப்பனத்தோழியாய் மாநாய்கன் மனை வளர்தலின், ஒருகாலத்தே குடிபுக்குச் செல்கின்றுழிப் பிரிவும் ஒருகாலத்தாயிற்றென்பதாகலின், "நாலீ ராண்டு நடந்ததற் பின்னர்" (30 : 85) என்பதனை இருவர்க்குமாக்கி மாதவிக்கு எட்டினிறந்த பலயாண்டு சேறலிற் கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தவெனப் பொருள்கூறலு மொன்று; இதனான் மிக்க பலமின்று; ஏற்குமேற் கொள்க. இது போலி.

[1] செல்வர்க்குத்தோன்றிய கண்ணியும் கொழுநனும் தென்றலைக் கண்டு மகிழ்ந்து சிறந்து ஏறிக் காட்சிபோலச் சேக்கையிலிருந்து எழுதி மயங்கிக் கையற்று முகநோக்கிக் குறியாக்கட்டுரை கூறுகின்றவன் திங்கள் முதலியவற்றை முதன்முதலில்வரச் சொல்லிப் பலபாராட்டி மகிழ்ந்து செல்வுழி ஒருநாள் பேரியற்கிழத்தி புணர்க்கக் கண்ணகிதனக்குப் பெருங்கிழமையோடு ஆண்டுசில கழிந்தன வெனக்கூட்டுக.

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இது நிலைமண்டில வாசிரியப்பா.

## (உ) மனையறம்படுத்த காதை முற்றிற்று.

---

[1] இம்முடிபிலுள்ள செய்தெனெச்சங்களுட் சிலவற்றைச் செயவெனெச்சத் திரிபாகக்கொள்க; பின்னும் இங்ஙனம் கொள்ளவேண்டிய இடங்கள் உண்டு.

# மூன்றாவது

# அரங்கேற்று காதை

தெய்வ மால்வரைத் திருமுனி யருள
எய்திய சாபத் திந்திர சிறுவனொடு
தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை

---

**கூத்தியதமைதி கூறுகின்றது :—**

1. தெய்வமால்வரை - பொதியின்மலை ; தெய்வத்தன்மையை யுடைய வரை ; உருபுதொக்குத் தெய்வமால் வரை யென்றாயிற்று.

திருமுனி - அகத்தியன். அருள - அவன் சாபமிட்டருள.

2. எய்திய - அச்சாபத்தையெய்திய.

(1) அருளாலென்று பாடமோதி அருளாற் சாபநீங்கியவென்றுமாம்.

2. இந்திரசிறுவன் - சயந்த குமாரன். இந்திரசிறுவனொடென்ற தனாற் சயந்த குமாரனோடே உருப்பசியும் சாபநீங்கிப் போனாளென்க ; [1] "திருந்திய........வாகிவந் தனனென்" என்றாராகலின்.

3. தலைக்கோற்றானம் - நாடக அரங்கு.

4. மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிரென்றது இப்படியால் ஒப்பில்லாத சிறப்பினையுடைய வானவர் மகளிர் ; ஆவார் - தளியிலார் ; உருப்பசி வந்து சாபத்தாற் பிறக்கையால் அவள் வழியுள்ளாரையும் வானவர்மகளிரென்றாராயிற்று. அவருள்,

5. சிறப்பு - வரிசை. செய்கை - தொழில்.

6. பிறப்பு - அம்மாதவி வழிவந்த பிறப்பு. பெருந்தோண் மடந்தை : மகளிர்க்குத் தோள்பெருக்கை இலக்கணம் ; என்னை ? "அகலல்குறோள் கண்ணென மூவழிப் பெருகி" (கலித். 103 : 2) என்றாராகலின்.

---

(மேற்.) அடி, 1 : 'தெய்வ மால்வரைத் திருமுனியருளால் என்புழித் தெய்வவரை யென்று ஒட்டித் தெய்வத்தன்மையுடைய வரை யெனப் பொருள் தருகின்றது, இன்னோசை தருதற்கு மாலென்பதனோடும் ஒட்டினாற் போல' (தொல். புணரியல். 9, ந.)

[1] அரும்பதவுரையில், இப்படி முதலிறுதிகள் மட்டும் கொடுக்கப் பெறும் சூத்திர முதலியவற்றின் முழுவடிவங்களை **அடியார்க்கு நல்லாருரையிற் காண்க.**

யென உரைப்பினுமமையும்; " அருங்கல......அதுக்கினுள்" (1372) எனவும், " மஞ்சுசூழ்......சீறினுள் " (1373) எனவும் சிந்தாமணியினும் கூறினுராகலின்.

## 58 - 71. காதலர்ப் பிரிந்த......புலம்புமுத்துறைப்ப

(இ - ள்.) அங்ஙனம் கையற்ற கண்ணகியே யன்றியும், தம் காதலரைப் பிரிந்த மாதர் பிரிவால் துன்பமுறுதலானே ஊதுகின்ற துருத்தியின் உலைமூக்குப்போல அழலெழ உயிர்த்தனராய்ச் செருக்கடங்கி இவ்விளவேனிற்காலத்திற்கு அமைந்த நிலா முற்றத்தில் மேவாதொழிந்து கூதிர்க்காலத்திற்கு அமைந்த இடைநிலத்து ஒடுங்கி ஆண்டுத் தென்றலும் நிலவும் புகாமற் சாளரக் கண்களையடைத்துச் சந்தனமும் முத்தும் ஆகத்துமுலையில் அடையப்பெருது வருந்தக் குவளை செங்கழுநீர் முதலிய குளிர்ந்த மலர்கள் தாம் விரும்பிய பூஞ்சேக்கையிற் பள்ளித்தாமமாய் மேவப்பெருமல் வருந்தத் தன் சேவலோடு புணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப்பெய்த பல்வகையணைமீதே மேன்மைபெறத் தம் கொழுநர் அகலத்தே துயிலும் களித்துயிலைப் பெருமல் அவரோடு முன்பு ஊடிய காலத்து இடைநின்ற குமிழையெறிந்து கடைநின்ற குழையைத் துரந்து [1]பெருமையும் உரனுமுடைமையாற் கலங்காத நெஞ்சமும் கலங்கும்படி கடைசிவந்து குறுக்கிட்டுப் பிறழும் நெடிய கண்கள் அங்ஙனம் பிறழ்ந்து உவகை முத்தைச் சிந்தாது புலம்புமுத்தைச் சிந்தவென்க.

நோதக - கண்டார்க்கு நோவுதக. ஊதுலைக்குருகு - துருத்தி; வெளிப்படை. அலர்தல் - பரத்தல். ஆகத்துமுலையென்க; முலையாகமுமாம். கழியவென்பது ஈண்டு வருந்தவென்பதாயிற்று. துணை - சேவல். தூவி - மயிர். இணையணை - பலவான அணை; " ஐந்துமூன்றடுத்த " (சீவக. 838) என்றுராகலின். திருந்து துயில் - முற்கூறிய களித்துயில். உடைப்பெருங் கொழுநர் - தங்களையுடைய பெரிய கொழுநர். ஊடற்காலத்து - முன் ஊடுங்காலங்களில். கலங்காவுள்ளம் - பெருமையும் உரனுமுடையவுள்ளம். விலங்கிநிமிர் - குறுக்கிட்டுப்பிறழும். நிமிர் நெடுங்கண் : வினைத்தொகை. புலம்புமுத்து - துன்பக் கண்ணீர்; உவகைக் கண்ணீருமுண்டாகலின்; புலம்பு - தனிமையுமாம். உறைப்ப - உகுப்ப.

கண்ணகியன்றியும் மாதர் ஒடுங்கிக் கழிந்து அடைத்து வருந்தக் கழியப்பெருது முத்துறைப்பவென்க.

## 72 - 6. அன்னமென்னடை......மலர் விழிப்ப

(இ - ள்.) அன்னமாகிய மென்னடையினையும் தேம்பொதி நறுவிரை ஆம்பலுறும் தாமரையாகிய வாயினையும் தண்ணறலாகிய கூந்தலினையுமுடைய பொய்கையென்பாள், பாண்தன்மையைத் தம்மிடத்தேயுடைய வண்டுகளாகிய பள்ளியுணர்த்துவார் புறநீர்மையென்னும் திறத்தாற் பள்ளியெழுச்சிபாட, அழகுவரும் குவளையாகிய கண்மலர்விழிப்பவென்க.

---

[1] தொல். களவு. 7.

ஆம்பல்: வாய்க்கு அடை; "துப்புறழ் தொண்டைச்செவ்வாய்" (சீவக. 107) போல; பண்ணுமாம். நாறும் - தோன்றும்; "அருமணி மரகதக் தங்க ணுறிய" (183) எனச் சிந்தாமணியினும், "மரகத மணிக்கயத் தங்க ணுறிய, அழனிறப் பொன்னித ழாயிரம் விரித்து" எனக் கதையினும் கூறினாராகலின். தேம் - இனிமையும், தேனும். நறுவிரை - நல்லமணம். பாண் - பாண்சாதி. நோதிறம் - நொந்த திறம்; ஆவது புறநீர்மை. அது பாலைப்பண்ணின் திறம் ஐந்துள் ஒன்றென்க; என்னை? "தக்கராக நோதிறங் காந்தார பஞ்சமமே, துக் கங் கழிசோம ராகமே - மிச்கதிறற், காந்தார மென்றைந்தும் பாலைத் திறமென்றார், பூந்தா ரகத்தியனார் போந்து" என்பவாகலின்.

குவளைக்கண்மலர் - குவளையாகிய கள்ளையுடைய மலர்; குவளைக் கண்மலருமாயிற்று. விழித்தல் - மலர்தலும், கண்விழித்தலுமாயிற்று.

இனித் தேம்பொதி நறுவிரைத்தாமரையாகிய ஆம்பல் நாறும் செவ் வாயெனினும் அமையும்.

இனிப் பெண்பாலாதலிற் பண்தோற்றும் வாயென வாய்க்கு அடை யாக்கலுமொன்று. பாணைப் பாட்டாக்கி வண்டின்வாய்க்கு அடையாக் கினும் அமையும்.

பாட விழிப்பவென இயையும். அன்னமென்றதுமுதல் விழிப்ப வென்னுந்துணையும் கூறிய இவை உருவகமென்னும் அலங்காரமென் றுணர்க.

## 77 - 84. புள்வாய் முரசமொடு......நனிசிறந்தது.

(இ - ள்.) பொய்கை கண்மலர்விழிப்பப் புள்ளொலியாகிய முர சுடனே கோழியும் சங்கமும் முறைமுறையார்ப்பக் கடல்போலும் பரப் பையும் ஒலியையுமுடைய ஊரைத் துயிலெழுப்பி அல்லற்காலை வந்து புக்க இருள் இவ்விடத்துநின்று நீங்கும் வைகறையாமமளவும் முன் சென்ற அரையிருளினும் ஓர் யாமத்தினும் அரையாமத்தினும் ஒருகணப் பொழுதும் துஞ்சாராம்படி காமன் ஏந்தித் திரிதருதலானே இந்நகரம் மிகவும் காவல் சிறந்ததென்க.

"நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்" (189 : 3) என்றார் புறத்தினும்; "கைச்சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப் பான்" (290) என்றார் சிந்தாமணியினும்.

முள்வாய் - கூர்த்த வாய். முறைமுறையார்ப்ப - தத்தம் இனமரபி னார்ப்ப; இன்: உவம உருபு. [1] "துயிலெடை" என்பவாகலின், எடுப்பியென்றார்; பிரிந்தார்க்கும் புணர்ந்தார்க்கும் துயிலின்மை காம னால் வருதலின். இரவு தலைப்பெயருமென்பதனை இரவுத்தலையென்றார்; "கிளந்தவல்ல" (தொல். குற்றியலுகரப். 78) என்னுமதிகாரப்புறன

[1] "சூத ரேத்திய துயிலெடை நிலையும்" (தொல். புறத். 36); "பயில்பூம் பள்ளித் துயிலெடை மாக்கள்" (பெருங். 4. 5 : 81.)

டையால் "தடவுத்திரை" போல வல்லெழுத்துப்பெற்றது. தலை - இடம். பெயரும் - நீங்கும். காறும் - அளவும். அரையிருள் - இரண்டாம் யாமம்; யாமம் - ஓர் யாமம்; அரையிருள்யாமம்: உம்மைத்தொகை; இருபெயர்க்கண் வந்தது. பகல் - அரையாமம்; "மற்றை யாமம் பகலுறக் கழிப்பி" (653) என்றார் மதுரைக்காஞ்சியுள்ளும்; பகுத்தலிற் பகலாயிற்று. நனி - மிகுதி.

ஆர்ப்ப எடுப்பித் தலைப்பெயரும் வைகறைகாறும் துஞ்சாராம்படி காமன் ஏந்தித் திரிதருதலான் நகரம் காவல் மிகச் சிறந்ததென்க.

இனித் துஞ்சானென்று பாடமோதி, [1]காமன் துஞ்சானாய்த் திரிதருதலின், நகரம் காவல் சிறந்ததெனினும் அமையும்.

என் : அசை.

இது முதல் நடு இறுதி அளவடியான் முடிதலின், நிலைமண்டில ஆசிரியப்பா.

வெண்பா

கூடினார் பானிழலாய்க் கூடார்பால் †வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே—கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது.

(௪) அந்திமாலைச் சிறப்புச்செய்காதை முற்றிற்று.

---

[1] "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் றிரியுங் கருவூரா" (சிலப். 5 : 49, அடியார். மேற்.)

(பி - ம்.) † 'வெய்தாய்த்தங், காவலன்'

## ஐந்தாவது

# இந்திரவிழவூரெடுத்த காதை



அலைநீ ராடை மலைமுலை யாகத்
தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை
புதையிருட் படாஅம் போக நீக்கி
உதைய மால்வரை யுச்சித் தோன்றி
உலகுவிளங் கவிரொளி மலர்கதிர் பரப்பி
வேயா மாடமும் வியன்கல விருக்கையும்
மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்
கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையும்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும்

---

1 - 2. மலையாகிய முலையையுடைய ஆகத்துப் பேரியாருகிய ஆரம்.

(1) நீரை ஆடையாகவும், மலையை முலையாகவும் (2) யாற்றை ஆரமாகவும், மாரியைக் கூந்தலாகவுமுடைய (3) மண்ணகமடந்தையுடைய (4) இருளாகிய படாத்தை நீக்கியென்க.

6. உலகு விளங்குதற்குக் காரணமான ஒளி - ஆதித்தன்; கதிரைப் பரப்ப.

7. வேயாமாடம் - தட்டோடிட்டுச் சாந்துவாரப்பட்டன; நிலா முற்றமுமாம். கலவிருக்கை - பண்டசாலை.

8. மான்கட்காலதர் - மான்கண்போன்ற சாளரம்.

9. கயவாய் - புகார். 10. யவனர் - சோனகர்.

11. புலம்பெயர் மாக்கள் - கடலோடிகள்.

12. இலங்குநீர்வரைப்பு - அவர்களிருக்கும் அலைவாய்க்கரை.

---

அடி, 1–2. "மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை, அணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்று" (சிறுபாண். 1–3); கலித். 28 : 5.

7–58. இவ்வடிகள் **மணி.** 28 : 29 - 68-ஆம் அடிகளின் கருத்தை ஒத்துள்ளன.

11, பல்வேறு நாட்டினர் : 6 : 130; **மணி.** 1 : 16; **பெருங்.** 1. 57 : 65; **சீவக.** 93.

(**மேற்.**) 8. **சீவக.** 2291, **ந.**

வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையு மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினு மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையும்
தூசுந் துகிரு மாரமு மகிலும்
மாசறு முத்து மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கையோ டளந்துகடை யறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் † பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் ‡ மைந்நிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையும்

13. வண்ணம் - தொய்யிலெழுதுவன.

14. புகை - மயிருக்குப் புகைக்கும் அகின்முதலாயின: அவையாவன:—"அஞ்சனக் கட்டி யரியாசம் பச்சிலை, ஆர மகிலுறுப்போ ரைந்து."

விரையாவன:—"கொட்டந் துருக்கந் தகர மகிலாரம், ஒட்டிய வைந்தும் விரை."

17. காருகர் - நெய்வோர்; அச்சுக்கட்டிகள் முதலாயினோருமாம்.

20. அருங்கலம் - ஆபரணம். வெறுக்கை - அத்தம். அளந்துகடையறியா - இவ்வளவென முடிவறியாத.

21. வளம் தலைமயங்கிய - பலவளங்களும் தலைமயங்கிய.

22. பகுதிப்பண்டமொடு - இங்ஙனஞ்சொன்ன பல பண்டங்களுடனே.

23. கூலம் - கருஞ்சரக்கு. கூலவீதி - அங்காடி.

24. காழியர் - பிட்டுவிற்பார்; வண்ணாருமாம். கூவியர் - அப்பம் சுடுவார்.

26. பாசவர் - வெற்றிலை கட்டுவோர்; சூட்டிறைச்சி விற்பாருமாம். வாசவர் - பஞ்சவாசம் விற்போர்; அவை:—"தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து."

மைந்நிண விலைஞர் - ஆட்டுவாணிகர்.

27. ஓசுநர் - பரவர்; மீகாமர்; எண்ணெய்விற்பாருமாம்.

---

24. இவ்வடிமுதலியவற்றுடன் "பன்மீன்விலைஞர்" (மணி. 28 : 31) என்பது முதலியவற்றை ஒப்பிடுக.

(பி - ம்.) † 'பரவர்' ‡ 'பன்னிண விலைஞர்', 'பைந்நிண விலைஞர்'

கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரும்
மரங்கொஃ றச்சருங் கருங்கைக் கொல்லரும்
கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்
பொன்செய் கொல்லரு நன்கலந் தருநரும்
துன்ன காரருந் தோலின் றுன்னரும்
கிழியினுங் கிடையினுந் † தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும்
குழலினும் யாழினுங் குரன்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்
சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு
மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமும்
கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாட மறுகு மறையோ ரிருக்கையும்

---

28. கஞ்சகாரர் - வெண்கலம்விற்பார்; கன்னார். (பா) செம்புசெய்ஞ்ஞர் - செம்பு கொட்டுவார்.

29. கருங்கை - வலியையுடைய கை.

30. கண்ணுள்வினைஞர் - சித்திரகாரிகள். மண்ணீட்டாளர் - சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவார்; மண் - சுதை; "மண்ணோடியைந்த மரத்தனையர்" (குறள், 576) என்றாராகலின்; குயவருமாம்.

31. (பா) பொன்செய்புலவர் - உருக்குத் தட்டார்; அரிப்பாருமாம். நன்கலம் தருநர் - இரத்தினப்பணித்தட்டார்.

32. துன்னகாரர் - பாணர். தோலின்றுன்னர் - செம்மார்.

33. கிழி - சீலை. கிடை - கிடேச்சு.

34. பழுதில்செய்வினைப் பால்கெழுமாக்கள் - இவையிற்றாற் பொய்க்கொண்டை முதலியன செய்பவர்.

36. வழித்திறம் - பண்வழிப்பிறக்குந்திறம்.

37. பெரும்பாண் - குழலர் முதலோர்.

38-9. (பா) சிறுகுறு.........பாக்கமும் - இங்ஙனங்கூறின இவர் ஒழிந்த பிறதொழில்களையுடையவர்களோடும் விளங்கிய மருவூர்ப் பாக்கமுமென்க.

40. கோவியன்வீதி - செண்டுவெளிப்புறத்தெரு; இராசமார்க்கமெனினுமாம்.

41-2. வாணிகர் மாடமறுகு - வணிகர் குடியிருப்பு. மறையோரிருக்கை - பஞ்சக்கிராமிகளிருப்பு.

---

அடி, 29. கருங்கைக்கொல்லர் : **புறநா. 21 : 7.** 30. மண்ணீடு : **மணி. 6 : 47.**

37. பெரும்பாணிருக்கை : **மதுரைக். 342. 40-41 ; மணி. 4 : 37-8.**

**(பி - ம்.)** † 'கழிபல பெருக்கி'

வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை
ஆயுள் வேதருங் காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையும்
திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொ
டணிவளை போழுந ரகன்பெரு வீதியும்
சூதர் மாகதர் † வேதா ளிகரொடு
நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்
காவற் கணிகைய ராடற் கூத்தியர்
பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்
பயிறொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்
நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையும்
கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்
நெடுந்தே ரூருநர் கடுங்கண் மறவர்
இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும்

---

44. ஆயுள்வேதர் - கோயிலார். காலக்கணிதர் - கணியர்; காலத்தை எண்ணியிடுவார்.

46. திருமணிகுயிற்றுநர் - முத்துக்கோப்பார்; வேகடிகளுமாம்.

47. வளைபோழுநர் - சங்கறுப்பார்.

48. சூதர் - கைவாரிகள்; நின்றேத்துவார். மாகதர் - இருந்தேத்துவார்; பட்டுக்கள். வேதாளிகர் - வைதாளியாடுவார்.

49. நாழிகைக்கணக்கர் - கடிகையார். கண்ணுளர் - சாந்திக்கூத்தர்.

50. காவற்கணிகையர் - இராக்கடைவேசையர். ஆடற்கூத்தியர் - அகக் கூத்து முதலியன ஆடுவார்.

51. பூவிலைமடந்தையர் - பரிசங்கொள்வார். ஏவற்சிலதியர் - குற்றேவன்மகளிர்.

52. குயிலுவர் - தோற்கருவி துளைக்கருவி நரப்புக்கருவி உருக்குக் கருவியாளர். பன்முறைக்கருவியர்-படைக்கும் விழவுக்கும் கொட்டுவார்.

53. நாகைவேழம்பர் - சாரமாணிகள்.

54. பரிகடவுநர் - அசுவவாரியர்; பண்ணுவாருமாம். களிற்றின் பாகர் - யானைப்பாகர்.

55. தேரூருநர் - தேர்ப்பாகர். மறவர் - வீரர்.

56. பாயிருக்கை - பரந்தவிருப்பு.

---

அடி, 44. காலக்கணிதர் : மணி. 2 : 29. 48 : மதுரைக். 670-71. 49. நாழிகைக் கணக்கர் : முல்லை. அடி, 55-8; மணி. 7 : 65; பெருங். 1. 57 : 77-9.

50. காவற்கணிகை : மணி. 22 : 30. 51. பூவிலை : மணி. 24 : 19. (மேற்.) 51 : சீவக. 2725, ந. (பி - ம்.) † 'வேதா ளியரொடு'

பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்
இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியி †னிடைநில மாகிய
கடைகால் யாத்த மிடைமரச் ‡சோலைக்
கொடுப்போ ரோதையுங் கொள்வோ ரோதையும்
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியிற்
சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென
வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கெனத்
தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து

---

57. இவற்றையுடைய பீடுகெழுசிறப்பிற் பெரியோரென்க.

57 - 8. பெருமையையுடைய பெரியோர் திரண்ட பாடலமைந்த சிறப்பிற் பட்டினப்பாக்கமுமென்க.

59 - 60. மருவூர்ப்பாக்கமும் பட்டினப்பாக்கமுமென இருவகைத் தாகிய ஊரின் நடுவிடத்தை முனையிடம்போலவென்றது அவற்றிற்கு இடைநிலம் வெளிப்பட்டுப் பொதுப்படக் கிடத்தல் கருதி.

61. கடை கால்யாத்த-கடை ஒழுங்காக யாத்த. மிடைமரச் சோலை-மரம் நெருங்கின சோலை.

61 - 3. கடைகளை மரத்தடியிலே கட்டப்பட்ட மரச்சோலையையுடைய நாளங்காடியென்க.

64. (பா) சித்திரைச்சித்திரைத் திங்கள் சிறந்தென - சித்திரை மாதத்துச் சித்திரைநாள் சிறந்ததென்கையால்; சித்திராபூரணையென்க.

65. உற்றதை - இடையூற்றை.

67. பூதத்துக்கடை - பூதவாசல். பீடிகை - பலிபீடிகை.

68. புழுக்கல் - அவரை துவரை முதலியன. நோலை - எள்ளுருண்டை. விழுக்குடைமடை - மாங்கிசத்துடனே விரவினசோறு.

69. பொங்கல் - கள்ளு.

---

அடி, 58 : பட்டினப். 218.
65. வெற்றி...ஒழிக்கென : சிலப். 5 : 79.
68 - 9 : சிலப். 12 : 37-8 ; பு. வெ. 40.
(மேற்.) 64. 'சித்திரைத்திங்கள்' நன். 175, மயிலை.
(பி - ம்.) † 'னிடைநிலத் தாக' ‡ 'சோலையுள்'

துணங்கையர் குரவைய ரணங்கெழுந் தாடிப்
பெருநில மன்ன னிருநில மடங்கலும்
பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கும்
மூதிற் பெண்டி ரோதையிற் பெயர
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்
பட்டின மருங்கிற் படைகெழு மாக்களும்
முந்தச் சென்று முழுப்பலி பீடிகை
வெந்திறன் மன்னற் குற்றதை யொழிக்கெனப்
பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம் பாகெனக்
கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்
பல்வேற் பரப்பினர் மெய்யுறத் தீண்டி
ஆர்த்துக் களங்கொண் டோ ரார மரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை

---

70. துணங்கை - சிங்கி ; என்னை ? "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், தொடக்கிய நடையது துணங்கை யாகும்." குரவை - கைகோத் தாடுதல் ; "குரவைக் கூத்தே கைகோத் தாடல்." அணங்கெழுந்தாடி- தெய்வமேறியாடி.

71 - 3. (பா) நிலமடங்கலும் பசியும் பிணியும் பகையும் நீங்கி மன்ன னுக்கு வசியும் வளனும் சுரக்கவெனவாழ்த்தி. வசி - வசீகரம்.

74. மாதர்க்கோலம் - எல்லாரும் காதலிக்கப்பட்ட ஒப்பனை. வலவையின் - சமத்தால் ; [1] நாணிலிகள்போல வென்றுமாம்.

75. மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர். ஓதையின் - ஆரவாரத் துடனே. பெயர - அவர் பலியிட்டுப் போனவளவிலே.

(6) அவிரொளி கதிர்ப்பரப்பாநிற்பப் (68) புழுக்கல் முதலாயினவற் றைப் (67) பீடிகையிலே (69) சொரிந்து (71) நிலமடங்கலும் (72) பசியும் பிணியும் பகையுநீங்கி (71) மன்னனுக்கு (73) வசியும் வளனும் சுரக்க வெனப் (75) பெண்டிர் நின்று (73) வாழ்த்திப் (75) பெயர வென்க.

76 - 9. வீரரும் மாக்களும் ஒருவரினொருவர் முற்படப்போய் முழுப் பலிபீடிகையிற்பலிகொடுத்துஒழிப்பாயாகவென்று பூதத்துக்குச்சொல்லி.

80. வலிக்குவரம்பாகெனல்-வலிக்குஎல்லையாகெனவஞ்சினங்கூறல்.

81. கறைத்தோல் - கருங்கடகு.

82. பல்வேற்பரப்பு - பலவேலையுமுடைய பரப்பு.

83. களங்கொண்டோர் - வென்றோர். அழுவம் - பரப்பு.

84 - 6. சூர்த்து......................வைத்து - அச்சத்தைச்செய்து கடை சிவந்த கண்ணிணையுடைய தலையை அறுத்து நற்பலிபீடிகையிலே வைத் தென்க.

---

அடி, 72 - 3 : மணி. 1 : 70 71 ; பெருங். 5. 7 : 46.

81. கழிப்பிணிக்கறைத்தோல் : அகநா. 24 : 14, 67 : 13.

84. சுடுநோக்கு : சீவக. 807.

[1] நாலடி. 268.

வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்
குயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி
இருநில மருங்கிற் பொருநரைப் பேரூஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக †மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணிய திசைமுகம் போகிய வந்நாள்
அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகை ‡விலக் கியதிப் பயங்கெழு மலையென
இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி ¶யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகத நன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்
அவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்

---

**இனி அரசன் செய்தி கூறுகின்றது :—**

94. புண்ணியதிசை - வடக்கு.

95. நசைபிறக்கொழிய - என்னினைவு மேற்போகாது பின்னிட்டொழிய.

96. பகை விலக்கியது - பகையாய்த் தடுத்தது.

98. கொடுவரியொற்றி - புலியைப் பொறித்து. பெயர்வோற்கு - மீள்வோனுக்கு.

100. இறைகொடுத்த - திறையாகக்கொடுத்த. பந்தர் - முத்தின் பந்தர்.

102. பகைபுறத்து - பகையிடத்து ; புறம் - இடம் ; பகைப்புறமென்பதனைப் பகைப்புறமென்றது விகாரம். கொடுத்த - முன்பகையாய்ப் பின் திறையிட்ட. பட்டிமண்டபம் - ஓலக்கமண்டபம்.

103. உவந்தனன்கொடுத்த - \$ மித்திரனாய்க்கொடுத்த.

104. தோரணவாயில் - தோரணத்தையுடைய வாசல்.

---

அடி, 87. உயிர்ப்பலி : மணி. 6 : 50. அடி, 88. மயிர்க்கண் முரசம் : புறநா. 63 : 7. அடி, 89-94 : மணி. 1 : 39. அடி, 90 : திருமாவளவன் : பட்டினப். 299. அடி, 102 : பட்டிமண்டபம் : மணி. 1 : 61.

(பி - ம்.) † 'வரைப்பினென்' ‡ 'விலங்கியதிப்' ¶ 'யெழுதிக்', 'யேற்றிக்' \$ 'மித்துருவாய்க்'

பொன்னினு மணியினும் புனைந்தன வாயினும்
நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின விவைதாம்
ஒருங்குடன் புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்தும்
அரும்பெறன் மரபின் மண்டப மன்றியும்
வம்ப மாக்க டம்பெயர் †பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதிக்
கடைமுக வாயிலுங் கருந்தாழ்க் காவலும்
உடையோர் காவலு ‡மொரீஇய வாகிக்
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்த லீயா
துள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்
கூனுங் குறளு மூமுஞ் செவிடும்
அழுகுமெய் யாளரு முழுகின ராடிப்

105 - 9. இவைதாம் பொன்னானும் மணியானும் செய்யப்பட்டன வாயினும் கம்மியராற் காணப்படாதன; இவர்களுடைய முன்னோர்செய்த உதவிக்குப் பிரதியுபகாரமாக மயன் நிருமித்துக் கொடுத்தன; இவை தனித்தனி இத்தன்மையவாயினும் தம்மிற்புணர்ந்து ஏத்தப்படுமென்க.

110. அன்றியும் - இங்ஙனம் சொல்லப்படும் மூன்றிடமன்றியும்.

111. வம்பமாக்கள் - புதியோர். தம்பெயர் பொறித்த - தமது பெயரெழுதிய.

112. கண் - அவ்விடத்து. எழுத்துப்படுத்த - இன்னரது பொதியென எழுதி இலச்சினையிட்ட.

112 - 3. பொதியினையுடைய கடைமுகத்து வாயிலும் கருந்தாழாகிய காவலும்.

114. உடையோர்காவல் - இவற்றையுடையோர்காவல். ஒரீஇயவாகி - நீங்கினவாகி.

115. கட்போர் - களவுகாண்போர். 117. பனிக்கும் - நடுக்கும்.

111 - 7. புதியோர் தம்முடைய பெயர் பொறித்த தனத்தைக் களவு கொள்ளுவோர் உண்டானால் எடுத்த தனத்தைத் தங்கள் தலையிலே வைத்துச் சுழன்று திரிகிறதன்றிக் கொண்டுபோகக் கொடாமையான் நினைத்த கள்ளரை நடுக்கும் வெள்ளிடை மன்றமென்க.

அடி, 111 : **மணி.** 3 : 126 ; பெருங். 1. 35 : 20. அடி, 117. வெள்ளிடைமன்றம் : **மணி.** 6 : 91. அடி, 118. கூனும் குறளும் : 27 : 214 ; **புறநா.** 28 : 2 ; **மணி.** 12 : 97.

(பி - ம்.) † 'பொறித்துக்' ‡ 'மொரீஇய தாகிக்'

பழுதில் காட்சி நன்னிறம் பெற்று
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும்
வஞ்ச முண்டு மயற்பகை யுற்றோர்
நஞ்ச முண்டு நடுங்குதுய ருற்றோர்
அழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்
கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர்
சுழல வந்து தொழத்துயர் நீங்கும்
நிழல்கா னெடுங்க னின்ற மன்றமும்
தவமறைந் தொழுகுந் தன்மை யிலாளர்
அவமறைந் தொழுகு †மலவற் பெண்டிர்
அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்
‡பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்

---

121. இலஞ்சி - மடு.

118 - 21. கூனர் குறளர் ஊமர் செவிடர் வியாதியாளர் முழுகிவலஞ் செய்ய நன்னிறம்பெறும் இலஞ்சிமன்றமென்க.

122. வஞ்சமுண்டு - வஞ்சனைப்பட்டு. மயற்பகையுற்றோர் - மயக்கமாகிய பகையையுற்றோர்.

124. அழுந்தினர் - அழுந்தப்பட்டோர். 127. நிழல் - ஒளி.

122 - 7. வஞ்சமுண்டு மயக்கமும் துயருமுற்று அழுந்திப் பட்டோர் சூழ்ந்து வணங்க நீங்கும் ஒளிகாலப்பட்ட கல்லுநின்றமன்றமென்க.

128. தவமறைந்தொழுகல் - தவத்திலே மறைந்து தவமின்றி ஒழுகுதல்.

129. அவமறைந்தொழுகும் (பா) அலவைப்பெண்டிர் - மறைந்து அவமேயொழுகும் அலவைப்பெண்டிர்.

130. அறைபோகமைச்சர் - கீழறுக்கும் அமைச்சர். பிறர்மனைநயப்போர் - பிறர்மனைவியை விரும்பினோர்.

131. பொய்க்கரியாளர் - பொய்ச்சாட்சிக்காரர். புறங்கூற்றாளர் - புறங்கூறுவோர்.

132. பாசத்துக்கை - பாசத்திடத்து.

133. காதநான்கும் - ஊர்சூழ்ந்த நாற்காதவட்டகையும்.

---

அடி, 122. மயற்பகை ; மணி. 23 : 41. அடி, 124 : மணி. 23 : 69.
(பி - ம்.) † 'மவலப் பெண்டிர்' ‡ 'பொய்க்கரி மாக்கள்'

பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்
அரைசுகோல் கோடினு மறங்கூ றவையத்
துரைநூல் கோடி யொருதிறம் பற்றினும்
நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமும்
மெய்வகை யுணர்ந்த விழுமியோ ரேத்தும்
ஐவகை மன்றத்து மரும்பலி யுறீஇ
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்
தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து

---

134. பூதசதுக்கம் - பூதம் திரிகின்ற நாற்சந்தி.

128-34. தன்மையிலாளர் முதல் ஆறுவகையாகிய இவர்களைப் பாசத்தில் அகப்படுத்திப் பூதம் புடைத்துண்ணும் சதுக்கமென்க.

136. ஒருதிறம் - ஒருபக்கம்.

137. நாவொடு நவிலாது - நாவினால் உரையாமல். நவை - குற்றம். குற்றத்துக்காகக் கண்ணீருகுக்கையால் நவைநீரென்றார்; நவநீரென்று பாடமோதிப் புதிய நீரென்பாருமுளர்.

135-8. கோல்கோடினும் உரைநூல்கோடி வாரம்பற்றினும் வாய் திறந்து சொல்லாமல் அழுதுகாட்டும் பாவையையுடைய மன்றமென்க.

117-40. இவ்வைந்து மன்றத்திலும் பலியிட்டென்க.

84-140. பீடத்திலே தலையை வைத்து முரசு முழங்கி மண்டப முதலியவற்றிலும் மன்றங்களிலும் பலியிட்டென்க.

141. வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதம் இருக்குங் கோயில்; இவ்விடத் திருக்கிற முரசு.

142. கச்சை - கீழ்வயிற்றுக் கச்சை. பிடர்த்தலை - பிடராகிய தலை.

143. களிற்றரசு வயங்கிய கோட்டம் - ஐராபதம் நிற்குங் கோயில்.

145. தருநிலைக் கோட்டம் - கற்பகம் நிற்குங்கோயில்.

141-6. வச்சிரக் கோட்டத்திலிருந்த முரசை ஐராபதம் நிற்குங் கோட்டத்திலே கொண்டுவந்து யானையிலேயேற்றி விழவின் முதலும் முடிவும் அறிவித்துக் கற்பகம் நிற்குங் கோயிலிலிருந்த கொடியை வானிலே செல்லவெடுத்தென்க.

---

அடி, 134: "பூதமுண்டது புடைத்துண்ணும்" (சூளா. சுயம், 43); "பூதம்புடைத்தது" (தொல். கிளவி. 58, இளம்., சே. ந.) பூதசதுக்கம்: மணி. 20:29. அடி, 135. அறங்கூறவையம்: மதுரைக். 492. 140. ஐவகை மன்றம்: சிலப். 6:17. 142: தக்க. 180.

141-2. மு. மணி. 1:27-8. 144. கால்கோள்விழவு: மணி. 1:26.

மரகத மணியொடு வயிரங் குயிற்றிப்
பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக் கடைமுகத் தியாங்கணும்
கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத் தொழுக்கத்து
மங்கலம் பொறித்த மகர வாசிகைத்
தோரண நிலைஇய தோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை
பாவை விளக்குப் பசும்பொற் படாகை
தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து
மேவிய கொள்கை வீதியிற் செறிந்தாங்
கைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
அரச குமரரும் பரத குமரரும்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதியர்
இவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி
அரைசுமேம் படீஇய வகனிலை மருங்கில்

---

147. (பா) குயிற்றிய - செய்த. 148. காலையுடைய.

147-8. மரகதமணியொடு வயிரத்தைக் குயிற்றிய திண்ணை.

150. கிம்புரிப்பகுவாய் - மகரவாய். கிளர்முத்து - அதன் வாயினின்றும் புறப்பட்ட முத்து.

151. மங்கலம் - அட்டமங்கலம்; "செங்கய லிரட்டைதிரு வார்சுடர்க ணாடி, பொங்குகொடி வார்முரசந் தோட்டிபுணர் கும்பம், மங்கலங்க ளெட்டும்" (சீவக. 2487)

147-56. 'மரகதமணியொடு' என்றது முதலாக 'மேவிய கொள்கை' என்றது ஈறாக வீதிக்குச் சிறப்பு.

149-56. கடைமுகமெல்லாம், கிம்புரிப்பகுவாயினின்றும் புறப்பட்டதாகப் பண்ணின முத்தொழுக்கத்தினையுடைய தோரணம் நிலைபெற்ற பொற்கும்பம் பாலிகை விளக்குப் படாகை கவரி சுண்ணம் இவற்றையுடைய வீதியென்க; சினையின்தொழில் முதன்மேல் ஏறிற்று.

157. ஐம்பெருங்குழுவு மெண்பேராயமும் :—"சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய், ஆய்ந்த விவரெண்ம ராயத்தார் - வேந்தர்க்கு, மாசனம் பார்ப்பார் மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்சர், ஆசி லவைக் களத்தா ரைந்து."

---

148: மணி. 18:45. 154. பாவை விளக்கு: மணி. 1:45: பெருங். 1. 38:7.

155. சுந்தரச்சுண்ணம்: 4:42; மணி. 2:23.

157. மு. மணி. 1:17; பெருங். 2. 5:6. (மேற்.) 157: தொல். கிளவி. 57, ந.

உரைசான் மன்னன் கொள்கென
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கும்
ஆயிரத் தோரெட் டரசுதலைக் கொண்ட
தண்ணறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணக மருள வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டிப்
பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்
† மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபால்
நால்வகைத் தேவரு மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்
அறவோர் பள்ளியு மறனோம் படையும்

---

168. ஆட்டி - ஆட்ட.

(161) அகநிலைமருங்கில் தம்மரசனை மேம்படுத்தற்கு (160) ஈண்டி (162) வேந்தன் கொற்றங்கொள்வானாகவென வாழ்த்தி (164) அரசுதலைக் கொண்ட (166) குடத்தினீரை (156) இவ்வீதியிலே அடையச் செறிந்து (142) ஏற்றிச் (144) சாற்றி (146) எடுத்துப் (159) புரவியர் களிற்றின் தொகுதியர் (160) தேரினராய் (158) அரச குமரரும் வணிக குமரரும் (168) ஆட்டவென்க.

169. பெரியோன் - மகாதேவன்.

171. வால்வளை மேனி வாலியோன் - பலதேவன்.

175. தீ முறை - ஓமம்.

169-75. இக்கோயில்களிலே ஓமம் செய்யாநிற்க. ஒருபால் - ஒரு பக்கம்.

176. நால்வகைத் தேவர் - வசுக்கள், திவாகரர், உருத்திரர், மருத்துவர்; ஆதியங்கடவுளர்.

179. அறவோர் பள்ளி - அருகர்தானம். அறனோம்படை - தருமம் பாதுகாக்கிறவிடம்.

---

அடி, 169: சிலப். 14:7. 169-72: புறநா. 56:1-10; இன்னா. 1. 172: பெரும்பாண். 402; புறநா. 58:15. 176: முருகு. 167. 179. அறவோர் பள்ளி: மணி, 18:8, 20:6.

(பி-ம்.) † 'மாமறை'

புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்
† திறவோ ருரைக்குஞ் செயல்சிறந் தொருபால்
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்னர்
அடித்தளை நீக்க வருள்சிறந் தொருபால்
கண்ணு ளாளர் கருவிக் குயிலுவர்
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந் தொருபால்
முழவுக்கண் டுயிலாது முடுக்கரும் வீதியும்
விழவுக்களி சிறந்த வியலு ளாங்கண்
காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னோ
டில்வளர் முல்லை மல்லிகை மயிலை
தாழிக் குவளை ‡ சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலிற் பொலிந்து

---

180. புறநிலைக்கோட்டம் - புறம்புள்ள திருக்கோயில்.

179 - 80. (பா) அறவோர் பள்ளியிடத்து அறம்காத்தலையும், சத்திர முதலான சாலைகளிலே புண்ணிய தானங்களையும் நல்லோர் உரைக்கும் செயல் சிறந்தது ஒரு பக்கமென்றுமாம்.

185. பாடற்பாணர் - புணர்க்கும் பாணர்.

186. இசை சிறந்தொரு பக்கம்.

178 - 88. சிறக்க விழுநீராட்ட விழவுக்களிசிறந்த வியலுளெனக் கூட்டுக. சிறக்கவென அடையத் திரிக்க.

188. வியலுள் ஆங்கண் - அகன்ற ஊரிடத்து.

(189) 'காதற் கொழுநனை' என்றது முதல் (199) 'நன்மொழி திளைத்து' என்றது இறுதியாகக் கோவலனோடு மாருதத்துக்கு ஒத்த பண்பு.

189 - 90. காதற்கொழுநனை.........மாதவியென்றது சிலேடை; காதலிக்கப்பட்ட தன் கொழுநனைப் பிரிந்து வேறுபட்டு அலருறுத அழகிய வளைந்த மகரக்குழையையுடைய மாதவியென்றும், எல்லாரும் காதலிக்கும் கொழுவிய நனையாந்தன்மையைவிட்டு முதிர்ந்து அலராகாத வளைந்த தளிரையுடைய குருக்கத்தி யென்றும் சொல்லுக.

மாதவி - குருக்கத்தி. கண்ணகி பிரிந்து அலரெய்தலாற் பிரிந்து அலரெய்தா மாதவியென்றார். குருக்கத்தி அலருறுமை செவ்வியழியாமை.

191 - 3. முல்லை, மல்லிகை, மயிலை, குவளை, கழுநீர் இவை பயின்ற கோதையாகிய பிணையல்.

---

அடி, 192. தாழிக்குவளை: பெருங். 3. 5 : 87 ; சீவக. 833.
(பி - ம்.) † 'துறவோர்' ‡ 'தண்செங்கழுநீர்'

காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து
நாண்மகி ழிருக்கை நாளங் காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப்
புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து
நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொ டின்னிள வேனிலொடு
மலய மாருதந் திரிதரு மறுகில்
கருமுகில் சுமந்து குறுமுய லொழித்தாங்
கிருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி
அங்கண் வானத் தரவுப்பகை யஞ்சித்
திங்களு மீண்டுத் திரிதலு முண்டுகொல்
நீர்வாய் திங்க ணீணிலத் தமுதின்
சீர்வாய் துவலைத் திருநீர் மாந்தி
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த
வான வல்லி வருதலு முண்டுகொல்
இருநில மன்னற்குப் பெருவளங் காட்டத்
திருமகள் புகுந்ததிச் செழும்பதி யாமென
எரிநிறத் திலவமு முல்லையு மன்றியும்

197. பூவின் மிகுதிபற்றிக் கானமென்றார்.
195 - 7. பொழில்விளையாட்டு விரும்பி நாடோறும் மகிழ்ந்திருக்கும் இருப்பையுடைய நாளங்காடியிற் பூவிற்குமிடங்களிற் செவ்விமணத்திலே புக்கு.
198. புலராது - புலராமை. 199. ஆயத்து - ஆயத்தோடே.
200. பரத்தர் - தூர்த்தர்.
188 - 203. வியலுளாங்கண் மாதவிதன்னொடு பொலிந்து எய்தி அமர்ந்து புக்குச் சிறந்து திளைத்துப் பரத்தரொடு பாணரொடு திரிதரும் கோவலன்போல மாருதம் திரிதரும் மறுகென்க.
210. மெய் - வடிவு.
208 - 10. திங்களாகிய நிலத்திலே அமுதம் மாந்தி மெய்பெறவென்க.
213. ஆமென - ஆமெனக்கருதி.
212 - 3. இப்பதியிலே திருமகள் புகுந்த காரணம் மன்னனுக்கு வளம் காட்டவென்க. 214. அன்றி - இவையேயன்றி.

அடி, 210. மீனேற்றுக் கொடியோன் : சீவக. 6.
214. எரிநிற இலவம் : கலித். 33 : 10.

கருநெடுங் குவளையுங் குமிழும் பூத்தாங்
குள்வரிக் கோலத் துறுதுணை தேடிக்
கள்ளக் கமலந் திரிதலு முண்டுகொல்
மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப்
பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம்
ஆண்மையிற் றிரிந்துத னருந்தொழி றிரியாது
நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப்
பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப்
பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென
உருவி லாள னொருபெருஞ் சேனை
இகலம ராட்டி யெதிர்நின்று விலக்கியவர்
எழுதுவரி கோல முழுமெயு முறீஇ
விருந்தொடு புக்க பெருந்தோட் கணவரொ
டுடனுறைவு மரீஇ யொழுக்கொடு புணர்ந்த
வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
மாதர்வாண் முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போதுபுறங் கொடுத்துப் போகிய செங்கடை
விருந்திற் றீர்ந்தில தாயின் யாவதும்

---

216 - 7. உள்வரிக்கோலம் - கிருத்திரிமவேடம். கோலத்து - கோலத்தோடே. உறுதுணை - திருமகள். தாமரையானது தன் வடிவொழிய வேறொரு வடிவு கொள்ளுதல்.

222. பண்மொழி நரம்பின் - பண்ணைச் சொல்லுகின்ற யாழ்நரம்பு போல.

223. உண்டுகொலென வேறொரிடைச்சொல் வருவிக்க.

224 - 5. (பா) ஒரு பெருஞ்சேனை.........விலங்கி - பரத்தையரை மாறுபட்ட பூசற்கண்ணே அலைத்து எதிரே நின்று தடுத்து.

அன்றியும், விலங்கி - விலக்கி; புலவியாலே கூடாத மகளிரைப் போகாமல் எதிரே நின்று தடுத்து இங்ஙனம் புகழ்ந்து புலவியைத் தீர்த்தென்றுமாம்.

225 - 6. (பா) அவரெழுது வரிக்கோலம் - தொய்யில். முழுமெய்யும் உறுத்தியென்க. முழுமெய்யுமுறுத்தியென்றது புணர்ந்தென்பதாயிற்று.

230 - 31. குவளைப்போது தான் தோற்றுப்போகிய.

232. யாவதும் - சிறிதும்.

---

அடி 219-23. கூற்றம் பெண்மையுருவொடு திரிதல் : 7 : 10, அடிக்.; சீவக. 2450.

226 : சீவக. 116.

229 : பெரும்பாண். 302-3 ; கலித். 1 : 21.

மருந்துந் தருங்கொலிம் மாநில வரைப்பெனக்
கையற்று நடுங்கு நல்வினை நடுநாள்
உள்ளக நறுந்தா துறைப்ப மீதழிந்து
கள்ளுக நடுங்குங் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணு மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன
எண்ணுமுறை யிடத்தினும் வலத்தினுந் துடித்தன
விண்ணவர் கோமான் விழவுநா ளகத்தென்.

---

233. மாநிலவரைப்பு - பூமியிலுள்ளார். 234. நல்வினை - விழா. (203) மறுகிடத்துத் (207) திங்களுமுண்டோ; (211) வல்லிவருதலு முண்டோ; (217) கமலந் திரிதலுமுண்டோ; (223) பெற்றியுமுண்டோ வெனச்சொல்லிச் (224) சேனையாகிய பரத்தையரிடத்துப் போகாமல்(225) (பா) விலங்கிப் பின்பு தம்மனைகளிலே புக்கு (226) (பா) எழுதுவரிக் கோலத்தைத் தம் மேனி முழுவதும் உறுவித்துப் பின்பு (228) ஒழுக்கொடு புணர்ந்த (229) மனையுறைமகளிர் (228) (பா) உடனுறைவு மருவுதற்கு (227) விருந்தொடுபுக்க கணவர் (234) கையற்று நடுங்கும் நடுநாளென்க.

235. (பா) நறுந்தாது எறிப்ப - தாது ஒளிவிட.

237 - 9. கருங்கணென்றது, கண்ணகிக்குப் புணர்ச்சியில்லாமை யால்; நிறைகரந்து துன்பத்தாற் கண்கள் நீர் உகுத்தன; செங்கணென் றுரைத்தது, மாதவிக்குப் புணர்ச்சி விதும்பலால்; அகத்து நிறைகரந் தொளித்து இன்பத்தாற் கண்கள் நீர் உகுத்தன. கண்ணகிக்கு நிறை கரத்தல் - கற்பாற் பரிகாரப்பட்டதாதல்; ஆற்றாமை மிகுதி கூறிற்று. மாதவிக்கு...... நிறுத்தலைக்கரந்து காமத்தாலே நீர் உகுத்தன. கண்ண கிக்கு அழுகைக்கண்ணீர்; மாதவிக்கு உவகைக்கண்ணீர்; எண்ணுமுறை- எண்ணின அடைவே. பின்பு கண்ணகிக்குக் கூட்டமுண்டாகையால் இடக்கண் துடித்தன; மாதவிக்குப் பின்பு பிரிவுண்டாகையால் வலக்கண் துடித்தன.

### 1 - 6. அலைநீ ராடை.........மலர்கதிர் பரப்பி

(இ - ள்.) கடலாகிய ஆடையினையும் மலையாகிய முலையினையும் அம் முலையாகத்துப் பெரிய யாறாகிய ஆரத்தினையும் மாரியாகிய கூந்தலினையு முடைய இடமகன்ற பரப்பினையுடைய [1]அரசுகெடுத்து அலம்வரும் நில மடந்தை அல்லற்காலைப் பசந்து வாரப் பனித்துப் போர்த்த இருளாகிய படாத்தைத் தன் கதிர்க்கைகளால் நீக்கி அவிரொளி உதயமால்வரை யுச்சிக்கட்டோன்றி விரிந்த கதிர்களைப் பரப்பவென்க.

மலை - பொதியிலும், இமயமும். இவற்றைச் சாதியொருமையாற்கூறி னார்; "பொதியிலு மிமயமும் புணர்முலை யாக" என்றார் கதையினும். ஆரப்பேரியாற்று : பேர்யாற்றாரமெனப் பாடமாற்றுக; ஆரம் - முத்து வடம். மாரி - முகில். அகன்பரப்பு : வினைத்தொகை. புதைத்தல் - போர்த்தல்; மலைநாட்டு வழக்கு. போக - அகல. உலகு விளங்கவிரொளி- உலகு விளங்குதற்குக் காரணமாகத் தான் விளங்குமொளி; ஆவது ஞாயிறு. மலர்தல் - விரிதல். பரப்பி : பரப்பவெனத்திரிக்க. வாளாது மண்மடந்தை யென்னாது கண்ணகன் பரப்பின் மண்ணகமடந்தை யென்று மிகுத்துக் கூறினார், அத்தன்மையாளைப் போர்த்த நீலப்படாத் தைத் தன் தேசினால் நீக்கிய ஒளியெனற்கு. எனவே செம்பியன் மரபுயர்ச்சி கூறியவாறாயிற்று.

படாத்தை நீக்கித் தோன்றிப் பரப்பவென்க.

### 7. வேயாமாடமும்—(இ - ள்.) நிலாமுற்றமும்,

### வியன்கல விருக்கையும்

(இ - ள்.) வேற்றுமைப்பட்ட அணிகலம்பெய்த சரக்கறையும், வியல் - மிகுதியுமாம்.

### 8. மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்

(இ - ள்.) மானின் கண்போலக் கோணஞ்செய்த சாளரங்களையுடைய மாளிகை யிடங்களும்,

காலதர் - சாளரம்.

### 9 - 10. கயவாய் மருங்கில்.........யவனரிருக்கையும்

(இ - ள்.) புகார்முகப் பக்கங்களில் தம்மைக் காண்போர் கண்களை மேற்போகவிடாமல் தடுக்கும் பயன் தொலைதலையறியாத மிலேச்சர் இருக்கு மிடங்களும்,

### 11 - 2. கலந்தரு திருவின்......இறங்குநீர் வரைப்பும்

(இ - ள்.) மரக்கலந்தரும் செல்வப்பொருட்டால் தாம் பிறந்த நிலத்தை விட்டுப்போந்த பரதேசிகள் பலரும் ஒரு நிலத்தாரைப்போலக் கலந்து செறிந்திருக்கும் அலைவாய்க்கரையிருப்பும்,

13. வண்ணமும்—(இ - ள்.) தொய்யிற்குழம்பு முதலியவும், எழுதுவண்ணமுமாம்.

---

[1] சிலப். 4 : 8, முதலியன.

சுண்ணமும்—(இ - ள்.) பூசுசுண்ணமும்,

தண்ணறுஞ் சாந்தமும்—(இ - ள்.) குளிர்ந்த நறிய பசுங் கூட்டும்,

14. பூவும்—(இ - ள்.) விடுபூத் தொடைப்பூக் கட்டுப்பூவென்னும் மூவகைப் பூவகையும்,

புகையும்—(இ - ள்.) புகையுறுப்பும்,

ஆவன; [1] "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, ஆர மகிலுறுப்போ டாறு" என இவை.

மேவிய விரையும்—(இ - ள்.) தம்மிற்பொருந்திய விரையும்,

ஆவன : "கொட்டந் துருக்கந் தகர மகிலாரம், ஒட்டிய வைந்தும் விரை" (பிங்கலந்தை, ஐயர்வகை, 78) என இவை.

15. பகர்வனர் திரிதரு நகர வீதியும்

(இ - ள்.) இவற்றை விற்பவராய்த் திரிதருதலைச் செய்யும் நகரத் தெருவு மென்க.

மாடமும், இருக்கையும், இடங்களும், இருக்கையும், வரைப்பும், வண்ணமுதல் விரையீருவுள்ளனவற்றை விற்பவராய்த் திரிதருதலைச் செய்யும் நகரத் தெருவுமென்க.

16 - 7. பட்டினு மயிரினும்.........காருக ரிருக்கையும்

(இ - ள்.) பட்டுநூலானும் எலிமயிரானும் பருத்திநூலானும் நுண்ணிய தொழில்களை ஊசியாற் பிணிக்கும் பட்டுச்சாலியர் இருக்குமிடங் களும்,

† அச்சுக்கட்டிகளென்பாருமுளர். காருகத்தொழில் இருவகைத்து; "பருத்திநூல் பட்டுநூ லமைத்தாடை யாக்கலும், சுமத்தலும் ‡ பிறவுங் காருக வினைத்தொழில்" திவாகரம், 12-ஆவது) என்றுராகலின். இவற்றுள் ஈண்டுக் கூறியோர் முன்னையோர்.

18 - 21. தூசுந்துகிரும்.........நனந்தலை மறுகும்

(இ-ள்.) பட்டும் பவளமும் சந்தனமும் அகிலும் குற்றமற்ற முத்தும் ஒழிந்த மணிகளும் பொன்னுமாகிய இவற்றைப் பொற்பணியோடே இலக்கங்காண்போர் ஒரெண்ணினும் எண்ணிக் கரைகாணவரிய வளம் தம்மிடந்தோறுங் மயங்கப்பட்டனவற்றையுடைய் இடமகன்ற மறுகுகளும்,

22 - 3. பால்வகை தெரிந்த.........கூல வீதியும்

(இ - ள்.) பகுதி வேறுபடத்தெரிந்த முதிரை முதலிய பண்டத்தோடு எண்வகைக்கூலமும் குவித்துவிற்கும் கூலக்கடைத்தெருவும்,

---

[1] "நேர்கட்டி செந்தே னிரியாசங் கப்பூரம், ஆர மகிலுறுப்போ ரைந்து" (சீவக. 534, ந.)

(பி - ம்.) † 'அச்சுக்கொட்டிகள்' ‡ 'அகழ்தலுங்'

[1] எண்வகைக்கூலமாவன : "நெல்லுப் புல்லு வரகுதினை சாமை, இறுங்கு †தோரையொடு கழைவிளை நெல்லே" எனவிவை. இனிக் கூலம் பதினெண்வகைத்தென்பர் கூத்தநூலாசிரியர் ; என்னை? [2] "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" என்றுராகலின், பலசரக்கென்பாருமுளர்.

24. காழியர்—(இ - ள்.) பிட்டுவாணிகரும்,

வண்ணருமாம் ; "காழியர், கௌவைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிய" (89 : 7-8) என்றுர் அகப்பாட்டினும்.

கூவியர்—(இ - ள்.) அப்பவாணிகரும்,

"காரகற் கூவியர் பாகொர்டு பிடித்த" (377) என்றுர் பெரும்பாணாற்றினும்.

கண்ணொடை யாட்டியர்

(இ - ள்.) கள்ளைவிற்கும் வலைச்சியரும்,

நொடை - விலை ; "மீனெடுத்து நெற்குவைஇ" (343) என்றுர் புறப்பாட்டினும்.

25. மீன்விலைப் பரதவர்

(இ - ள்.) மீன்விலையையுடைய பட்டினவரும்,

வெள்ளுப்புப் பகருநர்—(இ - ள்.) உமணரும் உமட்டியரும் ; அளவருமாம்.

26. பாசவர்—(இ - ள்.) [3]இலையமுது இடுவாரும்,

அன்றிக் கயிறுதிரித்து விற்பாருமாம் ; பச்சிறைச்சி சூட்டிறைச்சி விற்பாருமாம்.

வாசவர்—(இ - ள்.) பஞ்சவாசம் விற்பாரும்,

அவை, "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து" எனவிவை.

26 - 7. மைந்நிண விலைஞரோடு......இருக்கையும்

(இ - ள்.) ஆட்டுவாணிகருடனே பரவருஞ் செறிந்த ஊன் மிக்க இருப்பிடங்களும்,

ஓசுநர் - எண்ணெய் வாணிகருமென்ப.

28. கஞ்சகாரரும்—(இ - ள்.) வெண்கலக் கன்னரும்,

செம்புசெய்குநரும்—(இ - ள்.) செம்புகொட்டிகளும்,

29. மரங்கொஃறச்சரும்—(இ - ள்.) மரத்தைவெட்டுந் தச்சரும்,

கொல்லல் - வெட்டல்.

கருங்கைக்கொல்லரும்

(இ - ள்.) வலிய கையையுடைய கொல்லரும்,

---

[1] சிலப். பதி. 88-9, அடியார்.
[2] சிலப். 6 : 35-6, அடியார் ; மதிவாணர் நாடகத்தமிழ்நூல்.
[3] இலையமுது - வெற்றிலை.
(பி - ம்.) † 'தோரை யிராகியெண் கூலம்'

கருங்கை இருவகைத்து ; என்னே ? " கொன்றுவாழ் தொழிலினும் வன்பணித் தொழிலினும், கன்றிய தொழிற்கை கருங்கை யெனப்படும் " (திவாகரம்) என்றாராகலின். ஈண்டு வலிய கையையுடைய கொல்லரு மென்பதாயிற்று.

30. [1] கண்ணுள் வினைஞரும்—(இ-ள்.) சித்திரகாரிகளும்,

மண்ணீட்டாளரும்—(இ-ள்.) சிற்பாசாரிகளும்,

அன்றிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றுமாம்; குயவருமென்ப. மண் - ஈண்டுச் சுதை; "மண்ணோ டியைந்த மரத்தனை யர்" (குறள், 576) என்றாராகலின்.

31. பொன்செய் கொல்லரும்—(இ-ள்.) உருக்குத் தட்டாரும்,

நன்கலந் தருநரும்—(இ-ள்.) இரத்தினப்பணித் தட்டாரும்,

32. துன்ன காரரும்—(இ-ள்.) [2]சிப்பியரும்,

தோலின் றுன்னரும்—(இ-ள்.) உறைகாரரும்,

பறம்பர் முதலாயினருமாம்.

33-4. கிழியினுங் கிடையினும்......பால்கெழு மாக்களும்.

(இ-ள்.) கிழி கிடையென்பவற்றாற் புட்பம் வாடாமாலை பொய்க் கொண்டை முதலிய உருப்பிறக்குந் தொழில்களை மிகுத்துக்காட்டிக் குற்றமற்ற கைத்தொழிலால் வேறுபட்ட இயல்பையுடையோரும்,

கிழி - சீரை. கிடை - கிடேச்சு.

இனி, கிழியாற் படிமை படம் முதலியவும், கிடையால் விலங்கு பறவை பூ பூங்கொத்து முதலியவும் அமைப்போருமாம்.

35-7. குழலினும் யாழினும்......இருக்கையும்,

(இ-ள்.) துளைக்கருவியானும் நரப்புக்கருவியானும் குரல் முதலா யுள்ள ஏழிசையினும் சரிகமபதநி யென்னும் ஏழெழுத்தினையும் மூவகை வங்கியத்தினும் நால்வகையாழினும் பிறக்கும் பண்களுக்கு இன்றியமை யாத [3] மூவேழுதிறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்டவல்ல பெறுதற்கு அரிய இசைமரபையறிந்த குழலர் பாணர் முதலாய பெரிய இசைக்காரர் இருக்குமிடங்களுமென்க.

உம்மையால் எழுத்துக்களும் கொள்ளப்பட்டன.

38-9. சிறுகுறுங் கைவினை......பாக்கமும்

(இ-ள்.) ஒழுக்கத்திற் சிறியராய்ச் சிறுதொழிலைப் பிறர்க்குச் செய்து அதனான்வரும் பொருளையுண்ணும் கைவினையாளரோடே முற் கூறிய யவனர் முதல் பெரும்பாணிருயுள்ளாரோடு குற்றமின்றி விளங் கும் மருவூர்ப்பாக்கமுமென்க.

---

[1] 'கண்ணுள்வினைஞர் - சித்திரகாரிகள்; நோக்கினார் கண்ணிடத்தே தந்தொழிலை நிறுத்துவோர்' (மதுரைக். 518, ந.) [2] தையற்காரர்.
[3] பெருங். 1. 37 : 116.

40. கோவியன் வீதியும்—(இ - ள்.) இராசப்பெருந்தெருவும், செண்டுவெளிப்புறத்தெருவென்பாருமுளர்.

கொடித்தேர் வீதியும்—(இ - ள்.) கொடியணிந்த தேரோடும் விழா வீதியும்,

41. பீடிகைத் தெருவும்—(இ - ள்.) கடைத்தெருவும்,

41 - 2. [1]பெருங்குடி வாணிகர் மாட மறுகும்

(இ - ள்.) பெரிய குடிப்பிறப்பையுடைய வாணிகரது மாடமாளிகைத் தெருவும்,

42. மறையோ ரிருக்கையும்—(இ - ள்.) பஞ்சக்கிராமிகள் இருக்குமிடமும்,

43 - 5. வீழ்குடி யுழவரொடு......இருக்கையும்

(இ - ள்.) உழவின்மேல் விருப்பும் குடிகளோடும் உழவரோடும் மருத்துவநூலோரும் சோதிடநூலோரும் வேறு வேறு வகைப்படத் தெரிந்த பல முறைமையோடிருக்கும் இருப்பிடங்களும்,

வீழ்குடி - காணியாளர்; "பகடு புறந்தருநர் பார மோம்பிக், குடி புறந்தருகுவை யாயின்" (புறநா. 35) என்றார் பிறரும்; யாவரும் விரும்புங்குடி யென்றுமாம். "உழுதுண்டு—செல்பவர்" (குறள், 1033) என்பதனாற் கொள்க; குடியொடும் உழவரொடு மென்க: அன்றி உழவில் விரும்புங்குடி யெனவுமாம்; "உழவின்கட் காமுற்று வாழ்தல்" (திரி. 42) என்றாராகலின்; வேளாண் [2]சாமந்த ரென்பாருமுளர்.

46. திருமணி குயிற்றுநர்—(இ - ள்.) முத்துக்கோப்பாரும், [வரிசையான] வேகடிகளுமாம்.

46 - 7. சிறந்த கொள்கையொடு...அகன்பெரு வீதியும்

(இ - ள்.) தமக்குச் சிறந்த கோட்பாட்டால் அழகிய வளைகளையறுப்பாரும் வாழ்கின்ற அகன்ற பெரிய வீதியும்,

வளைபோழுநர் என்றது சங்கறுப்பாரை. அணிவளை: வினைத்தொகையுமாம்.

வீழ்குடிமுதல் போழுநரீறுயுள்ளவர் மிக்க செருக்கோடிருக்கும் வீதியுமெனினும் அமையும்.

48. சூதர்—(இ - ள்.) நின்றேத்துவார்,

மாகதர்—(இ - ள்.) இருந்தேத்துவார்,

வேதாளிகரொடு—(இ - ள்.) வைதாளியாடுவாரென்று சொல்லப்பட்ட இவரோடே.

[மிட்டையகண்டருமென்ப.]

---

[1] 2 : 76. [2] சாமந்தர் - சித்ரசர்.

49. நாழிகைக் கணக்கர்—(இ - ள்.) [1] கடிகையார்,
அவர் அரசனுக்குச் சென்றநாழிகைக்குக் கவிசொல்லுவார்; "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் றிரியுங் கருவூரா - யாமங்கள், ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையும், ஒன்றுபோ யொன்றுபோ யொன்று" என; நாழிகை வட்டிலிடுவாருமென்ப; "சூதர் வாழ்த்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப" (மதுரைக். 670-71) என்றார் பிறரும்.

நலம்பெறு கண்ணுளர்—(இ - ள்.) தாம்கொண்ட கோலத்தானும் கூத்தானும் நலம்பெறும் சாந்திக்கூத்தர்.
என்னை? "வாசிகை வைத்து மணித்தோ டணியணிந்து, மூசிய சுண்ண முகத்தெழுதித் - தேசுடனே, ஏந்துசுடர் வாள்பிடித்திட் டீசனுக்குங் காளிக்கும், சாந்திக்கூத் தாடத் தகும்" என்பதனுனறிக; மதங்க ரென்பாருமுளர்.

50. காவற்கணிகையர்—(இ - ள்.) களத்தாடுங் கூத்திகள், † இராக்கடைப் பெண்டுகளென்பாரு முளர்.

ஆடற்கூத்தியர்—(இ - ள்.) அகக்கூத்தாடும் பதியிலார்,

51. பூவிலை மடந்தையர்—(இ - ள்.) அற்றைப்பரிசங்கொள்வார்.

ஏவற்சிலதியர்—(இ - ள்.) மடைப்பள்ளியாரடியார்,

52. பயிறொழிற் குயிலுவர்—(இ - ள்.) தோற்கருவி இசைப்பார்,

பன்முறைக் கருவியர்—(இ - ள்.) படைக்கும் உற்சவத்துக்கும் கொட்டுவார்,
யாழ்முதலாகிய நரம்புக்கருவிகளையுடையாருமென்ப.

53. நகைவேழம்பரொடு—(இ - ள்.) [[2]சாரமாணிகனோடே] சிரிக்கும் பரியாசகருடனுமென்ப.

வகைதெரி யிருக்கையும்—(இ - ள்.) சூதர்முதல் வேழம்பரீருக எண்ணப்பட்ட இவர்கள் தத்தம் இனத்தின் வகைதெரிந்த இருப்பிடங்களுமென்க.

54. கடும்பரி கடவுநர்—(இ - ள்.) கடிய பரிகளைக் கடவுவாராகிய ‡ அச்சுவவாரியர்,

களிற்றின் பாகர்—(இ - ள்.) யானைப்பாகர்,
இன் - சாரியை.

55. நெடுந்தே ரூருநர்—(இ - ள்.) தேர்ப்பாகர்,

---

[1] "கடிகையர் கவிதையோதை" (கம்ப. எழுச்சி. 79.) [2] தக்க. 548, உரை. (பி - ம்.) † 'இராக்கிடை' ‡ 'அச்சுவவாதியர்'

கடுங்கண் மறவர்—(இ - ள்.) சினக்கண்ணையுடைய காலாட் படைத்தலைவர்,

கடுமை - சினம். இனி முன்னர்க்கூறிய முப்படைக்கும் தறுகண் மையையுடைய வீரரென்றுமாம்.

56. இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும்

(இ - ள்.) என்று கூறப்பட்ட வீரர்கள் அரசன் கோயிலைச் சூழ விருக்கும் பெரிய பரந்த இருப்புக்களுமென்க.

57 - 8. பீடுகெழு சிறப்பின்......பாக்கமும்

(இ - ள்.) கோவியன் வீதி முதலாக இருக்கையிறுதியாக இருப் பிடங்களையுடைய பெருமையமைந்த சிறப்பினையுடைய பெரியோர் திரண்ட பாடலமைந்த சிறப்பினையுடைய பட்டினப்பாக்கமுமென்க.

59 - 67. இருபெரு வேந்தர்......கடைகெழு பீடிகை

இதில், (64) " சித்திரைச் சித்திரைத் திங்கள் † சேர்ந்தென " என்ப தனைப் புழுக்கல் முதலிய சொரிந்தென்பதனோடு முடிக்க.

(இ - ள்.) பெரியவேந்தரிருவர் போர்குறித்து வந்துவிட்ட பாசறை யிருப்புக்கு நடுப்பட்டநிலம் போர்க்களமானாற்போல முற்கூறிய மருவூர்ப் பாக்கமும் பட்டினப்பாக்கமுமென இரண்டுகூறுபட்ட ஊர்க்கு நடுப்பட்ட பொதுநிலமாகிய நாளங்காடி ; அஃது எத்தன்மையதாகிய நாளங்காடி யெனின், நிரைபடச்செறிந்த சோலையின் மரங்களிற் கால்களே தூணாகக் கட்டப்பட்ட கடைகளையுடைய கொடுப்போர் கொள்வோரோதை இடையறாது நிலைபெற்ற நாளங்காடியென்க. அந் நாளங்காடித்தெருவின் கண்ணே பூதத்து வாயிற் பீடிகையென்க. அஃது எத்தன்மையதாகிய பூதமெனின், வெற்றிபொருந்திய வேலை யுடைய முசுகுந்தனென்னும் மன்னனுக்கு வரும் இடையூற்றை ஒழிப்பா யெனத் தேவர்கோன் ஏவுதலானே அத்தேவருலகினின்றும் போந்து அந் நாண்முதலாகப் பலி கொண்டுபோதும் [1] பூதமென்க. அப்பூதத்து நாளங்காடிக்கட் பலிபீடிகை யிடத்தேயென்க.

அல்லங்காடியுமுண்டாதலின், இதனை நாளங்காடியென்றார்.

68 - 75. புழுக்கலு நோலையும்......ஓதையிற் பெயர

(இ - ள்.) சித்திரை மாதத்துச் சித்திரை நாளிலே நிறைமதி சேர்ந்த தாக அந்நாளிலே நாணிலிகளைப்போல வாய்சோர்ந்துரைக்கும் மாதர்க் கோலத்து மறக்குடிப்பெண்டிர் அப்பீடிகைக்கண்ணே புழுக்கல்முதலிய வற்றை உகுத்து எம்மன்னனுடைய நிலமுழுதும் பசிமுதலியன நீங்கி வசிமுதலியன சுரக்கவெனவாழ்த்தித் துணங்கையராய்க் குரவையராய் அணங்கெழுந்தாடிக் கொக்கரிப்போடே பெயரவென்க.

---

[1] சிலப். 6 : 7–13.

(பி - ம்.) † 'சேர்ந்தென வந்நாள்'

புழுக்கல் - முதிரைப்பண்டம்; அவரை துவரை முதலியன; "புழுக் குவ புழுக்கல்" என்றுராகலின். நோலை - †எட்கசிவு. விழுக்குடை மடை - நிணச்சோறு; பொங்கல் - கள்ளு; பொங்கற்சோறுமென்ப. துணங்கை - துணங்கைக்கூத்து; என்னை? "முடக்கிய விருகை பழுப் புடை யொற்றித் - துடக்கிய நடையது துணங்கை யாகும்" (திவா. 9) என்றுராகலின். இதனைச் சிங்கியென்பாருமுளர். குரவை - கைகோத் தாடுங்கூத்து. அணங்கெழுந்தாடி - தேவர் ஏறியாடி. பகை - உட் பகை. வசி - மழை: "வசித்தொழி லுதவ மாதிரங் கொழுப்ப" (மணி. 14 : 57) என்றுர் பிறரும்; வசியமுமாம். மாதர்க்கோலம் - கண்டு எவ ருங் காதலிக்கப்படும் ஒப்பனை. வலவையின் - நாணிலிகளைப்போல; "வலவைக ளல்லாதார்" (நாலடி. 268) என்றுர் பிறரும்; வல்லபத்தா லென்பாருமுளர். மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர்.

சேர்ந்ததாக அந்நாள் ஒளி கதிர் பரப்பாநிற்பப் புழுக்கல் முதலியன பீடிகையிலே சொரிந்து பெண்டிர் வாழ்த்தி ஆடிப் பெயரவென்க.

இவர் அரசன் கோயில் அகப்பரிசார மகளிர்.

### 76 - 88. மருவூர் மருங்கின்......வான்பலி யூட்டி

(இ - ள்.) அந்த முசுகுந்தன் இருவகைப் பாக்கத்தோரும் அக் காலத்துப் பூதத்திற்குப் பலிகொடுப்பதற்கு முன்பினென்று தந்தமில் முந்துகூற வலியவுரவோர் நெருங்கிச்சென்று தம்மைத் தாமேயிடும் பலியை உண்ணும் பீடிகையிலே மன்னற்கு உற்றதை ஒழிப்பாயாகெனப் பூதத்திற்குச் சொல்லிப் பலிகொடுத்தலைப் புரிந்தோர் அப்பலிக்கும் வலிக்கும் வரம்பாகக் கடவரென அவ்வரசன் குழுவும் ஆயமும் அக் காலத்தே நிருமித்தலாலே இக்காலத்து வீரரும் மாக்களும் கவணின ராய்த் தோலோடு வேற்பரப்பினராய் அமர்க்களப்பரப்பிலே உடற்கரித்து ஆர்த்துக் களங்கொண்ட வீரர் பார்த்தோரை அச்சமுறுத்துக் கடை சிவந்த சுடுங்கொள்ளிபோலும் பார்வையையுடைய தமது பசுந்தலை வேந்தன் கொற்றங்கொள்கெனப் பேசும்படி அரிந்து ஒப்பித்துப் பீடிகை யிலே வைத்த அப்பொழுதே அக்குறையுடல்கள் தமக்கு வாயின்மை யின் தத்தந்தோளிற் பூண்ட மயிர்க்கண் முரசின் வாயால் உயிர்க்கடன் தந்தோம், கொண்மினென்று நின்று பலியூட்டியென்க.

கழி - ஊன். பிணி - பிணித்தல். கறை - கறுப்பு. தோல் - பரிசை; "மழையென மருளும் பஃறோல்; (புறநா. 17 : 34) என்றுராகலின்; கருங்கடகென்பாருமுளர். மெய்யுறத்தீண்டி - உடற்கரித்து. அழுவம் - பரப்பு. சூர்த்து - அச்சமுறுத்து; என்றது, "நீண்டபலி பீடத்தி லறுத்து வைத்த நெறிக்குஞ்சித் தலையைத்தன் னினமென் றெண்ணி, ஆண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" (கலிங்க. கோயில். 16) என்றுற்போல்வரும் [விருத்தி திச் செய்யுள்]; சுழன்றென்பாருமுளர். சுடுநோக்கு - சுடுவதுபோலும்

(பி - ம்.) † 'எட்கசி'

நோக்கு; என்றது கொள்ளிக்கண்; "கண்ணுட் டியாற் சுட்டுநீ ருக்கி" (சீவக. 807) என்முர் பிறரும். கருந்தலை - பசுந்தலை. நலங்கொளவைத் தென்றது - தமது அரிந்த தலையிற் குலைந்த மயிரையும் கோதி முடித்துக் குருதித்திலதத்தையும் நுதலிலே அணிந்துவைத்தென்றவாறு; என்னை; "மோடி முன்றலையை வைப்ப ரேமுடி குலைந்த குஞ்சியை முடிப்பரே, ஆடி நின்றுகுரு திப்பு துத்திலத மம்மு கத்தினி லமைப்பரே" என்பது (கவிச் சக்கரவர்த்தி.) உருமு - இடி. மயிர்க்கண் முரசு - புலியைப்பொருது கொன்றுநின்று சிலைத்துக் கோட்டுமண்கொண்ட ஏறு இறந்துழி அதன் உரிவையை மயிர்சீவாமற் போர்த்த முரசு; என்னை? "புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசக் தானைத் தோன்றலைத் தம்மி னென்முள், நனைமல ரலங்கற் கண்ணி நந்தனுந் தொழுது சேர்ந்தான்" (சீவக. 2899) எனவும், "கொல்லேற்றுப் பசுந்தோல் சீவாது போர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" (மதுரைக். 732-3) எனவும் சொன்னர் பிறரும். முரசொடுவான்பலி யூட்டி - முரசத்தால் உயிர்ப்பலியூட்டி; என்றது "அடிக்கழுத்தி னுடன் சிரத்தை யரிவ ராலோ வரிந்தசிர மணங்கின்கைக் கொடுப்ப ராலோ, கொடுத்தசிரங் கொற்றவையைத் துதிக்கு மாலோ குறையுடலங் கும்பிட்டு நிற்கு மாலோ" (கலிங்க. கோயில். 15) எனவும், "மண்ணினுளற வறுத்த தங்கடலை வைத்த பீடிகை வலங்கொள, விண்ணினுயகிதன் யாக சாலைதொறு மீள வுஞ்சிலர் மிறைப்பரே" எனவும் வரும்; இவற்முற் சொல்லியவை அவிப்பலியென்னும் புறப்பொருட் பகுதியும் (பு. வெ. வாகை. 30) காப்பியத்துக்கு அங்கமான நவச்சுவையுள் வீரச்சுவையவிநயமுமென்க.

வரம்பாகெனக் கவணினர் பரப்பினராமுத் தீண்டிக் கொண்டோர் கருந்தலை கொள்கென வைத்து ஊட்டவென வினைமுடிக்க.

ஊட்டவெனத்திரிக்க.

இனி, முன்னாட் கரிகாலன் செய்த செயல் கூறுவார் :—

## 89 - 94. இருநில மருங்கில்......போகிய வந்நாள்

(இ - ள்.) தமிழ்நாட்டெல்லையுள் தன்னோடு எதிர்த்துப் பொரும் அரசரை இரண்டு திசையினும் பெருத கரிகாலன் போரிலே பேராசையுடையவனுதலின், வடதிசை பெருந்திசையாதலிற் பகை பெறலாமெனக் கருதி ஆண்டுச் சேறற்கு விரும்பி வாளும் குடையும் முரசும் நாளொடு பெயர்த்து என் வலிகெழுதோள் இத்திசையிலாயினும் நண்ணுரைப் பெறுவதாகவேண்டுமென்று தான் வழிபடு தெய்வத்தை மனத்தான் வணங்கி அவ்வடதிசையை நோக்கிப் போகிய அந்நாளிலென்க.

பொருநரை இருநிலமருங்கிற் பெரு வளவன் பெயர்த்துப் பெறுக என்தோளெனப் போகிய அந்நாளிலென்க.

இருநிலமருங்கினென்றது - இவன் ஆளும் நிலவெல்லைப்புறத் தென்பதாயிற்று; ஆகவே மேற்கும் தெற்குமெனக்கொள்க; என்றது சேர பாண்டியருடைய நாடுகளை.

இனி இருநிலமருங்கிலென்றதற்குத் தமிழ்ப்பூமி இருகூற்றிலெனினும் அமையும். வாளும் குடையும் முரசும் பெயர்த்தல் - வாணாட்கோள், குடைநாட்கோள், முரசுநாட்கோளென்பன; இவை நாட் கொண்டு பெயர்த்தல். இவற்றுள் வாணாட்கோடல் :—"செற்றார்மேற் செலவமர்ந்து, கொற்றவா ணாட்கொண் டன்று"; வரலாறு : "அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்னன், எறிந்திலங் கொள்வா ளியக்கம் - அறிந்திகலிப், பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு, நன்பகலுங்கூகை நகும்" (பு. வெ. வஞ்சி. 4). குடைநாட்கோடலென்றது :—"பெய் தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று"; வரலாறு : "முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானைத் துன்னருந் துப்பிற் றொழுதெழா-மன்னர், உடைநா ளுலந் தனவா லோதநீர் வேலிக், குடைநா ளிறைவன் கொள" (பு. வெ. வஞ்சி. 3). முரசுநாட்கோடலென்றது :—"மாசற விசித்த......ஈங்கிது செயலே" (புறநா. 50). பிறவும் வந்த வழிக்காண்க. மண்ணக மருங்கின் - இந்நிலவெல்லையுள். புண்ணியதிசை - வடதிசை. முகம் - இடம்.

95-8. அசைவி லூக்கத்து......பெயர்வோற்கு

(இ - ள்.) அங்ஙனம் பொருவாரைப் பெறவேண்டி வடதிசை நோக்கிப் போகின்ற நாளிலே இமையவர் உறையும் இமயமலை பகையாகக் குறுக்கிட்டு விலக்கிற்றாகலின், மனஞ்சலித்து மீளுகின்றவன், மடிதலின்றி மேலும் செல்ல முயலும் என்னாசை பின்னிட்டொழிய இம்மலை எனக்குப் பகையாகக் குறுக்கிட்டு விலக்கிற்றெனை முனிந்து அதன் பிடரிடத்தே தனது புலியைப் பொறித்துத் தான் வேட்டது பெறாத கோட்பாட்டால் மீள்கின்ற கரிகாலற்கென்க.

அசைவு - மடிதல். ஊக்கம் - மனவெழுச்சியும் முயற்சியுமாம். பிறக்கு : பிருதக்கென்னும் வடமொழிச்சிதைவென்க; வேறாகவென்றபடி. பிடர் - புறக்கழுத்து. தலை - இடம். ஒற்றி - பொறித்து. பிடர்த் தலையொற்றியென்றது - தன்னோடு எதிர்த்து விலக்குதலின் அதனைப் புறங்காண்டற்கும் அதன் வடபாலும் தனது ஆணை சேறற்கும் சாத்தனருளால் தான் பெற்ற செண்டினாலே அதனை அடித்துத் திரித்துப் பொறித்து மறித்து நிறுத்தானெனவுணர்க; என்னை? [1]"செண்டு கொண்டு கரிகாலனொரு காலி லிமையச் சிமையமால்வரை திரித்தருளி மீள வதனைப், பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற் பாய்புலிப் பொறி குறித்தது மறித்த பொழுதே" எனவும், "கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல், மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் - கைச் செண்டு, கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான், செம்பொற் கிரிதிரித்த செண்டு" எனவும் கூறினாராகலின்.

---

[1] கலிங்க. இராச. 1; "இலங்கு வேற்கரி காற்பெரு வளத் தோன், வன்றிறற்புலி யிமயமால் வரைமேல் வைக்க வேகுவோன்" (பெரிய. திருக்குறிப்பு. 85)

## 99-100. மாநீர் வேலி......பந்தரும்

(இ - ள்.) கடலை அரணாகவுடைய வச்சிர நாட்டுக்கோன் தான் இடக் கடவ முறைமையில் திறையாகவிட்ட அவனது மூகத்தின் பந்தரும்,

வேலி - அரண். வச்சிர நாடு - [1] † சோணைக்கரை. இறை - திறை. கொற்றப்பந்தர் - அவன்றனக்குக் கொற்றத்தான் வந்த பந்தர்; அது மேற் கூறுப. அன்றி, அக்கொற்றவன் முன்னர் நிற்கும் பந்தரெனினும் அமையும். இவன் உதாசீனன்.

## 101-102. மகதநன் னாட்டு......பட்டிமண் டபமும்

(இ - ள்.) வாட்போர் வாய்ப்புடையனாகிய மகதவேந்தன் பகை யாற் பொருது தாங்கமாட்டாது அப்பகையிடத்துத் தரப்பட்ட பட்டி மண்டபமும்.

[2] பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்; ஓலக்கமண்டபமுமென்ப. புறம் - இடம். இவன் சத்துரு.

## 103-4. அவந்தி வேந்தன்......வாயிலும்

(இ - ள்.) அவந்திநாட்டு வேந்தன் உவந்தனனாய்க் கொடுத்த மிக வுயர்ந்த தொழின்மரபையுடைய வாயிற்றோரணமும்,

அவந்தி - உஞ்சை. தொழின்மரபு "குலப்புடைவை" என்றாற் போல நின்றது. இவன் மித்திரன்.

## 105-10. பொன்னினு மணியினும்......மண்டபம்

(இ - ள்.) இப்பந்தரும் மண்டபமும் தோரணமுமென்னும் இவை பொன்னானும் மணியானும் செய்யப்பட்டனவாயினும் நுண்ணிய தொழிலை வல்ல கம்மியராற் பண்ணப்படாதன; ஆயின் இவை யாராற் பண்ணப்பட்டனவெனின், இவற்றை அக்காலத்துக் கொடுத்த அம்மூவ ருடைய தொல்லோர் ஒரோர்காலத்து ஒரோ விடத்துச் செய்த உதவிக்குக் கைம்மாறாக மயனால் நிருமித்துக்கொடுக்கப்பட்டன. இவை ஒன்றற் கொன்று சேய்நாட்டனவாய்க் கூடப்படாதன; இவனுழையான் ஒரு நாட்டு ஒரூரின்கண்ணே கூடுதலானும் மயன் நிருமித்தலானும் பெரி யோரான் ஏத்தப்படும் இந்த [3] மண்டபத்தும்,

காண்டல் - பண்ணுதல்; "கோயில் குளங்காண" என்றாற்போல நின்றது.

---

[1] சோணை - ஓர் யாறு.

[2] "பட்டி மண்டப மேற்றினை யேற்றினை" (திருவா. சதகம். 49); "ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள், பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்" (மணி. 1 : 60-61); "பன்னருங் கலைதெரி பட்டி மண் டபம்" (கம்ப. நகர. 62)

[3] இவற்றை உட்கொண்டே "வச்சிர மவந்தி மகதமொடு குழீஇய, சித்திர மண்டபம்" (28 : 86-7) என்பர் மேல்.

(பி - ம்.) † 'சோணைக்கரை'

110. அன்றியும்—(இ - ள்.) இதுவொழிந்தும்,

111 - 7. வம்ப மாக்கள்......வெள்ளிடை மன்றமும்

(இ - ள்.) அளவும் நிறையும் எண்ணுமாகிய இலக்கங்கள் தம் மிடத்து இடப்பட்ட பெயர்பொறித்த பொதிகள் பண்டசாலைவாயிலையும் பற்றுயத்துக் கருந்தாழாகிய காவலையும் உடையோர் காத்திருக்கும் காவலையும் விடப்பட்ட வாகலான் இந்நகர்க்குப் புதியமாக்கள் சிலர் கட்போருளராயின் அவர் கழுத்துக்கடுக்கப் பொதியை வைத்து ஊரைச் சூழ்விப்பினல்லாது அவர்க்கே அவற்றைக் கொடுத்து விடாதாதலாற் களவென்பதனை மனத்தாற் கனவில் நினைப்பினும் நினைப்போரை நடுங்குவிக்கும் வெளியான இடத்தையுடைய மன்றமுமென்க.

எண்ணெழுத்துப்படுத்தவென்க. எண் - இலக்கம். பல பண்டங்களை யும் பொதிந்தனவற்றைப் பொதியென்றது ஆகுபெயர். வம்பமாக்கள் கட்போர் உளராயினென்றார், இந்நாட்டு இவ்வூரில் வாழ்வோரெல்லாம் செல்வராதலாற் செய்யாரெனவும் புறநாட்டிற் சிலர் இம்மன்றின் தன்மையையறியாது களவு செய்யக் கருதுவரெனவும் புலப்படுத்தற்கு. தலையேற்றியென்பதற்குத் தாம் தாம் தலைமேல் ஏற்றிக்கொண்டெனினும் அமையும். பொதிகள் ஒரீஇயவாதலான் உளரெனின் அவரைக்கொட்பி னல்லது ஈயாது பனிக்குமன்றமென்க. பனிக்குமன்றமென இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. வம்பமாக்களாகிய உடையோரெனினும் அமையும்.

118 - 21. கூனுங் குறளும்......மன்றமும்

(இ - ள்.) கூனர்முதலாயுள்ளோரும் தொழுநோயால் அழுகு மெய்யையுடையோரும் புக்குமுழுகினவளவிலே பழுதில்லாத தோற் றத்தையுடைய நல்ல நிறம் பெறுகையினாலே தன்னை வலஞ்செய்து தொழுது ஆடி நீங்கும் பொய்கையையுடைய மன்றமுமென்க.

பெற்று வலஞ்செய்து ஆடிக் கழியுமென்க. முழுகினராடியென இரு பெயரொட்டாக்கினும் அமையும். இலஞ்சியை மகிழென்பார்க்குக் காவிரியில் நீராடிவந்து மகிழைச் சூழ்ந்தென்ன வேண்டுதலின், மகிழினும் மன்றினும் பயமின்றுமாதலின், அங்ஙனங்கூறல் பொருத்த மின்றென்றொழிக்க.

122 - 7. வஞ்ச முண்டு......மன்றமும்

(இ - ள்.) வஞ்சனையாற் சிலர் மருந்தூட்டஉண்டு பித்தேறினரும், நஞ்சையுண்டு நடுங்கு துயரமுற்றோரும், அழலும் விடத்தையுடைய அர வின் வாயிற்கூர்த்த எயிறழுந்தக் கடியுண்டாரும், [1] பிதுங்கின கண்ணை யுடைய பேய்பிடிக்கப்பட்டாருமென்னும் இவர்கள் ஒருகாற் சூழ்வந்து தொழ அதனுடனே அத்துயர்கள் நீங்குதற்குக் காரணமாகிய ஒளியைக் கால்வதொரு நெடிய கல் நாட்டி நிற்கும் மன்றமுமென்க.

---

[1] "கழல்கண்" (முருகு. 49, ந.)

மயற்கை - மயலாகிய பகை. ஆர் - கூர்மை. கழல்கட்கூளி : விகாரமாக்கிப் [1] பச்சைக்கழல்போலும் கண்ணையுடைய கூளியெனினும் அமையும் ; கூளி - பூதமுமென்ப. நிழல் - ஒளி ; " நிழன்மணி " (சீவக. 321) என்றாற்போல.

128 - 34. தவமறைந்தொழுகும்......பூத சதுக்கமும்

(இ - ள்.) தம்மைப் பிறர் நம்புவதற்குத் தவவேடத்தில் மறைந்து நின்று அத்தவத்திற்கு இழுக்கானவற்றின்கண் ஒழுகும் பொய்வேடத்தாரும், தம்மைத் தம் கணவர் நம்புதற்குப் பொய்யொழுக்கத்தின் மறைந்து நின்று வசீகரிப்பின் ஒழுகும் அலவற்பெண்டிரும், தம் படை குடி முதலிய ஐந்தினொடு உயிருறுப்புரிமைக்குத் தம்மைத்தேறியளித்த அரசரைக் கீழறை எண்ணும் அமைச்சரும், தமது மனைவியர் தனிப்பத் தனித்த பிறர் மனைவியரை விரும்பும் துச்சாரிகளும், தமது நெஞ்சறி பொருளை வஞ்சித்துப் பொய்ச்சான்றேறுவாரும், சிறப்புச்செய்துழி உழைநின்று புகழ்ந்து அவர் புறக்கொடையிற் பழிதூற்றுவாருமாகிய இவர்களே என் கையிற்கொண்ட இப்பாசத்திடத்து அகப்படும்பெயரென அவ்வூர் நாற்காதவெல்லையும் கேட்கும்படி தனது கடிய குரலாலுணர்த்திப் பின் அங்ஙனஞ் செய்வாரைப் பாசம் கட்டிவர நிலத்திற் புடைத்துண்ணும் பூதம் நிற்றலான் அப்பெயர்பெற்ற பூத சதுக்கமும்,

சதுக்கம் - நாற்சந்தி. தன்மை - தவத்தோடொற்றுமைப்படுந் தன்மை ; அதனையில்லாமையாவது கூடாவொழுக்கம். அலவல் : விகாரம். அறைபோதல் - கீழறுத்தல். பொய்க்கரி - பொய்ச்சான்று. கை - இடம். காத நான்குமென முற்றும்மைகொடுத்தலானே ஊர் [2] நாற்காத வட்டகையென்பதுணர்க. குரலெடுப்பி - குரலாலுணர்த்தி ; " துயிலெடுப்பி " (4 : 79) என்றாற்போல நின்றது.

135 - 8. அரைசுகோல் கோடினும்...பாவை மன்றமும்

(இ - ள்.) அரசனுடைய செங்கோல் சிறிதுகோடிற்றாயினும் தருமநூன்முறைமையின் அறங்கூறும் தருமாசனத்தார் உரைக்கும் நடுவுநிலைமை கோடி ஒருமருங்கு பற்றினும் நாவாற்கூறாது நீருகுத்துக் கண்ணாற்கூறும் பாவை நிற்றலான் அப்பெயர்பெற்ற பாவைமன்றமும்,

அறங்கூறவையம் - தருமாசனத்தார் வழக்குரைக்கும் இடம். நாவொடு - நாவால்.

139 - 40. மெய்வகை......பலி யுறீஇ

(இ - ள்.) முற்கூறப்பட்டனவாகிய வெள்ளிடைமன்றமுதற் பாவை மன்றம் ஈறுவுள்ள உண்மைத் திறத்தையுணர்ந்த சீரியோரால் ஏத்தப்படும் ஐவகைப்பட்ட மன்றத்தும் அரும்பலியுறீஇ என்க.

ஒளி உச்சித்தோன்றிப் பரப்பச் சொரிந்து ஆடிப் பெயர வைத்து ஊட்ட மண்டபமன்றியும் மன்றத்தும் பலியிட்டென்க.

---

[1] கழற்கண் : சூளா. அரசியல். 299. [2] சீவக. 2544.

அன்றியுமென்ற உம்மையும் மன்றத்துமென்ற உம்மையும் இறந்தது தழீஇயவெச்சவும்மையாகலானும் அரும்பலியென்றமையானும் இவையும் அப்பலியானமை யுணர்க.

141 - 4. வச்சிரக் கோட்டத்து......கடைநிலை சாற்றி

(இ - ள்.) [1] வச்சிரக்கோட்டத்திலிருக்கும் முரசையெடுத்துக் கச்சை யணிந்த யானையினது பிடரிடத்தேயேற்றி என்றும் இளைய வெள்ளிய ஐராவதம் நிற்குங்கோயிலிலே சென்று விழவின் முதலும் முடிவும் சாற்றி யென்க.

மணமுரசு - விழாமுரசு ; மண்ணென்றோதி மார்ச்சனை யென்பாரும் உளர். கச்சை - கீழ் வயிற்றிற் கச்சை. தலை - இடம். வயங்குதல் - விளங்குதல். கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி - விழவின் தொடக்கமும் முடிவும் அறிவித்து. களிற்றரசிற்குச் சாற்றி; அஃது இந்திரனைக் கொணர்தற்கு.

எடுத்து ஏற்றிச் சாற்றியென்க. எடுத்து என ஒரு சொல் வருவிக்க.

145 - 6. தங்கிய கொள்கை......எடுத்து

(இ - ள்.) பூமியில் தங்கிய முறையையுடைய தருக்கோட்டத்தின் முன்னர் அட்டமங்கலத்தோடு ஐராவதம் எழுதிய கொடியைத் துறக்கத்தே செல்லவிடுத்தென்க.

இந்திரன் தங்கிய செருக்கையுடைய தருவெனினும் அமையும்.

147 - 56. மரகத மணியொடு......வீதியில்

(இ - ள்.) மரகதம் வயிரமென்னும் இவற்றைப் புருவம்பிறக்க ஆயப்பலகையாகப் படுத்து அதன்மீதே செம்பவளத் தூண்களை நிரைத்த பைம்பொற்றிண்ணைகளையுடைய மாளிகை வாயிலிடந்தோறும் கிம்புரி செறித்த கொம்பினையும் அங்காந்த வாயாற்கான்ற முத்தொழுங்கையும் அட்டமங்கலங்களையும் பொறித்த வாசிகைவடிவாக வளையச் செய்த மகர தோரணங்கள் நிலைபெற நிறுத்தின வீதி ; பசிய பொன்னாற் செய்த நிறைகுடமும் பாலிகையும் விளக்கும் கொடியும் கவரியும் ஒழிந்தனவும் சுண்ணத்தோடே மேவிய வீதியிலென்க.

குயிற்றுதல் - அழுத்துதல். முகம் - இடம். கிம்புரி - கொம்பிலணியும் பணி. கிளர்முத்து - பருமுத்து. ஒளிகிளரு முத்தெனினும் அமையும். கிளை பாடமாயின், கொத்தாகத் தோன்றும் முத்தென்க. வாசிகைத் தோரணம் ; உவமைத்தொகை. தோம் - ஈண்டு ஒட்டம். குயிற்றிய பாடமாயின், வயிரங் குயிற்றிய காலையுடைய வேதிகையென்க.

அவ்வேதிகையையுடைய மாளிகைக் கடைமுகத்தியாங்கணும் தோரண நிலைபெற்ற மேவியகொள்கை வீதியென்க.

156. செறிந்து—(இ - ள்.) அவ்வீதியிலே நிறைந்து.

ஆங்கு—(இ - ள்.) அங்ஙனம் பலியிட்ட அப்பொழுதே,

---

[1] 141-2 : மணி. 1 : 27-8.

### 157 - 60. ஐம்பெருங் குழுவும்......ஒருங்கீண்டி

(இ - ள்.) ஐம்பெருங்குழுவும் ஆயமும் செறிந்து வீதிக்கண்ணே புரவியர் களிற்றினர் தேரினரான அரசகுமரரும் பரதகுமரரும் தம்மிற் பொருந்தி ஒன்றுபடத் திரண்டென்க.

ஐம்பெருங்குழு:—"அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத் தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க் கைம்பெருங் குழு வெனப் படுமே" எனுமிவர்.

எண்பேராயம்:—"கரணத் தியலவர் கரும காரர், கனகச் சுற்றங் கடைகாப் பாளர், நகர மாந்தர் நளிபடைத் தலைவர், யானை வீர ரிவுளி மறவர், இனைய ரெண்பே ராய மென்ப" எனுமிவர். இனி, "சாந்துபூ ......அவைக்களத்தாரைந்து" (157, உரை) எனக் காட்டுவர் அரும்பத வுரையாசிரியர். பரதர் - வணிகர். கவர்பரி - பகுத்துவிரையும் செலவு. இவர்தல் - தேரைக் கொண்டெழுதல்.

### 161 - 8. அரைசுமேம் படீஇய......விழுநீ ராட்டி

(இ - ள்.) மிகப்பெரிய ஞாலத்தின்கண்ணே தமதான அரசியல் மேம்படுவான்வேண்டி மன்னுயிர் காக்கும் ஆயிரத்தோரெட்டரசு தலை யிற் சுமப்பித்துக்கொண்ட காவிரியிற் பூவின்தாது மலிந்த பெரிய சங்க மத்துறையிற் குளிர்ந்த நறிய தீர்த்தநீரை, மண்ணகமும் வானகமு மருள வியப்ப எம்மன்னன் கொற்றங் கொள்வானாகவெனச் சொல்லிப் பொற்குடத்தேந்தி விண்ணவர் தலைவனை இந்நகரிடத்தே சிறப்புடைத் தாம்படி முற்கூறிய அரசகுமரரும் பரதகுமரரும் மஞ்சனமாட்டவென்க.

ஆட்டாநிற்பவெனத்திரிக்க. அகநிலை - ஊர். உரை - புகழ். சால் - அமைதி. மன் - ஆக்கத்தின் வந்தது. பொற்குடம் - அபிடேக கலசம். மண்ணகமருள - மண்ணகம் விண்ணகமாய் மாறுட; அன்றி மண்ணி னுள்ளோர் †இப்படியே அவ்விண்ணகமிருப்பதென ஒப்புக்காணவென்க. வானகம் வியப்ப - வானகத்துள்ளோர் தம் துறக்கத்தினும் ஈது சிறப் புடைத்தென்று வியக்க. இனி மருள மருளுதலாலெனக்கூறி இருதிறத் தோரும் ஐயுற்றுத் தெளிந்து வியப்பவென்றலுமொன்று. விண்ணவர் தலைவன் - ஈண்டு அவன் வச்சிரம். மானதத்தால் நீராட்டியென்னவு மாம். அரசு மேம்படீஇய அகநிலையென நின்றவாறே ஏனைநகர்கட்கு அரசாய் மேம்பட்ட நகரென உரைப்பினும் அமையும்.

ஏற்றிச் சாற்றி எடுத்துச் செறிந்து ஈண்டி ஏந்தி ஆட்டவென்க.

### 169. [1] பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்

(இ - ள்.) என்றும் பிறவாத யாக்கையையுடைய இறைவன் கோயிலும்,

---

[1] 169-78: "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப், பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக, வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய் வினை, ஆறறி மரபி னறிந்தோர் செய்யுமின்" (மணி. 1 : 54-7)

(பி - ம்.) † 'இப்படியோ'

இனி யாக்கையிற் பிறவாப் பெரியோனெனினுமமையும்; என்றது அருபியென்றபடி.

170. அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்

(இ - ள்.) ஆறுமுகத்தையும் செய்ய நிறத்தையுமுடைய முருக வேள் கோயிலும்,

"மூன்று மாறு நெடுமுதல் குறுகும்" (தொல். குற்றியலுகரப். 35) என்பதனால் அறுமுகமாயிற்று.

171. வால்வளை மேனி வாலியோன் கோயிலும்

(இ - ள்.) வெள்ளிய வளைபோலும் நிறத்தையுடைய வெள்ளை மூர்த்தி கோயிலும்,

என்றது பலதேவரை; "வலியொத்தீயே வாலியோனை" (புறநா. 56 : 12) என்றார் பிறரும்.

172. நீலமேனி நெடியோன் கோயிலும்

(இ - ள்.) நீலமணிபோலும் நிறத்தையுடைய நெடியமால் கோயிலும்; மேனியென்றார், ஆகுபெயரால் நிறத்தை.

173. மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்

(இ - ள்.) முத்தமாலையணிந்த வெண்கொற்றக் குடையையுடைய வாசவன் கோயிலும்,

செவ்வேள், வாலியோன், நீலமேனியோனென்பவற்றுள் தொடர் நிலை இன்பமும் அலங்காரச் சுவையும் உணர்க.

174 - 5. மாமுது முதல்வன்......தீமுறை யொருபால்

(இ - ள்.) மிக்க முதுமையையுடைய முதல்வனாகிய வேதாவினுடைய வாய்மையில் தப்பாத நாலாகிய வேதங்கள் சொன்ன நெறி ஓமங்கள் நடந்தன ஒரு பக்கமென்க.

176 - 8. நால்வகைத் தேவரும்...சாறுசிறந் தொருபால்

(இ - ள்.) நால்வகைப்பட்ட தேவரும் பதினெண்வகைப்பட்ட கணங்களுமென வேற்றுமைப்படத் தெரிந்து வகுக்கப்பட்ட தோற்றத்தையுடைய கடவுளரது விழவு சிறக்க ஒருபக்கமென்க.

நால்வகைத் தேவராவார் - முப்பத்துமூவர்; அவர் வசுக்களெண்மரும், திவாகரர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவர் இருவருமெனவிவர்.

மூவாறு கணங்களாவார் - "கின்னரர் கிம்புருடர் விச்சா தரர் கருடர், பொன்னமர் பூதர் புகழியக்கர் - மன்னும், உரகர் சுரர்சா ரணர் முனிவர் மேலாம், பரகதியோர் சித்தர் பலர்", "காந்தருவர் தாரகைகள் காணாப் பசாசகணம், ஏந்துபுகழ் மேய விராக்கதரோ - டாய்ந்ததிறற், போகா வியல்புடைய போகபூமி யோருடனே, ஆகாச வாசிகளா வார்" எனவிவர்; ஆகாசர் நாகர் சித்தர் காந்தருவர் விஞ்சையர் பசாசர் தாரகை போகபூமியோர் கிம்புருடர் சுரர் அசுரர் பூதம் முனி தேவர் கருடர் இராக்கதர் இயக்கர் சாரணர் எனவுங் கொள்க.

179 - 81. அறவோர் பள்ளியும்...செயல்சிறந் தொரு பால்

(இ - ள்.) அறவோர்பள்ளிமுதலிய எல்லாவற்றிலும் தருமம் போதித்தலும் புராணம்படித்தலும் பிறவுமாகிய செய்கைகள் மிக ஒரு பக்கமென்க.

அறவோர்பள்ளி - அருகர்பள்ளி, புத்தர்பள்ளி. அறனோம்படை - தருமம் போதிக்குமிடம். புறநிலைக்கோட்டத்து - புறம்புள்ள ஸ்ரீகோயிலுடனே. புண்ணியத்தானமும் - மற்றுமுள்ள புண்ணியத்தானங்களும். திறவோர் உரைக்குஞ்செயல் - புராணம்.

182 - 3. கொடித்தேர்......ஒருபால்

(இ - ள்.) கூடாமன்னரொடு ஏனையோரும் அடித்தளை நீக்குதற்குக் கொடித்தேர்வேந்தன் அருள் சிறக்க ஒருபக்கம்;

ஒடுவை அசையாக்கினும் அமையும்.

184 - 6. கண்ணு ளாளர்......இசைசிறந் தொருபால்

கண்ணுளாளர் - மதங்கர்; ஆவார் பெரும்பாணர்; குழலருமென்ப. கருவிக்குயிலுவர் - தோற்கருவி வாசிப்பார். பண்ணியாழ்ப்புலவர் - கட்டப்பட்ட யாழ்வாசிக்கவல்ல அறிஞர்.

(இ - ள்.) குழலும் தோலும் நரம்பும் கண்டமுமென்னும் இவற்றை இசைக்கவல்ல இவர்களாலே அளந்தறிதல் அரிய சிறப்பையுடைய இசைகள் மிக ஒரு பக்கமென்க.

இவற்றையெல்லாம் சிறக்கவெனத் திரித்துக்கொள்க.

187 - 8. முழுவுக்கண்......ஆங்கண்

(இ - ள்.) கங்குலும் பகலும் இங்ஙனம் நடக்கலான், முழவின் கண்கள் அடங்குதலின்றிக் குறுந்தெருக்களும் நெடுந்தேர்வீதிகளும் விழவாற் களிப்பு மிக்க அகன்ற ஊரிடத்தென்க.

சிறக்க நீராட்டக் களிசிறந்த வியலுள் என்க.

"காதற்கொழுநனை" (189) என்பதுமுதல் "மறுகில்" (203) என்னுந் துணையும் சிலேடை.

189 - 90. காதற் கொழுநனை......மாதவி தன்னொடு

(இ - ள்.) மாதவி மேற் சொல்லுமிடத்துத் தான் காதலிக்கப்பட்ட கொழுநனைப்பிரிந்து வேறுபாட்டால் அலர் உறுத அழகிய வளைந்த மகரக்குழையையுடைய மாதவியென்றும், குருக்கத்திமேற் சொல்லுமிடத்து எல்லாரும் காதலிக்குங் கொழுவிய நனையாந்தன்மையை விட்டு முதிர்ந்து அலராகாத வளைந்த அழகிய தளிரையுடைய மாதவியென்றும் பிரிக்க.

நனை - அரும்பு. கண்ணகி பிரிந்து அலரையெய்துதலால் அலரெய்தாத மாதவி யென்றார். குருக்கத்தியை அலரெய்தாவென்றார், செவ்வியழியாமை பற்றி.

191 - 5. இல்வளர் முல்லை......பொழிலாட் டமர்ந்து

(இ - ள்.) முற்கூறியமாதவியுடனே முல்லைமுதல் கழுநீர் ஈறுயுள்ள பூப்பயின்ற பிணையலாலே பொலிவுபெற்றுக் காமத்தாற்களித்து மகிழ்ச்சி

எய்தி அழகிய நறிய விரைபடு பூம்பொழிலில் விளையாட்டை விரும்பி யென்க.

இல்வளர்தலை முல்லைமுதல் மூன்றுக்கும் ஏற்றுக. மயிலை - இருவாட்சி. சூழ்தல் வண்டின் தொழில். இதனை விரித்து எங்கும் ஒட்டுக. கோதையாகிய பிணையலெனப் பண்பொட்டு விரிக்க; ஒழுங்கு மாம்; 'கோதையருவி' (சீவக. 525) போல. பூம்பொதி நறுவிரைப் பொழில் - நறியவிரையைப் பொதிந்த பூவையுடைய பொழில்; விகாரம். ஆட்டு - விளையாட்டு; ஆவது புணர்ச்சி.

196 - 7. நாண்மகி ழிருக்கை......புதுமணம் புக்கு

(இ - ள்.) நாள்தோறும் மகிழ்ந்திருக்கும் இருப்பையுடைய நாளங் காடியிற் பூவிற்கும் இடங்களிற் பலபூமணமாகிய புதியமணத்தின் உள் புக்கு.

பூவிற்கும் இடங்களைப் பூவின்மிகுதியாற் கானமென்றார்.

198 - 9. புகையும்......நன்மொழி திளைத்து.

(இ - ள்.) அகிற்புகை சாந்தென்னும் இவற்றின் செல்வி வாய்ப்பு மிக்கு நகைத்து விளையாடும் திரளோடே காமக்குறிப்பாகிய மகிழ்ச்சி மொழியிலே இடைவிடாது பயின்றென்க.

புலராது - புலராமல்; செவ்விமாறாமல் என்றபடி. திளைத்தல் - ஒரு தொழிலை இடைவிடாது பயிறல்; "திளைத்தவர் பருகிய" (சீவக. 50) என்றார் பிறரும்.

200 - 203. குரல்வாய்......திரிதரு மறுகில்

(இ - ள்.) குரலென்னும் இசையைப்பாடும் வாயையுடைய பாண ரோடும் பரத்தரோடும் திரிகின்ற ஒழுக்கத்தையுடைய கோவலனைப் போல் இளி யென்னும் இசையைப் பாடும் வாயையுடைய வண்டினோடும் இளவேனிலோடும் இந்நகரிடத்து மந்தமாருதம் உலாவுதலைச் செய்யும் மறுகிடத்தென்க.

குரலுக்கு இளிகூறினர், கிளையாதல் நோக்கி. † பரத்தர் - கழி காமுகர். திரிதருதல் - உலாத்துதல்.

மாதவி தன்னொடும் பயில்பூம்பிணையலாற் பொலிந்து எய்தி அமர்ந்து புக்குச் சிறந்து திளைத்துப் பாணரொடும் பரத்தரொடும் திரிகின்ற ஒழுக்கத்தையுடைய கோவலனைப்போல வண்டினொடும் இள வேனிலொடும் மாருதம் திரிதரு மறுகிலென்க.

இச்செய்தென்னும் வினையெச்சங்களைத் திரிதருமென்னும் வினை யொடு முடித்து அச்செய்யுமென்னும் பெயரெச்சத்தையும் கோவலனென் னும் பெயரொடு முடித்து அவனைப்போலத் திரிதருமென்க.

பாணர்க்கு வண்டும், பரத்தர்க்கு வேனிலும், கோவலர்க்கு மாருத மும் உவமம்.

இனி வீதிவருணனை கூறுவார்.

204 - 7. கருமுகில் சுமந்து......உண்டுகொல்

(இ - ள்.) அழகிய வானத்திடத்தே திரியும் அரவாகிய பகை செறு மென்றஞ்சி ஆண்டுத் திரியாமல் ஒரு பெரிய முகிலைச் சுமந்து சிறிய

---

(பி - ம்.) † 'பரதர் - பழிகாமுகர்'

முயலை யொழித்து இருமருங்கினும் இரண்டு கருங்கயலினையும் இடையே ஒரு குமிழமலரையுமெழுதி இங்ஙனம் உள்வரிக்கோலம் (8:89, அடியார்.) கொண்டு திங்களும் இந்நிலத்தே திரிதருகின்றது கொல்லோவெனவும், உம்மை : சிறப்பு. கருமை - பெருமை.

## 208 - 11. நீர்வாய் திங்கள்......உண்டுகொல்

(இ - ள்.) காமன்றுன், முன்பு இறைவன் நுதல்விழியான் இழந்த மெய்பெறுதற்காக ஈரம் வாய்ப்புப்பெற்ற திங்களாகிய பெரிய நிலத்தே சீர்மை வாய்ப்புப்பெற்ற துவலையையுடைய அமிர்தகலையினீரை மாந்தி வளர வளர்த்த வானவல்லி இந்நிலத்தே வருதலுமுண்டாயிற்றே தானெனவும்,

வளரவென ஒரு சொல் வருவிக்க. மாந்தி மெய்பெறவெனினும் அமையும். இதனை வானவல்லி என்றார், காமவல்லியும் உண்மை தோன்ற ; வானவல்லி - மின்னுக்கொடி. உம்மை : சிறப்பு.

## 212 - 7. இருநில மன்னற்கு......உண்டுகொல்

(இ - ள்.) வளத்தையுடைய இப்பதியிடத்தே திருமகள் வந்து புகுதற்குக் காரணம் மிக்க நிலத்தையுடைய கரிகாலற்குத் தனது வளங் காட்டவா யிருந்தது தப்பாதெனக் கருதி எரிபோலும் நிறத்தையுடைய தோர் இலவ மலரையும் பல முல்லை முகையையும் ஒழிந்தும் இரண்டு கரிய பெரிய குவளை மலரையும் ஒரு குமிழமலரையும் பூத்து இங்ஙனங் கொண்ட உள்வரிக் கோலத்தோடு தனது அன்பு மிக்க துணையைத் தேடிக்கமலம் திரிதலும் உண்டாயிற்றேதானெனவும்,

கள்ளக்கமலமென்றார், உருமாறித்திரிதலின் ; கள்ளையுடைய அக் கமலமென்பது இயல்பு. ஆங்கு - பூத்த அப்போதே. வளம் - செல்வ மும் அழகும்.

## 218 - 23. மன்னவன்......பெற்றியு முண்டென

இதற்குக் கொல்லென்னும் இடைச்சொல் வருவிக்க.

(இ - ள்.) முன்பு ஒடியொளித்த பகுவாய்க் கூற்றம் தான் ஆணுரு வோடு திரிந்து பல்லுயிரைப் பருகின் அரசன் செங்கோலை மறுத்ததா மென்று அதற்கு அஞ்சி மறைந்துநின்று பருகவேண்டிக் கடுத்தமுகமும் இடித்த குரலுமொழித்து வாணகை முகமும் யாழிசை மொழியுங் கொண்டு, நகைத்து மிழற்றிப் பெண்ணுருவோடு இந்த வீதியில் திரியுந் தன்மையும் உண்டாயிற்றேதானெனவும்,

பருகுங்கூற்றம் - பலவுயிரையும் ஒருவாயிற் பருகுங்கூறம் ; பகு வாய் - அங்ஙன் பருகுங்கால் அங்காக்கும் வாய். தன் அருந்தொழில் திரியாது ஆண்மையில் திரிந்து பெண்மையில் திரியுமெனினும் அமை யும். இதன் கருத்து :—கூற்றம் தன் கொலைத்தொழில் கெடாமல் ஆணுருக் கெடப் பெண்ணுருவால் திரியுமென்றபடி. அருந்தொழில் - கொலைத்தொழில். நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டியென்றது —ஒருருவைக் கோட்டுவார்க்கு நாணுடைமை கோட்டல் அரிதாகலின், முதலில் அதனைக்கோட்டிப் பின்பு அதனோடு நகைமுகத்தையும் கோட்டி யென்பதாயிற்று.

கூற்றம் அஞ்சித் திரியாமற் கோட்டி மிழற்றிப் பெண்மையில் திரியும் பெற்றியென்க.

மாருதம் திரிதருமறுகில் திங்களும் வல்லியும் கமலமும் கூற்றமும் திரிதலுமுண்டுகொல்? வருதலுமுண்டுகொல்? திரிதலுமுண்டுகொல்? பெற்றியுமுண்டுகொலெனக் கூறியென்க.

இது, திங்கள் முதலியவற்றைப் பொதுமகளிர் உறுப்போடும் தொழிலோடும் உறுவித்துக் காமுகர் புகழ்ந்து கூறுதலெனக்கொள்க.

## 224 - 34. உருவி லாளன்......நடுநாள்

(இ - ள்.) காமனுடைய ஒப்பிலாத பெரிய சேனையாகிய பொதுமகளிர் ஊடலாகிய மாறுபட்ட அமரை இங்ஙனம் புகழ்ந்து சொல்லி வென்று அவர் போகாமல் எதிர்நின்று விலகிப் புணர்தலின் அவருடைய முலை முதலியவற்றில் எழுதிய தொய்யில் முதலிய பத்திக்கீற்றுத் தமது மார்ப முழுவதும் உறுதலானே விருந்தொடுபுக்க கணவரோடே உடனுறைதலை மருவி வழிபாட்டோடும் பொருந்திப்புணர்ந்த அருந்ததி போலும் கற்பையுடைய இல்லறமகளிரை அப்பெருந்தோட்கணவரே 'இம்மாதருடைய ஒளிபொருந்திய முகத்து நீலமணிபோலும் இதழையுடைய குவளைப் போதுகள் புறங்கொடுத்துப் போதற்குக் காரணமாகிய கரிய கண்களின் கடைச் சிவப்பு அவ்விருந்தால் தீர்ந்ததில்லையாயின் இப்பெரிய நிலவெல்லை இதற்கு ஒரு மருந்தையும் தரவற்றன்று' வெனத் தமது நெஞ்சொடுகூறிச் செயலற்றுநடுங்கும் விழா நடுநாளிலென்க.

இகலமராட்டி - மாறுபட்ட அமரைச்சயித்து; ஆடு - வென்றி; என்றது புலவியாலே கூடாதமகளிரை இங்ஙனம் புகழ்ந்து புலவியைத் தீர்த்தென்றபடி. எதிர் நின்று விலக்கி - போகப்புக்கவர்களைப் போகாமல் விலக்கி; வரிகோலம்: வினைத்தொகை. முழுமெய்யும் - மார்பமுழுதும்; "முழுமெய்யும் புண்களுற்றார்க்கு" (சீவக. 819) என்றார் பிறரும். உறீஇ - உறுவித்து; புணர்ந்தென்றபடி. தீர்ந்திலது: விகாரம். யாவதும்-சிறிதும்; உம்மை: சிறப்பு. மருந்துந் தருங்கொல் இம்மாநில வரைப்பெனத் தருதலை வரைப்புக்கேற்றுக. வரைப்பென்றார் வரைப்பிலுள்ளாரை. நல்வினை - விழா.

ஆட்டி விலக்கி உறீஇப் புக்க கணவர் நடுங்கும் நாளென்க.

நிலவரைப்புத் தருங்கொலென்றார், சல்லியகரணி சந்தானகரணி சமனியகரணி மிருதசஞ்சீவினி யென்னும் இவை முதலிய மருந்துகளைத் தரும் நிலவரைப்பு இவ்வூடல் முதலியவற்றிற்கு மருந்து தரமாட்டாதென்றற்கு.

இனி, திங்கள் வானவல்லி முதலியவற்றைக் கூறுதலைக் கண்டோர் கூற்றாக்கி அவர் அங்ஙனங்கூற அக்காமன் சேனையாகிய மகளிர் மாறுபட்டுத் தம் உறுப்புக்களால் அமரைச்செய்வித்து வீதியிற்போவாரைப் போகாமல் தடுத்தலின் அவருடைய முலையிலெழுதிய தொய்யிலுறுதலின் விருந்தொடு புக்கவெனினும் அமையும். இனி, இம்மகளிர்நெருங்குதலாலே மாந்தர் மார்பால்தள்ளிப் பெயர்கின்றவர் தம் மார்பிற் பொறித்தலாலெனவுமாம். இஃது, "உறுத்தலு மொன்றலும்" என்னும் ஆலிங்கன விகற்பம்; "பூசுநாந் தொருவர் பூசிற்றெழுவர்த மகலம் பூசி, மாசன மிடம்பெறாது வண்கடை மலிந்த தன்றே" (சீவக. 116) என்றார் பிறரும். உடனுறைவு மரீஇயெனவே ஊடல் தீர்தலும் ஒழுக்கொடு புணர்ந்த வெனவே காட்டிற்றுஞ் செய்து கதம்படாராதலிற் புலவி துனியிற் செல்லாது ஊடலுணர்ந்தமையும் விளங்கி நின்றன.

**235 - 40. உள்ளக நறுந்தாது...விழவுநா ளகத்தென்**

(இ - ள்.) [1]இந்திரனுடைய விழாநாளகத்து உள்ளுள்ள நறிய தாதுகள் மதுவையூறிப் பிலிற்றுதலால் அகநிறைந்து மீது அழியப்பொழிய நின்று நடுங்கும் கழுநீரினைப்போலக் கண்ணகியுடைய கருங்கண்ணும் மாதவியுடைய செங்கண்ணும் உண்ணிறை கரத்தலானே இதயத்தை யொளித்து நீரையுகுத்தன; அவையே முன் எண்ணிய முறையே இடமும் வலமும் துடித்தனவென்க.

அழிந்து : அழிய.

'தாதெறிப்ப' என்று பாடமோதித் தாது ஒளிவிடவெனப் பொருள் உரைப்பாருமுளர். கழுநீர்போலவென்றது, ஊறி நிறைந்து இதழினின்றும் வழிந்து சிந்துதலின். நடுங்குமென்றார், மல்கிநின்று அலைந்து சிந்துமாகலின். கருங்கண் செங்கணென்றார், இருவர்க்கும் கூட்டமின்மையும் உண்மையு முணர்த்தற்கு. இடத்தினும் வலத்தினுந் துடித்தனவென்றார். மேல் 'இருவர்க்கும் கூட்டமும் பிரிவும் உணர்த்தற்கு. விழவுநாளகத் தென்றார், தீர்த்தத்தின் முன்னாளென்பது உணர்த்தற்கு.

(3) மடந்தை (4) போர்த்த படாத்தைப் போகநீக்கி (6) ஒளி (5) உச்சித் தோன்றிப் (6) பரப்பச் (69) சொரிந்து (70) ஆடிப் (75) பெயர (86) நலங்கொளவைத்து (88) ஊட்ட (110) மண்டபமன்றியும் (140) மன்றத்தும் பலியுறீஇ (142) ஏற்றிச் (144) சாற்றி (146) எடுத்து (160) ஈண்டிக் (162) கொள்கென (168) ஆட்டக் (188) களிசிறந்த வியலுளாங்கண் (203) திரிதருமறுகில் (223) உண்டுகொலென்று (224) சேனை (225) ஆட்டி விலக்கி (226) உறீஇப் (227) புக்க கணவர் (234) நடுங்குநாள் (238) உகுத்தனவாகிய (237) கருங்கண்ணும் செங்கண்ணும் (240) விழாநாளகத்து (239) இடத்தினும் வலத்தினும் துடித்தனவென வினைமுடிக்க.

இஃது எல்லாவடியும் அளவடியாய் வந்துமுடிதலின், **நிலைமண்டில ஆசிரியப்பா.**

---

[1] பண்டைக்காலத்தில் தன்னகரத்து விழாக்கொண்டருள வேண்டுமென்றிரந்த ஒரு சோழன் வேண்டுகோளுக்கு இந்திரன் உடன்பட்டானென்பதும், அது தொடங்கி இவ்விந்திரவிழா இக்காவிரிப்பூம்பட்டினத்து நடைபெற்று வருகின்றதென்பதும் **மணிமேகலை** விழாவறை காதையால் விளங்குகின்றன, இந்திரவிழா உண்டென்பதை வான்மீகி, காளிதாசர் முதலியோர் தத்தம் நூல்களிற் குறிப்பித்திருக்கின்றனர். நச்சினார்க்கினியரும், "மருத நிலத்திற்குத் தெய்வமாக 'ஆடலும் பாடலும் ஊடலும் உணர்தலும்' உள்ளிட்ட இன்பவிளையாட்டு இனிதினுகரும் இமையோர்க்கும் இன்குரலெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவு செய்து அழைத்தலின், அவன் வெளிப்படுமென்றார்; அது 'வையைப் புதுப்புனலாடத் தவிர்ந்தமை, தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு' என இந்திரனைத் தெய்வமென்றதனானும் இந்திர விழவூரெடுத்த காதையானுமுணர்க" என்று எழுதியிருக்கின்றனர்; **தொல்.** அகத். 5, உரை.

**(௬) இந்திரவிழவூரெடுத்த காதை முற்றிற்று.**

---

## ஆறுவது

# கடலாடு காதை



வெள்ளி மால்வரை வியன்பெருஞ் சேடிக்
கள்ளவிழ் பூம்பொழிற் காமக் கடவுட்குக்
கருங்கய னெடுங்கட் காதலி தன்னொடு
விருந்தாட் டயருமோர் விஞ்சை வீரன்
தென்றிசை மருங்கினோர் செழும்பதி தன்னுள்
இந்திர விழவுகொண் டெடுக்குநா ளிதுவெனக்
கடுவிசை யவுணர் கணங்கொண் டண்டிக்
கொடுவரி யூக்கத்துக் †கோநகர் காத்த
தொடுகழன் மன்னற்குத் தொலைந்தன ராகி
நெஞ்சிருள் கூர நிகர்த்துமேல் விட்ட
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்
திருந்துவே லண்ணற்குத் தேவ னேவ

---

1. வியன்பெருஞ்சேடி - அகன்று உயர்ந்த வடசேடி.
2. காமக்கடவுள் - காமதேவன்.
4. (பா) விருந்தாட்டமரும்-விழாக்கொண்டாடிப்போதும். விஞ்சை வீரன் - விச்சாதரவீரன்.
5. செழும்பதி - காவிரிப்பூம்பட்டினம்.
6. கொண்டு - கருதி.
8. கொடுவரி யூக்கத்து - புலிவலியால். கோநகர் - அமராபதி.
9. (பா) அண்ணல் - சோழன்.

7 - 9. அவுணர் தொலைந்தனராகி.

10. இவனெஞ்சு இருண்டுமயங்க. நிகர்த்து - தம்மிலொத்து.
11. வஞ்சம் - இருளாக வரவிட்ட வஞ்சம்; என்பது அந்தகாரத்தைப் பண்ணி வருவதோராயுதம்; தாமசாத்திரம். அவன்மேல் அசுரர் விட்ட வஞ்சத்தை மாற்றின பூதமென்க.
12. திருந்துவேலண்ணற்கு - சோழன்பொருட்டாக.

---

அடி, 1 : மணி. 17 : 21. 1-34. பெருங். 5. 9 : 9-11.

அடி, 7 - 13 : சிலப். 5 : 65 - 7 ; “கொடித்தேர்த் தானைக் கொற்றவன் றுயரம், விடுத்த பூதம்” (மணி. 1 : 19 - 20)

(பி - ம்.) † ‘கோனகர்’

இருந்துபலி யுண்ணு மிடனுங் காண்கும்
அமரா பதிகாத் தமரனிற் பெற்றுத்
தமரிற் †றந்து தகைசால் பிறப்பிற்
பொய்வகை யின்றிப் பூமியிற் புணர்த்த
ஐவகை மன்றத் தமைதியுங் காண்குதும்
நாரதன் வீணை நயந்தெரி பாடலும்
தோரிய மடந்தை வாரம் பாடலும்
ஆயிரங் கண்ணோன் செவியக நிறைய
நாடக முருப்பசி நல்காளாகி
மங்கல மிழப்ப வீணை மண்மிசைத்
தங்குக விவளெனச் ‡சாபம் பெற்ற
மங்கை மாதவி வழிமுதற் றோன்றிய
அங்கர வல்கு லாடலுங் காண்குதும்
துவரிதழ்ச் செவ்வாய்த் துடியிடை யோயே

---

13. இருந்துபலியுண்ணுமிடனும் காண்போமென்க.

14. அமராபதிகாத்து - தேவலோகத்தைக்காத்து. அமரனிற் பெற்று - அமரனிடத்திலே பெற்று.

15. தமரிற்றந்து - சோழன் மரபினுள்ளாரால் தரப்பட்டு.

17. ஐவகைமன்றத்தமைதி - ஐந்து வகைப்பட்ட மன்றத்தின் சிறப்பு.

அமராபதிக்கு அசுரரால் வந்த இடர் நீக்கி இந்திரனாலே பெற்று இவன் மரபினுள்ளோரால் தரப்பட்டுக் காவிரிப்பூம்பட்டினத்திலே பெற வைத்த ஐவகை மன்றமும் காண்போமென்க.

18. நாரதன்வீணை - நாரதமுனிவீணை. நயந்தெரி பாடலும்-நயம் தெரியப்பட்ட பாடலும்.

19. தோரியமடந்தை - பற்றுப்பாடுவாள்.

20. ஆயிரங்கண்ணோன் - இந்திரன். செவியகநிறைய - செவியிடம் நிறையும்படி.

21. நாடக முருப்பசி நல்காளாகி - நாடகமாடும் உருப்பசி பாடி ஆடலை விரும்பாளாதலால்.

22-3. அதற்குக்காரணமான சயந்தனிடத்தே புகுஞ்சாபத்தால் வீணை சாபம்பட்டு அம்பணமாயதென்க ; வீணை மங்கலமிழப்பச் சாபம் பட்டென்றுமாம்.

24. அவள்வழி வந்தமையின், இவள் பெயரும் மாதவியாயிற் றென்க.

---

(பி - ம்.) † 'றந்த' ‡ 'சாப மேற்ற'

அமரர் தலைவனை வணங்குதும் யாமெனச்
சிமையத் திமையமுஞ் செழுநீர்க் கங்கையும்
உஞ்சையம் பதியும் விஞ்சத் தடவியும்
வேங்கட மலையுந் தாங்கா விளையுட்
காவிரி நாடுங் † காட்டிப் பின்னர்ப்
பூவிரி படப்பைப் புகார்மருங் கெய்திச்
சொல்லிய ‡ முறைமையிற் றொழுதனன் காட்டி
மல்லன் மூதூர் மகிழ்விழாக் காண்போன்
மாயோன் பாணியும் வருணப் பூதர்
நால்வகைப் பாணியு நலம்பெறு கொள்கை
வானூர் மதியமும் ¶ பாடிப் பின்னர்ச்
சீரியல் பொலிய நீரல நீங்கப்
பாரதி யாடிய பாரதி யரங்கத்துத்
திரபுர மெரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம் பேவல் கேட்ப
உமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்
தேர்மு னின்ற திசைமுகன் காணப்
பாரதி யாடிய வியன்பாண் டரங்கமும்
கஞ்சன் வஞ்சங் கடத்தற் காக

---

27. இங்குப் பூசைகொள்ளுகின்ற இந்திரனைவணங்குதுமென்று.

30. தாங்காவிளையுள் - நிலம்பொறுத விளைச்சல்.

33. தொழுதனன்காட்டி - இந்திரனைத்தொழுது பின்றைக்காட்டி.

35. மாயோன்பாணி - திருமாலைப்பாடும் தேவபாணி. வருணப் பூதர் - நால்வகை வருணத்துப்பூதர்.

37. வானூர்மதியம் - சந்திரனைப் பாடும் தேவபாணி. பாடி - இம் மூவகைப் பாணியும் பாடி.

38. சீரியல்பொலிய - தாளவியல்பு பொலவுபெற. நீரலநீங்க - நீரல்லாதன நீங்க; நீரல்லாதன - அவதாளம்.

39. பாரதி - பைரவி. அரங்கம் - சுடுகாடு. இவளாடுதலாற் பாரதி யரங்கென்று சுடுகாட்டுக்குப் பேராயிற்று.

40. திரிபுரமெரியத் தேவர்வேண்டுதலால்.

41. ஏவல்கேட்ப - சுட்டவளவிலே. 42. ஒரு திறனாக - ஒரு பக்கமாக.

44. தேர்முன் - தேரிடம். தேர்த்தட்டே அரங்கமாக.

---

அடி, 29 : பெருங். 5. 3 : 52. அடி, 40 : புறநா. 55 : 1-4. அடி, 43 : கலித். கடவுள் 5-6.

(பி - ம்.) † 'காட்டிய' ‡ 'முறையிற்' ¶ 'பாடிய பின்றைச்'

அஞ்சன வண்ண னாடிய வாடலுள்
அல்லியத் தொகுதியு †மவுணற் கடந்த
மல்லி னாடலு மாக்கட னடுவண்
நீர்த்திரை யரங்கத்து நிகர்த்துமுன் னின்ற
சூர்த்திறங் கடந்தோ னாடிய துடியும்
படைவீழ்த் தவுணர் பையு ளெய்தக்
குடைவீழ்த் தவர்மு னாடிய குடையும்
வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோ னாடிய குடமும்
ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
காம னாடிய பேடி யாடலும்
காய்சின வவுணர் கடுந்தொழில் ‡பொறாஅள்
மாயவ ளாடிய மரக்கா லாடலும்
செருவெங் கோல மவுணர் நீங்கத்
திருவின் செய்யோ ளாடிய பாவையும்
வயலுழை நின்று வடக்கு வாயிலுள்
அயிராணி மடந்தை யாடிய கடையமும்
அவரவ ரணியுட னவரவர் கொள்கையின்
நிலையும் படிதமு நீங்கா மரபிற்

---

47. அஞ்சனவண்ணன் ஆடியவாடல் பத்துள்.

48. அல்லியத்தொகுதி - அல்லியவாடல்; யானையை மருப்பொசித்தாடல்.

53. குடைவீழ்த்து - குடையைத் தாழ்த்து.

54 - 5. உலோகங்களாலும் மண்ணாலும் குடங்கொண்டு வாசுதேவனாடினது.

58 - 9. அவுணர் பாம்பும் தேளும்விடத் துர்க்கை மரக்காலின்மேல் நின்றாடினாள்.

60 - 61. திருமகள், செருக்கோலம் அவுணர் நீங்கப் பாவையாக ஆடியது.

62 - 3. ¶ வாணபுரத்து வடக்குவாயிலிடத்து நின்று கடைசியர் வடிவுகொண்டு அயிராணியாடிய கடையமும்.

"கடையமயி......பதினோர்கூத்து." (3 : 14, அடியார்.) இவை நிலை நின்றாடல், பதம் வீழ்ந்தாடலென இருவகைய. அவை : "அல்லியம்...... ஆறு", "துடி......ஐந்து."

---

அடி, 54 - 5 : மணி. 3 : 123 - 4. அடி, 56 : மணி. 3 : 124 - 5. அடி, 61 : மணி. 5 : 4.

(பி - ம்.) † 'மவுணரைக் கடந்தோன்' ‡ 'பொறாஅ, மாயவள்' ¶ 'வாணபுரத்து'

பதினோ ராடலும் பாட்டின் பகுதியும்
விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய்
தாதவிழ் பூம்பொழி லிருந்தியான் கூறிய
மாதவி மரபின் மாதவி யிவளெனக்
காதலிக் குரைத்துக் கண்டுமகிழ் வெய்திய
மேதகு சிறப்பின் விஞ்சைய †னன்றியும்
அந்தரத் துள்ளோ ரறியா மரபின்
வந்து காண்குறூஉம் வானவன் விழவும்
ஆடலுங் கோலமு மணியுங் ‡ கடைக்கொள
ஊடற் கோலமோ டிருந்தோ னுவப்பப்
பத்துத் துவரினு மைந்து விரையினும்
முப்பத் திருவகை யோமா லிகையினும்

---

72. அந்தரத்துள்ளோர் - தேவர்கள்.

72-3. அறியாமரபின்......விழவு - பிறர் அறியாமல் வந்துகாணும் விழவு.

(4) விஞ்சைவீரன், தெய்வயாக்கையை மறைத்துவந்து (27) வணங்குது நாமெனச் சொல்லிக் (31) காட்டிப் பின்னர்ப் (32) புகாரெய்தி (34) விழாக்காண்போன் இவற்றைக் (67) காணாயென்று (70) காதலிக்குரைத்துக் கண்டு மகிழ்வெய்திய (71) விஞ்சையனென்க.

(38) நீரலநீங்க (64) அவரவரணியுடனாடிய (65) நிலையும் படிதமும் நீங்கா மரபினையுடைய (66) பதினோராடலுமெனக் கூட்டுக.

74. (பா) ஆடற்கோலம் - மாதவி பதினோராடலுக்கும் கொண்ட கோலம். அணி - ஆடுங்காலத்துப் பிறக்குமணி; பாவரசம்; கடைக்கொள - முடிந்தவளவிலே.

75. ஊடற்கோலமோடிருந்தோன் - கோவலன். அவனூடுதற்குக் காரணம் திருநாள் முடிதலான் வந்த வெறுப்பு; இவள் ஆடலிற் கால நீட்டித்தலாலும் பலரும் இவளைப்பற்றிப் பார்த்தலிற் பொறுமையாலும் வந்தவெறுப்புமாம். உவப்ப - அவனூடல் தீர்ந்து உவகையெய்தும்படி.

76. பத்துத்துவராவன :—" பூவந்தி திரிபலை புணர்செங் கருங்காலி,......துவரே "; [1] " மாந்தளிர்......முப்பழஞ் சீர்த்த முத்தக்காசு " எனவுங் கொள்க. ஐந்துவிரையாவன :—" நறும்பிசி னகண நற்கொட்ட மாஞ்சி, 'வெறுங்கண்டில் வெண்ணெய் விரை "; " கொட்டம்... விரை " எனவும் கொள்க.

77. முப்பத்திருவகை ஓமாலிகையாவன :—இலவங்கம் பச்சிலை... நண்ணு மரத்தை நறும்பிசின் - எண்ணும், குடசம் வசுவாசி தீம்பூ...... சண்பக முகையோ, டெண்ணுன்கு மோமா லிகை ".

---

அடி, 72 : மணி. 1 : 15. 76-9 : பரி. 89-91. 77 : பெருங். 1. 41 : 127. [1] " நாற்பான் மரநாவன் மாந்தளிர் முப்பழஞ், சீர்முத்தக் காசுதுவர் ".

[2] கண்டில் வெண்ணெய் - ஓமாலிகையில் ஒன்று; கம்ப. பால. ஆற்றுப். 13.

(பி - ம்.) † 'னன்றி, யந்தரம், ‡ 'கடைகொள'

† ஊறின நன்னீ ருரைத்தநெய் வாசம்
நாறிருங் கூந்த னலம்பெற வாட்டிப்
புகையிற் புலர்த்திய பூமென் கூந்தலை
வகைதொறு மான்மதக் கொழுஞ்சே றூட்டி
அலத்தக மூட்டிய வஞ்செஞ் சீறடி
நலத்தகு மெல்விர னல்லணி செறீஇப்
பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை
அரியகங் காலுக் ‡ கமைவுற வணிந்து
குறங்கு செறிதிரள் ¶ குறங்கினிற் செறித்துப்
பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்
நிறங்கிளர் பூந்துகி னீர்மையி னுடீஇக்
காமர் கண்டிகை தன்னொடு பின்னிய
தூமணித் தோள்வளை தோளுக் கணிந்து
மத்தக மணியொடு வயிரங் § கட்டிய
சித்திரச் சூடகஞ் செம்பொற் கைவளை

---

78. உரைத்த - தேய்த்த. நெய்வாசம் - புழுகுநெய். இவற்றின் (78) ஊறிய நீராலே (79) ஆட்டியென்க.

80. புகையிற்......கூந்தலை - அகிற்புகையால் உலர்த்திய கூந்தலை.

82. அலத்தகம் - செம்பஞ்சி; அரத்தமெனவுமாம்.

83. மெல்விரனல்லணி - கான்மோதிரம்.

84. பரியகம் - காற்சவடி. நூபுரம் - சிலம்பு.

85. அரியகம் - பாதசாலம்.

86. (பா) குறங்குசெறியணி - கவான்செறியாபரணம்.

87. முத்தரை - அரையின் முத்துவடம்; பிறங்கிய முத்து - பெரிய முத்து.

87-8. முப்பத்திரண்டு வடத்தினுற்செய்த விரிசிகையென்கின்ற மேகலையைப் பூந்துகிலுள்ளுடுத்து; உடுத்தல் - சூழுதல். பெரிய முத்து வடம்முப்பத்திரண்டையுடைய அரையிலே பூந்துகிலையுடுத்தென்றுமாம்.

89-90. காமர் கண்டிகை......தோள்வளையென்றது - கழுத்து வடத்தின்பின் தாலிக்கு இரண்டு பக்கமும் பகுத்துப்போந்து வாகுவலயத்தோடு தொடக்கிக் கிடப்பதோர் ஆபரணம்; காமர்கண்டிகையுடனே மணிநெருங்கின தோள்வளையைத் தோளுக்கணிந்தென்றுமாம்.

91. மத்தகமணி - உச்சியிலே வைத்த மாணிக்கம்; மத்தகத்தையுடைய சூடகத்துச்சியிலேயுள்ள மணியொடு வயிரங்கட்டுதலுமாம்.

92. கைவளை - சந்துக்காரை.

---

(மேற்.) 84-5 : நன். மயிலை. 450. அடி, 86. குறங்குசெறி : சீவக. 174, ந.

(பி - ம்.) † 'ஊறிய' ‡ 'கமைவர' ¶ 'குரங்கினுக் கமைத்துப்' § 'குயிற்றிய'

பரியகம் வால்வளை பவழப் † பல்வளை
அரிமயிர் முன்கைக் கமைவுற வணிந்து
வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்
கேழ்கிளர் செங்கேழ் கிளர்மணி மோதிரம்
வாங்குவில் வயிரத்து மரகதத் தாள்செறி
காந்தண் மெல்விரல் கரப்ப வணிந்து
சங்கிலி நுண்டொடர் பூண்ஞாண் புனைவினை
அங்கழுத் தகவயி னாரமோ டணிந்து
‡ கயிற்கடை யொழுகிய காமர் தூமணி
செயத்தகு கோவையிற் சிறுபுற ¶ மறைத்தாங்
கிந்திர நீலத் திடையிடை ‖ திரண்ட
சந்திர பாணி § தகைபெறு கடிப்பிணை
அங்கா தகவயி னழகுற வணிந்து
தெய்வ வுத்தியொடு செழுநீர் வலம்புரி

---

93. பரியகம் [ = பாசித்தாம்மணி]; கைச்சரியுமாம். வால்வளை - சங்கவளை. இதுவும் ஒரோவொன்றிடுவார்கள். பவழப் பல்வளை - கடகவளை.

95. வாளைப்பகுவாய் மோதிரம் - முடக்கு மோதிரம்.

96. கேழ்கிளர் செங்கேழ் கிளர்மணி மோதிரம் - செங்கேழ் மணியையுடைய மோதிரம்; அவை இரத்தினங்கட்டினஅடுக்காழி. முன்னிற்கேழ் மோதிரத்திற்கேற்றுக.

97. வாங்குவில்வயிரம் - நுடங்கின ஒளியையுடைய வயிரம். மரகதத்தாள்செறி - மரகதத்தையுடைய தாள்செறி. இவை மரகத நாயகமாகிய வட்டப்பூ.

98. விரல்கரப்ப - விரல்மறைய.

99. சங்கிலி - வீரச் சங்கிலி. (பா.) நுழைவினை நுண்ஞான் - நுண்ணிய தொழிலையுடைய ஞாண்.

101 - 2. கயிற்கடையொழுகிய கோவை - கழுத்தாபரணங்களிற் கொக்கிவாய் முத்தாரமாகச் செய்து அதிலே நவரத்தினங்களைக் கோத்து முதுகு மறையவிடும் பின்தாலி.

103 - 4. இந்திரநீலக் கடிப்பிணை - நீலக்குதம்பை. இடையிடை திரண்ட சந்திரபாணியென்னும் நாமவேறுபாட்டையுடைய வயிரமுழுதும் கட்டின கடிப்பிணை; இவை இரண்டும் இரண்டு காதில் அணிவன.

106. தெய்வவுத்தி - சீதேவி.

---

அடி, 95-6 : நெடுநல் : 143-4. அடி, 96 : "சுருவேறெழுதிய மோதிரந் தொட்டாள்" (கலித். 84 : 23.)

97 : "மரகதமணித் தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள்" (7 : 1)

101 : மணி. 3 : 135-6. 102 : "சிறுபுறம் புதைப்ப" (மணி. 2 : 51.) அடி, 106 : முருகு. 23; கலித். 96, ந.

(பி - ம்.) † 'பல்வடம்' ‡ 'கயிற்படை' ¶ 'மறைஇ, யிந்திர' ‖ 'சிறந்த' § 'தகைமணிக்'

தொய்யகம் புல்லகந் †தொடர்ந்த தலைக்கணி
மையீ ரோதிக்கு மாண்புற வணிந்து
கூடலு மூடலுங் கோவலற் களித்துப்
பாடமை சேக்கைப் பள்ளியு ளிருந்தோள்
உருகெழு மூதூ ருவவுத்தலை வந்தெனப்
பெருநீர் போகு மிரியன் மாக்களொடு
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டுக்
காண்டல் விருப்பொடு வேண்டின ளாகிப்
பொய்கைத் தாமரைப் புள்வாய் புலம்ப
வைகறை யாமம் வாரணங் காட்ட
வெள்ளி விளக்க நள்ளிருள் கடியத்
தாரணி மார்பனொடு பேரணி யணிந்து
வான வண்கைய னத்திரி யேற
மானமர் நோக்கியும் வைய மேறிக்
கோடிபல வடுக்கிய கொழுநிதிக் குப்பை
‡மாடமலி மறுகிற் பீடிகைத் தெருவின்
மலரணி விளக்கத்து மணிவிளக் கெடுத்தாங்
கலர்கொடி யறுகு நெல்லும் வீசி
மங்கலத் தாசியர் தங்கல னொலிப்ப
இருபுடை மருங்கினுந் திரிவனர் பெயரும்

---

107. தொய்யகம் - தலைப்பாளை. புல்லகம் - தென்பல்லி வடபல்லி. தொடர்ந்த தலைக்கணி - இவை முதலிய தொடர்ந்த தலைக்கணிகளை.

108. மாண்புறவணிந்து - அழகுபெற அணிந்து.

111. உவவுத்தலை - உவவுக்காலம்; ஏழாவது இடப்பொருள் காலத்துடன் மயங்கும்.

112. பெருநீர்போகும் : ஏழாவது இரண்டாவதுடனே மயங்கிற்று. பெருநீர் - கடல். இரியன்மாக்கள் - தீர்த்தமாட விரைந்து போகும் பொழுது விளையாடு சனம்.

113. விளையாட்டு - பிறர்விளையாடல். 115. புள்வாயொலிப்ப.

116. யாமம் - யாமத்தை. 117. வெள்ளியெழுந்த விளக்கம்.

119. வண்கையன் - கோவலன். அத்திரி - கோவேறுகழுதை; அஃதாவது குதிரையில் ஒரு சாதி.

120. வையம் - தேர்; [1] கொல்லாவண்டியுமாம்; கூடாரப்பண்டியுமாம்.

123. மலரணிதல் (பா) அகல் விளங்கியவிடத்திலே.

124. வீசி - தூவி.

---

அடி, 107 : கலித். 97 : 13, ந. அடி, 110. சேக்கைப்பள்ளி : 4 : 28.
[1] 'கோலார் வண்டி' என்பது மலைநாட்டு வழக்கு.
(பி - ம்.) † 'தொடருந்' ‡ 'மாட மறுகிற்'

திருமக ளிருக்கை செவ்வனங் கழிந்து
மகர வாரி வளந்தந் தோங்கிய
நகர வீதி †நடுவட் போகிக்
கலந்தரு திருவிற் புலம்பெயர் ‡மாக்கள்
வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பிற்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்
மாலைச் சேரி மருங்குசென் றெய்தி
¶வண்ண முஞ் சாந்து மலருஞ் சுண்ணமும்
‖பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமும்
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்
காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்
கூவியர் காரகற் குடக்கால் விளக்கமும்
நொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கமும்
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்
§இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்
விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்
மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமும்

---

127. திருமகளிருக்கை - சீதேவி குடியிருப்பான பீடிகைத் தெருவென்க. இவை பட்டினப்பாக்கம்.

129. நகரவீதி - மருவூர்ப் பாக்கவீதி.

132. கொடியெடுத்து நுவலும் - இன்னவுளவென்று கொடிக்கட்டியெடுத்துச் சரக்குகளது நன்மையை அறிவிக்கும்.

133. மாலைச்சேரி - ஒழுங்குபட்ட பரதேசிகள் இருப்பு.

137. காழியர் - பிட்டுவாணிகர். ஊழுறுதல் - குடைதல்.

138. (பா) கூவியர் காரகற் குடைகால் விளக்கு - அப்பவாணிகர் காரகலொன்றத் தண்டைக் கடைந்திட்ட விளக்கு.

139. நொடைநவில்......கடை - பல பண்டமும் விற்பார்கடை.

140. [பாரடைவலையுமாம்]

141. கலங்கரைவிளக்கம் - திக்குக்குறி காட்டிக் கலத்தை அழைக்கிற விளக்கம்.

143. (பா) மொழிபெயர் தேஎத்தோர் - பரதேசிகள். ஒழியாவிளக்கு - விடிவிளக்கு.

---

அடி, 127 : பெருங். 3. 8 : 34; மணி. 3 : 81, 11 : 6. அடி, 128 : 'வாரிவளம்' (குறள், 14). அடி, 130 : சிலப். 5 : 11. அடி, 141 : "இரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி, உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந், துறை" (பெரும்பாண். 349-51). அடி, 132 : பெருங். 1. 35 : 152. அடி, 143 : மணி. 1 : 16.

(பி - ம்.) † 'நடுவுட்' ‡ 'மாக்கள், கலந்திருந் துறையும் விலங்குநீர் வரைப்பின், வேலை' ¶ 'வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்' ‖ 'பண்ணியத் தொகுதியும்' § 'விலங்குநீர்'

கழிபெரும் பண்டங் காவலர் †விளக்கமும்
எண்ணுவரம் பறியா வியைந்தொருங் கீண்டி
இடிக்கலப் பன்ன வீரயிர் மருங்கிற்
கடிப்பகை காணுங் ‡காட்சிய தாகிய
விரைமலர்த் தாமரை ¶வீங்குநீர்ப் பரப்பின்
மருத வேலியின் மாண்புறத் தோன்றும்
கைதை வேலி நெய்தலங் கானற்
பொய்த லாயமொடு பூங்கொடி பொருந்தி
நிரைநிரை $யெடுத்த புரைதீர் காட்சிய
மலைப்பஃ றாரமுங் கடற்பஃ றாரமும்
வளந்தலை மயங்கிய துளங்குகல விருக்கை
அரசிளங் குமரரு முரிமைச் சுற்றமும்
பரத குமரரும் பல்வே றாயமும்
ஆடுகள மகளிரும் பாடுகள மகளிரும்
தொடுகொண் மருங்கிற் §சூழ்தர லெழினியும்
விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்

---

145. எண்ணு வரம்பறியா - அளவறியா.

146. இடிக்கலப்பு - மாவைத்தம்மிற்கலத்தல். அயிர் - நுண்மணல்.

147. சிறுகடுகு காணுங் காட்சியையுடையதாகி.

135 - 50. விளக்கங்களீண்டி நுண்மணலில் வீழ்ந்த வெண்சிறு கடுகைப் பலரும் காணும் காட்சியதாக; இதனாலே தாமரை பூத்த மருத நிலம்போலத் தோன்றும் நெய்தனிலம்; கைதை வேலியையுடைய நெய் தலங்கானல்; விளக்குக்களீண்டிக் கடிப்பகைகாணும் காட்சியையுடைத் தாய் மருதவேலிபோலத் தோன்றுமென்ற இஃது இடத்து நிகழ்பொருளின் வினையை இடத்திலேயேற்றிற்று.

151. பொய்தல் - விளையாட்டு.

150 - 51. விளையாட்டாயத்துடனே சென்று கானலைப் பொருந்தி.

152. (பா) நிரை தலை யெடுத்த - நிரையாக இடத்திற்குவித்த.

153. தாரம் - பலபண்டம்.

(152) நிரையாகக் குவித்த (153) மலைவளமும் அலைவளமுமென்க.

154. துளங்குகலவிருக்கை - கலம் அசைகிற இருக்கை.

158. தோடுகொண் மருங்கு - தொகுதலையுடைய கடற்பக்கம்.

---

அடி, 159-60: "கழாஅர் முன்றுறைக், கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத், தண்பதங்கொண்டு" (அகநா. 376 : 4 - 6)

(பி - ம்.) † 'விளக்கமு, நுண்வினைக் கம்மியர் செய்வினை விளக்கமு, மெண்ணு' ‡ 'காட்சிய தாகி' ¶ 'விளங்குநீர்ப்' $ 'யடுத்த' § 'சூழ்கா,

தண்பதங் கொள்ளுந் தலைநாட் போல
வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றிக்
கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்
றிடங்கெட வீண்டிய நால்வகை வருணத்
தடங்காக் கம்பலை யுடங்கியைந் தொலிப்பக்
கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழைச்
சிறைசெய் வேலி †யகவயி னாங்கோர்
புன்னை நீழற் புதுமணற் ‡பரப்பில்
ஓவிய வெழினி சூழவுடன் போக்கி
விதானித்துப் படுத்த வெண்கா லமளிமிசை
வருந்துபு நின்ற வசந்த மாலைகைத்
திருந்துகோ னல்லியாழ் செவ்வனம் வாங்கிக்
கோவலன் றன்னொடுங் கொள்கையி னிருந்தனள்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்.

---

160. தண்பதங்கொள்ளும் - புதுப்புனலாடும்.

158 - 65. எழினிக்கண் உண்டாகிய வேறுவேறு கம்பலையானது வீறு பெறத்தோன்றி அடங்காக் கம்பலையோடு கூடி ஒலியாநிற்கவென்க.

163. கடற்கரையை மெலிவிக்குமென்க.

169. ஓவியவெழினி - சித்திரப்பணி யெழுதின திரை; ஆவது ¶மசகாரி.

171. வருந்துபுநின்ற - வழிவந்ததனால் வருந்திநின்ற. வசந்தமாலை-மாதவியின் சேடி.

172. செவ்வனம் [—[1] வாதசெபம்.]

(75) ஊடற் கோலமோடிருந்தவனுவப்பக் (109) கூடலும் ஊடலு மளித்துப் (110) பள்ளியுளிருந்தோள் (111) உவவுத்தலைவந்ததாகக் (113) கடல் விளையாடல் (114) காண்டல்வேண்டி (118) அணிந்து (120) வையமேறித் (122) தெருவினைக் (127) கழிந்து (129) நடுவட்போகி (133) எய்திக் (150) கானலில் (151) ஆயமொடுபொருந்திப் பின் (168) மணற்பரப்பிலே (170) அமளிமீதே (172) யாழ்வாங்கிக் (173) கோவலன் றன்னோடிருந்தாளெனக் கூட்டுக.

---

அடி, 160 : “தண்பதங்கொள்விழவர்” (7 : 4). அடி, 162 : முருகு. 283 ; புறநா. 22. அடி, 169 : பெருங். 4. 14 : 3.

[1] வாதசெபம் - காற்றுவேகம்.

(பி - ம்.) † ‘யகவயிற் பூத்த’ ‡ ‘பரப்பி, யோவிய’ ¶ ‘மசகரி’

### 1 - 4. வெள்ளி மால்வரை......விஞ்சை வீரன்

(இ - ள்.) வெள்ளியம்பெருமலைக்கண் அகன்றுயர்ந்த வடசேடிக் கண்ணே மதுவொழுக மலர்கின்ற பூக்களையுடையதோர் பொழிலிடத்தே கரிய கயல்போலும் நெடிய கண்களையுடைய தனது காதலியுடனே யிருந்து காமக்கடவுட்கு விழவை விரும்பிச்செய்வானோர் விச்சாதர வீரனென்க.

வியன்பெருஞ்சேடி - அகன்றுயர்ந்த வடசேடி. அவிழ்பூ : வினைத் தொகை. காமக்கடவுள் - காமதேவன். விருந்தாட்டு - நித்தல்விழா வன்றி யாண்டுதோறும் விரும்பும் விழவு.

காதலி தன்னொடு அயருமென்க.

### 5 - 6. தென்றிசை...........நாளிதுவென

(இ - ள்.) வீரன், பங்குனித் திங்கள் இருபத்தொன்பதிற் சித்திரை நாளிலே அவ்விழாமுடிதலின், தென்றிசைப்பக்கத்து ஒரு வளவிய நக ரிடத்து இந்திரவிழவிற்குக் கால்கொண்டு கொடியெடுக்கும்நாள் மேலை மாதத்து இந்தச் சித்திரை காணெனச் சொல்லியென்க.

இதுவெனச் சுட்டினான், அன்றும் சித்திரையாகலின். ஈண்டுத் திங் களும் திதியுங் கூறியது என்னையெனின், கோவலனும் மனைவியும் ஊரி னின்றும் போந்த திங்களும் திதியும் வாரமும் நாளும் வழிச்செலவும் ஒழிவும், மதுரையிற் சென்று புக்கு இவன் இறந்துபட்ட திங்கள் முதலா யுள்ளவற்றோடு மாறுகொள்ளாது முடிதற்கெனக்கொள்க. அது யாண்டு மோவெனின் வேனிற்காதையினும் நாடுகாண்காதையினும் காடு காண்காதை கட்டுரைகாதை யென்னும் இவற்றுள்ளுமெனக் கொள்க.

### 7 - 13. கடுவிசை யவுணர்......இடனுங் காண்கும்

(இ - ள்.) மிக்க வேகத்தினையுடைய அசுரர் கூட்டமாகவந்து நெருங்கி இந்திரனது நகரைக்காத்த புலிபோன்ற வலியையுடைய முசுகுந்தனுக்குத் தோற்றுப் பின்பு தம்மில் ஒத்துக்கூடி அம்முசுகுந் தனது நெஞ்சமும் இருள் கூரும்படி பிரயோகித்த அத்திரத்தைப் போக் கிய பெரிய பூதத்தை அவ்வண்ணல்பொருட்டு இந்திரன் ஏவப்போந்து அப்புகாரிலிருந்து அது பலியுண்ணும் நாளங்காடியிடமும் காண்பே மென்றானென்க.

இதனை, "முன்னாளிந்திரன்..........., காவ லழித்துச் சேவல்கொண் டெழுந்த, வேட்கை யமுத மீட்க வெழுவோன், இந்நகர் காப்போர் யாரென நினைதலும், நேரிய னெழுந்து நீவரு காறும், தார்கெழு மார்ப தாங்கலென் கடனென, உவந்தனன் கேட்டுப் புகழ்ந்தவிப் பூதம், நின் வழி யாகென நிறீஇப்பெயர்வுழிக், கடுவிசை யவுணர் கணங்கொண் டீண்டிப், பொருதுபோர் தொலைந்தன ராகிப் பெரிதழிந், தாழ்ந்த நெஞ் சிற் சூழ்ந்தனர் நினைத்து, வஞ்ச மன்றிது வஞ்சத் தல்லது, வேற லரி தெனத் தேறினர் தேறி, வளைத்துத் தொடுத்த வல்வா யம்பின், அயின் முகங் கான்ற வாரிருள் வெயிலோன், இருகணும் புதையப் பாய்தலி னொருகணும், நெஞ்சங் காண நிற்ப நின்ற, வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்" என்பதனானுமுணர்க.

என்சொல்லியவாறேவெனின், அங்ஙனம் விட்ட அம்பு கண்ணையும் மனத்தையும் புதைத்தலாற் போர்த்தொழிலொழிந்து நின்ற முசுகுந்தற்கு அவ்விருளுடைதற்குக் காரணமாயதோர் மந்திரத்தையருள அதனான் வஞ்சம் கடிந்து அவுணரைக் கொன்றுகுவித்து நின்றானைக் கண்ட இந்திரன் அவரை எங்ஙனம் கொன்று குவித்தாயென்றாற்கு அவன் இப்பூதத்தின் செயலெனக்கேட்ட இந்திரன் அப்பூதத்தை அவன் பொருட்டு மெய்காவலாக ஏவுதலின் ஆங்கு நின்றும் போந்து ஈங்குப் புகாரினுள் இருந்து பலியுண்ணும் நாளங்காடியிடமும் காண்பேமென்பதாம்.

ஏவப் போந்தென ஒருசொல் வருவிக்க.

கொடுவரி - புலி. ஊக்கம் - வலி. கோநகர் - அமராவதி. மன்னன் - முசுகுந்தன். நெஞ்சிருள்கூர - உள்ளக்கண்ணையும் அவ்விருள் மறைப்ப; சிறப்பும்மை தொக்கது. நிகர்த்து - தம்மிலொத்துக்கூடி. வஞ்சம் - தாமதாத்திரம்; ஆவது அந்தகாரத்தைப் பண்ணுவதோர் அம்பு. பெயர்த்த - போக்கின. பூதம் - பூதத்தை. அண்ணற்கு - அண்ணல்பொருட்டு. தேவன் - இந்திரன்.

தேவர் பாடமாயின் ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியென்க. காண்கும் : உளப்பாட்டுத்தன்மை : உம் : ககரமூர்ந்துவந்தது.

கணங்கொண்டு ஈண்டித் தொலைந்தனராகி நிகர்த்துவிட்ட வஞ்சமென்க.

## 14 - 7. அமராபதி.........காண்குதும்

(இ - ள்.) முன் அசுரரால் வந்த இடர்நீங்க அமராவதியைக் காக்கலான் அவ்விந்திரனாற்பெற்று இவன் மரபிலுள்ளாராலே கொண்டுவந்து பொய்க்கும் பகுதியின்றிப் பூமியிலே நிலைபெறவைத்த அழகுமிக்க சிறப்பினையுடைய ஐந்துவகைப்பட்ட மன்றங்களின் பெருமையையும் காண்பேமென்றானென்க.

அமரனின் - அமரனாலே. தமர் - முசுகுந்தன் முன்னோர்; அன்றிக் கரிகாலன் மரபிலுள்ளாரெனினும் அமையும். பொய்வகையின்றி - இம் மன்றிற்கு ஆண்டுள்ள செய்கை ஈண்டும் பொய்த்தலின்றி. புணர்த்த - அங்ஙனம் கொடுத்த இந்திரன்காலமன்றிப் பின்னுள்ள காலங்களும் புணரும்படி செய்த. ஐவகைமன்றம் - முன்னர் இந்திரவிழவூரெடுத்த காதையிற் கூறிய மன்றங்கள். அமைதி - பெருமை.

## 18 - 25. நாரதன் வீணை......ஆடலும் காண்குதும்

(இ - ள்.) யாழாசிரியனாகிய நாரதமுனிவன் யாழின் ஏழிசையின்பமும் தெரியப்பாடும் பாடலையும், தோரியமடந்தை வாரம்பாடலையும், நாடகத்தினையும் உருப்பசி இந்திரனுடைய செவியாரப்பாடிக் கண்ணார ஆடுதலும் விரும்பாளாதலான் வீணை மங்கலமிழக்க; மண்மிசைத் தங்குக; இவள் மண்ணிற்போய்ப் பிறக்கவெனச் சபித்தலின் அதனைப் பெற்றுவந்து பிறந்த மங்கையாகிய மாதவி வழியிற்றோன்றிய அரவு போலும் அல்குலையுடைய மாதவியுடைய ஆடலையும் அவ்விடத்துக் காண்பேமென்றானென்க.

தோரிய மடந்தையென்பாள்-ஆடிமுதிர்ந்தாற் பின்பு ஆடன்மகளிர் காலிற்கு ஒற்றறுத்துப்பாடுமவள்; என்னை? "இந்நெறி வகையால்......

தோரிய் மகளே" எனவும், "தலைக்கோ லரிவை.........தோரிய மகளே" (3 : 133-4, அடியார்.) எனவும் கூறியவாற்றான் அறிக. வாரம் - ஒரொற்று வாரமு மீரொற்றுவாரமுமென்னும் செய்யுள். அவை தாளத்து ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் பெற்றுவரும்.

உருப்பசியின் சாபவரலாறு என்னையோவெனின், [1]"வயந்த மாமலை நயந்த முனிவரன், எய்திய வவையி னிமையவர் வணங்க, இருந்த விந்திரன்றிருந்திழை யுருப்பசி, ஆட னிகழ்க பாடலோ டங்கென, [2] ஓவி யச் சேனன் மேவின னெழுந்து, கோலமுங் கோப்பு நூலொடு புணர்ந்த, இசையு நடமு மிசையத் திருத்திக், கரந்துவர லெழினியொடு புகுந்த வன் பாடலிற், பொருமுக வெழினியிற் புறந்திகழ் தோற்றம், யாவரும் விழையும் பாவனை யாகலின், நயந்த காதற் சயந்தன் முகத்தில், நோக் கெதிர் நோக்கிய பூக்கமழ் கோதை, நாடிய வேட்கையி னுடைனெகிழப், பாடன் முதலிய பல்வகைக் கருவிகள், எல்லா நெகிழ்தலிற்றெல்லா முனி வரன், ஒருதலை யின்றி யிருவர் நெஞ்சினும், காமக் குறிப்புக் கண்டனன் வெகுண்டு, சுந்தர மணிமுடி யிந்திரன் மகனை, மாணு விறலோய் வேணு வாகென, விட்ட சாபம் பட்ட சயந்தன், † சாப விடையரு டவத்தோய் நீயென, மேவினன் பணிந்து மேதக வுரைப்ப, ஓடிய சாபத் துருப்பசி தலைக்கட்டும், காலைக் கழையு நீயே யாகி, மலையமால் வரையின் வந்து கண் ணுற்றுத், தலையரங் கேறிச் சார்தியென்றவன், கலக நாரதன் கைக் கொள் வீணை, அலகி லம்பண மாகெனச் சபித்துத், தந்திரி யுவப்பத் தந்திரி நாரிற், பண்ணிய வீணை மண்மிசைப்பாடி, ஈண்டு வருகெனப் பூண்ட சாபம், இட்டவக் குறுமுனி யாங்கே, விட்டன னென்ப வேந் தவை யகத்தென்" என்பதனானறிக.

இதனாற் சொல்லியது : நாரதன் கலகப்பிரியனாதலால் தனது யாழைப் பகை நரம்புட இசைத்தலின், தான் இங்ஙனமிசைத்தற்குக் காரணமின்றாகவும் இவள் கலங்கினமை தான் நமக்கறிவித்து நம்மால் இவளை முனிவிப்பான் வேண்டி நம்மை மதியானாயினானென அவ ளொடும் சாபமிடுகின்றவன் வீணை மங்கலமிழக்க ; மண்மிசைத் தங்குக; இவள் மண்ணிற்போய்ப் பிறக்க வெனச் சாபம் இட்டானென்பது. வீணை மண்மிசைத் தங்குகவென்னவே இவனை நீங்காவரத்தின் வந்ததாக லான் இவனும் மண்மிசைத்தங்குக வென்பதாயிற்று ; எனவே இவன் மண்ணிற் பிறவானாதல் உணர்க.

இவ்வீணையை உருப்பசி கையில் வீணையென்பாருமுளர் : அது பொருத்தமின்று. அங்ஙனம் இவள் மண்மிசைப் பிறக்கவெனச் சபித் தலின் அதனைப்பெற்று வந்துபிறந்த மங்கையாகிய மாதவிவழிப் பெய ராம் அவ்வழியிற்றோன்றிய அரவுபோலுமல்குலையுடைய மாதவியுடைய

---

[1] வயந்தமாமலை - பொதியின்மலை ; வயந்தம் - தென்றல். [2] ஓவியச் சேனன் - சித்திரசேனனென்னும் கந்தருவன்.

(பி - ம்.) † 'சாபவிடை யெமக்கரு டவத்தோ யென்று'

ஆடலையும் அவ்விடத்துக் காண்பேமென்றானென்க. ஈண்டுச் சயந்தன் சாபமும் விடையும் கூறுதது, அரங்கேற்றுகாதைக்கண், "இந்திர சிறுவனொடு, தலைக்கோற்றானத்துச் சாப நீங்கிய" (2-3) என்றாராகலின் எனக்கொள்க. இனி வீணையைச் சாரீரவீணையாக்கி மங்கலமிழப்ப என்பதற்கு இவள் இக்கடவுள்யாக்கையொழிந்து மக்கள் யாக்கையில் தங்குகவெனச் சபித்தானென்பதும் கொள்க. இனி உருப்பசிக்குச் சயந்தன்மேற்சென்ற காதன்மை புலவர் மேற்செல்லும் கண்ணோட்ட மென்பார்க்கு அங்ஙனம் புதல்வரைநோக்கி மகிழ்வார்க்கு அன்பு சிறத்த லொழிந்து நிலைகலங்கி ஆடல் பாடல் நெகிழ்தலும் மூன்றுகாலமும் உணர்ந்த முனிவன் அதனை அறியாது சபித்தானென்றலும் பொருந்தா மையின் அங்ஙனம் உரைத்தல் குற்றமென்க. மண்மிசைத் தங்குக வென்றதை வீணைக்கும் ஏற்றுக.

## 26 - 7. துவரிதழ்......வணங்குதும் யாமென

(இ - ள்.) (1) வடசேடியிற் (2) பொழிற்கண் கடவுட்குக் (3) காரிகை யோடு (4) விருந்தாட்டயரும் வீரன் (6) இதுவெனக்கூறி (13) இடனுங் காண்குதும்; (17) அமைதியுங் காண்குதும்; (25) ஆடலுங்காண்குது மாதலால், துடியிடையாய்! யாமும் தலைவனை வணங்குவோம்; வருவா யாக வெனச் சொன்ன அப்பொழுதேயென்க.

துவர் - செம்மைநிறம். ஓய், "ஆயென் கிளவியு மவற்றொடு கொள் ளும்" (தொல். வினை. 15) என்பதனான் முடிந்ததாம். ஏகாரம்: இசை நிறை. யாமுமென்னும் உம்மை தொக்கது. இனி எனவென்பதனை "எனவெனெச்சம் வினையொடு முடிமே" (தொல். எச்ச. 42) என்பத னான், என்று சொல்லிப் போந்தெனச் சொல்லெச்சமாக்கி முடிப்பினும் அமையும்.

## 28 - 34. சிமையத் திமையமும்...விழாக் காண்போன்

(இ - ள்.) அவன், கொடுமுடியையுடைய இமயமலையையும் வளவிய நீரையுடைய கங்கையாற்றினையும் அவந்தியென்னும் பதியினையும் விந்த மலைசூழ்ந்த அடவியினையும் வேங்கடமென்னும் மலையினையும் நிலம் பொருத விளையுளினையுடைய காவிரி நாட்டினையும் தன்காதலிக்கு இஃது இன்னது இஃது இன்னதென்று காட்டி ஆண்டாண்டுள்ள பயன் நுகர் தற்கு வேண்டு நாள்தங்கிப் பின்பு சிலநாளிற் படப்பையையுடைய புகா ரென்னும் நகரிடத்தே வந்து முன்பு சொன்ன முறைமையால் இடனும் அமைதியும் இவையென்று தொழுதனளாய்த் தன் காதலிக்குக் காட்டி வளவிய தேவரும் மகிழும் மூதூர்க்கண் நடக்கின்ற விழவைத் தானும் காண்கின்றவனென்க.

சிமையம் - உச்சி. அடவி - காடு. தாங்கா விளையுள் - நிலம் பொருத விளைத்தல்; "வேலியாயிரம் விளையுட்டாக" (பொருந. 246-7) என்றாராகலின். விளைத்தலென்பது விளையுளென மருவிற்று; புலிப் பாய்த்துள், தேரைப்பாய்த்துளென்பனபோல். படப்பை - தோட்டக்

கூறு. புகார் : ஆகுபெயர். மணிவிழாப் பாடமாயின், அழகிய விழா வென்க. காண்போன் : தொழிற்பெயர்.

35. மாயோன் பாணியும்—(இ - ள்.) திருமாலைப் பரவுந் தேவபாணியும்.

இனிப் பதினோராடல் கூறுவான் எடுத்துக்கொண்டார் ; அவற்றுள், கொடுகொட்டியென்பது இத்தன்மைத்தென்கின்றது.

மாயோன் - திருமால். பாணி - தேவபாணி. பாணியென்றது - பாட்டு. அது தேவர்ப்பராவுதலாயிற்று ; என்னை ? "ஏனை யொன்றே, தேவர்ப்பராவுதன் முன்னிலைக் கண்ணே" (தொல். செய். 138) என்றாராகலின். அது முத்தமிழ்க்கும் பொது. அஃது இயற்றமிழில் வருங்காற் கொச்சகவொரு போகாய் வரும். வரும்வழியும் பெருந்தேவபாணி, சிறுதேவபாணியென இருவகைத்தாய் வரும். என்னை ? "கூறிய வுறுப்பிற் குறைபாடின்றித், தேறிய விரண்டு தேவ பாணியும்" என்றாராகலின். அங்ஙனம் வரும் தரவினை நிலையெனவடக்கி முகத்திற்படுந் தரவினை முகநிலையெனவும், இடைநிற்பனவற்றை இடைநிலையெனவும், இறுதியினிற்பனவற்றை முரி நிலையெனவும் பரவுதற் பொருண்மையாற் பெயர் கொடுத்தார் [1] செய்யுளியலின் கண்ணுமெனக் கொள்க.

இனி, இசைத் தமிழில் வருங்கால், முகநிலை கொச்சகம் முரியென்ப ஒரு சாராசிரியர். அன்றி இசைப்பா, இசை யளவுபாவென்னும் இரு பகுதியுள் இஃது இசைப்பாவின் பகுதியென்ப. அது பத்துவகைப்படும் : செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகு மண்டிலமென. என்னை? "செந்துறை வெண்டுறை தேவபா ணிய்யிரண்டும், வந்தன முத்தகமே வண்ணமே - கந்தருவத், தாற்றுவரி கானல் விரி முரண் மண்டிலமாத், தோற்று மிசையிசைப்பாச் சுட்டு" என்றார் இசைநுணுக்கமுடைய சிகண்டியாரென்க.

இன்னும் சுத்தம் சாளகம் தமிழென்னும் சாதியோசைகள் மூன்றினுடனும் [2] கிரியைகளுடனும் பொருந்தும் இசைப்பாக்கள் ஒன்பது வகையென்ப ; அவை :—சிந்து, திரிபதை, சவலை, சமபாதவிருத்தம், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, வண்ணமெனவிவை. என்னை ? "செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை, தப் பொன்று மில்லாச் சமபாதம் - மெய்ப்படியும், செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப, பைந்தொடியா யின்னிசையின் பா" என்றார் பஞ்சமரபுடைய அறிவனாரென்னுமாசிரியரென்க.

இனி, நாடகத் தமிழில் தேவபாணிவருங்காற் பெருந்தேவபாணி பலதேவரையும், சிறுதேவபாணி வருணப்பூதரையும் மூவடிமுக்கால் வெண்பாவால் துதிக்கின்றுழி, அவரணியும் தாரும் ஆடையும் நிறனும் கொடியும் துதித்து அவராற் பெறவேண்டுவனவும் துதிக்கப்படும் ; என்னை ? "திருவள ரரங்கிற் சென்றினி தேறிப், பரவுந் தேவரைப் பரவுங் காலை, மணிதிகழ் நெடிமுடி மாணிபத் திரனை, அணிதிகழ் பளிங்கி னொளியினை யென்றும், கருந்தா துடுத்த கடவுளை யென்றும், இரும்பனைத் தனிக்கொடி யேந்தினை யென்றும், கொடுவாய் நாஞ்சிற்

---

[1] தொல். செய். 132, பேர். [2] கிரியை - தாளக்கிரியை ; படுத்தல் முதலியன.

படையோ யென்றும், கடிமலர் பிணைந்த கண்ணியை யென்றும், சேவடி போற்றிச் சிலபல வாயினும், மூவடி முக்கால் வெள்ளையின் மொழிப" என்றார் மதிவாணனாரென்க. இவை ஈண்டுரைப்பிற் பெருகும். பிறவும் வந்தவழிக் காண்க.

இனி, முற்கூறிய பதினோராடற்கும் முகநிலையாகிய தேவபாணி மாயோன்பாணி. அது வருமாறு: "மலர்மிசைத் திருவினை வலத்தினி லமைத்தவன் மறிதிரைக் கடலினை மதித்திட வடைத்தவன், இலகொளித் தடவரை கரத்தினி லெடுத்தவ னினநிரைத் தொகைகளை யிசைத்தலி லழைத்தவன், முலையுணத் தருமவ ணலத்தினை முடித்தவன் முடிகள்பத் துடையவ னுரத்தினை யறுத்தவன், உலகினைத் தையுமொரு பதத்தினி லொடுக்கின ஞெளிமலர்க் கழறரு வதற்கினி யழைத்துமே". இஃது எண்சீரான்வந்த கொச்சகவொருபோகு. பண் - கௌசிகம். தாளம் இரண்டொத்துடைத்தடாரம். சிறுதேவபாணி ஈண்டுக் கூறிற்றிலரெனி னும் இனம்பட்டு வருதலிற் கூறல்வேண்டுவதாயிற்று. அது வருமாறு: "வண்ணமலர்ச் சரங்கோத்து மதனவேள் மிகவெய்யக், கண்ணள வோர் புலனல்லாக் கனல்விழியா லெரித்தனையால், எண்ணிறந்த தேவர் களு மிருடிகளு மெழுந்தோட, ஒண்ணுதலாள் பாகங்கொண் டொரு தனியே யிருந்தனையே" என்பது.

இதனுள் இறைவனை முற்கூறாது மாயோனை முற்கூறிய தென்னையோவெனின், மாயோன் காவற்கடவுளாய் அருளை அருத்தலா னென்க.

35-6. வருணப் பூதர் நால்வகைப் பாணியும்—

(இ-ள்.) வருணப்பூதர் நால்வரையும் பரவும் நால்வகைத் தேவ பாணியு மென்றவாறு.

அவை வருமாறு: "அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக, வேந்தன் வேள்வியோ டியாண்டுபல வாழ்க, வாணிக ரிருநெறி நீணிதி தழைக்க, [1]பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக, அரங்கியற் கூத்து நிரம்பிவினை முடிக, வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொலென், றிப்படிப் பலிகொடுத் திறைவனிற் றெருக்குச், செப்பட வமைத்துச் செழும்புகைகாட்டிச், சேவடி தேவரை யேத்திப் பூதரை, மூவடி முக்கால் வெண்பா மொழிந்து, செவியிழுக் குறுமை வேந்தனை யேத்திக், கவியொழுக் கத்து நின்றுழி வேந்தன், கொடுப்பன கொடுப்ப வடுக்கு மென்ப" என்றார் மதிவாணனாரென்க.

36-7. நலம்பெறு......பின்னர்—(இ-ள்.) பல்லுயிர்களும் தன்கலையால் நன்மைபெறுந் தன்மையையுடைய வானின் ஊர்ந்து செல்லும் மதியமும் பாடியென்க.

எனவே சந்திரனைப்பாடும் தேவபாணியென்பதாயிற்று. ஆதித் தனை முற்கூறாதது இறைவனை முற்கூறியவாற்றாற் கொள்க. இதற்குச் செய்யுள்: "குரைகடன் மதிக்கு மதலையை குறுமுய லொளிக்கு மரணினை, இரவிரு ளகற்று நிலவினை யிறையவன் முடித்த வணியினை, கரியவன் மனத்தி [2]னுதிதனை கயிரவ மலர்த்து மவுணனை, பரவுநர் தமக்கு நினதிரு பதமலர் தபுக்க வினையையே" எனவரும்; பண்ணும் தாளமும் முற்கூறியன.

---

[1] 5 : 22-3, அடியார். மேற். [2] உதிதன் - தோன்றியவன்; சீவக. 23, ந.

38. சீரியல் பொலிய நீரல நீங்க—(இ - ள்.) அவதாளம் நீங்கத் தாள இயல்பு பொலிவுபெறவென்றவாறு.

இதனை நீரலநீங்கச் சீரியல் பொலியவென மாறுக. அன்றி அவ த்தாளம் நீங்குதலால் தாளவியல்பு பொலிவுபெறுநிற்கவெனவுமாம். இவற்றை மேல் மாதவிக்கு அடையாக்கி முடிக்க.

இனி, பதினோராடல் கூறுவார் :—அவை இருவகைப்படும் : [1] "அல் லியங்கொட்டி.....ஆறு"; [2] "துடிகடையம்.....ஐந்து" என்பவாகலின்.

## 39 - 43. பாரதியாடிய......கொடுகட்டி யாடலும்

பாரதி - பைரவி; அவளரங்கம் - சுடுகாடு; அவளாடுதலாற் பெற்ற பெயர்.

(இ - ள்.) தேவர் புரமெரியவேண்டுதலால் வடவையெரியைத் தலை யிலேயுடைய பெரியவம்பு ஏவல்கேட்டவளவிலே அப்புரத்தில் அவுணர் வெந்து விழுந்த வெண்பலிக்குவையாகிய பாரதியரங்கத்திலே உமைய வள் ஒரு கூற்றினளாய் நின்று பாணி தூக்குச் சீரென்னும் தாளங்களைச் செலுத்தத் தேவர் யாவரினுமுயர்ந்த இறைவன் சயானந்தத்தாற் கைகொட்டி நின்று ஆடிய கொடுகொட்டியென்னுமாடலும்.

முகம் - தலை. பேரம்பு - பரமபுருடன். ஏவல்கேட்ப - சுட்டவளவிலே. திரிபுரம் தீமடுத்தெரியக்கண்டு இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலிற் கொடுமையுடைத்தாதல்நோக்கிக் [3]கொடுகொட்டியென்று பெயர் கூறினார்.

[4] "கொட்டி.........நான்காமெனல்".

## 44 - 5. தேர்மு னின்ற......பாண்டரங்கமும்

(இ - ள்.) வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரிபூட்டி நெடும் புறமறைத்து வார்துகின்முடித்துக் கூர்முட்பிடித்துத் தேர்முனின்ற திசைமுகன் காணும்படி பாரதிவடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக்கூத்தும்.

'நின்று' பாடமாயிற் காண நின்றாடியவென்க; [5] "பாண்டரங்கம்... ஆறுமெனல்".

## 46 - 8. கஞ்சன்......தொகுதியும்

(இ - ள்.) அஞ்சனவண்ணன் ஆடிய ஆடல்பத்துள், கஞ்சன்வஞ் சத்தின் வந்த யானையின்கோட்டை ஒசித்தற்கு நின்றாடிய அல்லியத் தொகுதியென்னும் கூத்தும்,

---

1, 2, 4, 5, 3 : 14-5, அடியார். மேற்.

[3] கொடுங்கொட்டி கொடுகொட்டியென விகாரமாயிற்றென்பர் நச்சி னார்க்கினியர்; கலித். கடவுள்.

தொகுதியென்றார் முகம் மார்பு கை கால்களின் வட்டணை அவிநய முதலியன இருந்தும் தொழில் செய்யாது நிற்றலின்; "ஆடலின்றி நிற்பவையெல்லா, மாயோ ளாடும் வைணவ நிலையே" என்றார். அல்லிய மென்பதனை அலிப்பேடென்பாருமுளர்; [1] "அல்லியம்.....ஆறுமெனல்."

48 - 9. அவுணற் கடந்த மல்லி னாடலும்

(இ - ள்.) வாணனாகிய அவுணனை வேறற்கு மல்லனாய்ச் சேர்ந்தாரிற்சென்று அறைகூவி உடற்கரித்தெழுந்து அவனைச் சேர்ந்தவளவிலே சடங்காகப்பிடித்து உயிர்போக நெரித்துத் தொலைத்த மல்லாடலும்,

அவுணற்கடந்த - அவுணனெண்ணத்தைக் கடந்த; "நெடியவன்......ஐந்தாம்."

49 - 51. மாக்கட னடுவண்......ஆடிய துடியும்

(இ - ள்.) கரிய கடலினடுவுநின்ற சூரனது வேற்றுருவாகிய வஞ்சத்தையறிந்து அவன் போரைக்கடந்த முருகன் அக்கடனடுவண் திரையே அரங்கமாக நின்று துடிகொட்டி யாடிய துடிக்கூத்தும்,

நிகர்த்து - நேரொத்து; [3] "துடியாடல்.........ஐந்தாம்."

52 - 3. படைவீழ்த் தவுணர்......ஆடிய குடையும்

(இ - ள்.) அவுணர் தாம் போர் செய்தற்கு எடுத்த படைக்கலங்களைப் போரிற்கு ஆற்றாது போகட்டு வருத்தமுற்றவளவிலே முற்கூறிய முருகன் தன் குடையை முன்னே சாய்த்து அதுவே ஒருமுகவெழினியாக நின்றாடிய குடைக்கூத்தும்,

பையுளெய்த ஆடியவெனவியையும்; [4] "அறுமுகத்தோன்...எனல்."

54 - 5. வாணன் பேரூர்......ஆடிய குடமும்

(இ - ள்.) காமன் மகன் அநிருத்தனைத் தன்மகள் உழை காரணமாக வாணன் சிறை வைத்தலின், அவனுடைய சோவென்னும் நகர வீதியிற் சென்று நிலங்கடந்த நீனிறவண்ணன் குடங்கொண்டாடிய குடக்கூத்தும்,

இது பஞ்சலோகங்களாலும் மண்ணாலும் குடங்கொண்டாடினது; [5] "குடத்தாடல்......ஆய்ந்து." இது விநோதக்கூத்து ஆறினுளொன்றென்றுணர்க; என்னை? "பரவிய சாந்தி யன்றியும் பரதம், விரவிய விநோதம் விரிக்குங் காலைக், குரவை கலிநடங் குடக்கூத் தொன்றிய, கரண நோக்குத் தோற்பா வைக்கூத், தென்றிவை யாறு நகைத்திறச் சுவையும், வென்றியும் விநோதக் கூத்தென விசைப்ப" என்றாராகலின்.

56 - 7. ஆண்மை......பேடி யாடலும்

(இ - ள்.) ஆண்மைத் தன்மையிற்றிரிந்த பெண்மைக் கோலத்தோடு காமன் ஆடிய பேடென்னுமாடலும்,

---

[1], [2], [3], [4], [5], 3 : 14, அடியார். மேற்.

ஆண்மைத்தன்மையிற் றிரிதலாவது விகாரமும் வீரியமும் நுகரும் பெற்றியும் பத்தியும் பிறவுமின்றுதல்; ஆண்மை திரிந்தவென்பதனால் தாடியும் பெண்மைக் கோலத்தென்பதனால் முலை முதலிய பெண்ணுறுப் புப் பலவுமுடையது ஆண்பேடென்று பெயர்பெறுமெனக்கொள்க; என்னை? "சுரியற் றாடி மருள்படு பூங்குழற், பவளச் செவ்வாய்த் தவள வொண்ணகை, ஒள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங் கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற், காந்தளஞ் செங்கை யேந் திள வனமுலை, அகன்ற வல்கு லந்நுண் மருங்குல், இகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணில மளந்தோன் மகன்முன் றாடிய, பேடிக் கோலத்துப் பேடகாண் குநரும்" (மணி. 3 : 116-25) என்றாராகலின்.

இது தனதுமகன் அநிருத்தனைச் சிறைமீட்டுக் காமன் சோநகரதி தாடியது; [1] "காமன தாடல்......... நான்கு.

## 58 - 9. காய்சினவவுணர்......[2]மரக்காலாடலும்

(இ - ள்.) காயும் சினத்தையுடைய அவுணர் வஞ்சத்தாற் செய்யும் கொடுந்தொழிலைப் பொருளாய் மாயோளால் ஆடப்பட்ட மரக்காலென் னும் பெயரையுடைய ஆடலும்,

மாயவள் - துர்க்கை. அவுணர் உண்மைப்போரான் வேறலாற்றாது வஞ்சத்தான் வேறல்கருதிப் பாம்பு தேள் முதலியவாய்ப் புகுதலை யுணர்ந்து அவள் அவற்றை உழக்கிக் களைதற்கு மரக்கால் கொண்டு ஆடுதலின், மரக்காலாடலாயிற்று; [3] "மாயவ ளாடல்......... நான்கு."

## 60 - 61. செருவெங் கோலம்......ஆடிய பாவையும்

(இ - ள்.) அவுணர் வெவ்விய போர்செய்தற்குச் சமைந்த போர்க் கோலத்தோடு மோகித்து வீழும்படி கொல்லிப்பாவைவடிவாய்ச் செய் யோளாகிய திருமகளால் ஆடப்பட்ட பாவையென்னுமாடலும்,

கோலநீங்கவென்றார், அதற்கேற்பப் பொராது அஞ்சி அவிதலின்; [4] "பாவை.........யொன்று"

## 62 - 3. வயலுழை......ஆடிய கடையமும்

(இ - ள்.) வாணனுடைய முற்கூறிய பெரியநகரின் வடக்குவாயிற் கண் உளதாகிய வயலிடத்தேநின்று அயிராணியென்னுமடந்தை ஆடிய கடைய மென்னுமாடலும்,

அயிராணி - இந்திராணி. கடையம் - கடைசிக்கூத்து; [5] "கடையம் ...ஆறு."

## 64 - 71. அவரவ ரணியுடன்...விஞ்சைய னன்றியும்

(இ - ள்.) அங்ஙனங் கூறப்பட்ட அவரவருடைய அணிகளுடன் அவ ரவருடைய கொள்கையாற் பொருந்தி நின்றாடலும் வீழ்ந்தாடலுமாகிய அவரவரை நீங்காத மரபினையுடைய பதினொருவகைப்பட்ட ஆடலும்

---

1, 3, 4, 5, 3 : 14, அடியார். மேற். 2 "மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை யாடும்போலும்" (12 : 'ஆய்பொன்') என்பர்.

அவ்வாடல்கட்கேற்ற பாடல்களின் வேறுபாடும் அவற்றிற்கு விதித்த மாட்சிமைப் பாட்டோடு அவற்றைப் புலப்படக் காண்பாயாக; அன்று கள்ளவிழ்பூம் பொழிற்கண்ணேயிருந்து நின்னோடு யான் கூறப்பட்ட மாதவி மரபின் வந்த மாதவி இவள்காணென்று தன் காதலிக்குச் சொல்லித் தானும் கண்டு மகிழ்ச்சிமிக்க மேம்பாடுதக்க மரபினையுடைய விஞ்சையனும், அவனன்றியும்,

## 72 - 5. அந்தரத்துள்ளோர்......இருந்தோனுவப்ப

(இ - ள்.) சுவர்க்கத்திலுள்ளாராகிய தேவரெல்லாம் உள்வரி கொண்டு வந்து காணப்படும் இந்திரவிழவும் மாதவியாடலும் அவ்வாடற்குச் சமைந்த கோலமும் ஆடுதலாற்பிறந்த அழகும் முடிதலின் அதனாற்பிறத்த வெறுப்போடிருந்த கோவலன் உவக்கும்படி,

அந்தரத்துள்ளோர் - விச்சாதரருமாம். மானிடர் தம்மைக்காண்டல் பொருமையின் அறியாமரபினென்றார். இனி, இவளாடலும் கோலமும் தனது [1]"அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி"களைக் கைக்கொண்டு விடுதலாலே பிறர்க்கும் இவ்வாறுமென்னும் வெறுப்போடிருந்தானெனினும் அமையும். ஊடலோடென்றது கோலமோடென்றார், மனத்தில் நிகழ்ந்த ஊடலை முகம் காட்டுதலின்.

## 76 - 9. பத்துத் துவரினும்......நலம்பெற வாட்டி

(இ - ள்.) வாசநெய்யுரைத்த மணங்கமழும் கரிய கூந்தலைப் பத்து வகைப்பட்ட துவரினும் ஐந்துவகைப்பட்ட விரையினும் முப்பத்திருவகைத்தாகிய ஓமாலிகையானும் ஊறிக் காயப்பட்ட நன்னீராலே நிறம் பெறவாட்டியென்க.

இருமை - கருமை. பத்துத்துவராவன :—"பூவந்தி திரிபலை புணர் கருங்காலி, நாவ லோடு நாற்பான் மரமே." ஐந்துவிரையாவன :— [2]"கொட்டந்......விரை." முப்பத்திருவகை ஓமாலிகையாவன :— "இலவங்கம் பச்சிலை கச்சோல மேலம், குலவிய நாகணங் கொட்டம் - நிலவிய, நாக மதாவரிசி தக்கோல நன்னாரி, வேகமில் வெண்கோட்ட மேவுசீர் - போகாத, கத்தூரி வேரி யிலாமிச்சங் கண்டில்வெண்ணெய், ஒத்தகடு நெல்லி யுயர்தான்றி - துத்தமொடு, வண்ணக்கச் சோல மரேணுக மாஞ்சியுடன், எண்ணுஞ் சயிலேக மின்புழுகு கண்ணுநறும், புன்னை நறுந் தாது புலியுகிர் பூஞ்சரளம், பின்னி தமாலம் பெருவகுளம் - பன்னும், பதுமுக நுண்ணேலம் பைங்கொடு வேரி, கதிர்நகையா யோமாலி கை" என்னுமிவையெனக்கொள்க; என்னை? "ஓரை விரையினு மீரைந் துவரினும், ஆறைந்தின் மேலிரண் டோமா லிகையினும், நாறைங் கதுப்பி னுனமு நன்குரைஇ, ஊறின நன்னீ ருவந்தனளாட்டி" என்றாராகலின்.

## 80 - 81. புகையிற் புலர்த்திய......சேறாட்டி

(இ - ள்.) அங்ஙனமாகிய நீராட்டிப் பொலிவினையுடைய புகையிற் புலர்த்திய கூந்தலை ஐந்து வகைபெற வகுத்த வகைதோறும் மான்மதத்தின் கொழுவிய சேற்றை ஊட்டியென்க.

---

[1] இறை. 2, உரை; நன். மயிலை. 451; தக்க. 14, உரை.
[2] 5 : 14, அரும்பத. மேற்.

மான்மதச்சேறு - கத்தூரிக் குழம்பு; சவாதுமாம்.

82 - 3. அலத்தக மூட்டிய......நல்லணி செறீஇ

(இ - ள்.) செம்பஞ்செழுதிய அழகிய சிவந்த சீறடிக்கேற்ற நலத் தகும் மெல்லிய விரலிடத்தே செறிக்கப்படும் நல்லணிகளைச் செறித்து.

விரலணி - மகரவாய்மோதிரம், பீலி, கான்மோதிர முதலியன.

84 - 5. பரியகம்......அணிந்து

(இ - ள்.) பாதசாலமும் சிலம்பும் பாடகமும் சதங்கையும் காற்சரியு மென்னும் இவற்றைக் காலுக்குப் பொருத்தமுறும்படி அணிந்தென்க.

பரியகமாவது: "பொன்னிதழ் பொதிந்த பன்னிற மணிவடம், பின்னிய தொடரிற் பெருவிரன் மோதிரம், தன்னொடு தொடக்கித் தமனி யச் சிலம்பின்; புறவாய் சூழ்ந்து புணரவைப் பதுவே." என்னை? "அவ் வாய் மகரத் தணிகிளர் மோதிரம், பைவாய் பசும்பொற் பரியக நூபுரம், மொய்ம்மணி நாவின் முல்லையங் கிண்கிணி, கௌவிய வேனவுங் காலுக் கணிந்தாள்" என்றார்.

86. குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்து.

(இ - ள்). குறங்குசெறியென்னும் பணியைத் திரண்ட குறங் கிடத்தே செறித்தென்க.

குறங்குசெறி - கவான் ஆபரணம்.

87 - 8. பிறங்கிய......உடீஇ

(இ - ள்.) பருமுத்தக்கோவை மூப்பத்திரண்டாற்செய்த விரிசிகை யென்னுங்கலையை நிலநிறங்கிளரும் பூத்தொழிலையுடைய நீலச் சாதரு டையின் மீதே உடுத்தென்க.

என்னை? குறங்கு செறியொடு கொய்யலங் காரம், நிறங்கிளர் பூந் துகி னீர்மையி னுடீஇப், பிறங்கிய முத்தரை முப்பதி திருகாழ், அறிந்த தமைவர வல்குற் கணிந்தாள்" என்றார்.

89 - 90. காமர் கண்டிகை......அணிந்து

(இ - ள்.) காமஞ்செய்யும் மாணிக்க வளையுடன் நீங்காமற் பொற் றொடராற் பிணித்த முத்தவளையைத் தோளுக்கு அணிந்தென்க.

காமம்: காமரென விகாரம். தூமணி - முத்து. என்னை? "ஆய் மணி கட்டி யமைந்தவிலைச் செய்கைக், காமர் கண்டிகைக் கண்டிரண் முத்திடைக், காமர்பொற் பாசங் கொளுத்திக் கவின்பெற, வேய்மருண் மென்றோள் விளக்க வணிந்தாள்" என்றார்.

91 - 4. மத்தக மணியொடு......அணிந்து

(இ - ள்.) முகப்பிற்கட்டிய மாணிக்கத்தோடே பத்திகளில் வயிரங் கள் அழுத்தப்பட்ட சித்திரத் தொழிலையுடைய சூடகமும் செம்பொன்னாற் செய்த வளையும் நவரத்தினவளையும் சங்கவளையும் பவழவளைகளும் என்னுமிவற்றை ஐதான மயிரையுடைய முன்கைக்குப் பொருத்தமுற அணிந்தென்க.

பரியகம் - சரியுமாம். வால்வளை - வெள்ளிவளையுமாம். பவழப்பல் வளை - கைவடமுமாம். என்னை? "புரைதபு சித்திரப் பொன்வளை போக்கில், எரியவிர் பொன்மணி யெல்லென் கடகம், பரியகம் வால்வளை பாத்தில் பவழம், அரிமயிர் முன்கைக் கமைய வணிந்தாள்" என்றார். அரியசை முன்கைக்கென்பதூஉம் பாடம்.

95 - 8. வாளைப் பகுவாய்......அணிந்து

(இ - ள்.) வாளைமீனினது அங்காந்த வாயை வணங்குறலுறுவிக் கும் வெளியும் சிவந்த ஒளி உச்சமாகக் கதிராரும் மாணிக்கப்பீடமும் பக்கத்தே வளைந்து திரையும் ஒளியையுடைய வயிரஞ்சூழ்ந்த மரகதக் கடைசெறியும் பிறவுமாகிய இவற்றைக் காந்தண்மலர்போலும் மெல்லிய விரல்கள் மறையும்படியணிந்து,

பகுவாய் மோதிரமுமாம்; ஒப்பினாகிய பெயர். கேழ்கிளர்மணி: அஃது எக்கேழெனிற் செங்கேழ்கிளர்மணியென்க. வாங்குவில் - வளைத் துக்கொள்ளும் ஒளி.

99 - 100. சங்கிலி......அணிந்து

(இ - ள்.) வீரச்சங்கிலியும் நேர்ஞ்சங்கிலியும் பூணப்படுஞாணும் என்னுமிவற்றோடு கைபுனையப்பட்ட தொழில்களையுடைய சவடி சரப்பளி முதலாயுள்ள பிறவற்றையும் அழகிய கழுத்திடத்தே முத்தாரத்தோ டணிந்தென்க.

101 - 2. கயிற்கடை......மறைத்தாங்கு

(இ - ள்.) முற்கூறிய சங்கிலிமுதல் ஆரமீறாயுள்ள அணிகட்கெல் லாம் தலையொன்றாய்க் †கொக்குவாய்ப் படுகண் தொடங்கிய பன்மணிக் கோவையால் தூக்கமாகச் செய்யப்பட்ட பின்றாலியாற் சிறுபுறத்தை மறைத்தென்க.

கயிற்கடை - கோக்குவாய். ஒழுகிய கோவையென்க. சிறுபுறம் - பிடர்; "சங்கிலி நுண்டொடர் பூண்ஞாண் புனைவினைத், தொங்க லருத் தித் திருந்துங் கயிலணி, தண்கடன் முத்தின் றகையொரு காழெனக், கண்ட பிறவுங் கழுத்துக் கணிந்தாள்" என்றார். ஆங்கு : அசை.

103 - 5. இந்திர நீலத்து......அணிந்து

(இ - ள்.) முகப்பிற்கட்டின இந்திரநீலத்திடையிடையே பயிலக் கட்டின வயிரங்களால் அழகுபெற்ற நீலக்குதம்பையை வடிந்த காதி னிடத்தே அழகு மிகும்படி அணிந்தென்க.

என்னை? "நூலவ ராய்ந்து நுவலருங் கைவினைக், கோலங் குயின்ற குணஞ்செய் கடிப்பிணை, மேலவ ராயினு மெச்சும் விறலொடு, காலமை காதிற் கவின்பெறப் பெய்தாள்" என்றார்.

106 - 8. தெய்வ வுத்தியொடு......அணிந்து

---

(பி - ம்.) † 'கொக்கிவாய்' : இது கோக்குவாய், கோக்கிவாயென் றும் படித்தற்கு இடமுண்டு.

(இ - ள்.) சீதேவியாரென்னும் பணியுடனே வலம்புரிச்சங்கும் பூரப் பாளையும் தென்பல்லி வடபல்லியென்னுமிவையும் தம்மில் தொடர்ந்து ஒன்றுன தலைக்கோலத்தைக் கரிய பெரிய ஓதிக்கு அழகுறும்படி யணிந் தென்க.

செழுநீர் வலம்புரிக்கு அடை. என்னை? "கேழ்கிளர் தொய்யகம் வாண்முகப் புல்லகம், சூளா மணியொடு பொன்னரி மாலையும், தாழ்தரு கோதையுந் தாங்கி முடிமிசை, யாழின் கிளவி யரம்பைய ரொத்தாள்" என்றார்.

ஊடற்கோலமோடிருந்தோன் உவப்ப ஆட்டி ஊட்டிச் செறிஇ அணிந்து செறித்து உடீஇத் தோளுக்கணிந்து அமைவுறவணிந்து கரப்பவணிந்து ஆரமோடணிந்து சிறுபுறமறைத்து அழகுவணிந்து மாண்புறவணிந்தென்க.

## 109 - 10. கூடலும்......இருந்தோள்

(இ - ள்.) கூடலையும் பின்னர் ஊடலையும் கோவலற்களித்துப் படுக்கையமைந்த சேரும்பள்ளியிடத்தே இருந்தவளென்க.

*பின்னர் ஊடலளித்தலாவது*, [1]எண்ணில்காம மெரிப்பினு மேற் செலாப் பெண்மையும் நாணும் அழிந்துவந்து குறையுற்றுக் கூடுந் துணையும் நீயிர் பிரிவாற்றியிருந்தீர்; அன்பிலீரென ஊடுவது. ஊடலை யளித்தல் - அதனுன் வருந்துன்பத்தை யளித்தல்.

## 111 - 4. உருகெழு மூதூர்......வேண்டினளாகி

(இ - ள்.) விழவிற்குக் கொடியெடுத்த நாண்முதல் நாலேழ்நாளும் விழவு நடந்து பிற்றைஞான்று கொடியிறங்கி விழாவாற்றுப்படுத்த பிற்றைஞான்று உவாத்தலை வந்ததாக மாற்றார்க்கு உட்குதலைப் பொருந்துவிக்கும் மூதூரினின்றும் கடற்கரைக்கண் இடம்பிடிக்க விரைந்து செல்லுமாக்களோடு தானும் மடலவிழாநின்ற கைதை புன்னை முதலியவற்றையுடைய கழிக்கானல் பொருந்திய கடல்விளையாட்டைக் காண்டலை விருப்பத்தோடே வேண்டினளாகியென்க.

பெருநீர் - கடல். இரியல் - விரைவு. காண்டல் - நீர்ப்போரில் வெற்றி தோல்வி காண்டல். வேண்டினள் - காண்டற்குத் தானும்போகக் கோவலனை வேண்டிக்கொண்டாள்; எனவே அவனும் உடம்பட்டமை உணர்த் திற்று.

## 115 - 20. பொய்கைத் தாமரை......வையமேறி

(இ - ள்.) அங்ஙனம் வேண்டி அவனும் உடம்பட்டவளவிலே பொய் கைகளில் தாமரைப்பூஞ்சேக்கையில் துயில்கின்ற புட்கள் அச்சேக் கையை நீங்குதலான் வாய்விட்டுப் புலம்பாநிற்ப வைகறைப்பொழுதென் பதனை வாரணங்கள் அறிவிக்க வைகறைக்காலத்துச் செறிந்தவிருளை வெள்ளிய விளக்கம் கடியா நிற்க அக்காலத்தே மதாணி முதலிய பேரணிகலங்களை அணிந்து முகில்போலும் வண்கையையுடைய கோவலன் இராச வாகனமாகிய அத்திரியேற அத் தாரணி மார்பனோடு போதற்கு மானின் பார்வைத் தன்மை பொருந்திய நோக்கினையுடை யாளும் வையத்தின் ஏறியென்க.

---

[1] "எண்ணில் காம மெரிப்பினு மேற்செலாப், பெண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே" (சீவக. 998)

புலம்பக் காட்டக் கடியவென்னும் செயவெனெச்சங்கள் ஏற ஏறி யென்னும் வினைகொண்டு முடிந்தன. வாளாது வாரணமென்றமையால் [1] இருவகை வாரணமுங்கொள்க. அத்திரி - கோவேறு கழுதை. வையம் - † கொல்லாப்பண்டி.

## 121 - 7. கோடிபல வடுக்கிய......செவ்வனங் கழிந்து

(இ - ள்.) கோடியென்னு மிலக்கத்தைப் பலகோடிமேல் அடுக்கப்பட்ட வளவிய நிதித்திரளையுடைய மாடங்கள்மலிந்த மறுகினையுடைய பீடிகைத் தெருவின்கண் மலரணிதற்குக் காரணமாகிய மைவிளக் கோடே மாணிக்க விளக்குக்களையும் எடுப்ப அவ்விடத்தே தாசியர் மலரையும் அறுகையும் நெல்லையும் மங்கலமாகச் சிந்தி இருமருங்கினிடத் தும் தம் கலனொலிப்பத் திரிந்து பெயர்தலைச் செய்யும் திருமகளுக்கு இருப்பிடமாகிய அவ்விடத்தை வேருகக் கழிந்தென்க.

குப்பை - குவியல். மாடம் - சரக்கறைகள். மறுகு - ஏனைத்தெரு. மணி - அழகுமாம். கொடி : அறுகுக்கு அடை. அலருமென்னும் உம்மை தொக்கது. மங்கலம் - அழகுமாம். அங்காடியின் செல்வ மிகுதி கூறுவார் திருமகளிருக்கையென்ருர். கழிதற்கருமையிற் கழிந் தென்ருர்.

தாசியர் கலனொலிப்பத் திரிவனர் பெயருமிருக்கை யென்க.

## 128 - 9. மகரவாரி......போகி

(இ - ள்.) கடலினது வளத்தைக் கொணர்தலான் உயர்ச்சிபெற்ற நகரத் தெருவினூடே போயென்க.

கடல்வளம் - முத்தும் பவளமும் சங்கும் முதலியன.

## 130 - 33. கலந்தரு திருவின்......சென்றெய்தி

(இ - ள்.) மரக்கலங்கள் தந்த திருவினையுடைய தமது தேசங்களை விட்டுப் போந்த பரதேசிகள் திரைகளிட்ட வெண்மணலையுடைய அலை வாயிருப்பிற் பலவகைக் கூலமும் குவித்த மறுகில் இன்ன சரக்கு ஈண் டுளதென்று கொடிகளெடுத்துச் சொல்லும் ஒழுங்குபட்ட சேரிகளைப் போய் நெய்தலங்கானலை யெய்தி என்க.

வாலுகம் - வெண்மணல். வேலை விரிதிரைப்பரப்பின் வாலுகத்தை யுடைய மறுகென்க. எடுத்து நுவலும் - எடுத்தலாற் சொல்லுமென்று மாம்.

## 134 - 5. வண்ணமும்......விளக்கமும்

(இ - ள்.) எழுதுவண்ணமும் சாந்தும் மலரும் சுண்ணமும் பண்ணி காரவருக்கங்களுமென்னும் இவற்றை விற்போர் வைத்தவிளக்குக்களும்,

## 136. செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்

(இ - ள்.) திண்ணகத்தாற் செய்யுந் தொழில்களை வல்ல பணித்தட்டார் பணி பண்ணுமிடங்களில் வைத்த விளக்கங்களும்,

---

[1] இருவகை வாரணம் - சங்கு, கோழி (4 : 77-8.)

(பி - ம்.) † 'கோவால வண்டி'

137. காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்

(இ - ள்.) பிட்டுவாணிகர் பிட்டுவிற்றற்கு முறைமுறையாக வைத்த விளக்குக்களும்,

மோதகம் - ஈண்டுப் பிட்டு.

138. கூவியர் காரகற் குடக்கால் விளக்கமும்

(இ - ள்.) காரகலையுடைய அப்பவாணிகர் குடத்தண்டில் வைத்த விளக்குக்களும்,

139. நொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கமும்

(இ - ள்.) பலபண்டமும் விற்கும் மிலேச்சமகளிர் தம் கடைகளில் வைத்த விளக்குக்களும்,

140. இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்

(இ - ள்.) இடையிடையே மீன்விற்போர் விளக்குக்களும்,

141. இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்

(இ - ள்.) பாடை வேறுபட்ட தேயத்து நிலையறியாது ஓடுங்கலங்களை அழைத்தற்கு இட்ட விளக்குக்களும்,

142. விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்

(இ - ள்.) மீன்களைக் குறுக்கிட்டு மறித்துப் படுக்கும் வலையையுடைய பரதவர் திமிலில் வைத்த விளக்குக்களும்,

"முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச், செம்மீ னிமைக்கு மாக விசும்பின்" (புறநா. 60 : 1-2) என்றார் பிறரும்.

143. மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமும்

(இ - ள்.) பாடை வேறுபட்டதேயத்து மிலேச்சர் பிற துறைகளிற் போகாமற் பனைகளைக் காலாக நாட்டி அதன்மீதே மண்ணிட்டெரிக்கும் தீநாவென்னும் விளக்குக்களும்,

144. கழிபெரும் பண்டங் காவலர் விளககமும்

(இ - ள்.) மிக்க பெரிய பண்டங்களையுடைய பண்டசாலை காப்போரிட்ட விளக்குக்களும்,

145 - 50. எண்ணுவரம் பறியா......நெய்தலங்கானல்

(இ - ள்.) வரம்பறியப்படாவாய் இச்சொல்லப்பட்ட விளக்குக்களெல்லாம் எண்ணுதற்கியைந்து ஒன்றிமிகுதலாலே இடியைக் கலந்தாலொத்த மணலின்மீது இட்ட வெண்சிறுகடுகும் புலப்படக்காணுங் காட்சியையுடையதாகிய, மிக்க நீர்ப்பரப்பில் விரைமலர்த் தாமரையை வேலியாகவுடைய மருதநிலத்தினும் அழகுறத்தோன்றும் கைதையை வேலியாக உடைய நெய்தல் நிலத்தில் கழிக்கானற் கண்ணேயென்க.

எண்ணுவரம்பு - எண்ணின் பெருமைக்கு வரம்பு. ஈண்டுதல் - மிகுதல். இடி - மா ; இடிக்கலப்பென்றார், தெள்ளாத மாவை. ஈரயிர் - மிகவும் நுண்ணிய மணல். வீங்குநீர்ப்பரப்பில் தாமரைவேலி மருதத்திற்றேன்றும் கைதைவேலி நெய்தலங்கானலென்க.

151. பொய்த லாயமொடு பூங்கொடி பொருந்தி

(இ - ள்.) அங்ஙனமாகிய கானலிடத்தே தனது விளையாட்டு மகளிருடனே பூங்கொடிபோல்வாள் விளையாடச் சென்று பொருந்தியென்க.

152 - 4. நிரை நிரை......கலவிருக்கை

(இ - ள்.) நிரைநிரையாகக் குவித்த குற்றமற்ற காட்சியையுடைய மலை தரும் பலபண்டமும் கடல் தரும் பலபண்டமுமாகிய வளம் இடந்தோறும் மயங்கிக் கிடக்கின்ற கலங்கள் அசைகின்ற கடற்றுறைமுகங்களிற் சோலை சூழ்ந்த இருப்பிடத்தே,

துளங்குதல் - அசைதல்.

155 - 8. அரசிளங் குமரரும்......மருங்கில்

(இ - ள்.) அரச குமாரரும் அவருடைய உரிமைச் சுற்றமும் பரத குமாரரும் அவருடைய பல்வேறுவகைப்பட்ட ஆயமகளிரும் ஆடன் மகளிரும் பாடன் மகளிரும் தொகுதிகொண்ட இடங்கள்தோறும்,

வணிககுமரர்க்கு [1] உரிமையென்னுதது அவர் புனலாடல் மரபன்மையின். பரிசனமகளிரும் சிலதியர் முதலாயினோருமென்பார் பல்வேருயம் என்றார். ஆடுகளம் - அரங்கு ; பாடுகளம் - கண்டம் ; இவை அடை. தோடு - தொகுதி ; இதழையுடைய பொழிலிடத்தெனவுமாம்.

158 - 62. சூழ்தர லெழினியும்......தோன்றி

(இ - ள்.) சூழ்தருதலையுடைய எழினியும் முற்கூறிய தொகுதியும் வேறுவேறு கோலமும் வேறுவேறு கம்பலையும் விண்ணிலே சென்று பொரும் பெரிய புகழையுடைய இக்கரிகால்வளவன் புதுப்புனல் விழவு கொண்டாடும் தலைநாட்போல இவ்விழவினிறுதிக்கண் புனலாடிடங்களும் வீறுபெறத் தோன்றுநிற்கவென்க.

தோடு கம்பலையும், எழினி கோலமும் தோன்றவென எதிர்நிரனிறை; எழினிக்கோலம் - உருக்கள். தோன்றி : தோன்றவெனத்திரிக்க.

163 - 5. கடற்கரை......ஒலிப்ப

(இ - ள்.) அவையேயன்றிக் கடலினது கரையைக் குத்தியிடிக்கும் காவேரிப் புகார்முகமெங்கும் வறிதிடமின்றாகச் சேரநெருங்கிய நால்வகை வருணத்திலுள்ளாருடைய அடக்கப்படாத கம்பலையெல்லாங்கூடி ஓரோசையாய் நின்றொலிப்பவென்க.

166 - 74. கடற்புலவு......மாதவி தானென்.

[1] உரிமை - உரிமை மகளிர்.

(இ - ள்.) அங்ஙனந்தோன்ற ஒலியாநிற்ப, கடலினது புலால் நாற்றத்தைக் கெடுத்த மடல் அவிழும் பூவையுடைய கைதையாற் சிறையாகச் சூழப்பட்ட நடுவணுளவாகிய புன்னை நீழலில் அழுக்கற்ற மணல் பரந்த நிலத்தே சித்திரத் திரையை வளைத்து மேற்கட்டுங்கட்டியிடப்பட்ட வெண்கால் அமளி மிசையே, வருந்தி நின்ற வயந்தமாலை கையதாகிய நல்லயாழை வாங்கிப் பெரிய மலர்போலும் நெடுங்கண்ணையுடைய மாதவி கோவலன்றன்னொடும் சேரவிருந்தாளென்க.

வெண்கால் - மருப்புக்கால். திருந்துகோனல்யாழ் - இன்பத்தை விளைத்தற்குக் காரணமாகிய கோலையுடைய யாழ்; எனவே, மேல் துன்பத்தை விளைவிக்குமென்பது கருத்து. செவ்வனம் வாங்கியென்றார். பின்னர் ஊடலோடு வாங்குதலின்.

வெள்ளிமால்வரைச் சேடிக்கண் விருந்தாட்டயரும் விஞ்சைவீரன் இடனுங்காண்குதும்; அமைதியுங்காண்குதும்; ஆடலுங்காண்குதும்; வணங்குதும் யாமெனக்காட்டிப் பின்னர் புகார்மருங்கெய்திக் காட்டிக் காண்போன், காணாய்; மாதவி இவளெனவுரைத்து மகிழ்வெய்திய அவ் விஞ்சையனன்றியும் அந்தரத்துள்ளோர் வந்து காண்குறூஉம் விழவும் ஆடலும்கோலமும் அணியும் கடைக்கொள இருந்தோன் உவப்ப ஆட்டி ஊட்டிச்செறீஇ அணிந்து செறித்து உடீஇத் தோளுக்கணிந்து அமைவுறவணிந்து கரப்ப வணிந்து ஆரமோடணிந்து சிறுபுறம் மறைத்து அழகுறவணிந்து மாண்புறவணிந்து அளித்து இருந்தோள் உவவு வந்தென வேண்டினளாகிப் புலம்பக் காட்டக்கடிய அணிந்து ஏற ஏறிச் செவ்வனங் கழிந்து நடுவட்போகி மருங்கு சென்றெய்திப் பொருந்தி வாங்கிக் கோவலன்றன்னொடும் மாதவி வெண்கால் அமளிமிசை இருந்தனளென வினை முடிக்க.

**இது நிலைமண்டிலவாசிரியப்பா.**

வேலை மடற்றாழை யுட்பொதிந்த வெண்டோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைக்
களிநறவந் † தாதூதத் தோன்றிற்றே காமர்
தெளிநிற வெங்கதிரோன் றேர்.

**(சு) கடலாடுகாதை முற்றிற்று.**

---

(பி - ம்.) † 'தாதுதிர்ப்பத்'

# ஏழாவது

# கானல்வரி



## கட்டுரை

(1) சித்திரப் †படத்துட் புக்குச் செழுங் ‡கோட்டின் மலர்புனைந்து
மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்திப்
பத்தருங் கோடு மாணியு நரம்புமென்
¶ றித்திறத்துக் குற்றநீங்கிய யாழ்கையிற் றொழுதுவாங்கிப்
பண்ணல் பரிவட்டணை யாராய்த லைவரல்

1. சித்திரப்படம் - உறை. கோடு - யாழ்க்கோடு.

2. மணமகளிர் - கலியாணமகளிர்.

முன்பிற் காதையில் "யாழ் செவ்வனம் வாங்கி" (6 : 172) என்று வைத்து இக்காதையிலும் 'யாழ்கையிற் றொழுதுவாங்கி' என்றது கதைத் தொடர்பு அறிவித்தற்கும்' யாழின் அலங்காரம் கூறுதற்கு மென்க.

4. குற்றமாவன :—[1] ஆதவ வாத பய சாயையென்பன ; என்னை? சிந்தாமணியிலும், "நோய் நான்கு நீங்கி" (720) என்றார்.

இசையெழுவும் எண்வகையாவன :—பண்ணல் முதலாயின ; அவற்றுள் :

5-8. பண்ணலாவது :—"வலக்கைப் பெருவிரல் குரல்கொளச் சிறுவிரல், விலக்கின் றிளிவழி கேட்டும்..., இணைவழி யாராய்ந் திணை கொள முடிப்பது, விளைப்பரு மரபிற் பண்ண லாகும்", 'பரிவட் டணையி னிலக்கணந் தானே, மூவகை நடையின் முடிவிற் றாகி, வலக்கை யிருவிரல் வனப்புறத் தழீஇ, இடக்கை விரலி னியைவ தாகத், தொடை யொடு தோன்றியுந் தோன்றா தாகியும், நடையொடு தோன்று நயத்த தாகும்", "ஆராய்த லென்ப தமைவரக் கிளப்பிற், குரன்முத லாக விணைவழி கேட்டும், இணையி லாவழிப் பயனொடு கேட்டும், தாரமு முழையுந் தம்மிற் கேட்டும், குரலும் விளியுந் தம்மிற் கேட்டும், துத்தமும் விளரியுந் துன்னறக் கேட்டும், விளரி கைக்கிளை விதியுளிக் கேட்டும், தள ராதாகிய தன்மைத் தாகும்", "தைவர லென்பது சாற்றுங் காலை, மையறு சிறப்பின் மனமகிழ் வெய்தித், தொடையொடு பட்டும் படாஅ

---

1-3. யாழின் சிறப்பு.

1. சித்திரப் படம் - சித்திரமெழுதிய ஆடை; உறைக்கு ஆகு பெயர். 2. மணமகளிர் : பொருந. 19-20. அடி, 5-15. பாடற் றொழில் களாவன :—' யாழின்கண் வார்தல் முதலிய எட்டும் பண்ணல் முதலிய எட்டும்' (குறள், 573, பரிமேல்.); கலைத்தொழில்களாவன :—' பண்ணல்.........குறும்போக்கென்றவெட்டும்' (சீவக. 657, ந.)

[1] ஆதவ வாத பய சாயை - வெயில், காற்று, நீர், நிழல் ; யாழுக்குக் குற்றம் வருதற்குக் காரணமானவை இவை நான்காம்.

(பி - ம்.) † 'படாத்துட்' ‡ 'கோட்டுமலர்' ¶ 'றித்திறத்த குற்றம்'

கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
நண்ணிய குறும்போக் கென்று நாட்டிய
எண்வகையா லிசையெழீஇப்
பண்வகையாற் பரிவுதீர்ந்து
மரகதமணித் † தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள்
பயிர்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் ‡ மிசைப்படர
வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்
சீருட னுருட்ட றெருட்ட லள்ளல்

---

தாகியும், நடையொடு தோன்றி யாப்புநடை யின்றி, ஓவாச் செய்தியின் வட்டணை யொழுகிச், சீரேற் றியன்று மியலா தாகியும், நீர வாகு நிறைய தென்ப '', "செலவெனப் படுவதன் செய்கை தானே, பாலை பண்ணே திறமே கூடமென, நால்வகை யிடத்து நயத்த தாகி, இயக்கமு நடையு மெய்திய வகைத்தாய்ப், பதினோ ராடலும் பாணியு மியல்பும், விதிநான்கு தொடர்ந்து விளங்கிச் செல்வதுவே'', "விளையாட் டென்பது விரிக் குங் காலைக், கிளவிய வகையி னெழுவகை யெழாலும், அளவிய தகைய தாகு மென்ப'', "கையூ ழென்பது கருதுங் காலை, எவ்விடத் தானு மின்பமுஞ் சுவையும், செவ்விதிற் றோன்றிச் சிலைத்துவர லின்றி, நடை நிலை திரியாது நண்ணித் தோன்றி, நாற்பத் தொன்பது வனப்பும் வண் ணமும், பாற்படத் தோன்றும் பகுதித் தாகும் '', " துள்ளற் கண்ணுங் குடக்குத் துள்ளும், தள்ளா தாகிய வுடனிலைப் புணர்ச்சி, கொள்வன வெல்லாங் குறும்போக் காகும்.'' இவை யெல்லாம் ஈண்டு விரித்துரைப் பிற் பெருகும்.

9. பண்வகையாற் பரிவுதீர்ந்து - பண்கூற்றிற் குற்றந்தீர்ந்து.

10-11. மரகதமணி......போல - மரகதமணி மோதிரங்கள் செறிந்த விரல்கள் பாடுகின்ற வண்டின் கிளைகளை யொப்ப.

12-6. வார்தல் வடித்தல்......செவியினோர்த்து:—வார்தலென்றது - சுட்டுவிரற்செய்தொழில்; வடித்தலென்றது - சுட்டுவிரலும் பெருவிர லுங்கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்; உந்தலென்றது - நரம்புகளை உந்தி வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரலிழிபட்டது மென்றறிதல்; உறழ்தலென்றது - ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல்; உருட்டலென்றது - இடக்கைச் சுட்டு விரல் தானேயுருட்டலும் வலக்கைச் சுட்டுவிரல் தானேயுருட்டலும் சுட்டொடு பெருவிரற் கூட்டியுருட்டலும் இருபெருவிரலும் இயைந் துடனுருட்டலுமெனவரும்; "தெருட்டலென்றது செப்புங் காலை, உருட்டி வருவ தொன்றே மற்ற, ஒன்றன் பாட்டுமடை யொன்ற நோக்கின், வல்லோ ராய்ந்த நூலே யாயினும், வல்லோர்

---

அடி, 6. கண்ணிய - கருதிய.

அடி, 10 : 6 : 97-8. அடி. 11. பயிர் - ஒலிக்கின்ற. அடி. 12 : ' வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்'' (பொருந. 23.)

(பி - ம்.) † 'தாள்செறித்த' ‡ 'மிசைப்படாதது வார்தல்'

ஏருடைப் பட்டடையென விசையோர் வகுத்த
எட்டு வகையி னிசைக்கர ணத்துப்
† பட்டவகைதன் செவியினோர்த்
தேவலன் ‡ பின் பாணியாதெனக்
கோவலன் கையாழ் நீட்ட வவனும்
காவிரியை நோக்கினவுங் கடற்கானல் வரிப்பாணியும்
மாதவிதன் மனமகிழ வாசித்த ருெடங்குமன்.

(ஆற்றுவரி) வேறு

(2) திங்கண்மாலை வெண்குடையான் சென்னிசெங்கோ லதுவோச்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி [சிக்

பயிற்றுங் கட்டுரை யாயினும், பாட்டொழிந் துலகினி லொழிந்த செய்கையும், வேட்டது கொண்டு விதியுற நாடி" எனவரும்......இவை இசைத் தமிழ்ப் பதினாறுபடலத்துட் கரணவோத்துட் காண்க.

ஏவலன் பின்பாணியாதெனவென்றது - இப்பொழுது இதனை வாசியென்று விதிக்கின்றேனல்லேன்; வாசிக்குந்தாளமியாதென்று யான் அறியலுறுகின்றேனென்பாள்போலக் கொடுத்தாளென்க; ஏவலன்: தன்மை யொருமை.

கோவலன்கை யாழ்நீட்ட: யாழைத்திருத்தித் தான் முற்படவாசியாதே அவன் தலைமைதோன்றக் கொடுத்தாள்.

பட்டவகை தன் செவியினோர்த்து நீட்டவென்க.

இனி வரிப்பாடலாவது:—பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட எட்டனியல்பும் ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும் இறுதியும் கெட்டு இயல்பும் முடமுமாக முடிந்து கருதப்பட்ட சந்தியும் சார்த்தும் பெற்றும் பெருதும் வரும். அதுதான் தெய்வஞ்சுட்டியும் மக்களைப் பழிச்சியும் வரும்.

அவற்றுள், தெய்வஞ்சுட்டிய வரிப்பாட்டு வருமாறு:—"அழலணங்கு தாமரை யருளாழி யுடையகோ னடிக்கீழ்ச் சேர்ந்து, நிழலணங்கு முருகுயிர்த்து நிரந்தலர்ந்து தோடேந்தி நிழற்றும்போலும், நிழலணங்கு முருகுயிர்த்து நிரந்தலர்ந்து தோடேந்தி நிழற்றுமாயின், தொழலணங்கு மன்புடையார் சூழொளியும் வீழ்கரியுஞ் சொல்லா வன்றே." இது கூடைச் செய்யுள். "கூடை யென்பது கூறுங்காலை, நான்கடி யாகி யிடையடி மடக்கி, நான்கடி யஃகி நடத்தற்கு முரித்தே", "வார மென்பது வகுக்குங் காலை, நடையினு மொலியினு மெழுத்தினு நோக்கித், தொடையமைந் தொழுகுந் தொன்மைத் தென்ப." இவை அடிவரையிட்டன.

இனி மக்களைச்சுட்டிய வரிப்பாட்டு வருமாறு:—" திங்கண் மாலை... காவேரி" என்பதுபோல வருவது.

அடி. 14. ஏர் - அழகு. அடி. 16. ஓர்த்து - ஆராய்ந்தறிந்து. அடி. 19. கானல் - கடற்கரைச்சோலை.

(2) மாலையையுடைய வெண்குடை. சென்னி - சோழன்; கரிகாலன்.

(மேற்.) 'திங்கள்......காவேரி' இது குடையையும் செங்கோலையும் புனைந்துரைத்தது (தொல். புறத். 36, ந.)

(பி - ம்.) † 'பட்டைவகை செவியோர்த்து' ‡ 'பின்பணியாகெனக்'

கங்கை தன்னைப்புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி. (க)

(3) மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி. (உ)

(4) உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி. (ங)

(சார்த்துவரி) வேறு

(5) கரியமலர் நெடுங்கட்காரிகைமுன் கடற்றெய்வங்காட்டிக்காட்டி
அரியசூள் பொய்த்தா ரறனிலரென்றேழையம்யாங் † கறிகோமைய

---

(2) கயலாகிய கண்ணையுடையாய்; புலவாதொழிந்தது மாதர் பெருங்கற்பு; அதனை நானறிந்தேன்.

(3) கன்னி - குமரி.

(4) தண்பதங்கொள் விழவர் - புதுப்புனலாடுவார். வாய்காவா மழவர் - [ஏறி ஆங்குத் தானென்று] நாயகனை நெருங்கும் வீரர்.

இவை மூன்றும் ஆற்றுவரி. வண்ணம் ஒழுகுவண்ணம்.

இனி வரியாவது :—முகமுடைவரி, முகமில்வரி, படைப்புவரியென மூன்று வகைப்படும். வரிப்பாட்டுக்கு முகமாக நிற்றலின் முகமெனப் படும்; என்னை? "நிலமுத லாகிய வுலகியல் வரிக்கு, முகமாய் நிற்றலின் முகமெனப் படுமே" என்றாராகலின். அம்முகமுடைவரி மூன்றடி முதலாக ஏழடியீறாக வரும்; "சிந்து நெடிலுஞ் சேரினும் வரையார்." முகமில் வரியாவது - முகமொழிந்து ஏனையுறுப்புக்களான் வருவது. படைப்பு வரியாவது-எல்லாவுறுப்பும் ஒன்றானும் பலவானும் வெள்ளையானும் ஆசிரியமானும் கொச்சகம்பெற்றும் பெருதும் வேறுவேறாகி......வருவது.

இவற்றுள், "திங்கண்மாலை" முதலாயின மூன்றும் முகமுடைவரி. இவை கண்டன கூறிற்றாக யாழினிட்ட பாட்டு. [றென்க.

(5) பொய்த்தாரென்றது முன்னிலைப் படர்க்கை; காட்டிப் பொய்த்தா

---

(2), (3) சோழன் கங்கையையும் கன்னியையும் புணர்தலென்பது அவை பொலியும் நாடுகளை ஆளுதலைக் குறிக்கும்.

(4) தண்பதம் கொள்ளல் : 6 : 160.

(5) கரியமலர் என்றது கருங்குவளையை; நீலப்போது என்பர் பின்னும். கடற்றெய்வம் - வருணன். சூள் - உனைப்பிரியேன் என்று தலைவன் செய்த சத்தியம்.

(மேற்.) (3) : 4. 'மன் மிகுதிப்பொருளில் வந்தது' (நன். 431, மயிலை.); இ. வி. 263. (5) 'இது குறின்மெல்லிசை யேந்திசை வண்ணம்' (யா. வி. ஒழிபு. 2.) 'கரியமலர்..........காரிகைமுன்........எனச் செய்யுட்கண் பல தொகையும் விராய் வந்து ஒருசொல் நடையவாய்த் தம்மை முடிப்பனவற்றோடு முடிந்தன' (தொல். எச்ச. 24, ந.) (5) - (7) : 'இம் மூன்றும் புகாரிற்றலைவியெனக் கூறியவாறு காண்க' (தொல். புறத். 32, ந.)

(பி - ம்.) † 'கறிகோவைய'

விரிகதிர் வெண்மதியு மீன்கணமுமாமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையுமுத்துங்கண் †டாம்பல்பொதியவிழ்க்கும் புகாரேயெம்மூர். (௫)

(6) காதல ராகிக் கழிக்கானற் கையுறைகொண் டெம்பின்வந்தார்
ஏதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங் ‡கறிகோமைய
மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த நீலப்
போது ¶மறியாது வண்டூச லாடும் புகாரே யெம்மூர். (௬)

(7) மோதுமுதுதிரையான் மொத்துண்டு போந்தசைந்தமுரல்வாய்ச் சங்
மாதர் வரிமணன்மேல் வண்ட லுழுதழிப்ப மாழ்கியைய [கம்
கோதைபரிந்தசையமெல் விரலாற்கொண்டோச்சுங் குவளைமாலைப்
போது §சிறங்கணிப்பப்போவார்கண் போகாப் புகாரே
[யெம்மூர். (௭)

---

(6) எம்பின்வந்தார் ஏதிலர் தாமாகியென முன்னிலையைப்படர்க்கை வாய்பாட்டாற் கூறினர்.

(7) பரிந்து - அறுத்து. அசையக் கொண்டோச்சுமென்க. குவளை மாலைப்போது சிதறினவை சிறங்கணித்துப் பார்த்தாற்போலக் கிடக்க அவ்வூரிலுள்ளார்கண்கள் கண்ணென்று ஐயுற்றுப் போகாத புகாரென்க. அன்றிக் கடைக்கணிக்கவென்றது - குவளையானது மாலைக்காலம் பகையாதலால் அஞ்சிப் பார்க்கப் போவார்கண் போகாது இங்கு வாழ்வாரைச் சிறங்கணித்த கண்ணென்று தம் பேதைமையாற் பார்த்து நிற்றலான் நாங்களும் பேதையமென்றுமாம்.

இவை மூன்றும் தோழி தலைமகன் முன்னின்று வரைவுகடாயவை; கையுறைமறையெனினும் அமையும்.

இவை சார்த்துவரி:—"பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரொடும், சார்த்திப் பாடிற் சார்த்தெனப் படுமே." இங்குப் பாட்டுடைத் தலைவன் சோழன். அதுதான் முகச்சார்த்து முரிச்சார்த்து கொச்சகச் சார்த்தென மூவகைப்படும். அவற்றுள் முகச்சார்த்து:—மூன்றடி முதல் ஆறடியீறாக வரும்; இடை நான்கடியானும் ஐந்தடியானும் வரும். முரிச்சார்த்தாவது:—"முரிந்தவற.........குற்றெழுத்தியலாற் குறுகிய நடையாற், பெற்ற வடிதொகை மூன்று மிரண்டும், குற்ற மில்லெனக் கூறினர் புலவர்." கொச்சகச் சார்த்து:—கொச்சகம்போன்று முடியும்.
இவற்றுள், இவை மூன்றும் முகச்சார்த்து.

---

(5) புரிவளை - புரிகளையுடைய சங்கு. வளையும் முதலும் முறையே மதிக்கும் விண்மீன்களுக்கும். ஆம்பல் - இரவில் மலரும் நீர்ப்பூ. பொதி - கட்டு.

(6) ஏதிலர் - அயலவர். மதிநிழல் - சந்திரனது ஒளி. இணை கொண்டு மலர்ந்த நீலப்போது கண்களுக்கு. ஊசலாடும் - தடுமாற்றம் கொண்டு இங்குமங்குமாகச் செல்லும்.

(7) கோதை - மாலை; என்றது குவளைமாலையை. முரல்வாய் - ஒலிக்கின்ற வாயையுடைய. வண்டல் - சிறு பெண்கள் மணலிற் கட்டிய சிற்றில். மாலைப்போது - மாலை நேரத்தில். சிறங்கணித்தல் - கண்ணைச் சுருக்கிப் பார்த்தல். சிறிதளவு மலர்ந்த குவளைமலர்கள் சிறங்கணித்த கண்களுக்கு.

இச்செய்யுளின்பின் 'கரியமலர்' (5), 'காதலராகி' (6) என்பவை சில பிரதிகளில் முறையே காணப்பட்டன. (பி - ம்.) † 'டாம்பன் மலரும் புகாரே' ‡ 'கறிகோவைய' ¶ 'மறியாமல் வண்டு' § 'புறங்கணிப்ப'

(முகமில்வரி) வேறு

(8) துறைமேய்வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்றமாய்வான்
பொறைமலிபூம்புன்னைப் †பூவுதிர்ந்து நுண்டாதுபோர்க்குங்கானல்
நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
உறைமலியுய்யாநோயூர் சுணங்குமென்முலையேதீர்க்கும்போலும்.(க)

(கானல்வரி)

(9) நிணங்கொள் ¶புலாலுணங்கனின்று புள்ளோப்புத §றலைக்கீடாகக்
கணங்கொள் வண்டார்த்துலாங் கன்னிநறுஞாழல் $கையி [லேந்தி
மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றாண்டோர்
அணங்குறையு மென்ப தறியே னறிவேனே லடையேன்மன்னோ. (க)

(10) வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின் மலர்கை யேந்தி
விலைமீனு ணங்கற்பொருட்டாக வேண்டுருவங்கொண்டு
கொலைவே னெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வ [வேறோர்
தலைநீர்த்தண் கான லறியே னறிவேனே லடையேன் மன்னோ.
(உ)

---

(8) மணலிலே தோய்ந்து. உறைமலி - மலியுறையால்: உறை உய்யா நோய் - மருந்தாற் போக்க முடியாத நோய். போலும்: ஒப்பில் போலி.

இது குறியிடத்துச்சென்ற பாங்கன் தலைமகளது காதன்மிகுதி குறிப்பினான் அறிந்து கூறியது.

இது முகமில்வரி.

(9) தலைக்கீடு - ஒரு வியாஜம். இது கழற்றெதிர்மறை.

(10) இதுவுமது.

இவை கானல்வரி.

---

(8) மாய்வான் - மறையும்படி. பொறைமலி - பாரம் மிக்க. தாது - மகரந்தப்பொடி. உறை - மருந்து; "உறையொன்றின்றித், தண்டா நோய்" (7 : 30). ஊர் - பரந்த.

(3) தலைக்கீடாக - பெயரளவில் காரணமாக. கன்னி - இளமை. ஞாழல் - புலிநகக்கொன்றை. மு. ஒப்பு. "பல்லுயிர் பருகும்......உண்டென" (5 : 219 - 23); "கன்னிநீர் ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட, பொன்னங் கொடியை யீன்றோ ரில்லை போலுமால், மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி, இன்ன தொன்று படைத்த தாயி னெவன் செய்கோ" (பழம்பாட்டு)

(மேற்.) (8) 'தலைவியின் கண்ணுலுண்டாகிய நோய்க்குக் கண்ணே மருந்தாம்' (திருச்சிற். 381, உரை); தலைவனை வியந்துரைத்த பாங்கன் பின்னர்ச் சிந்தித்தல் (இறை. 3, உரை); பாங்கன் தலைவியை வியத்தல் (நம்பி. களவு. 21); இ - வி. 505; தக்க. 28, உரை.

(9) 'கன்னிநறு ஞாழல்' : இஃது அஃறிணையை உயர்திணை வாய்பாட்டாற் கூறல்' (தொல். கிளவி. 27, சே. ந.) மு. 'இது இயலிடங் கூறல்' (இறை. 3, உரை); இதில் இடையடி குறைந்து வந்தது (தொல். செய். 156, பேர்.); இதில் ஈற்றயலடி குறைந்து வந்தது (தொல். செய். 153, ந.); களவியற். 26, உரை.

(பி - ம்.) † 'பூவுதிர்நுண்' ‡ 'நிறைமலி வாண்முகத்து நீள் கயற்கண்' ¶ 'படுபுலா லுணங்கிப்புள்', 'புலாலுணங்கு முன்றிளின்று' §'றலைக்கீடாக் கணங்கொள்' $ 'கையிலூன்றி'

(நிலைவரி) வேறு

(11) கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்
திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
அங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே. (க)

(12) எறிவளைக †ளார்ப்ப விருமருங்கு மோடும்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றங் காணீர்
கடுங்கூற்றங் காணீர் கடல்வாழ்நர் ‡சீறூர்க்கே
மடங்கெழுமென் சாயன் மகளா யதுவே. (உ)

(13) புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்க்
¶கலவநோய் செய்யு மணங்கிதுவோ காணீர்
அணங்கிதுவோ காணீ ரடும்பமர்தண் கானற்
பிணங்குநே ரைம்பாலோர் பெண்கொண் டதுவே. (ங)

(முரிவரி) வேறு

(14) பொழிறரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
§எழுதரு மின்னிடையே யெனையிடர் §செய்தவையே. (க)

(15) திரைவிரி தருதுறையே திருமணல் ††விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே

---

(11) காமன் செயலெழுதி - பிறரை வருத்தும் தொழிலெழுதி. தீர்ந்த முகம் - பணிச்குறையற்றுக் கைவிட்டமுகம். ஓ : வியய்பு. காணீர் - பாரீர்.

(12) எறிவளை - அறுக்கும்வளை ; அன்றிக் கரையிலே திரையெறிகிற வளையுமாம் ; வளைகள் முழங்க, இவையிற்றைப்பார்த்து ஓடும் கண்ணை யுடையாள். வே'ற்கண் - வேற்கண்ணையுடையாள் ; ஆகுபெயர். அன்றியும்......" நீள்கடலிடை யலவன்வழி யுழவா " என வளையாபதியினுங் கூறினர்.

(13) அலவ - அலந்தலைப்பட. பிணங்குமைம்பால் - செறிந்த மயிர். பெண் - பெண்வடிவு.

இவை மூன்றும் தமியளாக இடத்தெதிர்ப்பட்ட தலைவியை நோக்கித் தலைமகன் கூறியவை.

இவை நிலைவரி; " முகமு முரியுந் தன்னொடு முடியும், நிலையை யுடையது நிலையெனப் படுமே ".

---

(11) திமில் - படகு. (13) ஐம்பால் - கூந்தல். (14) முரிபுரு - வளைந்த புருவம். எழுதரு - எழுதுவதற்கரிய. மின் இடை - மின்னலை யொத்த இடை.

(பி - ம்.) † 'ளார்ப்ப வெம்மருங்கு மோடும்' ‡ 'சீறூர் மடங்கெழு' ¶ 'கலவணோய்', 'கவலநோய்' § 'எழுதரிய மின்னிடை' § 'செய்த விவையே' †† 'விரிவிடமே விரைவிரிதருமலரே'

†மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகய லிணைவிழியே யெனையிடர் ‡ செய்தவையே (உ)
(16) வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே
தளையவிழ் நறுமலரே தனியவ டிரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
¶இளையவ ளிணைமுலையே யெனையிடர் செய்தவையே. (ங)

(திணைநிலைவரி) வேறு

(17) கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னையர்
உடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயும்
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்
§இடர்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய். (க)
(18) கொடுங்கண் வலையா § லுயிர்கொல்வா னுந்தை
நெடுங்கண் வலையா ††லுயிர்கொல்வை மன்னீயும்
வடங்கொண் முலையான் ‡‡மழைமின்னுப் போல
¶¶நுடங்கி யுகுமென் னுசுப்பிழவல் கண்டாய். (உ)
(19) ஓடுந் திமில்கொண் §§ டுயிர்கொல்வர் நின்னையர்
கோடும் புருவத் §§ துயிர் கொல்வை மன்னீயும்

(14)–(16) ஏகாரம் : எண்ணேகாரம்.
இவை மூன்றும் தலைமகன் பாங்கன் கேட்ப உற்றதுரைத்தவை.
இவை முரிவரி; "எடுத்த வியலு மிசையுந் தம்மில், முரித்துப் பாடுதன் முரியெனப் படுமே".
(17) மிடல்புக்கு - வலியிலே புக்கு நின்று. இடர்புக்கு - இடரிலே கிடந்து. இடையிழவல் - இடையிழவாதேகோள்; என்றது நின்தருமம் நீயுஞ் செய்கின்ற கொடுமையாலே இடை முரியவுங்கூடும்; அதற்கு உட்பகையாய்த் துணைக்காரணமாகிய முலைகளுமுளவாதலால் இடையைப் பரிகரி யென்றவாறு; என் வருத்தத்தைத்தீர் என்பதாம். இவை மூன்றற்கு மொக்கும்.
19. பீடு பிறரெவ்வம் பார்த்தல் - உனக்குப் பெருமையாவது பிறரெவ்வம் பார்த்தல்; 'பாரா' எனப் பாடமாயின், தான் பெருக்கமுறுமதனுற் பிறரெவ்வமும்பாராத முலையென்றும்; எவ்வமுமென்னுமும்மை தொக்கது.

(15) புரிகுழல் - சுருண்ட கூந்தல்.
(16) முளைவளர் இளநகை - முளைபோன்று வளரும் இளைய எயிறு; 15 : 202; மணி. 4 : 100.
(18) வடம் - முத்துமாலை. நுசுப்பு - இடை.
(16) பீடு - பெருமை. எவ்வம் - துன்பம்.
(மேற்.) (17) மு. 'இது பொய் பாராட்டல்' (தொல். களவு. 11, ந.) (19) : இஃது இரந்து பின்னிலை நிற்றல் (நம்பி. 127)
17, 18, 19 ஆகிய செய்யுட்கள் மூன்றும் சாயல்வரி என்று சில மூலப் பிரதிகளில் எழுதப்பெற்றுள்ளன.
(பி - ம்.) † 'மருவிரிதருகுழலே' ‡ 'செய்தவிவையே' ¶ 'இளவளரிளமுலையே யெனையிடர் செய்தவிவையே' § இடர்புக்குகுமின்னிடையே' § 'லுயிர்கொள்வானுந்தை' †† 'லுயிர்கொள்வை நீயும்' ‡‡ 'மறைமின்' ¶¶ 'நுடங்குமிளமென்னுசுப்பு' §§ 'டுயிர் கொள்வர்' §§ 'துயிர்கொள்வை நீயும்'

பீடும் பிறரெவ்வம் †பாராய் முலைசுமந்து
வாடுஞ் சிறுமென் மருங்கிழவல் கண்டாய். (௩)

வேறு

(20) [1] பவள வுலக்கை கையாற் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய. (௪)
(21) புன்னை நீழற் புலவுத் திரைவாய்
அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றங் கூற்றம். (௫)
(22) கள்வாய் நீலங் கையி னேந்திப்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வே லல்ல வெய்ய வெய்ய. (௬)

வேறு

(23) சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்
சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்

---

இவை மூன்றும் புணர்ச்சி நீட இடந்தலைப்பாட்டிற் புணர்தலுறுவான் ஆற்றாமைக் கூறியவை.

(20) குவளையல்ல - நிறம்பற்றிக் குவளை யென்னவேண்டா.

(21) அன்ன நடப்ப - அன்னம் இந்நடையைப்பார்த்து நடக்கும் படி; அன்றி, நடைக்கு அஞ்சி ஓடவென்றுமாம். கொன் - மிகுதியும் கூர்மையும். நீழனடப்பாள் கண்கள் மிகவெய்ய; ஆகலாற் கூற்றமென்க.

(22) புள்வாயுணங்கல் - உணங்கலிடத்துப்புள்.

இவை மூன்றும் குறியிடத்துக்கண்ட பாங்கன் சொல்லியவை; புணர்ந்து நீங்குவான் விடுத்தலருமையான் ஆற்றானாய்த் தன்னெஞ்சிற்குச் சொல்லியவையுமாம்.

(23) விளையாட்டு விருப்பினால் ஓடுவாளைக்கண்டு நின்னடையுடனைக்குமென்று சொல்லுவர் புலவராயினும் இவள் விளையாட்டொழிந்து தன்னியல்.........னீயொவ்வாய்; அதனாற் சேராதேகோள்.

இது [2] காமஞ்சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலா இடும்பை யெய்தியோன் சொல்லியது.

---

[1] இச்செய்யுள் முதலிய மூன்றும் நிலைவரியென்றும், துள்ளல்வரி யென்றும், துள்ளலோசை யென்றும் மூலமட்டும் உள்ள சில பிரதிகளில் எழுதப்பெற்றுள்ளன; 'பவளவுலக்கை' : சிலப். 29 : வள்ளைப்பாட்டு.

[2] தொல். அகத்திணையியல், 50. (பி - ம்.) † 'பாரமுலை'

† ஊர்திரைநீர் வேலி யுழக்கித் திரிவாள்பின்
‡ சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய். (எ)

## கட்டுரை

(24) ¶ ஆங்குக், கானல்வரிப்பாடல்கேட்டமானெடுங்கண்மாதவியும்
மன்னுமோர் குறிப்புண்டிவன் றன்னிலை மயங்கினனெனக்
$ கலவியான் மகிழ்ந்தாள்போற் புலவியால் யாழ்வாங்கித்
தானுமோர் ||குறிப்பினள்போற் கானல்வரிப் பாடற்பாணி
நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனமகிழக்
கலந்தொடுபுணர்ந்தமைந்த §கண்டத்தாற்பாடத்தொடங்குமன்.

## ஆற்றுவரி (வேறு) (க)

(25) மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தவெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன்வாழி காவேரி. (க)
(26) பூவர் சோலை ††மயிலாலப் புரிந்து குயில்க ளிசைபாடக்
காமர் மாலை ‡‡யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை ¶¶யருகசைய நடந்தவெல்லா நின்கணவன்
நாம வேலின் றிறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி. (உ)
(27) வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி

---

(17) - (23) இவையேழும் திணைநிலைவரி.
(24) ஆங்கு - அவ்விடத்து.
கோவலன் வாசித்த உருக்கள் களவில் தலைமகன் கூற்றுதலால் இவன் தன்மேல் அன்பிலனென உட்கொண்டு புலந்து அது தோன்றுமல் மனமகிழ்ந்தாள் போலத் தன்பக்கல் வேறு குறிப்பிலளாயினும் வேறு குறிப்புடையாள் போல இவனுக்குள் தோன்றத் தானும் கானல்வரிப் பாணி பாடத்தொடங்கினுளென்க. கலம் - யாழ். கண்டம் - மிடறு.
(25) ஒல்கி - பெண்மையாலேயொதுங்கி. வளையாமையேயெனத் தேற்றேகாரம் வருவிக்க; மற்றைய ஏகாரங்களும் (26 - 7) இன்னவெனக் கொள்க. அதனை யறிந்தேனென்க.
(26) வேலின் திறங்கண்டென்றது, பிறரால் வருத்தம் இல்லை யென்றவாறு.
(27) பகல்வெய்யோனென்றது, சூரிய வங்கிசத்தவனுதலால்; நடுவை விரும்புவானென்றுமாம். இவை மூன்றும் ஆற்றுவரி.

---

23. ஊர்திரை நீர்வேலி - கடல்.
25 - 7 : இவற்றை 7 : 2-4 கவிகளோடு ஒப்பு நோக்குக.
(பி - ம்.) † 'ஊர்திரைநீ ரோத முழக்கி' ‡ 'சென்மட' ¶ 'ஆங்குத் திணைநிலைவரிக் கானல் வரிப்பாணிகேட்டு' $ 'கலவியாழின்' || 'குறிப் பினளாய்க்கானல் வரிப்பாடற்பால்' § 'கண்டத்தாள் பாடுமன்' †† 'மயி லாடப் புரிந்து குழல்க ளிசைபாட' ‡‡ 'யருகலைய' ¶¶ 'யருகாட'

*ஊழி யுய்க்கும் பேருதவி †யொழியாதொழுக லுயிரோம்பும்*
ஆழி யாள்வான் பகல்வெய்யோ னருளே வாழி காவேரி. (ங)

(சார்த்துவரி) வேறு

(28) *தீங்கதிர் வாண்முகத்தாள்செவ்வாய் மணிமுறுவலொவ்வாவேனும்*
*வாங்குநீர் முத்தென்றுவைகலுமான் மகன்போல்வருதிரைய*
*வீங்கோதந்தந்து ‡விளங்கொளியவெண்முத்தம் விரைசூழ்கானற்*
*பூங்கோதை கொண்டுவிலைஞர்போன் மீளும்புகாரேயெம்மூர்.* (க)

(29) மறையின் மணந்தாரை வன்பரதர்பாக்கத்து மடவார்செங்கை
இறைவளைகடுற்றுவதை ¶யேழையமெங்ஙனம் யாங்கறிகோமைய
நிறைமதியுமீனுமென வன்னநீள்புன்னை யரும்பிப்பூத்த
பொறைமலிபூங் §கொம்பேறவண்டாம்பலூதும் புகாரேயெம்மூர்(உ)

(30) உண்டாரைவென்னறுவூணொளியாப் பாக்கத்துளுறையொன்றின்றித்
தண்டாநோய் மாதர்தலைத்தருதி $ யென்பதியாங்கறிகோமைய
வண்டாறிரையழிப்பக்கையான்மணன் முகந்துமதிமேனீண்ட
புண்டோய்வே னீர்மல்க மாதர் கடறூர்க்கும் புகாரே யெம்மூர். (ங)

---

(28) மணிமுறுவல் - நல்ல முறுவல். செவ்வாய்முறுவலை ஒவ்வா வேனும். வாங்கும் - கொள்ளும். மான்மகன் போல் - மயங்கின மகன் போல்; காமன்போலென்பாருமுளர். வீங்கோதம் வெண்முத்தத்தைத் தந்து பூங்கோதையைக் கொண்டு; ஓதம் : எழுவாய்.

இது கையுறைமறை.

(29) மறையின் மணந்தாரை - அப்படி மணந்த மடவாரை. அன்னம் அரும்பிப்பூத்த புன்னையிலே ஏறியிருக்க நிறைமதியும் மீனு மெனக்கருதி ஆம்பல் மலருமென்க. வண்டு ஊதுமெனவே மலர்தல் பெற்றும். இங்ஙனம் கூறிற்று, மதிகண்டு ஆம்பல் மலருமாதலால்; "உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்.........ஆம்பல்" (சீவக. 2652) என்றார் பிறரும்.

மதியும் மீனுமென்று கண்டார் கருதப் புன்னையிலே அன்ன மேறிற்றாக வண்டு ஆம்பலை யூதுமென்க.

(30) உண்டாரை வெல் நறு - உண்டவர்களைக் கடுமை செய்யும் நறு. ஊணொளியா - உண்டவூணமறையாத [இன்றியொளியாத];

இவை யிரண்டும் தோழியிற் கூட்டங்கூடிப் பின்புவாரா வரைவ லென்றாற்குத் தோழி கூறியவை. இவை மூன்றும் சார்த்துவரி.

---

(28) - (30) இவற்றை 7 : 5-7 கவிகளோடு ஒப்பு நோக்குக.

(29) அன்னமும் புன்னைமலரும் மதிக்கும் விண்மீன்களுக்கும்.

(30) "உண்டாரை......ஒளியா" (குறள், 928); கலித். 115 : 1-2. வண்டால் : வண்டல் - சிற்றில்; நீட்டல் விகாரம்.

(பி - ம்.) †'யொழியா தொழித லுலகோம்பும்' ‡'விளங்கொளிர்' ¶'யேழையரெங்ஙனம் யாங்கறிகோவைய' §'கொம்பேறி' $'யென் பதை யாங்கறிகோவைய'

(திணைநிலைவரி) வேறு

(31) புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
இணர்ததையும் பூங்கான லென்னையு நோக்கி
உணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர்ப்பன்
† வணர்சுரி யைம்பாலோய் வண்ண முணரேனால். (க)

(32) தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரும்
எம்மை நினையாது ‡ விட்டாரோ விட்டகல்க
அம்மெ னிணர வடும்புகா ளன்னங்காள்
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால். (உ)

(33) புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
¶ இன்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ. (ங)

---

(31) ஆடும் - விளையாடும். உணர்வொழிய - உணர்வு தன்னைவிட. சேர்ப்பன் வண்ணம்.

இஃது அறியேனென்று வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தது.

(32) விட்டாரோ : ஓகாரம் ஒழியிசை. தண்ணளியும் தாமும் தேரு மெனப் பின்பு சில சொல்லப்புக்கு அதனைக் காதன்மிகுதியாற் கலங்கி விட்டாரென்றாள். உயர்திணையையும் அஃறிணையையுமெண்ணி உயர் திணையான் முடித்தார். தண்ணளியும் தேரும் விடுக; அவற்றிற்கு என்ன உறவுண்டு. மறக்கமாட்டேமென்றது ஒரு சொல்.

(33) துயிலல் - மொட்டித்தல். இன்கள்வாய் நெய்தாலென்றாள், தன் கண் துயிலாது வருந்த அது கவற்சியின்றித் துயிறலின். கள்ளுண்டு மயங்கினையாதலாற் கேட்டும் சொல்லமாட்டாயாயினை. எய்துங் கனவி னுளென்றாள், உறங்குவார்க்குக் கனவுமுண்டென்று.

---

(31) இணர்-பூங்கொத்துக்களையுடைய. இணர்ததைகானல் : கலித். 69 : 16. வணர்சுரி ஐம்பால் : குறுந். 82 : 1. மு. ஒப்பு. திருச்சிற். 84; "பாடுஞ் சிறை......நெடுந்தகையே" (இறை. 11, உரை.)

(32) நம்மை......மாட்டோம் : குறுந். 200 : 4.

(33) புன்கண் - துன்பம். வன்கணார் - கொடியவர். கள்வாய் நெய்தல் : குறுந். 296 : 4.

(மேற்.) 32 : 3. 'இது கேளாதனவற்றைக் கேட்பனபோலக் கூறியது' (தொல். செய், 200, ந.) மு. 'இது வன்மொழியாற் கூறல்' (தொல். களவு. 23, இளம். ந.); இறை. 10, உரை. 'தலைமைப் பொருளையும் தலைமையில் பொருளையும் எண்ணித் 'தலைமைப்பொருள் வினையால் முடித்தல் (தொல். கிளவி. 51, சே.); பிர. 16, உரை; இ. வி. 298, உரை.

(33) 'இது குறிபிழைத்துழித் தன்வயின் உரிமையும் தலைவன்வயிற் பரத்தைமையும்படக் கூறியது' (தொல். களவு. 16. ந.); இறை. 30, உரை; நம்பி. 164.

(பி - ம்.) † 'வணரொலியைம்பாலாய்' ‡ 'விட்டனரே' ¶ 'இன்கண் வாய்'

(34) †புள்ளியமான் றேராழி போன வழியெல்லாம்
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடீங்
குள்ளாரோ டுள்ளா ‡யுணராய்மற் றென்செய்கோ. (ச)

(35) நேர்ந்தநங் காதலர் ¶நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
ஈர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே. (ரு)

(36) நேர்ந்தநங் காதலர் ¶நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்வாழி கடலோதம்
ஊர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்மற் றெம்மொடு
தீர்ந்தாய்போற் றீர்ந்திலையால் வாழி கடலோதம். (சு)

(மயங்குதிணை நிலைவரி) வேறு

(37) நன்னித்திலத்தின் பூணணிந்து \$நலஞ்சார்பவளக் கலையுடுத்துச்
செந்நெற்பழனக் கழனிதொறுந் திரையுலாவு கடற்சேர்ப்ப
புன்னைப்பொதும்பர் மகரத்திண் கொடியோனெய்த புதுப்புண்கள்
என்னைக்காணு வகைமறைத்தா §லன்னைகாணி னென்செய்கோ.(க)

---

(34) புள்ளியின் இயல்பையுடைய குதிரை; இது மாவின் கடுமை கூறிற்று; "புள்ளியற் கலிமா வுடைமை யான" தொல். கற்பு. 53) என்றார் பிறரும். ஈங்குள்ளார் - அயலாராகிய அலர்தூற்றுவார்; என்மனம் விட்டுப்போகாத தலைவரென்றுமாம். உள்ளாய்-அவர் கூற்றிலே நிற்கின்றாயாதலால் என் நோயறியாய்: என் செய்வேனென்றாள். ஓகாரம்:ஈற்றசை.

(35) நேர்ந்த - நம்மோடு பொருந்தின. ஓதங்கள் ஊராநின்றன.

(36) தீர்ந்தாய்போல் தீர்ந்திலை-உறவுபோலிருந்து உறவாயிற்றிலை; காரியத்தால் வேறுபட்டாய்.

இவ்வைந்தும் காமஃமிக்க கழிபடர்கிளவி.

இவை திணைநிலைவரி.

(37) புதுப்புண் என்றது, தலைவி மேன்மேல் வருந்துகின்ற வருத்தத்தை. என்செய்கு - என்செய்வேன்.

---

(34) தலைவன் தன்னைவிட்டு.விரைவில் நீங்கினமை கருதி, புள்ளியல் மான் தேர் என்றார். இச் செய்யுள் 'நேர்ந்த நம் காதலர்' என்னும் முதற் குறிப்பையுடைய இரண்டு செய்யுட்களுக்கும் பின்னர்ச் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

(35) நேமி - தேருருளை.

(37) நித்திலம் - முத்து. மகரத்திண்கொடியோன் - மன்மதன்.

(மேற்.) 34. மு. 'இது கேளாதனவற்றைக் கேட்பனபோல் கூறியது; இதனுள் கடலும் கானலும் புள்ளும் மானும் கூறப்பட்டது' (தொல். செய். 200, இளம். ந.)

(36) இறை. 7, உரை.

(பி - ம்.) † 'புள்ளிமான்றேர்' ‡ 'யுணர்ந்தாய்' ¶ 'நேமியொடுந் திண்டேர்' \$ 'நலஞ்சால்' § 'லன்னைகாண்கிலென்'

(38) வாரித்தரள நகைசெய்து வண்செம்பவள வாய்மலர்ந்து
சேரிப்பரதர் வலைமுன்றிற் றிரையுலாவு கடற்சேர்ப்ப
மாரிப்பீரத் தலர்வண்ண மடவாள்கொள்ளக் கடவுள்வரைந்
†தாரிக்கொடுமை செய்தாரென் றன்னையறியினென் செய்கோ. (உ)

(39) புலவுற்றிரங்கியது நீங்கப்பொழிற்றண்டலையிற்புகுந்துதிர்ந்த
கலவைச் செம்மன் மணங்கமழத் திரையுலாவு கடற்சேர்ப்ப
பலவுற் ‡றொருநோய் துணியாத படர்நோய்மடவா டனியுழப்ப
அலவுற்றிரங்கி யறியாநோ யன்னையறியி னென்செய்கோ. (ங)

## வேறு

(40) இளையிருள் பரந்ததுவே யெற்செய்வான் மறைந்தனனே
களைவரும் புலம்புநீர் ¶கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார்நாட் டுளதாங்கொல்
வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை. (ச)

(41) கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
எதிர்மலர் $புரையுண்க ணெவ்வநீ ருகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய் §போனார்நாட் டுளதாங்கொல்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தவிம் மருண்மாலை. (ரு)

---

(38) வாரித்தரளம் - கடல்முத்து. கடவுள் வரைந்து - கடவுளரை வழிபட்டு. அறியின் - ஆராய்ந்தறியின்.

(39) புலவுற்றிரங்கியது-புலால்நாற்றமுற்று வருந்தியது; துனியால் இரங்குதலுமாம். நீங்க - புலால்நாற்றம் நீங்க. கலவை - பலவுங் கலந்தது. செம்மல் - பழம்பூ. பலவுற்று - பல நோயிலே பொருந்தி. பல துன்பங்களுமுறுதலால், ஒரு நோயிற்றுணியவொண்ணாத நினைவையுடைய நோயை மடவாள் தானேயறிந்து அனுபவிக்க; படர் - நினைவு. அலவுறுதலும் இரங்கலும் ஒருவர் அறியப்படாத நோயை. அன்னையறியாத நோய். நோய் காரணமாக அலவுற்றென்க.

இவை மூன்றும் அலரறிவுறீஇ வரைவுகடாவியவை.

(40) இளையிருள் - இளையவிருள்; விகாரம்; களைதற்கரிய வருத்தத்தால் வந்த நீர்.

(41) எதிர்மலர் - செவ்விமலர்; எதிர்த்துப் பிணைத்த மலரென்றுமாம்; தோற்றுகின்ற மலரென்றுமாம்.

---

(38) பஞ்சலைக்குப் பீர்க்கமலர் - நற். 197 : 1-2; குறுந். 98 : 5.

(40) தலைவனைப் பிரிந்த தலைவிக்குத் துன்பம் தருதலானும், செவ்வானத்தைக் காட்டுதலானும் மாலைக்காலத்தை எரிசிந்தி வந்ததென்றார்; "தீத்துழைஇவந்த......மாலை" (7 : 51.)

(பி - ம்.) † 'தாரிக்கொடுநோய்செய்தார்' ‡ 'றொருநீர்' ¶ 'கண்பொழி' $ 'புரையுங்கண்' § 'புணர்ந்தார் நாட்'

(42) பறவைபாட் டடங்கினவே †பகல்செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட் டுளதாங்கொல்
மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை. (௩)

(சாயல்வரி) வேறு

(43) கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையன் மனம்விட் டகல்வா ரல்லர். (௧)

(44) கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றா ரொருவர்
நீநல் கென்றே நின்றா ரவர்நம்
மானேர் நோக்க மறப்பா ரல்லர். (௨)

(45) அன்னந் துணையோ டாடக் கண்டு
‡நென்ன னோக்கி நின்றா ரொருவர்
‡நென்ன னோக்கி நின்றா ரவர்நம்
பொன்னேர் சுணங்கிற் போவா ரல்லர். (௩)

(முகமில்வரி) வேறு

(46) அடையல் குருகே யடையலெங் கானல்
அடையல் குருகே யடையலெங் கானல்
உடைதிரைநீர்ச் சேர்ப்பற்குறுநோ யுரையாய்
அடையல் குருகே யடையலெங் கானல். (௧)

---

(42) பாட்டடங்கின - ஒலித்தல் அடங்கின. நிறைநிலா - நிறுத்தல் நில்லாவாய். நோய்கூர - நோயுண்டாகாநிற்க. மறவை - மறத்தை யுடைத்தாய்.

இவை மூன்றும் பொழுதுகண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்கு உரைத்தவை.

இவை ஆறும் **மயங்குதிணைநிலைவரி.**

(43) பொய்தலழித்து - விளையாட்டை மறப்பித்து; **நற்றிணைப்** பாட்டில் "சேர்ப்பே ரீரளை யலவற் பார்க்கும், சிறுவிளை யாடலு மழுங்கி, நினைக்குறு பெருந்துயர மாகிய நோயே" (123 : 10 - 12) என்றாற் போல.

(44) என்றேநிற்கை - என்று சொல்லியே நிற்கை. நம்பார்வையென் றாள், வேற்றுமையின்மையால். மானேர்நோக்கம்-மானையொத்தபார்வை.

(45) பொன்னேர் சுணங்கின் - பொன் தோற்கின்ற சுணங்குபோல.

இவை மூன்றும் மெலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தல்; ஆற்று வித்தற்பொருட்டுத் தோழி இயற்பழிக்கத் தலைமகள் இயற்படமொழிந் ததூஉமாம்.

இவை மூன்றும் சாயல்வரி.

(46) நோயுரையாயென்றது முற்று. ஆதலால், எம்கானலில் வந் தடையாதே கோள் என்றாள். இது காமமிக்க கழிபடர்கிளவி.

---

(42) சூரியன் மறையப் பறவையொலி அடங்கல் : **கலித்.** 121 : 4. மறவை : **புறநா.** 44. (43) கைதை - தாழை.

(**பி - ம்.**) † 'பகற்செய்வான்' ‡ 'நின்னேர்நோக்கி நின்று'

மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய †குண்டந் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் ‡கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினுஞ் போய்ப்பிறப்பர் யாமொருநாள்
¶ஆடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
§பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய
காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநம்
கோவல னென்றாளோர் குற்றிளையாள் கோவலனும்
பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் ‖டியாவும்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன

---

58 - 9. சோமகுண்டமும் சூரியகுண்டமுமென்னும் பேரையுடையன; முற்று.

55 - 63. முற்பிறப்பிற் கணவன்காரணமாக ஒரு நோன்பு தப்பினும்; அதற்குப் பரிகாரமாவது இந்தக் குண்டம் படிந்தாடிக் கோட்டந் தொழுதல்; தொழுவார் கணவரொடுகூடி இன்புறுவரென்று சொல்ல, கண்ணகியும்.

64. *பீடன்றெனவிருந்த பின்னர்* - குலத்திற் பிறந்தார்க்குப் பெருமையன்றென இருந்தகாலை.

65-6. காவலன்போலுங் கோவலன் கடையிடத்தானென்று மாறியுரைக்க; அன்றித் தூரத்தே பார்த்து ஐயுற்று நங்காவலன் போலுமென்று அவன் அணுகினவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளெனினுமாம்; கோவலன்வந்து நங்கடைத்தலையான்; அவன்றான் நெடுங்காலம் நம்மை நீங்காக் குறிப்பினையுடையனென்றாளெனினும் அமையும்.

66-7. சிலதி கூறுதலும் கோவலன் உட்புகுந்து.

(4) கொடியிடையார்தாம் கோலங்கொள்ளாநிற்க, அக்காலத்தே (66) கோவலன் (67) பாடமைசேக்கையுட்புக்கென்க.

69. சலம் - பொய். சலதி - பொய்ச்சி. ஆடி - அனுபவித்து.

70. குலந்தருவான்பொருள் - தாயத்தாரால் தரப்பட்டபொருள்.

71. இலம்பாடு - வறுமை.

---

(மேற்.) அடி, 71 : தொல். புள்ளி. 21, உரி. 62, ந.; இ. வி. 129, 281.

(பி - ம்.) † 'குண்டத்துறை' ‡ 'கணவனொடு' ¶ 'ஆடுதுமோ வென்ற' § 'பீடன் றெனவுரைத்த' ‖ 'டியாதும்'

நலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
†சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோ
‡டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னோடிங்
கேடலர் கோதா ¶யெழுகென்று நீடி
வினைகடைக் கூட்டவியங் §கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்.

### வெண்பா

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை ||வறிதாக்க—மூதை
வினைகடைக் கூட்ட வியங் $கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்.

---

72. நகை - ஒளி.

74. சிலம்பு முதலாகவென்றான், வாணிகஞ்செய்வதற்கு; முதலீடென்பராகலான். சென்ற கலன் - முன்பு வாங்கியழித்த ஆபரணம்.

75. உலந்தபொருள் - கெட்ட பொருள்.

(76) மதுரையிடத்துச் சென்று (75) ஈட்டுதலுற்றேனென்க.

77. நீடி - நெடுங்காலம் நின்று.

78. வியங்கொண்டான் - வினையினது ஏவலைக்கொண்டான்.

77-8. எழுகென்று வியங்கொண்டானென்க.

78-9. கங்குலை இடத்துநின்றும் சுடர்போக்குவதன் முன்னென்க; என்றது, இருளிலே போதல்பற்றி.

'காதலிகண்ட': மாதவிதன்சொல்லை வறிதாக்க என்றது, வேனிற்காதையில் 'காலைகாண்குவம்' (116) என்ற வார்த்தையை. முந்தை மூதையாயிற்று.

---

(பி - ம்.) †'சிலம்புகொண் மோவெனச் சேயிழைகே ளிந்தச், சிலம்பு' ‡'டுலந்த பெரும்பொரு ளீட்டுற்றேன்' ¶'யெழுகென்ன மூதை' §'கொண்டார்' ||'வறிதாக்கி' $'கொண்டார்'

1 - 4. அகனகர்......தாங்கொள்ள

(இ - ள்.) கொடியிடையார், அகன்ற மனையிடமெங்கும் கதிரோன் மறைந்தமாலைக்காலத்தே அரும்பு புரிநெகிழ்ந்த முல்லையினது ஒளி மலரை நெல்லோடேதூவி இல்லுறைதெய்வத்தை வணங்கி மாணிக்க விளக்கை மைவிளக்கோடே எடுத்து அம்மாலைக்காலத்தே இராப்பொழுதைக்கு ஆம்படி கொழுநர்மார்பைத் தமது [1] முலையாற் பொரு(ந்து)தற்கேற்ற கோலங்களைக் கொள்ளாநிற்பவென்க.

என்றது, மகரக்குழைமுதலிய மணியும் பூணும் மதாணியுமுதலிய அணியும் இரட்டையங்கண்ணி பிணையன் முதலிய பணியுங் களைந்து நொய்யனவே புனைந்தும் பூண்டும் முடித்துஞ் செய்தல். அகனகர் - பட்டினப் பாக்கமெனினும் அமையும். நிகர் - ஒளி; [2] "நீர்வார் நிகர் மலர் கடுப்ப" என்றார் கதையினும்.. பகல் : ஆகுபெயர். மாய்தல் - மறைதல்; "களிறு மாய்க்குங் கதிர்க்கழனி" (மதுரைக். 247) என்றாற் போல. மணிவிளக்கம் : உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது; மணி - அழகுமாம். கோலம் - ஒப்பனை; தமது கொழுநரோடெதிர்க்கும் போர்க்கோலமுமாயிற்று. தாம் - அங்ஙனம் தூவியமகளிர்தாம். "நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது, மல்ல லாவண மாலை யயர" (43-4) என்றார் நெடுநல்வாடையினும்.

4 - 6. மேலோர்நாள்......பாலகன் றன்சோர

(இ - ள்.) முன்னொருநாளிலே மாலதியென்பாள் ஒரு பார்ப்பனி தனது மாற்றாள் குழவிக்குத் தன்முலை சுரந்தபாலைச் சங்காலூட்ட அப்பால் விக்குதலாலே தன் கையிலே அக்குழவி மரிக்கவென்க.

பால் - ஆன்பாலுமாம். பாலகனென்பது காலவழக்கு. சோர்தல் - மரித்தல்.

6 - 8. மாலதியும்......மகக்கொண்டு

(இ - ள்.) அங்ஙனம் பாலகன் மரித்தலானே, அம்மாலதியும் பார்ப்பானோடு அவன் மனைவியும் என்மேல் அடாப்பழி கூறுதலொழித்து ஏற்பன கூறாராதலால் இதற்கு என்செய்கேனென்றேங்கி அம்மகவைக் கொண்டென்க.

உம்மை : இழிவுசிறப்பு. ஒடு : எண்ணொடு. படாதன - அடாதன. விட்டு - ஒழிந்து.

9. அமரர்தருக்கோட்டம்

(இ - ள்.) தேவர்தரு நிற்குங்கோயில்,

வெள்யானைக்கோட்டம்—(இ - ள்.) ஐராவதம் நிற்குங் கோயில்.

10. புகர்வெள்ளைநாகர்தங்கோட்டம்

(இ - ள்.) அழகினையுடைய பலதேவர்கோயில்,

புகர் - அழகு. வெள்ளைநாகர் - பலதேவர்.

---

[1] 8 : 8-13, அடியார். [2] இது, அகநா. 11-12-ஆம் அடியாகவும் காணப்படுகின்றது.

**10 - 11. பகல்வாயிலுச்சிக்கிழான்கோட்டம்**

(இ - ள்.) கீழ்த்திசையில் தோன்றுகின்ற சூரியன்கோயில்,

பகல்வாயில் - பகல்தோன்றுகின்றவாயில்; ஆவது கீழ்த்திசை. உச்சிக்கிழான் - பகற்பொழுதிற்குரியோன்; இனிப்பகற்பொழுதிற்கு வருவாயாயுள்ளவனென்றுமாம்; சூரியன்கோயிலென்றபடி.

**11. ஊர்க்கோட்டம்**

(இ - ள்.) இறைவனூராகிய கைலாயம் நிற்குங்கோயில்,

**வேற்கோட்டம்**—(இ-ள்.) முருகவேள் நிற்குங்கோயில்; வேல்: ஆகுபெயர்.

**12. வச்சிரக் கோட்டம்**

(இ - ள்.) வச்சிரப்படைநிற்குங்கோயில்,

**[1] புறம்பணையான் வாழ்கோட்டம்**

(இ - ள்.) சாதவாகனன்கோயில்,

புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று; "புறம்பணை யியம்பு மோசை" (85) என்றார் சிந்தாமணியினும்.

**13. நிக்கந்தக் கோட்டம்**—(இ - ள்.) அருகன்கோயில்,

என்னை? "துக்கந் துடைக்குந் துகளறு காட்சிய, நிக்கந்த வேடத் திருவடி கணங்களை, ஒக்க வடிவீழ்ந் துலகியல் செய்தபின், அக்கதை யாழ்கொண் டமைவரப் பண்ணி" என்றார் வளையாபதியினும்.

**நிலாக்கோட்டம்**—(இ - ள்.) சந்திரன்கோயில்,

இவை செவ்வெண்.

**புக்கெங்கும்**—(இ - ள்.) இக்கூறிய கோயில்களெங்கும்புகுந்து,

**14 - 5. தேவிர்காள்......பாடு கிடந்தாளுக்கு**

(இ - ள்.) இங்ஙனம் எங்கும்புக்கவள், தெய்வங்களே! எமது மிக்க இந்நோயைத் தீர்மினென்று இரப்பவும் ஒருவரும் தீராமையின் ஆண்டுப் பொருந்தாதுபோந்து ஈண்டுச் சாத்தனிடத்தே பொருந்தி அவன் பால் வரங்கிடந்தாளையென்க.

தேவும் தெய்வத்திற்கொருபெயர்; "தேவாதிதேவனவன்சேவடி" (சீவக. 1) என்றாராகலின். தேவிர்: இர் முன்னிலைப்பன்மை. தீர்மென்று: ஈற்றுமிசையுகரம் கெட்டது. [2] பாசண்டம் - தொண்ணூற்றறு வகைச் சமய சாத்திரத்தருக்கக்கோவை; என்னை? "பண்ணுற் றிறத்திற்

---

[1] "குடுமிப் பருவத்தே கோதை புனைந்த, இடுமுத்துப் பூதனிருப் பப் படுமுத்தம், புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க், கென்ன முறைய ளிவள்" என்னும் பழஞ்செய்யுளின்பொருள் (தொல். செய். 118, ந. மேற்.) ஈண்டு அறியற்பாலது. [2] "பாசண்டத் துறையு மிவற் றுட் பலவாம், பேசிற் றொண்ணூற் றறுவகைப் படுமே" (திவாகரம், 12)

பழுதின்றி மேம்பட்ட, தொண்ணூற் றறுவகைக் கோவையும் வல்லவன், விண்ணூ றியங்கும் விறலவ ராயினும், கண்ணுறி நோக்கிக் கடுநகை செய்வான்" என்றுர் வளையாபதியினுமாகலின். இவற்றிற்கு முதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனுதலின், † மகாசாத்திரனென்பது அவற்குப் பெயராயிற்று. சாத்தற்கு : உருபுமயக்கம். இது "மணற்கீன்ற" (அகநா. 212) என்றாற்போல நின்றது. கிடந்தாளுக்கு - கிடந்தாளை; இயல்புமாம். இப்பொருட்கு ஆசிலாயென்று சொல்லியென ஒரு சொல் வருவிக்க.

## 16 - 22. ஏசும்படியோர்......மகவை

(இ - ள்.) சுடுகாட்டுக் கோட்டத்து இடுபிணந்தின்னும் இடாகினிப் பேய் ஏசும்படி ஓரிளங்கொடியாய்த் தூங்கிருளிற்சென்று அங்குப் பாடு கிடந்தாளை நோக்கி ஒன்றினும் குற்றமற்றவளே, கேளாய்; முற்பவத்தில் தவஞ்செய்யாதோர்க்குத் தேவரும் வரங்கொடார்; அதுபொய்யன்று; மெய்யெனச் சொல்லி அங்ஙனம்பட்ட நின் பிள்ளைப்பிணத்தைப் பார்க்கத் தந்துகாணெனச் சொல்லாநின்று பறித்து அவள் வாங்கி மடியகத்திட்டாளென்க.

ஏசல் - பழித்தல். படி - வடிவு. பிறரைப்பழிக்கும் வடிவையுடையதொரு பெண்வடிவுமாம். சுடுகாட்டுக்கோட்டம் - [1] சக்கரவாளக்கோட்டம். தூங்கிருள் - செறிந்தவிருள்; யாவரும் துஞ்சுமிருளுமாம். இடுபிணம் - குழியிலிடுபிணம். மடி - வயிறு; "படியை மடியகத்திட்டான்" (நான்மணி. கட. 2) என்பதனுனும் உணர்க. மடியகத்திட்டாள் - விழுங்கினுள். மக, "குழவியு மகவு மாயிரண் டல்லவை, கிழவ வல்ல மக்கட் கண்ணே" (தொல். மரபு. 23) என்பதனுற் கூறப்பட்டது; பாலகனென்பது கால வழக்கு.

## 22 - 8. இடியுண்ட......தையலாள்

(இ - ள்.) இடிக்குரல்கேட்ட மயில் அகவுமாபோலே ஏங்கியழுகின்ற தையலாளுக்கு அச்சாத்தன் அன்னாய், நீ செல்கின்ற வழிமுன்னர்ப் பொதும்பரிடத்து உயிரோடு கிடக்கின்ற குழவியைக் காண்கின்றிலேயோவென, அவள் அது செய்ய ஏங்கி அழுகின்றாய்! அழாதொழியென்று தான் அக்குழவியாய் அவ்விடத்துச்சென்று கிடப்ப, அவள் வஞ்சக்குழவியை ஐயமின்றித் தன்குழவி யென்றெடுத்து வயிற்றிலே அணைத்துக் கொடுபோய்த் தாய்கையிற் கொடுத்தாள்; அங்ஙனம் ஏங்கியழுத அத்தையலாளென்க.

அடிக்கப்பட்டதனை 'அடியுண்டது' என்றாற்போல இடிக்கப்பட்டதனை இடியுண்டதென்றார்; உண்டல் - உறுதல்.

## 28 - 32 தூய......மேயநாள்

(இ - ள்.) அக்குழவியாய இறையோனும் இருமரபுந்தூய மறையோனுக்குப் பின்செல்லும்பிள்ளையாய் மிக்க கல்விகளையும் அவற்றின்

---

[1] இது காவிரிப்பூம்பட்டினத்திற் பண்டைக்காலத்து மயனால் நிருமிக்கப்பட்டது; இதன் வரலாற்றை **மணிமேகலை**, ஆருவது காதையிற் காண்க.

(பி - ம்.) † 'மகாசாத்தன்'

பொருட் கேள்விகளையும் கற்றும் தரித்தும் துறைபோய்த் தந்தைதாயர் இறந்த பின்னர் அவர்க்கு நீர்க்கடன் முதலியவுஞ்செய்து தன் தாயத்தாரோடும் [1] வெல்வழக் குரைத்து எட்டியாண்டு தன் மனைவியோடே கூடி நடந்தபின் ஒருநாளிலென்க.

வான்பொருட்கேள்வி - மறைநூலும் அங்கமும். துறைபோதல் - [2] அதற்குத் தக நிற்றல். மாணியாயெனவே சௌளமும் உபநயனமும், துறைபோயெனவே கல்வி கேள்வி முதலிய பிரமசரியங்காத்தலுங்கூறி, மேல் "தேவந்தியென்பாண்மனைவி" என்பதனால் விவாகமும் காருகத்தமுங் கூறினமையுமுணர்க. இறையோனும் : உம்மை சிறப்பு. வழக்குரைத்தெனவே, தன் மனைவிக்குப் பொருட்குறைபாடில்லாமற் செய்து என்பதாயிற்று. இறையோனும் அவர் மடிந்தபின்னர்க் கடன் கழித்து வழக்குரைத்தென்க. தாயரென்றார் மாலதியையும் கூட்டி. மேயநாள் - மேவியநாள்; இவளைத் தீவலஞ்செய்து [3] நாலீராண்டு கழிந்தபின்னர்; 'மேவினுள்' என்று பாடமோதித் தன்னை மேவினவளென்று பொருளுரைப்பாருமுளர்.

## 33 - 6. தேவந்தி யென்பாள்......நீங்குதலும்

(இ - ள்.) அங்ஙனம் கூடி நடந்த தன்மனைவியாகிய தேவந்தியென்று பெயர் கூறப்படுவாளுடைய பூவின்தன்மை தலைவந்த மையுண்டகண்கள் இதனைப் பொறுப்பனவாகவென நிருமித்துக்கொண்டு பின்பு அவளை மேவித் தனது எக்காலத்தும் முதிராத இளைய அழகினது நலத்தை வெளிப்படுத்தி அவன் அவள் குறிப்பினையறிந்து அதற்கேற்ப அவட்கு நீ எம்கோட்டத்து வாவெனச் சொல்லிப் பிறர்க்கெல்லாம் தீர்த்தத்துறை படிவேனெனச் சொல்லி நீங்கினுனைகவென்க.

[4] மக்கள் கண்ணிற்குத் தெய்வயாக்கை காணப்பொருதாகலின் இவள்கட்குப் பொறுக்கக்கடவதென்று நிருமித்துக்கொண்டான்; "அந்தரத்துள்ளோ ரறியா மரபின், வந்து" (6 : 72 - 3) என இதனுள்ளும், "கரந்துரு வெய்திய கடவு ளாளரும்" (1 : 15), "தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு, நாலேழ் நாளினும்" (1 : 66 - 7) என மணிமேகலையுள்ளும் கூறினமையானுமுணர்க. இனி உண்கணென்பதனை முன்னிலை விளியாக்கி இம்மறையை நீ பொறுக்கவென்று சொல்லிக் காட்டினனெனினும் அமையும்.

## 36 - 40. தூமொழி......கொண்டிருப்பாள்

(இ - ள்.) அங்ஙனமாகிய தூமொழி, என்னெஞ்சிற்பிணித்தகணவன் தீர்த்தத்துறைகளெங்கும்போய்த் தீர்த்தமாடுவேனென்று என்னை விட்டகன்றனன்; மறுத்தும் இவ்விடத்தே அவன் மனத்தைத் திரும்பப் பண்ணி அழைத்துத் தருவாயென்று ஒரு பெயரிட்டுக்கொண்டு அவன் கோட்டத்தை வழிபடுதலை நாடோறும் கடனாகக் கொண்டிருக்கின்றவளென்க.

---

[1] "தோற்பது, கொண்டு புகாஅ ரவை" (பழ. 4.) [2] குறள், 391.
[3] சிலப். 30 : 85. [4] பெருங். 1. 53 : 16.

## 40 - 44. வாட்டருஞ்சீர்........கணவனோ டென்றாள்

(இ - ள்.) நிறைந்த சீருடைய கண்ணகியாகிய நல்லாளுக்குக் கொழுநன் பிரிதலால் உற்றதோர் துன்பமுண்டென்று நினைந்த நெஞ்சின் வருத்தத்தை யுடையாளாய்க் கோட்டத்தை நண்ணி அறுகுமுதலிய வற்றை இவள் கணவனைப் பெறல்வேண்டுமெனத் தூவிப் பின்னர்க் கண்ணகிபாற் சென்று ஆண்டு ஆசிகூறுவாள் கணவனைப் பெறுவாயாக வென்றாளென்க.

இனி, கண்ணகிபால் நண்ணிச்சென்று தூவிக் கணவனொடு வாழ்வு பெறுகவென்றாளெனினும் அமையும். வாடு வாட்டென விகாரம்; வாடுதல் - குறைதல்; குறைதலரியவெனவே நிறைந்தவென்பதாயிற்று; பிறரால் வாட்டுதலரிய வெனவுமாம். இனைதல் இனையாயிற்று; விகாரம். கணவனோடு - கணவனை.

## 44 - 54. பெறுகேன்.........நகையாகும்

(இ - ள்.) செறிதொடீஇ, நீ இங்ஙனங் கூறுதலாற் பெறுவேனாயினும் என்னெஞ்சம் ஐயுறுகின்றதுகாண்; அஃது எற்றாலெனின், நெருநற்கங்குற் கனவின்கண் என் கொழுநன் என்னைக் கைப்பற்றினனாய்ப் போக யாங்கள் ஒரு பெரிய பதிக்கட்புக்கோம்; அங்ஙனம் புக்க பதியிடத்தே எங்கட்கு ஏலாததோர் படிற்றுரையை அவ்வூரார் இடுதேள் இடுமாறுபோல என்மேலிட்டனர்; அங்ஙனம் அவரிடப்பட்ட அப்படிற்றுற் கோவலற்கு ஓர் தீங்குற்றதென்று பிறர் சொல்லக் கேட்டு அது பொறாது அவ்வூரரசன் முன்னர்ச்செல்லாதேன் சென்று வழக்குரையாதேன் வழக்குரைத்தேன்; ஆதலால் அவ்வரசனோடு அவ்வூர்க்கும் உற்றதோர் தீங்குண்டு; ஆனாலும் அவை தீக்கனாவாதலான் நினக்குரையேன்; இங்ஙனம் தீவினையுற்ற என்னோடு பொருந்திய மிக்கோனுடனே யான் பெற்ற நற்றிறங்களை நீ கேட்பாயாயின் அது நினக்கு நகையைத் தருமென்று சொல்ல வென்க.

கடுக்கும் - ஐயுறும்; கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிந்தது; "போற்றி னரியவை போற்றல் கடுத்தபின், தேற்றுதல் யார்க்கு மரிது" (குறள். 693) என்றாற்போல; அது, "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" (தொல். உரி. 86) என்பதனான் முடிந்தது. கனவினாற் கடுக்குமெனினும் அமையும். இடுதேளிடுதல் - தேளிடப்படுவார் காணுமே தேளல்லாத தொன்றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலங்கப் பண்ணுதல்; பாய்ச்சுத்தேளென்பாருமுளர். என்றன்மேல் : தன் அசை. என்றன் மேலென்றாள், பெண்பாற்றன்மையான்; அன்றி இப் பழியைத் தான் சுமந்து நிற்றலானெனினும் அமையும். தீங்கென்று அது கேட்டு - தீங்கென்று சொல்ல அதுகேட்டு; சொல்லவென ஒரு சொல்வருவிக்க. ஒடு : எண்ணொடு; வேறுவினை ஒடுவுமாம்; ஆவது காவலன் மரணமும் ஊர்தீப்பாடும். உம்மை : இறந்தது தழீஇயவெச்சவும்மை. உரையாடேனென்றாள்; "உரையா ரிழித்தக்க காணிற் கனா" (182) என்பது பழமொழியாகலின். தீக்குற்றம் - கடிதான குற்றம்; ஆவது முலைதிருகியெறிதல். நற்றிறம் - இருவரும் சுவர்க்கம் புகுதல். நகையாகுமென்றாள், இது கிட்டாததொன்றாகலின். எனவென ஈண்டும் ஒருசொல் வருவிக்க.

### 54 - 64. பொற்றொடீஇ........பின்னரே

(இ - ள்.) பொற்றொடீஇ, நீகண்டகனக்கொண்டு வருந்த வேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை; நின்கணவன் காரணமாக ஒரு நோன்பு முற்பிறப்பிலே தப்பினாய்; அதனால் உள்ள தீங்கு மிக்கன; அத்தீங்கும் கெடுவனவாக; காவிரி தன் நீரைக் கொண்டு சென்று கடலோடெதிர்த்து அலைக்கும் சங்கமுகத்தயலதாகிய பூவினிதழ் அவிழும் நெய்தற்கானலிடத்து இரண்டு தடாகமுள்ளன; அவையாவை யெனிற் [1]சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் பெயரையுடையன; அவற்றின் துறைகளில் மூழ்கிக் காமவேள் கோட்டத்திற்புக்கு அவனைத் தொழுதாராயின், அவர் இப்பிறப்பிலுள்ள நாளெல்லாம் தம் கணவரோடும் பிரிவின்றியிருந்து இவ்வுலகத்து இன்பமுறுவர்; மறுமைக்கும் போகபூமியிலேயும் போய்ப்பிறந்து கணவரோடும் பிரிவின்றி மூன்று பல்லங்காலம் இன்பம்நுகர்வராதலான் அவற்றை யாமும் ஒருஞான்று ஆடக்கடவேமென்று சொன்ன தேவந்திக்குக் கண்ணகி அங்ஙனம் துறைமூழ்கித் [2]தெய்வந்தொழுதல் எங்கட்கு இயல்பன்றென்று சொல்லி இருந்தபின்னாகவென்க.

"காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்" (சீவக. 1598) என்றாராகலின், இங்ஙனம் கூறினாள். இக்குண்டமிரண்டிற்கும் இவ்வுலகத்தின்புறலும், போகபூமியிற் பிறத்தலும் நிரனிறை யாக்கலுமொன்று; அவற்றை, "இரு காமத்திணையேரி" (39) என்றார் பட்டினப்பாலையிலும்.

### 64 - 6. நீடிய காவலன்.........குற்றிளையாள்

(இ - ள்.) அங்ஙனஞ்சொல்லி அவர் இருக்கின்றவளவிலே குறுந்தொழிலிளையாள் காவலன்போலுங் கோவலன் நீடிய நம் கடையிடத்தானென்றாளென்க.

*அன்றித் தூரத்தேபார்த்து ஐயுற்று நம் காவலன்போலுமென்று, அவன் அணுகினவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளெனினும் அமையும்; இனி, நம் கோவலன் வருகின்றவரத்து நம்மை நெடுங்காலம் காப்பான் போல இராநின்றதென்றாளெனினும் அமையும்.*

### 66 - 71. கோவலனும்......தருமெனக்கென்ன

(இ - ள்.) அங்ஙனங் கடைத்தலையானை கோவலனும், [3]கொடியிடையார்தாம் விளக்கங்காட்டிக் கோலங்கொள்ளாநிற்ப, அக்காலத்தே வந்து பெருமையடைந்த சயனத்தினிடத்தேபுக்கு அவன் தனது பைந்தொடியுடைய மேனிவாட்டமும் நெஞ்சுவருத்தமுங்கண்டு எல்லாப் பொருளிலும் பொய்யை மெய்யாகப் பொருந்துவித்தொழுகும் பொய்த்தியோடுங்கூடி ஆடிய ஒழுக்கத்தினானே நம்குலத்திலுள்ளார் தேடித்தந்த மிக்க நிதிக்குன்றமெல்லாம் அவள் பொருட்டால் தொலைந்தன; அதனான் இல்லாமையுண்டாதல் எனக்கு நாணைத்தருகின்றது காணென்ன வென்க.

---

[1] இங்கே கூறிய சோமகுண்டமும் சூரியகுண்டமும் முறையே திருவெண்காட்டுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமுமாமென்று சில பெரியோர் கூறுகின்றனர்.

[2] "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" (குறள், 55)

[3] இக்காதை, அடி, 3-4.

பாடு – படுக்கையுமாம். சலம் – பொய். சலதி – பொய்த்தி. ஆடுதல் – உடன்றுதல். குலந்தருவான்பொருள் – தொன்றுதொட்டு வருகின்ற பொருள். இன்று நாணுத்தருமென்றது, ‘கெட்டால் மதிதோன்றும்’ என்னும் வழக்கு.

### 72 - 3. நலங்கேழ்........கொண்மென

(இ - ள்.) இவ்வாறு அவன் தன்னைப்போற்றி இலம்பாடு நாணுத்தருமென்றதனை மாதவிக்குக் கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்து கூறினானகக் கருதி ஒளிபொருந்திய முகத்தே நலம் பொருந்திய சிறிய முறுவலை விளைத்து இன்னும் சிலம்பு ஒரிணையுள ; அவற்றைக் கொண்மினென்றாளென்க.

சிலம்புளவென்றாள், இவையொழிந்த கலனெல்லாம் தொலைதலால். இவை அணியாதிருத்தலின் அவனறியானாகக்கருதினும் அவன் தளர்ச்சி கூறுதலால் தான் இவையுண்மை நினைந்து கூறினாளென்க. புலந்து கூறினாளெனிற் கற்பின் தன்மையன்றாம்.

### 73 - 9. சேயிழை கேள்......கால்சீயா முன்

(இ - ள்.) இங்ஙனம் கருதிய சேயிழாய் ! கேள் ; நீ சொன்ன இச் சிலம்பை நான் வாணிகமுதலாகக் கொண்டு முன்பு நான் வாங்கியழித்த கலனையும் கெட்ட பொருளையும் தேடித்தொகுத்தலைத் துணிந்தேன் ; அஃது எவ்விடத்தே சென்றெனின், விரிந்த புகழையுடைய மதுரையென்னும் நகரிடத்தே சென்று ; ஆதலால் கோதாய் ! அதற்கு நீ இப்பொழுதே இங்கு நின்றும் என்னோடு எழுவாயாக வென்று சொல்லி முற்பவத்தில் தான் செய்த தீவினை நெடுங்காலம் நின்று நெஞ்சை ஒருப்படுத்துதலானே அவ்வினையினது ஏவலைக்கொண்டான் ; எப்பொழுது போதற்கெனிற் கங்குலை அவ்விடத்துநின்றும் சுடர் போக்குவதன் முன்னே யென்க.

சீத்தல் – விளக்குதல், சிலம்புமுதலா........உற்றேனென்பதற்குக் கலனைச் சிலம்பானும் பொருளை முதலானும் ஈட்டுதலுற்றேனென்றானெனினும் அமையும்.

இது, கனவென்னும் பொருளையே கருதாது மாலதி கதையையும் தேவந்தி கதையையும் கலந்து கூறிற்றேனும், உறுப்பழிவின்றி நடந்ததேனும் முந்நான்கடியினிறந்து வருதலான் நெடுவெண்பாட்டாகாது கலி வெண்பாட்டாதல் உணர்க.

#### வெண்பா

காதலிகண்ட........கால்சீயாமுன்.

இவட்கு மேற்கூட்டமின்மையாற் [1] கருநெடுங்கண்ணென்றார் ; கனவு சொல்லை வறிதாக்க வினைகடைக்கூட்ட வியங்கொண்டானென்க. சொல்லை வறிதாக்குதல் வேனிற்காதையிற் காலைகாண்குவமென்ற சொல்லைப் பயனின்றாக்குதல்.

(கூ) கனாத்திறமுரைத்த காதை முற்றிற்று.

---

[1] சிலப். 5 : 267.

## பத்தாவது

# நாடுகாண் காதை



வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ணின்ற கடைநாட் கங்குல்
ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
ஏழகத் தகரு மெகினக் கவரியும்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியும்
† தாளொடு குயின்ற தகைசால் சிறப்பின்
நீணெடு வாயி னெடுங்கடை கழிந்தாங்
கணிகிள ரரவி னறிதுயி லமர்ந்த
‡ மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து
பணையைந் தோங்கிய பாசிலைப் போதி

---

1. வான்கண் - ஆதித்தன். விழித்தல் - விளங்குதல்.

2. வெண்மதிநீங்க - வெண்மதி நீங்கின அளவிலே.

3. காரிருணின்ற கடை நாள் - காரிருள் கடையிலே நின்ற நாள்; ஆவது பூருவபக்கம்.

4. ஊழ்வினை கடாவுதலால் உள்ளந்தன்னைத் துரப்ப; வினை செலுத்தி நெஞ்சை ஓட்டவெனவுமாம்.

5. ஏழகத்தகர் - மேழகம். எகினமாகிய கவரி.

7. தாளொடு குயின்ற தகைசால் சிறப்பெனவே தாள்முதலான உறுப்பெல்லாம் அடங்கின; தாளொடு குயிற்றுதல் - போர்க்கதவு பண்ணும் போதே தாளோடே பண்ணுதல்.

8. வாயிலென்றது, ஆகுபெயராற் கதவை. வாயினெடுங்கடை யாவது - முதலான தோரணவாயில்.

(6) துணையெனத் (பா) திரிதருமென்றது - இவை ஒன்ருேடொன்று இனமல்லவாயினும் பழக்கத்துத் திரியும் (8) வாயில்.

10. வலஞ்செயா - வலத்திலேயிட்டு.

11. மாபோதிக்கு ஐந்துகொம்பாதலாற் பணையைந்தோங்கிய வென்ருர்.

---

அடி, 1: மலைபடு. 257. அடி, 11-2: மணி. 30 : 10.

(பி - ம்.) † 'தாழொடு குயிற்றியதகை' ‡ 'மணிவணன்'

அணிதிகழ் நீழ லறவோன் திருமொழி
அந்தர சாரிக ளறைந்தனர் சாற்றும்
இந்திர விகார மேழுடன் †போகிப்
புலவூண் டுறந்து பெய்யா விரதத்
தவல நீத்தறிந் ‡தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் ¶குழீஇய
ஐவகை நின்ற வருகத் தானத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்
நீரணி §விழவினு நெடுந்தேர் விழவினும்
சாரணர் வரூஉந் $தகுதியுண் டாமென
உலக நோன்பிக ளொருங்குட னிட்ட

---

12. திருமொழி - தருமம்.

13. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அறைந்தனர் சாற்றல் - ஆகமத்தைச் சொல்லி விளங்கப் பொருள் சொல்லுதல்.

14. இந்திரவிகாரம் - இந்திரன் நிருமித்தது. ஏழுடன்போகி என்றது; இவர் அன்று கழிந்தபடியாலே அவற்றை யடைவே கழிந்துபோ யென்றவாறு.

15. (பா) புலையூன் - மச்சமாங்கிசம்.

15-7. (பா) விரதத்தோடே அடங்கிய கொள்கையையுடைய விழுமியோரென்க.

18. ஐவகைநின்ற கோயில் - ஐந்து சந்திக்கும் ஐந்து கோயிலாய் நின்ற கோயில்.

19. சந்தியைந்து - ஐஞ்சந்தி ; அவையாவன : பஞ்சபரமேட்டிகள் தெரு. அவர் :—அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள்.

20. இவர்கள் கூடின மன்று.

22. நீரணிவிழவு - திரு அபிடேகவிழவு; அயனம், சங்கிரமம், புதுப் புனலாட்டெனவுமாம். தேர்விழவு - திருநாள்.

24. உலகநோன்பிகள் - உலகவழக்கோடு பொருந்தின நோன்பிகள் - அவர் இல்லறத்தையுடைய சாவகர்.

---

அடி, 13 : மணி. 21 : 35.

அடி, 14 : மணி. 26 : 55 ; 28 : 70.

அடி, 15 : 'புலவுத்துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறார்' (தொல். மரபு. 94. பேர்.)

அடி, 19-20 : "சதுக்கமுஞ்சந்தியும்" (முருகு. 225)

அடி, 21, பதிகம், 4. அடி, 21-5 : சிலப். 15 : 152-4 ; சீவக. 384.

(பி-ம்.) † 'போக்கிப், புலையூண் டுறந்த' ‡ 'தடங்கிய' ¶ 'குழீஇ யைவகை' § 'விழுவினும்' $ 'தகுதியுண் டாகலி, னுலக'

இலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு
மலைதலைக் கொண்ட பேர்யாறு போலும்
உலக †விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருத ‡மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்தர்
இலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் ¶கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி லுழைந்து
காவதங் கடந்து §கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்கண்
இறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து

---

(20) இம்மன்றிற் (21) பிண்டிநிழலிலே (24) இட்ட (25) சிலாதல மென்க.

26 - 7. வாயிலுக்கு உவமம் மலை; தெருவுக்குவமம் யாறு. உலக விடை கழி - உலகத்தாரெல்லாரும் போகலான ஊர்வாயில்; தெரு வொழுங்குக்கு இடையே கழிதலால் இடைகழி.

28. கலை - சரீரம்; அன்றிக் கலையிலாளனென்றது, கலைகளில் நின்றுன் காமனென்றவாறுமாம்.

29. மன்னவன் - சோழன். இறுக்கும் - இறையிடும்.

30. மரப்பந்தர் - சோலை.

28 - 31. காமன் வேனிற்காலத்தையும் தென்றலையும் சோழனுக் குத் திறையிடும் பொழிலையுடைய எயில்; இலவந்திகை - நீராவி; எயில் - சுற்று மதில்; சோலையையும் பொய்கையையுமுடைய எயில்.

32. தண்பதப்பெருவழி - புனலாட்டுக்குப்போம் பெருவழி; திரு மஞ்சனப் பெருவழியுமாம்.

33. காவிரிக்கரையிடத்து வாயில்.

34. குடதிசைக்கொண்டு - மேற்கு நோக்கி.

35. வடபெருங்கோடு - வடகரை.

36 - 7. கவுந்தியடிகள் பள்ளியையுடைய காவிற்பொருந்தி.

---

அடி, 27 : உலகவிடைகழி : புறநா. 175 : 8.

அடி, 30 - 31 : மணி. 3 : 44 - 5.

அடி, 31 : இலவந்திகை : பெருங். 1. 40 : 312; சிலப். 14 : 76-82, அடியார்.

அடி, 33 : மணி. 22 : 43. 36. மணி. 11 : 5. 39 : சிலப். 12 : 3.

(பி - ம்.) † 'விடைகழீஇயொருங்கு' ‡ 'மன்னவர்க்' ¶ 'கடை முகங்குறுகிக், குடதிசைக்கொண்ட' § 'கவுந்திபள்ளியோர்'

முதிராக் †கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ
ஆறைங் காதநம் மகனாட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
‡காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்
உருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பும்
உடையீ ரென்னோ வுறுக ணாளரிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
உரையாட் டில்லை ¶யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

---

42. ஆறைங்காதம் - முப்பது காதம்: ஆறைங்காதமென்றான், அவட்கு அறுகாதம் ஐங்காத மென்றாற்போலத் தோன்ற.

43. கூந்தல்: பெயர். நக்கு - நகைத்து; நகுதல் சோக கருணை தசை தொக்கதாற் பிறந்த விகாரம்.

44. சிறையகம் - ஸ்ரீகோயிலின் ஒரு பக்கத்தே பள்ளியகம்.

47. பெருமகன் - அருகதேவன்.

48. உறுகணாளரின் - துன்பமுறும் பாவமுடையார்போல; மிடியாளரைப்போலவென்றுமாம்.

49. கடைகழிந்து - வாசலைவிட்டு.

50. உரையாட்டில்லை - சொல்லலாவதொன்றில்லை; ஒன்று - ஒரு வாசகம்.

51. மூதூர்க்கண்ணே பொருளீட்டும் வேட்கையேன்; பொருள் வரைதல் வேட்கையென்க; வரைதல் - தன்னிடத்து ஆக்குதல்; இன்னதற்கு மேற்பட்டது தானத்துக்கேயென்று வரைந்திடுதலுமாம்.

மேற்கவுந்தியடிகள் வார்த்தை:—

52. பரற்பகை உழக்கமாட்டா.

53. காடும் நாடுமாகிய வழிகடக்க.

54. அரிதிவள் செவ்வியென்றது - இவள் செவ்வியின் மென்மையால் நடக்குந் தன்மையிலளென்றதாம். அறிகுநர்யாரோ - வல்லளாகவுமடுக்கு மன்றோ.

---

அடி, 43. ஐங்கூந்தல்: 11 : 109, 15 : 97; கலித். 96 : 8; மணி 22 : 130.

(பி-ம்.) † 'கிளவிமுள்ளெயிறு' ‡ 'காவுந்திகையைக்கண்டு' ¶ 'யுயர்தவத்தீர்'

உரிய தன்றீங் கொழிகென வொழியீர்
மறவுரை நீத்த மாசறு †கேள்வியர்
அறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே ‡னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
அடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்
கோவலன் காணாய் கொண்ட விந்நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொருஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் ¶படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த §தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டும்
உதிர்பூஞ் செம்மலி னொதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டும்
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்

---

58 - 9. மதுரைக்கு ஒன்றியவென்றதற்குப் போகவென ஒரு சொல் வருவிக்க.

63. என - என்று கோவலன் சொல்ல.

64. காணாய் - பாராய். கொண்டநெறி - வழிக்கொண்டநெறி யிடத்து ; இந்நெறி - காவிரி வடகரைவழி.

65. யாங்கும் பலவுள - யாங்கும் மிகவுள்ளன.

67. (பா) படர்குவமாயினென்றாள், தன்னையும் உளப்படுத்தி.

68 - 71. சண்பகம் குழியை நிறைத்த பொங்கர். போற்றா மாக்கள்- பரிகரித்துப் போகாத மாக்கள்.

குழியைச் சண்பகநிறைத்த தாதுசோர் பொங்கர் பரிகரியா மாக்கட்குத் துன்பந்தரினுந்தரும் ; பழம்பூவானிறைத்தல் பெற்றாம். தாதுசோர் பொங்க ரென்றலின் ; பொங்கர் - சோலையுமாம்.

73. (பா) மேல்தூங்குகிற பழமாகிய பகையிலே முட்டினு முட்டுவர்.

74. வலயம் - தோட்டம்.

---

அடி, 56 - 7 : சிலப். 13 : 34 - 5. 68 : சீவக. 1416, ந. மேற்.

(பி - ம்.) † 'கேள்வியறவுரை' ‡ 'னாதலிற்' ¶ 'படர்குவமாயின்' § 'தாதுசேர்'

செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்கும்
கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை யாங்கண்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கும்
அடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடும்
குறுந ரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
அறியா தடியாங் கிடுதலுங் கூடும்
எறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணின்
தாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
வயலுஞ் சோலையு மல்ல தியாங்கணும்
அயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்

---

77. யாற்றங்கரையைவிட்டு வயல்வழியே போகில்.

79. நீர்நாய் : எழுவாய். 80. விலங்க - குறுக்காக.

84. வேட்கை - தண்ணீர்த்தாகம். அறிவஞரெய்தி - அறிவுமயங்கி.

86. குறுதல் - பறித்தல்.

90. எறிநீரடைகரை - நீர்க்கரை ; கடற்கரையென்பாரும் உளர்.

93. துன்பம் - நமக்கு வருந்துன்பம்.

91 - 3. அலவனையும் நத்தையையும் போற்றுது முறையாக இடுகிற அடியொதுக்கத்தினுலே உறுநோய் அவையிற்றுக்கு உண்டாமாயின், அப்பாவம் தாங்கவொண்ணு......தபடியால் கடற்கரை வழியன்று.

95. அயல்பட - வேறுபட. 97. ஓம்புகவெனச்சொல்லி.

---

அடி, 82. கரும்பிற்...தேன் : குறுந். 85 : 4; பெருங். 1. 48 : 16-7; சீவக. 712 : 3, 1936 : 1. அடி, 86 : குறுந். 309 : 1-3.

தோமறு †கடிஞையுஞ் சுவன்மே லறுவையும்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றோடும்
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்கும்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
ஓவிறந் தொலிக்கு மொலியே ‡யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமும்
ஓங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
கம்புட் கோழியுங் கனைகுர லுறையும்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையும்
உள்ளு மூரலும் புள்ளும் புதாவும்

98. அறுவை - தோளிலிடும் உறி.
100. மொழிப்பொருட்டெய்வம் - மொழியாகிய தெய்வம்; பொருண் மொழி - உபதேச மந்திரம்; பஞ்ச மந்திரம்.
97 - 101. குறுகாதோம்பெனக் காவுந்தி கொண்டு மொழிப்பொருட் டெய்வம் நமக்கு வழித்துணையாகவென்று சொல்ல வழிபோகப் புரிந்தோர்.
102. கரியவன் - சனி. புகைக்கொடி - தூமகேது. சனி தூமனோடு கூடினும். 106. தாரம் - சந்தனம் அகில் முதலாயின.
107. கடல்வளன் - "ஓர்க்கோலை......ஐந்து." எதிர - வளத்தோடு எதிர்க்கையாலே; கடல்வளன் காவிரியோடெதிர. கயவாய் - புகார்.
109. ஓவுதல் தவிர்ந்து.
110. ஆம்பி - பத்தர். கிழார் - பூட்டை. 111. பிழா - இடா.
114. கம்புட்கோழி - ஒரு சாதி. 116. நீர்நிறக்காக்கை - நீர்க்காக்கை.
117. உள்ளுமூரலும் - உள்ளலும் ஊரலும். புதா - பெருநாரை; மரக்காறுரையுமாம்.

அடி, 98 : **மணி.** பதி. 63; 6 : 93. அடி, 102-4 : **புறநா.** 35 : 6-8; 117 : 1-2. அடி, 106-8 : **மலைபடு.** 527-8. அடி, 110. ஆம்பியும் கிழாரும் : **மதுரைக்.** 91-3. அடி, 114-9 : **பதிற்.** 84 : 20-24; **மணி.** 8 : 28-34. அடி, 117. புதா.: **பெருங்.** 1. 51 : 70.

(பி - ம்.) † 'கடிகையுஞ்' ‡ 'யன்றியு, மாம்பியும்'

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்
உழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
கழாஅமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணஃவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
ஒருங்குநின் றார்க்கு மொலியே யன்றியும்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறுடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியும்
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் †கைதொழ
ஏரொடு நின்றோ ரேர்மங் கலமும்
அரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
‡பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்

---

120. உழாநுண்டொளி - தானேபட்டசேறு. 121. காரான் - எருமை.
122. சொரிபுறம் - தினவையுடைய முதுகு.
123. குமரிக்கூடு - அழியாக்கூடு. கொழும்பல்லுணவு - பலவர்க்கத் துணவு; அவரை துவரையுள்ளிட்டன.
125. கருங்கைவினைஞர் - பள்ளர், பறையர். களமர் - உழுகுடி வேளாளர்.
132-5. அறுகையும் குவளையையுங் கலந்து கதிரோடு தொடுத்த மாலையை ஏரிலே சூட்டிப் பாருடைப்பனர்போல் ஏரொடு நின்றோர்: சூட்டக் கலப்பையிலே சூட்டியென்றுமாம்.
136. அரி - அரிந்திடு சூடு.
137. முகவைபாடுதல் - பொலிபாடுதல்; முகவையென்றார், நெல்லு முகந்து கொடுக்கப்படுதலாலே; "புகர்முகமுகவை" (புறநா. 371 : 20) போல.

---

அடி, 121. செங்கட்காரான் : குறுந். 251 : 3. அடி, 123 : பெரும்பாண். 246-7. அடி, 127-30 : சீவக. 46. அடி, 137 : புறநா. 395 : 35. (மேற்.) 137. நன். 289, மயிலை.
(பி - ம்.) † 'கைதொழு, தேரொடு' ‡ 'பெருஞ்செந் நெல்லின்'

பேர்யாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளார்
உழைப்புலிக் கொடித்தே ருரவோன் கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டில்
மறையோ ராக்கிய †வாவுதி நறும்புகை
இறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்றும்
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்றும்
ஊரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநாள்
ஆற்றுவீ யரங்கத்து ‡வீற்றுவீற் றாகிக்

140. யாற்றடைகரைகளிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு. நீரின் - நீர்மையுடனே ; உருவக் கேட்டுப்போதுகையுமாம்.

141. கேட்ட உவகையால் அவலங்கொள்ளாராய்.

142. உழைப்புலிக்கொடி - புலியை இடத்திலேயுடைய கொடி.

143. மழைக்குக் கருப்பமாவது தூமம். அட்டில் - ஓமசாலை.

142 - 3. கொற்றத்துடனே மழைக்கருவையும் தோற்றுவித்து அவ்வளவிலே விளங்கிய சாலையென்க.

144. (பா) வானவருணா - சோற்றாவி ; அவியிடுகிற ஆவி.

145. இறை - இறப்பு.

148. காவிரிப்பாவைதன்புதல்வர் - வேளாளர்.

(150) விளைப்போரான (148) புதல்வர் (150) பழவிறலூர்களும்.

149. புரப்போர் - காக்கும் அரசர்.

151. பொங்கழி - தூற்றாப் பொலி. பரந்து - பரக்க.

152. மங்குல் - இருட்சி.

(147) மறையோரிருக்கையும் (150) பழவிறலூர்களும் (152) மலையிற்றோன்றும் (153) நாடென்க.

(101) வழிப்படர்புரிந்தோர் (155) செல்லுநாளுள் ஒருநாளென்க.

156. ஆற்றுவீயரங்கம் - ஆற்றை மறைக்கும் அரங்கம் : ஆவது குறை ; அது சீரங்கம் ; ஆற்றுவியென்பாருமுளர்.

---

அடி, 144 : கலித். 130 : 9.
(மேற்.) 149. குறள். 1034, பரி.
(பி - ம்.) † ‘வானவி நறும்புகை’ ‡ ‘வீற்றுவே றாகிக்’

குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா ரொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்
பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினும்
ஆர்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணாய்
ஒழிகென வொழியா தூட்டும் வல்வினை
இட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
ஒட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
ஒருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்
அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
தரும முதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்

---

157. மரம்பயில் அடுக்கம் - மரச்செறிவு; அடுக்கம் - அரங்கத்துக்கு அடுத்தவிடமுமாம்.

158. ஒரு சிறை - ஒரு பக்கத்திலே.

160. ஐயர் - முன்சொன்ன உலக நோன்பிகள்.

163. முன்பு சொன்ன சாரணர் தோன்ற.

ஐயர் [1] பட்டினப்பாக்கத்திலிட்ட சிலாதலத்தினின்று தருமஞ் சாற்றுதல் சாரணர்க்கு அடையாக்கி அவர் இங்கே தோன்றவென்க.

167. சிந்தைவிளக்கு-அவதிஞானம்; என்றது திரிகால ஞானத்தை.

172. வித்தின் - வித்துப்போல.

---

அடி, 158 : **மணி.** 4 : 95. அடி, 162-3 : **சீவக.** 2746. அடி, 166 : **மணி.** 16 : 72. அடி, 171 : **சிலப். பதி.** 57.

[1] இக்காதை 24-ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க.

தத்துவன் சாதுவன் சாரணன் காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகழொளி
இறைவன் குரவ னியல்குண னெங்கோன்
குறைவில் புகழோன் † குணப்பெருங் கோமான்
சங்கர னீசன் சயம்பு சதுமுகன்
அங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
ஓதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந்தி கைதன் கைதலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
ஐவரை வென்றோ னடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்கண்
அருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா
தருக ரறவ னறிவோற் கல்லதென்
இருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
தலைமிசை யுச்சி தானணிப் பொறாஅ
திறுதியி லின்பத் திறைமொழிக் கல்லது

188. எண்குணமென்றது : அநந்த ஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்தசுகம், அநந்தநாமம், நிட்களம், நிராயுஷ்யம், சற்பாவனை யென இவை.

191. பிறவிப் பொதியறை - பிறவியாகிய துவாரமில்லாத அறை.

194. ஒரு மூன்று - காமம் வெகுளி மயக்கம்.

198. ஐயர் - பஞ்சேந்திரியங்கள்.

198-9. மற்றைத் தேவர் இணையடிகளைக் கையிடத்தே காணினும்; அந்நியமாகிய சமய தேவர்களைக் காணினுமெனவுமாம்.

200. திருமெய்க்கு - திருமெய்ப்பொருட்டு.

202. (பா) அருகனறவோர் - இருடிகள்.

205. தலையிடத்து.

206. இறுதியிலின்பம் - அநந்தசுகம்.

அடி, 184 : மணி. 5 : 71. அடி, 191 : மணி : 4 : 105, 19 : 8.
அடி, 190-7 : மணி. 5. 77-9 (பி - ம்.) † 'குணப்பொருட்'

மறுதர வோதியென் மனம்புடை பெயரா
தென்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாருப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேர்யாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியும்
தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்
போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி லிருந்துழி
வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் †சென்றோர்
காமனுந் தேவியும் போலு மீங்கிவர்
ஆரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருடன்
ஆற்றுவழிப் பட்டோ ராரென வினவவென்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென
உடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்

---

209. உயர்மிசை - சிலாவட்டம். ஓங்கி - எழுந்திருந்து.
213. பந்தம் - ஸம்ஸாரம்.
215. நீரணிமாடம் - பள்ளியோடம் ; போகி - அதனாலேபோந்து.
219. வம்பப்பரத்தை ; வம்பு - புதுமை ; பரத்தைத்தன்மைக்குப் புதியவள். வறுமொழியாளன் - பயனில சொல்லுவான்.
221-2. காமனும் தேவியும்போலும் இவராரெனக்கருதி ; போலும் : ஒப்பில்போலி.
223. நோற்றுணல் - பட்டினிவிட்டுணல்.
224. ஆற்றுவழி - நெறியிடத்து.
225. மானிடயாக்கையரென்றது - நீங்கள் நினைத்த காமனும் தேவியுமல்லரென்றவாறு.
226. பரிபுலம்பினர் - செலவால் வருந்தினர்.

---

அடி, 215 : 'நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்' (பரி. 10 : 27); 'நீரணிமாடத்து நிலாநெடு முற்றத்து' (பெருங். 1. 40 : 17)
அடி, 219 : சிலப். 16 : 63; குறள். 1311; மணி. 10 : 22. அடி, 220 : தொல். முதற் சூத்திரவிருத்தி, மேற். அடி, 223 : மணி. 18 : 122. அடி, 226 : மலைபடு. 497 ; மணி. 16 : 57. (பி - ம்.) † 'சென்றுழிக்,'

தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
எள்ளுநர் போலுமிவ ரென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்டது தவந்தரு சாபம்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினும்
அறியா மையென் றறியல் வேண்டும்
செய்தவத் தீர்நுந் திருமுன் பிழைத்தோர்க்
குய்திக் கால முரையீ ரோவென
அறியா மையினின் றிழிபிறப் புற்றோர்
உறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனும்
முறஞ்செவி வாரண ம்ன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்.

229-30. புதைத்து நடுங்காநிற்ப.

234. பட்டதையறியார் - மனத்தில் இவர் (கவுந்தியடிகள்) நினைத்த தாதலால் அறிந்திலர்.

235-40. பின்பு அறிந்தபடி : அவர் கண்முன்னே நரியானபடியாலும், பொல்லாங்கு கூறினமையாலும், அவ்விடத்து இவரல்லது வேறு சாபமிட வல்லாரில்லையாகலானும், இச்சாபம் இவராலேவந்ததென்று இவர் (கோவலனும் கண்ணகியும்) அறிந்தார் ; அறிந்து உய்திக்காலம் உரையீரோவென்றார்.

242. நொச்சி - மதில் ; பதணமுமாம் ; என்றது காவல்வேண்டாத அரணென்றவாறு.

243. படர்நோய் - உறழ்ச்சியாலுண்டான நோய்.

247-8. முறம் - சுளகு. வாரணம் - யானை, கோழி ; புறத்தே சிறையையுடைய கோழி - உறையூர் ; வாரணம் : ஆகுபெயர். யானையைக் கோழிமுருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றினவிடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன்பெயராலே சோழன் ஊர்காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று.

அடி, 240 : மணி. 25 : 5. அடி, 242 : "நொச்சி வேலித் தித்தனுறந்தை" (அகநா. 122 : 21)

அடி, 247. முறஞ்செவி வாரணம் : கலித். 42 : 2; புறநா. 339 : 13; மணி. 19 : 121. (மேற்.) 247-8 : சிறுபாண். 83, ந.

**கட்டுரை**

முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர்குலத் துதித்தோர்
அறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவும்
†ஒடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலும
அரங்கு மாடலுந் தூக்கும் வரியும்
பரந்திசை ‡யெய்திய பாரதி விருத்தியும்
திணைநிலை வரியு ¶மிணைநிலை வரியும்
அணைவுறக் கிடந்த யாழின் றொகுதியும்
ஈரேழ் சகோடமு மிடநிலைப் பாலையும்

---

3. அறன் – தருமாசனம். மறன் – இமயத்துப்புலிபொறித்தது ; சிலப். 5 : 97 – 8 ; ஆற்றல் – அமராபதிகாத்து ; 6 : 14.

4. மூதூர்ப்பண்பு – காவிரிப்பூம்பட்டினத்துப்பண்பு.

5. விழவு – இந்திரவிழவு. விண்ணவர் வரவு – தேவர்கள் வரவு.

7. கூழின் பெருக்கம் – கவரிச்செந்நெற்காய்த்தலையிற் கூட்டின் நெற்சொரிதல் : சிலப். 10 : 123 – 4.

6 – 7. நாட்டுக்குடி – உழவிடைவிளைப்போர் ; சிலப். 10 : 150.

8. காவிரிச்சிறப்பு – ஆற்றுவரி ; 7 : 2 – 4 ; 25 – 7.

9. பொய்யா வானம் புதுப்புனல் பொழிதல் – மழைக்கருவுயிர்த்தல் ; 10 : 143.

10. அரங்கு மாடலும் – அரங்கேற்றுகாதையிற் கூறின.

(பா) தலைவரியியல்பு : " திங்கண்மாலை " முதலான முகமுடை வரிகள் ; 7 : 2 – 4.

11. பாரதிவிருத்தி – கடலாடுகாதையிற் கூறிற்று (பதினோராடல்.)

12. திணைநிலைவரி – " புணர்துணையோடாடும் " என்றன் முதலாயின ; சிலப். 7 : 3, இணைநிலைவரி – அல்லாத......நிலைவரி முதலாயின.

13. (பா) யாழின் பகுதி – வேனிற்காதையிற் சொன்ன " உழை முதற் கைக்கிளை " (32) முதலாயின.

14. (பா) இடைநிலைப்பாலை : " கோடிவிளரி மேற்செம் பாலை " முதலாயின ; 3 : 88.

---

அடி 1 : சிலப். 23 : கட்டுரை, 1.

(பி – ம்.) † 'ஒழியா வின்பத் தவருடை' ‡ 'யேத்திய' ¶ 'கிணை வரியுங்'

தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணும்
ஊரகத் தேரு மொளியுடைப் பாணியும்
என்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் †தனிக்கோ ணிலைமையும்
ஒரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்க்காண்டம் முற்றிற்று.

---

### வெண்பா

காலை யரும்பி மலருங் கதிரவனும்
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
அகழா லமைந்த வவனிக்கு மாலைப்
[1] புகழா லமைந்த புகார்.

---

15. தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணும் : "புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி" என்றது முதலாயின ; 8 : 44.

16. ஊரகத்தேர் : இந்திரவிழவூரெடுத்த காதையிற் சொன்ன ஊரின் வண்ணம்.

ஒளியுடைப்பாணி. "வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணி" முதலாயின ; 10 : 131.

17. பிறபொருள்வைப்பு.........முதலாயின.

முதலாவது

**புகார்க்காண்டம் அரும்பதவுரையுடன் முற்றிற்று.**

---

[1] மணி. 1 : 2.

(பி - ம்.) † 'தன்கோ ணிலைமையும்'.

## 1 - 3. வான்கண் விழியா......கடைநாட் கங்குல்

(இ - ள்.) உலகிற்குக் கண்ணுகிய ஆதித்தன் தோன்றி விளங்காத வைகறையென்னும் யாமத்திடத்து மீனேடு அழகுபெற்றெழுகும் வெண் மதியானது விசும்பினின்றும் நீங்கிற்ருகக் கரிய இருள் கடைக்கணின்ற கங்குற்பொழுதிலென்க.

என்பது அந்தச் சித்திரைத் திங்கட் புகுதிநாள் - சோதி, திதி - மூன்ரும் பக்கம், வாரம் - ஞாயிறு. இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணையுங்கூடிய சனி வாரத்திற் கொடியேற்றி " நாலேழ் நாளினும் " (மணி. 1 : 8.) என்பதனுன் இருபத்தெட்டு நாளும் விழா நடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவ பக்கத்தின் பதின்மூன்ரும் பக்கமும் சோம வாரமும் பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும் கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினலாம் பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலேயென்றவாறு. அது பூருவ பக்கமென்பது தோன்றக் 'காரிரு ணின்ற கடைநாட் கங்குல்' என்ருர் ; " குணமுதற் ருேன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுக நின் றெவ்வ ராக்கம் " (195 - 6) என இருண்மதியென்ருர் மதுரைக் காஞ்சியுள்ளும். கண் - இறைவன்கண் என்பாருமுளர். விழித்தல் - விளங்குதல் ; அது செய்யாத வைகறை, ஆகுபெயர் ; வைகல் - துயிறல் ; அறல் - அறையாயிற்று ; " பொறியறை " (திரி. 15) போல.[1]

## 4. ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப :—

(இ - ள்.) முன் செய்த தீவினை முறையானே வந்து இவனுள்ளத்தைச் செலுத்துதலானே யென்க

கடைஇ - செலுத்தி யென்றுமாம்.

## 5 - 8. ஏழகத் தகரும்......நெடுங்கடை கழிந்து

(இ - ள்.) ஏழகமாகிய தகரும் எகினமாகிய கவரியும் தூய மயிரினையுடைய அன்னமுமாகிய இவை ஒன்ருேடொன்று இனமல்லவாயினும் இனம்போலே விடாது திரியும் தாளோடுகூடப்பண்ணப்பட்ட பெருமை பொருந்திய சிறப்பினையுடைய மிகவும் பெரிய கதவையுடைய இடைகழியைக் கழிந்தென்க.

நெடுவாயிற்கடை - பெரிய கதவையுடைய தலைக்கடை. தகர் முதலியன இவள் வளர்த்தனவாகலின், இவளைத் தம்மினமென்று கருதித் திரியுமெனவுமாம் ; வாயிற்கணெழுதினவற்றை இனமெனக்கருதித் திரியுமெனவுமமையும். தாளொடு குயின்றவென்ருர், போர்க்கதவாகலின் இனியிளகாமற் பண்ணுகின்றபோதே கூடப்பண்ணுதலான். ஏழகத்தகர் முதலியன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாயில் - கதவு. கடைகழிந்தென்ருர், மனையின் பெருமையும் காவன் மிகுதியும் தோன்ற. இனி, இவன் அன்று கழிந்தானெனினும் அமையும்.

---

[1] இவ்விசேடவுரையிலுள்ள காலவரையறை பொருந்தாததுபோல் தோற்றினும் பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது.

### 8 - 10. ஆங்கு......வலஞ்செயாக்கழிந்து

(இ - ள்.) அங்ஙனம் வாயில் கழிந்தபொழுதே அரவணையின்மீதே அறிவோடு துயில்கொள்ளும் மணிவண்ணனென்னும் திருநாமத்தை யுடைய திருமால் கோயிலை வலஞ்செய்து கழிந்தென்க ;

ஆவது வலத்திட்டேகுதல். அணி - அழகு. அறிதுயில் - யோக நித்திரை. மணிவண்ணன் : பெயர்.

### 11 - 4. பணையைந் தோங்கிய......ஏழுடன் போகி

(இ - ள்.) ஓங்கிய ஐந்து பணையினையும் பசிய இலையினையுமுடைய [1]மாபோதி நிழலிலெழுந்தருளிய அறவோனாகிய புத்தன் அருளிச்செய்த ஆகமத்தை ஆகாயசாரிகள் மறையவிருந்தோதி யாவர்க்கும் விளங்கப் பொருளுணர்த்தப்படும் [2]இந்திரனால் நிருமிக்கப்பட்ட விகாரங்களேழினை யும் அடைவேகண்டு அவற்றைக் கழிந்துபோயென்க.

அவை அவ்வூர்ப் [3]புத்தசைத்தியத்து இந்திரன் நிருமித்தனவாகிய ஏழரங்கு. மாபோதி ஐந்துபணையது......இயல்பு. திருமொழி - ஆகமம். அறைந்து சாற்றுதல் - [4]பாடமோதிப் பொருளுரைத்தல். விகாரம் - கையாற் கருவியாற் பண்ணாது மனத்தால் நிருமித்தல்.

### 15 - 25. புலவூண்டுறந்து...தொழுது வலங்கொண்டு

(இ - ள்.) புலாலாகிய ஊனைத் துறந்து பொய் கூறாமையாகிய விர தத்தோடு பொருந்தி [5]அழுக்காறு அவா முதலியவற்றைக் கைவிட்டு அற நூல் முதலியவற்றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடை யராய் உண்மை வகையுணர்ந்த சீரியோர் திரண்ட ஸ்ரீ கோயிலில் பஞ்ச பரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து சந்தியுங்கூடிவந்து, தலைமயங்கி யிருக் கின்ற மிக்க பெரிய மன்றிற் பூவையுடைய பிண்டியினது அழகுகிளரும் நிழற்கண்ணே விழு அயனதிகளிலும் விழவுகளிலும் ஆகாயசாரிகள் வரத்தகுமென்று சாவகரெல்லாம் கூடியிடப்பட்ட விளங்காநின்ற ஒளியை யுடைய சிலாவட்டத்தை இவர்கள் தொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணும் ஊணுமாம்.

"புலையூண்" பாடமாயிற் புலையருண்ணும் ஊனென்க. விரதத்து - விரதத்தோடே. அவலம் - அழுக்காறு அவா முதலியன. அறிந்து - அறியப்படும் அற நூல்களை அறிந்து. பஞ்சபரமேட்டிகளாவார் :— அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களெனவிவர்.

இனி,ஐவகைநின்ற அருகத்தானத்துச்சந்திமன்றென்பதற்குஐந்து ஸ்ரீகோயிற்சந்தி கூடிய மன்றென்பாருமுளர். பொன் பொலிவாதலன்றிப்

---

[1] மாபோதி = மஹாபோதி; கௌதம புத்தருக்கு ஞானோதயமான இடத்துள்ள அரசமரம் : "போதிமூலம்" (மணி. 30 : 10) என்பதன் குறிப்பைப் பார்க்க.

[2] சிலப். 27 : 92.

[3] புத்தசைத்தியம் - பௌத்த வித்தியாசாலை ; புத்தனாலயமுமாம்.

[4] பாட மோதல் - மூலத்தை விளங்கச் சொல்லுதல்.

[5] "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கும், இழுக்கா வியன்ற தறம்" (குறள். 35)

பொலம் பொலிவாகாமையின் அருகனுணையான் எப்பொழுதும் பொற் பூவைப் பூக்கும் பிண்டியென்க. சிலாதலம் - சந்திரகாந்தக்கல்லாற் படுத் தது. நீரணி விழவு - அபிடேக விழவெனினும் அமையும்.

26 - 7. மலைதலைக் கொண்ட......ஒருங்குட னீங்கி

(இ - ள்.) மலையிடத்தே தலையையுடையதோர் பெரிய யாறுபோலும் உலகிலுள்ளோராயவர் போக்குவரவு செய்தற்கு அமைந்த ஊர்வாயிலை அக்காலத்துப் போவாரோடு கலந்துபோய் அதனைவிட்டு நீங்கியென்க.

உலகவிடைகழி - ஊர்வாயில். இடையே கழிதலின், அவ்வாயில் இடைகழியாயிற்று. கோயிற்கோபுரத்தை மலையாகவும் அதனோடு மணந்து கிடந்த தெருவை ஆறுகவும் உவமித்தார்.

28 - 31. கலையி லாளன்......எயிற்புறம் போகி

(இ - ள்.) மன்னவர்க்குக் காமன் வேனிலோடு தென்றலையும் திறை யாக இடுதற்குப் பொருந்திய பல மலர்களை நிரைத்த நல்ல மர நிழலை யுடைய இலவந்திகையினது எயிற்குப் புறத்திலே போயென்க.

*கலையியிலாளன் - அநங்கன்; கலை - சரீரம். காமர் - அழகு. பந்தர் - நீழல்.* இலவந்திகை - *நீராவியைச்* சூழ்ந்த வயந்தச்சோலை; அஃது அரசனும் உரிமையுமாடுங் காவற்சோலை; "இலவந் திகையி னெயிற் புறம் போகின், உலக மன்னவ னுழையோ ராங்குளர்" (3 : 45–6) என்றுர் **மணிமேகலையிலும்.**

32 - 3. தாழ்பொழி லுடுத்த......கடைமுகங் கழித்து

(இ - ள்.) இருமருங்கும் சோலை சூழ்ந்த புதுப்புனலாடப்போம் பெரிய வீதியையுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறை கழிகின்ற வாயிலையும் கழிந்தென்க.

கடைமுகங்கழிந்தென்றுர் ; காலையில் நாணீராடுவோர் பிறர்முகம் நோக்காது போதற்கு மறைந்து கழிவர் ; இவரும் அவ்வாறு கழிந்தா ரென்றற்கு.

34. குடதிசைக்கொண்டு :—(இ - ள்.) மேற்றிசையை நோக்கிக் கொண்டு.

34 - 5. கொழும்புனற் காவிரி......பொழினுழைந்து

(இ - ள்.) வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய வடகரையிற் பொழிலைக் கழிந்தென்க.

கோடு - கரை. நுழைதல் - கழிதல்; அன்றி இளமரக்காவாதலால் தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.

36 - 41. காவதங் கடந்து......வினவ

(இ - ள்,) நறிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காத மென்று சொல்லப்படும் எல்லையைக் கடந்துசென்று கவுந்தியடிகள் இருக் கின்ற பள்ளிக்கு அயலதோர் பொலிவினையுடைய செறிந்த இளமரச் சோலையளவுஞ் சென்று பொருந்தி அவ்விடத்தே இனி இஃது இறுமெனத் தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும் வருந்தி மேல் இளைப்பாற்

குறுக வுயிர்த்து முற்றுத மழலை மொழியாலே கூர்த்த எயிறிலங்க மதுரையென்னு மூதூர் யாதுதானென்று கேட்பவென்க.

காவதம் - காதம்; பகுதிப்பொருள் விகுதி. பொதும்பர் - மரச் செறிவு; கோடரமென்றுமாம்.

## 42 - 3. ஆறைங் காதம்......நக்கு

(இ - ள்.) நீ கூறிய மதுரை நம் அகன்ற நாட்டிற்குமேல் ஆறைங் காவதங்காண், இனி அண்ணிதென்று கூறி நக்கென்க.

யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள் மறைந்து காதம் ஆறு காதம் ஐந்தென்ருற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றுன்.[1] நகுதல் - துன்ப நகை. கூந்தல் : விளி.

## 44 - 5. தேமொழி......தொழலும்

(இ - ள்.) அங்ஙனம் வினவின தேமொழிதன்னேடு சென்று தவ வேலிக்கண் இருந்த கவுந்தியடிகளைக் கண்டு அடிதொழுதலுமென்க.

சிறை - பள்ளியென்றுமாம்; ஸ்ரீகோயிலின் ஒரு பக்கமுமாம்.

8 - 45. கழிந்து கழிந்து போகிக்கொண்டு நீங்கிப் போகிக் கழிந்து துழைந்து கடந்து பொருந்தி நக்குக் கண்டு அடிதொழலுமென்க.

## 46 - 9. உருவுங் குலனும்......கருதிய வாறெனை

(இ - ள்.) இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் இறைவனூலிற் கூறிய விரதந் தப்பாமையுமென்னும் இவற்றையெல்லாம் ஒருதலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப் போல நுமதிடத்தைக் கழிந்து வருவதற்குக் கருதியதென்னேவென்று கேட்பவென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச் செய்த ஆகமம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர்; கடைகழிதல் இவர்க்கு மரபன்மையிற் கழிந்தென்றுர்.

இவ்வும்மைகள் எண்ணுக்குறித்தனவெனினும் சிறப்புப் பொருண்மை தோன்ற நின்றன.

## 50 - 51. உரையாட்டில்லை......வேட்கையான்

(இ - ள்.) மிக்க தவக்கினையுடையீர், இவ்வினுவிற்கு ஓர் உத்தர மில்லை; ஆயினும் யான் கருதியதொன்றுண்டு; அது யாதெனின், மதுரையாகிய மூதூரிற் சென்று நிருமித்த பொருளைத் தேடக்கடவோ மென்னும் வேட்கையை யுடையேனுயினேனென்று சொல்லவென்க.

முன்னர்க் காதையில் "சென்ற கலனே, டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன்" (9 : 74-5) என்றுனுகலின், அதனை வரைபொருளென்றுன். இனி நியாயத்திற்றேடும் பொருளெனினும் அமையும்; அன்றி இதற்கு இத்துணைப்பொருட்கு மேற்பட்டதே தானம்பண்ணக் கடவேனென வரைந்த பொருளென்பாருமுளர். எனவென ஒருசொல் வருவிக்க.

இனிக் கவுந்தியடிகள் கூறுவார் :—

---

[1] "இடுக்கண் வருங்கா னகுக" குறள், 621.

## 52 - 4. பாடகச் சீறடி......அறிகுநர் யாரோ

(இ - ள்.) இனி அங்ஙனம்கருத்தாயின், இவள்சீறடிகள் பருக்கை யாகிய பகையை வெல்லமாட்டா; ஆதலால் நீர் காடுநாடுமென்னும் இவ் வழியைக் கடத்தற்கு இவள் செவ்வி ஏற்றதன்று; இனிஊழ் என்செய்து முடிக்குமோ? அதனை அறிவாராரென்றுரென்க.

என்றகருத்து: அடி பரற்பகையுழவா; வழி காடிடையிட்டநாடு; இவள் அதற்கேற்ற தன்மையளல்லள்: இனி ஊழ்என்செய்யுமோ; இதனை யார் அறியவல்லாரெனப் பரிவுறல்தோன்ற நின்றது.

## 55. உரிய தன்றீங் கொழிகென வொழியீர்

(இ - ள்.) இவையே யன்றியும் குடிப்பிறப்பிற்கும் இவளை ஒருங்கு கொண்டு சேறல் ஏலாதாகலின் இனிச் செலவை ஒழிமினென்று யாமொ ழிப்பவும் ஒழிகின்றிலீராயினீரென்று ரென்க.

ஒழிகெனவொழியீரென்பதற்கு இவர்க்கு எதிர்வதறிந்து கூறினு ரெனின், "தவந்தரு சிறப்பிற் கவுந்தி...உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்" (27 : 79-83) என நீர்ப்படையுள் மாடலன் கூறுதலா னும், அடைக்கலக்காதையில், "தன்குல வாணர், அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர், உடைப் பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும், இடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்" (15 : 126-30) எனவும், "தாயு நீயே யாகித் தாங்கு" (15 : 136) எனவும், "மிகப்பே ரின்பந்தருவது கேளாய்" (15 : 150) எனவும் ஒரு பொழுதிற்கு இத்துணை ஓம்படையெல்லாம் கூற வேண்டாவாகலானும் இவர்க்குத் தவப்பயனாலே சபித்த லன்றிக் கால வுணர்ச்சியின்மையுணர்க.

## 56 - 63. மறவுரை நீத்த......தீர்த்தேனென

(இ - ள்.) மறவுரைகளை நீத்திருக்கும் குற்றமற்ற பொருட்பயனை யுடையவர்தம் நூலைக்கேட்டு அந்த ஆகமப்படியே அறிவனையேத்துதற் குத் தெற்கின்கண் உள்ள தமிழ்நாட்டின்கண்ணதாகிய குற்றந்தீர்ந்த மதுரைக்குப் போதற்கு முன்னே ஒருப்பட்ட உள்ளமுடையேனுதலின், யான்போதுவேன்; நீரும் போதுமினென்ற கவுந்தியடிகளைக் கையால் தொழுது நாவானேத்தி, அடிகளே! நீரே இங்ஙனம் அருள்செய்வீரா யின் இவ் வளைபொருந்திய தோளினையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றேவென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெய்வீராயினென்றது ஒரு வழக்கு. ஏகாரத்தை இசை நிறையாக்கலுமொன்று. தொடி - வளைவு; "தொடிக்கட் பூவை" (சீவக. 932) என்றாராகலின்.

நீத்தென்றும் பாடம்.

## 64 - 5. கோலன் காணுய்......பலகேண்மோ

(இ - ள்.) கோவலனே! நாம் போவதாகவுட்கொண்ட இந்நெறி யிடத்து வருத்தத்தைத் தருவன எவ்விடத்தும் பலவுள; அவற்றை நீயறியாய்; ஆதலால், யான் சொல்லக் கேட்பாயாகவென்றுரென்க.

காணுய் - நீ முன்பு அறியாய். இந்நெறி - வடகரைவழி. மோ : முன்னிலை யசை.

## 66-71. வெயினிறம் பொருஅ...காட்டினுங் காட்டும்

(இ - ள்.) வெயிலினது நிறத்தைக் கண்ணுற்பார்க்கவும் பொருத இம் மெல்லிய இயல்பிணையுடையாளைக் கொண்டு நாம் பூப்பயிலும் தண்டலையூடு போகக்கடவேமென்பேமாயின்; அவ்விடத்து நிலம்பிளக்கும்படி இடங்கொண்டு கீழ் வீழ்ந்த வள்ளிக்கிழங்கை அகழ்ந்துகொண்ட குழிகளைச் சண்பக மரங்கள் நிறைத்த பூந்தாதுசேர்ந்த பொங்கர் பொய்க் குழிப்படுவித்து அவ்விடங்களை அறிந்து பாதுகாத்துச் செல்லாத மாக்கட்குச் செயலறுதியாகிய துன்பத்தைக் காட்டுதலைச் செய்யினுஞ் செய்யுமென்ருரென்க.

பொங்கர் - ஈண்டு வாடற்பூ. அதுபோர்த்தலாற் பொய்யறைப் படுத்தென்ருர்; "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" (12 : 'செம்பொன் வேங்கை') என்ப மேலும். கையறுதுன்பம் - மீளாத்துன்பமுமாம். காட்டல் - தருதல். பொங்கர் படுத்துக் காட்டுமென்க.

## 72-3. உதிர்பூஞ் செம்மலின்......முட்டினு முட்டும்

(இ - ள்.) அங்ஙனமுதிர்ந்த செம்மற்பூ மறைத்த குழியுள்ளவழி நாடுதற்கு நிலனேக்கி ஒதுங்கிச் செல்வோரை முற்றிப் பழுத்து விண்டு தேனெழுகும் பலாப்பழங்கள் தாழ்ந்த கோட்டின்கண் இருந்து பகைபோல முட்டுதலைச் செய்யினுஞ் செய்யுமென்ருரென்க.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித் தெங்கம்பழம் முட்டுமெனினும் அமையும்; பழம்பகையாயெனப் பண்பொட்டு விரிக்க.

முட்டினுமுட்டுவரென்றது பாடமாயின், கழிவோர் செய்யினுஞ் செய்வாரென்க; உம்மையை ஐயவும்மையாக்கிப் பொருளுரைக்க. படர்குவமெனினேயெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினர், உலகியலாகலான்.

## 74-5. மஞ்சளுமிஞ்சியும்......பகையுறுக்கும்

(இ - ள்.) அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆண்டு மஞ்சள் முதலியன தம்மில் தலைமயங்கிய பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்திதோறும் பலவின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள் இவள் மெல்லடிக்குப் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்ருரென்க.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பரலும் பகையாயுறுக்குமெனினும் அமையும் : உறுக்கும் - உறுத்தும்.

என்ற கருத்து : மஞ்சள் முதலியன நிலவண்மையான் முற்றிப் பருவஞ் செய்தமுளை சருகின்மறைந்து கிடந்தவற்ருேடு பரலும் உறுத்துமென்றதாம்.

## 76-7. கயனெடுங் கண்ணி......படர்குவ மெனினே

(இ - ள்.) கயல்போலும் கண்ணிணையுடையாள் காதலிக்கப்பட்ட கேள்வனே! அங்ஙனம் சோலையும் தோட்டமுமாகிய கரைவழியன்றி வயல்வழியே போகக்கடவேமென்பேமாயின்,

### 77 - 81. ஆங்கு...........காரிகை

(இ - ள்.) தம்மிடத்து மலர்ந்த பூக்களின் மணம் கமழாநின்ற குளங்களில் நீர்நாய் பொருகின்ற கயல்கள் வெருவியோடவோட்டிக் கௌவப்பட்ட நீண்ட முதுகையுடைய வாளை மலங்குகள் நெளியுஞ்செறுவிற் குறுக்கிடப் பாயுமாயின், இக்காரிகை கலங்குதலை அடையவுங் கூடுமென்றுரைென்க.

நீர்நாய் கௌவிய வாளை பொருகயலோட்டிப் பாயினெனினும் அமையும். இதனாற்சொல்லியது : மீனிரைதேரும் நீர்நாய்காணினும், இடையே பொருகயல்கள் உகளக்காணினும், வாளை பாயக்காணினும், மலங்கு மிளிரக் காணினும் மனத்திற் கலங்கலுமுண்டு இக்காரிகையென்றதாம்.

### 81 - 5. ஆங்கண்.........கொள்ளவுங் கூடும்

(இ - ள்.) அஃதன்றியும், [1] கரும்பல்லது காடின்மையான் அவ்விடத்து உளதாய [2] கரும்பின்வைத்த பெருந்தேனடைகள் முற்றி நெருங்குதலானே தேன் அழிந்தொழுகிச் சுரும்பு சூழப்பட்ட பொய்கையின் நல்லநீரோடு சென்று கலந்துவிடும் ; ஆதலான் அதனை அறியாமல் தணியாத நீர்வேட்கையான் இவள் தன்குடங்கையால் முகந்துகொண்டு பருகவுங் கூடுமென்றுரைென்க.

குடங்கையாவது ஐந்துவிரலுங்கூட்டி உட்குழிப்பது ; என்னை ? " குடங்கை......உட்குழிப்பதுவே " (2 : 17, அடியார்.) என்றாராகலின். இதனாற்சொல்லியது : நமது [3] தரிசனத்துக் கடியப்பட்டவாற்றால் தேனுண்டலைப் பரிகரிக்கவென்றதாம். எனவே ஊனையும் உடன் கூறிற்றும். மேலும் இவ்வாறு வருவன கொள்க.

### 86 - 9. குறுநரிட்ட.........இடுதலுங் கூடும்

(இ - ள்.) களைபறிப்பார் பறித்து வரம்பிலிட்ட குவளைப்பூவுடனே தம் மெய்யிற் பொறியையும் வரியையுமுடைய வண்டினம் மதுமயக்கத்தாற் போக அறியாது உள்ளொடுங்கிக்கிடப்பனவற்றை வழிச்செல் வருத்தத்தாலே நீர் உணர்வுமயங்கி வறும்பூவெனக்கருதி அவற்றின் மேல் அடியிடவுங் கூடுமென்றுரைென்க.

இதனாற் சொல்லியது உயிர்க் கொலைபுகாமற் பரிகரிக்கவென்பதாம்.

### 90 - 93. எறிநீரடைகரை...........ஒண்ணு

(இ - ள்.) எறியுநீரையுடைய பெருவாய்க்காலினது அடைகரை வழியே போகக்கடவேமென்பேமாயின், அவ்வடைகரை நீரிலுள்ளனவாகிய பொறிகளின் அழகையுடைய அலவனும் நந்தும் உள்ளவழியறிந்து பாதுகாவாது முன்புநடக்கு முறைமையான் அடியிட்டு நடக்கும் நடையின் அவைதாம் உறக்கடவநோயை நம்மாலுறுமாயின் அதனால் நமக்கு வரும் கொலைப்பாவம் நம்மால் தாங்கவுமொண்ணாது.

---

[1] " கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடும் " (சீவக. 2902). [2] பெருங். 1. 48 : 146 - 7. [3] தரிசனம் - சாஸ்திரம்.

எறிநீர் - வாய்த்தலையினின்றும் குதித்துவரும் வாய்க்கால்நீர். இயக்கம் - வழி. நந்து - ஈண்டு நத்தை. ஊழ் - முறைமை. ஒதுக்கம் - நடை. நோயென்றார்; கொலையென்றுவாக்காற்கூறவுமாகாமையின். இக்கொலைப் பாவம் ஒன்றானும் கழுவப்படாது; அதுவேயுமன்றி மறுமைக்கண் நரகத்திலுறும் துன்பமும் நம்மால் தாங்கலாமளவிற்றன்றென்பதனான், உம்மை எச்சவும்மையாயிற்று. அடைகரை - கடற்கரை யென்பாருமுளர்.

## 93 - 7. வயலுஞ் சோலையும்.......குறுகா தோம்பென

சோலையுமெனவே ஒருசார்வுபற்றித் தோட்டமும் அடங்கிற்று. வயலும் சோலையுமென்பனவற்றைக் கூறிய முறையானே எதிர் நிரனிறையாகக் கொள்ளுவாருமுளர்.

(இ - ள்.) ஈண்டுக் கூறிய வயலும் ஆண்டுக் கூறிய சோலையுமல்லது வேறுபடக் கிடக்குநெறிமேல் நாம் செல்லுகின்ற இடத்தில் இல்லை; ஆதலான், நெறித்த குஞ்சியையுடையாய்! நீ நின்னை விரும்பிய மனைவியோடே அவ்வவ்விடங்களைக் குறிப்பானறிந்து அவை † அபகாரங்களுறாமற் பாதுகாப்பாயாக வென்றாரென்க.

வெய்யோனுக்குக் குறுகாமலெனினும் அமையும்.

காட்டினுங் காட்டும்; முட்டினுமுட்டும்; பரற்பகையுறுக்கும்; கலங்கலுமுண்டு; கொள்ளவுங்கூடும்; இடுதலுங்கூடும்; தாங்கவுமொண்ணு; ஆகலாற் குறியறிந்து அவையவை குறுகாதோம் பென்றாரென்க.

இங்ஙனம் மென்மைத் தன்மைகூறுவார், வருணனைகளையும் உடன் கூறினாரென்க. இத்துணையும் கவுந்தியடிகள் தமது பள்ளிக்கண் இருந்து கூறினாரெனவுணர்க. வயலுமெனவே வாய்க்காலுமடங்கிற்று.

## 98 - 101. தோமறு கடிஞையும்...வழிப்படர் புரிந்தோர்

(இ - ள்.) கவுந்தியடிகள் கடிஞை முதலியவற்றைக் கொண்டு பஞ்சமந்திரமே நமக்கு வழித்துணையாகவெனச் சொல்லிச் செல்ல, அவரோடு பழித்தலரிய ஒழுக்கத்தோடு வழிச்செலவைப்புரிந்தவரென்க.

தோம் - குற்றம். கடிஞை - [1] ஐயக்கடிஞை. அறுவை - தோளிலிடு உறி. மொழிப்பொருட்டெய்வம் - பொருண்மொழியாகியதெய்வம்; ஆவது [2] பஞ்சமந்திரம்; அ ஸி ஆ உ ஸா = அ சி ஆ உ சா.

இனிக் கொண்டென்றதனைக் கொள்ளவெனத் திரித்து அடிகளிது செய்ய இவர்கள் துணையாக வென்றாரெனினும் அமையும்.

## 102 - 11. கரியவன் புகையினும்....ஒலித்தல் செல்லா

(இ - ள்.) கோள்களிற் சனிக்கோள் இடபம் சிங்கம் மீனமென்னு மிவற்றினோடு மாறுபடினும், ஆகாயத்தே தூமக்கோள் எழினும், விரிந்த கதிரையுடைய வெள்ளிக்கோள் தென்றிசைக்கண்ணே பெயரினும் காற்றுப் பொரும் குடகவரையினது உச்சிக்கண்ணே கடிய குரலையுடைய

---

1 "ஐயம் புகூஉந் தவசி கடிஞை", (நாலடி 9)

2 இந்தப் பஞ்சமந்திரத்தைப் பஞ்ச நமஸ்காரமென்பர் சைனர்.

(பி - ம்.) † 'அபசாரங்கள்'

உருமேற்றேடு சூன்முதிர்ந்த பருவப்புயல் தன்பெயலாகிய வளத்தைச் சுரத்தலானே அவ்வரையிற்பிறந்த பல பண்டத்தோடு கடுகிவருதலையுடைய காவிரியினீர், முகத்தைக் குத்தியிடிக்குங் கடல் தன் வளத்தைக் கொண்டு எதிர்தலானே தேங்கி, வாய்த்தலைக்கிட்ட கதவின்மீதெழுந்து குதிக்கின்ற அப்புதுப்புன லொலியல்லது ஆம்பி முதலாயின ஒலித்தல் செல்லாவென்க.

கரியவன் - சனி. புகைக்கொடி - வட்டம், சிலை, நுட்பம் தூமமென்னும் [1] கோட்கள் நான்கினும் தூமக்கோள்; " மைம்மீன் புகையினுந்தூமந் தோன்றினும், தெல் திசை மருங்கின் வெள்ளி யோடினும்" (புறநா. 117 : 1-2) என்றார் பிறரும். கால்பொருநிவப்பு-குடகின் உச்சி. ஏறு - இடியேறு. பஃறாரம் - பல்தாரம்; பலபண்டம். எனவே மலைவளமாயிற்று; ஆவன " தக்கோலந்......சாதியோ டைந்து" (5 : 26, அடியார்.)

கடல்வளமவன: " ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண் முத்தம், நீர்ப்படு முப்பினோ டைந்து."

கடுவரல் - முடுகிவரும் வரவு. ஓ - தூம்பிற்கதவு; இனி ஓவுதல், விகாரத்தால் ஓவென நின்றதெனவுமாம்; இதற்கு இறத்தல் ஈண்டுத் தவிர்தன் மேற்று. ஆம் - பன்றிப்பத்தர். கிழார் - பூட்டைப்பொறி. பிழா - [2] இடா. " நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர், பாடுசிலம்பு மிசையேற்றத், தோடுவழங்கு மகலாம்பியிற், கயமகைய வயனிறைக்கு மென்றொடை வன்கிழாஅர்" (மதுரைக். 89-93) என்றார் பிறரும்.

இனிக் கரியவன் புகையினுமென்பதற்குச் சனிவாரம் புகையினுமெனவுமாம். இனிப் புகையினும் தோன்றினும் படரினும் சுரப்ப எதிர நீர் வாய்த்தலை ஒவிறந்தொலிக்குமொலியல்லது ஆம்பிமுதலிய ஒலித்தல் செல்லாமைக்குக் காரணமாகிய காவிரியென முடிப்பினும் அமையும். புகையினும் தோன்றினும் படரினுமென்ற உம்மைகள், மழை பெய்தொழில் மாற இவற்றில் ஒன்றே அமையுமாகவும் இவையெல்லாம் சேரினும் கடல்வளனெதிர நெரிக்குமெனக் காவிரியின் சிறப்பை விளக்கி நிற்றலிற் சிறப்பும்மைகள்.

## 112 - 3. கழனி......கானத்து

(இ - ள்.) அங்ஙனம் ஒலித்தல் செல்லாக் கழனியிற் செந்நெலும் கரும்புஞ் சூழ்ந்த இடத்தையுடைய நீர்நிலைச்செறுவிலுண்டாகிய தாமரைக் காட்டிலென்க.

## 114 - 9. கம்புட்கோழியும்...பரந்த வோதையும்

(இ - ள்.) கம்புட்கோழி முதலியன வெல்லும்போரைவல்ல அரசரிருவர் பொருமிடம்போலப் பலவேறுவகைப்பட்ட திறத்தையும் ஒலியையுமுடையனவாய் ஒலிக்கும் மிக்க ஓசையுமென்க.

கூக்குரலும் பாடம். கம்புள் - சம்பங்கோழி. கானக்கோழி - கானங்கோழி; நிலவண்மையாக்கிக் காட்டுக்கோழியென்பாருமுளர். நீர்நிறக் காக்கை - நீர்க்காக்கை. உள்ளு - உள்ளான். ஊரல் - குளுவை; நீர்மேலூர்தலினல், ஆகுபெயர். புள்ளு - கணந்துட்புள். போதா - பெருநாரை,

---

[1] இவற்றைக் கரந்துறைகோட்களென்பர். [2] இடா - இறைகூடை.

மரக்காளுரை ; புதா : விகாரம். வெல்போரும், முனையிடமும் வினைத் தொகை. குழூஉக்குரல் - பலவாயொன்ருன ஓசையுமாம்.

### 120 - 24. உழாஅ நுண்டொளி....காய்த்தலைச்சொரிய

(இ - ள்.) உழவராலுழப்படாத சேட்டுக்குழியிற் சேற்றினுட்புக்கு அழுந்திய கழுவாத மயிரையுடைய யாக்கையும் சிவந்த கண்ணையு முடைய எருமை தன்தினவையுடைய முதுகை உரிஞ்சுதலாலே புரி தேய்ந்து அற்றுச்சரிதலுற்ற அழிவற்ற புரிக்கூட்டினின்ற வளவிய பல வருக்கத்து நெல்லுக் கவரித்தொங்கல்போல விளைந்துகிடக்கின்ற செந் நெற்கதிர்த்தலை யிடத்தே சொரியவென்க.

தொளி - சேறு.

### 125 - 6. கருங்கை...ஒலியே யன்றியும்

(இ - ள்.) அங்ஙனம் நெற்சொறிதலானே வினைஞரும் களமருங் கூடி ஒன்றுபட நின்ரெலிக்கும் ஒலியும் ; அதுவேயன்றியுமென்க.

கருங்கை - வலியகை. வினைஞர் - பறையர், பள்ளர் முதலாயினுர். களமர் - உழவர் கீழ்க்குடிமக்கள். கருங்கை இருவர்க்கும் பொது.

### 127 - 31. கடிமலர் களைந்து...விருந்திற் பாணியும்

(இ - ள்.) காலையின் முடித்த பூக்களைந்து முடித்த முடியிலே முடியி னுற்றை நறுக்கிச் சூடிக்கொண்டு வளைந்தவளையையுடைய தோளும் முலையாகமுந்தோய்ந்து சேருடுகோலத்தொடு அழகுபெறத் தோன்றிச் சிவந்த கயல்போலும் பெரிய கண்ணையும் சிறியமொழியையுமுடைய கடைசியர் கடுக மயக்கும் கள்ளை உண்டு தொலைத்ததனுலுண்டான பண் நிறத்திற் சேர்ந்து பழகிப்போதாத பாட்டுமென்க.

என்றது, மதுமயக்கத்தாற் பஞ்சலித்து மயங்கப் பாடினுரென்றபடி. இனிக் கடிமலர் களைந்து முடி நாறழுத்தியென்பதற்குப் போகாப்புல்லா கிய கழுநீர் முதலைப்பறித்து மறித்து அதன்மீதே முடியினுற்றைப் பகுந்து நட்டெனினும் அமையும். தோளும் ஆகமும் தோய்ந்துசேருடு தல் - களித்து ஒருவர்மேல் ஒருவர் சேற்றை இறைத்துக்கோடல். வீறு பெறத்தோன்றலாவது-முலைமேற் றெறித்தசேறு கோட்டுமண் கொண் டாற்போன்றிருத்தல் ; "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தன போல், ஏரிய வாயினு மென்செய்யும்—கூரிய, கோட்டானை த் தென்னன் குளிர் சாந் தணியகலம், கோட்டுமண் கொள்ளா முலை" (முத்தொள்ளா யிரம்) என்ருற்போல. சின்மொழி - இழிந்தமொழி ; சிலவானமொழியு மாம். விருந்திற்பாணி - தம் இசையிற் புதுமையுண்டாகப் பாடும் பாட் டெனினும் அமையும் ; இதனைப் பெருமுளையென்பாருமுளர்.

### 132 - 5. கொழுங்கொடி......ஏர்மங்கலமும்

(இ - ள்.) செந்நெற்கதிரோடே அறுகையும் குவளையையும் கலந்து தொடுத்த மாலையை மேழியிலே சூட்டிப் பாரை இரண்டாகப் பிளப் பாரைப்போலப் போற்றுவார்தொழப் பொன்னேர்பூட்டி நின்ருேர் ஏரைப் பாடும் ஏர் மங்கலப்பாட்டுமென்க.

சூட்டித் தொழநின்றோர் பாடும் ஏர்மங்கலமுமென்க.

## 136 - 7. அரிந்துகால்......முகவைப்பாட்டும்

(இ - ள்.) நெல்லையரிந்து போரிட்டார் சூட்டைக்கடாவிடுதலானுண் டான முகவைப்பாட்டும்,

*ஆவது பொலிபாடுதல். முகக்கக் கொடுத்தலின், முகவையாயிற்று.*

## 138 - 9. தெண்கிணைப்பொருநர்...மகிழிசையோதையும்

*இது களவழி வாழ்த்து; என்னை? "தண்பணைவயலுழவனைத், தெண் கிணைவன் றிருந்துபுகழ் கிளந்தன்று"; வரலாறு : " பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை, அகடுபோ லங்கட் டடாரித்—துகடுடைத்துக், குன்றுபோற் போர்விற் குருசில் வளம்பாட, இன்றுபோ மெங்கட் கிடர்" (பு. வெ. 186) எனவரும். கிணை - தடாரி; புட்பறை யென்பதுங்கொள்க.*

(இ - ள்.) தெளிந்த ஓசையையுடைய கிணைப்பொருநர் செருக் குதலோடெடுத்த மார்ச்சனையையுடைய திரண்ட முழவினது கேட்டோர் மகிழும் இசையினது ஒலியும்,

## 140 - 41. பேர்யாற்று......அவலங் கொள்ளார்

(இ - ள்.) பெரிய யாற்றடைகரையிலே இவ்வோசைகளை முறையிற் கேட்டு நெஞ்சம் விரும்புதலாலே வழி நடத்தலின் உண்டான வருத் தத்தை நெஞ்சிற் கொள்ளாராயென்க.

பரந்தவோதையும் ஆர்க்குமொலியும் விருந்திற்பாணியும் ஏர்மங்கல மும் முகவைப்பாட்டும் மகிழிசையோதையும் என்னுமிவற்றைப் பேர் யாற்றடை கரைக்கண்ணே நீர்மைபெறக் கேட்டலால் உண்டான விருப் பத்தானே நெஞ்சில் அவலங் கொள்ளாராயென்க.

## 142 - 7. உழைப்புலிக்கொடி......இருக்கை யன்றியும்

(இ - ள்.) புலியைத் தன்னிடத்தேயுடைய கொடியையுயர்த்த தேரை யுடைய உரவோனாகிய கரிகாலனது கொற்றத்துடனே மழைக்கும் கருப் பத்தைத் தோற்றுவிக்கும் அழலை விளக்குகின்ற சாலையினுண்டானமறை யோரான் ஆக்கப்பட்ட தேவருணவின் ஆவி இறையுயர்ந்த மாடமாகிய அகங்களெங்கும் போர்த்தலானே மஞ்சு சூழ்ந்த மலைபோல மாட்சிமைப் படத் தோன்றும் மங்கல மறையோரிருப்பிடங்களும்; அவையன்றியும்,

## 148 - 55. பரப்புநீர்......சென்று ளொருநாள்

(இ - ள்.) இரப்பவர் சுற்றத்தையும் புரப்பவர் கொற்றத்தையும் தம் உழவினிடத்தே விளைப்போருடைய பழைய வலி பொருந்திய ஊர்களு மாகிய இவ்விருவகையூர்களையும் இடையிட்ட நாடெல்லாங்கண்டு நடக்கு நாட் காதமென்னும் எல்லையல்லது நடந்து தொலைக்க மாட்டாராய்ப் பல நாள் தங்கி நடக்கின்ற நாளிலே ஒருநாளென்க.

தூற்றுப்பொலி ஆலையிற் பாகு காய்கின்ற புகையாற் பரக்கப்பட்டு இருட்சியையுடைய முகில் தவழ்ந்த மலைபோலத் தோன்றும் பழவிறலூர் களும் என்க.

[1]காவிரிநீர் கங்கைநீராதலிற் கங்கையின் புதல்வரைக் காவிரியின் புதல்வரென்றார்; அன்றியும் "மகவாய் வளர்க்குந் தாயாகி" (7 : 27) என்பதனானுங்கொள்க. தோன்றுமிருக்கையும் தோன்றுமூர்களுமென வியையும். அவ்வூர்களை இடையிட்ட நாடென்க. உடன்கண்டென்றார், இந்நாட்டுச் சிறப்பெல்லாம் கண்டு தொலைத்துக் கழிதலருமையின். புதல்வராகி உழவிடை விளைப்போரென்க.

## 159 - 63. ஆற்றுவீ யரங்கத்து......சாரணர் தோன்ற

(இ - ள்.) ஆற்றை மறைக்கும் அரங்கத்தில் வேறிடத்தில்லாத தன்மைத்தாய் வளர்ந்த மூங்கின் முள்ளால் வளைக்கப்பட்ட வேலியையுடைய மரம்பயின்ற செறிந்த சோலையில் தேவருறைதற்கொத்த பூப்பொருந்திய தொருபக்கத்தே பட்டினப்பாக்கத்து [2]வான்பெரு மன்றத்துப் பிண்டி நீழற் கண்ணே உலக நோன்பிகள் இடப்பட்ட சிலாதலத்தின் மேலிருந் தருளிப் பெருமகனாற் செய்யப்பட்ட அதிசயங்கள் மூன்றுந் தப்பாத ஆகமநூலினுண்மைத் தன்மையையுடைய தருமவொழுக்கத்தை யாவருங் கேட்கும்படி அருளிச்செய்யும் [3]சாரணர் அப்பட்டினப் பாக்கத்தைவிட்டு நீங்கிவந்து தோன்ற வென்க;

அதிசய மூன்றாவன : சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதி சயமென்பன.

வீற்றுவீற்றாகி உடுத்த ஒருசிறைச் சாரணர் தோன்றவென்க.

## 164 - 9. பண்டைத் தொல்வினை......கொள்ளான்

(இ - ள்.) முன்செய்த பழவினையெல்லாம் கெட்டோடுகவென்று உட்கொண்டு அவர் வந்தமையைக் கண்டறிந்த கவுந்தியடிகளுடனே சென்று அவரடியிலே தலையுற வீழ்ந்தார்; அங்ஙனம் வீழ்ந்தவர் ஈண்டுவந்தது தனது விளங்கிய கோட்பாட்டையுடைய [4]அவதி ஞானத்தால் தெரிந்தவனாயினும் ஆர்வமும் செற்றமும் தன்னைவிட்டுப் போம்படி நீக்கிய [5]வீரனாகலாலே இவர்க்கு வருந்துன்பத்திற்குத் தான் வருந்தானாகியென்க.

---

[1] 'கங்கையாருழைச்சென்று காவிரியாரை வாங்கி' என்று கூறினர் நச்சினார்க்கினியரும்; தொல்காப்பியப் பாயிரவுரையிற் காண்க.

[2] வான்பெருமன்றமென்பது முதலாக இங்கே தந்துரைத்தவற்றை, இக்காதை, 20-ஆம் அடி முதலியவற்றிற் காண்க.

[3] சாரணர் - சமண முனிவர். அவர் : தல சாரணர், சல சாரணர், பல சாரணர், புட்ப சாரணர், தந்துசாரணர், சதுரங்குல சாரணர், சங்க சாரணர், ஆகாச சாரணரென எண்வகையர்; இவ்விருவராகச் சென்று தருமோபதேசஞ் செய்தல் அவர்கட்கு இயல்பென்பர்.

[4] அவதி ஞானம் - அதீதகதமான பரிஞ்ஞானம்; அஃதாவது தன்னுடைய முற்பிறப்பை யறியுமறிவு.

[5] வந்த சாரண ரிருவருள், உபதேசிப்போர் மூத்தோரே யாதலின், வீரனென ஒருமையாற் கூறினர்.

[1] கண்டறிவுகவுந்தியென்பதனுலும் காலவுணர்ச்சியின்மை யுணர்க. ஒடு : ஒருவினையொடு.

170 - 71. கழிபெரு......வல்வினை

(இ - ள்.) மிக்க பெரிய தவச் சிறப்பையுடைய கவுந்தி, யாவரானும் ஒழிக்க ஒழியாததாய் நுகர்விக்க வந்துநிற்கின்ற தீவினையைக் காணு யென்றுரெென்க.

காணுய் - பாராய். ஒழிகென வொழியாதென்பதற்கு, நீ 'உரிய தன்றீங் கொழிக' (10 : 55) எனவும் ஒழியாது ஊட்டுந் தீவினையை யெனினும் அமையும்.

172 - 3. இட்ட வித்தின்......ஒண்ணு

(இ - ள்.) விளைநிலத்திட்ட வித்துப்போலப் பயனெதிர்ந்து கண் கூடாக நல்வினைவந்து நுகர்விக்குங் காலத்தும் ஒழிக்கவொண்ணு; அதுபோல இதுவும் ஒழிக்க ஒழியாதென்றுரெென்க.

" உறற்பால......தணிப்பாருமில் " (நாலடி. 104) என்றுராகலின், தீவினைதன்னையே கூறினும் அமையும். உம்மை : எச்சவும்மை.

174 - 5. கடுங்கால்......உடம்பிடை யுயிர்கள்

(இ - ள்.) கடிய காற்றையுடைய நெடிய வெளியிலிடப்பட்ட விளக் கென்னும்படி மாயினல்லது கூடி உடனில்லா, உடம்பினின்ற உயிர்களு மென்றுரெென்க.

நல்வினை தீவினைப்பயனுகிய இன்பமும் துன்பமும் வருங்கால் யாவரானும் ஒழிக்கவொண்ணு வென்பதூஉம், யாக்கை நிலையாமையும் இவர் தம்பால் உறுவது கண்டு கவுந்தியடிகட்குச் சாரணர் கூறினரென வுணர்க. விளக்கு உவமித்தார்; நினைவற அழிவதற்கும், புக்குழிப் புலப்படாமைக்கும்.

176 - 91. அறிவனறவோன்...பொதியறை யோரென

176. அறிவன்—(இ - ள்.) எல்லாப் பொருளையுமறியும் அறிவையுடையோன்,

அறவோன்—(இ - ள்.) அறஞ்செய்தலையே தொழிலாக வுடையோன்,

அறிவு வரம்பிகந்தோன்—(இ - ள்.) யாவருமறியப் படும் அறிவெல்லையைக் கடந்தோன்,

177. செறிவன்—(இ - ள்.) எல்லாவுயிர்கட்கும் இதனுயுள்ள வன்; சலியாதவனென்றுமாம்.

சினேந்திரன்—(இ - ள்.) எண்வகைக் கன்மங்களையும் சயித்தவன்,

---

[1] இஃது, 'உரிய தன்றீங் கொழிகென வொழியீர்' (10 : 55)என்பதன் உரையிற் கூறியதை வற்புறுத்தற்கு.

அவையாவன : [1] ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் எனவிவை.

சித்தன்—(இ - ள்.) கிருதகிருத்தியன் = செய்யவேண்டுவனவற்றைச் செய்துமுடித்தவன் ; கன்மங்களைக் கழுவினவனுமென்ப.

பகவன்—(இ - ள்.) [2] கேவல ஞானி.

178. தரும முதல்வன்—(இ - ள்.) தருமங்களுக்கு அடியாயுள்ளவன்,

தலைவன்—(இ - ள்.) எல்லாத் தேவர்க்கும் தலைவனாக எண்ணப்பட்டவன்,

தருமன்—(இ - ள்.) தருமம் தானுயுள்ளவன்,

179. பொருளன்—(இ - ள்.) ஆகமத்தின் பொருளாயுள்ளவன் ; இன்மைப் பொருளாயுள்ளவனெனவுமாம்.

புனிதன்—(இ - ள்.) சுத்தன் ; புதியவனுமென்ப.

புராணன்—(இ - ள்.) பழையவன்,

புலவன்—(இ - ள்.) எல்லார்க்கும் அறிவாயுள்ளவன்,

180. சினவரன்—(இ - ள்.) சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்,

தேவன்—(இ - ள்.) தேவர்களுக்கு ஆதியாகிய தேவன்,

சிவகதி நாயகன்—(இ-ள்.) வீட்டுலகிற்கு நாயகனுயுள்ளவன்,

181. பரமன்—மேலானவன்,

குணவதன்

(இ - ள்.) குணத்தையுடையவன் ; வதம் - [3] விரதமுமாம்.

பரத்தி லொளியோன்—

(இ - ள்.) மேலாய உலகிற்கு விளக்காயுள்ளவன்,

182. தத்துவன்—(இ - ள்.) தத்துவங்களையுடையோன்,

சாதுவன்—(இ - ள்.) ஒடுங்கினவன்,

சாரணன்—(இ - ள்.) ஆகாசவாசி.

---

[1] ஞானவரணீய முதலிய வெட்டும் காதி அகாதியென இருவகைப்பட்டு, நூற்று நாற்பத்தெட்டாக விரியுமென்பர்.

[2] கேவல ஞானம் - ஐந்து ஞானத்துள்ளும் சிறந்தது. ஐந்து ஞானங்களாவன :—(1) மதி ஞானம் - சுபாவ புத்தி ; (2) சுருத ஞானம்—நூல் உணர்ச்சி ; (3) அவதி ஞானம் - தன்னுடைய முற்பிறப்பை யறியுமறிவு ; (4) மனப்பரியய ஞானம் - தன்னுடைய முற்பிறப்பையும், பிறருடைய முற்பிறப்பையும் அறியுமறிவு ; (5) கேவல ஞானம் - திரிகால உணர்ச்சி.

[3] விரதம் - அனுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதமென மூன்று வகைப்படும் ; அவற்றுள் குணவிரதம்—திக்குவிரதம், தேசவிரதம், அநர்த்ததண்ட விரதமென மூன்றுவகைப்படும்.

காரணன்
(இ - ள்.) எல்லாவற்றிற்கும் காரணமாயுள்ளவன் = காரணபூதன்,
183. சித்தன்
(இ - ள்.) எண்வகைச் சித்திகளையு முண்டாக்கினவன்.
பெரியவன்—(இ - ள்.) எல்லாவற்றுனும் பெரியவன்,
செம்மல்—(இ - ள்.) நாயகமூர்த்தி,
திகழொளி—(இ - ள்.) விளங்கும் ஒளியாயுள்ளவன்
184. இறைவன்—(இ - ள்.) எப்பொருளினும் தங்குகின்றவன்,
குரவன்—(இ - ள்.) குருமூர்த்தியாயுள்ளவன்,
இயல்குணன்—(இ - ள்.) இயல்பையே குணமாக உடையவன்,
எங்கோன்—(இ - ள்.) எம்முடைய சுவாமி,
185. குறைவில் புகழோன்
(இ - ள்.) நிறைந்த புகழையுடையோன்,
குணப்பொருட் கோமான்—
(இ - ள்.) குணங்களைச் சம்பத்தாக வுடையவன்,
186. சங்கரன்—(இ - ள்.) சுகத்தைப்பண்ணுகின்றவன்,
ஈசன்—(இ - ள்.) ஐசுவரியவான்,
சயம்பு—(இ - ள்.) தானேதோன்றினவன்,
சதுமுகன்—(இ-ள்.) நான்முகன் = அதிசயத்தோடு நான்முகன்,
187. அங்கம் பயந்தோன்
(இ - ள்.) [1] அங்காகமத்தை யுண்டாக்கினவன்,
அருகன்—(இ - ள்.) பூச்சியன்,
அருண்முனி—(இ - ள்.) சிவபர மூர்த்தி,
188. பண்ணவன்—(இ - ள்.) கடவுள்,
எண்குணன்—(இ - ள்.) எட்டுக்குணங்களையுடையோன்,

எண்குணமாவன :—அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், அழியாவியல்பென விவை.

பாத்தில் பழம்பொருள்—(இ - ள்.) பகுத்தற்கரிய புராணப் பொருளாயுள்ளவன்; ஓட்டமற்ற பொன்னையொப்பானென்றுமாம்.

189. விண்ணவன்—(இ - ள்.) சுவர்க்கவாசி,

---

[1] அங்காகமம், 12 புகுப்புடைத்து. அவை வருமாறு : (1) ஆசாராங்கம் (2) சூத்திரகிருதாங்கம், (3) ஸ்தானாங்கம், (4) ஸமவாயாங்கம், (5) வியாக்கியாப் பிரஜ்ஞப்த்யங்கம், (6) ஞாதிருகதாங்கம், (7) உபாஸகாத்தியயனாங்கம் (8) அந்தக்கிருததசாங்கம், (9) அநுத்தரோபபாதிகதசாங்கம், (10) பிரச்சிந வியாகரணாங்கம், (கக) விபாகசூத்திராங்கம், (12) திருஷ்டிவாதாங்கம்.

வேத முதல்வன்—(இ - ள்.) [1] ஆகமமூன்றிற்கும் முதலா யுள்ளவன்.

விளங்கொளி—(இ - ள்.) அஞ்ஞானவிருள் நீங்க விளங்கு மொளி.

190 - 91. ஓதிய வேதத்து......பொதியறை யோரென

(இ - ள்.) இந்நாமங்களை யுடையோனால் ஓதப்பட்ட ஆகமமாகிய விளக்கொளியைப் பெற்றுற்போந்தேறுவதல்லது யாவரும் பிறவியாகிய சிறையினின்றும் போகமாட்டாரென்றாரென்க.

[2] பொதியறை - துவாரமில்லாத கீழறை.

192 - 3. சாரணர் மேற்கொண்டு

(இ - ள்.) இங்ஙனம் சாரணர் அருளிச்செய்த உண்மைமொழியைக் கேட்டுத் தவத்திற்கு முதல்வியாகிய கவுந்தியடிகளும் தமது கைகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு நின்றுகூறுவார் :—

194 - 5. ஒருமூன்று......செவியகந் திறவா

(இ - ள்.) எனது செவிகள் காமவெகுளி மயக்கங்களைக் கெடுத்தவனால் ஓதப்பட்ட ஞானபாதமாகிய திருமொழியைக் கேட்டற்குத் திறப்பினல்லது பிறிதொன்றற்குத் திறப்பனவல்லவென்றாரென்க.

அவித்தல் அடக்குதலுமாம்.

196 - 7. காமனை......நவிலா தென்று

(இ - ள்.) என்நாவும் காமன்செயலை வென்றவனுடைய ஆயிரத்தெட்டு வகைப்பட்ட நாமம் நவிலினல்லது பிறிதொன்றனை நவிலாதென்றாரென்க.

198 - 9. ஐவரை வென்றோன்......காணா வென்கண்

(இ - ள்.) எனதுகண்களும் ஐவகைப்பட்ட இந்திரியங்களையும் வென்றவனுடைய அடியிணைகளைக் காணினல்லது பிறிதொரு தேவரடியிணைகளைக் கையகத்தே காணினும் காணாவென்றாரென்க.

ஐவர், செறலின்கண் திணைமயக்கம். இனிக் கைவரைகாணினும் பாடமாயின், கைவரைகாணல் கண்விழித்தலாக்கி விழித்திருப்பினும் காணாவென்க.

200 - 201. அருளறம் பூண்டோன்......பொருந்தாது

(இ - ள்.) எனது பயனற்றயாக்கை அருளால் அறத்தைப்பூண்டோனுடைய திருமேனிப்பொருட்டுப் பூமியிற்பொருந்தினல்லது பிறிதொன்றற்குப் பொருந்தாதென்றாரென்க.

அருளறம் : உம்மைத்தொகையுமாம்.

202 - 3. அருக ரறவன்..............குவியா

(இ - ள்.) எனது இருகையும் அருகர்க்கு அறத்தைக்கூறுவோனாகிய அறிவன்பொருட்டு என்சிரத்தின்மிசையே குவியினல்லது பிறிதொரு தேவர் பொருட்டுக் குவியாவென்றாரென்க.

அருகர் - இருடிகள்.

---

[1] ஆகம மூன்றுவன : அங்காகமம், பூர்வாகமம், பஹுச்ருதியாகம மென்பன. [2] இது புழுக்கறையெனவும் வழங்கும் ; மணி. 3 : 95 ; 23 : 60.

## 204 - 5. மலர்மிசை......பொருஅது

(இ - ள்.) எனது தலையினுச்சியும் பூவின்மீதே நடந்தோனுடைய மலரடியாகிய அணியை அணியப் பொறுப்பினல்லது பிறிதொன்றனையும் அணியப்பொருதென்றுரென்க.

## 206 - 7. இறுதியி லின்பத்து......பெயராது

(இ - ள்.) என்மனமும் ஈறிலின்பமாகிய அநந்தசுகத்தையுடைய இறைவனருளிச்செய்த ஆகமமாகியமொழியை உருவேற ஓதிப்புடை பெயரினல்லது பிறிதொருமொழியையோதிப் புடைபெயராதென்று ரென்க.

மறுதர - மீளவும்.

## 208 - 13. என்றவ னிசைமொழி......பணிந்தனர் போந்து

(இ - ள்.) தம்கையைத் தலைமேற்கொண்டுநின்று, கவுந்தியடிகள், திறவா; நவிலாது; காணு; பொருந்தாது; குவியா; பொருது; பெயரா தென்றுகொண்டு அவன் புகழ்மொழிகளை ஏத்தக்கேட்டு அதற்குப் பொருந்திய சாரணர் அவ்விடத்திடப்பட்ட சிலாவட்டத்தினின்று மெழுந்து அதற்கு ஒரு முழவுயரம் மேலாநின்று பிறப்பைத்தரும்பாசம் கவுந்திக்குக் கெடுவதாக வென்றுகூறி அந்தரவழியாக விரைந்துசெல் கின்றவரைநோக்கித் தொழுது பாசங்கள் அறுகவென்று பணிந்தன ராய்ப் போந்தென்க.

## 214 - 8. காரணி பூம்பொழில்...பூம்பொழி லிருந்துழி

(இ - ள்.) முகிலையணிந்த பொழிலையுடைய காவிரியாகிய பெரிய யாற்றிற்கு மாதரும் கணவனும் கவுந்தியடிகளும் பள்ளியோடத்தேறிப் போய்த் தென்கரையைச்சென்றெய்திப் போதுகள் சூழ்ந்துகிடக்கின்ற தோர் பொலிவினையுடைய பொழிலிடத்தே சென்றிருந்தபொழுதிலென்க.

## 219 - 20. வம்பப் பரத்தை......சென்றோர்

(இ - ள்.) [1] இடங்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகையொருத்தி யும் ஒருவனுங்கூடி இவர்கள் இருக்கின்ற மணம்பரந்ததோர் பொழி லிடத்தே அணுகினராய்ச் சென்றவரென்க.

வம்பப்பரத்தை - புதிய பரத்தைத்தன்மையையுடையாள்; குண்ட மென்றபடி. இனி, மனவெழுச்சியால் தோன்றினபடி சொல்லித்திரியும் பரத்தையென்றுமாம். வறுமொழியாளன் - பயனில்சொல்லாளன்; விட னென்றபடி.

## 221 - 2. காமனுந் தேவியும்......அறிகுவ மென்றே

(இ - ள்.) இவ்விடத்துவந்திருக்கின்ற காமனையும் இரதியையுமொக் கும் இவர்களை யாரென்றுகேட்டு அறியக்கடவோமென்று சொல்லியென்க.

இனி, இவ்விடத்துவந்தவிவர் காமனும் தேவியுமே; அல்லராயின், யாரெனக் கேட்டறிகுவமென்றுரெனினும் அமையும். இப்பொருட்குப் போலி ஒப்பில் போலி. ஈங்கிவர்: ஈங்கு - இவ்விடத்து. கேட்டீங்கு: ஈங்கு - இப்பொழுது.

---

[1] இடங்கழிகாமம் - மிக்க காமம்; மணி. 10 : 22; 18 : 119.

## 223 - 4. நோற்றுணல் யாக்கை......வினவ

(இ - ள்.) [1] உவாமுதலிய விரதநாட்களிற் பட்டினிவிட்டுண்டலான் மெலிந்தயாக்கையையும் நுண்ணிய தவத்தையுமுடையீர்! நும்மொடு கூடி வழிவந்த இவர் யாரென்று வினவவென்க.

ஆற்றுவழிப்பட்டோர் - வழியிற் கூடிவந்தோர்.

## 224 - 6. என்மக்கள்......பரிபுலம் பினரென

(இ - ள்.) அவ்விருவரும் இவ்விருவரையும் வினவுதல்கண்ட கவுந்தியடிகள் இவர் என்மக்கள்காணும்; நீர்சொன்ன காமனும் தேவியுமல்லர்; மானிடயாக்கையர்; வழிவரும் வருத்தத்தால் மிகவும் வருந்தினர்; அவருழைச்செல்லாதே விடப்போமினென்றுரென்க.

பரி - மிகுதி; பரிபுலம்பினர் : ஒரு சொல்லுமாம்.

## 227 - 8. உடன்வயிற்றோர்கள்......கற்றறிந் தீரென

(இ - ள்.) நூல்களையுங்கற்று அதன்பயனையுமறிந்தவரே! ஒரு வயிற்று உடன்பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாய்க் கூடிவாழக்கடவதென்று நீர் கற்றநூல்களிற் சொல்லிக்கிடப்பதுமுண்டோ? உண்டாகிற் சொல்லுமென்றுரென்க.

கற்றறிந்தீரென்றது இகழ்ச்சி; இவ்வாறோ நீர் கற்றனவுமென்பதாம்.

## 229 - 40. தீமொழி கேட்டு......உரையீரோவென

(இ - ள்.) இங்ஙனம் இவர் இகழ்ந்தமொழியைக் கேட்டலாற் செவியைப் புதைத்துக் கண்ணகி நடுங்க, என் பூங்கோதைபோல்வாளை இவர் இகழ்கின்றனர்; இவ்விகழ்ச்சியால் துடக்குமுட்களையுடைய காட்டில் நுழைந்துதிரியும் முதுநரியாகக்கடவரெனக் கவுந்தியடிகள் இட்ட சாபம் தவத்தின் விளைவாகிய சாபமாதலால் அவரைச் சென்று பூண்டதாதலின், அங்ஙனம் விளைந்த படியையறியாராகிய கோதையும் நம்பியும் குறியநரியினது நெடிய குரலாகக் கூவும் விளியைக்கேட்டு நடுங்கிச்சென்று ஒழுக்க நெறியினின்றும் நீங்கியோர் நீர்மையல்லாதனவற்றைச் சொல்லினும் இஃது அவர் அறிவின்மையாற் கூறியதன்றோவென்று உயர்ந்தோர் தமதறிவான் உணரவேண்டும்; செய்தவத்தீர், உம்முடைய திருமுன் பிழைத்த இவர்க்கு இனிச் சாபநீங்கி உய்தல் உடைத்தாங்காலத்தை உரைத்தருளீரென்று கூறவென்க.

போலும் : ஒப்பில்போலி. முதுநரி - ஓரி. நடுங்கியென்றுர், தம் பொருட்டாகவிளைதலின். ஓகாரம் : இசைநிறை. அடிகள் மனத்தால் நினைத்திட்ட சாபமாதலாற் பட்டதையறியாரென்றுர். இங்ஙனம் அறியாதவர்கள் அவர் சொன்ன இகழ்ச்சியாலும் இதற்கு இவரல்லது வேறு சபிக்கவுரியாரின்மையானும் உய்திக்காலமுரையீரென்றுர். விளி - ஓரிக்குரல். 'நெறியி னீங்கியோர் நீரல கூறினும், அறியா மையென் றறியல் வேண்டும்' என்னுந்துணையும் அவருட்கோள். பின்னதை அடிகட்குக் கூறினர்.

## 241 - 5. அறியாமையினின்று...சாபவிடை செய்து

---

[1] "ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட்டு" (சீவக. 1547)

(இ - ள்.) தமது முப்பொறிகளானவரும் துன்பமென்பதனை அறிந்து கூருமையானே இன்று இழிபிறப்பையுற்ற இவர் உறையூர் மதிற்புறமாகிய காவற்காட்டிற்றிரிந்து பன்னிரண்டு திங்கள் இங்ஙனம் துன்ப முழந்த பின்னர் முன்னைப்பிறப்பைப் பெறுவாராகவெனச் சபா விடை செய்தென்க.

இன்று இழிபிறப்புற்ருேரென்றது நெடுங்காலம் தவஞ்செய்து பெற்ற மக்கட்பிறப்பை ஒருவார்த்தையினிழந்து இழிபிறப்புற்ருரென்ற வாறு; எனவே [1]யாகாவாராயினும் நாகாத்தல் வேண்டுமென்பதாயிற்று; "ஆக்கப் படுக்கு மருந்தனைவாய்ப் பெய்விக்கும், போக்கப்படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும், காக்கப் படுவன விந்திய மைந்தினும், நாக் கல்ல தில்லை நனிவெல்லு மாறே" (வளையாபதி) என்பதூஉமாயிற்று; நொச்சி யொருபுடை யென்றது வேறு அரண்வேண்டாமை விளக்கிற்று; "நொச்சி வேலித் தித்த னுறந்தை" (அகநா. 122 : 21) என்றதுமது. இழிபிறப்பு - விலங்கின் பிறப்பு. முன்னையுருவம் - வம்பப்பரத்தையும் வறுமொழியா ளனுமெனவுமாம்.

## 245-8. தவப்பெருஞ் சிறப்பின்......புக்கனர் புரிந்தென்.

(இ - ள்.) தவத்தான்மிக்க சிறப்பையுடைய கவுந்தியடிகளும் தேவி யும் கணவனும் முறம்போலுஞ்செவியையுடைய யானையைச் சமரிடத்துக் கெடுத்த புறத்தே சிறையையுடைய கோழியென்னு நகரின்கண்ணே விருப்பத்தோடு புக்காரென்க.

வாரணம் - கோழி; ஆவது உறையூர். முற்காலத்து ஒருகோழி யானையைப் போர்தொலைத்தலான் அந்நிலத்திற்செய்த நகர்க்குக் கோழி யென்பது பெயராயிற்று. அந்நகர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனுற் புறம்பே சிறையையுடைய கோழியென்ரு யிற்றென் பாருமுளர்; அற்றன்று; புறஞ்சிறைவாரணமென்பது சிலேடை: புறத்தே சிறையையுடைய கோழியும், புறஞ்சேரியையுடைய உறையூரும்; "புறஞ்சிறைப் பொழிலும்" (14 : 1) என்ப மேலுமாகலின்.

பணிந்தனர்போந்து எய்தி இருந்துழிச் சென்ருேர் வினவப் பரி புலம்பினரெனக் கடவதுமுண்டோ கற்றறிந்தீரெனச் செவியகம் புதைத்து நடுங்க மூதுநரியாகெனக் கட்டியதாதலின் உரையீரோவெனப் பெறுக ஈங்கிவரெனச் சாபவிடைசெய்து கவுந்தியும் தேவியும் கணவ னும் புரிந்துபுக்காரென்க.

இஃது எல்லாவடியுந் தம்முளொத்துமுடிதலின் **நிலைமண்டிலவா சிரியப்பா.**

### (10) நாடுகாண் காதை முற்றிற்று.

---

[1] குறள். 127.

## கட்டுரை

1-2. முடியுடை...உதித்தோர்—மூவேந்தருள்ளும் சோழர் குலத்து உதித்தோருடைய ; மூவர் - சோழர் பாண்டியர் சேரர்.

3. அறன்

"அறவோம்படை" (5 : 179) என்றது தருமாசனமென்பாருமுளர்.

மறன்—"இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக், கொடு வரியொற்றி" (5 : 97 - 8) என்றது.

ஆற்றல்—"கோநகர் காத்த" (6 : 8) என்றது.

4. மூதூர்ப்பண்பு மேம்படுதல்

"புகாரேயாயினும்" (1 : 16) என்றது.

5. விழவுமலிசிறப்பு—

"விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி" (5 : 168) என்றது.

விண்ணவர்வரவு—"அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண்குறூஉம் வானவன் விழவு" (6 : 72 - 3) என்றது.

7. குடி—"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழ விடை விளைப்போர்" (10 : 149 - 50) என்றது.

கூழின் பெருக்கம்—"குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு, கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரிய" (10 : 123 - 4) என்றது.

7-8. அவர் தம் தெய்வக்காவிரித் தீதுதீர் சிறப்பு—

"கரியவன்......ஒலிக்கும்" (10 : 102 - 9) என்றது.

9. பொய்யா வானம் புதுப்புனல் பொழிதல்—"மழைக் கருவுயிர்க்கு மழற்றிக முட்டின் மறையோர்" (10 : 143 - 4) என்றது.

10. அரங்கு—"நூனெறி மரபி னரங்கம்" (3 : 99) என்றதும், "தோற்றிய வரங்கில்" (3 : 106) என்றதும்.

ஆடல்—"ஆடலும்" (3 : 16) என்றது

தூக்கு—"தூக்கும்" (3 : 16) என்றது

வரி—கண்கூடு வரி முதல் எடுத்துக்கோள்வரி யிறுதியாகவுள்ள எட்டு வரியும் (8 : 74 - 108)

11. பாரதி விருத்தி—நாடகவுறுப்பாகிய பாரதிவிருத்தி; அது கடலாடுகாதையிற் கூறப்பட்டுள்ள பதினோராடலும் (39 - 63)

12. திணை நிலைவரி—"கடல்புக்கு" (17) என்னுங் கவிமுதல் "சேரன் மடவன்னம்" (23) என்பதிறுதியாகவுள்ள ஏழும்.

இணை நிலைவரி—சார்த்துவரி முதலாகிய பல வரிகளால் வருவன (கானல்வரியிற்காண்க)

13. யாழின்றொகுதி—"சித்திரப்படம்" முதல், "பட்டடை" ஈறாகவுள்ளன (7 : 1)

**14.** *ஈரேழ்சகோடம்*—" ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி " (3 : 70) என்றது.

*இடநிலைப்பாலை*—" குரல்வா யிளிவாய்க் கேட்டனள் " (8 : 35) என்றது.

**15.** *தாரத்தாக்கம்*—" குரலீருகவும் " (8 : 38) என்பதனுல், தாரம் குரலாகிய விளரிப்பாலை பிறக்குங்கால் தாரம் ஆக்கம் பெறுதல் காண்க.

*தான்றெரிபண்*—அகநிலைமருதம், புறநிலை மருதம், அருகியன் மருதம், பெருகியன்மருதமென்னும் பண் நான்கும் தெரியுந்திறன் [8 : 39 - 40]

**16.** *ஊரகத்தேர்*—" மகரவாசிகை.........வீதி " (5 : 151 - 6) என்றது.

*ஒளியுடைப்பாணி*—" சீரியல் பொலிய " (3 : 135) என்றது

**17.** *என்றிவையனைத்தும்*—என்று சொல்லப்பட்ட இவைகள் யாவும்,

**17-8.** *பிறபொருள்......நிலைமையும்*

சொல்லாதொழிந்த பிறபொருள்கள் வைத்த வைப்போடே பொருந்தித் தோன்றும் ஒப்பற்ற முறைமை நிலைபெறலும்,

**19-20.** *ஒரு பரிசா நோக்கிக் கிடந்த புகார்க்காண்டம் முற்றிற்று*-ஒருபடிப்பட நோக்கிக்கிடந்த புகார்க்காண்டம் முற்றியது.

**முதலாவது**

**புகார்க்காண்டத்தின்**

**அடியார்க்கு நல்லாருரை முற்றிற்று.**

## இரண்டாவது

# மதுரைக்காண்டம்



## (11) காடுகாண் காதை

திங்கண்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதைதாழ் பிண்டிக் †கொழுநிழ லிருந்த
ஆதியி றேற்றத் தறிவனை வணங்கிக்
‡கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லாம்
அந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்தாங்
கன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கித்
தென்றிசை மருங்கிற் செலவுவிருப் புற்று
வைகறை யாமத்து ¶வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற

---

1. திங்கள்மூன் றடுக்கிய - மூன்று திங்களை அடுக்கினாலொத்த.

4. அறிவனென்றது உறையூர் ஸ்ரீ கோயில் நாயனாரை.

2 - 4. (பா) ஞாயிற்றைப்போல ஒளிசிறந்த அறிவன்; சிறந்த கோதையெனக் கூட்டினுமாம்.

5. கந்தன்பள்ளி - உறையூர் ஸ்ரீ கந்தன் பள்ளி.

6. அந்தில் : அசைநிலை. அரங்கம் - திருவரங்கம்; ஆற்றின் குறை யென்பாருமுளர்.

9. அல்கினரடங்கி - விட்டு அங்குத் தங்கி.

(6) அரங்கத்திற்கண்ட (7) சாரணர் சொன்ன தருமவுரையைக் (5) கடவுளர்க்கு (8) மொழிந்து (11) வாரணங் கழிந்து வழிக்கொண்டு (14) இளமரக்கானத்துப் புக்குழியென்க.

---

அடி, 3 : சீவக. 3012. அடி, 16 : மணி. 15 : 34.

(பி - ம்.) † 'குளிர்நிழ' ‡ 'கந்தம்பள்ளிக்' ¶ 'வாரணங்காட்ட; வெய்ப்பவன்'

வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்ததோர்
இளமரக் கானத் திருக்கை புக்குழி
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதொ †றூழிதொ றுலகங் காக்க
அடியிற் றன்னள வரசர்க் ‡ குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் ¶ கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணு யிரத்தோன் றிரல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை § யெய்தா தேகப்
பிழையா $ விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை
யாது நும்மூ ரீங்கென் வரவெனக்
கோவலன் கேட்பக் குன்றாச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொரு ளுரைப்போன்

---

(4) வணங்கி (8) மொழிந்து (14) கானத்திருக்கை புக்குழியென்க.

14. இருக்கை - இருப்பிடம்.

17. அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி - கடலினளவை அடியாலே இன்ன அளவினது இதுவென்று அரசர்க்குக் காட்டி; அன்றி அடியினாலே தன்பெருமையை அரசர்க்கு அறிவித்தென்பாருமுளர்.

18. வேலாலும் எறிந்த பகை.

19. பஃறுளியாறு - குமரிப்பக்கத்ததோர் யாறு.

20. கோடு - கரை. கொடுங்கடல் கொள்ள - வளைந்த கடல் கொள்ளுகையினாலே.

26. முதல்வன் - இந்திரன்; இந்திரன் சென்னிமுடியிலே வளையுடைத்தோனென்க.

---

அடி, 15 - 6: சிலப். 25 : 181 - 2, 27 : 139 - 40, 28 : 185 - 6; **மணி.** 19 : 178. அடி, 17 - 22 : "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின், மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப், புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை, வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" (கலித். 104). அடி. 19. பஃறுளியாறு : **புறநா.** 9 : 11. அடி, 26 : சிலப். 23 : 50.

(பி - ம்.) † 'றூழியுலகங்' ‡ 'குணர்த்திய' ¶ 'கோடுகொடுங்' § 'பெய்யா தேக' $ 'விளையுள்'

நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் † விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் ‡ துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்
வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ரார மார்பிற் பூண்டு
பொலம்பூ ¶ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமும்
என்கண் காட்டென் றென்னுளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்
தென்னவ னாட்டுச் சிறப்புஞ் செய்கையும்
கண்மணி குளிர்ப்பக் கண்டே னாதலின்
வாழ்த்திவந் திருந்தே னிதுவென் வரவெனத்
தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு
மாமறை §முதல்வ மதுரைச் செந்நெறி
கூறு நீயெனக் கோவலற் குரைக்கும்
கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல

52. (பா) கண்கள் என்னுள்ளத்தைக் கலக்குதலாலே; கண் : எழுவாய்.
57. தீத்திறம் - அக்கினி காரியம். 60. தொழிலாளர் - மந்திரிகள்.

அடி, 37 - 8. "மின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த, கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத், துளவஞ் சூடிய வறிதுயி லோனும்" (பரி. 13 : 27 - 9)

அடி, 43 - 51. "பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த, இருவேறு மண்டிலத் திலக்கம் போல, நேமியும் வளையு மேந்திய கையாற், கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூண், அருவி யுருவி னாரமொ டணிந்தநின், திருவரை யகலம்" (பரி. 13 : 7 - 12)

அடி, 60 - 61 : கலித். 10 : 4 - 7.

(பி - ம்.) † 'விரிந்ததலை' ‡ 'துருத்தியுட் டிருவமர்' ¶ 'வாடை பொலிந்து தோன்றிச்' § 'முதல்வன்'

வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலந் †திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
‡நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்
காலை யெய்தினிர் காரிகை ¶ தன்னுடன்
அறையும் பொறையு மாரிடை மயக்கமும்
நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்தவிந்
நெடும்பே ரத்த நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்காற்
பிறைமுடிக் கண்ணிப் பெரியோ னேந்திய
அறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்
வலம்படக் கிடந்த வழிநீர் துணியின்
§அலறுதலை மராமு முலறுதலை யோமையும்
பொரியரை யுழிஞ்சிலும் புன்முளி மூங்கிலும்
வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கையும்
நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்கும்
கானமு மெயினர் கடமுங் கடந்தால்
ஐவன வெண்ணெலு ‖மறைக்கட் கரும்பும்
கொய்பூந் தினையுங் கொழும்புன வரகும்

---

63. நலந்திருக - நலம்வேறுபட.

68. அறை - கற்பாறை. பொறை - பொத்தைமலை; சிறுமலை. ஆரிடை - அருவழி.

69. நிறைநீர் வேலி - நிறைந்த நீர்க்கு வேலியான ஏரிகரை.

71. கொடும்பை - [1]கொடும்பாளூர்; அவ்வூரிலே நெடுங்குளக் கரைக்கு உள்ளாகப்புக்கால்.

73. அறைவாய் - அற்றவாய்; சூலம்போலக் கவர்க்கும்.

75. அலறு தலை - விரிந்த தலை.

76. புல்முளி மூங்கில் - தண்டுலர்ந்த மூங்கில். 79. கடம் - வழி.

80. அறுத்தலையுடைய கண்ணையுடைய கரும்பு.

---

அடி, 64-6 : சிறுபாண். 177. ந.; மதுரைக். 314, ந.; தொல். அகத். 20, இளம். அகத். 2, ந., தொல். முதற்சூத்திர விருத்தி, மேற். சீவக. 2106. அடி, 77. மரல் : மலைபடு. 431; கலித். 6 : 1.

அடி, 78 : மணி. 23 : 112.

[1] மணப்பாறையிலிருந்து ஐந்து மைல் தூரத்திலுள்ளது இவ்வூர்.

(பி - ம்.) †'திருகித்' ‡'நல்லியல்பழிந்து', நல்லியல்பிறந்து நடுங்குதுறு பருவத்துப்' ¶'தன்னொடு மறையும்' §'அலர்தலை' 'அலந்தலை' ‖ 'மறைகட்'

காயமு மஞ்சளு மாய்கொடிக் கவலையும்
வாழையுங் †கமுகுந் தாழ்குலைத் தெங்கும்
மாவும் பலாவுஞ் ‡சூழுடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை ¶திகழ்ந்து தோன்றும்
அம்மலை வலங்கொண் டகன்பதிச் செல்லுமின்
அவ்வழிப் §படரீ ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றும்
தடந்தாழ் வயலொடு ||தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயின்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு
விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்
புண்ணிய சரவணம் $பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும்பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள வாங்குப்
புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
††பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
‡‡பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவிர்
இட்ட சித்தி யெய்துவி ராயின்

---

82. காயம் - வெள்ளுள்ளி.

85. சிறுமலையென்றது ஒருமலை.

86. வலங்கொண்டு - வலத்திட்டு. அகன்பதி - மதுரை.

87. இடத்து - இடப்பக்கத்து. கடம் - பாலைநிலத்து வழி.

91. திருமால்குன்றம் - அழகர்திருமலை.

92. ஆங்கு - அப்பிலத்துவாய்.

96. விட்டுநீங்கா - தம்மினீங்கா.

97. சிறப்பு - விசேடம்; இந்த விசேடம் எக்காலத்துமுள. மூன்றுள - மூன்று பொய்கையுள.

98. பொருந்துதல் - ஆடுதல்.

99. விழுநூல் - ஐந்திரவியாகரணம். எய்துவிர் - உணர்விர்.

---

(பி - ம்.) †'கமுகுஞ்சூழ்' ‡'சூழுடுத் தோங்கித்' ¶'திகழத்' §'படீஇ ராயினிடத்தது' ||'தண்பெருங்' $'பவகா ரணிய, மிட்ட சித்தி யெனப்பெயர் ††'பவகா ரணியம்படிந் தாடுவி" ‡‡'பவகா ரணத்துப்'

இட்ட சித்தி யெய்துவிர் †நீரே
ஆங்குப் பிலம்புக வேண்டுதி ராயின்
ஓங்குயர் மலையத் துயர்ந்தோற் றொழுது
சிந்தையி லவன்றவன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தால்
நிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலைப்
பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தற்
கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி
இம்மைக் கின்பமு மறுமைக் கின்பமும்
இம்மையு மறுமையு மிரண்டு ‡மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி ¶னீயிரிவ்
§வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பேன்
உரைத்தார்க் குரியே னுரைத்தீ ராயின்
திருத்தக் கீர்க்குத் திறந்தேன் கதவெனும்
கதவந் திறந்தவள் ||காட்டிய நன்னெறிப்
புதவம் பலவுள $போகிடை கழியன
ஒட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
இறுதியி லின்ப மெனக்கீங் ††குரைத்தாற்

---

107. வந்தனை - வந்தனையோடே.

108. சிலம்பாறென்றது ஓராறு. அகன்றலை - அகன்றவிடம்.

109 - 11. பொற்கொடிபோன்ற ஒளியினையும், புயல்போலும் ஐங் கூந்தலையுமுடைய தொடிவளைத்தோளாள் ஒருத்தி கன்னிகாரம்போலத் தோன்றி; 'கன்னிகாரம்போல' என்றார், மதாணியணிந்திருத்தலின்; கோங்கடியிலே தோன்றியென்றுமாம்.

112. இம்மைக்கின்பம் - பொருள். மறுமைக்கின்பம் - புண்ணியம்.

113 - 4. இரண்டுமின்றிச் செம்மையினிற்பது - வீடுபேறு.

116. உரியேன் - தொழில் செய்வேன். 117. திறந்தேனென்றது, விரைவு.

119. போகிடைகழியன - நீண்ட இடைகழியிலுள்ளன.

120. ஒட்டுப்புதவம் - இரட்டைக்கதவம்.

121. வட்டிகையிலெழுதிய கொடிபோல்வாள்.

122. இறுதியிலின்பம் - வீடு.

---

(பி - ம்.) † 'நீரென' ‡ 'மின்றிச், செம்மை' ¶ 'னீவிர்' § 'வரைத் தாழ்' || 'காட்டிய வந்நெறிப்' $ 'போகிடை கழியின' †† 'குரைத்தீர்'

பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனும்
உரையீ ராயினு முறுகண் செய்யேன்
நெடுவழிப் புறத்து நீக்குவ னும்மெனும்
உரைத்தா ருளரெனி னுரைத்த மூன்றின்
கரைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரும்
அருமறை மருங்கி னைந்தினு மெட்டினும்
வருமறை யெழுத்தின் மந்திர மிரண்டும்
ஒருமுறை யாக வுளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் †விரும்பினி ராடிற்
காண்டகு மரபின வல்ல மற்றவை
மற்றவை நினையாது ‡மலைமிசை நின்றோன்
பொற்று மரைத்தா ளுள்ளம் பொருந்துமின்
உள்ளம் பொருந்துவி ராயின் மற்றவன்
புள்ளணி ¶நீள்கொடி புணர்நிலை தோன்றும்
தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை
ஏன்றுதுயர் கெடுக்கு §மின்ப மெய்தி
மாண்புடை மரபின் மதுரைக் $கேகுமின்
காண்டகு பிலத்தின் காட்சி யீதாங்
கந்நெறிப் படரீ ராயி னிடையது
செந்நெறி யாகுந் தேம்பொழி லுடுத்த

---

123. பேணியபொருள் - மூன்றினுளொன்றாய் நினைத்த காரியம்.

125. நெடுவழிப்புறம் - நீங்கள் போகின்ற பெருவழியிடம்.

128. ஐந்தும் எட்டுமாவன :—பஞ்சாக்கரம், அட்டாக்கரம்.

131 - 2. வேண்டியதொருபொய்கைக்கண் ஆடினால் ஏனையவிரண்டும் தோன்றும் மரபினவல்ல.

134. உள்ளம்பொருந்துமின் - நினையுங்கோள்.

136. புள்ளணிநீள்கொடி நின்ற நிலைமைதோன்றும் ; கொடிபுணர்நிலை - கொடிமரம் நிற்கும் திருவாசலுமாம்.

137. (பா) துணைமலர்த்தாமரை - திருவடி.

138. கெடுக்குமென்றது முற்று ; கெடுத்தலால் இன்பமெய்தியென ஒருசொல் வருவிக்க.

142. செந்நெறி - செவ்விய வழி.

---

அடி, 136 : முருகு. 151.

(பி - ம்.) † 'விரும்பின ராயிற்' ‡ 'மலர்மிசை' ¶ 'நீள்கொடிப் புணர்நிலை' § 'மின்புமெய்துவிர்' $ 'கெய்துமின்'

ஊரிடை யிட்ட காடுபல கடந்தால்
ஆரிடை யுண்டோ ராரஞர்த் தெய்வம்
நடுக்கஞ் †சாலா நயத்திற் றோன்றி
இடுக்கண் செய்யா தியங்குநர்த் தாங்கும்
மடுத்துடன் கிடக்கு மதுரைப் பெருவழி
நீணிலங் கடந்த நெடுமுடி யண்ணல்
தாடொழு தகையேன் போகுவல் யானென
மாமறை யோன்வாய் வழித்திறங் கேட்ட
‡காவுந்தி யையையோர் கட்டுரை சொல்லும்
நலம்புரி கொள்கை நான்மறை யாள
பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை
கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட் ¶டியற்கையின் விளங்கக் காணாய்
இறந்த பிறப்பி னெய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணா யோநீ
வாய்மையின் வழாது மன்னுயி §ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள்
காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களு நீணெறிப் ‖படர்குதும்
என்றம் மறையோற் கிசைமொழி யுணர்த்திக்
குன்றாக் கொள்கைக் கோவலன் றன்னுடன்
அன்றைப் பகலோ ரரும்பதித் தங்கிப்
பின்றையு மவ்வழிப் பெயர்ந்துசெல் **வழிநாள்
கருந்தடங் கண்ணியும் கவுந்தி யடிகளும்
††வகுந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப

---

144. ஆரஞர்த்தெய்வம் - வருத்தும் தெய்வம்.

146. (பா) இயங்குநர்த்தடுக்கும் - வழிபோவாரைப் போக்கு விலக்கும்.

147. இவ்வகைச்சென்று கிடக்கும்.

154. கற்பம் கப்பமெனநின்றது ; பிராகிருதம்.

155. மெய்ப்பாட்டியற்கை - பரமாகமம் ; பரமாகமத்தில் இந்திரன் நூலினைக் காணலாம்.

---

அடி, 156 - 7 : "இறந்த பிறப்பிற்றாஞ் செய்த வினையைப், பிறந்த பிறப்பா லறிக - பிறந்திருந்து, செய்யும் வினையா லறிக வினிப்பிறந், தெய்தும் வினையின் பயன்" (அறநெறி. 59.)

(பி - ம்.) † 'சாரா நலத்திற்' ‡ 'காவுந்திகையோர்' ¶ 'டியற்கை விளங்க' § 'ரோம்பினர்க்' ‖ 'படர்குவம்' ** 'வுழிநாள்' †† 'வருந்து செல்'

இடைநெறிக் கிடந்த † வியவுகொண் மருங்கின்
புடைநெறிப் போயோர் பொய்கையிற் ‡ சென்று
நீர்நசைஇ வேட்கையி னெடுந்துறை நிற்பக்
கானுறை தெய்வங் காதலிற் சென்று
நயந்த காதலி னல்குவ னிவனென
¶ வயந்த மாலை வடிவிற் றோன்றி
கொடிநடுக் குற்றது போல வாங்கவன்
அடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீ ருகுத்து
வாச மாலையி னெழுதிய மாற்றம்
தீதிலேன் பிழைமொழி செப்பினை யாதலின்
கோவலன் செய்தான் கொடுமையென் றென்முன்
மாதவி மயங்கி வான்றுய ருற்று
மேலோ ராயினும் நூலோ ராயினும்
பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்
பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியும்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்மெனச்
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
வெண்முத் துதிர்த்து வெண்ணிலாத் திகழும்
தண்முத் தொருகாழ் § தன்கையாற் பரிந்து
|| துனியுற் றென்னையுந் துறந்தன ளாதலின்
மதுரை மூதூர் மாநகர்ப் $ போந்த
தெதிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச்

---

168. இடைநெறி - முன்சொற்ற வழிமூன்றினும் நடுவில் வழி; நெறியிடையிலே யென்றுமாம். இயவுகொள் - செலவுகொண்ட.

172. நயந்த காதலுடையளாதலால், யான் சொல்லுகின்றவதற்கு இவன் நல்குவானென.

176-7. யான் மாற்றம் தீதிலேன்; நீ பிழைக்கச் செப்பினும்.

180. மேலோர் - அருந்தவர். நூலோர் - கற்றோர்.

181. பால்வகை தெரிந்த பகுதியோர் - ஓதாது நன்மை தீமை யறிவோர்; ஞானிகளில் உயர்ந்த கூற்றோரென்றுமாம்.

182. பிறக்கிடுகை - பின்னிடுகை; என்றது முகம்பாராமை.

180-83. அவர்கள் இது பிணியெனக் கருதிக் கழிந்துபோம் கணிகையர்.

---

அடி, 183 : மணி. 24 : 79.

(பி - ம்.) † 'வியவுக்கொண்' ‡ 'பொருந்தி' ¶ 'வசந்த' § 'தன் கையிற்' || 'துனிவுற்' $ 'போந்தீங், கெதிர்'

சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்
பாத்தரும் பண்பநின் †பணிமொழி யாதென
மயக்குந் தெய்வமிவ் வன்காட் டுண்டென
வியத்தகு மறையோன் விளம்பின னாதலின்
வஞ்சம் பெயர்க்கு மந்திரத் தாலிவ்
வைஞ்சி லோதியை ‡யறிகுவென் யானெனக்
கோவல னவிற் கூறிய மந்திரம்
பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கஞ் செய்தேன்
புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும்
என்றிற முரையா தேகென் றேகத்
தாமரைப் பாசடைத் தண்ணீர் ¶கொணர்ந்தாங்
கயாவுறு மடந்தை யருந்துயர் தீர்த்து
மீதுசெல் வெங்கதிர் வெம்மையிற் றொடங்கத்
தீதியல் கானஞ் செலவரி தென்று
கோவலன் றன்னொடுங் கொடுங்குழை மாதொடும்
மாதவத் தாட்டியு மயங்கத ரழுவத்துக்
குரவமு மரவமுங் கோங்கமும் வேங்கையும்
விரவிய பூம்பொழில் விளங்கிய விருக்கை
ஆரிடை யத்தத் தியங்குந ரல்லது
மாரி வளம்பெறு §வில்லே ருழவர்
கூற்றுறழ் ||முன்பொடு கொடுவி லேந்தி
வேற்றுப்புலம் **போகி நல் வெற்றங் கொடுத்துக்
கழிபே ராண்மைக் கடன்பார்த் திருக்கும்
விழிநுதற் குமரி விண்ணோர் பாவை
††மையறு சிறப்பின் வான நாடி
ஐயைதன் கோட்ட ‡‡மடைந்தன ராங்கென்.

191. பாத்தரும் பண்ப - பகுத்தலரிய பண்பனே! என்றது, பிறர்க்கில்லாத பண்பையுடையாய் என்றபடி.

195. அறிகுவெனென்று கருதி, 205. ஒடு : எண்ணொடுவுமாம்.

209-10. ஆரிடையத்தத்து இயங்குநருடைய வளமல்லது மழைவளம்பெறு மறவர்.

208-16. பொழில் விளங்கிய இருக்கையிடத்து ஐயைகோட்டமென்க.

அடி. 209 - 11 : குறுந். 12 : 3.

(பி - ம்.) † 'பழிமொழி' ‡ 'யறிகுவெ னென்று' ¶ 'கொணர்ந்து' 'வயாவுறு மடந்தைக்கு வருந்துயர்' § 'வல்லேருழவர்' || 'மொய்ம்பொடு' ** 'போகில் வெற்றங்' †† 'மறுவறு'' ‡‡ 'முறைந்னதரங்கென்'

1 - 4. திங்கண்மூன்று......அறிவனை வணங்கி

(இ - ள்.) கோதைகள் தாழ்ந்த பிண்டியினது வளவிய நிழற் கண்ணே மூன்று திங்களையடுக்கினாற்போலும் திருமுக்குடையினது கீழ் இள நாயிற்றினது ஒளியினும் ஒளி சிறப்பவிருந்த அறிவனை வணங்கி யென்க.

திங்கள் முதலிய [1]மூன்றெனினுமாம். முக்குடையாவன : சந்திராதித்தம், நித்திய விநோதம், சகலபாசனமென்பன. இன்னுருபு தொக்கது ; பொருவாம் பொருண்மை தந்தது. திகழ்தல் - விளங்குதல். சிறந்து - சிறப்ப. 'கோதைதாழ்பிண்டி' என்றார் - [2]அவன்பிண்டி கடவுட்டன்மையான் எஞ்ஞான்றும் மாலையாகப் பூக்குமாதலின். ஆதியில்தோற்றத் தறிவனென்றது ஆதியின்மையைத் தோற்றமாக வுடையனென்றதாம் ; எனவே இனஞ்செப்பி அந்தமின்மையை முடிவாக வுடையனென்பதூஉமாம் ; ஆகவே ஆதியும் அந்தமும் இல்லாதவனென்றவாறும் ; எனவே தனக்குப் பிறிதொருவர் முதலாதலில்லாதவனென்பதாம். இன்னும் இதற்கு யாவர்க்கும் தானே முதலாயவனென்றுரைப்பினும் அமையும். ஆதியிற்றோற்றம் பாடமாயின், ஆதிக்காலத்தினும் முற்றோன்றியவனென்க. என்ற கருத்து காலத்தின் முற்றோன்றும் பொருள்கள் யாவுமின்மையின், அதனினும் முற்றோன்றியவனென்பதாம். அறிவன் - உறையூரிலருகன். வணங்கி - முதனாட் ((10 : 248) புரிந்து புக்கவர் வணங்கியென்க.

5 - 8. கந்தன் பள்ளி......மாண்புறமொழிந்து

(இ - ள்.) முற்கூறிய [3]நிக்கந்தனுடைய பள்ளியிடத்துள்ள [4]கடவுளர்க் கெல்லாம் ஆற்றிடைக்குறையாகிய அவ்விடத்து அகன்ற பொழிலின்கண் சாரணர் கூறிய மொழியைக் கவுந்தியடிகளும் இனிமையுற மொழிந்தென்க.

நிக்கந்தனைக் கந்தனென்றார். அந்தில், அசையுமாம். அரங்கம் - முற்கூறிய ஆற்றுவீயரங்கம் ; திருவரங்கமுமாம். அகன்பொழில் - அம் மரம் பயில் அடுக்கம். சாரணர் - [5]பெரும்பெயரையரிட்ட சிலாதலத்துத் தருமம் சாற்றும்சாரணர் ; அவர் கூறிய மொழி, "ஒளியுறி னல்லது, போதார் பிறவிப் பொதியறையோர்" (10 : 190 - 91) என்ற மொழி ; அதனைக் கவுந்தியடிகளும் மொழிந்தென்க.

8 - 9. ஆங்கு..............அடங்கி

(இ - ள்.) அன்று [6]சாவகர் உறைவிடத்து விட்டுத் தயங்கியென்க.

---

[1] மூன்றாவன :—சந்திரன், சூரியன், அக்கினி.

[2] இவ்வசோகுமாலையாகப் பூக்குமென்பதை, "முழாத்திரண்மொய்ம் மலர்த் தாமந் தாழ்ந்துமேல், வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினம், குழாத்தொடு மிறைகொளக் குனிந்து கூங்குயில், விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே" (சீவக. 3012) என்னும் செய்யுளாலுணர்க.

[3] நிக்கந்தன் - அருகன்.

[4] கடவுளர் - ஈண்டு முனிவர் ; "தொன்முது கடவுட் பின்னர் மேய" (மதுரைக். 41) ; "இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய, எக் கடவுள்" (கலித். 93 : 12 - 3.) [5] சிலப். 10 : 160.

[6] சாவகர் சைனர்களில் இல்லறத்தார் ; இவர்களை ஶ்ராவகரென்பர்.

என்றது காலைப்பொழுதில் வாய்மொழிகேட்டு மாடப்புணைபோகித் தென்கரையெய்திப் பூம்பொழிலிருந்துழிச் சாபவிடைசெய்து மாலைப் பொழுதின்கண் புறஞ்சிறைவாரணம் புரிந்து புக்கனரெனவே அற்றை ஞான்று தங்குதல் கூற வேண்டாது முடியும்; முடியவே வழிநாட்சாவகர் உறைகின்ற விடத்தே தங்கினாராய் ஒடுங்கியென்க. அவரெனக் கடவு ளரைச் சுட்டின், அவருறைவிடம் கந்தன் பள்ளியாமாகலானும், ஆண்டு அடங்காமை சொல்ல வேண்டாவாகலானும் அவரென்றது சாவகரை யென்க. கடவுளர்க்கெல்லாம் மாதவத்தாட்டி மாண்புற மொழிந்தெனவே கவுந்தியடிகள் கந்தன் பள்ளியுட் புக்கமையுணர்க. இங்ஙனங் கூறியது, "ஆறைங்காதம்" (10 : 42) என்றமையானும் "காவத மல்லது கடவா ரரகிப், பன்னாட்டங்கிச் சென்னு ளொருநாள்" (10 : 154-5) என்றமை யானும், ஈண்டும் "அன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கி" என்றமை யானும், சிலநாட் சென்றவழிச் செலவொழிந்தொழிந்து ஆண்டாண் டிருந்து ஆறிச் சென்றமை உணர்த்தற்கெனக் கொள்க.

## 10 - 14. தென்றிசை மருங்கிற்......புக்குழி

(இ - ள்.) தென்றிசைக்கண்ணே செல்லுதலை விருப்பமுறுதலானே கோழியூரை வைகறையாமத்தே கழிந்து செல்லாநின்றுழி வெய்யோன் வந்து முன்னர்க் குணதிசையை விளக்கிப் பின்னர்த் தான் தோன்றினு னுக, வளவிய நீர்நிறைந்த மருதநிலமும் வாவியுஞ்சிறந்ததோர் இள மரக்காவின் மண்டபத்தே சென்று புக்கவிடத்தென்க.

வாரணம் - கோழியூர். வணங்கி மொழிந்து அல்கினரடங்கி விருப் புற்று வாரணங்கழிந்து தோன்றினவளவிலே இருக்கைபுக்குழியென்க. விளங்கி - விளக்கி; விகாரம்.

## 15 - 6. வாழ்க வெங்கோ......உலகங் காக்க

(இ - ள்.) மன்னர் யாவரினும் மிக்க பெரிய தகையினையுடைய எங்கோ வாழ்வானாக; ஊழிதோறும் ஊழிதோறும் இவ்வுலகை அவனே காப்பானாகவென்க.

## 17 - 22. அடியிற் றன்னளவு......தென்னவன் வழி

(இ - ள்.) முன்னொரு காலத்துத் தனது பெருமையினதளவை அரசர்க்குக் காலான் மிதித்துணர்த்தி வேலானெறிந்து அந்தப் பழம் பகையினைக் கடல் பொருது பின்னொரு காலத்து அவனது தென்றிசைக் கண்ணதாகிய [1]பஃறுளியாற்றுடனே பலவாகிய பக்க மலைகளையுடைய குமரிக்கோட்டையும் கொண்டதனால் வடதிசைக் கண்ணதாகிய கங்கை யாற்றினையும் இமயமலையினையும் கைக்கொண்டு ஆண்டு மீண்டும் தென்றிசையை ஆண்ட தென்னவன் வாழ்வானாக வென்க.

அடியில் - அடியால்; தன்னளவென்றதனைக் கடன்மேலேற்றலு

---

[1] "எங்கோவாழிய......முந்நீர் விழவினெடியோ, னன்னீர்ப்பஃறுளி மணலினும் பலவே" (9) எனப் பஃறுளியாற்றைப் பாராட்டிக் கூறினர் புறப்பாட்டிலும்.

மொன்று. அரசர்க்கு - உலகிலரசரெல்லார்க்குமென்க. வான்பகை - முன்பு செய்த பகைமை. பஃறுளியென்னும் ஆற்றின் தன்மை **வேனிற் காதையில்** (1-2, உரை) கூறிப் போந்தாம். கோடு - மலை. கொடுங் கடல் - இவ்வளவெல்லாம் தந்த கடல். கடல் எறிந்துகொண்ட 'எல்லை யளவும் வடபால் தனதாக்கி மீண்டும் தென்றிசையை யாண்டவென ஒப் பாக்கலுமொன்று. அடியாலுணர்த்தி எறிந்த பகைபொருது கொள்ளத் தானுங்கொண்டு ஆண்ட தென்னவனென்க.

என்றது : அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் **சோழநாட்டெல்லை** யிலே **முத்தூர்க்கூற்றமும் சேரமானுட்டுக் குண்டூர்க்கூற்றமும்** என்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன் வாழ்வானுக வென்றவாறு.

## 23 - 5. திங்கட் செல்வன்......பூண்டோன் வாழி

(இ - ள்.) திங்களாகிய செல்வனுடைய மரபு மேம்படுதற்கு இந் திரன் பூட்டிய வலிவிளங்கிய ஆரத்தை ஒளிபொங்கிய தனது மார்பத்தே பூண்ட பாண்டியன் வாழ்வானுகவென்க.

விளங்கவென்பதனை விகாரவகையான் வியங்கோளாக்குவாருமுளர். விளங்கப் பூண்டோனென இயைக்க. திங்கட்செல்வனென்பதற்கு **வேனிற்காதையில்** (45-71, உரை) உரைத்ததுரைக்க.

## 26 - 31. முடிவளை யுடைத்தோன்...வந்திருந் தோனே

(இ - ள்.) இவன் நம்முடைய முதல்வனது சென்னிமுடியிலே வளையை யுடைத்தோனென்று இடியையுடைய பருவமழை தனது நாட்டிற் பெய்தற்றொழில் எய்தாது ஏகிற்றாகத் தப்பாத விளையுளாகிய மிக்க வளஞ் சுரக்கும்படி அதனை [1]விலங்கிட்டாண்ட மன்னவன் வாழ் வானுகவெனக் குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய தென்னவனை இங்ஙனம் ஏத்திவந்திருந்த முதுமறையோனையென்க.

## 32 - 3. யாது நும்மூர்......கோவலன்

(இ - ள்.) அம்மறையோனை நோக்கி, ஆண்டு, நும்மூர் யாது? ஈண்டு நும் வரவு என்னையெனக் கோவலன் வினவவென்க

## 33 - 4. குன்றுச் சிறப்பின்......உரைப்போன்

(இ - ள்.) மிக்க சிறப்பினையுடைய அம்மறையோன் தான் வரு கின்ற பொருளை உரைக்கின்றவனென்க.

வருபொருளென்ற பொதுமையான் வருதற்குக் காரணமும் ஊரின் பெயருமென்பதாயிற்று.

---

[1] வேலை எறிந்து கடலை வற்றச்செய்ததும், இந்திரன் பூட்டிய ஆரத் தைப் பூண்டதும், இந்திரன் முடிமேல் வளையைச் செலுத்தியதும், மேகத்தைச் சிறைப்படுத்தியதும் பாண்டியன் உக்கிரவன்மன் செய லென்று **திருவிளையாடற் புராண** முதலியன கூறும்.

## 35 - 40. நீலமேகம்.........கிடந்த வண்ணமும்

(இ - ள்.) நீலமேகம் ஓங்கிய பொன்மலைமீதே பக்கங்களில் விரிந்து மிகாமல் ஒக்கப் படிந்ததுண்டாகில் அதனையொப்பத் தனது படம் விரித்தெழுந்த ஆயிரந் தலையையும் கிட்டுதற்கரிய திறலையுமுடைய பாம்பணைப் பள்ளிமீதே தேவர்கள் பலரும் தொழுதேத்தத் திரைவிரியும் காவிரியாற்றிடைக்குறையிலே திருமகள் பொருந்திய திருமார்பையுடையோன் கிடந்த கோலமுமென்க.

மேகம் படிந்ததுபோலக் கிடந்தவென்க.

## 41 - 51. வீங்குநீரருவி.........நின்ற வண்ணமும்

(இ - ள்.) கொடிவழித் தீர்த்தம் முதலிய மிக்க அருவிநீரையுடைய வேங்கடமென்று பெயர் கூறப்படும் மலையினுச்சிமீதே ஞாயிறும் திங்களும் இருமருங்கும் ஓங்கி விளங்கிய இடைப்பட்டவிடத்தே நல்ல நீல நிறத்தையுடைய மேகம் தன்மின்னாகிய புதுப்புடைவையையுடுத்துத் தன் வில்லாகிய பணியைப் பூண்டு நின்றாற்போலப் பகையை வருத்தும் ஆழியையும் சங்கையும் அழகிய தாமரைக் கையகத்தே வலனுமிடனும் ஏந்தி அழகுகிளரும் ஆரத்தைத் திருமார்பிற்பூண்டு பொற்பூவாடையையுடுத்து வெளிப்பட்ட சிவந்த திருக்கண் மலரையுடைய நெடியோன் நின்ற கோலமுமென்க.

மேகம் இடைநிலைத்தானத்து உடுத்துப் பூண்டு நின்றதுபோல ஏந்திப் பூண்டு பொலிந்து உச்சிமீமிசைத் தோன்றிய நெடியோன் நின்ற வண்ணமு மென்க. இது மயக்கநிரனிறை. உச்சிமீமிசையென ஒருபொருட் பன்மொழி சிறப்பின்கண் வந்தன.

## 52 - 3. என்கண் காட்டென்று.........உள்ளேன்

(இ - ள்.) இங்ஙனமாகிய இரண்டு வண்ணத்தையும் காட்டுவாயாக என்று என்கண் என்னுள்ளத்தைக் கவலை செய்தலாலே ஈண்டு வந்தேன்; ஆண்டுக் குடக மலைப்பக்கத்து மாங்காடென்னும் ஊரின்கண் உள்ளவன் நானென்றானென்க.

என்கண் : எழுவாய். 'கண்ணுந் தோளும்' (தொல். கிளவி. 62) என்பதனாற் கண்ணென்றார். உள்ளேன் - உள்ளவன் நான்.

## 54 - 7. தென்னவ னாட்டு.........செப்பக் கேட்டு

(இ - ள்.) அத்தென்னவனுடைய நாட்டிலுள்ள சிறப்பும், அவன் கொடை அளி முதலிய செய்கைகளும் கேட்டலன்றிக் கண்கள் குளிரக் கண்டேனாகலான், அவன் புகழை நாவால் வாழ்த்தி வந்திருந்தேன்; என் வரவு இதுவென்று கொண்டு முத்தீயின் திறத்து மணம்புரிந்தோன் சொல்லக் கேட்டென்க.

## 58 - 9. மாமறை முதல்வ......கோவலற் குரைக்கும்

(இ - ள்.) கோவலன் பெரிய மறை முதல்வனே! அது நிற்க; மதுரைக்குச் செல்லும் செவ்விய நெறியை எங்கட்குக் கூறுவாயாக வென, அவற்கு அவன் இதனைக் கூறுமென்க.

அது மேற்கூறுவார்—

## 60 - 67. கோத்தொழி லாளரொடு...காரிகை தன்னுடன்

(இ - ள்.) வன்கண்மையன்றிக் குடியோம்பாத அமைச்சரோடே, நாடோறும் நாடி முறை செய்யாது அரசனும் கோல் கோடலானே, அரசியல் இழந்த அகன்ற நிலம்போல முதிர்ந்த வேனிலாகிய உரிய அமைச்சனோடே வெவ்விய விளக்கத்தோடே யமைந்த [1]வேந்தன்றானும் வெம்மை மிகுதலானே தமது இயற்கை கெட்டு முல்லை குறிஞ்சியென்னும் இரு திணையும் முறைமை திரிந்து தமது நல்லியல்பையிழந்து தம்மைச் சேர்ந்தோரை நடுங்குந் துயரை யுறுவித்துப் பாலையென்பதோர் வடிவைக் கொள்ளும் இந்தக் காலத்து இக்காரிகையோடு வந்தீர் நீரென்றானென்க.

பாலைக்கு நிலமின்மையும் முல்லையும் குறிஞ்சியும் பின்பு பாலையாதலும் முன்னர்ப் பதிகச் செய்யுள் (1-2) உரையிற் கூறப்பட்டன. அன்றியும், "வான மூர்ந்த வயங்கொளி மண்டிலம், நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட், டிலையி லமர்ந்த முகையி லிலவம்" (அகநா. 111-3) என முல்லை முறைமை திரிந்து பாலையாயினவாறும், "சீறருங் கணிச்சியோன்......வரைபிளந் தியங்குநர், ஆறுகெட விலங்கிய வழலவிராரிடை" (கலித். 2 : 6-8) எனக் குறிஞ்சி முறைமை திரிந்து பாலையாயினவாறும் காண்க.

கோடி இழந்த நிலம்போலக் கிழவனொடு வேந்தன்திருகக் குன்றித் திரிந்து இழந்து உறுத்துக் கொள்ளுங்காலையெனக் கூட்டுக. காரிகை தன்னுடன் காலை யெய்தினிரென மாறுக. காலை - காலம்.

## 68 - 73. அறையும்.........கவர்க்கும்

(இ - ள்.) பாறையும் துறுகலும் அருவழியின் நெறிமயக்கமும் பேய்த்தேருமென்னுமிவை அடைவுபடக்கிடந்த இந்தத் தொலையாத பெரிய சுரத்து நெறியைத் தொலைத்துப்போய்க் கொடும்பாளூர் நெடுங்குளமென்னும் இரண்டூர்க்கும் பொதுவாகிய ஏரியினது கரையைக் கழிந்து சென்றால் முடிக்குப் பிறையைக் கண்ணியாகச் சூடிய இறைவன் ஏந்திய கண்ணறையாகிய வாயையுடைய சூலவேலைப்போல மூன்றுவழி அறிதற்கரியவாம்படி கவர்க்குமென்றானென்க.

பொறையைப் பொத்தை என்பாருமுளர் ஆவது; மட்சிறுமலை. ஆரிடை-அரியவழி; ஆவது ஆறலைப்போரும் ஊறுசெய் விலங்குமுடைத்தாய் ஏற்றிழிவும் கவலைச் சின்னெறியுமாயிருப்பது. நிறைநீர்வேலியென்றார், பேய்த்தேரை; நீர்போலத் தோன்றுதலின்; உடைகுளங்களுமாம். இவை இணைப்பெயர்பெற்றவூர். இனிக் கொடும்பைக்கோட்டக நெடுங்குள மெனவுமாம். கோட்டகம் - கரை; பள்ளமுமாம். நீந்திப் புகவரிதென்பது தோன்றப் புக்காலென்றார். சூலத்து - சூலம்போல : சாரியை நிற்க உருபும் உவமவுருபும் தொக்கன.

நெறியருமை கூறினான்.

## 74. வலம்படக் கிடந்த வழிநீர் துணியின்

---

[1] வேந்தன் - சூரியன்.

(இ - ள்.) அங்ஙனம் கவலைப்படு நெறியினுள் வலப்பக்கத்ததாய்க் கிடந்த வழியில் நீர்போகத் துணிவீராயினென்றானென்க.

### 75 - 86. அலறுதலை மராமும்......பதிச் செல்லுமின்

(இ - ள்.) விரிந்த தலைகளையுடைய வெண்கடம்பும், உலறிய தலைகளை யுடைய ஓமையும், பொரிந்த தாளையுடைய வாகையும், தண்டுமுளிந்த புறக்காழாகிய மூங்கிலும், வரியையுடைய மரல் நீர்வற்றித் திரங்கிய கரிந்து கிடக்கின்ற இடங்களும், அவ்விடத்தே நீருண்டலை விரும்பி அவ் விருப்பத்தாலே உழைமான் நின்று உளைக்கும் காடும், எயினரூரை யடுத்த வழியுமாகிய அவை கடத்தற்கரிய ; அவற்றைக் கடந்து போனால், அவ்விடத்து மலைச்சாரலில் விளையும் நெற்பயிரும் முறிக்கும் பருவத் தைத் தன்னிடத்துடைய கரும்பும் கொய்யும் பருவத்தையுடைய தினையும் வளவிய புனத்தில் விளைந்த வரகும் வெள்ளுள்ளி'யும் மஞ்சளும் அழகிய கொடியையுடைய கவலையும் தலைதாழ்ந்த குலையையுடைய வரைவாழை யும் கமுகும் தெங்கும் மாவும் பலாவுமென்னும் இவை தனக்குச் சுற்றெங் கும் சூழப்பட்டு ஓங்கிய தென்னனுடைய சிறுமலையென்னும் பெயரை யுடைய மலை விளங்கித் தோன்றும்; அம்மலையை வலப்பக்கத்துக்கொண்டு இடப்பக்கத்து நெறியிற் சென்று மதுரையிற் புகுமினென்றானென்க.

உலறுதல் - தலைமுளிதல். உழிஞ்சில் - உன்னமுமாம். புல் - புறக் காழ். திரங்கியவென்பதற்கு விலங்கு சுவைத்தலால் திரங்கியவென்று மாம்; " மரையா மரல்கவர " (கலித். 6 : 1) என்றாராகலின். எயினர் - மற வர். அறைக்கண் - வரைந்த கண்ணுமாம். பூந்தினை - பொலிவினையுடைய தினை. காயம் - வெள்ளுள்ளி. சிறுமலை : பெயர். அகன்பதி - மதுரை.

### 87 - 92. அவ்வழி.........பிலமுண்டு

(இ - ள்.) அங்ஙனமாகிய வலப்பக்கத்து நெறியைப் போதீராயின் இடப்பக்கத்துச் சிறையையுடைய வண்டுகள் செவ்வழியாழ்ப் பண்ணி னைப் பாடும் தாழ்ந்த தடத்தோடும் தாழ்ந்த வயலோடும் குளிர்ந்த பூங் காவினோடும் அருஞ்சுரங்கள் பலவும் இடைக்கிடந்த காட்டுநெறியையும் கழிந்து திருமால் குன்றத்துச் செல்லக் கடவீராயின், அவ்விடத்தே மிக்க மயக்கத்தைக் கெடுக்கும் பிலத்து நெறியுண்டென்றானென்க.

திருமால் குன்றம் - அழகர் திருமலை.

### 92. ஆங்கு—(இ - ள்.) அப்பிலத்துக்குள்ளே.

### 93 - 7. விண்ணோ ரேத்தும்.........மூன்றுள

(இ - ள்.) தேவர்களால் ஏத்தப்படுதலின் யாவரும் வியக்கத்தகும் மரபினையுடைய புண்ணிய சரவணம் பவகாரணி இட்டசித்தி என்னும் பெயர் எங்கும் பரக்கப்பட்டு இடையறுத சிறப்பினையுடையவாய்த் தம்மிற் சேர்ந்திருக்கின்ற மூன்று பொய்கைகள் உளவென்றானென்க.

### 97. ஆங்கு—(இ - ள்.) அவற்றுள்,

### 98 - 9. புண்ணிய சரவணம்.........எய்துவிர்

(இ - ள்.) புண்ணியசரவணமென்னுநின்ற பொய்கையில் ஆடுவீராயின் இந்திரனாற்செய்யப்பட்ட **ஐந்திரவியாகரணம்** என்னும் இலக்கணத்தை உணர்வீரென்றானென்க.

இது நினைவின்றிப் பெறும்பேறு.

பொருந்துதல் - ஆடுதல். எய்துதல் - உணர்தல்.

## 100 - 101. பவகாரணி..............எய்துவிர்

(இ - ள்.) அதுவன்றிப் பவகாரணியென்னும் பொய்கைக்கண் ஆடுவீராயின் இப்பிறப்பிற்குக் காரணமாகிய பழம்பிறப்பையுணர்வீரென்றானென்க.

முன்னும்பின்னுமாகிய இருபிறப்பையும் உய்த்துணர்தற்குக் காரணமாகிய இப்பிறப்பிலே எப்பிறப்பையும் எய்தவுணர்வீரென்றாரெனினும் அமையும். இனிப்பவமென்பதனை விகாரமாக்கிப் பாவத்தான் வரும்பிறப்புக்களை யெனலுமாம்.

## 102 - 3. இட்டசித்தி............நீரே

(இ - ள்.) அதுவன்றி இட்டசித்தியென்னும் பொய்கையில் ஆடுவீராயின் நீர் நினைத்தவெல்லாம் எய்துதலையுடையீரென்றானென்க.

இனி எண்வகைச்சித்திகளையும் தவஞ்செய்து வருந்திப்பெறாமல் நினைத்துழிப் பெறுவீரென்றானெனினும் அமையும்.

**104. ஆங்குப் பிலம்புக வேண்டுதி ராயின்** —(இ - ள்.) அங்ஙனமாகிய அப்பிலத்துக்கண் புகுதலை விரும்புவீராயினென்றானென்க.

## 105 - 7. ஓங்குயர் மலையத்து...மலைவலஞ் செய்தால்

(இ - ள்.) மிகவுமுயர்ந்த அத்திருமலைக்கண் உள்ள பெரியோன் சேவடிகளைக் கையாற்றொழுது மனத்தால் நினைந்து வாக்கால் துதித்தலுடனே அம்மலையை மும்முறை வலஞ்செய்தாலென்க.

அத்து : சாரியை. வைத்தல்-நினைத்தல் = தியானம். வந்தனை-ஈண்டுத் துதித்தல். தொழுதுவைத்து வந்தனையோடு வலஞ்செய்தாலென்க.

## 108 - 11. நிலம்பக வீழ்ந்த......ஒருத்தி தோன்றி

(இ - ள்.) பாதாளகங்கைக்கு மேலுள்ள நிலம் கூறுபடும்படி அறுத்துத்தாழ்ந்த [1]சிலம்பாறென்னும் அகற்சியையுடைய ஆற்றினது கரைக்கண்ணதாகிய விளக்கத்தையுடைய முகைகள் அவிழ்ந்த மலரையுடையதோர் கோங்கின் நிழற்கண்ணே ஒரு பொற்கொடிபோலவும் மின்போலவும் புயல்போலும் ஐவகைக்கூந்தலையும் வளைந்த தொடிபுனைந்த தோளினையுமுடையா ளொருத்தி தோன்றியென்க.

சிலம்பாறு - அவ்வியாற்றின்பெயர். தலை - இடம். இன் : உவமவுருபு. கன்னிகாரம் - கோங்கு. தொடி - வளைவு. ஒருத்தி - ஓர் இயக்கி.

## 112 - 7. இம்மைக் கின்பமும்.........கதவெனும்

(இ - ள்.) அங்ஙனம் தோன்றினவள் இப்பிறப்பிற்கு இன்பமும் மறுபிறப்பிற்கு இன்பமும் இவையிரண்டுமொழிந்து எக்காலத்தும் ஒன்றாந்

[1] சிலம்பாற்றினை நூபுரகங்கையென்பர்.

தன்மையாய்க் கோட்டமின்றி அழிவற நிற்குமின்பமுமாகிய பொருள்கள் யாவை? அவற்றை நீயிர் உரைமின்; யான் [1] இத்தாள்வரைக் கண்ணே வாழ்வேன்; வரோத்தமையென்று கூறப்படுவேன்; யான் வினைய இவற்றை உரைத்தார் உளராயின், அவர்க்கு எத்தொழிற்குமுரியேன்; ஆதலின், திருத்தக்கீர்! உரைத்தீராயின், உமக்கு இப்பொழுதே இப்பில வாயிற்கதவம் திறந்து தருவேனென்று சொல்லுமென்றனென்க.

இம்மைக்கின்பம் - புகழ்; மறுமைக்கின்பம் - புண்ணியம்; செம்மையினிற்பது - மோக்கம்; இனி, ஒருவர்க்கு இம்மைமறுமைகட்கு இன்பத்தைத் தந்து பூமியுள்ளளவும் நிற்பது புகழெனலுமாம்; "ஒன்றா வுலகத்......தொன்றில்" (குறள். 233) எனவும், "இவணிசை யுடையோர்க் கல்ல தவணது, துயர்நிலை யுலகத் துறையு ளின்மை, விளங்கக் கேட்ட மாறுகொல்" (புறநா. 50:14-6) எனவுங் கூறினாராகலின். கதவந் திறத்தற்குரியேனெனவுமாம். திறந்தேன்: காலமயக்கம்; விரைபொருட்கண் வந்து.

## 118-23. கதவந் திறந்தவள்......பொருளெனும்

(இ-ள்.) அவர் உரைப்பின், அவள் கதவைத்திறந்து இதுவென்று காட்டிய நல்லவழியில் நீண்ட இடைகழிவாயில்கள் பலவுள; அவை கழிந்தால், இரட்டைக் கதவையுடைய வாயிலொன்று உண்டு; அதற்கு மேலாகச் சென்றால் வட்டிகையிலேயெழுதின பாவைபோல்வாள் ஒருத்தி வெளிப்பட்டு ஈறில்லாத இன்பம் யாது? அதனை உரைத்தீராயின் நீயிர் இம்முப்பொருளினும் விரும்பிய பொருளைப் பெறுவீரென்னுமென்றனென்க.

புதவம் - வாயில். போகு - நெடுமை. ஒட்டுப்புதவம் - இரட்டைக் கதவம். உம்பர் - மேல். பூங்கொடி, உவமப்பெயர்; அன்றித் துவார வட்டிகையிற் பூங்கொடி அங்ஙனம் கேட்குமெனவுமாம். இறுதியிலின்பம் - வீடு. பெறுதிர் - முன்னிலைப் பன்மை. போலி - ஒப்பில்போலி.

## 124-5. உரையீ ராயினும்... நீக்குவ னும்மெனும்

(இ-ள்.) வினையவள், யான்வினையதனை நும் பேதைமையான் உரையீராயினும் நும்மை வருத்தஞ்செய்யேன்; நீர் போகக்கடவ நெடுநெறிக்கண்ணே நும்மைப்போக்குவலென்னு மென்றனென்க.

## 126-7. உரைத்தா ருளர்.........பெயரும்

(இ-ள்.) அவள் அங்ஙனங்கேட்டபொருளை உரைத்தாருளராயின், முற்கூறப்பட்ட பொய்கை மூன்றின் கரைக்கட் செலுத்தி அவை இவையென்று காட்டி மீளுமென்றனென்க.

ஆங்கு: அசை.

## 128-32. அருமறை மருங்கின்......மற்றவை

(இ-ள்.) ஓதவும் உணரவுமரிய மறையிடத்தனவாகிய ஐந்தானும் எட்டானும் வருமுறைமைப்பட்ட எழுத்தினையுடைய மந்திரமிரண்டை

---

[1] அடிமலையைப் பாதசைலமென்று வடநூலார் கூறுதலின், தாள்வரையென்றார்.

யும் ஒருதன்மையாக மனத்தால் நினைந்து வாக்கால் துதித்து, அவற்றுள் வேண்டியதியாதொன்று அதனில் விரும்பினீராய் ஆடின், அவற்றின் பயனுயவை தவங்களைச் செய்தோர்க்கும் காணத்தகும் மரபினையுடைய வல்ல வென்றுனென்க.

இனி, அங்ஙனமாகிய பொய்கைகளின் பயனை விரும்பினீராய் ஒன்றினுடின் அதன் பயனை நுகர்ந்தநெஞ்சம் பிறிதொன்றினையும் காதலியாதென்றுமாம். இன்னும் மற்றவை காண்டகுமரபினவல்லவென்பதற்கு இவையொழிந்த தீர்த்தங்கள் இவைபோலக் கைமேற் காணத்தகும் மரபினையுடைய வல்லவனெனினும் அமையும்.

## 133 - 8. மற்றவை நினையாது......துயர் கெடுக்கும்

(இ - ள்.) அங்ஙனமாகிய பொய்கைகளின் பயனை விரும்பீராயின், அவற்றை நினையாதே அம்மலைமீது நின்றோனுடைய பொலிவுபொருந்திய தாமரை மலர்போலும் தாள்களை நினைமின்கள்; அங்ஙனம் நினைப்பீராயின் அப்பொழுதே அவனது கருடப்புள்ளெழுதிய கொடித்தண்டு பொருந்திநிற்கும் நிலையிடத்தைக் காண்பீர் ; கண்ட வளவிலே அவன் திருவடிநிலை நும்மை எடுத்துக்கொண்டு பிறவித்துன்பத்தைக் கெடுக்குமென்றுனென்க.

நீயிர் ஆண்டுச்சென்று அதுகாண்பீரென்பான் தோன்றுமென்றுன். கெடுக்கும் : முற்று.

## 138 - 9. இன்பமெய்தி......ஏகுமின்

(இ - ள்.) அங்ஙனம் அது காண்டலிற் பின்னர்ப் பரமபதத்திற்குச் சேறலு மெய்யென்று இன்பமெய்தி மாட்சிமைபொருந்திய மரபினையுடைய மதுரைக்குச் சென்மின்கள் என்றுனென்க.

## 140. காண்டகு பிலத்தின் காட்சி யீது

(இ - ள்.) கண்கூடாகக் காணத்தகும் பிலத்தின் தன்மை இத்தன்மையாயிருக்குமென்றுனென்க.

## 140 - 49. ஆங்கு......யானென

(இ - ள்.) அத்தன்மையவாகிய இரண்டு பக்கவழிகளிற் போதீராயின் இடைபட்ட நெறி செவ்வியநெறி ; அதனிடத்து இனிய பொழில் சூழ்ந்த ஊரும் ஊர்களை இடையிட்ட பலகாடும் கடந்தாற் கடத்தற்கரியதோர் மிக்க வழிக்கண் மிக்க துயரத்தைத் தருவதோர் தெய்வமுண்டு ; அத்தெய்வந்தோன்றி வழிப்போவாரை இடுக்கண்செய்யாது ; செய்வதியாதெனின், நடுக்கஞ்சாலா நயத்தாலே போவார்போக்கைத் தடுக்கும் ; அங்ஙனமாகிய அதனைத்தப்பின், அப்பெருவழி போவார்யாவர்க்கும் முகஞ்செய்துகிடக்கும் ; ஆதலால் நீயிருஞ்சென்மின் ; யானும் நிலங் கடந்த நெடுமுடியண்ணல் தாள்களைத் தொழுத கையையுடையேனுகலிற் போகுவலென்னவென்க.

தாங்கும் - தடுக்கும். மடுத்துடன்கிடக்கும் - இம்மூன்று வழியும் ஒருபடிப்பட முகஞ்செய்துகிடக்குமெனினும் அமையும்.

## 150 - 51. மாமறையோன்......கட்டுரை சொல்லும்

(இ - ள்.) அங்ஙனம் போகுவலென்ற முதுமறையோன் வாக்கால் வழியின் திறங்களைக் கேட்ட கவுந்தியடிகள் ஒருபொருள்பொதிந்த வுரையை உரைக்கும் ; அஃது யாதெனின் :—

152 - 64. நலம்புரி கொள்கை......அரும்பதித்தங்கி

(இ - ள்.) நல்லொழுக்கத்தைப் புரிந்த கோட்பாட்டையுடைய மறை வல்லவனே ! தேவர்களினும் வைத்து ஆயுக்கற்பத்தினை மிகவுடைய இந்திரன் தோற்றுவித்த வியாகரணத்தினை எம்முடைய அருக குமரன் அருளிச்செய்த பரமாகமங்களிற் காண்கின்றிலையோ ? அஃதுளதாக ; நின் புண்ணிய சரவணம் பொருந்துதல் வேண்டா ; அஃதன்றி முற் பிறப்பிற் செய்தவற்றை இப்பிறப்பிற் காண்கின்றிலையோ ? ஆகலான் நின் பவகாரணி படியவேண்டா; அஃதன்றி வாய்மையும் கொல்லாமையு மென்னும் இரண்டினையும் வழுவாதோம்புவார்க்குக் கைகூடாதிருக்கும் பொருள் யாவதுமில்லை. ஆகலின் நின் இட்டசித்தி யெய்துதல் வேண்டா ; இவை இங்ஙனம் பெறுதலின், பிலம் புகவேண்டும் முறைமை எங்கட்கு இல்லைகாண் ; நீ காமுற்றுவந்த தெய்வத்தைச் சென்று கண்டு அடிபணிதற்குப் போவாயாக ; யாங்களும் எங்கட்கு ஏற்ற நெறியே செல்வோமென்று அந்த மறையோனுக்குப் பொருந்துவனவாகிய மொழி களை யுணர்த்திக் குன்றாத ஒழுக்கத்தினையுடைய கோவலனுடனே அற்றைநாள் தங்குதற்கரியதொரு பதியிற்றங்கி யென்க.

நலம்புரி கொள்கை நான்மறையாள : இகழ்ச்சி. கற்பமென்பதனைப் பிராகிருதத்தாற் கப்பமென்ருர் ; தேவர்களிடைச் சென்று கற்பிக்கும் இந்திரனென்றுமாம். மெய்ப்பாட்டியற்கை - பரமாகமம் ; அதில் ஐந்திர வியாகரணம் காணலாம். நூலினை யென்னும் உருபு தொக்கது. இந்தப் பிறப்பில் நுகர்வன முற்பிறப்பிற் புரிந்த வினைப்பயனென்பது கருத்து.

158 - 9. வாய்மை...பொருள் :—“யாமெய்யா........பிற ”

(குறள், 300) எனவும், “கொல்லான்......தொழும்” (குறள், 260) எனவும் உட்கொண்டவாறெனக் கொள்க. இனிக் காமுறு தெய்வம் - காமமுறும் தெய்வம் : எனவே காமக்குரோதாதிகளெல்லாமுடைய தெய்வம் என்பதூஉம் ஆயிற்று ; கண்டு - கண்டுவைத்துமென்க.

165 - 70. பின்றையும்......துறைநிற்ப

(இ - ள்.) முன்னாட் போலப் பின்பும் தங்கி அப்பதியினின்றும் பெயர்ந்து செல்கின்றபின்னர் கரிய பெரிய கண்ணையுடையாளும் கவுந்தியடிகளும் வழிநடை வருத்தத்தினாலே வழிப்பக்கத்தே இராநிற்க, முற்கூறிய இடைநெறிக்கிடந்த செலவைக்கொண்ட பக்கநெறியைக் கடந்துபோய் ஒரு பொய்கைக் கரையிற் சென்று நீரையுண்ண விரும்பிய வேட்கையோடே கோவலன் ஒரு பெரிய துறையிடத்தே நின்றானாக வென்க.

பின்றை - பின்னை. வழிநாள் - மற்றைநாள். வகுந்து - வழி. இடை நெறி - நெறியிடையென்று மாறினும் அமையும். இயவு - செலவு. நீர் நசைஇ வேட்கை - நீர்மேல் மிக்க விருப்பம். இது கூறவே பாலைத் திணையின் தன்மைச் சிறப்புமாயிற்று.

## 171-5. கானுறை தெய்வம்......நீருகுத்து

(இ-ள்.) அம்மறையோன் கூறிய ஆரணூர்த் தெய்வமாகிய வன தெய்வம் தனது காதன்மிகுதியாற் சென்று கூடக்கருதி மாதவிமேல் நயந்த காதலால் நம்மேல் இவன் அன்புறுவனென்றெண்ணி அவள் தோழியாகிய வசந்தமாலையது வடிவைக் கொண்டுவந்து வெளிப்பட்டு ஒரு கொடி காற்றால் நடுக்கமுற்றதென்னும்படி அவனுடைய தாளிணைக் கண்ணே வீழ்ந்து பொய்க்கண்ணீரை யுகுத்தென்க.

அருங்கண்ணீர்: அன்பின்மையின் உகுத்தமை தோன்றநின்றது. சென்று தோன்றி வீழ்ந்து உகுத்தென்க.

## 176-9. வாச மாலை......வான்றுய ருற்று

(இ-ள்.) இனி மாதவி கூற்றாகக்கொண்டு கூறுகின்றவள், வாசத்தையுடைய மாலையிலெழுதிய ஓலைப்பாசுரத்தில் தவறுடையேனல்லேன்; நீ கூறிய மாற்றங்களிற் சில தவறுண்டு போலும்; அதனானன்றே கோவலன் எனக்குக் கொடுமை செய்தானென்று என் முன்னே மாதவி மயங்கி வீழ்ந்து மிக்க துயரமுற்றென்க.

## 180-91. மேலோ ராயினும்......பணிமொழி யாதென

(இ-ள்.) முனிவரும் கற்றோரும் கல்லாது நன்மை தின்மை யறிவோரும் இது நெஞ்சை யொறுக்கும் பிணியென்று உட்கொண்டு முகம் பாராது விட்டு நீங்கப்பட்ட இப் பொது மகளிருடைய செய்தொழில் கடையான தொழிலென்று சொல்லித் தனது சிவந்த அரிபரந்த வளவிய கடையையுடைய கண்களால் வெண்முத்தத்தைச் சொரிந்து விரும்பி முலைக்குப் பூட்டிய வெள்ளிய நிலா விளங்கும் குளிர்ந்த தனி முத்துவடத்தையும் வெறுத்துப் பூட்டிய தன் கையாற் பரிந்து சிந்தித் துறவா வென்னையும் துறந்தனள்; ஆதலான் நீங்கள் மதுரையென்னு மூதூராகிய நகரை நோக்கிப் போந்ததனை வழியிலெதிர்ப்பட்டோர் எனக்குரைத்தலானே [1]வாணிகச் சாத்தோடு போந்து தனிமையால் யான் துயருழந்தேன்; பகுத்தலரிய பண்பை யுடையோனே! அதற்கு நீ யருளிச் செய்யு மாற்றம் யாதென்று கேட்ப என்க.

பிறக்கிடுதல் - பின்னிடுதல்; ஆவது முகம்பாராமை. வாழ்க்கை - பொய்த்தொழில். ஏகாரம்: தேற்றம். போன்ம் - போலும்; "செய்யுளிறுதிப் போலி மொழிவயின், னகார மகார மீரொற் றாகும்" (தொல். மொழி மரபு. 18) என்பதனாற்கொள்க. மேலோர் - முனிவர். நூலோர் - கற்றோர். பால்வகை தெரிந்த பகுதியோர் - மதிநுட்பம் உடையோர்.

## 192-200. மயக்குந் தெய்வம்......ஏகென் றேக

(இ-ள்.) இங்ஙனம் இயக்கி நடிக்கக்கண்ட கோவலன் மதியை மயக்குவிக்கும் தெய்வம் இவ்வலிய காட்டிலுண்டென்று அம்மறையோன்

---

[1] வாணிகச் சாத்து - வாணிகஞ் செய்வோர் திரள்; "சாத்தொடு வழங்கு முல்குடைப் பெருவழி" (பெரும்பாண். 80); 'தாளி னூக்குபு சாத்தி னெழுந்தவே" (சீவக. 1775)

கூறினுதலான் மந்திரத்தால் இந்த ஐவகைப்பட்ட சிலவாகிய ஓதியை யுடையாளைத் தெய்வமகள் மானிடமகளென்ப தறிவேனெனக்கருதி அவன் நாவிற்கூறிய மந்திரம் அந்தரி மந்திரமாதலானே, அஞ்சி, யான் இவ்வனத்தில் திரிகின்ற இயக்கி; நின்றனை விரும்புதலான் மயக்கஞ் செய்யப் புக்கேன்; யான் செய்த இப்பிழையை நின் மனைவிக்கும் கவுந்தியடிகட்கும் மொழியாது போவாயாகவென்று சொல்லித் தானும் தன்னிடமே போகவென்க.

தவத்தினும் கற்புச் சிறந்ததாகலின், முற்கூறினர். இவர் சாயலும் அறனும் உடையாரேனும் தவறுகண்டுழிக் கணத்தின் வெகுண்டு சவிப்ப ரென்றஞ்சி அவர்க்கு உரையாதொழியென்று இரந்தாளென்க.

## 201 - 2. தாமரைப் பாசடைப்......துயர் தீர்த்து

(இ - ள்.) அங்ஙனம் அவள் போனபின்பு தாமரைப்பொதியுள் தான் அந்தவிடத்திற் குளிர்ந்த நீரைக் கொண்டுசென்று நீர்வேட்கை யான் வருத்தமுற்ற மடந்தையது வருத்தத்தைத் தீர்த்தென்க.

## 203 - 6. மீதுசெல் வெங்கதிர்......அழுவத்து

(இ - ள்.) எழுகின்ற கதிர் வெம்மை செய்தலைத் தொடங்குதலாலே பாலைத்தன்மை நிகழ்கின்ற இக்கானம் இனி வழிச்சேறற்கு அரிதென்று கோவலனுடனும் வளைந்த மகரக்குழையையுடைய மாதினுடனும்மாதவத் தாட்டியும் வழிமயக்கத்தையுடைய பாலைநிலப் பரப்பின்கண்ணெனன்க.

தீதியல்கானம் - தீங்காலியன்ற கானமுமாம்.

## 207 - 16. குரவமும்......ஆங்கென்

(இ - ள்.) குராவும் வெண்கடம்பும் கோங்கும் வேங்கையும் தம்மில் தலைமணந்த பொழில்சூழ்ந்த இருப்பிடத்து அரிய வழிகளின் இயங்கு வார் கைப்பொருளாகிய வளத்தை விரும்பினல்லது மழைவளத்தை விரும்பாத விற்றொழிலையே உழவுத் தொழிலாகவுடைய மறவர் கூற்றத்தையொத்த வலியோடே வில்லையேந்திப் பகைவர் முனையிடத்தே புக, அவர்க்கு வென்றியைக் கொடுத்து அதற்கு விலையாகிய மிக்க ஆண் மைத் தன்மையையுடைய அவிப்பலியைத் தான் பெறுவதற்கு வழி பார்த்திருக்கும் நெற்றிக்கண்ணையுடைய குமரி, விண்ணோர் பரவும் பாவை, குற்றமற்ற சிறப்பினையுடைய சுவர்க்க நாட்டை யுடையாளாகிய ஐயை கோட்டத்தைச் சென்றடைந்தார் அப்பொழுதேயென்க.

போகி - போக. இனிப் போகவெனத் திரியாது ஏந்திப் போகி வெற்றங் கொடுத்துப் பார்த்திருக்குமென்பதும் பொருள். அதற்கு உழவர்க்கென நான்கனுருபு விரிக்க. முன்பொடு வெற்றங் கொடுத் தென்க. மயங்கத ரழுவத்து விளங்கிய இருக்கைக்கட் கோட்டமென்க. அஃது ஏந்திப் போகிக் கொடுத்து இருக்கும் குமரி பாவை நாடி ஆகிய ஐயை கோட்டமென்க. கழிபேராண்மைக்கடன் - தன்னைத்தான் இடும் பலிக்கடன். விழிநுதல் - நுதல்விழி யென்க.

இஃது எல்லாவடியும் நேரடியா வருதலின், **நிலைமண்டிலவாசிரியப்பா.**

**(கக) காடுகாண்காதை முற்றிற்று.**

## பன்னிரண்டாவது

# வேட்டுவவரி



### உரைப்பாட்டு மடை

(1) கடுங்கதிர் திருகலி னடுங்கஞ ரெய்தி
ஆறுசெல் †வருத்தத்துச் சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்தாங்
கையை கோட்டத் தெய்யா வொருசிறை
வருந்துநோய் தணிய விருந்தன ‡ருப்பால்
வழங்குவிற் றடக்கை மறக்குடித் தாயத்துப்
¶பழங்கட னுற்ற முழங்குவாய்ச் சாலினி
§தெய்வ முற்று மெய்ம்மயிர் நிறுத்துக்
கையெடுத் தோச்சிக் கானவர் வியப்ப
இடுமுள் வேலி யெயினர்கூட் டுண்ணும்
நடுவூர் மன்றத் தடிபெயர்த் தாடிக்
கல்லென் பேரூர்க் கணநிரை சிறந்தன
வல்வி லெயினர் மன்றுபாழ் பட்டன
மறக்குடித் தாயத்து வழிவளஞ் சுரவா

---

1. திருகலின் - முறுகலின்.
4. எய்யாவொருசிறை - பலரும் அறியாத ஒருபக்கம்.
5. உப்பால் - மேல்.
6. வழங்குவிற்றடக்கை - வில்வழங்குதடக்கை ; வழங்குவில் - அம்பை வழங்கும் வில்லென்றுமாம், தாயம் - உரிமை.
7. பழங்கடன் - முன்புகொடுத்துப்போதுங்கடன்; அஃது கொடுத்துப் போந்தாள். சாலினி - தேவராட்டி.
11. நடுவூர் மன்றம் - ஊர்நடுமன்றம்.
12. கல்லென்பேரூர் - கரந்தையரூர்கள்.
13. நிரைகவர்ந்து வாராதபடியால் எயினர்மன்றுகள் பாழ்பட்டன.
14. மறக்குடித் தாயமாகிய வழிவளஞ்சுரவாது; வழிவளம் - போவாரை அடித்துப்பறித்தல்.

---

அடி, 3 : சிலப். 10 : 39. குறும்பல : குறுந். 151 : 3. அடி, 10. இடுமுள் வேலி : பெரும்பாண். 154. அடி, 14-5 : கலித். 39 : 12 - 4.

(பி - ம்.) † 'வருத்தஞ் சீறடி' ‡ 'ரிப்பால்' ¶ 'பழங்க ணுற்ற', 'பழங்கட னிறுத்த, § 'தெய்வமுற் றெழுந்து மெய்ம்மையி னிறுத்துக்'

தறக்குடி போலவிந் தடங்கின ரெயினரும்
கலையமர் செல்வி கடனுணி னல்லது
†சிலையமர் வென்றி கொடுப்போ ளல்லள்
மட்டுண் வாழ்க்கை ‡வேண்டுதி ராயிற்
கட்டுண் மாக்கள் கடந்தரு மெனவாங்
கிட்டுத் தலையெண்ணு ¶மெயின ரல்லது
சுட்டுத் தலைபோகாத் தொல்குடிக் குமரியைச்
சிறுவெள் ளரவின் குருளை நாண் சுற்றிக்
§குறுநெறிக் கூந்த னெடுமுடி கட்டி
இளைசூழ் படப்பை யிழுக்கிய வேனத்து

---

15. அறக்குடி அறஞ்செய்யும் குடிகள். அவிந்தடங்குதல் - நிரை கோடலும் ஆறலைத்தலுமொழிதல்; இது 'மறக்குடி அறஞ்செய்யக் கெடும்' என்னும் வழக்கு.

18. மட்டுண்வாழ்க்கை - கள்ளுண்டு களிக்கும் வாழ்க்கை.

19. கட்டுண்மாக்கள் - களவேகட்டு உணவாகவுண்ணுமாக்கள்; கடந்தருமென்றது சாலினிகூற்று; தாருமென்றது விகாரத்தால் தரு மென்பதாயிற்று. ஆங்கு - அவ்விடத்தில்.

இனி, தம் குடியில் ஒரு பெண்ணை ஒப்பிக்கிறபடி கூறுகின்றார் :—

20. தலையறுத்திட்டு எண்ணப்படும் எயினரல்லது.

21. சுட்டுத்தலைபோகா - நோயாற்செத்துச் சுட்டுப்போகாத; என்றது மறங்கூறியதாம்.

20-21. அன்றியும், மாற்றார்தலையைத் தாங்கள் வெட்டியிட்டு எண்ணுமதல்லது பிறராற் கருதலானவிடத்தைப்போகாதவென்றுமாம். அன்றியும், மறத்திற்கு முற்படவிட்டெண்ணும் எயினர், தாங்கொள்ளச்சுட்டி னல்லது பிறர்கொள்ளச் சுட்டுமுடிவுபோகாத தொல்குடியிற் குமரியென்றுமாம்.

22. அரவின்குருளைநாணென்றது - பொன்னாற்பண்ணின பாம்பு [" அராப்போத்து " என்பதுபோல உருவமாறிநின்றது.]

22-3. சுற்றிக்கட்டி.

24. இளைசூழ்படப்பை - காவல்சூழ்ந்த கொல்லைத்தோட்டம். இழுக்கிய - பட்ட.

---

அடி, 16. கலையமர்செல்வி : தக்க. 75. அடி, 16-19 : சிலப். 11 : 211 - 6. அடி, 22 : குறுந். 119 : 1.

(பி - ம்.) † 'சிலைதரு' ‡ 'வேண்டுவி ராயிற்' ¶ 'மெயினர்க் கல்லது' § 'குறிமுறி'

வளைவெண் கோடு பறித்து மற்றது
முளைவெண் டிங்க ளென்னச் †சாத்தி
மறங்கொள் ‡வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண்பற் றாலிநிரை பூட்டி
வரியும் புள்ளியு ¶மயங்கு வான்புறத்
துரிவை மேகலை §யுடஇப் பரிவொடு
கருவில் வாங்கிக் ||கையகத்துக் கொடுத்துத்
திரிதரு கோட்டுக் கலைமே லேற்றிப்
பாவையுங் கிளியுந் தூவி யஞ்சிறைக்
கானக் கோழியு நீனிற மஞ்ஞையும்
பந்துங் கழங்குந் தந்தனர் §§பரசி
வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் ¶¶சாந்தமும்
புழுக்கலு ††நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையு மேவிய விரையும்
ஏவ லெயிற்றிய ரேந்தினர் ‡‡பின்வர
ஆறெறி பறையுஞ் சூறைச் சின்னமும்
கோடுங் குழலும் பீடுகெழு மணியும்
கணங்கொண்டு துவைப்ப வணங்கு முன்னிறீஇ

28. மாலை - ஒழுங்கு.
27-8. நிரைபுலிப்பற்றாலி - நிரைத்த புலிப்பல் தாலி.
29-30. வான்புறத்துரிவை - தூய புறத்தினையுடைய புலியுரிவை.
32. திரிதருகோடு - புரிந்தகொம்பு. 33. தூவி - சிறகின்மயிர்.
35. பந்தும் கழங்குங்கொண்டு சேவித்து.
[1] 39-40. (பா) பீடிகையிற் சென்று நிலைப்பலிசெய்து.
40. ஆறெறிபறை - வழிபறித்துக்கொட்டும் பறை. சூறைச்சின்னம் - சூறைகொள்ளுமிடத்து ஊதும் சின்னம்.
42. (பா) அணங்கு மெய்ந்நிறீஇ - அக்குமரிமேல் அணங்கை யேற்றி.

அடி, 27. மறப்புலி : கலித். 42 : 1; புறநா. 90 : 3. அடி, 27-8. புலிப்பல்தாலி : குறுந். 161 : 3; அகநா. 7 : 18; புறநா. 374 : 9. அடி, 37-8 : சிலப். 5 : 68. அடி, 38 : சிலப். 30 : 153.

39-ஆம் அடியின்பின், "மலர்ப்பலிப் பீடிகை நிலைப்பலி செய் தாங்கு" என்று ஓரடி சில பிரதிகளில் அதிகமாக எழுதப்பட்டுள்ளது.

[1] மிகுதியாகக் காணப்பட்ட ஓரடியின் பொருள் இது : இஃது அடியார்க்கு நல்லாருரையிற் காணப்படவில்லை.

(பி - ம்.) † 'சேர்த்தி' ‡ 'ளிரும்புலி' ¶ 'மயங்கியவான்' § 'யுடுத்திப்' || கையிற்கொடுத்துத்' §§ 'பின்வர' ¶¶ 'சாந்தும்' †† 'நொலையலும்' ‡‡ 'சூழ்ந்து'

விலைப்பலி யுண்ணு மலர்பலி பீடிகைக்
கலைப்பரி யூர்தியைக் கைதொழு தேத்தி
இணைமலர்ச் சீறடி †யினைந்தனள் வருந்திக்
கணவனோ டிருந்த மணமலி கூந்தலை
‡இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை ¶செய்த தவக்கொழுந்
தொருமா மணியா யுலகிற் கோங்கிய
திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்பப்
பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டியென்
றரும்பெறற் கணவன் பெரும்புறத் §தொடுங்கி
விருந்தின் மூர லரும்பின ணிற்ப
மதியின் வெண்டோடு சூடுஞ் சென்னி
நுதல்கிழித்து விழித்த விமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவா ணகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்
தரவுநாண் பூட்டி $நெடுமலை வளைத்தோள்
துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி
வளையுடைக் கையிற் சூல மேந்தி
கரியி னுரிவை போர்த்தணங் காகிய
வரியி னுரிவை மேகலை யாட்டி

---

43. *விலைப்பலி* - வெற்றிகொடுத்துண்ணும்பலி. (பா) மலர்ப்பலி பீடிகை யென்றது - கோட்டத்தை.

43 - 4. உண்ணும் ஊர்தி.

பீடிகைக்கு அருகேநிற்கிற கலைப்பரியூர்தியைக் கைதொழுதேத்தி ; ஏத்தி - ஏத்த. கலைப்பரியூர்தியென்றது - தெய்வமேறப்பட்டாளை. கலைப் பரி - பரிக்கலையென்க.

47. 'கொங்கச் செல்வி குடமலை யாட்டி' என்றது - மேற்பட்டு இவளைத் தெய்வமாகக்கொண்டாடுமிடம் கூறினபடியாலே, இவள் துர்க்கையாகவே பிறந்தாளென்றவாறு.

(7) சாலினிதானும் (42) அணங்குமெய்ந்நிறீஇ (44) ஏத்தப் பின்னும் (50) தெய்வமுற்று.

(47) 'கொங்கச் செல்வி' என்றதுமுதலாக, (50) 'திருமாமணி' என்பதீறாகக் கண்ணகிக்கு நிகழ்வது கூறினள்.

---

அடி, 44 : தக்க. 75. அடி, 62. உரிவைமேகலை : சிலப். 12 : 30. (மேற்.) 61 : தக்க. 96, உரை.

(பி - ம்.) † 'யினைந்தடிவருந்தக்' ‡ 'இவளோர்' ¶ 'செய்தவக்' § 'தொதுங்கி' $ 'நெடுவரை'

சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை
இரண்டுவே றுருவிற் றிரண்டதோ ளவுணன்
தலைமிசை நின்ற தையல் பலர்தொழும்
அமரி குமரி கவுரி சமரி
† சூலி நீலி மாலவற் கிளங்கிளை
ஐயை செய்யவள் வெய்யவாட் டடக்கைப்
பாய்கலைப் பாவை பைந்தொடிப் பாவை
ஆய்கலைப் பாவை ‡ யருங்கலப் பாவை
தமர்தொழ வந்த குமரிக் கோலத்
தமரிளங் குமரியு மருளினள்
வரியுறு செய்கை வாய்ந்ததா லெனவே.

உரைப் § பாட்டுமடை.

---

65. இரண்டுவேறுரு - தலை கடாவான வடிவு. அவுணன் - மகிடாசுரன்.

68. சூலி - சூலத்தையுடையாள். மாலவற்கிளங்கிளை - மாலின் தங்கை.

71. ஆய்கலைப் பாவை - கலைக்கியானப்பெண். அருங்கலப்பாவை-இரத்தினப்பாவை.

72. தமர்தொழ வந்த குமரி - எயினர் தொழவந்த குமரி.

73. அமரிளங் குமரி - குமரிமாதேவி.

(74) வாய்ந்ததென்று கண்டார்கூற (73) அருளினள் என்க.

சாலினி சொல்லி ஒப்பித்துப் பந்துமுதலாயின கொண்டு சிலர் பின் வாராநிற்பப் பறைமுதலியன நின்று துவைப்பப் பலிசெய்து அப்பலி யிட்ட அப்படிமத்தாள் தெய்வத்தைத்தொழுதேத்த, அத்தெய்வம் இவண்மேற் பொருந்தி அங்கிருந்த கண்ணகியைப்புகழ, அதுகண்டு கண்ணகி நாணி மயக்கத்தான் மொழிந்தாளென்று தன்கணவன் புறத்து ஒடுங்கி நகைத்து நிற்பத் தமர்தொழவந்த குமரிக்கோலத் தமர்ந்த இளங்குமரியும் கொண்டவரிக் கோலம் வாய்ந்ததென்று கண் டார்சொல்ல அருளினளெனக் கூட்டுக.

அன்றியும், மதியின் (பா) வெண்கோடுமுதலாயின இப்பொழுது பிரதிவிம்பமானது தனக்கேயாக்கி, ஆய்கலைப்பாவை...வரியுறுசெய்கை வாய்ந்ததாலெனத் தமர்தொழவந்த குமரியும் அருளினளென்றுரைப் பாருமுளர்.

பண்டு அருளாக்குமரியும் அருளினுளென்க.

உரைப்பாட்டுமடை - உரைச்செய்யுளை இடையிலே மடுத்தல்.

---

பி-ம்.) † 'சூரி' ‡ 'யருங்கலைப்பாவை' § 'பாட்டுமடையாங்கநாக'

(முன்றிற்சிறப்பு) வேறு

(2) நாக நாறு நரந்தை நிரந்தன
† ஆவு மாரமு மோங்கின வெங்கணும்
சேவு மாவுஞ் செறிந்தன கண்ணுதல்
பாக மாளுடை யாள்பலி முன்றிலே.
(3) செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்
கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாடிரு முன்றிலே.
(4) மரவம் பாதிரி ‡ புன்னை மணங்கமழ்
குரவங் கோங்க மலர்ந்தன கொம்பர்மேல்
அரவ வண்டின மார்த்துட னியாழ்செயும்
திருவ மாற்கிளை யாடிரு முன்றிலே.

(வள்ளிக்கூத்து) வேறு

(5) [1] கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ
பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
விற்றொழில் வேடர் ¶ குலனே குலனும்.
(6) ஐயை திருவி னணிகொண்டு நின்றவிப்
பையர வல்கு றவமென்னை கொல்லோ
பையர வல்குல் பிறந்த குடிப்பிறந்த
§ எய்வி லெயினர் குலனே குலனும்.

---

(2) நாகம் - சுரபுன்னை. (பா) நாறுநரந்தம் - நாரத்து. ஆ - ஆச்சா. ஆரம் - சந்தனம்; ஆத்தியுமாம். சே என்பது ஒரு மரம்; உழிஞ்சிலு மாம்; அழிஞ்சிலுமாம்.

(3) செம்பொன்னை வேங்கை சொரிந்தன. குவிந்தன - குவித்தன.

(4) மரவம் - கடம்பு; குங்கும மரமுமாம்.

(5) கொற்றவை - ஐயை.

---

(2) கண்ணுதல் பாகமுடையாள்: சிலப். 12 : 10. (3) புன்கின் மலருக்குப் பொரி : நற். 9 : 5; குறுந். 53 : 2-4; கலித். 33 : 11. (4) யாழிசைவண்டு : குறிஞ்சிப். 110-11.

[1] இச்செய்யுள் முதலிய மூன்றும் ஆடுநர்ப்புகழ்தலென்று சில மூலப் பிரதிகளில் எழுதப்பட்டுள்ளது.

(பி - ம்.) † 'யாவு' ‡ 'வேங்கை' ¶ 'குலமேகுலமும்' § 'வெய்ய வெயினர்'

(7) பாய்கலைப் பாவை யணிகொண்டு நின்றவிவ்
வாய்தொடி நல்லா டவமென்னை கொல்லோ
ஆய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
வேய்வி லெயினர் குலனே குலனும்.

(முன்னிலைப்பரவல்) வேறு

(8) † ஆனைத்தோல் போர்த்துப் புலியி னுரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமே னின்றாயால்
வானோர் வணங்க மறைமேன் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்.

(9) வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரியதிரி கோட்டுக் ‡ கலைமிசைமே னின்றாயால்
அரியரன்பூ மேலோ ¶ னகமலர்மேன் மன்னும்
விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்.

(10) சங்கமுஞ் சக்கரமுந் § தாமரைக் கையேந்திச்
செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயால்
கங்கை முடிக்கணிந்த || கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் $ மறையேத்த வேநிற்பாய்.

(வென்றிக்கூத்து) வேறு

(11) ஆங்குக்,
கொன்றையுந் துளவமுங் குழுமத் தொடுத்த
துன்று மலர்ப்பிணைய றோண்மே லிட்டாங்
கசுரர் வாட வமரர்க் காடிய
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே.

---

(7) (பா) ஏவில் - ஏவையுடைய வில்.

(8) நடுக்கின்றியே நிற்பாய், நீ இப்பொழுது இங்ஙனே நின்று யென்க.

(9) செற்றென்றது, இப்பொழுது மிதித்து நிற்கின்ற நிலையை. பூமேலோன் - பிரமன். அகமலர் - இதயகமலம்.

(11) கூத்துள்படும் - கூத்தாடுமென்கின்றது.

---

(மேற்.) (8) இக்கவி முதலிய மூன்றும், முன்னிலைப்பரவலாய் மூன்றடுக்கி நான்கடியான் வந்தன (தொல். செய். 149, ந.)

(பி - ம்.) † 'யானைத்தோல்' ‡ 'கலைமிசை நின்றாயால்' ¶ 'னகன் மலர்' § 'தாமரைக் கைமேலேந்திச்' || 'கண்ணுதறன்' $ 'மறைபோற்ற வேநிற்பாய், கொன்றையு மரவமுந்'

(கூத்துள் ப்டுதல்) வேறு

(12) ஆய்பொன் னரிச்சிலம்புஞ் சூடகமு மேகலையு மார்ப்பவார்ப்ப
மாயஞ்செய் வாளவுணர் வீழநங்கைமரக்கான்மேல் வாளமலையாடும்
போலும்
மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை யாடு
மாயிற்
காயா மலர்மேனி யேத்தி வானோர் கைபெய் மலர்மாரி காட்டும் போலும்.

(வெட்சி)

(13) உட்குடைச் சீறூ †ரொருமகனு னிரைகொள்ள வுற்ற காலை
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் போலும்
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க்
கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்.

(வெட்சிப்புறநடை)

(14) கள்விலை யாட்டி மறுப்பப் பொருமறவன் ‡கைவி லேந்திப்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் ¶போகுங் காலைக்
கொள்ளுங் கொடியெடுத்துக் கொற்றவையுங் §கொடுமர முன்செல்லும்
போலும்.

(கொடை) வேறு

(15) இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டகத்துத் தந்தநல் லானிரைகள்
கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல
நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன.

---

(12) மரக்கால் - அசுரர் தன்மேல் பாம்பும் தேளும் மாயத்தினாலே வரவிடுகையாற் காலிலே மரத்தைக்கட்டி வாளையெடுத்து நின்றுடுங் கூத்து. வானோர்கை மலர்பெய்மாரியைக் காட்டும்.

(13) வேண்டும்-விரும்பும். காரி-கருங்குருவி. கடிய குரல்:நிமித்தம்.

(14) கொள்ளுங்கொடி - தான் தெரிந்துகொள்ளும் ஆளிக்கொடி. கொடுமரம் - வில். கொற்றவையும் கொடியெடுத்துச் செல்லுமென்க. அன்றியும் எடுத்தென்றதனை எடுப்பவென்று திரித்து இவள் வில்லை யெடுப்பச் செல்லுமென்பாருமுளர்.

(15) இத்தாழிசைகளிற் போலுமென்றது ஒப்பில் போலி.
இளமாவெயிற்றி - மாமை நிறத்தையுடைய இளவெயிற்றி.

---

(12)-(14) இவை எல்லாப் பிரதிகளிலும் முதலடி அறுசீராயும் மற்றையடி எண்சீராயும் உள்ளன. (12) சிலப் : 6 : 58-9.

(13) பு. வெ. 3. (14) பு. வெ. 2; சிலப். 11 : 210-12.

(மேற்.) (15) 'இளமா......நிறைந்தன' இது கொடை; தாம் கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுத்து மனமகிழ்ந்தது (தொல். புறத். 4, ந.; இது முதலிய மூன்றும் தாழிசை யோசையின்றி அடுக்கி வந்தன. (தொல். செய். 149, ந.)

(பி - ம்.) † 'ரொருமகனுகொள்ள' ‡ 'கைவேலேந்திப்புள்ளுவழிப்' ¶ 'போகுமாயின்' § 'கொடுமரமுஞ்'

(16) முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கவர்ந்த வினநிரைகள்
கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன்
† புள்வாய்ப்புச் சொன்னகணி முன்றி னிறைந்தன
(17) கயமல ருண்கண்ணாய் காணாய்நின் னையர்
அயலூ ரலற ‡ வெறிந்தநல் லானிரைகள்
நயனின் மொழியி னரைமுது தாடி
எயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன.
துறைப்பாட்டுமடை.

(அவிப்பலி) வேறு

(18) சுடரொடு திரிதரு முனிவரு மமரரும்
இடர்கெட வருளுநி னிணையடி தொழுதேம்
அடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறறரு விலையே.
(19) அணிமுடி யமரர்த மரசொடு பணிதரு
மணியுரு வினைநின மலரடி தொழுதேம்
கணநிரை ¶ பெறுவிற லெயினிடு கடனிது
நிணனுகு குருதிகொ § ணிகரடு விலையே.

---

(16) வேய்தெரி கானவன் - ஒற்றன்.
(17) நயனின்மொழி - நயப்பாடில்லாதமொழி. (பா) நரை முதிர் தாடியையுடைய எயினர்.
துறைப்பாட்டு - வெட்சித்துறை சொன்ன பாட்டு.
(18) [1] சுடரொடுதிரிதருமுனிவர் - ஆதித்தன்வெப்பம் தணிதல் காரணமாக அவனுடனே கூடித்திரியுமுனிவர். நின் அடிதொடு கடனிது - சூளுற்ற கடனிது. விறல்தருவிலை - நீ கொடுத்த வெற்றிதந்த விலை.
(19) அமரர் : எழுவாய்.

---

(16) கள்விலைக்கு ஆவைத் தரல் : பெரும்பாண். 141-2. கணி : கலித். 93 : 12. ஆனிரையைக் கணி முதலியவர்க்குக் கொடுத்தல் : பு.வெ. 14. (18) அடிதொடுதல் : சிலப். 12 : (20); மணி. 18 : 171; பரி. 8 : 70.
(மேற்.) "சுடரொடு", "அணிமுடி", "துடியொடு"—இவை மூன்றடுக்கி முடுகியலாய் வந்த தாழிசைக் கொச்சகவொருபோகு (தொல். செய். 149, ந.)
[1] முருகு. 107; புறநா. 43, உரை.
(பி - ம்.) † 'புள்வாய்ப்புட்' ‡ 'வெறிந்தநல்லாக்கள்' ¶ 'பெறும்' § 'ணிகர்நடு'

(20) துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
வெடிபட †வருபவ ரெயினர்க ளரையிருள்
அடுபுலி யனையவர் குமரிநி னடிதொடு
படுகட னிதுவுகு பலிமுக மடையே.

(பலிக்கொடை) வேறு

(21) வம்பலர் பல்கி வழியும் ‡வளம்பட
அம்புடை வல்வி லெயின்கட னுண்குவாய்
சங்கரி யந்தரி நீலி சடாமுடிச்
செங்கணரவு ¶பிறையுடன் சேர்த்துவாய்.

(22) துண்ணென் றுடியொடு துஞ்சூ ரெறிதரு
கண்ணறி லெயின ரிடுகட னுண்குவாய்
விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரும்
உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்.

(23) பொருள்கொண்டு §புண்செயி னல்லதை யார்க்கும்
அருளி லெயின ரிடுகட னுண்குவாய்
மருதி னடந்துநின் மாமன்செய் வஞ்ச
உருளுஞ் சகட முதைத்தருள் செய்குவாய்.

வேறு

(24) ||மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன் பிறர்நாட்டுக்
கட்சியுங் கரந்தையும் பாழ்பட
வெட்சி சூடுக விறல்வெய் யோனே.

---

(20) படுகட னிதுவென்றது - துடிமுதலாகிய வாச்சியங்களுடனே செய்யும் பூசையை. பலிமுக.........மடை - சோறு.

(21) (பா) உண்குவை - உண்பாயாக.

(23) மருதினடந்து - மருதிடைநடந்து. செய்குவாய் : விளி.

இத்தாழிசைகள் கொற்றவையைப் பரவுவார் வார்த்தை.

(24) [1]மறைமுது முதல்வன் மாதேவன். இவன்பின்னர் - அகத்தியனாகிய கடவுள். பொருப்பன் - பாண்டியன்; இவன் வெய்யோன்; விறல் வெய்யோன் - வெற்றியை விரும்புதலையுடையோன். கட்சி - காடு. கரந்தை - அவர் மீட்குந்தொழில்.

---

(20) சிலப். 12 : (18) அடிக்.

(23) "பொருள்கொண்டு புன்செயி னல்லதை யன்போ, டருள்புற மாறிய" (கலித். 15 : 8 - 9.)

[1] இக்கருத்தை மறுப்பர் நச்சினார்க்கினியர்; மதுரைக். 40 - 42, உரை.

(பி - ம்.) † 'வருமவரெயினர்கணயமிலர்' ‡ 'வளஞ்சுரப்ப' ¶ 'பிறையொடு' § 'நோய்செயி' || 'மறங்கெழு சிறப்பின் வாய்வாட் டென்னவன், புறங்காத் தோம்பு கழுங்கொடி பிறர்நாட்டு'

1. கடுங்கதிர் திருகலின்—(இ - ள்.) அங்ஙன மடைந்தவர் வெங்கதிர் முறுகுதலாலே,

தண்கதிருமுண்டாதலின், வெங்கதிரென்பதுதோன்றக் 'கடுங் கதிர்' என்றார்.

## 1 - 5. நடுங்கஞரெய்தி...........இருந்தனர்

(இ - ள்.) நறிய பலவகைக்கூந்தலையுடையாள், கடுங்கதிர் அங்ஙன முறுகுதலின் வெம்மை விளைக்கும் பாலைத்தன்மையையுடைய நெறியைச் செல்லுதலால் நடுங்குதற்குக்காரணமான அஞரெய்தி மெய்வருத்தத் தோடே அடிகள் கொப்புளங்கோடலின் வல்லாநடையோடும் பலகாலு யிர்த்தலின், மேற்செல்லாராய் நோய்தணிய அவ்விடத்துளதாகிய முற் கூறிய ஐயை கோட்டத்துப் பலரும் புகுந்தறியாததோர் பக்கத்தே புக்கிருந்தார்களாகவென்க.

5. உப்பால்—(இ - ள்.) மேலே,

## 6 - 7. வழங்குவிற்றடக்கை.........சாலினி

(இ - ள்.) அம்பைவழங்கும் வில்லைக் கையிலேயுடைய மறவர்குடி யிற் பிறந்த உரிமையையுடைய சாலினியானவள்,

பழங்கடன் - முன்புநேர்ந்த கடன். முழங்குவாய் - கொக்கரிப்பை யுடைய வாய். சாலினி - தேவராட்டி.

## 8 - 11. தெய்வமுற்று.........அடிபெயர்த்தாடி

(இ - ள்.) அச்சாலினி, தனதூர் நடுவாகிய மன்றின்கண்ணே தான் தெய்வத்தன்மையுற்று மெய்ம்மயிர்சிலிர்த்து மூரிநிமிர்த்த கைகளை ஒற் றையும் இரட்டையுமாக்கி அவிநயத்தோடேகூட்டித் தாளத்திற்கு ஒப்ப அடிபெயர்த்துக் கானவர்வியப்ப ஆடியென்க.

கூட்டுண்ணும் எயினரூர் ; வேலியையுடைய ஊர்.

## 12 - 3. கல்லென் பேரூர்......மன்றுபாழ்பட்டன

அங்ஙனம் ஆடியவள் கூறுவாள் :—

(இ - ள்.) முன்பு சொல்லிய நுங்கடன்கொடாமையின், வலிய வில்லையுடைய எயினர்மன்றுகள் இன்று பாழ்பட்டன ; பகைவருடைய ஊர்களில் திரண்ட நிரைகள் மிக்கன.

கல் - அனுகரணம். சிறத்தல் - மிகுதி. பட்டது பாடமாயின், ஒருமை பன்மைமயக்கமென்க.

## 14 - 5. மறக்குடித் தாயத்து......எயினரும்

(இ - ள்.) அங்ஙனம் அவட்குக் கடன்கொடாமையின், இம்மறக்குடி யில் தாயம்பற்றிவருகின்ற எயினரும் தமக்கு முறைமையாகி வருகின்ற ஆறெறிசூறை ஆகோள் முதலியவற்றால் விளையும் வளம் குன்றி அறக் குடிகளைப்போலச் சினங்குறைந்து செருக்கு அடங்கிவிட்டார்கள் ;

இது முன்னிலைப்புறமொழி.

### 16 - 7. கலையமர் செல்வி......கொடுப்போ ளல்லள்

(இ - ள்.) கலையாகிய ஊர்தியைப்பொருந்திய செல்வி தான் கொடுத்த வென்றிக்கு விலையாகிய உயிர்ப்பலியை உண்ணக்கொடுப் பினல்லது நும் சிலைக்குப்பொருந்திய வென்றியைக் கொடுப்பாளொருத்தி யல்லள் ;

### 18 - 9. மட்டுண் வாழ்க்கை......தருமெனவாங்கு

(இ - ள்.) களவுகண்டுண்ணும் ஊணையுடைய மாக்கள், நும்சுற்றத்தி னுள்ளார் மதுவுண்டுசெருக்கும் இல்வாழ்க்கையை நீர் விரும்புவீராயின், செல்விக்குநேர்ந்த கடனைக் கடிதிற் கொடுமின்களென்று சாலினி சொல்ல வென்க.

தாருமென்றது தருமென விகாரமாகிக் கொடுமென்பதாயிற்று.

ஆங்கு : அசை.

### 20 - 21. இட்டுத் தலை......குமரியை

(இ - ள்.) தாம் சுட்டிய பகைஞர் தலையைத் தாமேயறுத்திட்டு எண் ணுமதல்லது பகைஞர் சுட்டியெண்ணுதல் அவரிடத்து முடிவுபோகா மைக்குக் காரணமாகிய எயினர் தொல்குடிக் குமரியையென்க.

இனித் தலைகள் அரிந்து வைக்கவைக்கப் பிறர் எண்ணப்படும தல்லது சமத்திற்சுடப்பட்டு அவம் போகாக்குடியென்றுமாம். இன்னும் அரசன் சுட்டிய மாற்றரசர் தலையைப் பிறரிடத்துப்போகவிடாவென்று மாம். சுட்டு - குறிப்புமாம்.

### 22 - 6. சிறுவெள் ளரவின் குருளை...என்னச் சாத்தி

(இ - ள்.) அங்ஙனம் கேட்ட எயினர், தமது குடிப்பிறந்த குமரியை யுடைய குறிதாக நெறித்த கூந்தலைச் சடையாகக்கட்டி அம்முடியிலே சிறிய வெள்ளிய அரவினது குருளையாகப் பொன்ஞாணினை வளையக்கிடத் திக் காவற்காடுசூழ்ந்த தோட்டப்பயிரையழித்த ஏனத்தினது கோட் டைப் பறித்து அதனை இளைய வெள்ளிய பிறையென்னும்படி சாத்தி.

வெள்ளரவென்றார், சாதிபற்றி. குருளையென்றார், அச்சடையிற் பிறந்தமை தோன்ற. சடைமுடி பாம்பாற் கட்டுதலான், நாண் பாம்பா யிற்றென்றுமாம். இளை - கட்டுவேலியுமாம்.

### 27 - 30. மறங்கொள் வயப்புலி.....மேகலை யுடீஇ

(இ - ள்.) கடுங்கண்மையையுடைய வலிய புலியை வாயைக்கிழித்து உதிர்த்த பல்லொழுங்கை வெள்ளிய நிரைத்தாலியாகக் கட்டி, அதனது வரியும்புள்ளியும் தம்முள் மயங்குதலையுடைய உரிவையை மேலே மேகலை யாக உடுத்தி,

வான் - பெருமை. புலி ஆக்கொள்ளுமுயற்சியான் வாய் அங்காந்து வருதலின், 'வாய்பிளந்து' என்றார்.

### 30 - 31. பரிவொடு........கொடுத்து

(இ - ள்.) வயிரவில்லை வருத்தத்தோடு வளைத்து அவள் கையகத் துக் கொடுத்து,

பரிவு - அன்புமாம்.

32. திரிதரு கோட்டுக் கலைமே லேற்றி

(இ - ள்.) முறுக்குண்ட கோட்டையுடைய கலையின்மீதே இருத்தி, ஊரிற் றிரிதருமென்றுமாம்.

33. - 5. பாவையுங் கிளியும்......தந்தனர் பரசி

(இ - ள்.) பாவை முதலியவற்றைக்கொண்டு சேவித்துத் துதித்தனராய்,

பாவை - மதனப்பாவை முதலியன. தூவி - சூட்டு. நீனிறம் - நீல நிறம்.

36-9. வண்ணமுஞ் சுண்ணமும்...ஏந்தினர் பின்வர

(இ - ள்.) வண்ணமுதல் விரையீறுயவற்றை ஏவல்செய்யு மெயிற்றியர் ஏந்தினராய்ப் பின்செல்ல,

வண்ணம் - தோள் முலைகளின் எழுதும்வண்ணம். புழுக்கல் - அவரை துவரை முதலியன. நோலை - எட்கசி. விழுக்குடைமடை - நிணச்சோறு.

40 - 42. ஆறெறி பறையும்...அணங்குமுன் னிறீஇ

(இ - ள்.) வழிபறிக்குங்காற் கொட்டும் பறையும் சூறை கொள்ளுங் கால் ஊதும் சின்னமும் துத்தரிக்கொம்பும் குழிக்குழலும் எறிமணியுமாகிய இவை தம்மிற்கூடி ஒலிப்ப இவ்வனைத்தையும் அணங்கின் முன்னே நிறுத்தவென்க.

நிறீஇ - நிறுத்த.

43 - 4. விலைப்பலி யுண்ணும்......கைதொழு தேத்தி

(இ - ள்.) தான் கொடுத்த வென்றிக்கு விலையாகிய உயிர்ப்பலியை உண்ணும் விரிந்த பலிபீடத்தை முந்துறத்தொழுது பின்னர்ச் செலவையுடைய கலையாகிய ஊர்தியையுடையாளைக் கையாற் றொழுதேத்தியென்க.

மலர்தல் - விரிதல்.

45 - 50. இணைமலர்ச் சீறடி...தெய்வமுற் றுரைப்ப

(இ - ள்.) இணையான மலர்போலும் சிறிய அடிகள் நொந்தனளாய் வருந்தி அவ்வருத்தம் தீரக் கணவனுடனே யிருந்த கண்ணகியை நோக்கி, இங்கிருக்கின்ற இவள் கொங்கநாட்டினையாளும் செல்வி ; குடநாட்டினையாளும் செல்வி ; தென்றமிழ் நாட்டினையாளும் பாவை ; இங்ஙனமாதற்கு முற்பவத்திற் செய்த தவத்தின்கண் முளைத்த கொழுந்துபோல்வாள் ; இவ்வுலகிற்கு முழுமாணிக்கம்போன்று உயர்ச்சி பெற்ற பெண்ணுருக் கொண்டதோர் திருமணியெனச் சாலினி தன் தெய்வத்தன்மையான் இங்ஙனம் இவளை மிகுத்துரைப்பவென்க.

கண்ணகி அன்னளாதலை, 'கொங்கிளங் கோசர்' (சிலப். உரை பெறுகட்டுரை) என்றது முதலியவற்றானறிக.

51 - 3. பேதுறவு மொழிந்தனள்...அரும்பினணிற்ப

(இ - ள்.) இங்ஙனம் சாலினி புகழ்ந்துகூறிய அதனைப் பொருத கண்ணகி இம்மூதறிவாட்டி தெய்வமயக்கத்தாற் கூறினுளெனக் கருதி

நாணினால் தன்கணவனது புறத்தே மறைந்து அவள் அறிவின்மையை யிகழ்ந்த புதிய சிறுநகையோடு நிற்பவென்க.

54 - 5. மதியின்வெண் டோடு...இமையா நாட்டத்து

(இ - ள்.) மதியாகிய வெள்ளிய இதழைச்சூடும் சென்னியையும், நுதலைத் திறந்து விழித்த இமையாத நாட்டத்தினையுமுடைய,

56 - 7. பவள வாய்ச்சி......கறுத்த கண்டி

(இ - ள்.) பவளம்போற் சிவந்த வாயினையும் வெள்ளிய நகையினையும் கரிய கண்டத்தினையுமுடையாள்,

57 - 8. வெஞ்சினத்து......மலை வளைத்தோள்

(இ - ள்.) கடிய சினத்தையுடைய வாசுகியை நாணாகப்பூட்டி மேரு வரையை வில்லாக வளைத்தோள்,

இவள் கிரியாசத்தியானமையிற் கூறினர்.

59. துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி

(இ - ள்.) நஞ்சு ஊறும் துளையெயிற்றையுடைய பாப்புக்கச்சாற் பிணித்த முலையையுடையாள்,

60. வளையுடைக் கையிற் சூல மேந்தி

(இ - ள்.) வளையணிந்த கையாலே சூலத்தை யேந்தினாள்,

61 - 2. கரியி னுரிவை......மேகலை யாட்டி

(இ - ள்.) சிங்கத்தை யுரித்து அதன் தோலை மேகலையாக வுடுத்துக் கரியை யுரித்து அதன் தோலை [1]ஏகாசமாக விட்டோள்,

அணங்காகிய அரி கரியினுரிவையை உடுத்துப் போர்த்தோளென்க. அணங்கு - வருத்தமுமாம்.

63 - 4. சிலம்புங் கழலும்......கொற்றவை

(இ - ள்.) இடப்புறத்துச் சிலம்பும் வலப்புறத்து வீரக்கழலு மொலிக்கும் சிறிய அடிகளையுடைய மேலான வெற்றியையுடைய வாட்டொழில் வாய்ப்புப் பெற்ற கொற்றவை,

65 - 6. இரண்டுவே றுருவின்........தையல்

(இ - ள்.) உடலுக்குத் தலைவேறான வடிவினையும் திரண்ட தோளினையுமுடைய [2]விக்கிரமாசுரன் தலையைத் துணித்து அதன்மீதே நின்ற தையல்,

66 - 8. பலர்தொழும்........இளங்கிளை

(இ - ள்.) தேவரும் முனிவரும் வணங்கப்பெறும் அலங்கரித்தல் இல்லாதோள், அழியாதோள், கௌரநிறத்தையுடையோள், சமரை வல்லாள், சூலத்தையுடையோள், நீலநிறத்தையுடையோள், மாலானவனுக்குத் தங்கையாயுள்ளாள்,

கிளை - கிளியை யொப்பாளெனவுமாம்.

---

[1] ஏகாசம் - உத்தரீயம்.

[2] 'மேதிச்சென்னி விக்கிரமன்' (திருவாதவூரர். திருவம்பல. 39)

### 69 - 71. ஐயை செய்யவள்......அருங்கலப் பாவை

(இ - ள்.) வெய்ய மழுவாளைக் கையிலேயுடைய சயமகள், திருமகள், பாயும் கலையையுடைய பாவை, ஆயும் கலையையுடைய பாவை, அழகிய தொடியையும் கலங்களையுமுடைய பாவைபோல்வாள்,

### 72 - 4. தமர்தொழவந்த......வாய்ந்ததா லெனவே

(இ - ள்.) மாலும் அயனும் தொழத்தோன்றிய கன்னிக்கோலத்தினை யுடையாளாய்ப் பொருந்திய அக்குமரியும் இச்சாலினி கொண்டகோலம் வாய்ப்புடைத்தென்று அருளினளென்க.

சாலினி உற்று நிறுத்து ஒச்சி வியப்ப ஆடி, பட்டன; சிறந்தன; அடங்கினர்; ஆதலிற் கடனுணினல்லது கொடுப்போளல்லள்; கடன் தாருமென, குமரியைக்கட்டிச் சுற்றிச் சாத்திப் பூட்டி உடீஇக் கொடுத்து ஏற்றிப் பரசிப் பின்வரத் துவைப்ப நிறுத்த, தானேத்திப் பின்னர்க் கூந் தலை, செல்வி, ஆட்டி, பாவை, கொழுந்து, மணியெனத் தெய்வமுற் றுரைப்ப, கண்ணகி ஒடுங்கி நிற்ப, சென்னியையும் நாட்டத்தையு முடைய வாய்ச்சி, நகைச்சி, கண்டி, வளைத்தோள், முலைச்சி, ஏந்தி, உடுத்துப் போர்த்தோள், கொற்றவை, தையலாகிய குமரியும் அருளின ளென வினைமுடிக்க.

உரைப்பாட்டுமடை - உரைப்பாட்டை நடுவே மடுத்தல்.

### (2) நாக நாறு......பலி முன்றிலே

(இ - ள்.) கண்ணுதலுடைய பாகத்தை ஆளுதலுடையாளுடைய பலி கொள்ளுமுன்றிலில் எவ்விடத்தும் மணநாறும் சுரபுன்னையும் நரந் தையும் நிரல்படப் பூத்தன; ஆச்சாவும் சந்தமும் உயர்ந்து பூத்தன; சேமரமும் மாமரமும் செறிந்து பூத்தன வென்க.

### (3) செம்பொன் வேங்கை......திருமுன்றிலே

(இ - ள்.) பிறை நீங்காதுவாழும் சடைமுடியினையுடையாளுடைய திருமுன்றிலில், வேங்கைகள் செம்பொன்னைப்பூத்துச் சொரிந்தன; நல் லிலவங்களின் கொம்புகள் செவ்விதழைப் பூத்துச் சொரிந்து குவித்தன; புன்கு [1]பொங்கராகிய வெள்ளிய [2] பொரிகளைச் சிந்தினவென்க.

குவித்தன: விகாரம். பொங்கர் - கொம்புமாம்; பொதுளலுமாம்.

### (4) மரவம் பாதிரி......திரு முன்றிலே

(இ - ள்.) திருமாற்கு இளையாளது திருமுன்றிலில், மணங்கமழும் வெண்கடம்பும் பாதிரியும் புன்னையும் குராவும் கோங்குமாகிய இவை மலர்ந்தன; இக்கொம்பரின் மீதே வண்டினம் தேனினத்தோடே யாழி னது அரவம்போலப் பாடுமென்க.

அ: இடைச்சொல். இவை மூன்றும் முன்றிற்சிறப்பு.

---

[1] சிலப். 10 : 69. [2] குறுந். 53 : 2 - 4, அடிக்.

(5) கொற்றவைகொண்ட......குலனேகுலனும்

(இ - ள்.) இறைவி அணியாகக்கொண்டனவற்றைக் கொண்டுநின்ற இச்சாலினி முன்செய்த தவம் எத்தவங்கொல்லோ, இவள்பிறந்தகுடியின் கட்பிறந்த விற்றொழிலேவல்ல மறவர்குலமே குலமென்பதூஉமென்க.

(6) ஐயை திருவின்...... குலனேகுலனும்

(இ - ள்.) இந்த ஐயையுடைய அழகிய கோலத்தைக் கொண்டுநின்ற இவ்வரவின் படம்போலும் அல்குலையுடையாள் முன்செய்த தவம் எத் தவங்கொல்லோ, இவள்பிறந்த குடியின்கட்பிறந்த அம்பைச்செலுத்தும் வில்லையுடைய எயினர்குலமே குலமென்பதூஉமென்க.

திரு - அழகு.

(7) பாய்கலைப் பாவை......குலனேகுலனும்

(இ - ள்.) கலைப்பாவையின் கோலத்தைக் கொண்டுநின்ற அழகிய தொடியையுடைய இச்சாலினி முன்செய்த தவம் எத்தவங்கொல்லோ, இவள பிறந்த குடியின்கட்பிறந்த மூங்கில்வில்லையுடைய எயினர்குலனே குலமென்பதூஉமென்க.

இவைமூன்றும், "வாடா வள்ளி வயவ ரேத்திய" (தொல். புறத். 5) என்பதனுன், வள்ளிக்கூத்து; என்னை? "மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக், கண்ட முருகனுங் கண்களித்தான்—பண்டே, குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப், பிறமக ளேேறற்ருள் பெரிது" (தொல். புறத். 5, ந மேற்.) எனவரும்.

(8) ஆனைத்தோல் போர்த்து..........நடுக்கின்றியே நிற்பாய்

(இ - ள்.) தேவர்கள்வணங்க நான்மறைக்கும் மறைப்பொருளாய்த் தன்னை வழிபடுவோர் ஞானத்தின்கண் எழுங்கொழுந்தாய்ச் சலிப்பின்றி நிற்கின்ற நீ புலித்தோலையுடுத்தி யானைத்தோலைப்போர்த்துக் கானத்தின் மீதே எருமையின் பசுந்தலைமேல் நின்ருய்; இஃது என்னமாயந்தா னென்க. கானவெருமையெனினும் அமையும். எருமை : சாதிப்பெயர்.

(9) வரிவளைக்கை வாளேந்தி...விளக்காகியேநிற்பாய்

(இ - ள்.) அரியும் அரனும் அயனுமாகிய இவர்களிதயகமலத்தே நிலைபெற நின்றுவிளங்கும் விரிந்த கதிர்களையுடைய விளக்காகிநிற்கின்ற நீ வளையணிந்த கையாலே வாளையேந்திப் பெரிய மயிடாசுரனைச் செற்றுக்கரிய முறுக்குண்ட கொம்பையுடைய கலையின்மீதே நிலை பெற்ருய்; ஆகையால் இஃது என்ன மாயமோவென்க.

(10) சங்கமுஞ் சக்கரமும்...மறையேத்தவேநிற்பாய்

(இ-ள்.) கங்கையைச் சடைமுடியின்மீதணிந்த இறைவனது இடப் பக்கத்திற்குரிய இறைவிகொண்டவுருவாய் மறைகள்போற்ற அவற்றிற் கும் தோன்ருமல் நிற்கின்ற நீ சங்குசக்கரங்களைக் கையிலேந்திச்சிவந்த

கண்ணையுடைய அரிமாறுகிய சினவிடையின்மீதே நின்றாய்; ஆகையால், இஃது என்ன மாயமோவென்க.

இவை மூன்றும் முன்னிலைப்பரவல்.

(11) ஆங்கு—(இ - ள்.) அவ்விடத்து,

கொன்றையுந் துளவமும்......கூத்துள் படுமே

(இ - ள்.) கொன்றைமலரையும் துளபத்தையும் கலந்துதொடுத்த மலர் செறிந்த மாலையை உத்தரீயமாகவிட்டு அசுரர் போரின்கண்ணே வாடும்படி அமரர் போரின்கண் ஆடிய கூத்து ஆடுதற்கு ஈண்டு உள்படுமென்க.

இது வென்றிக்கூத்து.

(12) ஆய்பொன்னரிச் சிலம்பும்...மலர்மாரி காட்டும் போலும்

(இ - ள்.) அழகிய பொன்னுற்செய்த அரிபொருந்திய சிலம்பும் சூடகமும் மேகலையும் ஆர்ப்ப ஆர்ப்ப வஞ்சித்துப் பொரும் போரை வல்ல வாளவுணர் போர் சாயும்படி நங்கை மரக்கால் மேனின்று வாட் கூத்தை ஆடா நிற்கும்; அங்ஙனமாடுமிடத்து வானேர் இவளுடைய காயாமலர்போலுமேனியை ஏத்துகையாற் பொழியும் மலர்மழையை அக் கூத்துக் காட்டாதிராதென்க.

இது கூத்துள்படுதல்.

(13) உட்குடைச் சீறூர்......காட்டும் போலும்

(இ - ள்.) மாற்றூர்க்கு உட்குதலைக் கொடுக்கும் சீறூரிடத்துத் தனக் கிணையில்லாத வீரன் நிரைகொள்ளத் தலைப்பட்டவிடத்து அவற்குப் போர்ப் பூவாகிய வெட்சிமலரைச் சூட்டுதற்கு வெள்ளிய வாளுழத்தியும் வேண்டும்; அங்ஙனம் அவளும் உடன்செல்லக் கருதியவழிப் பகைவரூர் சூழ்ந்த காட்டிடத்துள்ள காரியென்னும் புள் தனது கடிய குரலாலே அவர்க்கு வரும் கேட்டினை முன்னறிவித்து நிற்குமன்றேவென்க.

வாளுழத்தி - கொற்றவை. இது கொற்றவைநிலை. அஃதாவது "ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக், கூளி மலிபடைக் கொற் றவை - மீளி, அரண்முருங்க வாகோள் கருதி னடையார், முரண்முருங் கத் தான்முந் துறும்" (பு. வெ. 20) எனவரும். இது வெட்சி.

(14) கள்விலை யாட்டி......செல்லும் போலும்

(இ - ள்.) கள்விற்குமவள் இவன் பழங்கடன் கொடாமையிற் பின் கள் கொடாது மறுப்ப, அது பொறுத வீரன் அந்நிலையே வில்லைக்கையி லேந்திப் புள் நிமித்தமும் தன் கருத்திற்கேற்பச் சேரலிற் பகைவர் நிரை கொள்ளுதலைக் கருதிப் போகுதலைச் செய்யும்; அங்ஙனம் போங்கால் தான் கைக்கொண்ட ஆளிக் கொடியையுயர்த்துக் கொற்றவையும் வில்லின் முன்னே செல்லுமன்றே வென்க.

என்பது, "அருஅ நிலைச்சாடி யாடுறு தேறல், மருஅன் மழைத் தடங் கண்ணி - பொருஅன், கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை, நெடுங்கடைய நேரார் நிரை" (பு. வெ. 2) என வரும். இது

தன்னுறு தொழில். இதுவும் கொற்றவைநிலைப் பாற்படும்; என்னை? "மறங்கடைக் கூட்டிய துடிநிலை, சிறந்த, கொற்றவை நிலையு மத்திணைப் புறனே" (தொல். புறத். 4) என்பதனானென்க. இது வெட்சிப்புறநடை.

(15) இளமாவெயிற்றி......முன்றினிறைந்தன

(இ - ள்.) சீமத்தையுடைய இளைய வேட்டுவமகளே! முன்னாளில் நின் ஐயன்மார் கவர்ந்து கொணர்ந்த நல்ல ஆனிரைகள், [1]வேல்வடிக்கும் கொல்லனும் துடிகொட்டும் புலையனும் பாடவும் புணர்க்கவும் அடைக்கவும் வல்ல யாழ்ப்பாணரும் என்னுமிவரது முன்றிலின்கண் நிறைந்தன: நீ இவற்றைக் காண்பாயாகவென்க.

(16) முருந்தேரிள நகை......கணிமுன்றினிறைந்தன

(இ - ள்.) முருந்துபோலும் முற்றாத நகையையுடையாய்! நின் ஐயன்மார் முன்னாட் கரந்தையார் அலறும்படி கைக்கொண்டு வந்த இன நிரைகள், கள்விற்குமவளும் நல்ல வேய்த்தொழிலை ஆராயுமவனும் புள் நிமித்தம் கூறுமவனும் என்று சொல்லப்பட்ட இவர்கள் முன்றிலின்கண் நிறைந்தன; நீ இவற்றைக் காணுயென்க.

(17) கயமலருண் கண்ணாய்......முன்றி னிறைந்தன

(இ - ள்.) பெரிய மலர்போலும் கண்ணையுடையாய்! நின் ஐயன்மார் அயலவரூர் அலறும்படி தலைநாளிற் கைக்கொண்டு போந்த நல்ல ஆனிரைகள், நயமில்லாத மொழியையும் நரைத்து நீண்ட தாடியையுமுடைய எயினரும் அங்ஙனமூத்த எயிற்றியருமாகிய இவர்கள் முன்றிலின்கண் நிறைந்தன; இவற்றைக் காணுயென்க.

இவை மூன்றும் [2]கொடை யென்னும் துறை. கண்டார்கூற்று.

துறைப்பாட்டுமடை - துறைப்பாட்டுக்களை நடுவே மடுத்தல்.

(18) சுடரொடு திரிதரும்......விலையே

(இ - ள்.) கதிரவனுடைய வெம்மை உயிர்களை வருத்தாமல் அவனைத் தாங்கி அவனுடனே சுழன்று திரிதருதலைச் செய்யும் தெய்வ இருடிகளும் தேவர்களும் ஆகிய இவர்கள் இடர்கெடும்படி அருள் செய்யும் நினதடியிணையைத் தொழுதேம்; கொலையையும் வலியையுமுடைய எயினர் பெறும் வெற்றிக்கு விலையாக நின்னடியைத் தொட்டுச் சூளுற்ற கடனாகிய மிடற்றினின்றும் உமிழும் குருதியாகிய இதனைக் கொள்ளுவாயாகவென்க.

(19) அணிமுடி யமரர்தம்......அடுவிலையே

(இ - ள்.) அழகிய முடியையுடைய அமரர் தம்மரசனோடு வந்து பணிதலைச் செய்யும் நீலமணிபோலும் உருவினையுடையாய்! நின் மலரடியைத் தொழுதேம்; நிரைத்திரளைப்பெறும் விறலையுடைய எயினர்கள் பகைவ்ய யடுதற்குக் காரணமான விலையாக இடுங்கடனாகிய நிணத்தோடு கலந்து உகாநின்ற குருதிப் பலியாகிய இதனைக் கொள்ளுவாயாகவென்க.

---

1 "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" (புறநா. 312 : 3.)

2 கொடையென்னும் துறையாவது:—தாம்கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுத்து மனமகிழ்தல்.

(20) துடியொடு சிறுபறை......பலிமுக மடையே

(இ - ள்.) துடியுடனே சிறுபறையும் கொம்பும் வெடித்தலுண்டாக முழங்க அரையிருளில் எயினர் இருப்பிடத்தினின்று வருகின்றவர் கொல்லும் புலியனையவர் முன்னுளில் நின்னடியைத்தொட்டுச் சூளுற்ற கடனுகிய மிடற்றினின்றும் சொரிகின்ற குருதியாகிய பலியைக் கொள்ளுவாயாகவென்க.

இவைமூன்றும் அவிப்பலி; குருதிப்பலியென்பாரு முளர்; என்னை? "நச்சிலைவேற் காளைக்கு நாளையே கொற்றவை, கைச்சிலையு நல்கும்யாங் காணேங்கொல்—மிச்சில்கூர், வாளினவாய்த் தீண்டாத வார்குருதி மெய்சாய்ப்பத், தாளின்வாய் வீழ்த்தான் றலை" என வருமாதலின்.

(21) வம்பலர் பல்கி......பிறையுடன் சேர்த்துவாய்

(இ - ள்.) சங்கரி, அந்தரி, நீலி, சடையாகிய முடிமீதே பாம்பைப் பிறையோடே முடித்தோய்! வழிப்போவார் மிக்கு அவரை நலிந்துகொள்ளும் பொருளாகிய வளம் வழிதோறுமுண்டாவதாக; அதற்கு விலையாக இப்பலிக்கடனை உண்பாயாகவென்க.

(22) துண்ணென் றுடியொடு...இருந்தருள் செய்குவாய்

(இ - ள்.) தேவர்கள் அமுதத்தையுண்டும் சாவ ஒருவருமுண்ணுத நஞ்சையுண்டும் சாவாதிருந்தருள்கின்ற நீ கேட்டார் துட்கென்றிடத் துடிகொட்டுதலோடே பகைவர் துஞ்சுதலுற்றபொழுதில் ஊர்க்கொலை செய்யும் கண்ணோட்டமில்லாத மறவர் நினக்கிடும் கடனுகிய இதனை உண்பாயாகவென்க.

(23) பொருள்கொண்டு.........செய்குவாய்

(இ - ள்.) [1]நின்மாமன்செய்த வஞ்சமாகிய மருதின்மீதே நடந்து அதனைச்சாய்த்து உருளுதலையுடைய சகடத்தையும் உதைத்தலைச் செய்யும் நீ வழிப்போவார் பொருளைக்கொண்டு அவர்க்குப் புண்ணைக் கொடுப்பினல்லது அவர் மாட்டு அருளுதல் சிறிதுமில்லாத எயினரிடும் கடனுகிய இதனை உண்பாயாக வென்க.

இவைமூன்றும் பலிக்கொடை.

(24) மறைமுது முதல்வன்......விறல்வெய் யோனே

(இ - ள்.) முதியமறையையுண்டாக்கிய பிரமன்பின்னோனுகிய குறுமுனி பொருந்திய சந்தனம் அகில் முதலிய மரங்களாற் சுமைமிக்குயர்ந்த பொதியிற் பொருப்பனுகிய வெற்றியைவிரும்பும் பாண்டியன் பகைவருடைய முனையிடமும் அவர் மீட்குந்தொழிலும் பாழ்படும்படி வெட்சியைச் சூடுவானுகை வென்க.

[2] 'துறை' என முற்கூறியவதனால், கொற்றவைக்குப் பரவுக்கடம் பூண்டலும் கொள்ளப்படும்; என்னை? [3] "வந்த நிரையி னிருப்பு மணியுடன், எந்தலை நின்றலை யாந்தருது—முந்துநீ, மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக், கொற்றவை கொற்றங் கொடு."

இது, கூத்தாற்பெற்ற பெயர்.

இது, பஃறுழிசைக் கொச்சகக்கலிப்பா.

(கஉ) வேட்டுவவரி முற்றிற்று.

---

[1] சீவக. 984. [2] இதனை, 327-ஆம் பக்கத்திற்காண்க.

[3] பெரும்பொருள் விளக்கம்; இது புறத்திரட்டு, 1238.

பதின்மூன்றுவது

# புறஞ்சேரியிறுத்த காதை



பெண்ணணி கோலம் பெயர்ந்தபிற் பாடு
புண்ணிய முதல்வி திருந்தடி பொருந்திக்
கடுங்கதிர் வேனிலிக் காரிகை பொருஅள்
படிந்தில சீறடி பரல்வெங் கானத்துக்
கோள்வ லுளியமுங் †கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையு மான்கண மறலா
அரவுஞ் சூரு மிரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோற் ‡றென்னவர் காக்கு நாடென
எங்கணும் போகிய விசையோ பெரிதே
பகலொளி தன்னினும் பல்லுயி ரோம்பும்
நிலவொளி ¶விளக்கி னீளிடை மருங்கின்
இரவிடைக் கழிதற் கேத மில்லெனக்
குரவரு நேர்ந்த §கொள்கையி னமர்ந்து
கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப்
படுங்கதி ரமையம் பார்த்திருந் தோர்க்குப்
பன்மீன் றானையொடு பாற்கதிர் பரப்பித்
தென்னவன் குலமுதற் செல்வன் றோன்றித்
தாரகைக் கோவையுஞ் சந்தின் குழம்பும்
சீரிள வனமுலை சேரா தொழியவும்

---

5. உளியம் - கரடி. 12. நீளிடை - காடு.
14. குரவர் - கவுந்தியடிகள்.
16. படுங்கதிரமையம் பார்த்திருந்தாராக.
19. தாரகைக்கோவை - தாரகைபோலுங்கோவை ; என்றது ஏகாவலிவடம்.
20. வனமுலைசேராதொழிய - வண்ணமுலையைச் சேராதொழியவென்க.

---

அடி, 1. பிற்பாடு : மணி. 12 : 78. அடி, 6 - 8 : "உருமு முரருதரவுந் தப்பா, காட்டு மாவு முறுகண் செய்யா" (பெரும்பாண். 42 - 3). அடி, 8. உறுகண் : சிலப். 11 : 124. அடி, 16. பாலையை இரவிற் கடத்தல் : பெருங். 1. 52 : 80 - 81.

(பி - ம்.) † 'கொம்புற்' ‡ 'றென்னவன் காக்கு நாடென், றெங்கணும்' ¶ 'விளக்கு நீளிடை' § 'கொள்கை யிருந்துழி'

தாதுசேர் கழுநீர்த் தண்பூம் பிணையல்
போதுசேர் பூங்குழற் பொருந்தா தொழியவும்
பைந்தளி ராரமொடு பல்பூங் குறுமுறி
செந்தளிர் மேனி சேரா தொழியவும்
மலயத் தோங்கி மதுரையின் வளர்ந்து
புலவர் நாவிற் பொருந்திய தென்றலொடு
பானிலா வெண்கதிர் பாவைமேற் சொரிய
வேனிற் றிங்களும் †வேண்டுதி யென்றே
பார்மக ளயா ‡வுயிர்த் தடங்கிய பின்னர்
ஆரிடை யுழந்த மாதரை நோக்கிக்
கொடுவரி மறுகுங் குடிஞை கூப்பிடும்
இடிதரு முளியமு ¶மினையா தேகெனத்
தொடிவளைச் செங்கை தோளிற் §காட்டி
மறவுரை ‖நீத்த மாசறு கேள்வி

---

23. பைந்தளிர் : தளிர் முதலுக்கு அடை.

19-24. தாரகைக்கோவை முதலான மூன்றுபகுதியும்......[தன்மத்துடனே கொள்க]

(18) தோன்றிப் (27) பாவைமேற் சொரியவென்றார், கதைசொல்லுகிறவர்.

நிலாவைச் சொரிந்தவளவிலே இவளுக்குப் பிரியமாகப் பண்டை வேனிற்காலமும் வேண்டுதியேயென்று மாதரைநோக்கிக் கூறினாள்; அன்றியும் சந்தனத்தளிரோடே அல்லாத தளிரும் மேனியைச்சேரா தொழியவும்;......இது முதுவேனிற்காலம்.

இவை இவை பெறுதொழியவும் நிலவின் பசுங்கதிரும் தென்றலும் பாவைமேற்சொரியச் செல்வன் தோன்றப் பார்மகள் அயாவுயிர்த்து அடங்குகின்றாள் இவை இவ்வாறொழியவும் பானிலா வெண்கதிரைச் சொரிதற்கு வேனிற்றிங்களும் விரும்புவதாயிற்றன்றோவென்று அடங்கினாளென்பதும் கொள்க.

'தென்றலொடு' என்பது வேறுவினையொடு.

31. மறுகும் - திரியும். குடிஞை - கோட்டான்; பேராந்தை.

31-2. உளியமும் இடிக்கும். மறுகும், கூப்பிடும், இடிதரும் : முற்று.

33. செங்கை தோளிற்காட்டி - அவள் கையைத் தன்தோளிலே சேர்த்தி.

34-5. கேள்வியறவுரை - கேள்வியையுடையாரது அறவுரை.

---

அடி, 25-6 : சிலப். 13 : 130-31. அடி, 27. பால்நிலா : அகநா. 259 : 9; தக்க. 605. அடி, 29. அயாவுயிர்த்தடங்கல் : சீவக. 600, 1988. அடி, 34-5 : சிலப். 10 : 56-7.

(பி-ம்.) † 'வேண்டி யின்றே' ‡ 'வுயிர்ப்படங்கிய' ¶ 'மிளையா' § 'கொட்டி' ‖ 'தீர்த்த'

அறவுரை கேட்டாங் †காரிடை கழிந்து
‡வேனல்வீற் றிருந்த வேய்கரி கானத்துக்
கான வாரணங் கதிர்வர வியம்ப
வரிநவில் ¶கொள்கை மறைநூல் வழுக்கத்துப்
புரிநூன் மார்ப ருறைபதிச் சேர்ந்து
மாதவத் தாட்டியொடு காதலி தன்னையோர்
தீதுதீர் சிறப்பிற் சிறையகத் திருத்தி
இடுமுள் வேலி நீங்கி யாங்கோர்
நெடுநெறி மருங்கி னீர்தலைப் படுவோன்
காதலி தன்னொடு §கானகம் போந்ததற்
ஊதுலைக் குருகி னுயிர்த்தனன் கலங்கி
உட்புலம் புறுதலி னுருவந் ||திரியக்
கட்புல மயக்கத்துக் **கௌசிகன் றெரியான்
கோவலன் பிரியக் கொடுந்துய ரெய்திய
மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்
வருந்திறல் வேனிற் கலர்களைந் துடனே
வருந்தினை போலுநீ மாதவி யென்றோர்
பாசிலைக் குருகின் பந்தரிற் பொருந்திக்

---

37. கானவாரணம் - காட்டுக்கோழி. 38. வரி - பாட்டு.

38 - 9. மறைநூல் வழுக்கத்துப் புரிநூன்மார்பர் - அம்பணவர்; வழுக்கம் - தப்புதல்.

41. சேமமுள்ளதோரிடத்தில் இருத்தி.

42. இடுமுள்வேலி - சுற்றும் வேலியையுடைய இவர்கள் இருக்கிற இடம்.

43. நீர்தலைப்படுகை - சந்திபண்ணுகை.

47. கட்புலமயக்கத்து - கண்ணிற்பிரபையற்றதாதலால்; தன் அறிவு மயக்கத்தாலென்றுமாம். கவுசிகன் - கோசிககோத்திரத்தான்: பெயருமாம். இவன் மாதவிகடையாயினான் ஓரந்தணன்; தெரியான் - அவனோ அல்லனோ என்று அயிர்த்து.

51. குருகு - குருக்கத்தி.

49 - 52. கோடையால் பூத்த பூவெல்லாம் உதிர்ந்து பொலிவழிந்து நின்றதனைக்கண்டு மாதவியைப்போலப் பொலிவழிந்தனையென்று குருக்கத்தி நீழற்பொருந்தினான்; மாதவி - குருக்கத்தி.

---

அடி, 42. இடுமுள்வேலி : சிலப். 12 : 10, கு-ரை. அடி, 45 : சிலப். 22 : 152.

(பி - ம்.) † 'காளிடை' ‡ 'வேனில்' ¶ 'கொள்கையின் மறை' § 'கானம்' || 'திரியாக்' ** 'கோசிகன்'

கோசிக மாணி கூறக் †கேட்டே
யாதுநீ கூறிய வுரையீ ‡திங்கெனத்
தீதிலன் கண்டே னெனச் சென் றெய்திக்
கோசிக மாணி கொள்கையி னுரைப்போன்
இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியும்
அருமணி யிழந்த நாகம் போன்றதும்
இன் னுயி ரிழந்த யாக்கை யென்னத்
துன்னிய சுற்றந் துயர்க்கடல் வீழ்ந்ததும்
ஏவ லாளர் யாங்கணுஞ் ¶சென் று
கோவலற் றேடிக் கொணர்கெனப் பெயர்ந்ததும்
பெருமக னேவ லல்ல §தியாங்கணும்
அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த
அருந்திறல் பிரிந்த வயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்
வசந்த ‖மாலைவாய் மாதவி கேட்டுப்
பசந்த $மேனியள் படர்நோ யுற்று
நெடுநிலை மாடத் திடைநிலத் தாங்கோர்
படையமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்ததும்
வீழ்துய ருற்றோள் விழுமங் ††கேட்டுத்
தாழ்துய ரெய்தித் தான்சென் றிருந்ததும்
இருந்துய ருற்றோ ளிணையடி தொழுதேன்
வருந்துயர் ‡‡நீக்கென மலர்க்கையி னெழுதிக்

---

55. தீதிலன் கண்டேன் - கோவலனை இவன் கண்டேனென்று பொருந்தினன்; கண்டேனென்ற வார்த்தையால் அயிர்த்து.
57. (பா) பெருமனைக்கிழாள் - கோவலன் மாதா.
63. பெருமகன் - தயரதன்.
67. இவர்கள் பெயர்ந்தபடியை வசந்தமாலை சொல்லக்கேட்டு.
68. மேனியள் - மேனியையுடையளாய்.
71. துயருற்றோள் - மாதவி. 72. தான் - கோசிகன்.
73. இணையடி - கோசிகனது அடிகள்.

---

அடி, 57 - 60 : மணி. 7 : 131 - 3. அடி, 66. பெரும்பெயர் மூதூர் : பெருங். 2. 2 : 56. அடி, 67 - 8 : சிலப். 8 : 68-9. அடி, 68 : புறநா. 159 : 6. அடி, 70. படையமைசேக்கை : கலித். 10 : 10 : அகநா. 289 : 12 ; பெருங். 1. 43 : 187.

(பி - ம்.) † 'கேட்டேன்' ‡ 'தின்னெனத்' ¶ 'போகிக்' § 'தியாவதும்' ‖ 'மாலைமாதவி' $ 'மேனியொடு' †† 'கண்டு' ‡‡ 'தீர்க்கென'

கண்மணி யனையாற்குக் காட்டுக வென்றே
மண்ணுடை முடங்கன் மாதவி யீத்ததும்
†ஈத்த வோலைகொண் டிடைநெறித் திரிந்து
தீத்திறம் புரிந்தோன் சென்ற தேயமும்
வழிமருங் கிருந்து மாசற வுரைத்தாங்
கழிவுடை யுள்ளத் தாரஞ ராட்டி
போதவிழ் புரிகுழற் பூங்கொடி நங்கை
மாதவி யோலை ‡மலர்க்கையி னீட்ட
உடனுறை காலத் துரைத்தநெய் வாசம்
குறுநெறிக் கூந்தன் மண்பொறி யுணர்த்திக்
காட்டிய ¶தாதலிற் கைவிட லீயான்
ஏட்டகம் விரித்தாங் கெய்திய துணர்வோன்
அடிகண் முன்னர் யானடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி §மனக்கொளல் வேண்டும்
குரவர்பணி யன்றியுங் குலப்பிறப் பாட்டியோ
டிரவிடைக் ||கழிதற் கென்பிழைப் பறியாது
கையறு நெஞ்சங் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி
என்றவ ளெழுதிய விசைமொழி யுணர்ந்து
தன்றீ திலளெனத் தளர்ச்சி நீங்கி

---

76. மண்ணுடைமுடங்கல் - இலச்சினையையுடைய......

83. கூடினகாலத்துப் பூசின புழுகுநெய். இலச்சினையிடுவார்..... யாலிடுவதும் ஒருகுறி; நாற்றம் அறிவிக்குமாதலின்.

84. கூந்தல் மண்பொறி - கூந்தலாலிட்ட இலாஞ்சனை.

85. நாற்றம் அறிவித்ததாதலால் தான் விடுகலனாய்.

88. மனக்கொளல்வேண்டும் - திருவுளத்து அடைக்கவேண்டும்.

90-91. இரவிடைக்கழிதற்கு யான் செய்தகுற்றம் ஈதென்றறியாது நெஞ்சம் கையறுநின்றது; அதனைப் பொறுக்கவேண்டும்; இது மாதவி கருத்து. இனிப்பிதாவுக்கு, இரவிடைக்கழிதல் காரணமாக யான்செய்த குற்றம் பாராது கையுறுநெஞ்சம் கடியல்வேண்டுமென்க.

93. இசைமொழி - வாசகம்.

86 - 93. உணர்வோன் இசைமொழி யுணர்ந்தெனக்கூட்டுக.

---

அடி, 85. கைவிடலீயான் : மணி. 5 : 44.

அடி, 91-2 : இ-கொ. 91, உரை, மேற்.

(பி - ம்) † 'ஈய்த்த' ‡ 'மலர்க்கைநீட்ட' ¶ 'காதலிற்' § 'மனங்கொளல்' || 'கழிதற்கியான்'

என்றீ தென்றே யெய்திய துணர்ந்தாங்
†கெற்பயந் தோற்கிம் மண்ணுடை முடங்கல்
பொற்புடைத் தாகப் பொருளுரை பொருந்தியது
மாசில் குரவர் ‡மலரடி தொழுதேன்
கோசிக மாணி ¶காட்டெனக் கொடுத்து
நடுக்கங் களைந்தவர் நல்லகம் §பொருந்திய
இடுக்கண் களைதற் கீண்டெனப் போக்கி
மாசில் கற்பின் மனைவியொ டிருந்த
ஆசில் கொள்கை யறவிபா லணைந்தாங்
காடியல் ||கொள்கை யந்தரி கோலம்
$பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து
செந்திறம் புரிந்த செங்கோட் டியாழின்
தந்திரி கரத்தொடு திவவுறுத் ⁋தியாஅத்
தொற்றுறுப் புடைமையிற் பற்றுவழிச் சேர்த்தி
‡‡உழைமுதற் கைக்கிளை யிறுவாய்க் கட்டி
வரன்முறை வந்த மூவகைத் தானத்துப்
பாய்கலைப் பாவை பாடற் பாணி
ஆசான் றிறத்தி னமைவரக் கேட்டுப்
பாடற் பாணி யளைஇ யவரொடு
கூடற் காவதங் கூறுமி னீரெனக்
காழகிற் சாந்தங் கமழ்பூங் குங்கும

---

95. (பா) எய்தியதுரைத்தல் - தான்போந்தகாரணஞ்சொல்லுதல்.

100. நடுக்கங்களைந்து - நீ நடுங்குகிற நடுக்கத்தைவிட்டு. அவர் நல்லகம் பொருந்திய - மாதா பிதாக்கள் இதயம் பொருந்தின.

101. விதனம் களைதற்கு எழுவாயாகெனப் போக்கி.

104. அந்தரி - கொற்றவை. 105. பாடும்பாணர் - அம்பணவர்.

106. செங்கோட்டியாழ் - அம்பணவர்யாழ்.

108. ஒற்றுறுப்பு - நரம்பினும் பத்தரினும் தாக்குவதோர் கருவி.

112. ஆசான்றிறம் - காந்தாரம்; ஆசானென்று ஒரு பண்ணிற்குப் பேராகவும் இசைத்தமிழிற் கூறுப.

113. பாணி - பாட்டு. (பா) அளவி - கலந்து.

---

(பி - ம்.) † 'கெற்பயந்தார்க்கிம்' ‡ 'மாண்புடை யிணையடிக்' ¶ 'கொடுக்கெனக்' § 'பொருந்தியவ் விடுக்கண் களைதற் கீண்டுடன்' || 'கொள்கையின்' $ 'பாடு பாணரிற் பாங்குறப் பொருந்தி' ⁋ 'தியார்த்து' ‡‡ 'குரன்முதற்'

நாவிக் குழம்பு நலங்கொ டேய்வை
மான்மதச் சாந்த மணங்கமழ் தெய்வத்
தேமென் கொழுஞ்சே றாடி யாங்குத்
தாதுசேர் கழுநீர் சண்பகக் கோதையொடு
மாதவி மல்லிகை மனைவளர் முல்லைப்
போதுவிரி தொடையற் பூவணை பொருந்தி
அட்டிற் புகையு †மகலங் காடி
முட்டாக் கூவியர் மோதகப் புகையும்
மைந்தரு மகளிரு மாடத் தெடுத்த
அந்தீம் புகையு மாகுதிப் புகையும்
பல்வேறு பூம்புகை யளைஇ வெல்போர்
விளங்குபூண் மார்பிற் பாண்டியன் கோயிலின்
அளந்துணர் வறியா வாருயிர் பிணிக்கும்
கலவைக் கூட்டங் காண்வரத் தோன்றிப்
புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற்
பொதியிற் றென்றல் போலா ‡தீங்கு
மதுரைத் தென்றல் வந்தது காணீர்
நனிசேய்த் தன்றவன் றிருமலி மூதூர்
தனிநீர் கழியினுந் தகைக்குந ரில்லென
முன்னாண் முறைமையி னிருந்தவ முதல்வியொடு

---

116. தேய்வை - சந்தனக்குழம்பு. 117. மான்மதம் - கத்தூரி.

118. இவையாகிய தேமென் கொழுஞ்சேறென்க; வாசம் பொருந்திய மெல்லிய அழகிய குழம்பு கலந்து; ஆடி - கலந்து.

120-21. இவையாகிய போதுவிரிதொடையல்.

122-6. ஆகிய பல்வேறு பூம்புகையளைஇயென்க.

128. உணர்வறியா - உணர்வால் அறியா.

129. கலவைக்கூட்டம் - பரிமளக்கூட்டம்.

128-9. அளத்தற்கரிய கலவை வெளிப்படத்தோன்றி.

129-32. தோன்றி வந்ததென்க. 134. நில்லென்பாரில்லை.

135. முன்னாண் முறைமையின் - நிலவிலே வைகறைக் காலத்தே புறப்பட்டு.

---

அடி, 120. மனைவளர்முல்லை: சிலப். 4 : 27; நற். 115 : 6; குறுந். 19 : 3-4; பெருங். 1. 33 : 73. அடி, 124-5 : சீவக. 111. அடி, 134 : பெரும்பாண். 39-41.

(பி - ம்.) † 'மாறிலங்காடி' ‡ 'தீங்கோர்'

†பின்னையு மல்லிடைப் பெயர்ந்தனர் பெயர்ந்தாங்
கருந்தெறற் கடவு ளகன்பெருங் கோயிலும்
பெரும்பெயர் மன்னவன் பேரிசைக் கோயிலும்
பால்கெழு சிறப்பிற் பல்லியஞ் சிறந்த
காலை முரசக் கனைகுர ‡லோதையும்
நான்மறை யந்தணர் நவின்ற ¶வோதையும்
மாதவ ரோதி மலிந்த வோதையும்
மீளா வென்றி வேந்தன் சிறப்பொடு
வாளோ ரெடுத்த நாளணி முழவமும்
போரிற் கொண்ட பொருகரி முழக்கமும்
வாரிக் கொண்ட வயக்கரி முழக்கமும்
பணைநிலைப் புரவி யாலு மோதையும்
கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும்
கார்க்கட லொலியிற் கலிகெழு கூடல்
ஆர்ப்பொலி யெதிர்கொள வாரஞர் நீங்கிக்
குரவமும் வகுளமுங் கோங்கமும் வேங்கையும்
மரவமு நாகமுந் திலகமு மருதமும்
சேடலுஞ் செருந்தியுஞ் செண்பக வோங்கலும்
பாடலந் தன்னொடு பன்மலர் விரிந்து

---

137. (பா) அருந்திறற் கடவுள் - ஆலவாயான் முதலிய தெய்வங்கள்.

140. காலைமுரசம் - பள்ளியெழுச்சி முரசு.

141. முனிவர் [1]சத்திரமோதுகிற வோசை.

142.........இருடிகளுடைய சிறுகாலை அனுட்டான வோசை.

143-4. வேந்தன் சிறப்புடையராய் வாளோரெடுத்த முழவு; வாளோர் - வீரர்; வீரர்க்கு அரசன் வரிசையாகக் கொடுத்த முழவு.

147. பணை - பந்தி. 148. பொருநர் - வைகறை பாடுவார்.

140-50. ஆகிய ஆர்ப்பொலி.

152. திலகம் - மஞ்சாடிமரம்.

151-4. மரவ முதலியன கோட்டுப்பூ.

---

அடி, 140. காலை முரசம் : மதுரைக். 232. பு. வெ. 117.

அடி, 141 : "நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப" (பரி. திரட்டு, 7.) அடி, 145-7 : புறநா. 178 : 1-2.

அடி, 148 : பு. வெ. 205.

[1] சத்திரம் - யசுர்வேதசாகையில் அருணத்தில் ஐந்தாம் பிரிவு, 108.

(பி - ம்.) † 'பின்னரு' ‡ 'லோசையும்' ¶ 'வோசையொடு'

குருகுந் தளவமுங் கொழுங்கொடி முசுண்டையும்
விரிமல ரதிரலும் வெண்கூ தாளமும்
குடசமும் வெதிரமுங் கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமு மயிலையும் பிணங்கரின் மணந்த
கொடுங்கரை மேகலைக் கோவை யாங்கணும்
மிடைந்துசூழ் போகிய வகன்றேந் தல்குல்
வாலுகங் குவைஇய மலர்ப்பூந் துருத்திப்
பால்புடைக் கொண்டு பன்மல ரோங்கி
எதிரெதிர் விளங்கிய கதிரிள வனமுலை
கரைநின் றுதிர்த்த கவிரிதழ்ச் செவ்வாய்
† அருவி முல்லை யணிநகை யாட்டி
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கய னெடுங்கண்
விரைமலர் நீங்கா வவிரறற் கூந்தல்
‡ உலகுபுரந் தூட்டு முயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி

---

156. அதிரல் - காட்டு மல்லிகை. கூதாளம் - கூதாளி, தாளி, நறுந்தாளி.

157. குடசம் - வெட்பாலை. 158. மயிலை - கொடிமல்லிகை.

(154) பன்மலர் விரிந்து (159) கோவையாங்கணும் (160) சூழ் போகிய அகன்றேந்திய (159) கொடுங்கரையாகிய (160) அல்குல்.

151-60. வேனிற்பூ அன்றியும், இப்பிணங்கரின் மணந்த மேகலைக் கோவை சூழ்போகிய கரையாகிய அல்குல்.

161-3. துருத்தியாகிய முலை; பால்புடைக்கொண்டு பன்மல ரோங்கி எதிரெதிர்விலங்கிய வாலுகம் குவைஇய மலர்ப்பூந்துருத்தியாகிய கதிரிளமுலை. பக்கம்புடைக்கொண்டு மலரோங்கி ஒன்றையொன்று நெருங்குகின்ற துருத்தி.

பால்புடை கொள்ளுகையும் பன்மலரோங்குகையும் ஒன்றையொன்று நெருங்குகையும் முலைக்குமொக்கும்; பால்புடைக்கொண்டு பன்மலரோங்கி எதிரெதிர் (பா) விலங்கியவென்பதனை இரண்டிற்குமேற்க உரைக்க. பால்புடைக் கோடல் - சுற்றுப்புடை கொள்ளுதல்.

162. பன்மரமோங்கியெனவும் பாடம்.

164. கவிர் - முருக்கு; மதிலுக்குப் புறமாதலால்.

157-73. கொடுங்கரையாகிய அல்குலையும் துருத்தியாகிய முலையினையும் கவிராகிய வாயையும் முல்லையாகிய நகையையும் கயலாகிய

---

அடி, 157 : மணி. 3 : 164. அடி, 169-70 : கலித். 67 : 2-3.
(பி - ம்.) † 'அரும்பவிழ் முல்லை' ‡ 'உலகுபுரிந்'

வையை †யென்ற பொய்யாக் குலக்கொடி
தையற் குறுவது தானறிந் தனள்போல்
புண்ணிய நறுமல ராடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தன ளடக்கிப்
‡புனல்யா றன்றிது பூம்புனல் யாறென
அனநடை மாதரு மையனுந் தொழுது
பரிமுக வம்பியுங் கரிமுக வம்பியும்
அரிமுக வம்பியு மருந்துறை யியக்கும்
பெருந்துறை மருங்கிற் ¶பெயரா தாங்கண்
மாதவத் தாட்டியொடு மரப்புணை போகித்
தேமலர் நறும்பொழிற் றென்கரை யெய்தி
வானவ ருறையு மதுரை வலங்கொளத்
தானனி பெரிதுந் தகவுடைத் §தென்றாங்
கருமிளை யுடுத்த வகழிசூழ் போகிக்
கருநெடுங் குவளையு மாம்பலுங் கமலமும்
தையலுங் கணவனுந் தனித்துறு துயரம்
ஐய ||மின்றி யறிந்தன போலப்
பண்ணீர் வண்டு $பரிந்தினைந் தேங்கிக்
கண்ணீர் கொண்டு காலுற நடுங்கப்
போருழந் தெடுத்த வாரெயி னெடுங்கொடி

---

கண்ணையும் அறலாகிய கூந்தலையுமுடைய வையையென்னும் மகள் மலராகிய ஆடையை முட்டாக்கிட்டு.

173. கண்ணிறைநெடுநீரடக்கி-கண்ணிடத்து நிறைந்தநெடுநீரை யடக்கி; இடம்நிறைந்த மிக்கநீரையடக்கி; கண்ணீரென்றுந்தெரிவது.

174. இது நீராறன்று பூவாறு. 177. அரிமுகவம்பி - சிங்கமுக வோடம்.

177-8. இயக்குந்துறை - நீருள்ளகாலத்து ஓடம்விடும் துறை.

179. மரப்புணை - கட்டுப்புணையில்; ஓடத்திற் பலரும் ஏறுவாராத லால் தாங்கள் மூவரும் தனியே மரப்புணையிலே போனார்களெனக் கொள்க.

188. கள்நீர்கொண்டு - கள்ளாகிய நீரைக்கொண்டு.

---

அடி, 170. குலக்கொடி : மணி. பதிகம், 23. அடி, 176-7. ஓடவகை கள் : பெருங். 2. 11 : 30-33. அடி, 183. அருமிளை : சீவக. 1142.

(பி-ம்.) † 'யென்னும்' ‡ 'புனலா றன்றிது பூம்புன லாறென' ¶ 'பேரா' § 'தென்றே, யருமிளை' || 'மன்றி' $ 'பரிந்துநைந்'

†வாரலென் பனபோன் மறித்துக்கை காட்டப்
புள்ளணி கழனியும் பொழிலும் பொருந்தி
வெள்ள நீர்ப் பண்ணையும் விரிநீ ரேரியும்
காய்க்குலைத் தெங்கும் வாழையுங் கமுகும்
வேய்த்திரட் ‡பந்தரும் விளங்கிய விருக்கை
அறம்புரி ¶மாந்த ரன்றிச் சேராப்
புறஞ்சிறை மூதூர் புக்கனர் புரிந்தென்.

---

189-90. ஆரெயில் நெடுங்கொடி மேல்காற்றடிக்க அசைகின்றவை, வாராதேயென்பனபோல் மறித்துக் கைகாட்ட; கோவலனை இங்குவாராதே போவென்று கைகாட்டினாற் போன்றன.

(182) தகவுடைத்தென்று (183) சூழ்ந்த அகழைப்போகிப் (196) புக்காரென்க.

196. புறஞ்சிறை-புறஞ்சேரி. புறஞ்சிறைமூதூர்-புறத்துமூதூர்.

அவ்விடத்தில் இருடிகள் யோகமிருக்கும் பொழில்முதலியவற்றால் விளங்கிய இருக்கையிலே சென்றுபுக்கனர்.

---

அடி, 195-6 : சிலப். 15 : 7-8, 115-6.

(பி-ம்.) †'வாரலென் பதுபோன் மறிந்துகை காட்டிப்' ‡'பந்தமும்' ¶'மாதவ ரன்றிக்'

1. பெண்ணணி கோலம் பெயர்ந்தபிற் பாடு

(இ-ள்.) முற்கூறிய சாலினியாகிய பெண் அணிந்தகோலமும் கூத்தும் முடிந்தபின்னுகவென்க.

பிற்பாடு: ஒருசொல். கோலமெனவே கூத்தும் அடங்கிற்று.

2. புண்ணிய முதல்வி திருந்தடி பொருந்தி

(இ-ள்.) தவத்திற்கு முதல்வியாகிய கவுந்தியடிகளுடைய திருந்திய அடியைச்சென்று சேர்ந்தென்க.

3-4. கடுங்கதிர் வேனில்......கானத்து

(இ-ள்.) இவ்வழகு நீர்மையையுடையாள் இந்தக் கடிய கதிரின் வெம்மையைத் தன் மெய்யிற்படப்பொருள்; அதுவுமன்றி இவள் சிற்றடியும் வெய்ய பருக்கையையுடைய இப்பாலைநெறியிற் படிந்திலவென்க.

உள்ளடி கொப்புளித்தலிற் குஞ்சித்து நடந்தமை கூறினுன்.

5-6. கோள்வ லுளியமும்......மான்கண மறலா

(இ-ள்.) நேரிட்டாரைக் கைக்கொள்ளுதற்கு வலிய கரடியும் தாம் அகழக்கடவ புற்றினை அகழா; ஒளிபொருந்திய வரியையுடைய புலியும் தாம் மாறுபடக்கடவ மானினத்தோடு மாறுபடாவென்க

பாம்புறைதலிற் கொடும்புற்றென்ருர்.

7-10. அரவுஞ் சூரும்......இசையோ பெரிதே

(இ-ள்.) முற்கூறியவையன்றி, இரைதேரும் முதலையும் பாம்பும் சூரும் உருமும் ஆகிய இவை தம்மைநலிந்தவர்க்கு வருத்தஞ் செய்யத் தகுவனவாயினும் செய்யா; செங்கோன்மையையுடைய தென்னர் ஆணையாற்காக்கு நாடென்று திசையெங்கும் பரந்த இசை மிகப் பெரிது; ஆகலானென்க.

இவற்ருன், இவனுணையும் ஐவகைநிலத்திற்கு உரிமையும் கூறினுர். ஐவகை நிலனென்பது எவற்ருற்பெறுதுமெனின்,—கானமென்பதனுல் முல்லையும், சூர் கரடியென்பவற்ருற் குறிஞ்சியும், வேங்கையென்பதனுற் பாலையும், உருமுவென்பதனுல் மருதமும், முதலையென்பதனுல் நெய்தலும் பெறுதும். இவ்வகையான் இவனுட்டு இக்காலத்துவருத்துவது இவ்வெயிலொன்றுமே யென்பதாயிற்று.

11-4. பகலொளி தன்னினும்............கொள்கையி னமர்ந்து

(இ-ள்.) அங்ஙனம் வருத்தும் பகற்கதிர்விளக்கத்தினும் பல்லுயிர்க்கும் அருள்செய்யும் இராக்கதிர்விளக்கத்தோடே நெடிய வழியிடையைக் கழிதற்கு வரும் ஏதப்பாடு ஒன்றுமில்லையென்று கோவலன் சொல்லக் கவுந்தியடிகளும் ஒக்குமென்று உடன்பட்ட கோட்பாட்டோடே மேவியென்க.

15-6. கொடுங்கோல் வேந்தன்...........பார்த்திருந் தோர்க்கு

(இ-ள்.) கொடுங்கோன்மையையுடைய வேந்தன்குடிகள் அவன் போம் காலத்தையும் தண்ணளிவேந்தன் வருங்காலத்தையும் நோக்கியிருக்குமாறுபோல வெங்கதிர் படும் அமயத்தையும் தண்கதிர் எழும் அமயத்தையும் பார்த்திருந்த இவர்கட்கென்க.

## 17 - 8. பன்மீன் ருழையொடு...செல்வன்றேன்றி

(இ - ள்.) [1] அத்தென்னவன் குலத்திற்கு முதல்வனுகிய திங்கட் செல்வன் பலவகைப்பட்ட மீன்ருளையுடனே தண்ணளிப்பகுதியவாகிய கதிர்களைப் பரப்பித் தோன்றவென்க.

தோன்றி - தோன்ற. மீன்ருளை - கயற்கொடித்தாளையுமாம்.

## 19 - 29. தாரகைக் கோவையும்...அடங்கியபின்னர்

வேண்டுதி - முன்னிலைவினை.

(இ - ள்.) பார்மகள், பாவாய், முன்னுள் நின்கொழுநன் நின்னைப் பிரிந்த இளவேனிற்காலத்தில், வான்மீனெழுங்குபோன்ற முத்துவடமும் சந்தனக்குழம்பும் சீர்மைபொருந்திய அழகிய இளைய முலைகளைச் சேரப் பெருவாய் ஒழியவும், பலவகைப்பூந்தாதும் கழுநீர்ப்பிணையலும் முல்லை மலர்பற்றருத பூங்குழலிற் பொருந்தாவாயொழியவும், அழகிய சந்தனத் தளிரோடே பலபூக்களின் இதழும் சிவந்த தளிர்போலும் மேனியைச் சேரப் பெருவாயொழியவும், மலயத்தே முளைத்து மதுரையிலே வளர்ந்து புலவர் நாவிலேபூத்து நிலைபெற்ற தென்றலோடே வெள்ளிய ஒளியையுடைய திங்களின்கதிர் நின்மெய்யிற் சொரிதலொழியவும் வேண்டி இப்பொழுது வேனிற்றிங்கள் இவ்வெண்கதிரை நின்மெய்யிற் சொரியவும் விரும்பியிருப்பையே; இராயெனச்சொல்லி வருந்தி நெட்டுயிர்ப்புக்கொண்டு அவள் துயின்றபின் என்க.

ஏகாரம் : எதிர்மறை. சிலசொற்கள் வருவிக்க. இத்துணையும் இவள் புணர்ச்சியின்பம் பெருமைநோக்கிப் பார்மகள் இரங்கிக்கூறினுள். என்னை புணர்ச்சியில்லாதவாறெனின்,—மாதவியோடு புலந்துபோதுதலானும், மதுரைக்குச்சேறற்கு ஒருப்பட்ட நெஞ்சினனுதலானும், மேற் கவுந்தியடிகளுடன் வழிச்சேறலானும் யாண்டும் மெய்யுறன்மாத்திரமல்லது புணர்ச்சியில்லென வுணர்க.

## 30 - 32. ஆரிடை யுழந்த...இனையா தேகென

(இ - ள்.) கோவலன் அரியவழியிடைத் துயருழந்த கண்ணகியை நோக்கி, இவ்விரவில் நாம்செல்கின்றநெறியிடைப் புலி மறுகும்: பேராந்தை குழறும்; கரடி இடிக்கும்; இவற்றிற்குத் துணுக்கென்னுது ஏகுவாயாக வென்றென்க.

மறுகும் - வாய்விடும்; குறுக்கிடுமெனினுமமையும். இடிப்பு - அதிர்ப்பு; உற் டட்ட டட்டெனப் பற்பறைகொட்டல்.

## 33 - 5. தொடிவளை...ஆரிடை கழிந்து

(இ - ள்.) அங்ஙனம் கூறிய கோவலன் இவட்குக் கண்துயில் மயங்குதலானும் குஞ்சித்துத் தளர்ந்து நடத்தலானும் வளைவையுடைய வளைபொருந்திய செங்கைக்குத் தன்தோள் ஆதாரமாதலை அங்ஙனங் கூறிக்காட்டி இவள் மனத்துயரம் நீங்குதற்பொருட்டு [2] மறவுரைகளினின்று நீங்கிய மாசற்ற கேள்வியையுடையாள் கூறும் அறவுரைகளைக் கேட்டு அதனுனே தொலைத்தற்கரிய வழியைத் தொலைத்தென்க.

---

[1] சிலப். 4 : 22. [2] அறநெறி. 194.

தொடி - வளைவு; "தொடிக்கட் பூவை" (சீவக. 932) என்றாராக லின். 'கேள்வி' என்றார், அதனையுடைய கவுந்தியடிகளை; ஆகுபெயர்.

36 - 7. வேனல்வீற் றிருந்த......கதிர்வர வியம்ப

(இ - ள்.) வேனல் நிலைபெறுதலாலே வெந்து கரிந்துகிடக்கின்ற மூங்கிற்காட்டிலே காட்டுக்கோழிச் சேவல்கள் கதிரெழுச்சியை அறிவிக்க வென்க.

ஆனித்திங்கட் கடைநாளாகலின், 'வீற்றிருந்த' என்றார்.

38 - 9. வரிநவில்......பதிச் சேர்ந்து

(இ - ள்.) நாவால் மறைநூல் நவிலாது வரிப்பாட்டை நவிலும் கோட்பாட்டையுடைய நூலணிமார்பர் உறைவதோர் பதியைச் சேர்ந் தென்க.

புக்கென்னாது சேர்ந்தென்றதனால், [1] அந்தப்பார்ப்பார் இழுக்கிய ஒழுக்கமுடைமை தமது சாவகநோன்புக்கேலாமையின், ஊர்க்கு அயல தோர் நகரிற் கோயிற்பக்கத்தில் சேர்ந்தாரென்க.

40-43. மாதவத் தாட்டியொடு...நீர்தலைப் படுவோன்

(இ - ள்.) அந்தப் புலரிக்காலத்தே கவுந்தியடிகளுடனே கண்ணகி யையும் ஓர் ஒதுக்கமாகிய நல்ல அடைப்பகத்தே வைத்து அவ்வேலியில் இடுமுள்ளொன்றைப்பிரித்து அதனை நீங்கிக் காலைக்கடன் கழித்தற்கு நீணெறிக் கண்ணதோர் நீர்நிலைக்கண் தலைப்படுகின்றவனென்க.

நெடுநெறி - பெருவழி.

44 - 7. காதலி தன்னொடு......கௌசிகன் றெரியான்

(இ - ள்.) அங்ஙனம் சென்று நின்றகோவலன், தன்காதலியோடு கானகத்தின்கட்போந்ததற்கு உலையில் ஊதுந்துருத்திபோல நெட்டு யிர்த்து உள்வெதும்பிக் கலங்கித் தனிமையுற்று நிறம்வேறுபடுதலாற் கௌசிகன் கட்புல மயக்கத்தான் அறியானாயென்க.

உலைக்குருகு, வெளிப்படை.

48 - 53. கோவலன் பிரிய......கூறக் கேட்டே

(இ - ள்.) அங்ஙனம் அவன் நிறம்வேறுபடுதலானும் தான் சேய்மைக்கண் நிற்றலானும் ஐயுற்று அவ்வையந்தீர்வான் கோவலன் பிரிவிற்காற்றாது காமத்தீயால் துயரமுற்று அலரைப்பொறாது அப் பொழுதே வருந்திநின்ற மாதவியைப் போன்று நீயும் இளவேனில் நீங்க அப்பொழுதே அதற்காற்றாது பொறுத்தற்கரிய வெம்மையையுடைய முதுவேனிற்காலத்து வெயிலால் துயரமுற்று அலரைப்பொறாது கனைந்து அக்காலவணிமையோடே வருந்தினாய்; மாதவியென்னும் பெயர் வாசிக்கோவென்று ஓர்பசிய இலையையுடைய குருக்கத்தி படர்ந்த நிழலை யுடைய இடத்திலே சென்றுநின்று அக்கோசிகனென்கிற மறையவன் கூறக்கேட்டென்க.

கோசிகன் - ‡ பந்திகோசிகன். 'பாசிலை' என்றார், இளவேனிற்கட் செந்தளிராயது முதுவேனிற்கு முற்றிப் பாசிலையாயிற்றென்பது தோன்ற.

54 - 5. யாதுநீ கூறிய வுரை......சென்றெய்தி

---

[1] குறள், 133. (பி - ம்.) ‡ 'பந்தகௌசிகன்'

(இ - ள்.) இங்ஙனம் கோசிகன் கூறக்கேட்ட கோவலன் நீ இங்குக் கூறிய இக்கூற்றிற்குப் பொருள்யாதென அசதியாட, இனி ஐயமுடையே னல்லேன், கோவலனெனவறிந்தேனென உட்கொண்டு சென்று சேர்ந் தென்க.

56. கோசிக மாணி கொள்கையி னுரைப்போன்

(இ - ள்.) கோசிகன் தான்வந்த கருமக்கோட்பாட்டினைக் கூறு கின்றவன்,

57 - 8. இருநிதிக் கிழவனும்......நாகம் போன்றதும்

(இ - ள்.) இருநிதிக்கிழவனும் அவன் மனைக்கிழத்தியும் அரிய மணியை இழந்த நாகம்போல அழகும் ஒளியுமிழந்து ஒடுங்கியதும்,

59 - 60. இன்னுயிரிழந்த......வீழ்ந்ததும்

(இ - ள்.) நெருங்கிய கிளைஞர் இனியவுயிரையிழந்த யாக்கை போலச் செயல்மாண்டு துயர்க்கடலிலேயழுந்துகின்றதும்,

இனி யாக்கையிழந்த இன்னுயிரென மாறி வீடுபெறற்குரியவுயிர் இளமைக்காலத்தே யாக்கையையிழத்தலில் தவஞ்செய்யப்பெறாது பிற விக் கடலகத்து அழுந்துமாறுபோல வெனவுமாம்.

61 - 2. ஏவ லாளர்......பெயர்ந்ததும்

(இ - ள்.) இருநிதிக்கிழவன் தன் சிலதரை நோக்கி எத்திசைக் கண்ணும் சென்று கோவலனைத் தேடிக் கொண்டுவருகவென்றானாக அவர் எத்திசைகளிலுஞ்சென்றதும்,

'போந்ததும்' பாடமாயின், இத்திசையினும் சிலர் போந்ததுவு மென்க.

63 - 6. பெருமக னேவல்......பெரும்பே துற்றதும்

(இ - ள்.) எத்துணைச் சிறு தொழிலாயினும் பெருமகன் ஏவிய பணி விடையைச் செய்தலே அரியபொருளாதலல்லது பணிவிடையன்றாயின் அரசாட்சி என்றும் எண்மைப் பொருட்டாமென்று கருதி அடைதற்கரிய வெங்கானிலே சென்றடைந்த இராமன் நீங்கப்பட்ட அயோத்தியின் கணுள்ளார் செயலற்று மயங்கினாற்போலப் பெரிய புகழையுடைய புகா ரின்கண் உள்ளார் யாவரும் மிகவும் அறிவுமயங்கிய செய்தியும்,

பெருமகன் - தயரதன். தஞ்சம் - எண்மை. அருந்திறல் - இராமன்; அன்மொழித்தொகையாகுபெயர். பேதுறவு - அறிவின் திரிவு.

67 - 70. வசந்த மாலைவாய்...பள்ளியுள் வீழ்ந்ததும்

(இ - ள்.) திருமுகத்தை மறுத்துக்கூறிய மாற்றத்தை வசந்தமாலை வாய்க் கேட்டுப் பசந்த மேனியளாய் நினைவாகிய வருத்தமுற்றுஉயர்ந்த எழு நிலத்தையுடைய மாடத்து நாலாநிலத்து ஓர் படுக்கை யமைந்த சேக்கையிடத்தே மாதவி மயங்கி வீழ்ந்த செய்தியும்,

ஆங்கு : அசை. பள்ளி - இடம்..

71 - 2. வீழ்துய ருற்றோள்......இருந்ததும்

(இ - ள்.) அங்ஙனம் விரகநோயுற்றவள் இடும்பையைக் கேட்டுச் செருக்கடங்கித் தாழ்ந்த துயரமெய்தித் தான் சென்றிருந்த செய்தியும்,

வீழ்துயர் - விருப்பத்தான் வரும் துயர்.

## 73 - 6. இருந்துய ருற்றேருள்......மாதவி யீத்ததும்

(இ - ள்.) அங்ஙனம் மிக்க துயரமுற்ற மாதவி, நின் இணையடியைத் தொழுதேன்; எனக்கு இங்ஙனம் வருந்துயரைத் தீர்ப்பாயாகெனச் சொல்லித் தன் கையாலெழுதி இவ்வோலையை என் கண்ணிற் கருமணி போல்வானுக்குக் காட்டுவாயாகவென்று தன் கையில் தந்த செய்தியும்,

இது தன்மைக்கண் தரலாய் வந்தது.

## 77 - 8. ஈத்த வோலைகொண்டு......சென்ற தேயமும்

(இ - ள்.) அங்ஙனம் தந்த ஓலையைக்கொண்டு இடைநெறியெங்கும் திரிந்து தேடியுங்காணுமல் தான் சென்ற தேயங்களும்,

## 79 - 82. வழிமருங் கிருந்து......மலர்க்கையி னீட்ட

(இ - ள்.) முற்கூறிய நெடுநெறியாகிய வழிப்பக்கத்தே யிருந்து செய்திகளெல்லாம் ஒழிவற வுரைத்தபின்பாக அழிதலைத் தருகின்ற உள்ளத்தையும் நிறைந்த காமநோயையும் உடையாளாகிய போது அவிழப்பட்ட புரிந்த குழலையுடைய மாதவி தந்த வோலையைக் கோவலன் கையிலே கொடுத்தாருக;

போதவிழ் : குழலுக்கு அடை.

## 83 - 6. உடனுறை காலத்து......உணர்வோன்

(இ - ள்.) அங்ஙனம் கொடுத்த ஓலை மடிப்புறத்துமண்மேல் மாதவி குறுநெறிக் கூந்தலாலொற்றிய பொறி தன்னுடனே கூடியுறைகின்ற காலத்தே வாசநெய்யுரைத்த தன்மையைத் தனக்கு உணர்த்திக் காட்டியதாதலான் அதனைக் கையாற் கடிதின் விடுவியாருய்ப் பின்னர் விடுவித்து ஏட்டை விரித்து அதனுட் கிடந்த வாசகத்தின் பொருண்மை யுணர்கின்றவனென்க.

குறுநெறி - செறிந்த அறல். வாசனையின் செவ்வியின்மையைப் பொறிகாட்டிற்றெனவுமாம். கூந்தற்பொறியென்க. உரைத்தல் - பூசுதல். கைவிடலீயான் - மெய்ம்மறந்தும் ஓலைத்தலையை நெகிழவிட்டில னென்றுமாம்.

எழுதியதூஉம், பாடம்.

## 87. அடிகண் முன்னர் யானடி வீழ்ந்தேன்

அடித்தலத்தில் வீழ்தல் - வணக்கம்.

(இ - ள்.) தேவரீர் திருவடிகளைத் திக்குநோக்கித் தண்டம் பண்ணினேன்; இதனைத் திருவுளத்திலே கண்டருள்க;

கண்டருள்கவென இவ்விடத்து ஒரு சொல் வருவிக்க. இஃது ஓலைமுகப் பாசுரம். இனி அக்காரிகை பாசுரம்.

## 88 - 92. வடியாக் கிளவி......புரையோய் போற்றி

(இ - ள்.) வடிமொழியுணர்ந்து குற்றந்தீர்ந்த நற்காட்சியையுடைய உயர்ந்தோனே! இருமுது குரவர் பணிவிடை யொழிந்ததன்மேலும்

குலத்திற் பிறந்து கற்பையாளுதல் உடையவளுடனே இரவின்கண் நகரிடையைக் கழிந்துபோதற்குவந்த பிழைப்பு என்னை? அஃது அறியாது என்பிழைப்போ என்று அவலித்து அரற்றிக் கவலித்துக் கையாற்றின்கண் நெஞ்சமுங்கா நின்றது; என் பிழைப்பெனினும் மகளிர்சொல் குற்றமருத சொல்லென்று திருவுளம் பற்றல் வேண்டும்; இதுவேயுமன்றி எனக்கு இப்பொழுது நடக்கின்ற இச்செயலறவு நன்றன்று; அதனைக் கடியல்வேண்டும்; ஆதலால் இவ்வாற்ருன் நினக்கு ஓர் புகழ்க்குறைபாடின்றுகப் போற்றுவாயாக.

முன்னர், "கங்கை தன்னைப் புணர்ந்தாலும்" (7 : 2) எனவும், "மங்கைமாதர் பெருங்கற்பு" (7 : 2) எனவும் ஆண்டுக் கூறினமையின், ஈண்டுக் குலப்பிறப்பாட்டியெனத் தோற்றுவாய் செய்து தன் பிழைப் பின்மை கூறினுள். இதுவன்றியும், இருவர் இருமுதுகுரவரும் ஏவ லாளர் மேவல கூறின் இறந்துபடுவரென்பதூஉம், தேசுடைக் குலத் திற்கு மாசுவருமென்பதூஉம், தானிறந்துபடிற் சிறிது புகழே குறை படுமென்பதூஉம் உணர்த்தியவாருயிற்று.

## 93 - 5. என்றவ ளெழுதிய......என்றீ தென்றே

(இ - ள்.) இவ்வாறு பலவகை ஏதம் பயக்குமென்று அவளெழுதிய ஓலைப்பாசுரத்திற் பொருளெல்லா முணர்ந்து மனங்குழைந்து அவள் தன்ருற் செய்யப்பட்ட தீதிலள்; இஃது என்ருற் செய்யப்பட்ட தீதே யெனத் தெளிந்து தளர்ச்சி நீங்கியென்க.

என்தீது - என் தீவினை.

## 95 - 7. எய்திய துணர்ந்தாங்கு......பொருந்தியது

(இ - ள்.) அவ்வோலையிற் பொருந்திய வாசகத்தை யுணர்ந்து இவ் வோலைதானே என் தந்தைக்கும் பொலிவுடைத்தாம்படி வாசகங்களும் பொருளும் பொருந்திற்று.

அஃது எங்ஙனம் பொருந்திற்றெனின், அடி வீழ்ந்தேனென்னுந் துணையும் முற்கூறியவாறே கொள்க. "வடியா..............போற்றி" (88-92) குரவர் பணிவிடைகளைத் தவிர்ந்ததொரு தவறன்றியும் குலத் திற் பிறந்தாளோடு இரவிடைக் கழிந்த தவறு ஒன்று; இவையிரண்டிற் கும் வரக்கடவ துன்பங் காரணமாகத் திருவுளத்தில் தளர்ச்சி சிறிதுண் டாயினும் அதனைக் கடிந்தருளுக; இங்ஙனம் என் பிழைப்பறியாது யான் முதுக்குறைவாகச் சொல்லிய இவற்றை ஏருவிண்ணப்பமாகத் திருவுளம் பற்றுதொழிக; பேதைமைச் சொல்லென்றே திருவுளம் பற்றல் வேண்டும்; போற்றியென்றுனென்க.

[1] குரவர்க்குக் காப்புக்களைக் குறித்துப் போற்றியென்றல் மரபு. ஈண்டு இவ்வோலை குரவர்க்குப் பொருந்தியவாறுணர்க.

## 98 - 101. மாசில் குரவர்......ஈண்டெனப் போக்கி

(இ - ள்.) அங்ஙனம் பொருந்தியதென உட்கொண்ட கோவலன், கோசிகமாணி! எங்குரவர் மாசில் மலரடியைத் திசைநோக்கித் தொழுதே

[1] சீவக. 1873.

னெனச் சொல்லி இவ்வோலையைக் காட்டெனக் கொடுத்து, என் பொருட்டாக அவர் நடுங்கும் நடுக்கத்தைக் களைந்து அகத்தினிகழ்கின்ற இடுக்கணும் நீக்குதற்கு விரைந்துசெல்வாயாகவெனப்போகவிட்டென்க.

ஈண்டுதல் - விரைதல். காட்டெனக் கொடுத்துக் களைதற்கீண்டெனப் போக்கியென்க. எனச்சொல்லியென்று ஒரு சொல் வருவிக்க.

102 - 3. மாசில் கற்பின்.....,அறவிபா லணைந்து

(இ - ள்.) குற்றமற்ற கற்பினையுடைய தன் மனைவியுடனிருந்த குற்றமற்ற கோட்பாட்டையுடைய கவுந்தியடிகள் இருக்கின்ற இடத்தைச் சேர்ந்தென்க.

ஒடு : ஒருவினையொடு ; உயர்பின்றி யதன் வழிக்கண் நின்றது.

103 - 5. ஆங்கு......பாங்குறச் சேர்ந்து

(இ - ள்.) அவ்விடத்துத் துர்க்கையது வெற்றிபொருந்திய அசுரரோடு பொருத போர்க்கோலத்தைப் பாடும் பாட்டாண்மையையுடைய அம்பணவரில் தானுமொருவனுகக் கலந்தென்க.

"பாண ரொக்கல்" (திருச்சிற். 400) என்ருர். ஆடு - வெற்றி. பாண் - பாட்டு.

106. செந்திறம் புரிந்த—(இ - ள்.) தன் பண்ணியல் அத்திறமாய்த் தனக்கினமான செந்திறத்தோடு புரிந்தவென்க.

என்றது : பண் † பண்ணியற்றிறம் திறம் திறத்திறமென்னுமிவை ; சம்பூரணம், சாடவம், ஔடவம், சதுர்த்தமென வடமொழிப்பெயரானும் இவை வழங்கும் ; அவற்றுட் செந்திறமென்றவாறு.

செங்கோட்டியாழில்—

(இ - ள்.) நாற்பெரும்பண்ணிற்கும் முதலாகிய நால்வகை யாழினுள்ளும் செங்கோட்டியாழென்னும் யாழினது உறுப்பினுளென்க.

107. தந்திரி கரத்தொடு திவவுறுத் தியாஅத்து—

(இ - ள்.) அச்செங்கோட்டியாழினது அறுவகையுறுப்பினுள் தந்திரிகரம் திவவென்னும் இரண்டையும் உறுதிபெறக் கட்டி,

அவற்றுள் தந்திரிகரமென்பது நரம்பு துவக்குதற்குத் தகைப்பொழிய இருசாணுல்விரல் நீளமாகக் குறுக்கிடத்துச் சேர்த்தும் ஐம்பத்தோருறுப்பு ; என்னை ? " தந்திரி கரமே தகைப்பற விலகி, வந்த விருசாணுல்விர லாகும்"..............என்ரு ராகலின். திவவென்பது - நரம்புகளை வலிபெறக்கட்டும் வார்க்கட்டு.

108. ஒற்றுறுப் புடைமையிற் பற்றுவழிச் சேர்த்தி—

(இ - ள்.) அவ்வியாழ் ஒற்றென்னுமுறுப்பை யுடைத்தாகலானே அவ்வுறுப்போடே பற்றைப் பிறப்பிக்கும் நெறிப்படச் சேர்த்தியென்க.

"செங்கோட்டி யாழே செவ்விதிற் றெரியின், அறுவகை யுறுப்பிற் ருகு மென்ப", "அவை தாம், கோடே திவவே யொற்றே.......தந்திரி கரமே நரம்போ டாறே" என்ருர்.

---

(பி - ம்.) † 'பண்ணியம்'

109. உழைமுதற் கைக்கிளை யிறுவாய்க் கட்டி— (இ-ள்.) உழை குரலாகவும் கைக்கிளை தாரமாகவும் நரம்புகளை நிறுத்தியென்க.

என்றது [1] அரும்பாலையென்னும் இசையைப் பிறப்பித்தென்றவாறு. இது குலமுதற்பாலைத் திரிவெனக்கொள்க.

110 - 12. வரன்முறை......அமைவரக் கேட்டு

(இ-ள்.) உழை முன்னர்க் கூறிய நூல்களின் வரலாற்று முறைமை யான் வந்த மூவகைத் தானத்தாலும் சதிபாய்ந்து செல்லும் கலையை யுடைய பாவைபோல்வாளது பாடற்பண்ணை ஆசானென்னும் பண்ணிய லாகிய நால்வகைச் சாதியினும் பொருந்துதல்வரச் செவிப்புலத்தானறிந் தென்றவாறு.

† ஆசான்சாதி நால்வகையாவன: ஆசானுக்கு அகச்சாதி காந் தாரம், புறச்சாதி சிகண்டி, அருகுசாதி தசாக்கரி, பெருகுசாதி சுத்த காந்தாரமெனக் கொள்க.

பண் நூற்றுமூன்று; அவை நால்வகைப்படும்; பண், பண்ணியல், திறம், திறத்திறமென. அவற்றுள் இது திறங்கூறிற்று. மூவகைத் தானம் எழுத்தும் அசையும் சீருமெனினும் அமையும்; என்னை? "எழுத்தே யசையே சீரே யென்றிவை, இழுக்கி லவைமூன் றிற்கு மென்ப" என்றுராகலின்.

113. பாடற் பாணி யளைஇ யவரொடு—(இ-ள்.) இங்ஙனமாகிய பண்ணையும் திறத்தையும் அவரோடு கலந்து வாசித் தென்க.

114. கூடற் காவதங் கூறுமி னீரென—(இ-ள்.) இங்ஙனம் யாழ் வாசித்த கோவலன், இவ்விடத்திற்கு மதுரை எத் துணைக் காவதம், அதனை நீர் கூறுமினென்று கேட்பவென்க.

115 - 8. காழகிற் சாந்தம்......சேருடி

(இ-ள்.) அகிற்சாந்தும் கமழும் குங்குமப்பூங்குழம்பும் நாவிக் குழம்பும் குளிர்ச்சிநலத்தைக்கொண்ட சந்தனச்சாந்தும் கத்தூரிச் சாந்துமாகிய இத் தெய்வமணம் கமழுகின்ற வளவிய சேற்றையளைந்து,

118 - 21. ஆங்கு......பூவணை பொருந்தி

(இ-ள்.) தேன்சேர்ந்த கழுநீர்மலர் சண்பகமலரென்னுமிவற்று லாகிய மாலையோடு குருக்கத்தியும் மல்லிகையும் மனையின்கண்வளர்ந்த முல்லையுமென்னும் இவ்வவிழ்ந்த பூக்களால் நிரைத்த பொலிவினை யுடைய அணையிலே பொருந்தி,

122 - 6. அட்டிற் புகையும்......பூம்புகை யளைஇ

(இ-ள்.) அடுக்களைகளில் தாளிப்புமுதலிய புகையும் அகன்ற அங் காடியிடத்து அப்பவாணிகர் முட்டாமற் சுடுகின்ற அப்பவகையிற் புகையும் மைந்தரும் மகளிரும் மயிர்க்கும் துகிற்கும் மாலைமுதலிய வற்றிற்குமெடுத்த அழகிய இனிய அகிற்புகையும் யாகசாலைதோறும்

---

[1] அரும்பாலை: பரி. 11: 126-7, உரை. (பி-ம்.) † 'அரசன்சாதி'

ஆகுதிபண்ணுதலாலெழுந்தபுகையும் ஆகிய இப்பலவாகிய வேறுபட்ட பொலிவினையுடைய புகையையளவி,

126 - 9. வெல்போர்......காண்வரத் தோன்றி

(இ - ள்.) இந்திரனாற்பூட்டப்பட்ட விளங்காநின்ற ஆரத்தையுடைய மார்பாலே வெல்லும் போரை வல்ல பாண்டியனது கோயிற்கண் யாவராலும் அளவிட்டறியப்படாவாய இக்கலவைத்தொகுதி தன்மெய்யெல்லாம் கமழும்படி தோன்றியென்க.

அவை எத்தன்மையவாகிய கலவையெனின், தம்மைப் புலன்கள் ஒருகால் நுகருமாயிற் பின்னை வீட்டுலகங்கருதித் துறவிற்செல்ல வொட்டாது மனத்தைப்பிணித்துக்கொள்ளும் கோயிலிற்கலவையென்க. அவை முன்னர்க்கூறியனவும் பிறவும்.

130 - 32. புலவர் செந்நா......வந்தது காணீர்

(இ - ள்.) சங்கப்புலவரது செந்நாவாலே புகழ்ப்பட்ட இச்சிறப்புக்களை யுடைத்தாகலிற் பொதியிற்றென்றல் தன்னை ஒவ்வாமைக்குக் காரணமாகி இந்த மதுரைத்தென்றல்வந்தது; இதனைக் காணீரென்க.

ஆடிப் பொருந்தி அளைஇத் தோன்றித் தென்றல் வந்ததென்றாரென்க.

133 - 4. நனிசேய்த் தன்றவன்.........தகைக்குந ரில்லெனா

(இ - ள்.) காவதங்கடறுமினென்றற்குக் காணீர்; அதனால் மிகத் தூரிதன்று அப்பாண்டியனது செல்வமிக்க மூதூர்; அதுவன்றியும் ஆண்டுச் செல்வார் இந்நீர்மையாரன்றி வேறுபட்டநீர்மையாரொருவர் செல்லினும் நில்லென்பாரில்லையென்று சொல்லவென்க.

135 - 6. முன்னாண்முறைமையின்......பெயர்ந்தனர்

(இ - ள்.) அற்றைஞான்று ஆண்டுத்தங்கிப் பிற்றைஞான்று செல்லக் கருதியவர் முன்னைஞான்றைமுறைமைபோலே இரவிடையிலே கவுந்தியடிகளுடனே பெயர்ந்தனரென்க.

136 - 40. பெயர்ந்தாங்கு......குரலோதையும்

(இ - ள்.) அரிதாகிய அழித்தற்றொழிலைவல்ல கடவுளது அகன்ற பெரிய கோயிலிடத்தும் மிக்க புகழையுடைய மன்னவன் கோயிலிடத்தும் வேறுபட்ட பகுதிபொருந்திய சிறப்பையுடைய காலைமுரசமாகிய பேரிசைப்பல்லியம் பெயர்ந்து கூடியொலிக்குமொலியும்,

பெயர்தல் - தாளமறுதல். கனைதல் - செறிதல்.

141. நான்மறை யந்தணர் நவின்ற வோதையும்—

(இ - ள்.) அந்தணர் நான்மறை நவில்விக்கும் அவைக்களந்தோறும் மறைக்கு விதித்த மரபினையுடைய சுருதிகுன்றாமல் உச்சரிக்குமோதையும்,

142. மாதவ ரோதி மலிந்த வோதையும்—(இ - ள்.) மாதவர்கள் சிறுகாலையில் மந்திரமோதுதலால் மிக்க ஓதையும்,

143 - 4. மீளா வென்றி......நாளணி முழவமும்

(இ - ள்.) மடங்காத வென்றியையுடைய வேந்தனுற் பெற்ற சிறப்போடே வாள்வீரர் தத்தம்வீரத்திற்கு எடுத்த வரிசையையுடைய முரசு முதலியவற்றின் நாளணியோதையும்,

நாள் - குடைநாட்கோள் முதலியவுமாம்.

145. போரிற் கொண்ட பொருகரி முழக்கமும்— (இ - ள்.) மறப்பகைமன்னரைப் போரில் வென்று கொண்டுவந்த போர்க்களிற்றின் முழக்கமும்,

146. வாரிக் கொண்ட வயக்கரி முழக்கமும் — (இ - ள்.) காட்டிற் பிடித்துக்கொண்டுவந்த வலிய யானையின் முழக்கமும்,

147. பணைநிலைப் புரவி யாலு மோதையும்—(இ - ள்.) பந்திதோறும்நின்ற புரவிகள் போர்நினைந்து ஆலிக்குமோதையும்,

148. கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும்— (இ - ள்.) கிணைப்பறையையுடைய மள்ளர் மருதநிலந்தோறும் வைகறைக் காலத்தே கொட்டுமோதையும்,

கிணை - மருதப்பறை ; கூத்தர் பறையுமாம்.

149 - 50. கார்க்கடல்......ஆரஞர் நீங்கி

(இ - ள்.) இவையும் பிறவுமாகிய அக்கூடலிடத்து ஆர்க்குமொலியெல்லாம் கார்க்கடலொலிபோல ஒலித்து எதிர்கொள்ளுதலாலே முன்பு உழந்த வருத்தமெல்லாம் நீங்கி,

151 - 4. குரவமும்......பன்மலர் விரிந்து

(இ - ள்.) கரையின் புறவாயெங்கும், குரவும் மகிழும் கோங்கும் வேங்கையும் வெண்கடம்பும் சுரபுன்னையும் மஞ்சாடிமரமும் மருதும் உச்சிச் செலுந்திலும் செருந்தியும் சண்பகமரமும் ஆகிய இவை பாதிரியுடனே பலவகைமலரும் விரிந்துசூழ்ந்தவை மீதுடுத்த பூந்துகிலாகவும்,

155 - 60. குருகுந் தளவமும்......அல்குல்

(இ - ள்.) அகவாயெங்கும், குருக்கத்தியும் செம்முல்லையும் முசுட்டையும் மோசிமல்லிகையும் வெள்ளை நறுந்தாளியும் வெட்பாலையும் மூங்கிலும் இவற்றிற்படர்ந்த பெருங்கையாலும் குட்டிப்பிடவமும் இருவாட்சியுமாகிய பலமலரும் விரிந்து பூங்கொடிகள் நிரைபடநெருங்கிப் படர்ந்துமன்னினவை தன்னை மிடைந்துசூழ்ந்த கோவையாகிய மேகலையாகவுமுடைய கொடுங்கரையாகிய அகன்றேந்திய அல்குலையும்,

அல்குலென்பதற்கேற்பக் கொடுமைகூறினர். மேகலைக்கோவை : வேற்றுமைத்தொகையுமாம். கொழுங்கொடி விரிமலரென்னும் அடைகளை ஏற்புழி எங்கும் ஒட்டுக. அம் : சாரியை.

161 - 3. வாலுகங் குவைஇய......கதிரிள வனமுலை

(இ - ள்.) அகற்சியையும் பொலிவையுமுடைத்தாகிய இடைக்குறையிலே பக்கங்கள் புடைக்கொண்டு கோங்கு வேங்கையென்னும் பலமராகிய சுணங்கால் உயர்ச்சிபெற்று ஒன்றுக்கொன்று மாறுபட விளங்கிய மணற் குன்றாகி நிறத்த முலையிணையும்,

164. கரைநின் றுதிர்த்த கவிரிதழ்ச் செவ்வாய்

(இ - ள்.) கரைக்கணின்று உகுத்த முருக்கிதழாகிய செவ்வாயினையும்,

165. அருவி முல்லை யணிநகை யாட்டி

(இ - ள்.) அருவிநீரோடு இடையருதுவந்த முல்லையாகிய நகையினையுமுடையாள்,

166. விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கய னெடுங்கண்

(இ - ள்.) குறுக்கே மறிந்தும் நெடுகவோடியுந்திரிகின்ற கயலாகிய நெடிய கண்ணினையும்,

167. விரைமலர் நீங்கா வவிர றற் கூந்தல்

(இ - ள்.) இருமருங்கும் திரைகளரித்த மணமலர் நீங்காத விளங்குகின்ற அறலாகிய கூந்தலினையும்,

168-70. உலகுபுரந் தூட்டும்...பொய்யாக் குலக்கொடி

(இ - ள்.) உலகைப் பாதுகாத்தற்குப் பலபொருள்களையும் விளைத்து நுகர்வித்தலான மிக்க பெரிய ஒழுக்கத்தினையுமுடையாள்; புலவர் நாவிற் புகழ்பொருந்தியவள்; சேர்ந்தோர்க்கு வரைவின்றி இன்ப மளித்தலின் திருமகளையொப்பாள்; வையையென்று பெயர்கூறப்படுவாள்; பருவம்பொய்யாமையானும் வேற்றுவேந்து அணுகாமையானும் தென்னர்குலக்கொடியாயுள்ளவள்.

171 - 3. தையற் குறுவது......கரந்தன ளடக்கி

(இ - ள்.) கண்ணகிக்கு மேல்வரும் துன்பங்களைத் தான் முன்னறிந்தாள்போலத் தன்னைக்கொண்டு அருச்சித்தார்க்குப் புண்ணியங்களைக் கொடுக்கும் நறிய பூவாடையால் தனது மெய்ம்முழுதும் போர்த்துத் தன்கண்மல்கிநின்றநீரைப் புறத்திடின் அதுகண்டு வருந்துவாரென்று உள்ளடக்கி,

நெடுநீர் - மிக்கநீர். அடக்கவெனத்திரிக்க.

174 - 5. புனல்யா றன்றிது......தொழுது

(இ - ள்.) அங்ஙனம்போர்த்த பூவாற் புனல்மறைதலின் இது புனல்யாறன்று பூவாறென்று புகழ்ந்து மாதரும் கொழுநனும் தொழுது,

176 - 80. பரிமுக வம்பியும்...தென்கரை யெய்தி

(இ - ள்.) ஓடக்கோலுக்கு நிலைத்தல்அரிய துறையிற் சென்றோரைச் செலுத்தும் குதிரைமுகவோடமும் யானைமுகவோடமும் சிங்கமுகவோடமுமென்னும் இவற்றினேறிப் பலர்போகும் துறையிற்போகாது அதற் கயலதாகிய துறையிலே கவுந்தியடிகளுடனே மரப்புணையிலேபோகி மதுநாறு மலரையுடைய சோலைபொருந்திய தென்கரையிற் பலர் செல்லாததோரிடத்தே சென்றெய்தியென்க.

முன்னர், வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு (10 : 219) சாபமுறுதலின், ஈண்டு மருங்கிற்பெயராதென்றுர்.

பரிமுகமுதலியவற்றைத் தொழிற்பெயராக்கினும் அமையும்.

### 181 - 3. வானவ ருறையும்......அகழிசூழ் போகி

(இ - ள்.) தேவர்கள் உறையும் மதுரையை வலங்கொண்டுசென்றால் மிகவும் பெரியதாகிய புண்ணியத்தை யுடைத்தென்றெண்ணி அழித்தற்கரிய மிளைசூழ்ந்த கிடங்கின்புறத்தைச் சூழ்போந்தென்க.

மிளை - காவற்காடு ; கட்டுவேலியுமாம்.

### 184 - 8. கருநெடுங் குவளையும்......நடுங்க

(இ - ள்.) குவளையும் ஆம்பலும் கமலமும், தையலும் கணவனும் மேல்தனித்துறுந்துயரத்தைத் தாம் தெளிய அறிந்தனபோல வண்டுகள் இரங்கும் பண்ணீர்மையைக்கொண்டு பரிந்தேங்கியழுது கண்ணீரைக் கொண்டு காலுற நடுங்காநிற்கவென்க.

பண்ணீர்மையன்றிப் பண்ணீரென்றமையால் திறம் பன்னிரண்டனுள் நோதிறமெனவுமாம். கண்ணீர் - கள்ளாகிய நீரெனவுமாம். காலுற - காலிலேயுறவெனவும், காற்று உறுதலாலெனவுமாம். அறிந்தனபோல நடுங்கவென்க. ஏங்கியென்னும் செய்தெனெச்சம் நடுங்கவென்னும் பிறவினைகொண்டு முடிந்தது.

### 189 - 90. போருழந் தெடுத்த...மறித்துக்கை காட்ட

(இ - ள்.) மாற்றார்வருந்தப் போர்தேய்த்தெடுத்த [1]புறமதிற்றலையின் கொடிகள் இவரை இந்நகரில் வாராதொழிமினென்பனபோல் தம் கையின் மறித்துக்காட்டவென்க.

அன்றி, வாரலென்பார்கையின் தன்மைபோலெனவுமாம்.

### 191 - 6. புள்ளணி கழனியும்...புக்கனர் புரிந்தென்.

(இ - ள்.) புட்களால் அழகுசெய்யப்பட்ட ஏரியும் பண்ணையும் கழனியும் சோலையும் தெங்கும் கமுகும் வாழையும் வேழத்திரளால் இடப்பட்ட தண்ணீர்ப்பந்தர்களும் பொருந்திவிளங்கிய மூதூர்ப்புறமதில் இடத்ததாகி அறத்தைப் புரியும் தபோதனரன்றிப் பிறர் சேரப்படாத புறஞ்சேரிக் கண்ணே தாம் கருதிவந்த கோட்பாட்டிலே மனம்புரிந்து புக்காரென்க.

இது கீழ்த்திசைவாயிற்கு அயலதோர் முனிவர் இருப்பிடம். புரிந்து புக்காரெனப் பொதுமையாற் கூறினமையின், முன்னர் நாடுகாண் காதைக் கண்ணே, "அறிவனையேத்த......ஒன்றிய வுள்ள முடையேன்" (57-9) என்பதனுற் கவுந்தியடிகளும் அறிவனைப் புரிந்து புக்காரென்க. பண்ணை - தோட்டங்களும், ஓடைகளும்.

**இது நிலைமண்டிலவாசிரியப்பா.**

(கரு) **புறஞ்சேரியிறுத்த காதை முற்றிற்று.**

---

[1] "ஈண்டுநீ வரினு மெங்க ளெழிலுடை யெழிலி வண்ணன், பாண்டவர் தங்கட் கல்லாற் படைத்துணையாக மாட்டான், மீண்டுபோ கென்றென்றந்த வியன்மதிற் குடுமி தோறும், காண்டகு பதாகை யாடை கைகளாற்றடுப்ப போன்ற" (வி. பா. வாசுதேவனை. 6)

## பதினான்காவது

# ஊர்காண் காதை



புறஞ்சிறைப் பொழிலும் பிறங்குநீர்ப் பண்ணையும்
இறங்குகதிர்க் கழனியும் புள்ளெழுந் தார்ப்பப்
புலரி வைகறைப் பொய்கைத் தாமரை
மலர்பொதி யவிழ்த்த வுலகுதொழு மண்டிலம்
வேந்துதலை பனிப்ப வேந்துவாட் செழியன்
ஓங்குயர் கூட லூர்துயி லெடுப்ப
நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்
உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்
மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்
அறத்துறை விளங்கிய வறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்
வால்வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய
காலை முரசங் கனைகுர லியம்பக்

---

1 - 2. பொழிலிலும் பண்ணையிலும் கழனியிலும் ஆர்ப்பவென்க.

3. புலரி வைகறை - புலருகின்றதாகிய வைகறை.

4. மலர்பொதி - பெரும்பொதி ; மலர் பொதியவிழ்தற்குக் காரணமான மண்டிலமுமாம்.

5. (பா) பனித்தவாள் - பனித்தற்குக்காரணமான வாள்.

7. நுதலிலே விழித்த நாட்டத்தையுடைய.

8. நியமம் - கோயில்.

9. மேழி வலனுயர்த்த வெள்ளை - மேழியைக் கையாயுதமாக வலனுயர்த்த பலதேவர்.

---

அடி, 2. இறங்குகதிர்க்கழனி : புறநா. 98 : 19. அடி, 1-2 : சிலப். 13 : 191-2. அடி, 3. உலகுதொழுமண்டிலம் : முருகு. 2. அடி, 7 : மணி. 5 : 54. அடி, 9. மேழி - பலதேவனது ஆயுதம் : பரி. 1 : 5, 15 : 57 ; கலித். 36 : 1. வெள்ளை நகரம் : சிலப். 9 : 10. அடி, 7-11 : சிலப். 5 : 169-72. மதுரைக். 455-8 ; புறநா. 56 : 1-10 ; இன்னா. 1 ; மணி. 1 : 54-5. அடி, 14. காலைமுரசம் : சிலப். 13 : 140, அடிக்.

கோவலன் சென்று கொள்கையி னிருந்த
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
நெறியி னீங்கியோர் நீர்மையே னாகி
நறுமலர் மேனி நடுங்குதுய ரெய்த
அறியாத் தேயத் தாரிடை யுழந்து
சிறுமை யுற்றேன் செய்தவத் தீர்யான்
தொன்னகர் மருங்கின் மன்னர் பின்னோர்க்
கென்னிலை யுணர்த்தி யான்வருங் காறும்
பாதக் காப்பினள் பைந்தொடி யாகலின்
ஏத முண்டோ வடிகளீங் கென்றலும்
கவுந்தி கூறுங் காதலி தன்னொடு
தவந்தீர் மருங்கிற் றனித்துய ருழந்தோய்
மறத்துறை நீங்குமின் வல்வினை யூட்டுமென்
றறத்துறை மாக்க டிறத்திற் சாற்றி
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறையினும்
யாப்பறை மாக்க ளியல்பிற் கொள்ளார்
தீதுடை வெவ்வினை யுருத்த காலைப்
பேதைமை கந்தாப் பெரும்பே †துறுவர்
ஒய்யா வினைப்பய னுண்ணுங் காலைக்
கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள்
பிரிதற் றுன்பமும் புணர்தற் றுன்பமும்
‡உருவி லாள னொறுக்குந் துன்பமும்

---

17. நெறியினீங்கியோர் - இல்லறநெறியின் நீங்கிய வேசையர் பதிகள்.

23 - 4. உன்னுடைய பாதமாகிய துணையை யுடையவளாதலால், இவளுக்கு ஏதமுண்டோ? இல்லையென்றதாம்; பாதமாகிய காவலுண்டாக இவளுக்கு ஏதமுண்டோவென்றுமாம்.

26. தவம் - புண்ணியம்; தவந்தீர்மருங்கின் - புண்ணியம் முடிந்த கூற்றால்.

30. அறை - அறுதல். இயல்பில் - நன்மைக்கூற்றில்.

32. அறியாமை துணையாக மிக்க மயக்கமுறுவர்.

33. ஒய்யாவினை - போக்கவொண்ணாத வினை.

35 - 6. பிரிதற்றுன்பம் - பிரிதலால் வருந்துன்பம். புணர்தற்றுன்பம் - புணர்தல் காரணமாக வருந்துன்பம். இரண்டுகாலத்தும் காமன் ஒறுக்கும் துன்பம்.

---

அடி, 17 : சிலப். 10 : 237. அடி, 26 : மணி. 14 : 89; பெருங். 1. 35 : 137. அடி, 27 - 9 : மணி. 25 : 41 - 51. அடி, 30. யாப்பு - உறுதி; மணி. 3 : 58.

(பி - ம்.) † 'துறுவா ரெய்யா' ‡ 'உருவில் வில்லி யொறுக்குந்'

புரிகுழன் மாதர்ப் புணர்ந்தோர்க் கல்ல
தொருதனி வாழ்க்கை யுரவோர்க் கில்லை
பெண்டிரு முண்டியு மின்பமென் றுலகிற்
கொண்டோ ருறூஉங் கொள்ளாத் துன்பம்
கண்டன ராகிக் †கடவுளர் வரைந்த
காமஞ் சார்பாக் காதலி னுழந்தாங்
கேமஞ் சாரா விடும்பை யெய்தினர்
இன்றே யல்லா லிறந்தோர் பலரால்
தொன்று படவரூஉந் ‡தொன்மைத் தாதலின்
தாதை யேவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துய ருழந்தோன்
வேத முதல்வற் பயந்தோ னென்பது
நீயறிந் திலையோ நெடுமொழி யன்றே
வல்லா டாயத்து மண்ணர சிழந்து
மெல்லிய றன்னுடன் வெங்கா னடைந்தோன்
காதலிற் பிரிந்தோ னல்லன் காதலி
தீதொடு படூஉஞ் சிறுமைய ளல்லள்
அடவிக் கானகத் தாயிழை தன்னை

38. உரவோர் - இருடிகள்.

39 - 42. மனத்து இன்பமென்று கொண்டோர் உறும் தம்மளவல்லாத துன்பத்தைக்கண்டு தவத்தினர் நீக்கின காமம்.

44. (பா) இறந்தனர் - முற்காலத்திற் கழிந்தார்.

45. தொன்றுபட வரூஉம் தொன்மைத்து - அடிப்பற்றி வருகின்ற பழமைத்து; முற்று. ஆதலாலென்று மேற்சொல்லுகின்றார்.

49. நெடுமொழி - பெருவார்த்தை.

பழையதாகப் போதுகின்ற வார்த்தையன்றேவென்றுமாம்.

50. வல்லாடாயம் - சூதாடும் தாயம்.

51. மெல்லியல் - தமயந்தி. வெங்கானடைந்தோன் - நளன்.

52. காதலிற் பிரிந்தோனல்லன் - அவள் காதல் காரணமாகப் பிரியக் கருதியவனல்லன்.

52 - 3. அவளும் இவனிடத்துப் பிரியவேண்டிப் பிரிவாளுமல்லள்.

அடி, 53. தீது - பிறர்நெஞ்சுபுகுதல்; சிலப். 1 : 27; மணி. 22 : 46-ஆம் அடி முதலியவற்றையும் அவற்றின் உரைகளையும் பார்க்க.

(பி - ம்.) † 'கடவுள் வரைந்தனர்' ‡ 'தொன்மையை தாகலின்'

இடையிருள் யாமத் திட்டு†நீக் கியது
வல்வினை யன்றோ மடந்தைதன் பிழையெனச்
சொல்லலு முண்டேற் சொல்லா யோநீ
அனையையு மல்லை யாயிழை தன்னொடு
பிரியா வாழ்க்கை பெற்றனை யன்றே
வருந்தா தேகி மன்னவன் கூடற்
‡பொருந்துழி யறிந்து போதீங் கென்றலும்
இளைசூழ் மிளையொடு ¶வளைவுடன் கிடந்த
விலங்குநீர்ப் பரப்பின் §வலம்புண ரகழியிற்
பெருங்கை யானை யினநிரை பெயரும்
சுருங்கை வீதி மருங்கிற் போகிக்
கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்க் கயிரா து புக்காங்
காயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பிற்
குடகாற் றெறிந்து கொடிநுடங்கு மறுகிற்
கடைகழி மகளிர் காதலஞ் செல்வரொடு
வருபுனல் வையை மருதோங்கு முன்றுறை
விரிபூந் துருத்தி வெண்மண லடைகரை
ஓங்கு‖நீர் மடமொடு நாவா யியக்கிப்

---

58. அனையையு மல்லை - அவர்களைப்போல மனைவியைவிட்டுப் பிரிந்தாயுமல்லை.

62. இளை - அரண்காவல்; மிளை - அதனைச் சூழ்ந்த காவற்காடு.

64 - 5. யானை போகலாம்படி கீழ் சுருங்கையாக அதனை மேலிட்ட வீதி. சுருங்கை - கரந்துறை; ஒழுகுநீர் புகுகையை ஒருத்தரும் அறியாதபடி மறைத்துப்படுத்த வீதிவாய்த்தலை.

67. அயிராமற் புக்கு. 70. எறிந்து - எறிய; கோடை எறிதலால்.

71. கடைகழிமகளிர் - பரத்தையர்.

72. மருதோங்கு துறை - திருமருதந்துறை.

74. நீர்மாடம் - பள்ளியோடம்.

---

அடி, 65. சுருங்கைவீதி : பரி. 20 : 104; சீவக. 142; மணி. 12 : 79, 28 : 5; கம்ப. ஊர்தேடு. 145. அடி, 68 : சீவக. 35. அடி, 72 : குறுந். 258 : 3; ஐங்குறு. 7 : 4 - 5; பரி. 7 : 83, 11 : 30; 22 : 45, திரட்டு, 2 : 72; கலித். 26 : 13; அகநா. 36 : 9 - 10.

(பி - ம்.) †'நீங்கியது' ‡'பொருந்துவழி யறிந்து போதீங் கென்ற பின்' ¶'வளைவுறக்கிடந்த' §'வலம்புரியகழி' ‖'நீரோடமொடு'

பூம்புணை தழீஇப் புனலாட் டமர்ந்து
தண்ணறு முல்லையுந் தாழ்நீர்க் குவளையும்
†கண்ணவிழ் நெய்தலுங் கதுப்புற வடைச்சி
வெண்பூ மல்லிகை விரியலொடு தொடர்ந்த
‡தண்செங் கழுநீர்த் தாதுவிரி பிணையல்
கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு
தெக்கண மலயகச் செழுஞ்சே ருடிப்
பொற்கொடி மூதூர்ப் ¶பொழிலாட் டமர்ந்தாங்
கெற்படு பொழுதி னிளநிலா முன்றில்
தாழ்தரு §கோலந் தகைபா ராட்ட
வீழ்பூஞ் சேக்கை மேலினி திருந்தாங்
கரத்தப் பூம்பட் டரைமிசை யுடீஇக்
குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்திச்
சிறுமலைச் சிலம்பிற் செங்கூ தாளமொடு
நறுமலர்க் குறிஞ்சி நாண்மலர் வேய்ந்து
குங்கும வருணங் கொங்கையி னிழைத்துச்
செங்கொடு வேரிச் செழும்பூம் பிணையல்
சிந்துரச் சுண்ணஞ் சேர்ந்த மேனியில்
அந்துகிர்க் கோவை யணியொடு பூண்டு
\$மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்குக்

---

75. புணை - தெப்பம்.
76. தாழ்நீர்க் குவளை - தங்கின நீரையுடைய குவளை; ஆழ்ந்த நீர்க் குவளை யென்றுமாம்.
78. வெண்பூமல்லிகை, முதல். விரியல் - பூ.
81. (பா) மலயச் செழுஞ்சேறு - சந்தனக்குழம்பு.
84. தகை - கொழுநன்.
(84) தகைமையைக் (71) காதலஞ்செல்வரொடு (84) பாராட்டச் (85) சேக்கைமேலேயிருந்து.
87. குரல் - கொத்து. சிறுமலையாகிய சிலம்பு.
(86) 'அரத்தப் பூம்பட்டு' முதலாக, (93) 'துகிர்க்கோவை' ஈறுகச் சொன்னவை கார்காலத்துப் பரக்க அணிவன.
94. மலைச்சிறகரிந்த - மலையைச் சிறகரிந்த.

---

அடி, 76. தாழ்நீர்க்குவளை : குறுந். 388 : 1. அடி, 77. நெய்தலுக்குக்கண் உவமை : முருகு. 75; நற். 8 : 8; குறுந். 9 : 4-6. குவளையையும் நெய்தலையும் அடைச்சுதல் : மதுரைக். 588; நற். 204 : 3, 357 : 8. அடி, 75 - 7. புனல்விளையாட்டும் பூவை அடைச்சுதலும் : குறுந். 80 : 1 - 2. அடி, 81. தெக்கணம் : மணி. 13 : 105; பெருங். 1. 36 : 238. அடி, 87 : சிலப். 30 : 33; மணி. 8 : 36.

(பி - ம்.) †'கண்ணெகிழ்' ‡'தண்பூங்' ¶'பொழிலாட்டு மகிழ்ந் தாழ்' §'கோலர்தகை' \$'மலைச்சிறை யரிந்த'

கலிகெழு கூடற் செவ்வணி காட்டக்
காரர சாளன் வாடையொடு வரூஉம்
கால மன்றியு நூலோர் சிறப்பின்
முகிறோய் மாடத் தகிறரு விறகின்
மடவரன் மகளிர் தடவுநெருப் †பமர்ந்து
நறுஞ்சாந் தகலத்து நம்பியர் தம்மொடு
குறுங்க ணடைக்குங் கூதிர்க் காலையும்
வளமனை மகளிரு மைந்தரும் விரும்பி
இளநிலா முன்றிலி னிளவெயி னுகர
விரிகதிர் மண்டிலந் தெற்கேர்பு வெண்மழை
அரிதிற் றோன்று மச்சிரக் காலையும்
‡ஆங்க தன்றியு மோங்கிரும் பரப்பின்
வங்க வீட்டத்துத் தொண்டியோ ரிட்ட
அகிலுந் துகிலு மாரமும் வாசமும்
தொகுகருப் பூரமுஞ் சுமந்துடன் ¶வந்த

---

96. காரரசாளன் - கார்காலம்.

97. நூலோர் - சிற்பர்; அவர் புகழ்ச்சியையுடைய (98) மாடமென்க.

97 - 8. நூலோர்...மாடம் - மயமதமறிவாராற் புகழ்ச்சியையுடைய மாடமென்றுமாம்.

99. தடவு - இந்தளம். 100. [1] சாந்து - அகில்நெய்.

101. குறுங்கண் - சாளரம்.

104. மண்டிலம் - ஆதித்தன்; இவன் தெற்கே மிதுன வீதியிலே இயங்குதலானே. வெண்மழை - வெள்ளை மேகம்.

105. அரிதாகத் தோன்றும் முன்பனிக்காலம்.

106. பரப்பு - கடல். 107. வங்க ஈட்டத்தாலே.

108. துகில் - பட்டு வர்க்கம்; [2] நாற்றங்கொளுவுதலால் இவற்றுடன் எண்ணினர். வாசம் - தக்கோலம் சாதிக்காய் முதலியன.

109. சுமந்து - அவற்றின் நாற்றத்தைச் சுமந்து.

---

அடி, 96. காரரசாளன் : பிரயோக. 49, உரை. அடி, 105. 'அருகித் தோன்றும்' என்று பாடங்கொண்டு, 'அருகுதிசை' (தக்க. 37) என்பதற்கு மேற்கோள் காட்டினர்.

[1] சீவக. 2675, ந. [2] சிலப். 14 : 205-7, அடியார்.

(பி - ம்.) † 'பயர்ந்து' ‡ 'ஆங்கனமன்றியு' ¶ 'வந்து'

கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்
வெங்க ணெடுவேள் வில்விழாக் காணும்
பங்குனி முயக்கத்துப் பனியர சியாண்டுளன்
கோதை மாதவி கொழுங்கொடி யெடுப்பக்
காவுங் கானமுங் கடிமல ரேந்தத்
தென்னவன் பொதியிற் றென்றலொடு புகுந்து
மன்னவன் கூடன் மகிழ்துணை தழூஉம்
இன்னிள வேனில் யாண்டுளன் கொல்லென்
றுருவக் கொடியோ ருடைப்பெருங் கொழுநரொடு
பருவ மெண்ணும் படர்தீர் காலைக்
கன்றம ராயமொடு களிற்றின நடுங்க
என்றூழ் நின்ற குன்றுகெழு நன்னாட்டுக்
காடுதீப் பிறப்பக் †கனையெரி பொத்திக்

---

110-11. கூடலிடத்துக் காமனுக்குச் செய்யும் வில்விழவு.

(107) வங்கவீட்டத்தாலே தொண்டியிலுள்ளோரிட்ட (108 - 9) பல சரக்குக்களைச் சுமந்து வந்து புகுந்த (110) கீழ்காற்ருேடு புகுந்து தென்னவன் கூடலெடுக்கும் (111) வில்விழாக்காணும் (112) பங்குனி மாதத்தோடு பொருந்தின பனியரசென்க; என்றது பின்பனிக்காலம். இவ்விழாவைக் கொண்டலொடு புகுந்து காணும் பங்குனி மாதம் பொருந்திய பின்பனிக் காலமாகிய அரசன் யாண்டுளன்.

113. கோதை - ஒழுங்கு. 117. யாண்டுளன் - எங்கேயுள்ளான்.

(117) எங்கேயுள்ளானென்று (119) போன காலங்களைக் குறித்து எண்ணும்.

118. உருவக் கொடியோர் - கொடியுருவத்தினேர்; வல்லியாக வெழுதும் கொடியுமாம். உடைப்பெருங்கொழுநரொடு - தம்மையுடைய கொழுநருடன்.

(118) தம்மையுடைய கொழுநருடனே (85) வீழ்பூஞ்சேக்கையி லிருந்து (119) இப்பருவங்களை (112-7) எங்குளவென்று எண்ணுகிற காலையென்று சேர்க்க. காலம் கோடைக்காலமாகையாலே, அல்லாத காலங்களை நினைத்தெண்ணினுர்.

118 - 9. ஐந்து காலமுங் கழிந்தது கூறுகின்ருர், 'உடைப்பெருங் கொழுநரொடு, பருவமெண்ணும் படர்தீர் காலை' என்ருர்; என்றது வேனிற் காலத்தை.

120. ஆயம் - நிரை.

121. கோடைத்தன்மை (பா) நீடிய குன்று.

122. (பா) பொத்திய - பொதிந்த.

---

அடி, 111. வில்விழா : குறுந். 31 ; திணைமா. 62.

(பி - ம்.) † 'கனவெரி'

கோடையொடு புகுந்து கூட லாண்ட
வேனில் வேந்தன் வேற்றுப்புலம் படர
ஓசனிக் கின்ற வுறுவெயிற் கடைநாள்
வையமுஞ் சிவிகையு மணிக்கா லமளியும்
உய்யா னத்தி னுறுதுணை மகிழ்ச்சியும்
சாமரைக் கவரியுந் தமனிய வடைப்பையும்
கூர்நுனை வாளுங் கோமகன் கொடுப்பப்
பெற்ற செல்வம் பிறழா வாழ்க்கைப்
பொற்றொடி மடந்தையர் புதுமணம் புணர்ந்து
செம்பொன் வள்ளத்துச் சிலதிய ரேந்திய
அந்தீந் தேறன் மாந்தினர் மயங்கிப்
பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியும்
நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்
கிலவிதழ்ச் செவ்வா யிளமுத் தரும்பப்
புலவிக் காலத்துப் போற்றா †துரைத்த

(71) 'காதலஞ்செல்வரொடு' என்றது முதல் (85) 'வீழ்பூஞ் சேக்கை மேலினி திருந்து' என்றது இறுதியாக முதுவேனிற்காலம் கூறினபடி.

123. கோடை - மேல்காற்று.

124. படர - படர்கை காரணமாக.

124 - 5. ஓசனித்தல் - வெக்கையால் தலையெடுத்தல்; கடைநாள் - வேனிற் பின்னுளென்றுமாம். வேற்றுப்புலம் படர்தற்கு எடுத்துப் பார்க்கின்ற முதுவேனில் கழிகிற நாளிலே; சிந்தாமணியினும், "ஓசனிக்கின்ற வன்னம்" (2652) என்றார்.

127. உய்யானத்து மகிழ்ச்சி - சோலையிலே சேவிப்பாருடனிருந்து விநோதம் காண்டல்; உய்யானங்களில் உறுதுணையோடு மகிழும் மகிழ்ச்சியுமாம்.

128. சாமரையிடப்பெறுகையும், பொன்னாற் செய்த வெற்றிலைப் பெட்டி பிடித்திடப் பெறுகையும் வரிசை.

129. கோமகன் - இராசராசன்; பாண்டியன்.

130. அப்படிப்பெற்று உடையராதல் - சிலதியர் சூழ்ந்து வாட் பிடிக்கப் போதல் முதலியன.

(118) கொழுநரொடு (131) புதுமணம் புணர்ந்தென்று கூட்டுக.

134 - 5. வண்டு பொருந்தின இடமன்றியே களிப்பாலே வறிதிடத்திலும் மாலைகொண்டோச்சி.

அடி, 127. உய்யானம்: மணி. 3 : 52.

அடி, 124: தக்க. 577, உரை, மேற். (பி - ம்.) † 'துணர்த்திக்'

காவியங் கண்ணார் கட்டுரை †யெட்டுக்கு
நாவொடு நவிலா நகைபடு கிளவியும்
அஞ்செங் கழுநீ ‡ரரும்பவிழ்த் தன்ன
செங்கய னெடுங்கட் செழுங்கடைப் பூசலும்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை சுருளத்
திலகச் சிறுநுத லரும்பிய வியரும்
செவ்வி பார்க்குஞ் செழுங்குடிச் செல்வரொடு
வையங் காவலர் மகிழ்தரு வீதியும்
சுடும ¶ணேறா வடுநீங்கு சிறப்பின்
முடியர சொடுங்குங் கடிமனை வாழ்க்கை
வேத்தியல் பொதுவிய லெனவிரு திறத்து
மாத்திரை யறிந்து §மயங்கா மரபின்

---

138. கட்டுரை (பா) எடுக்குநர் - வார்த்தைசொல்லப் புகுகின்றவர்.

139. நகைபடு கிளவி - களியாற் கேட்டாரை மகிழ்ச்சி பிறப்பிக்கும் வார்த்தை; கேட்டோர்க்கு நகை விளைவிக்கும் நாவாற் சொல்லாத கிளவியுமாம்.

142. சுருளல் - புருவம் கோபத்தால் ஏறுவது இழிவதாகை.

144. செழுங்குடிச் செல்வர் - அரசரல்லா ஏனையோர்.

146 - 7. ஓடு வேயாது பொற்றகடு வேய்ந்த மனை; அன்றியும், சாதிக் குற்றப்பட்டால் தலையிலே செங்கல் ஏற்றி ஊர் சூழ்வித்துக் கழித்து விடுதல் மரபு; இன்னும், சுடுமண் - மட்பாத்திரமுமாம். முடியரசு ஒடுங்கும் கடிமனை - [1] ஆசைப்பட்டு அரசுவைகுமனை; அரசர் ஆர்வத்தா லடங்குமனை யென்றுமாம். அரசொடுங்குமனை - அரசர் புகுந்தாலும் தெரியாதே பேரிடமான மனை யென்றுமாம்.

148. வேத்தியல் - அரசர்க்கு ஆடுங்கூத்து. பொதுவியல் - எல்லார்க்கும் ஒப்ப ஆடுங்கூத்து.

---

அடி, 139 : அகநா. 16 : 4. அடி, 141 - 3. கோபக் குறிப்புக்கள் : பெருங். 2. 16 : 16 - 23. அடி, 146. சுடுமண் : பெரும்பாண். 405; மணி. 18 : 33; பெருங். 1. 36 : 155; பு. வெ. 113. அடி, 148 : மணி. 2 : 18.

[1] சீவக. 109.

(பி - ம்.) † 'யெடுக்கும்' ‡ 'ரரும்பவிழ்ந் தன்ன' ¶ 'ணோங்கு' § 'மகிழ்தரு'

ஆடலும் வரியும் பாணியுந் தூக்கும்
† கூடிய குயிலுவக் கருவியு முணர்ந்து
நால்வகை மரபி னவினயக் களத்தினும்
‡ ஏழ்வகை நிலத்தினு மெய்திய விரிக்கும்
மலைப்பருஞ் சிறப்பிற் றலைக்கோ லரிவையும்
வாரம் பாடுந் தோரிய மடந்தையும்
தலைப்பாட்டுக் கூத்தியு மிடைப்பாட்டுக் கூத்தியும்
நால்வேறு வகையி ¶ னயத்தகு மரபின்
எட்டுக் கடைநிறுத்த § வாயிரத் தெண்கழஞ்சு
முட்டா ‖ வைகன் முறைமையின் வழாஅத்
தாக்கணங் கனையார் நோக்குவலைப் ** பட்டாங்
கரும்பெற ⁋ லறிவும் பெரும்பிறி தாகத்
தவத்தோ ராயினுந் தகைமலர் வண்டின்
நகைப்பதம் பார்க்கு மிளையோ ராயினும்
காம விருந்தின் மடவோ ராயினும்
ஏம வைக லின்றுயில் வதியும்

---

150. ஆடல் - இப்படிப்பட்ட கூத்து. வரி - வரிப்பாட்டு. பாணி - தாளம். தூக்கு - வாச்சியம்.

152. அவினயம் : "நிற்ற லியங்க லிருத்தல் கிடத்தலென், றத்தகு நான்கே யவினயக் களனே." களன் - அழகுமாம்.

153. (பா) எழுவகை நிலத்தினு மெய்திய வரியாவது - ஆற்றுவரி, சாற்றுவரி, திணைநிலைவரி, மயங்குதிணைநிலைவரி, முகமுடைவரி, முகமில் வரி, படைப்புவரி யென்பனவாம்; அன்றிக் குரல்முதலான ஏழுநரம் பென்றுமாம்.

154. தலைக்கோலரிவை - கூத்தாடுமவள்......

160. தாக்கணங்கு - தீண்ட வருத்தஞ்செய்யும் தெய்வம்; சீதேவியு மாம். நோக்காகிய வலையிலே பட்டு.

161. பெரும்பிறிதாகை - கையற்றுப்போகை.

(162) தவத்தோர்களாயினும் வண்டுபோல (163) இவர்கள் நகையின் செவ்விபார்க்கும் காமுகராயினும் (164) காமத்துக்குப் புதிய மடவோ ராயினும் (165) தங்கியே போகவேண்டும் (167) வீதி.

(161) அரும்பெறலறிவும் பெரும்பிறிதாக (160) நோக்குவலைப் பட்டுத் (162) தவத்தோர் முதலாயினர் (165) இன்றுயில்வதியும் (167) வீதியென்க.

---

அடி, 160. தாக்கணங்கு : குறள், 1082. அடி, 162. பெண்டிர் நலம் நுகருபவனுக்கு வண்டு : கலித். 40 : 25; திருச்சிற். 123. அடி, 162-3 : பெருங். 1-35 : 212-4; 'முகைப்பதம் பார்க்கும் வண்டுபோலத் தலைவி யரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை' (தொல். மெய்ப். 11, பேர்.)

அடி, 155. தொல், மரபு. 107, பேர், மேற். ஷை (பா) 'தோரிய மகளிரும்'

(பி - ம்.) † 'கூடிசைக் குயிலுவ' ‡ 'எழுவகை நிலத்தினு மெய்தி யது' ¶ 'னலத்தகு' § 'வாயிரக்கழஞ்சு' ‖ 'வைகலின்' ** 'பட்டங்' ⁋ 'லறிவு பெரும்'

பண்ணுங் † கிளையும் பழித்த தீஞ்சொல்
எண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்
வையமும் பாண்டிலு மணித்தேர்க் கொடுஞ்சியும்
மெய்புகு கவசமும் வீழ்மணித் தோட்டியும்
அதள்புனை யரணமு மரியா யோகமும்
வளைதரு குழியமும் வால்வெண் கவரியும்
ஏனப் படமுங் ‡ காழூன்று கடிகையும்
கானப் படமுங் ‡ கிடுகின் படமும்
செம்பிற் செய்நவுங் கஞ்சத் தொழிலவும்
வம்பின் முடிநவு மாலையிற் புனைநவும்
¶ வேதினத் துப்பவுங் கோடுகடை தொழிலவும்

---

166. கிளை - கிள்ளை; கிள்ளையைக் கிளையென இடைக்குறைத்தார்; கிளை - பண்ணின் திறமுமாம்.

167. எண்ணெண்கலையோர் - தளியிலார். இருபெருவீதி - சிறுதனம் பெருந்தனம் பெருவார் வீதி.

168. பாண்டில் - இரண்டு உருளையையுடைய சகடம்: கொல்லாப் பாண்டில்; பாண்டியென்று பாடமோதிக் கூடாரப்பண்டியென்பாருமுளர். கொடுஞ்சி - தேர்மொட்டு.

169. கவசம் - கைத்தளம். விரும்பப்பட்ட அழகிய தோட்டி.

170. அதள்புனை யரணம் - தோற் கைத்தளம். அரியாயோகம் - விசாதி (வியாதி) கட்குக் கொடுக்கும் மருந்து; சன்னுகமுமென்ப; அரித்தல் - கெடுத்தல்; பிணியைக் கெடுத்தலையுடைய ஆராயப்பட்ட ஔடதமென்றுமாம்.

171. குழியம் - வாசவுண்டை; கட்டுக்குழியமுமென்ப.

172. ஏனப்படம் - பன்றிமுகக்கடகு; பன்றி வலையுமாம். கிடுகின் படம் - சிறுகடகு.

173. கானப்படம் - காடெழுதின கடகு; யானை சிங்கம் முதலிய சித்திரமெழுதின கடகுமாம்; இடத்துநிகழ்பொருளின் தொழிலை இடத்திற் கேற்றினர்; பெருவாரல்வலையுமாம். காழூன்று கடிகை - காழாற் பிணித்த கடகு; படங்குமாம்.

இவை நான்கும் கிடுகின் விசேடம்.

175. மாலையிற்புனைந - கிடேச்சுமாலை.

176. வேதினத் துப்பவும் - ஈர்வாளால் வலியப்பெற்றனவும்; என்றது ஈருங்கருவியாற் பண்ணப்பட்டன. கோடு - தந்தம்.

---

அடி, 167: சிலப். 22:138-9; மணி. 2:29; பெருங். 1. 35: 84-6. அடி, 168. பாண்டில்: பிரபு. மாயையுற்பத்திகதி. 17.

(பி-ம்.) † 'கிளவியும்' ‡ 'கரமூன்று' ¶ 'வேதினத் தீர்ப்பவுங் கோடுகடைத் தொழிலவும்'

புகையவுஞ் சாந்தவும் பூவிற் புனைநவும்
வகைதெரி வறியா வளந்தலை மயங்கிய
அரசுவிழை திருவி னங்காடி வீதியும்
காக பாதமுங் களங்கமும் † விந்துவும்
ஏகையு நீங்கி ‡ யியல்பிற் குன்றா
நூலவர் நொடிந்த நுழைநுண் கோடி
நால்வகை வருணத்து நலங்கே ழொளியவும்
ஏகையு மாலையு மிருளொடு துறந்த
பாசார் மேனிப் பசுங்கதி ரொளியவும்
பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்
விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்
பூச வுருவிற் பொலந்தெளித் தனையவும்
தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்

---

177. புகையவுமென்றது, புகைக்குறுப்பான நேர்கட்டி முதலான ஐந்தும். சாந்தவும் - சாந்துக்குறுப்பான முப்பத்திரண்டுறுப்பும். (பா) பூவிற் புனைஞ - மாலை விகற்பங்கள்.

176-7. தந்தத்தாற் கடைந்தவை - இரதத்திற்குச் செய்தவை. சந்தனத்தாற் செய்தவை - கலவை கூட்டின. பூவிற்புனைந்தவை - மாலை.

178. வேறுபாடு தெரியா வளமென்றார், முன் எண்ணியவற்றை. (பா) மயங்கி - மயங்கப்பட்டு.

180-83. காகபாதம், களங்கம், விந்து, இரேகையென்னும் நான்கு குற்றமுமின்றிக் கோடியும் பலவகையுமுள்ளன நல்லவயிரம்.

184-5. ஏகையும் மாலையும் இருளும் மரகதத்துக்குக் குற்றம்; இக்குற்றமற்றுப் பசுங்கதிரொளியையுடையன மரகதம்.

186-7. பதுமமும் நீலமும் விந்தமும் படிதமுமாகிய விதிமுறையிற் சொல்லுகிற குற்றமின்றி விளங்குகின்றவை சாதிமாணிக்கம்.

188. (பா) பூனைக்கண்போன்று பொன்னைத் தேய்த்தாற்போன்றவை புருடராகம்: பூசை - பூனை.

189. ஒளியினையுடைய மட்டுநிறமாயிருப்பன கோமேதகம்.

---

(பி-ம்.) † 'விந்துதும்' ‡ 'யியற்பிற்'

இருடெளித் தனையவு மிருவே றுருவவும்
ஒருமைத் தோற்றத் தைவேறு வனப்பின்
இலங்குகதிர் விடூஉ † நலங்கெழு மணிகளும்
காற்றினு மண்ணினுங் கல்லினு நீரினும்
தோற்றிய குற்றந் துகளறத் துணிந்தவும்
சந்திர குருவே யங்கா ரகனென
வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்
கருப்பத் துளையவுங் ‡ கல்லிடை முடங்கலும்
திருக்கு நீங்கிய ¶ செங்கொடி வல்லியும்
வகைதெரி மாக்க டொகைபெற் § றோங்கிப்
பகைதெற லறியாப் பயங்கெழு வீதியும்
சாத ரூபங் கிளிச்சிறை யாடகம்
சாம்பூ நதமென வோங்கிய கொள்கையிற்
பொலந்தெரி மாக்கள் கலங்கரு ரொழித்தாங்
கிலங்குகொடி யெடுக்கு $ நலங்கிளர் வீதியும்

---

190. இருள் தெளித்தனைய நிறத்தினையுடைய நீலம். இருவேறுருவினையுடைய வயிடூரியம்.

191. ஒருமைத்தோற்றம் - ஓரிடத்தே தோற்றல்; ஓரிடமென்றது பளிங்கை.

193 - 4. காற்று முதலான இக்குற்றம் நீங்கினவும். குற்றமென்றது முன்பு சொன்ன குற்றங்களை.

195. சந்திரகுரு - வெண்முத்து. அங்காரகன் - செந்நீர்முத்து. வட்டத்தொகுதி - ஆணிமுத்து.

197. கருப்பத் துளை - உள்ளே துளையாகை. (பா) கல்லுடை முடங்கல் - கல்லை உள்ளேயுடைய வளைவு.

198. திருக்கு - திருகல்; இவை மூன்று குற்றமும் நீங்கிய செங்கொடி வல்லி : பவளம்.

201 - 3. சாதரூபம் கிளிச்சிறை ஆடகம் சாம்பூநதமென்னும் இவை நான்கும் பொன்னின் சாதி. பொலந்தெரி மாக்கள் - செட்டியர்.

204. கொடியெடுத்தல் பொருளெல்லைக்கு.

---

(பி - ம்.) † 'நலங்கேழ்' ‡ 'கல்லுடை முடங்கரும்' ¶ 'செழுங்கொடி' § 'றோங்கிய' $ 'நலந்தரு'

நூலினு மயிரினு நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறிந்த வறுவை வீதியும்
நிறைக்கோற் றுலாத்தர் † பறைக்கட் பராரையர்
அம்பண வளவைய ரெங்கணுந் திரிதரக்
கால மன்றியுங் கருங்கறி மூடையொடு
கூலங் குவித்த கூல வீதியும்
பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும்
அந்தியுஞ் சதுக்கமு மாவண வீதியும்
மன்றமுங் கவலையு மறுகுந் திரிந்து
விசும்பகடு ‡ திருகிய வெங்கதிர் நுழையாப்
பசுங்கொடிப் ¶ படாகைப் பந்தர் நீழற்
காவலன் பேரூர் கண்டுமகிழ் வெய்திக்
கோவலன் பெயர்ந்தனன் கொடிமதிற் புறத்தென்.

---

205. நூற்பட்டு - பட்டுநூல். 206 - 7. பலமடி.

208 - 9. (பா) பறைக்கட்பராரை அம்பணமென்றது பட்டமணிந்த வாயையும் பரிய அரையையுமுடைய அம்பண அளவை ; ஆவது அளக்கும் பறைமுதலியன.

210. கறிமூடை - மிளகுபொதி.

212. பால்வேறு தெரிந்த - பகுதி வேறு தெரிந்த. நான்காய் வேறுபடும் தெரு.

213. அந்தி - முச்சந்தி. சதுக்கம் - நாற்சந்தி.

214. கவலை - பலவாய் ஒன்றுன முடுக்கு. மறுகு - குறுந்தெரு.

215. விசும்பகடு திருகிய - விசும்பிடத்து முறுகிய.

(216) துகிற்கொடிநீழலிலே (214) திரிந்து.

(4) மண்டிலம் (6) துயிலெடுப்ப (67) யவனர்க்கு அயிராது புக்கு (217) நகரிகண்டு (214) திரிந்து (217) மகிழ்ந்து (218) மதிற்புறத்துப் பெயர்ந்தனனெனக்கூட்டுக.

---

அடி, 205. மயிரால் ஆடைநெய்தல் : சீவக. 2686. அடி, 209. அம்பணம் : ஐங்குறு. 43 : 1 ; பதிற். 66 : 8, 71 : 5. அடி, 213 : "சதுக்கமுஞ் சந்தியும்" (முருகு. 225) ; "அந்தியுந் தெய்வச் சதுக்கமும்" (பெருங். 3. 5 : 43). அடி, 216-7. கொடியணிந்த ஊர் : மதுரைக். 365-6 ; பட்டினப். 167-8 ; பதிற். 15 : 19 ; அகநா. 196 : 1.

(பி - ம்.) † 'பறைக்கணைப்பர' ‡ 'திரிதர' ¶ 'பதாகைப்'

1-2. புறஞ்சிறைப் பொழிலும்...புள்ளெழுந் தார்ப்ப

(இ - ள்.) முன்னர்ப் புரிந்துபுக்க மூதூர்ப் புறஞ்சேரியிடத்துளவாகிய பொழில்களிடத்தும் விளங்காநின்ற நீர்நிறைந்த பண்ணையிடத்தும் வளைந்த கதிரையுடைய கழனியிடத்தும் உளவாகிய புட்கள் துயிலெழுந்து ஆரவாரியாநிற்பவென்க.

பிறங்குதல் - மிகுதலுமாம்.

3-6. புலரி வைகறை......துயி லெடுப்ப

(இ - ள்.) வைகறைக்காலக் கழிவும் புலருதன் முன்னுமாகிய அக்காலத்தே பொய்கைகளில் தாமரைப்பூவின் முகைகளைப் புரிநெகிழ்த்து மலர்வித்த [1] உலகமெல்லாந்தொழப்படும் ஆதித்தமண்டிலமானது பகைவேந்தர் தலைகள் நடுங்க விதிர்த்தேந்திய வாளையுடைய செழியனது புகழானோங்கி வண்மையான் உயர்ந்த கூடலாகியவூரைத் துயிலெடுப்பாநிற்பவென்க.

ஆர்ப்ப அவிழ்த்த மண்டிலம் எடுப்ப வென்க.

7. நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்—

(இ - ள்.) இறைவி கண்பதைத்தபொழுது நெற்றியிற் புறப்பட விட்ட கண்ணையுடைய இறைவனது கோயிலும்,

விழிநாட்டம் : வினைத்தொகை ; இனி நுதலில் இமையாநாட்டமென்றுமாம் ; காமனைவிழித்த நாட்டமெனவுமாம்.

8. உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்—

(இ - ள்.) உவணப்புட்சேவலைப் பதாகையாகவுயர்த்த திருமால் கோயிலும், உவணம் - கருடன்.

9. மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்—

(இ - ள்.) மேழியாகிய படையை வலமாக ஏந்திய பலதேவர் கோயிலும்,

வலன் - வென்றியுமாம். மேழி - ஆகுபெயராற் கலப்பை. வெள்ளை - வெள்ளையோனெனப் பண்புகொள்பெயர்.

10. கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்—

(இ - ள்.) கோழிப்புள்ளாகிய சேவற்கொடியையுடைய முருகவேள் கோயிலும்,

சேவற் கொடியென்றார், பெடைக்கொடியை விலக்குதற்கு.

11. அறத்துறை விளங்கிய வறவோர் பள்ளியும்—

அறத்துறை : அறமும் அறத்தின் துறையுமென உம்மைத்தொகை. அறமாவது இருவகைத்து ; இல்லறமும் துறவறமுமென. அவற்றுள் இல்லறமென்பது கற்புடைமனைவியோடு இல்லின்கண் இருந்து செய்யும் அறம்.

அதன்துறையாவன : [2] தன்னையொழிந்த மூவர்க்கும் துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் தேவர்க்கும் முனிவர்க்கும் விருந்தினர்க்கும் சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் துணையாதலும், வேள்விசெய்தலும், சீலங்காத்தல் முதலியனவும், அருளுமன்புமுடையனாதலும், பிறவும்.

---

[1] முருகு. 1. [2] குறள், 41-ஆம் செய்யுள் முதலியவற்றைப் பார்க்க.

இனித் துறவறமாவது, [1] நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும் புறப்பற்றுமற்று இந்திரியவசமறுத்து முற்றத்துறத்தல்.

அதன்துறையாவன:—சரியை, கிரியை, யோகம், ஞானமென்பன.

அவற்றுள், சரியை அலகிடல் முதலியன;

கிரியை பூசைமுதலியன;

யோகம் எண்வகைய; அவை:—இயமம், நியமம், ஆசனம், வளி நிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதியென்பன;

அவற்றுள், [2] "பொய்கொலை களவே காமம் பொருணசை, இவ்வகை யைந்து மடக்கிய தியமம்" எனவும், "பெற்றதற் குவத்தல் [3]பிழம்புநனி வெறுத்தல், கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை, பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு, பயனுடை மரபி னியம மைந்தே" எனவும், "நிற்ற லிருத்தல் கிடத்த னடத்தலென், றுரைத்த நான்கி னொல்கா நிலை மையொ, டின்பம் பயக்குஞ் சமய முதலிய, அந்தமில் சிறப்பி னாசன மாகும்" எனவும், "உந்தியொடு புணர்ந்த விருவகை வளியும், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை" எனவும், "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமை, ஒருவழிப் படுப்பது தொகைநிலை யாமே" எனவும், "மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை" எனவும், "நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற், குறித்த பொருளொடு கொளுத்துவது நினைவே" எனவும், "ஆங்ஙனங் குறித்த வம்முதற் பொருளொடு, தான்பிற னாகாத் தகையது சமாதி" எனவும் வருவனவற்றாலறிக;

ஞானம்........

(இ - ள்.) அறமும் அதன் துறைகளும் விளங்குதற்குக் காரண மாகிய அறவோர்களுடைய இருப்பிடங்களும்,

ஈண்டுப் பள்ளியென்றது அவ்விடங்களை.

## 12. மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்—

(இ - ள்.) மறமும் அதன்துறைகளும் விளங்குதற்குக் காரணமாகிய மன்னவனது கோயிலும்,

இதுவும் உம்மைத்தொகை.

அதன் துறையாவன எழுவகைய; அவை—[4] வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பையென இவை. இனி விரிப்பின் அகலும். "தொகை மறவரதுதறுகண்" என்பதனான் இவையும் இவற்றின் துறைகளும் வந்தவழிக் கண்டுகொள்க.

கோயில் நியமம் நகரம் கோட்டம் பள்ளியென்பனவற்றின் வந்த பரியாய அலங்காரம் உணர்க.

---

[1] "படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து கண்டவர்மெய் பனிப்ப நோற்றிட், டுடனாகை வம்பொறியும் வென்றார்க்கு" (சீவக. 1546)

[2] இச்சூத்திரமுதலிய எட்டும் 'நாலிருவழக்கிற்றாபதபக்கமும்' (தொல். புறத். 20, ந.) என்பதன் உரையிலும் எடுத்துக் காட்டப்பெற் றுள்ளன. இவை பதஞ்சலியோகசூத்திரக்கருத்துக்களை ஒத்திருக் கின்றன.

[3] பிழம்பு - கூட்டம். [4] சிலப். பக். 14.

### 13 - 4. வால்வெண் சங்கொடு......கணேகுர லியம்ப

(இ - ள்.) முற்கூறியவிடங்களிற் பலவகையாற்பொருந்திய சிறப் பினையுடைய காலைப்போதின் முழவம் சங்கத்தோடும் கொம்போடும் இயம்பவென்க.

இயம்பவெனப் பொதுமரபாற்கூறினர். வால்வெண்சங்கு : இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. ஒடு : எண்ணொடுவாய்க் [1] கொம்பி னொழிபை உணர்த்திநின்றது.

### 15 - 6. கோவலன் சென்று......கைதொழு தேத்தி

(இ - ள்.) அக்காலத்தே கோவலன்சென்று கவுந்தியடிகளைக் கையால் தொழுது நாவான் ஏத்தியென்க.

சென்றென்பதனால் அவர் வேறிடத்திருந்தமையும், கொள்கையி னென்பதனால் தியானத்தோடிருந்தமையும் கூறினர். கொள்கையி னிருந்தவென்பதற்கு இவர்கள் உறும் துன்பம் உறுதிருந்தவெனவுமாம்.

### 17 - 20. நெறியி னீங்கியோர்......செய்தவத்தீர்யான்

(இ - ள்.) செய்த தவத்தினையுடையீர், தவஞ்செய்யாத யான் ஒழுக் கத்தினின்று நீங்கினோர் நீர்மையையுடையேனாகி மலர்போலும் மெல் லிய மேனியையுடைய இவள் நடுங்கித் துயரமுறும்படி முன்னம் கனவி னும் நினைந்தறியாத தேயத்தே அருவழியிடை எங்குந்திரிந்து துன்ப முழந்து சிறுமையுற்றேனென்றானென்க.

ஒழுக்கமுடைய விழுக்குடிப்பிறந்தோர் நாணுடைமகளிரொடு நீ ணெறிச் செல்லாரென்பதுகருதி, 'நெறியினீங்கியோர் நீர்மையேனாகி' என்றானென்றுணர்க. அன்றி, நாடுகாண்காதைக்கண், "வம்பப் பரத்தை வறுமொழியாளனொடு...சென்றோர், காமனுந் தேவியும் போலு மீங்கிவரார்" (219-22) எனவும், "உடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை, கடவது முண்டோ" (227-8) எனவும் கூறுதலும், அதனால் அவர்க்குச் சாபம் வருதலும் போல்வன இவளை உடன்கொண்டு வருத லான் வந்தனவென்று தன் அறிவின்மையை வெறுத்து நொந்து கூறினா னெனினுமாம். சிறுமை ஈண்டு அறிவின்மை.

### 21 - 4. தொன்னகர் மருங்கின்...அடிகளீங் கென்றலும்

(இ - ள்.) [2] அடிகளே, இத்தொன்னகரிடத்துள்ள வணிகர்க்கு என் தன்மையுணர்த்திவரும் துணையும் இவட்கு ஏதமின்றாகக் காத்தருள வேண்டுமெனக் கூறக்கருதியவன் தெளிந்து, "போதுவல் யானும் போதுமின்" (10 : 60) என்றவன்றே இவள் நும் பாதமாகிய காவலை யுடையாளாதலின், இவட்கு இனி ஓரேதமுண்டோ; இல்லையென்று கையெடுத்துக் கூறினானாக வென்க.

---

[1] கொம்பென்னும் வாத்தியம் சங்குடன் சேர்த்துக் கூறப்படும்; "சங்குங் கருங்கோடும்" (பு. வெ. 24)

[2] அடிகளென்பது பெண்பாலார்க்கும் வருதலை, "அடிகளுமுளரோ" (சீவக. 1784) என்பதனாலும் அறிக.

என் நிலை - மாசாத்துவாணிகன் மகனுகியும் இங்ஙனமாகிய தன்மை. காறு - அளவு. பைந்தொடி : அன்மொழித்தொகை. ஈங்கு ஏதமுண்டோ என்றுன், முன்னர் இவர் வழித்துயர் நீக்கி இவ்விடம் தலைப்படுத்தமை தோன்ற.

## 25 - 6. கவுந்தி கூறும்......துயருழந்தோய்

(இ - ள்.) அங்ஙனங்கூறிய கோவலற்குக் கவுந்தியடிகள் கூறுவார் : முற்பிறப்பில் நல்வினையை மிகச்செய்த நீ அதனையொழிந்து பின்பு சிறிது தீவினையுஞ் செய்த பக்கத்தானே நின்கிளையையும் தந்தை செல்வத்தையும் விட்டு நின் காதலியோடும் தனித்துத் துயரத்தையுழந் தோனே.

இனிப் பேரின்பத்தைத்தரும் தவத்தில் நின்ருேர் அதனைவிட்டு இழி தலின் விளைவாகிய நிரயத்துன்பத்தையுறுதலுமாம். தனித்துயர் - ஒப் பற்ற துயருமாம். [1] தீர்தல், விடுதற்பொருட்டு. உழத்தல் - அனுப வித்தல்.

## 27 - 32. மறத்துறை நீங்குமின்...பெரும்பே துறுவர்

(இ - ள்.) எவ்வுயிர்க்கும் யாவரும் மறஞ்செய்தற்ருெழிலினின்றும் நீங்குமின் ; நீங்கீராயின், அதன் விளைவாகிய துன்பத்தைத் தீவினை, யூட்டுமென்று அறங்களை யுணர்த்தும் பெரியோர் ஒக்குந்திறங்களானே நாவாகிய கடிப்பான் வாயாகிய பறையை அறைந்து சாற்றினும் புண்ணி யத்தினுறுதியற்ருேர் அதனை உறுதியாக உட்கொள்ளாராகிப் பின்னர்த் தீங்கையுடைய வெய்ய வினைதோன்றித் துன்பத்தை நுகர்விக்குங்கால் தமது பேதைமை பற்ருக மிகவும் செயலற்று அறியாநிற்பர்.

மறம் - அகிதம். அறம் - இதம். திறம் - தீதுநன்றென்னுந்திறம். [2]செயலறவு எதிரதுபோற்றலென்னும் உத்தியாற் கொள்ளப்பட்டது.

## 33 - 4. ஒய்யா வினைப்பயன்......கற்றறி மாக்கள்

(இ - ள்.) கற்கப்படுவனவற்றைக் கற்று அவற்றின் பயனை யுணர்ந்த பெரியோர் போக்கப்படாத தீவினைப்பயனுகிய துன்பத்தை நுகருங்கால் அதற்கிரங்கிச் செயலறவை நெஞ்சிற்கொள்ளார்; இது நாம் செய்யவந்ததென்று கொள்ளுவரென்க.

ஒய்தல் - போக்குதல்.

இனி, இன்பமும் பொருளும் சிறிது இன்பம்பயந்து பெரிது துன் பம் விளைக்குமென்பதூஉம், அறம் சிறிது துன்பம் பயந்து பெரிது இன் பம் விளைக்குமென்பதூஉம் கூறுவார் :—

## 35 - 45. பிரிதற் றுன்பமும்...தொன்மைத் தாதலின்

இன்பத்தையும் பொருளையும் ஆகுபெயராற் 'பெண்டிரும் உண்டியு மென்ருராகலிற் பிரிதலையும் புணர்தலையும் இரண்டற்கு மேற்றுக.

இனி நிறுத்தமுறையானே கூறுவார் :—

(இ - ள்.) மகளிரைப் புணர்தற்பொருட்டு முயற்சியான் வரும் துன்ப மும் அங்ஙனம் புணர்ந்தபின்னர்ப் பிரிதலான் வரும்துன்பமும் அவை

---

[1] " தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட்டாகும் " (தொல். உரி. 22)

[2] அடி, 31 பார்க்க.

நீட்டித்தவிடத்து அநங்கன் ஒறுத்தலான்வரும் துன்பமுமென முழுவதும் துன்பமேயாம்; இனிப் பொருள்புணர்தற்பொருட்டு முயற்சியான் வரும் துன்பங்களும் அங்ஙனம்புணர்ந்தபொருள் பிரிதலான் வரும் துன்பமும் அவையிரண்டும் நீட்டித்தவிடத்துக் கட்புலனாகாத வறுமை ஒறுத்தலான்வரும் துன்பமுமென முழுவதும் துன்பமே; ஆகலின், இவ் விருதிறத்தினும் தோன்றும் துன்பமனைத்தும் மகளிரைப் புணர்ந்து மயங்கினோர்க்குளதாவதல்லது பற்றற்ற தனிவாழ்க்கையையுடைய பெரியோரிடத்தில்லை; அங்ஙனமாகிய துன்பங்களை இன்பமெனக்கொண்டோர் உறக்கடவ இடங்கொள்ளாத் துன்பங்களை மனத்தான் உணர்ந்தனராகி முனிவரால் நீக்கப்பட்ட இவ்விருவகைக் காமமே சார்பாகப் பற்றுள்ளத்தினின்று உழந்து துன்பக்கடலிலழுந்திக் கரை காணப்படாத இடும்பையை யெய்தினோர் இன்று நின்னளவினோரல்லர்; முன்னும்எண்ணிறந்தோராவர்; பழகிப்போந்த முறைமையதாதலானன்றேயென்றாரென்க.'

பிரிதற்றுன்பம் பெரிதாகலின் முன்வைத்தாரேனும் புணர்தற்பின்னரது பிரிவாகலின், மாற்றிக்கொள்ளப்பட்டது. உருவிலாளனென்பதைக் காமன்மேலும் கட்புலனாகா வறுமைமேலும் ஏற்றுக. இல்லை : முற்று. இறந்தோர் - கழிந்தோருமாம். பலரென்றார், தேவரினுமுண்டென்பது தோன்ற. ஆல் : அசை.

இனி, அப்பலருள், தேவரிற்சிறந்தோனொருவனையும், மக்களுட் சிறந்தோனொருவனையும் எடுத்துக்காட்டுவார் :—

## 46 - 9. தாதை யேவலின்......நெடுமொழி யன்றோ

(இ - ள்.) தன் தந்தையேவலானே மனைவியோடும் வனத்திற்போய் அவள் தன்னைப்பிரிதலானே கடிய துன்பத்தையுழந்தவன் வேதத்திற்கு முதல்வனாகிய நான்முகனைப் பயந்தோனென்பதனை உலகமெல்லாமறியவும் நீ அறிந்திலையோ? அஃது உலகில் நடக்கின்ற புராணகதையன்றோ வென்றாரென்க.

அறிந்தனையாயின் இரங்காயென்பது கருதி அறிந்திலையோ வென்றார். நெடுமொழி - புகழுமாம். இதனுள், இராமன் சீதைபொருட்டாக வில்லேற்றல் முதலிய புணர்தற்றுன்பமும், பின்னர் அவள் பிரிதலான் வரும் துன்பமும், தசரதன் தனக்கு முடிசூட்டத்தொடங்கிய பொருள் புணர்தற்பொருட்டு வரும்துன்பமும், பின்னர் அதனைக் கைகேசி விலக்க அப்பொருள் பிரிதலான் வரும் துன்பமும் ஈண்டு வந்தவாறுணர்க. இது தேவரிற் சிறந்தோனொருவனைக் காட்டியது.

## 50 - 57. வல்லா டாயத்து......சொல்லா யோநீ

(இ - ள்.) நளன்றான் முன் புட்கரனொடுபொருத சூதினையத்தான் மண்ணையும் அரசாட்சியையும் இழந்து தன்மனைவியொடு வெய்யகானகத்தே சென்றடைந்தவன் பிறிதொரு பொருண்மேற்சென்ற காதலான் அவளைப் பிரிந்தானல்லன்; அவளும் வீறின்மையொடு பொருந்தப்பட்ட தனற் சிறுமையுறுவாளுமல்லள்; ஆகவும் அடவியாகிய காட்டகத்து அரையிருள்யாமத்தே அவளை உறக்கிடை நீத்து நீக்கியது முன்செய்த

தீவினையன்றி அம்மடந்தை பிழையானென்று சொல்லுதற்கு வேறு காரணமுண்டாயின் நீ சொல் என்றாரென்க.

இல்லையென்பது கருத்து. இனி, அவனும் காதலினீங்கிப் பிரிந்தோனல்லன்; அவளும் காதலியே; அதனாற் பிரிவாற் சிறுமையுறுவாளுமல்லளெனினும் அமையும். ஆயம் - தாயம். மண்ணரசு : உம்மைத்தொகை. அடவி - மலைசேர்ந்த காடு. ஆயிழை - தமயந்தி. இட்டு நீக்கியதெனவே துயிலிடை நீத்தல் பெற்றும். நீக்கியது : ஏவற்சொல். ஓகாரம் : இடைச்சொல். இதனுள் நளன் தமயந்தியை வதுவைசெய்து புணர்தற்பொருட்டு வரும் துன்பமும் பிரிதற்பொருட்டு வரும் துன்பமும், சூதாடுகின்றுழி அச்சூதுவென்று பொருள் புணர்தற்பொருட்டு வரும் துன்பமும் மண்ணும் அரசுமாகிய பொருள்கள் பிரிதலான் வரும் துன்பமும் ஈண்டு வந்தவாறுணர்க. இது மக்களிற் சிறந்தோனொருவனைக் காட்டியது.

"நெறியி னீங்கியோர் நீர்மையே னாகிச் சிறுமையுற்றேன்" (17-20) என்றதற்கு "வினைகடைக் கூட்ட வியங்கொண்டான்" (9 : 78), "ஊழ்வினை கடைஇயுள்ளந் துரப்ப" (10 : 4) என்பவற்றாற் கோவலனை வினை ஏவுதல் பெறப்படலானும், இராமனைத் தாதை ஏவுதலானும், நளனைப் புட்கரன் ஏவுதலானும், இவர் மனைவியரோடு அறியாத் தேயத்தாரிடையுழத்தலும், சிறுமையுறுதலும் ஒத்த பண்பினராதலின் உவமைகூறி, இவரினும் உனக்கு ஓர் உறுதியுண்டென்று கூறுவார் :—

## 58 - 9. அனையையு மல்லை......பெற்றனை யன்றே

(இ - ள்.) இங்ஙனம் பலவகைத்தாய துன்பம் உறுதலின், அவரோடு ஒத்த தன்மையையாயினும் அவரின் நீ வேறுபட்ட பெரிய நன்மையையுடையை; அஃதியாதெனின், நின்காதலி பிரியாது வாழும் வாழ்க்கையைப் பெற்றனை யன்றோவாதலானென்று தேற்றினாரென்க.

உம்மை - சிறப்பு. அன்றே : அசையுமாம்.

## 60 - 61. வருந்தா தேகி......போதீங் கென்றலும்

(இ - ள்.) இனி நீ இங்ஙனம் வருந்தாதே இம்மன்னவன் கூடற் சென்று சாவகநோன்பு நிகழ்த்தற்கேற்ற இடமிதுவென்றறிந்து ஈண்டு வருவாயாக என்று சொல்லலுமென்க.

பொழிந்துழியறிந்து - விருந்தெதிர்கொள்வார் இடத்தை யறிந்தென்றுமாம். ஏகிப்போதென இயையும்.

## 62 - 5. இளைசூழ் மிளையொடு......மருங்கிற் போகி

(இ - ள்.) கட்டுவேலி சூழ்ந்த காவற்காட்டோடு தானும் நகரைச் சூழ்தலை உடன்பட்டுக்கிடந்த வலத்திலே பொருந்திச் சுழலும் இலங்கு நீர்ப் பரப்பையுடைய அகழிக்குப் பெரிய கையையுடைய யானையினமாகிய பலநிரைகள் போக்குவரத்துச் செய்தற்குப்படுத்த சுருங்கையையுடைய வீதியைக் கழிந்துபோகியென்க.

வலம் - வெற்றியுமாம். இனநிரை - நிரையினம். சுருங்கை - கரந்துபடை.

### 66 - 7. கடிமதில் வாயில்......அயிராது புக்கு

(இ - ள்.) இங்ஙனமாகிய இளைமுதலிய சூழ்ந்த உயர்ந்த மதில் வாயிலைக் காக்கும் தொழிலான்மிக்க கொல்லும் வாளையுடைய யவனரால் இவன் புதியனென்று அயிர்க்கப்படாத தன்மையாற் புக்கென்க.

கடி - மிகுதி. யவனர் - துருக்கர். போகிப் புக்கென்க.

### 67. ஆங்கு—(இ - ள்.) அவ்விடத்து,

### 68 - 9. ஆயிரங் கண்ணோன்......மதிலக வரைப்பின்

(இ - ள்.) ஆயிரங்கண்ணையுடைய இந்திரனது பெறுதற்கரிய மணிக்கலம்பெய்த பணிப்பெட்டகத்தைத் திறந்துவைத்தாலொத்த மதில் வட்டத்தையுடைய அகநகர் வரைப்பின்கண் என்க.

முன்னர்ப்புறநகர்ச் சிறப்புக்கூறி ஈண்டு அகநகர்ச் சிறப்புக் கூறு வார், மதிலக வரைப்பினென்றார்.

### 70 - 75. குடகாற் றெறிந்த......புனலாட் டமர்ந்து

(இ - ள்.) மேற்றிசைக்காற்று விசைத்தெறிதலானே மாடங்களி லெடுத்த கொடிகள் எழுந்து நுடங்கும் மறுகின்கண்ணுள்ளாராகிய பொதுமகளிர் தாம் காதலிக்கும் செல்வத்தையுடைய காமுகரோடுகூடி [1] இடையறாது பெருகும் புனலையுடைய வையையாற்றுத் துறைமுன்னர்ப் பொலிந்து பரந்த இடைக்குறையில் வெளிய மணலையுடைய அடைகரைக் கண்ணே உயர்ந்த பள்ளியோடத்தோடு நாவாய் முதலியவற்றை ஏறிச் செலுத்தியும் பொலிவையுடைய புணைகளைத் தழுவி நீந்தியும் இவ் வாறு புனல்விளையாட்டை விரும்பியும்,

ஆடித்திங்களென்பது தோன்றக் குடகாற்றுக்கூறினார். நாணும் மடனும் பெண்மையவாதலின் இவற்றைக் கழிந்தே கடைகழியவேண் டுதலிற் கடைகழி மகளிரெனப் பொதுமகளிர்க்குப் பெயர் கூறினார்; இவர்க்குக் காதல் பொருளின்கண்ணதாகலிற் காதலஞ் செல்வரென் றார்; தம்மேற் காதலையுடைய செல்வரோடெனவுமாம்; அம் : சாரியை. நாவாய் - தோணி முதலாயுள்ள சலசரங்கள்.

இது சிறுகாலமாறினும் காலைப்பொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

### 76 - 82. தண்ணறு முல்லையும்......அமர்ந்தாங்கு

(இ - ள்.) குளிர்ந்த நறிய முல்லைமலரும் தாழ்ந்த நீரிற்பூத்த குவளை மலரும் தம் கண்போல மலர்ந்த நெய்தல் மலருமென்னும் இவற் றைத் தமது கொண்டைகளிலே மிகவைத்துப் புரைக்கச் செருகி மல்லி கையின் மலர்ந்த வெளிய பூவோடே குளிர்ந்த செங்கழுநீரிதழ்களையும் கால்நெருங்கக்கட்டுதலால் தலைமலர்ந்த பிணையலைக் கொற்கைத்துறை யிற் படும் பெருமுத்தாற் செய்த வடத்தோடே பூண்டு தென்றிசைக் கண்ணதாகிய மலயவரையிற் பிறந்த சந்தனக்குழம்பை மேனிமுழுதும் மட்டித்துப் பொன்னாற்செய்த கொடிகளையுடைய மூதூர்க்கு அயலதாகிய பொழில்டத்து விளையாடும் விளையாட்டை விரும்பி,

---

1 "வையை யன்ன வழக்குடை வாயில்" (மதுரைக். 356)

தாணீர்க்குவளை பாடமாயின், தாளையுடைய நீர்மைக் குவளை யென்க. பிணையல் - மார்பிலிடுவன. உற - மிக. மல்லிகை விரியல் வெண்பூவென்க. தெக்கணம் : வடசொற்றிரிபு. சேருடியென்றார், மெய்ம் முழுதும் பூசினமை தோன்ற. மூதூர்ப் பொழில்- [1]இலவந்திகைச் சோலை. ஆங்கு : அசை. அடைச்சிப் பூண்டு ஆடி அமர்ந்தென்க. காரை எதிர்பருவமாதலின் முல்லை கூறினார்.

இது நண்பகற் பொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

83 - 5. எற்படுபொழுதின்......மேலினி திருந்தாங்கு

(இ - ள்.) எற்பாடாகிய காலத்தே ஆண்டு நின்றும் போந்து இள நிலா முன்றிற்கண்ணே முன்னர்ப் புனலினும் பொழிலினும் ஆடியிளைத்த கோலத்தைத் தம் கொழுநர் பாராட்டித் தீர்க்கக் கண்டோர் விரும்பப் படும் பூஞ்சேக்கை யிடத்தே இனிமையோடிருந்து,

ஆங்கு : அசை. புணர்ச்சி கூறுவார், இனிதிருந்தென்றார். தகை : ஆகுபெயராற் கொழுநர். தத்தம் மனத்தில் தங்கிய கோலத்தைப் புனைந்து பாராட்டவெனினும் அமையும்.

இஃது எற்படுபொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

86 - 97. அரத்தப் பூம்பட்டு......கால மன்றியும்

(இ - ள்.) அங்ஙனம் பாராட்டச் சேக்கைமேலிருந்து, பூத்தொழிலை யுடைய செம்பட்டை மேகலைமீதே யுடுத்துப் பூங்கொத்தை இடத்தே யுடைய கூந்தலிலே செங்குடசப்பூவை முடித்துத் [2]தென்னவனது சிறு மலையென்னுஞ் சிலம்பின்கண் பூத்த செந்நறுந்தாளிப் பூவுடனே நறிய மலரையுடைய குறிஞ்சியினது நாட்பூவைச்சூடிக் குங்கும நிறத்தை யுடைய செஞ்சந்தனத்தைக் கொங்கையினெழுதிச் சிவந்த சுண்ணம் அப்பிய ஆகத்தே செங்கொடு வேரியின் வளவிய பூவாற் கட்டப்பட்ட பிணையலை அழகிய பவளக் கோவையோடு பூண்டு பறந்து திரியுமலை களைச் சிறகையரிந்த வச்சிரத்தையுடைய இந்திரனுக்குக் கூடலைச் செவ்வணி யணிந்து காட்டுதற்குக் காரையாளு மரசன் வாடைக் காற்றோடு வருங்காலமும், அக்காலமன்றியும்,

அரை : ஆகுபெயரான் மேகலை. குடசம் - வெட்பாலை விசேடம். சிறுமலை : அதன் பெயர். மலர்க்குறிஞ்சி, முதற்கேற்ற அடை; "கனி விளவின்காய்" (முல்லை. இறுதி வெண்பா) போல. குங்குமநிறத்தை யுடையவற்றை யென்றுமாம். இழைத்து - வரித்து; எனவே எழுதி யென்பதாயிற்று. சுண்ணம், மேனிக்கு அடை. குடசமும், குறிஞ்சியும், கொடுவேரியும் என்னுமிவை கார்காலத்துப் பூவாய்த் தான் விழைந்தன வாதலாற் காரரசாளன் காட்டவென்றார். கார் - ஈண்டு முகில்; அதனை யாளுமரசு - காலம். காலமும் கடவுளாதலால் தன் வேந்தனுக்குக் கை யுறை காட்டுவான் கூடன் மகளிரான் ஏந்துவித்துக் காட்டினான்;

---

[1] இலவந்திகை - யந்திரவாவி; சிலப். 10 : 31 மணி. 3 : 44 - 5; "நிறைக்குறி னிறைத்துப் போக்குறிற் போக்கும், பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை" (பெருங். 1. 40 : 311-2)

[2] சிலப். 11 : 85.

அவற்கு மகளிர் மேல் மிக்க காதலுடைமையறிதலின். "காலமுலகம்" (தொல். கிளவி. 58) என்பன உயர்திணை மேலனவாய்ப் பால் பிரிந்திசை யாவெனவும், "நின்றுங் கிசைத்த லிவணியல் பின்று" (தொல். கிளவி. 59) எனவும் கூறிவழுவமைக்கின்றவர், [1] வேறிடத்து இசைத்தலுமுரிய வென்பதனாற் காரரசாளனென உயர்திணையாற் கூறினர். இவ்விதிமேல் வருவனவற்றிற்கும் கொள்க.

## 97 - 101. நூலோர் சிறப்பின்......கூதிர்க் காலையும்

(இ - ள்.) சிற்பநூல் வல்லோரானே சிறப்பித்துச் செய்யப்பட்ட முகில்தோய உயர்ந்த மாடங்களிலே மரக்கலம் தந்த அகிலாகிய விறகாலே மடப்பம் வருதலையுடைய மகளிர் தடாக்களில் இடப்பட்ட இந்தனம் காய் தலை விரும்பி நறிய சாந்தளைந்த மார்பையுடைய மைந்தரோடு கூடிக் குறிய கண்களையுடைய சாளரங்களை அடைக்கும் கூதிராகிய காலமும்,

நூலோர் சிறப்பி னகிலென இயைத்து, நூலோர் சிறப்பித்துக் கூறப்பட்ட நேர்கட்டி முதலாகிய அறுவகைக் கூட்டெனினும் அமையும்; மடவரன் மகளிர்தரும் அகிலெனவுமாம். அமர்ந்து அடைக்குமென இயையும். நம்பியர் - காதலஞ்செல்வர். குறுங்கண் : ஆகுபெயர். இதுவும் மேற்கூறிய அச்சிரக் காலமும் உயர்திணைச் சொல்லடுத் தோதாது அஃறிணையியல்பாற் கூறுவன.

## 102 - 5. வளமனை மகளிரும்......அச்சிரக்காலையும்

(இ - ள்.) மகளிரும் மைந்தரும் வளமனையில் இளநிலா முன்றிற் கண்ணேயிருந்து இளவெயிலை நுகரும்படி விரிந்த கதிரையுடைய ஆதித்த மண்டிலம் மிதுன வீதியிலே எழுந்து இயங்குதலான வெண் முகில் அரிதாகத் தோன்றும் முன்பனிக் காலமும் எவ்விடத்துள்ளன?

மகளிரை முற்கூறினர், இன்பத்திற்கு முதல்வராகலின். இளநிலா - மாலைப்பொழுதின் நிலா; அன்றிச் சுதை நிலாவென முன்றிற்கடையாக் கினும் அமையும். நுகர்தல் - பயன்கோடல். ஏர்பு - எழுதலான். வெண் மழை - பனிமாசுமாம். எவ்விடத்துள்ளனவென்று ஒரு சொல் வருவிக்க.

## 106. ஆங்கதன்றியும்—

(இ - ள்.) அந்த முன்பனிக்காலமன்றியும்,

## 106 - 12. ஓங்கிரும் பரப்பின்...பனியரசியாண்டுளன்

(இ - ள்.) குணதிசைக்கண் தொண்டியென்னும் பதியிலுள்ள அரச ரால் வங்கத்திரளோடு திறையிடப்பட்ட அகிலும் பட்டும் சந்தனமும் வாசமும் கருப்பூரமும் என்னுமிவற்றை அவ் வங்கத்திரளோடு சுமந்து வந்த கொண்டற்காற்றென்னும் நண்பனோடு கோமகனது கூடற்கட் புகுந்து காமவேளுடைய வில் வெற்றி நிகழாநின்ற விழவுகாணும் பங் குனித் திங்களீருகப் பொருந்திய பின்பனிக்காலமாகிய அரசன் எவ்விடத்துளன்?

ஓங்கிரு : இருபெயரொட்டு : பரப்பென்பதனை விசேடித்து வங்கத் திற்கு அடையாயிற்று. ஈட்டத்து-ஈட்டத்தோடு. இனி, 'தொகு' என்ப தனை இறுதி விளக்காகக் கொண்டு பொருளுரைக்க. உரைக்குமாறு :—

---

[1] தொல். கிளவி. 60.

**அகில் :** [1] அருமணவன் தக்கோலி கிடாரவன் காரகிலென்று சொல்லப்பட்ட பலவகைத்தாய தொகுதியும்,

**துகில்** - கோசிகம் பீதகம் பச்சிலை அரத்தம் நுண்டுகில் சுண்ணம் வடகம் பஞ்சு இரட்டு பாடகம் கோங்கலர் கோபம் சித்திரக்கம்பி குருதி கரியல் பேடகம் பரியட்டக்காசு வேதங்கம் புங்கர்க்காழகம் சில்லிகை தூரியம் பங்கம் தத்தியம் வண்ணடை கவற்றுமடி நூல்யாப்பு திருக்கு தேவாங்கு பொன்னெழுத்து குச்சரி தேவகிரி காத்தூலம் இறஞ்சி வெண் பொத்தி செம்பொத்தி பணிப்பொத்தியென்று சொல்லப்பட்ட பலவகைத் தாகிய தொகுதியும்,

**ஆரம் :** மலையாரம் தீமுரன்பச்சை கிழான்பச்சை பச்சைவெட்டை அரிசந்தனம் வேரச்சுக் கொடியென்று சொல்லப்பட்ட பலவகைத்தாகிய தொகுதியும்,

**வாசம் :** அம்பர் எச்சம் கத்தூரி சவாது சாந்து குங்குமம் பனிநீர் புழுகு தக்கோலம் நாகப்பூ இலவங்கம் சாதிக்காய் வசுவாசி நிரியாசம் தைலமென்று சொல்லப்பட்ட பலவகைத்தாகிய தொகுதியும்,

**கருப்பூரம் :** மலைச்சரக்கு கலை அடைவுசரக்கு மார்பு இளமார்பு ஆரூர்க்கால் கையொட்டுக்கால் மாரப்பற்று வராசான் குமடெறிவான் உருக்குருக்கு வாரோசு சூடன் சீனச்சூடனென்று பெயர் கூறப்பட்ட பலவகைத்தாகிய தொகுதியுமெனத் தொகுத்தும் விரித்தும் பொருளுரைக்க.

கொண்டல் - கீழ்காற்று. இறுதியாகிய பின்பனி யென்பார் வேள் வில்விழாக் காணும் பங்குனியென அதற்கு அடை கூறினர் ; காணும் பனியரசென இயைக்க ; வேள்காணும் பங்குனி யெனினும் அமையும். [2] தொண்டியோர் - சோழ குலத்தோர்.

## 113 - 7. கோதை மாதவி...யாண்டுளன் கொல்லென்று

(இ - ள்.) மாதவி கொடியெடுப்பக் காவும் கானமும் மலரேந்தத் தென்னவனுடைய பொதியிற் றென்றலோடே அம்மன்னவனுடைய கூடல் நகரின்கட் புகுந்து தாம் மகிழும் துணைகளைத் தழுவுவிக்கும் இனிய இளவேனிலென்னும் அரசன் எவ்விடத்துளன்றானென்று.

கோதை மாதவி - மாலைபோலப் பூக்கும் குருக்கத்தி. கானம் - நந்தன வனம் ; காடுமாம். தழூஉம் - தழுவுவிக்கும்.

## 118 - 9. உருவக் கொடியோர்...படர்தீர் காலை

(இ - ள்.) கொடியுருவினோர் இங்ஙனமாகிய இன்பங்களைக் கருதி அவற்றவற்று இன்பங்களை நுகர்தற்கு விரும்பித் தம்மையுடைய பெரிய கொழுநரோடிருந்து அப்பருவ வரவை எண்ணும் வருத்தம் நீங்கிய காலத்தே,

---

[1] இங்குக் கூறப்படும் பெயர்கள் இக்காலத்து வழங்காமையாற் புலப்படவில்லை.

[2] இதனால் கீழ்கடற்கரைக்கண்ணுள்ள தொண்டியென்னும் பட்டினம் பண்டைக் காலத்திற் சோழர்களுடைய ஆட்சிக்குட்பட்டிருந்ததென்று தெரிகின்றது; சேரார்க்கு உரித்தாய் மேல்கடற்கரைக்கண்ணுள்ள தொண்டியென்பது வேறு ; புறநா. 17, 48 பார்க்க.

தம்முருவிற் கோலக் கொடியோரென்றுமாம். இவர் புறவீதி மகளிராய் முற்கூறிய கடைகழி மகளிர். இவர் ஆண்டுக் கூறிய காதலஞ் செல்வரோடிருந்து பருவமெண்ணுங் காலையென்க.

## 120 - 25. கன்றமரராயமொடு...உறுவெயிற் கடைநாள்

(இ - ள்.) கன்றுகள் மேவிய பிடித்திரளோடே அவற்றைக் காக்கும் களிற்றினமும் கண்டு நடுங்கும்படி வெயில் நிலைபெற்ற மலைசார் நாட்டுக் காடெங்கும் தீப்பட்டெரியும்படி முழங்கும் அழலை மூட்டிக் கோடைக் காற்றோடு வந்து புகுந்து கூடலைத் தானுண்ட வேனிலரசன் தனக்குப் புகலிடமாகிய வேற்றுப் புலன்களிற் சேறற்கு முயலாநின்ற வெயிலையுடைய கடைநாளிலென்க.

கடை நாள் - பருவத்தின் கடைநாள். என்றூழ் நின்ற என்றார், காலை தொடங்கி மாலையளவும் ஒரு தன்மையாகக் காய்தலின். ஓசனித்தல் - போதற்கு ஒருப்பட்டு முயறல்; "உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக்கின்ற வன்னம்" (2652) என்றார் சிந்தாமணியினும். [1] ஓரோர் தேயத்திற்கு ஒரொரு காலம் மாறி நிகழ்தலின் வேற்றுப் புலம் படரவென்றார்.

## 126 - 31. வையமுஞ் சிவிகையும்......மணம் புணர்ந்து

(இ - ள்.) கூடாரப் பண்டியும் கடகத்தண்டும் பல்லக்குமென்னும் இவ்வரிசைகள் பெற்றதேயன்றி நீராவிச் சோலைக்கண்ணே தமக்கு உற்ற துணைவனாகிய அரசனோடு மேவி மெய்தொட்டு விளையாடும் மகிழ்ச்சியும் கவரியும் அடைப்பையும் உடைவாளுமெடுக்கும் வரிசையும் தம் கோமகன் கொடுப்ப அவை எக்காலத்தும் மாறாத வாழ்வையுடைய மடந்தையர் நாடோறும் புதியாரோடு மணம் புணர்ந்து,

புதியவர் இதயமறிந்து புணர்தலருமையிற் புணர்ந்தென்று அவர் வல்லபம் கூறினார். இன்னும், புணர்ந்தெனவே இப்புணர்ச்சி முன்னர் இன்பம் விளைத்தற்கு ஊடனிகழ்ந்தமையுணர்க. உய்யானம் - அரசர் விளையாடும் காவற்சோலை. சாமரைக் கவரி: இருபெயரொட்டு. புது மணம் புணர்தல் - கரண விசேடமுமாம்.

## 132 - 3. செம்பொன் வள்ளத்து......மாந்தினர் மயங்கி

(இ - ள்.) அங்ஙனம் புணர்ந்த புணர்ச்சியானுண்டாய வருத்த மகற்றிச் செருக்கு விளைத்தற்குச் சிலதியர் பொன் வள்ளத்தேந்திய அழகிய இனிய கட்டேறலைப் பருகினராகிப் பின்னு மயங்கி,

சிலதியர் - ஏவன் மகளிர்.

## 134 - 45. பொறிவரி வண்டினம்......வீதியும்

(இ - ள்.) அங்ஙனமாகிய காவியங்கண்ணார் மதுமயக்கத்தான் இதழின் மறைகின்ற விழிகளைப் பூவினிதழின் மறைகின்ற தமதினமெனக் கருதிச் சேர்ந்த பொறியையுடைய வரிவண்டினத்தைப் பரிந்த மாலையாற் கடியக் கருதியவர் அவசத்தாற் கை சோர்தலின் அவை மொய்யாத

[1] ஓரோரு தேயத்திற்குக் காலம் ஓரோரு காலம் மாறி நிகழ்தல்: சீவக. 2106, உரை.

இடங்களைக் கடிந்து முன்னர்ப் புலவிக் காலத்தே இலவிதழ்போலும் செவ்வாயின்மீதே இளமுத்துப்போலும் எயிறுகள் அரும்பும்படி தம் கேள்வரைக் கவவுக்கொண்டு நெருக்கிய புலவிக்குறை நெஞ்சிற்கிடந்தது கூறக்கருதிய கட்டுரையை [1]எண்வகைத் தானத்தோடு நாவால் நவிலப் பெறாது குழறுதலாற் கேட்டோர்க்கு நகை வரத்தக்க கிளவியும், அழகிய செங்கழுநீரின் நீர்க்கீழரும்பை நெகிழ்த்துப் பார்த்தாலொத்த சிவந்த கயல் போலும் நெடிய கண்ணின் செழித்த கடையாற் செய்த பூசலும், கொலைசெய்த விற்போலும் புருவத்தின் கோடிகள் உள்வளையத் திலகம் பொருந்திய சிறிய நுதற்கண் அரும்பிய வியருமாகிய இவை தீருஞ் செவ்வி பார்த்து வருந்தும் மேம்பட்ட குடிப்பிறந்த செல்வரோடே வையத்தைக் காக்கும் அரசரும் விரும்பப்படும் வீதியும்,

வரி - வரிப்பாட்டு. புல்லுதல் - இனமென்று புல்லுதல். என்னை? "ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றுள் பூண்ட, மணங்கமழ் கோதை பரிவுகொண் டோச்சி" (கலித். 92 : 45-6) எனவும், "ஒருத்தி, இறந்த களியா னிதழ்மறைந்த கண்ணள், பறந்தவை மூசக் கடிவாள் கடியும், இடந்தேற்றாள் சோர்ந்தனள் கை" (கலித். 92 : 48-50) எனவும் பிறரும் கூறினர். கட்டுரை - புலவிக் குறையெல்லாம் பொதிந்தவுரை. நாவொடு - நாவால். 'குதைவில்' என்பாருமுளர். கிளவியும், பூசலும் வியரும் தீரும் செவ்வி பார்க்கும் செல்வரென்க. இவர் அரசனைக் காக்கும் மகளிர்.

## 146 - 7. சுடும ணேறு......கடிமனை வாழ்க்கை

(இ - ள்.) கொடுங்கோன்மையாகிய வடுநீங்கும் செங்கோற் சிறப்பினையுடைய முடிசூடிய அரசரொடுங்கும் கடிமனை; அஃது எத்தன்மையுதாகிய கடிமனை யென்னின்,—சுடுமண் ஏறுத மனை; அம்மனையில் வாழும் வாழ்க்கையென்க.

சுடுமண் - ஓடு. ஒடுங்குதல் - பிறரறியாமல் அடங்குதல். கடி - வரைவு; மிகுதியுமாம். வாழ்க்கையையுடைய எண்ணெண்கலையோ ரென்க. இனி, வடு நீங்கிய சிறப்பினையுடைமையாற் சுடுமண் ஏறப் படாத முடியரசொடுங்குங் கடிமனையெனப் பொருள் கூறினும் பொருந் தும். ஈண்டு, சுடுமணென்றது செங்கலை. வடு - குடிக்குற்றம்; ஆவது [2]பதியிலாரிற் குடிக்குற்றப்பட்டாரை ஏழு செங்கற் சுமத்தி ஊர் சூழ்வித்துப் புறத்திடுதல் மரபு.

## 148 - 50. வேத்தியல் பொதுவியல்......ஆடலும்

(இ - ள்.) வேத்தியல் பொதுவியலென்று சொல்லப்பட்ட இருவகைக் கூத்தின் தாளவறுதிகளையறிந்து அவை மயங்காத மரபானே ஆடு மாடலும்,

---

[1] எண்வகைத்தானம் - தலை, மிடறு, நெஞ்சு, பல், இதழ், நா, மூக்கு, அண்ணமென்பன : தொல். பிறப்பு. 1.

[2] மணி. 18 : 31-6.

இவையிரண்டும் நகைத்திறச் சுவைபற்றி நிகழும் விதூடகக் கூத்து. இவற்றை வசைக்கூத்துமென்ப : "பல்வகை யுருவமும்......... வசையெனப்படுமே" என்றாராகலின்.

150. வரியும்—(இ - ள்.) எண்வகையாகிய வரிக்கூத்துக்களும்,

அவையாவன :—கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர் வரி, தேர்ச்சிவ்ரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரி, யென இவை ; என்னை? "கண்கூடுகாண்வரி......எண்வகை நெறித்தே" என்றாராகலின். இனி இவ்வரியென்பதனை, நிலனும் தொழிலும் தோன்ற நடிக்கும் விநோதக் கூத்தென்பாருமுளர் : என்னை ? "வரியெனப் படுவது.........வழங்கல்" (சிலப். பக்கம், 235) என்று ராகலின். இவற்றின் பகுதி விரிப்பிற் பெருகும் ; வந்த வழிக்காண்க.

பாணியும்—(இ - ள்.) தாளங்களும்,

அவை, கொட்டும் அசையும் தூக்கும் அளவுமெனவிவை ; என்னை ? "கொட்டுமசையும்......பாணியாகும்" (சிலப். பக்கம். 91) என்றாராகலின். அவற்றுள் கொட்டென்பது அரைமாத்திரை, வடிவு க ; அசையென்பது ஒருமாத்திரை, வடிவு எ ; தூக்கென்பது இரண்டுமாத்திரை, வடிவு உ ; அளவென்பது மூன்று மாத்திரை, வடிவு ஃ ; என்னை ? "ககரங் கொட்டே.........ஆய்தம்" என்றாராகலின். இனி இவற்றின்றொழில் :— கொட்டாவது அமுக்குதல் ; அசையாவது தாக்கியெழுதல் ; தூக்காவது தாக்கித்தூக்குதல் ; அளவாவது தாக்கினவோசை நேரே மூன்று மாத்திரை பெறுமளவும் வருதலெனக் கொள்க.

தூக்கும்—(இ - ள்.) தூக்குக்களும்,

அவையாவன :—இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கெனப்பட்ட ஏழு தூக்குக்களும் ; என்னை ? "ஒருசீர் செந் தூக்கு.........என்மனார் புலவர்" என்று ராகலின்.

151. கூடிய குயிலுவக் கருவியு முணர்ந்து—

(இ - ள்.) முற்கூறிய ஆடல் முதலியவற்றோடும் கூடியிசைக்கும் நால் வகை உத்தமத் தோற்பெருங் கருவிக் கூறுபாடுகளையும் உணர்ந்து,

நால்வகை உத்தமத் தோற்பெருங் கருவிகளாவன :—மத்தளம், தண்ணுமை, இடக்கை, சல்லிகை யென்பன ; என்னை ? "மத்தளந் தண் ணுமை யிடக்கை சல்லிகையென, வைத்த நான்கு முத்தமக் கருவி" என்றாராகலின். தண்ணுமை - குடமுழா.

152 - 4. நால்வகை மரபின்......தலைக்கோ லரிவையும்

(இ - ள்.) அங்ஙனம் பிழையாமலுணர்ந்து நால்வகைப்பட்ட மரபினையுடைய அவினய நிலத்தினும் எழுவகைப்பட்ட நிலத்தினும் சென்றெய்தும்படி கோப்புக்களை விரிக்கும் மலைத்தற்கரிய சிறப்பினை யுடைய [1] தலைக்கோற்பட்ட மெய்திய அரிவையும்.

[1] சிலப். 3 : 161.

அவற்றுள், அவினயநிலம் நான்காவன :—நிற்றலும், இயங்கலும், இருத்தலும் கிடத்தலுமென்பன ; என்னை ? " நிற்ற லியங்கல்................அவினயக் களனே " என்றாராகலின். எழுவகை நிலமாவன :— ச ரி க ம ப த நி என்னும் எழுவகைப்பட்ட எழுத்தடியாகப் பிறக்கும் குரல் முதலாகிய ஏழும்.

155. வாரம் பாடுந் தோரிய மடந்தையும்—

(இ - ள்.) வாரப்பாட்டினைப் பாடும் தோரிய மடந்தையும்,

இவள் ஆடிமுதிர்ந்த பின்பு பாடன்மகளாய் ஆடன்மகளிர் காலுக்கு ஒற்றறுத்துப்பாடுங்கால் இடத்தூண் சேர்ந்தியலுமவள் ; என்னை ? " இந்நெறி வகையால்..................மரபிற் றேரிய மகளே " † " தலைக்கோ லரிவை..................தோரிய மகளே " (சிலப். பக்கம், 186) என்பனவற்றா னறிக. வாரமாவது பற்று. அஃது இருவகைப்படும் ; ஓரொற்று வாரம், ஈரொற்று வாரமென. அவை தாளத்து ஒருமாத்திரையும், இரண்டு மாத்திரையும் பெற்று வருமெனக் கொள்க.

156. தலைப்பாட்டுக் கூத்தியும்—

(இ - ள்.) தலைப்பாட்டைப்பாடும் கூத்தியும்,

இடைப்பாட்டுக் கூத்தியும்—

(இ - ள்.) இடைப்பாட்டைப்பாடும் கூத்தியும்,

தலைப்பாட்டாவது உகம் ; இடைப்பாட்டாவது ஒளகம். இவர் கூட்டக் கூத்தியர். இவை யெல்லாம் முன்னம் அரங்கேற்றுகாதை முதலியவற்றுள் விரித்துக்கூறினவாதலின், ஈண்டும் விரித்துக்கூறுதல், 'கூறியது கூறல்' என்னும் குற்றமாமெனின் ஒக்கும் ; ஆண்டுக்கூறிய அடிகளே ஈண்டும் கூறுதலானும், இக்காதை ஒன்றனையுமே கற்றுணர்வார்க்குப் புலப்பட வேண்டுதலானும் ஈண்டும் விரித்துரைக்கப்பட்டன.

157 - 9. நால்வேறு வகையின்...முறைமையின் வழா

(இ - ள்.) மேற்கூறிய தலைக்கோலரிவை முதலான நால்வேறு வகையோடுங்கூடி யாவரும் விரும்பத்தகும் முறைமையினால் ஒன்றுமுதல் ஆயிரத்தெண் கழஞ்சீறாக நாள்தோறும் பெறும் முறைமையினின்றும் வழுவாத,

என்றது தத்தம் ஆடல்பாடல் அழகென்னும் இவற்றாற்பெற்ற சீரின் வழித்தாகிய ஒன்றுமுதல் ஆயிரத்தெண் கழஞ்சீறாக நிச்சயிக்கப்பட்ட முறைமை ; " ஒப்பவொன் றாதி யாக வாயிரத் தோரெட் டீறாச், செப்பி " (சீவக. 107) என்றார் பிறரும்.

---

(பி - ம்.) † ' தலைக்கோ லரிவை தாளத்தொடு பொருந்த, மலைத்தகு பாடலு மாடலு மிக்கோ, டுயற்படு கோதைத் தோரிய மகளே '

### 160 - 67. தாக்கணங்கனையார்......இருபெரு வீதியும்

(இ - ள்.) தீண்டவருத்தும் அணங்குபோல்வாருடைய கண்ணாகிய வலையில் அகப்பட்ட அப்பொழுதே பெறுதற்கரிய தமது அறிவு முதலியன கெடத் தவத்தோராயினும் நல்ல அவிழ்ந்த மலர்தோறும் சென்று அவற்றின் தேனைப் பருகிப் பின்பாராது செல்லும் வண்டுபோல ஒரு வழித் தங்காது புதுவோர்ப் புணர்ந்து செல்லும் காமுகராயினும் காம வின்பத்திற்குப் புதியோராய் முன்பு நுகர்ந்தறியாத பேதையோராயினும் நாடோறும் புணர்ச்சி மயக்கத்தோடு கூடிய இனிய துயிலோட்டே தங்குவிக்கப்படும் பண்களையும் அவற்றின் திறங்களையும் பழித்த இனிய சொல்லையுடைய அறுபத்துநான்கென்று தொகுத்த கலைகளை வல்லோராகிய பதியிலாருடைய இருவகைப்பட்ட வீதிகளும்,

அணங்கு - தெய்வமகள். ஆங்கு : அசையுமாம். நகை-ஆகுபெயராகிய இடக்கர் ; அன்றி, அவர் காமக்குறிப்பு நிகழ நகைக்கும் நகையுமாம். பண் நான்காவன :—பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்பன. அவற்றின் திறங்களாவன :—பாலைக்குப் புறம் - தேவாளி ; அருகு - சீர்கோடிகம் ; பெருகு - நாக ராகம். குறிஞ்சிக்குப் புறம் - செந்து ; அருகு-மண்டிலம் ; பெருகு - அரி. மருதத்திற்குப் புறம் - ஆகரி ; அருகு - சாயவேளாகொல்லி ; பெருகு - கின்னரம். செவ்வழிக்கும் புறம்-வேளாவளி ; அருகு - சீராகம் ; பெருகு - சந்தி. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இருபெரு வீதியாவன :—சிறுதனம் பெருந்தனம்.

இத்துணையும் வீதிகளைச் சிறப்பித்துக்கூறி, இனி அங்காடிவீதி கூறுவார் கம்மியர் முதலாயினர் பண்ணி விற்பன கூறுகின்றார் :—

168. வையமும்—(இ - ள்.) கொல்லாப்பண்டியும்,

பாண்டிலும்—(இ - ள்.) தேர்வட்டையும்,

மணித்தேர்க் கொடுஞ்சியும்—

(இ - ள்.) அழகிய தேர்மொட்டும்,

169. மெய்புகு கவசமும்—

(இ - ள்.) மெய்புகுதற்கிடமாகிய கவசமும்,

வீழ்மணித் தோட்டியும்—

(இ - ள்.) விரும்பப்படும் மணிகள் அழுத்தின அங்குசங்களும்,

170. அதள்புனை யரணமும்—(இ - ள்.) தோற் கைத்தளமும்,

அரியா யோகமும்—

(இ - ள்.) கருவி விலக்காகப் புனைந்த அரைப்பட்டிகையும்,
அரிதல் செய்யாத யோகமென்க ; வியாதிகளைக் கெடுக்கும் மருந்தென்றுமாம்.

171. வளைதரு குழியமும்—(இ - ள்.) கட்டுக்குழியமும்,

வால்வெண் கவரியும்
(இ - ள்.) மிகவும் வெள்ளிய சாமரமும்,

172. ஏனப் படமும்—(இ - ள்.) பன்றிமுகக்கடகும்,

கிடுகின் படமும்—(இ - ள்.) தோற்கடகும்,

173. கானப் படமும்—(இ - ள்.) கானமாகிய கடகும், கானத்துள்ளனவெல்லாம் எழுத்துதலிற் கானமாயிற்று.

காழூன்று கடிகையும்—(இ - ள்.) குத்துக்கோல்களும்,

174. செம்பிற் செய்நவும்—(இ - ள்.) செம்பாற்செய்தனவும்,

கஞ்சத் தொழிலவும்—(இ - ள்.) கஞ்சத்தாற்செய்தனவும்,

175. வம்பின் முடிநவும்—(இ - ள்.) புதுமையாக முடிவனவும்; என்றது அல்லிக்கயிறு குசைக்கயிறு முதலியன; வம்பு - கயிறுமாம்.

மாலையிற் புனைநவும்—
(இ - ள்.) மாலையின் வர்க்கமாகப் புனைவனவும்,
என்றது தூக்குவர்க்கம்; கிடையான் மாலைவிசேடங்களாகப் புனைந்து விற்பனவும் பூமாலைவர்க்கமுமென்ப.

176. வேதினத் துப்பவும்—
(இ - ள்.) ஈர்வாள் தொடக்கத்தனவாகிய கருவிகளும்; துப்பு - கருவி.

கோடுகடை தொழிலவும்—
(இ - ள்.) ஆனைக்கோடு முதலியவற்றைக்கடையும் தொழிற்குரிய கருவிகளும்,

177. புகையவும்—(இ - ள்.) அகிற்புகைக்கு உறுப்பாயுள்ளனவும்,
அவை "நேர்கட்டி செந்தேன்......ஆறு" என்பன.

சாந்தவும்—
(இ - ள்.) மயிர்ச்சாந்துக்கு உறுப்பாயுள்ளனவும்; மெய்ச்சாந்துறுப்புமாம்.

பூவிற்புனைநவும்—
(இ - ள்.) பூவாற் புனையப்படும் மாலைவிசேடங்களாயுள்ளனவும்,

178 - 9. வகைதெரிவறியா......அங்காடி வீதியும்
(இ - ள்.) இச்சொல்லப்பட்ட வகைகள் இன்னதற்கு இவையெனத் தெரிதற்கரிய இவ்வளங்கள் தலைமயங்கியிருக்கின்ற அரசரும் காண்டற்கு விரும்பப்படும் செல்வத்தையுடைய அங்காடித் தெருவுமென்க.

இங்ஙனம் பெரியகடை ஒருவாற்றுற்கூறி, இரத்தினக்கடையும் பொற்கடையும் கூறுவார்.

180 - 83. காகபாதமும்......நலங்கேழொளியவும்
இனி அம்மணிகளொன்பதிலும் வயிரத்திற்குக் குற்றமும் குணமும் கூறுவார்.

(இ - ள்.) நூலோராற் குன்றுதலையுடையவென்று வரைந்துசொல்லப் பட்ட குற்றம் பன்னிரண்டினுள், காகபாதமும் களங்கமும் விந்துவும் ஏகையுமென்னும் இக்குற்றங்கள் நான்கும் நீங்கிக் குன்றாவாகிய குணங்கள் ஐந்தையும் வருண நான்கின் நிறங்களையும் இந்திரசாபம் போலும் ஒளியையுமுடைய வயிரச்சாதியும்,

இவற்றுட் குற்றம் பன்னிரண்டாவன :—[1] சரைமலம் கீற்று சப்படி பிளத்தல் துளை கரி விந்து காகபாதம் இருத்து கோடியில்லன கோடி முரிந்தன தாரைமழுங்கலெனவிவை; [1] "சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்தல், துளைகரி விந்து காக பாதம், இருத்துக் கோடிக ளிலாதன முரிதல், தாரை மழுங்கறன்றோ, டீராறும் வயிரத் திழிபென மொழிப" என்றாராகலின். இனிக் குணங்கள் ஐந்தாவன : எட்டுப்பலகையும், ஆறு கோடியும், தாரையும், சுத்தியும், தராசமுமெனவிவை; [1] "பலகை யெட்டுங் கோண மாறும், இலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமும், ஐந்துங் குணமென் றறைந்தனர் புலவர், இந்திர சாபத் திகலொளி பெறினே" என்றார். நால்வகை வருணத் தொளியாவன : "அந்தணன் வெள்ளை யரசன் சிவப்பு, வந்த வசியன் பச்சை சூத்திரன், அந்தமில் கருமையென் றறைந்தனர் புலவர்." இனி, மிக்ககுற்றங்கள் நான்கின் பயனாவன : "காக பாத நாகங் கொல்லும்", "மலம்பிரி யாதது நிலந்தரு கிளை கெடும்", "விந்து சிந்தையிற் சந்தா பந்தரும்", "கீற்று வரலினை யேற்றவர் மாய்வர்" எனவரும். இனி, வருண நான்கின் பயனாவன :— "மறையோ ரணியின் மறையோ ராகிப், பிறவி யேழும் பிறந்துவாழ் குவரே", "மன்னவ ரணியின் மன்னவர் சூழ, இந்நில வேந்த ராவரெழு பிறப்பும்", "வணிக ரணியின் மணிபொன் மலிந்து, தணிவற வடைந்து தரணியில் வாழ்வர்", "சூத்திர ரணியிற் றேகையர் கனக நெல், வாய்ப்ப மன்னி மகிழ்ந்துவாழ் குவரே" என வரும். ஏகை - இரேகை. இயல்பெனவே பலகை எட்டென்பதூஉம், கோடி ஆறென்ப தூஉம் பெறுதும். குன்றாவென்பதனை அருத்தாபத்தியாக்கிக் குன்று தலையுடையவெனக் குற்றம் நான்கிற்கும் ஏற்றுக. நுழை நுண்கோடி - இருபெயரொட்டாய் மிகவும் கூர்த்தகோடி யென்பதாயிற்று. ஒளிய வெனவே குறிப்பெச்சமாய் வலனென்பாயிற்று.

முன்னர் வலனென்பாகிய வயிரச்சாதிகூறி, இனி அவன் †வயிற்றிற் பித்தத்தைக் கொத்தி விழுங்கிய கருடன் நகைத்தலான் உமிழ, அஃது இமவான் முதலிய பன்மலைகளினும் ஊறிப் பிறத்தலிற் கருடோற்கார மென்று பெயர் பெற்ற மரகதச்சாதி கூறுவார்.

## 184 - 5. ஏகையும்......கதிரொளியவும்

(இ - ள்.) ஏகையும் மாலையுமென்னும் குற்றங்களை இருளென்னும் குற்றத்தோடே நீக்கின பசுமை நிறைந்த மெய்யையுடைய பசிய கதி ரொளி பரந்த மரகதச் சாதியும்,

---

[1] திருவால. 25 : 18.

(பி - ம்.) † 'வயிற்றின்புறத்தை'

இதற்குக் குற்றமெட்டு உள ; அவை :—[1] கருகல் வெள்ளை கல் மணல் † கீற்று பொரிவு தராசம் இறுகுதலெனவிவை ; என்னை ? "கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப், பொரிவு தராச மிறுகுதன் மரகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப" என்றாராகலின். இவற்றுள், மிக்க குற்றமுடையன இம்மூன்றுமென்றுரென்க. ஏகை = இரேகை - கீற்று ; மாலை - தார் ; இருள் - கருகுதல். பாசார் மேனிப் பசுங்கதி ரொளி யென்ற மிகையானே குணங்களும் எட்டென்பதே பெறுதும்; "நெய்த்தல் கிளி மயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன் னுடன் பசுத்தல், ‡ பத்தி பாய்தல் பொன்வண் டின்வயி, றுத்துத் தொளிதலோ டெட்டுங் குணமே" என்றாராகலினெனக்கொள்க.

## 186 - 7. பதுமமு நீலமும்......விளங்கிய சாதியும்

(இ - ள்.) நூல்களில் விதித்த முறையிற் பிழையாவாய் விளங்கிய பதுமமும் நிலமும் விந்தமும் படிதமுமென்னும் நால்வகைச்சாதி **மாணிக்க** வருக்கமும்,

விதிமுறை பிழையாவெனவே பிறப்பிடமும், வருணமும், பெயரும், குணமும், குற்றமும், நிறமும், விலையும், பத்தியுமென்னுமிவையும் பிற வும் அடங்கின ; என்னை ? [2] "மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச், சம னொளி சூழ்ந்த வொருநான் கிடமும், நால்வகை வருணமும் நவின்றவிப் பெயரும், பன்னிரு குணமும் பதினறு குற்றமும், இருபத் தெண்வகை யிலங்கிய நிறமும், மருவிய விலையும் பத்தி பாய்தலும், இவையென மொழிப வியல்புணர்ந் தோரே" என்றாராகலின். இவற்றுள், பதுமம் - பதுமராகம் ; சாதுரங்க மென்பதும் அது. நீலம் - நீலகந்தி ; சௌகந்தி யென்பதும் அது. விந்தம் - குருவிந்தம் ; இரத்தவிந்துவென்பதுமது. படிதம் - கோவாங்கு ; என்னை ? "வன்னியிற் கிடக்கும் வருணநாற் பெயரும், உன்னிய சாதுரங்க மொளிர்குரு விந்தம், சௌகந்தி கோவாங்கு தானு கும்மே" எனவும், [3] "தாமரை கழுநீர் சாதகப் புட் கண், கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, மாதுளைப் பூவிதை வன்னியீ ரைந்தும், ஓதுசா துரங்க வொளியா கும்மே" எனவும், "திலக முலோத் திரஞ் செம்பருத் திப்பூக், கவிர்மலர் குன்றி முயலுதிரம்மே, சிந்துரங் குக்கிற் கண்ணென வெட்டும், எண்ணிய குருவிந்த மன்னிய நிறமே" எனவும், "கோகிலக்கண் செம்பஞ்சு கொய்ம்மலர்ப் பலாசம், அசோக

---

[1] திருவால. 25 : 21-ஆம் பாடலைப் பார்க்க.

[2] திருவால. 25 : 11-ஆம் பாடல் முதலியவற்றைப் பார்க்க.

[3] "சாதகப் புட்கண் டாமரை கழுநீர், கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, வன்னி மாதுளம் பூவிதை யென்னப், பன்னுசா துரங்க வொளிக் குணம் பத்தும், செம்பஞ் சரத்தந் திலக முலோத்திரம், முயலின் சோரி சிந்துரங் குன்றி, கவிரல ரென்னக் கவர்நிற மெட்டாம், குருவிந் தத்திற் குறித்தன நிறமும், அசோக பல்லவ மலரிசெம் பஞ்சு, கோகிலக் கண்ணீ ரிலவலர் செம்பெனத், தருசௌ கந்தி தன்னிற மாறும், செங்கல் குரா மலர் மஞ்சள் கோவை, குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமும்......இவை யெனக் கூறிய நிறையருட் கடவுள்" என்றார் கல்லாடத்தினும்.

(பி - ம்.) † 'காற்று' ‡ 'வத்தி'

பல்லவ மணிமலர்க் குவளை, இலவத் தலர்க ளென்ருறு குணமும், சௌகந்திக்குச் சாற்றிய நிறனே" எனவும், "கோவைநற் செங்கல் குராமலர் மஞ்சளெனக், கூறிய நான்குங் கோவாங்கு நிறனே" எனவும் சொன்னர். ஒழிந்தனவும் விரிப்பின் உரை பெருகும்; வந்தவழிக் கண்டுகொள்க.

188. பூச வுருவிற் பொலந்தெளித் தனையவும்

(இ - ள்.) பூசத்தினது உருவினையுடைய பொன்னை மாசறத் தெளிய வைத்தாலொத்த புருடராக வருக்கமும்.

189. தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்

(இ - ள்.) குற்றமற்ற ஞாயிற்ருெளியெனத் தேன் துளியெனச் சொல்லப்பட்ட வயிடூரிய வருக்கமும்,

190. இருடெளித் தனையவும்—

(இ - ள்.) இருளைத் தெளியவைத்தாலனைய **நீலமணி** வருக்கமும்,

இதற்குச் சாதிநான்கும், குணம் பதினென்றும், குற்றம் எட்டுமெனக் கொள்க; என்னை? [1] "நீலத் தியல்பு நிறுக்குங் காலை நால்வகை வருணமு நண்ணுமா கரமும், குணம்பதி னென்றுங் குறையிரு நான்கும், அணிவோர் செயலு மறிந்திசி னோரே" என்ருராகலின்; "வெள்ளை சிவப்புப் பச்சை கருமையென், றெண்ணிய நாற்குலத் திலங்கிய நிறமே", "கோகுலக் கழுத்துக் குவளை சுரும்பர், ஆகுலக் கண்க ளவிரிச் சாறு... ...காயாநெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குணம் பதினென்ருமே" என்பன. இனிக் குற்றம் வந்தவழிக் கண்டுகொள்க.

இருவே றுருவவும்—

(இ - ள்.) மஞ்சளும் சிவப்பும் கலந்தாலொத்த நிறத்தையுடைய கோமேதக வருக்கமும்,

191 - 2. ஒருமை......மணிகளும்—(இ - ள்.) ஒரு முதலிற் ருேன்றி வேறுபட்ட ஐந்து வனப்பினையுடைய மாணிக்கம் புருடராகம் நீலம் கோமேதகம் வயிடூரியமென்னும் ஒளிவிடு மணிகளும்,

இவை ஒருவயிற் பல்பிறப்பு.

193 - 6. காற்றினு மண்ணினும்......தொகுதியும்

(இ - ள்.) காற்றினும் மண்ணினும் கல்லினும் நீரினுமுண்டாய்த் தோற்றிய மிக்க குற்றங்கள் ஒரு துகளளவும் இல்லையாதலாலே தெளிந்த ஒளியை யுடையனவும் [2] †வெள்ளி அங்காரகன்போல வெண்ணீர்மை செந்நீர்மையை யுடையவாய் உருண்டனவுமான முத்தவருக்கமும்,

காற்றேறு மணலேறு கல்லேறு நீர்நிலையென்பன மிக்க குற்றங்கள்; பிறவும் குற்றங்கள் பலவுளவாயினுமென்க. சந்திரகுரு - வெள்ளி; வெள்ளி, அங்காரகனென்பன மிக்க குணமுடையன; பிறவும் குணங்களுளவாயினுமெனக்கொள்க. வட்டம் - ‡ கவடுவட்டம்.

---

[1] திருவால. 25 : 19-ஆம் பாடலைப் பார்க்க. [2] சிலப். பக். 116.

(பி - ம்.) † 'சந்திரன் வெள்ளி' ‡ 'நடுவட்டம்'

### 197 - 8. கருப்பத்துளையவும்...செங்கொடி வல்லியும்

(இ - ள்.) கருப்பத்தே துளைபட்டனவும் கல்லிடுக்கிற் புக்கு முடங்கு பட்டனவும் திருக்கு முறுக்குண்டெழுந்தனவுமென்னும் இக்குற்றங்கள் நீங்கிய செம்மை மிக்குக் கொழுவிதாக வளர்ந்த கொடிப்பவள வருக்கமும்,

இவை மிக்க குற்றங்கள்; பிறவும் குற்றங்களுளவாயினு மெனக் கொள்க. இனிக் குணமிக்குக் குற்றங்கள் நீங்கியன, நிறமும் உருட்சியும் [1] சிந்துரமும் ஈச்சங்காயும் முசுமுசுக்கைக்கனியும் தூதுவழுதுணம் பழமும் போல்வனவெனக்கொள்க.

### 199 - 200. வகைதெரி......வீதியும்

(இ - ள்.) இவ்வொன்பது வகைப்பட்ட மணியின் பிறப்புமுதல் சிறப்பீறுகிய வகைகளைத் தெரியவல்ல வணிகர் தொகுதலாற் சிறப்புப் பெற்றோங்கிப் பகைவரால் தெறுதற்ரெழிலை எக்காலத்தும் கண்டறியாத பயன்மிக்க இரத்தினக் கடைத்தெருவும்,

[2] பகைவர்தெறுதலைக் கனவிலும் நினைந்தறியாதவெனவுமாம்.

### 201 - 4. சாதரூபங் கிளிச்சிறை......வீதியும்

(இ - ள்.) சாதரூபமும் கிளிச்சிறையும் ஆடகமும் சாம்பூநதமுமென்னும் நால்வகைச் சாதிப் பெயர்பெற்றோங்கிய கோட்பாட்டையுடைய பொற்பேதத்தைப் பகுத்தறியும் பொன்வாணிகர் எவ்விடத்து எப்பொன் உள்ளதென்று ஐயுறுந் துன்பம் ஒழிக்கும்படி இவ்விடத்து இப்பொன் உளதென விளக்கக் கொடிகள் வயின்ருேறுமெடுக்கும் நன்மை பொருந்திய பொற்கடைகளும்,

ஒழித்து - ஒழிப்ப. ஆங்கு - அந்த இடங்களிலே.

### 205 - 7. நூலினு மயிரினும்......அறுவை வீதியும்

(இ - ள்.) நுண்ணிய பருத்தி நூலினும் எலிமயிரினும் பட்டு நூலினும் தத்தம் பகுதிகளால் நெய்யப்பட்டு முற்கூறிய துகில் வருக்கங்களில் ஒவ்வொன்றை நூறாகத் தெரிந்தடுக்கப்பட்ட அடுக்குப் பல நூறாகிய மடிப்புடைவைகள் நெருங்கவைத்த புடைவைக் கடைகளும்,

புடைவைக் கடைகளுக்கு வாசங்கொளுத்துதலின், 'நறுமடி' என்றார்.

### 203 - 11. நிறைக்கோற் றுலாத்தர்......கூலவீதியும்

(இ - ள்.) நிறுக்கும் துலாக்கோலையுடையராய் மறிக்கும் பறையையுடையராய் அளக்கும் மரக்காலையுடையராய்த் தரகுசெய்வார் நின்றுழி நில்லாது எங்கணும் தடுமாறும்படி எக்காலமும் பெரிய மிளகுபொதியுடனே பாக்கும் நிறுக்கும் வேறு பண்டப்பொதிகளும் ஈரெண்வகைத்தாகிய கூலங்களும் குவித்த கூலக்கடைத்தெருவும்,

---

[1] திருவால. 25 : 20. [2] புறநா. 42 : 9.

பறைக்கட்பராரை - பராரைக் கட்பறையென்க. என்றது பரிய அரையையும் இரும்பால் வாய்மட்டாகக் கட்டின கண்ணையுமுடைய பறையென்றபடி. அம்பணம் - தரகர் அளக்கும் மரக்கால். காலமன்றியுமென்றற்கு இரவும் பகலுமெனவுமாம். கருமை - பெருமை. இதனை மூடைக்கேற்றுக; கறிக்கேற்றினும் அமையும்; மூடை - பொதி. ஒடு: எண்ணொடு வாய்ப் பின்னும் சில பண்டங்களின் ஒழிபை உணர்த்தி நின்றது. கூலம் - ஈரெண்வகைத்து; என்னை? "நெல்லுப் புல்லு வரகு......இராகியெண் கூலம்" எனவும், "எள்ளுக் கொள்ளுப் பயறுழுந் தவரை, கடலை துவரை மொச்சை யென்றுங், குடனிவை முதிரைக் கூலத் துணவே" எனவும் சொன்னாராகலின்.

## 212 - 8. பால்வேறு தெரிந்த...கொடிமதிற் புறத்தென்

(இ - ள்.) குலம் நான்காகப் பகுத்த வகையால் தெரிந்த அந்தணர் அரசர் வணிகர் வேளாளரெனச் சொல்லப்பட்டார் இருக்கும் நான்காய் வேறுபட்ட தெருக்களும் முச்சந்தியும் நாற்சந்தியும் கோயிலங்காடியும் பலிபெறும் மன்றிடங்களும் கவர்க்கு நெறிகளும் தேர்வீதிகளுமாகிய இவ்விடங்களில் ஞாயிறு விசும்பின் நடுவாக நின்று முறுகி ஓடுதலின் அதனுடைய வெங்கதிர்கள் நுழையப்படாத புதிய கொடியும் படாகையுமென்னும் இவற்றின் பந்தர் நிழலிலே திரிந்து காவலனது பெரிய நகரியைக் கண்டு மகிழ்ச்சி யெய்துதலாலே பொருந்துழியறிதலை மறந்து போந்தானென்க.

கவலை - முடுக்குவழிகள். கதிர் மேடவீதியின் நீங்குதலின் விசும்பகடு திருகிய வென்றார். அகடு - நடு. திருகுதல் - முறுகுதல்; "தெறுகெதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின்" (அகநா. 89 : 1) என்றார் பிறரும். கொடி - சிறுகொடி. படாகை - பெருங்கொடி.

ஆர்ப்ப அவிழ்த்தமண்டிலம் துயிலெடுப்ப இயம்பச் சென்று ஏத்திச் சிறுமையுற்றேனென்றலும், கவுந்தியடிகள்; அனையையுமல்லை; பெற்றனையன்றே; வருந்தாதேகிப் போதீங்கென்றலும் மருங்கிற்போகி அயிராது புக்கு மகிழ்தரு வீதியும் இருபெருவீதியும் அங்காடிவீதியும் பயங்கெழுவீதியும் நலங்கிளர்வீதியும் அறுவைவீதியும் கூலவீதியும் நால்வேறு தெருவும் அந்தியும் சதுக்கமும் ஆவணவீதியும் மன்றமும் கவலையும் மறுகுமாகிய இவ்விடங்களில் பந்தர்நிழலில் திரிந்து காவலனூரைக் கோவலன் கண்டு மகிழ்வெய்திப் பெயர்ந்தானென வினைமுடிக்க.

இது நிலைமண்டிலம்.

---

## பதினைந்தாவது

# அடைக்கலக் காதை



நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி
கடம்பூண் டுருட்டுங் கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையுங் குடையின் றண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்
பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்
கறந்தரு நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து
தீதுதீர் மதுரையுந் தென்னவன் கொற்றமும்
மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழித்
தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடல னென்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து
தமர்முதற் பெயர்வோன் றாழ்பொழி லாங்கண்
வருந்துசெல் வருத்தத்து வான்றுயர் நீங்கக்
கவுந்தி யிடவயிற் புகுந்தோன் றன்னைக்
கோவலன் சென்று சேவடி வணங்க

---

1. நிலந்தருதிரு - விளைவு. நேமி - நேமியை.
2. கடம்பூண்டு - முறைமையை மேற்கொண்டு. கௌரியர் - பாண்டியர்.
6. ஆங்கு - அப்பொழுதே. (4) விளங்கிய (6) மூதூர்.
14. முனிவன் - அகத்தியன்.

---

அடி, 1. "நிலந்தரு திருவி னெடியோன்" (மதுரைக். 763); **பதிற்.** 82 : 16; "நிலந்தரு திருவிற் பாண்டியன்" (தொல். பாயிரம்.)

அடி, 2. கடம்பூணல் : **குறுந்.** 181 : 6; **மணி.** 3 : 70. அடி, 3-4 : **பட்டினப்.** 300-01.

அடி, 5. "பதியெழு வறியாப் பழங்குடி" (**சிலப்.** 1 : 15); **மலைபடு.** 479.

அடி, 7 : **சிலப்.** 13 : 195-6, 15 : 115-6.

அடி, 12. "நான்மறை முற்றிய வதங்கோட் டாசான்" (**தொல்.** பாயிரம்.)

நாவ லந்தணன் றானவின் றுரைப்போன்
வேந்து சிறப்பின் விழுச்சீ ரெய்திய
மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தன ளெடுத்து
†வாலா மைந்நா ணீங்கிய பின்னர்
மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுது மென்று
தாமின் புறூஉந் தகைமொழி கேட்டாங்
கிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கடல்
உடைகலப் பட்ட வெங்கோன் முன்னாள்
புண்ணிய தானம் புரிந்தோ னாகலின்
நண்ணுவழி யின்றி நாள்சில நீந்த
இந்திர னேவலி னீங்கு வாழ்வேன்
வந்தே னஞ்சன் மணிமே கலையான்
உன்பெருந் தானத் துறுதி யொழியாது
துன்ப நீங்கித் துயர்க்கட லொழிகென
விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த

---

20. நவின்றுரைத்தல் - பலகாற் சொல்லுகை.

24. வலாமை - தூய்மையின்மை.

25. முதுகணிகையராவார் - பாட்டிமார், தாய்மார்.

29 - 30. எங்கோனென்றது கோவலன் மரபினுள்ளானொருவனை; புண்ணியதானம் முன்பு செய்து ஒழுகினானாதலால்.

31. நண்ணுவழியின்றி - கரையைக் கிட்டுமிடமின்றி.

(28) கடலின் இடையிருள் யாமத்துக் (31) கரைகாணாது சிலநாள் நீந்திச செல்ல.

32. இந்திரனேவலால் இத்தீவிலுள்ளாரை அசுரர் வாதியாமற் காத்து இங்கு வாழ்வேன்.

34. நீ முன்பு செய்த தானங்களால் வந்த புண்ணியம் உன்னை விடாது; உறுதி யொழியாது; முற்று.

35. ஒழிகவெனச் சொல்லி.

---

அடி, 20. “நாவ லந்தண ரருமறைப் பொருளே” பரி. 1 : 13, 2 : 57.

அடி, 28 - 37 : மணி. 7 : 33 - 5, 21 : 181 - 2, 29 : 14 - 31.

அடி, 29. உடைகலப்படல் : மணி. 16 : 20, 18 : 64. அடி, 33 : மணி. 7 : 18.

(பி - ம்.) †‘வாலாமை நாணீங்கிய”

எங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
அணிமே கலையா ராயிரங் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய
ஞான நன்னெறி நல்வரம் பாயோன்
தானங் கொள்ளுந் தகைமையின் வருவோன்
தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கை மறையோன் றன்னைப்
பாகுகழிந் தியாங்கணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள
ஒய்யெனத் தெழித்தாங் குயர்பிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட் டடங்கி
மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்பப்
பிடர்த்தலை யிருந்து பெருஞ்சினம் பிறழாக்
கடக்களி றடக்கிய கருணை மறவ
பிள்ளை நகுலம் பெரும்பிறி தாக
எள்ளிய மனையோ ளினைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரு மாமறை யாளன்

---

37. எங்குல தெய்வமென்றான்; அவ்வுதவி பற்றி. என - என்று கோவலன் கூற.

41. பொழிய - பொழியா நிற்க.

(43) வருவோனாகிய (45) மறையோனை.

46. பாகு - பாகர்.

48. ஒய்யென - விரைய. தெழித்து - உரப்பி.

50. பொய் பொருந்து கை - பொய் பொருந்தின துதிக்கை. கோட்டடங்கி - கொம்புகளுக்கு நடுவே புக்கு.

53. கருணைமறவ - கிருபாவீரனே.

54. பிள்ளை நகுலம் - [1] கீரிக்குட்டி. பெரும்பிறிதாகை - மரிக்கை.

55. எள்ளிய மனையோள் - அவனால் இகழப்பட்ட மனையாள்.

---

அடி, 44-5: நாலடி. 14; மணி. 14:30-31. அடி, 45-53: சிலப். 30:120-24. அடி, 46: மணி. 4:41. அடி, 50. பொய்பொரு......கை: மலைபடு. 107. அடி, 51: சீவக. 1838.

[1] குட்டியென்னும் இளமைப் பெயர் கீரிக்கும் உரித்தென்பர் மயிலைநாதர்; நன். 387.

கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை
வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு
கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்
பீடிகைத் தெருவிற் பெருங்குடி வாணிகர்
மாட மறுகின் மனைதொறு மறுகிக்
கருமக் கழிபலங் கொண்மி னோவெனும்
அருமறை †யாட்டியை யணுகக் கூஉய்
யாதுநீ யுற்ற விடரீ தென்னென
மாதர்தா னுற்ற வான்றுயர் செப்பி
இப்பொரு ளெழுதிய விதழிது வாங்கிக்
கைப்பொரு டந்தென் கடுந்துயர் களைகென
அஞ்ச லுன்ற னருந்துயர் களைகேன்
நெஞ்சுறு துயர ‡நீங்குக வென்றுங்
கோத்துடை யந்தண ருரைநூற் கிடக்கையின்
தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானஞ் செய்தவ டன்றுயர் நீக்கிக்

57. நின் கைத்தூண் வாழ்க்கை-நின் ஒழுக்கத்தினால் நான் உண்டு வாழும் வாழ்க்கை; நீ இட்டதனை உண்டு வாழ்தல் கடவதன்றென்றுமாம்.

58. வடமொழி வாசகமாவது ஒரு கிரந்தம்; அது, "அபரீக்ஷ்ய நகர்த்தவ்யங் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம், பஶ்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம் யதா" என்பது.

59. கொடுக்கென - கொடுக்கவென.

62. கருமக் கழிபலங் கொண்மின் - இவ்வேட்டை வாங்கிப் பாவத்தைக் கழிக்கும் புண்ணியஞ்செய்து கொண்மின்; என்றது காரியமாயிருப்பதொரு நிமித்த பலமென்றவாறு; அஃதாவது தான் கொன்ற கொலைத்தொழில் நீங்கப் போன கணவன் வரும்படி தானம் பண்ண வேண்டும் பொருள் அளிக்கும் காரியமாயிருப்பதொரு நிமித்த பலம்.

63. (பா) கூவி - அழைத்து.

64. நீயுற்ற இடர் யாதென; ஈது என்னென - இவ்வேடு என்னென்று சொல்ல.

70. நூற்கிடக்கை - வேதவிதி. 71. தீத்திறம் - கொலைத்திறம்.

---

அடி, 57. "கைத்தூ ணல்க" (மணி. 16 : 6)

(பி - ம்.) † 'யாட்டியை யழைத்தனன் கூஉ, யாதுநீ யுற்றனை யிடரீங் கென்னென' ‡ 'நீங்குகென்றுங், கோத்துடை யந்தண னுரை'

காணம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ
பத்தினி யொருத்தி படிற்றுரை யெய்த
மற்றவள் கணவற்கு வறியோ னொருவன்
அறியாக் கரிபொய்த் தறைந்துணும் பூதத்துக்
கறைகெழு பாசத்துக் கையகப் படலும்
பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென் றெய்தி
என்னுயிர் கொண்டீங் கிவனுயிர் தாவென
நன்னெடும் பூத நல்கா தாகி
நரக னுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை
ஒழிகநின் கருத்தென வுயிர்முன் புடைப்ப
அழிதரு †முள்ளத் தவளொடும் போந்தவன்
‡சுற்றத் தோர்க்குந் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி யறுத்துப்
பல்லாண்டு புரந்த வில்லோர் செம்மல்
இம்மைச் ¶செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்

---

74. செல்வத் துறுபொருள் - செல்வத்திலே உற்ற பொருள்; செல்வத்தாலே யுற்றவென்றுமாம்.

75. செல்லாச் செல்வ - தொலையாச் செல்வ.

76. படிற்றுரை - பொய்ப்பழி. 77. வறியோன் - அறிவில்லான்.

79. கறைகெழு பாசம் - கரிய பாசம். 85. இழக்கும் - நழுவும்.

86. உயிரென்றது ஆகுபெயரான் உடம்பை.

89. கிளைஞரின் - கிளைஞரைப்போல.

90. இல்லோர் - வறியோர். செம்மல் - தலைவன். இல்லோர் செம்மலென்பதற்கு இல்லறத்தார் தலைவனென்றுமாம்.

---

அடி, 78. "அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லை" (குறுந். 184 : 1.)
அடி, 78-9 : சிலப். 5 : 128-34; மணி. 1 : 23-4; 22 : 49-56.
அடி, 90. இல்லோர் : புறநா. 95 : 8.
அடி, 91-3 : குறள், 169, பரிமேல், மேற்.

(பி - ம்.) † 'முள்ளத் தனொரொடு' ‡ 'சுற்றத் தோர்க்குத் துடர்' ¶ 'செய்த'

திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால நீயென வினவக்
கோவலன் கூறுமோர் குறுமகன் றன்னாற்
காவல் வேந்தன் கடிநகர் தன்னில்
நாறைங் கூந்த னடுங்குதுய ரெய்தக்
கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவும்
அணித்தகு புரிகுழ லாயிழை தன்னொடும்
பிணிப் †பறுத் தோர்தம் பெற்றி யெய்தவும்
மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து
காமக் கடவுள் கையற் றேங்க
அணிதிகழ் போதி யறவோன் றன்முன்
‡மணிமே கலையை மாதவி யளிப்பவும்
நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன் கடிதீங் குறுமென
அறத்துறை மாக்கட் ¶கல்ல திந்தப்
புறச்சிறை யிருக்கை பொருந்தா தாகலின்
அரைசர் பின்னோ ரகநகர் §மருங்கினின்

---

94. விருத்த கோபால - ஞான விருத்த கோபாலனே. வினவ-(92) ‘உம்மைப்பயன்கொல்’ என்றலால் மாடலன் வினவவென்க.

95. குறுமகன் - கீழ்மகன்.

98. கோட்டுமா - பன்றி; எருமைக் கடாவுமாம்.

100. பிணிப்பு - பற்று. பெற்றி - பெருமை = சுவர்க்கம்.

101. வாளி - வாளியை. 102. கையறவு - செயலறவு.

103. போதியறவோன் - புத்தன்.

106. கடிதீங்குறும் - பொல்லாததொன்று இவ்விடத்தே வரும்.

109. அகநகர் மருங்கில் அரசர் பின்னோரென்க.

---

அடி, 97. ஐங்கூந்தல் : கலித். 96 : 8. அடி, 100. “பிணிப்பறு மாதவன்” (மணி, 21 : 16). அடி. 101 : கலித். : 109 : 19-20. அடி, 102 : மணி. 3 : 23. அடி, 103. போதியறவோன் : மணி. 11 : 73-4 ; 12 : 101-2, 111 ; 15 : 26, 29 ; 28 : 174 ; 29 : 23-4 ; 30 : 10.

(பி-ம்.) † ‘பறுத்தோர் பெற்றியை’ ‡ ‘மணிமேகலையொடு மாதவி துறப்பவு, நனவே போலும்’ ¶ ‘கல்லதை யிந்தப், புறத்துறை வாழ்க்கை’ § ‘மருங்கி, னுரையிற்’

உரையிற் கொள்வரிங் கொழிகநின் னிருப்புக்
காதலி தன்னெடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியு மாமறை முதல்வனும்
கோவலன் றனக்குக் கூறுங் காலை
†அறம்புரி நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்
ஆயர் முதுமகண் மாதரி யென்போள்
‡காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்
ஆகாத் தோம்பி யாப்பய னளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலண் முதுமகள் செவ்விய ளளியள்
மாதரி ¶தன்னுடன் மடந்தையை யிருத்துதற்
கேத மின்றெனெ வெண்ணின ளாகி
மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கிற் §றன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் ||படுத்துவர்
உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும்

---

109 - 10. நின் உரை - மாசத்துவானென்னும் பிரகாசம்; வணிகர் நின் பிரகாசத்தாலே நின்னை அகநகர் மருங்கில் வைத்துக்கொள்வ ரென்றுமாம்.

(108) ஆதலால் (112) மதுரையிலே போவென்று (113) மாடலனும் கவுந்தியும் (114) கூறு நிற்கையில்.

117. பான்மடை - பாற்சோறு.

128. கடிமனைப் படுத்துவர் - காவலையுடைய தங்கள் வீடுகளிலே வைத்துக்கொள்வர்.

---

அடி, 112. மாடமதுரை : கலித். 33 : 17; புறநா. 32 : 5. அடி, 115 - 6 : சிலப். 13 : 195 - 6, 15 : 7 - 8. அடி, 129. உடைப்பெருஞ் செல்வம் : பழ. 200.

(பி - ம்.) † 'அறந்தரு' ‡ 'காவுந் திகையைக் கண்டடி வணங்க, ஆகாத் தோம்பி யாபய' ¶ 'தன்னெடு மடந்தையை யிருத்தற்' § 'றங்குல வாழ்நர்' || 'படுக்குவர்'

இடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்
மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கய னெடுங்க †ணஞ்சனந் தீட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து
தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமுங் காவலு மாயிழை தனக்குத்
தாயு நீயே யாகித் தாங்கீங்
கென்னொடு போந்த விளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் ‡பூங்கொடி
இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னும்
அத்தகு நல்லுரை யறியா யோநீ
தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினும்
மிகப்பே ரின்பந் தருமது கேளாய்
காவிரிப் படப்பைப் பட்டினந் தன்னுள்
பூவிரி பிண்டிப் பொதுநீங்கு திருநிழல்

138. அவளைப் புறப்பட விடாமையாலே அவளடியைப் பூமிதேவியும் கண்டறியாள்; இனி, கொப்புளங் கொண்டதென்பாள், 'மண்மகளறிந்திலள்' என்றாள் என்றும், காலின் மென்மைக்குத் தக்கபடி தானும் மெல்கிற்றிலளென்றுமாம்.

151. காவிரிப் படப்பைப் பட்டினம் - காவிரிப்பூம்பாக்கத்துப் பட்டினம்.

152. பொதுநீங்கு திருநிழல் - பிறிது மரம்போல ஆதித்தனுடன் திரியாது நிற்கும் நிழல்; ஆவது ஆதித்தன் கிரணத்தாற் சாயாதே நிற்றல்.

அடி, 143. "கற்புக்கடம்பூண்டு காதலன் பின்போந்த..... நங்கை" (சிலப். 29 : "தற்பயந்தாள்"); கற்புக்கடம்பூண்டு நுங்கடன் முடித்த" (மணி. 26 : 8). அடி, 145. பத்தினிப் பெண்டிர் இருந்த நாட்டில் வானம் பொய்யாது : கலித். 16 : 20; குறள், 55; திரி. 98; மணி. 15 : 77 - 8. அடி, 151. காவிரிப்படப்பைப் பட்டினம் : மணி. 25 : 16.

(பி - ம்.) † 'ணஞ்சன மூட்டித்' ‡ 'பூங்கொடி கற்பு'

உலக நோன்பிக ளொருங்குட னிட்ட
†இலகொளிச் சிலாதல மேலிருந் தருளித்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தம்முன்
திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்
தாரன் மாலையின் றமனியப் பூணினன்
பாரோர் காணாப் பலர்தொழு ‡படிமையன்
கருவிரற் குரங்கின் கையொரு பாகத்துப்
¶பெருவிறல் வானவன் வந்துநின் றோனைச்
சாவக ரெல்லாஞ் சாரணர்த் தொழுதீங்
§கியாதிவன் வரவென விறையோன் கூறும்
எட்டி சாயல னிருந்தோன் றனது
பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையிலோர்
மாதவ முதல்வனை மனைப்பெருங் கிழத்தி
ஏத நீங்க வெதிர்கொ ளமயத்
தூர்ச்சிறு குரங்கொன் றொதுங்கி யுள்புக்குப்
பாற்படு மாதவன் பாதம் பொருந்தி
உண்டொழி மிச்சிலு முகுத்த நீரும்
தண்டா வேட்கையிற் றான்சிறி தருந்தி
எதிர்முக நோக்கிய வின்பச் செவ்வியை

---

153. உலக நோன்பிகள் - சாவகர்.

156. (பா) திருவில் விட்டு - நல்ல ஒளியை விட்டு.

(158) பாரோர் கண்டறியா (160) வானவன் நின்றோனை.

(159) ஒரு பாகத்துக் கை குரக்குவடிவாயிருக்கின்ற (160) வானவன் வந்து நின்றோனைக் (162) கேட்க இறையோன் கூறும்.

163. எட்டி சாயலன் என்போன் ஒரு வாணிகன்; எட்டி : பட்டப் பெயர். இருந்தோனென்றார், தன்மம் செய்தவன்றானும் இங்கே யிருந்தானென்றற்கு.

168. தன்பாற்பட்ட மாதவத்தை யுடையவன்.

170. தண்டாவேட்கை - பசி.

170 - 71. பசிகெட்டு நோக்கிய முகச்செவ்வி.

---

அடி, 153 - 4 : சிலப். 10 : 24 - 5. அடி, 156 : மணி. 6 : 10. அடி, 157-8 : மணி. 3 : 36-7. அடி, 161. சாரணர் : சிலப். பக். 278, அடிக்.

(பி - ம்.) † 'இலங்கொளிச்' ‡ 'சிறப்பினன்' ¶ 'பொருவிறல்' § 'கியாதிவர் வரவென'

அதிராக் கொள்கை யறிவனு †நயந்துநின்
மக்களி னோம்பு மனைக்கிழத் தீயென
மிக்கோன் கூறிய ‡மெய்ம்மொழி யோம்பிக்
காதற் குரங்கு கடைநா ¶ளெய்தவும்
தானஞ் செய்வுழி யதற்கொரு கூறு
தீதறு கென்றே செய்தன ளாதலின்
மத்திம நன்னாட்டு வாரணந் தன்னுள்
உத்தர கௌத்தற் கொருமக னாகி
உருவினுந் திருவினு முணர்வினுந் தோன்றிப்
பெருவிறற் றானம் பலவுஞ் செய்தாங்
கெண்ணா லாண்டி னிறந்த பிற்பாடு
§விண்ணோர் வடிவம் பெற்றன னாதலிற்
பெற்ற செல்வப் பெரும்பய னெல்லாம்
தற்காத் தளித்தோ ||டானச் சிறப்பெனப்
பண்டைப் பிறப்பிற் குரங்கின் **சிறுகை
கொண்டொரு பாகத்துக் கொள்கையிற் ⁋புணர்ந்த
சாயலன் மனைவி தானந் தன்னால்
ஆயின னிவ்வடி வறிமி னோவெனச்
சாவகர்க் கெல்லாஞ் ‡‡சாற்றினன் காட்டத்
¶¶தேவ குமரன் றோன்றின னென்றலும்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
ஆரணங் காக வலந்தலைப் பட்டோர்
அன்றப் §§பதியு ளருந்தவ மாக்களும்

---

174. மொழி - மொழியை. 175. கடைநாளெய்த - மரிக்க.

176. தானமென்றது முன்பு சாரணர்க்குச் செய்துபோதுகிறதானம்.

178. வாரணம் - ஸ்ரீ வாரணாசி.

179. (பா) கவிப்பன் - பசுமறையத் தேடின பொருளுடையவன்.

193. ஆரணங்காக - மந்திர உபதேசமாகக்கொண்டு; மிக்க தெய்வப் பிரார்த்தியமாகக் கொண்டென்றுமாம்.

---

அடி, 182: பிற்பாடு : சிலப். 13 : 1. அடி, 192 : சிலப். 11 : 7.

(பி - ம்.) † 'நயந்து, மக்களி' ‡ 'மிகுமொழி' ¶ 'ளெய்தத், தானஞ்' § 'விண்ணோ ருருவம்' || 'டானப் பயனெனப்' ** 'சிறுவிரற்' ⁋ 'புணர்ந்து' ‡‡ 'சாற்றிக் காட்டத்' ¶¶ 'தேவர் குமரன்' §§ 'பதியி லருந்தவ'

தன்றெறல் வாழ்க்கைச் சாவக மாக்களும்
இட்ட தானத் தெட்டியு மனைவியும்
முட்டா †வின்பத்து முடிவுல கெய்தினர்
கேட்டனை ‡யாயினித் தோட்டார் குழலியொடு
நீட்டித் திராது நீபோ கென்றே
கவுந்தி கூற வுவந்தன ளேத்தி
வளரிள வனமுலை வாங்கமைப் பணைத்தோள்
முளையிள வெண்பன் முதுக்குறை நங்கையொடு
சென்ற ஞாயிற்றுச் செல்சுட ரமயத்துக்
கன்றுதே ராவின் கனைகுர லியம்ப
மறித்தோ ணவியத் துறிக்கா வாளரொடு
செறிவளை யாய்ச்சியர் சிலர்புறஞ் சூழ
மிளையுங் கிடக்கும் வளைவிற் பொறியும்
¶கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
§பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்
தூண்டிலுந் ||தொடக்கு மாண்டலை யடுப்பும்

195. தன்றெறல் வாழ்க்கை - தன் மனத்துக்குள்ளானேர்க்கெல்லாம் பொதுப்பட்ட வாழ்க்கை; பொதுநிலப்பட்டோராகிய சாவகர்.

198. தோடார் குழலி : தோட்டார் குழலியென விகாரம்.

202. முதுக்குறை நங்கை - பெரிய அறிவினையுடைய நங்கை..

203. சென்ற ஞாயிறு - உவாவின் ஞாயிறு; செல்சுடரமயம் - இதனையுடைய மாலைப்பொழுது; விழுந்த ஞாயிற்றுச் சுடர் செல்லுகின்ற பொழுதின்கண்.

208. (பா) கருவிறல் - கொடிய வெற்றி.

209. பாகடு குழிசி - செம்புருக்கும் மிடா; சாணகங் 'கரைத்துக் காய்கிற மிடாக்களுமாம்.

210. இருப்பு வட்டுக்கள் காய்கிற உலை. கல்லிடுகூடை - இடங்கணிக்கல் வீசுங் கூடை.

211. தொடக்கு - கயிற்றுத் தொடக்கு. ஆண்டலையடுப்பு - ஆண்டலைப் புள்ளின் வடிவாகிய அடுப்பு.

அடி, 198. தோட்டார்குழல் : கலித். 117 : 10. அடி, 202. முளையிள வெண்பல் : சிலப். 7 : 16; மணி. 4 : 100. அடி, 205. உறிகட்டினகா : பெரும்பாண். 171. அடி, 206. செறிவளையாய்ச்சியர் : சிலப். 16 : 7. அடி, 207. விற்பொறி : பதிற். 22 : 23; பெருங். 3. 25 : 23. அடி, 210. கல்லிடுகூடை : பெருங். 3. 25 : 22. அடி, 211. ஆண்டலை யடுப்பு : மதுரைக். 29. அடி, 207-15. பலவகைப்பொறி : பு. வெ. 112; சீவக. 102.

(பி - ம்.) † 'வின்பதீ துயருல' ‡ 'யாயிற் றேட்டலர்' ¶ 'கருவிரற் கூகையுங்' § 'பரிவுறு நெய்யும்' || 'துடக்கு மாண்டலை யடக்கலுங்'

கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமுங் கைபெய ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமும்
கோலுங் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில் †கழிந்துதன் மனைபுக் கனளாற்
‡கோவலர் மடந்தை கொள்கையிற் புணர்ந்தென்.

---

212. கவை : கவைக்கோல். கழு - கழுக்கோல், புதை - அம்புக் கட்டு; மண்ணிற் புதைத்த இரும்பாணியுமென்ப. புழை - ஏவறை.

213. ஐயவித்துலாம் - கதவை அணுகாதபடி கற்கவி தொடங்கி நாற்றும் துலாம்; அப்புப்பற்றுக்கை தூக்கிற்றென்பாருமுளர்; சிற்றம்பு களை வைத்து எய்யும் இயந்திரமுமாம்.

கைபெயரூசி - கையின்கட் [1]பொதுக்கும் ஊசி; பொய்யூசியென்று பாடமோதி, மாற்றுரைக் கையைப் பொய்யாக்கும் ஊசியென்பாருமுளர்.

214. சிரல் - சிச்சிலி. பணை - வேய்வடிவாகப் பண்ணி வைப்பது; முரசென்பாருமுளர்; குதிரைப் பந்தியுமாம்.

215. எழுவுஞ் சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலேவீழாது எடுக்கவிடும் கரங்கள் [சீப்பு = விசை]; கதவோடு பொருந்தின மேலிற் றுழுமாம்; நிரைத்த கதவுமாம். திறக்கும் காலத்து மேலே யெழுப்பு கையால், எழுவுஞ் சீப்பென்றார். கணையம் - சீப்பு அகப்படக் குறுக்கே போடக்கடவ மரம்.

216. கோல் - விட்டேறு. குந்தம் - சிறு சவளம்.

217. நாட்கொடி - நல்ல நாளிலே கட்டின கொடி; நாள்தோறும் செய்த வெற்றிக்குக் கட்டின கொடியுமாம்.

219. கோவலர் மடந்தை - இடைச்சியான மாதரி.

(219) கோவலர் மடந்தை அடைக்கலங்கொண்ட கொள்கையொடு (218) வாயில் கடந்து தன் மனை புக்காளென்க.

---

அடி, 213. ஐயவித்துலாம் : பதிற். 22 : 23. அடி, 215. “ஏணியுஞ் சீப்பு மாற்றி, மாண்வினை யானையு மணிகளைந் தனவே” (புறநா. 305 : 4-5); “சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக், காப்புள் ளுறுத்த கடிமதில் வாயில்” (பெருங். 1. 43 : 163-4)

[1] பொதுக்கும் - துளைக்கும்; “அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பிறு லாடும்” (கம்ப. இரணிய. 2)

(பி - ம்.) † ‘கடந்துதன்’ ‡ ‘கோவலன் மடந்தையொடு கொள்கை யிற் சிறந்தென்’

1-8. நிலந்தரு திருவின்......பொழிலிடம் புகுந்து

(இ-ள்.) நிலத்திற்குப் பலதிருவினையுந்தரும் அருளாகிய நிழலிடத்தே நின்று நேமியை முறைமையான் மேற்கொண்டு செலுத்தும் பாண்டியருடைய மிக்க புகழ் பொருந்திய கோலினது செம்மையும் குடையினது தண்மையும் வேலினது வெம்மையும் விளங்குதற்கிடமாகிய கோட்பாட்டையுடைய அவ்விடத்தினின்றும் நீங்குதலறியாத முறைமை மேம்பட்ட மதுரை மூதூராகிய மாநகரைக் கண்டு அந்நகரில் அறத்தைப் பிறர்க்கருளும் நெஞ்சினையுடைய அறவோர் பயின்ற புறமதிற்கண் உள்ளதாகிய மூதூர்ப்பொழிலிடத்தே தபோதனரிருக்கும் பள்ளிக்கண்ணே புகுந்தென்க.

இனி, நிலந்தருதிரு - விளைவு; [1] அதனிழலிடத்தே நின்றெனினும் அமையும். நேமி - ஆணைச்சக்கரம். கௌரியர் - பாண்டியர். கொற்றம் - வெம்மை. தருதல் - கொடை.

9-10. தீதுதீர் மதுரையும்......கோவலன் கூறுழி

(இ - ள்.) தீதுகள் நீங்கிய மதுரையின் சிறப்பையும் தென்னவன் கொற்றத்தையும் கவுந்தியடிகளுக்குக் கோவலன் கூறுகின்றவளவிலே யென்க.

தீது - [2] பசியும் பிணியும் பகையும். தீர்தல் - நீங்குதல். 'கோலின் செம்மை' என்பதனால் பசிநீங்குதலும் ["கோணிலை திரிந்து நாழி... கோல் கோடினென்றான்" சீவக. 255) என்பதனாற்கொள்க], 'குடையின்றண்மை' என்பதனாற் பிணி நீங்குதலும் ["கண்பொர விளங்கு நின்விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே" (புறநா. 35 : 19-21) என்பதனாற் கொள்க], "வேலின் கொற்றம்" என்பதனாற் பகைநீங்குதலும்...... கொள்க.

11-3. தாழ்நீர்வேலி......மாடல னென்போன்

(இ - ள்.) தாழ்ந்தநீரை வேலியாகவுடைய [3]தலைச்செங்காடென்னும் ஊரிடத்து நான்கு வேதத்தினையும் ஓதிமுடித்த நலத்தைப்புரிந்த கோட்பாட்டையுடைய மறையவர்க்கு முதல்வனாகிய மாடலனென்று பெயர் கூறப்படுவோனென்க.

நீர்வேலி - கிடங்குமாம்.

14-9. மாதவமுனிவன்......சேவடிவணங்க

(இ - ள்.) அந்த மாடலனென்போன், அகத்தியனுடைய பொதியின் மலையை வலங்கொண்டு குமரியாற்றில் தீர்த்தமாடும்முறைமையின் ஆடித்தனது குடும்பம் இருக்கின்றவிடத்திற்கு மீண்டுவருகின்றவன் வழிவந்த வருத்தத்தானுண்டாய துயரம் நீங்குதற்குக் கவுந்தியடிகள் இருந்த பள்ளியிடத்தே சென்று புகுந்தவனைக் கோவலன் சென்று வணங்க என்க.

---

[1] "அலகுடை நீழலவர்" (குறள், 1034), "நெல்லின்பொழில் சூழ்ந்த நின்றியூர்" (தே) என்பவை இங்கே அறியற்பாலன.

[2] "பசியும் பிணியும் பகையு நீங்கி" (சிலப். 5 : 72; மணி. 1 : 70)

[3] தலைச்செங்காடென்பது காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்மேற்கிலே நான்கு நாழிகைவழித் தூரத்திலுள்ள தேவாரம் பெற்ற சிவஸ்தலம்.

தமர்முதல் - தமரிடம். வகுந்து - வழி; "வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே" (242) என்றார் மலைபடுகடாத்தினும். இடவயின் - இடத்தில்.

வான்றுயர்நீங்கத் தாழ்பொழிலாங்கட் கவுந்தியிடவயிற் புகுந்தோ னென்க,

20. நாவ லந்தணன் றனவின் றுரைப்போன் :—

(இ - ள்.) நாவாற் சொல்வன்மையையுடைய அந்தணன் நீ இங்ஙனம் வருதற்குக் காரணம் யாதென்று இவனை வினவித்தான் உரைக்கின்றவன் என்க.

21 - 7. வேந்துறு சிறப்பின்...தகைமொழி கேட்டாங்கு

(இ - ள்.) கரிகாலன் கொடுத்த மிக்க தலைவரிசையாற் சிறந்த புகழினைப் பெற்ற மாவின்தளிர்போலும் மேனியையுடைய மாதவியாகிய மடந்தை மேற்பெறக்கடவ நல்ல பகுதியைத் தன்னிடத்தேயுடைய குழவியைப் பயந்தெடுத்து வாலாமையாகிய நாட்கள் நீங்கியபின் மிகவும் பிராயமுதிர்ந்த கணிகையர் மாதவிமகட்கு நாமகரணம் பண்ணுவோமென்று தாம் மகிழ்வுற்றுச் சொல்லிய மங்கலமொழியைக் கேட்டு அப்பொழுது,

வாலாமை - ஆசௌசம். முதுக்கணிகையர் - தாயத்தாராயபெண்டிர்; அவர் [1]சித்திராபதி முதலாயினார். முன்னர்க் குழவியென்றதன் பொதுமை நீங்க 'மகட்கு' என்றார். நாட்டுதும் : பன்மைத்தன்மை. நாட்டுதல் - நிறுத்தல்.

28 - 37. இடையிருள் யாமத்து...பெயரீங் கிடுகென

(இ - ள்.) முன்னாளிலே எறியும் திரைகளையுடைய கடலிடத்து இடையிருள் யாமத்தில் தன் மரக்கலம் உடையப்பட்ட எங்கோன் முற்பவத்திற் புண்ணியத்தையும் தருமதானத்தையும் செய்தோனாதலின் தன்னையணுகும் இடையூறு ஓரிடத்துமின்றி அக்கடலிடையே [2]சிலநாள் நீந்துழி, ஒருதெய்வம் தோன்றி, இத்தீவினுள்ளாரை அரக்கர் வாதை பண்ணமல் இந்திரனேவலாலே பாதுகாத்து வாழ்கின்ற யான் நின் துயர் கண்டு அதனை யொழித்தற்கு வந்தேன்; இனி அஞ்சாதொழிக; என் பெயர் மணிமேகலைகாண்; என்னாலன்றியும் நீ முன் பண்ணிய தான மிகுதியான்வரும் புண்ணியமும் நின்னை ஒழியாதாகலான், நீ இத்துன்பத்தினின்றும் நீங்கி இக்கடலினின்றும் ஏறுவாயாகவெனச் சொல்லித் தன்விஞ்சையால் ஒரு திடரிற் பெயர்த்து இடும்பையைத்தீர்த்த [3]எம் குலதெய்வத்தினுடைய பெயரை ஈங்கு நீரிடுமினென்று நீ சொல்லவென்க.

கரைகாணுக்கடலென்பார் பெருங்கடலென்றார்; எங்கோன் - எம்மரபில் முற்பட்டான். முன்னாளென்பதை உடைகலப்பட்டவென்பதனோடும்

---

[1] சித்திராபதி - மாதவியின் தாய்; மணி. 2 : 70 - 71.

[2] சிலநாளென்றது ஏழுநாளை; மணி. 29 : 19.

[3] இதனை, "திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக், கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென், நாமஞ் செய்த நன்னாளள்ளிருட், காமன் கையறக் கடுநவை யறுக்கு, மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே, நனவே போலக் கனவகத் துரைத்தேன்" (மணி. 7 : 33-8) என்பதனாலுமறிக.

புண்ணியதானமென்பதனோடுமொட்டுக. நண்ணுவழியின்றி யென்பதற்குக் கரை சேருமிடமின்றியென்றும் உரைப்பர். புண்ணியதானம்: உம்மைத்தொகை. தானத்துறுதி - தானப்பயன்; ஆவது புண்ணியம். விஞ்சையிற்பெயர்த்தென்பதற்கு இக்கரையிலே மீளவும் தந்தெனினும் அமையும். எங்குலதெய்வம் - எம் குலத்தை யுண்டாக்கிய தெய்வம்; இன்னும் விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்தவென்பதற்குத் தன் விஞ்சையினாலே போயபொருளும் [கல்வியும்] வஞ்சமறத்தந்து இடும்பையைத் தீர்த்த எம் குல தெய்வமெனினும் அமையும்; "விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றேழுரோ, டெஞ்சிய வான்பொருளெல்லா மிமைப்பினுள், வஞ்சமொன் றின்றி யறிந்தே தருகுவன், நெஞ்சிற் குழைந்து நினையன்மி னென்றான்" (சீவக. 520) என்றார் பிறரும்.

ஈங்கு - இக்கடலிடத்தெனவும், இந்நகரிடத்தெனவும், இப்படி விபத்தினின்றும் எடுப்பதற்கெனவுமாம்.

வந்தேன்; அஞ்சல்; உறுதியொழியாது; நீங்கி ஒழிகெனப் பெயர்த்துத் தீர்த்த எம் குலதெய்வமென்க.

## 38 - 41. அணிமே கலையார்...செங்கையிற் பொழிய

(இ - ள்.) அணிந்த மேகலையையுடைய அநேகங்கணிகையர்கூடி மணிமேகலையென்று பெயர்கூறி அரசனையும் நகரையும் வாழ்த்திய அற்றைநாளிலே நிறைந்த அழகையுடைய மடந்தையாகிய மாதவியுடனே செம்பொன்னாகிய மாரியைச் செங்கையாலே நீ பொழியாநிற்கவென்க.

## 42 - 7. ஞான நன்னெறி ......கைக்கொள

(இ - ள்.) அங்ஙனம் பொழியாநிற்க, [1]வீட்டுலகஞ் சேர்தற்கு நல்ல நெறியாகிய ஞானத்திற்குத் தானெல்லையாகிய மறையோனொருவன் தன் மூப்பான் யாக்கை வளைந்து நடை தளர்தலால் தான்பிடித்ததண்டினையே காலாகவூன்றிக் கூனின யாக்கையையுடையனாய்த் தானங்கொள்ளுதற்குத் தன்னைமதித்து வருகின்றவனைப் பாகர்செயலைக்கழிந்து எங்கணும் பறை கொட்டவருகின்ற மதவேகத்தையுடைய யானை சினத்தாற் கைக்கொண்டதாகவென்க.

## 48 - 53. ஒய்யெனத் தெழித்தாங்கு...கருணை மறவ

(இ - ள்.) அங்ஙனம் மறையோனைக் கைக்கொண்டவளவிலே யானையை அவனை நெருங்காதொழியென உரப்பி அக்கணத்திலே சென்று சேர்ந்து தன் கையாலே மறையோனை நீக்கி அதன் கையில் தான் புக்க வளவிலே யானைகையால் வளைப்பப் புரைபொருந்திய வளைந்த கையினின்று நீங்கி வெளிய கோட்டிலே யடங்கி அது பற்றுக் கோடாகவேறிக்கரிய பெரிய குன்றின்மேல் இருந்த விஞ்சையனைப்போல அதன் பிடரினிடத்திருந்து மிக்க சினம் நீங்காத மதத்தையுடைய களிற்றை யடக்கிய கிருபாவீரனே!

---

[1] "தானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமாம், ஞானத்தால் வீடாக நாட்டு" (சிறுபஞ்ச. 36), "ஞான முன்னிய நான்மறை யாளர் கைத், தான மென்னத் தழைத்தது நீத்தமே" (கம்ப. ஆற்று. 5) என்பவை இங்கே அறியற்பாலன.

[1]ஒய்யென்பது யானைப்பாகர் வையும் ஆரியமொழியெனினும் அமையும்; "அண்ணலங் களிற்றை வையா" (சீவக. 978) என்றார் பிறரும். இனி விரையத் தெழித்தெனினும் அமையும்; தெழித்தல் - பிரித்தலுமாம்; குடநாட்டார் வழக்கு. பொய் - புரை. பொரு - பொருந்தின; விகாரம். முடங்குகையையுடைய கோடெனினும் அமையும். மை - மஞ்சுமாம்; முகபடாத்துக்கு உவமையாக்குக. பிறழ்தல் - நீங்குதல்; "மொய்கொளப் பிறழ்ந்து முத்தார் மருப்பிடைக் குளித்து" (சீவக. 983) என்றார் பிறரும். கருணை - அருள். மறம் - வீரம்.

கைக்கொளத் தெழித்து ஒழித்துப் புக்கு அடங்கி இருந்து அடக்கிய மறவ என்க.

## 54 - 75. பிள்ளை நகுலம்......செல்வ

(இ - ள்.) தான் வளர்த்த கீரி தன்பிள்ளையைக் காத்திருந்ததாக, ஒரு பாம்பணுக அதனைக் கௌவித்துணித்த குருதிவாயோடு தன்வரவு பார்த்து எதிர்கொண்டதனைத் தன் பிள்ளையைக் கடித்ததெனக்கருதித் தன் கையின் மணையாற்புடைக்க அது மரித்தலாலே வடதிசையை நோக்கிக் கங்கையாடப் போகின்ற கொழுநனை மனைவி பின்செல்லப் பொருதிகழ்ந்து நின்னெழுக்கத்தின் உண்டு மனையறத்தின்கண் வாழும் வாழ்க்கை இனிக் கடவதன்று; ஆதலான் வடமொழி வாசகமெழுதிய இவ்வேட்டினை உணரக்கடவ பொருளையறியும் மாந்தர்கையகத்தே நீ கொடுக்கவெனச் சொல்லி அவன் போக, பீடிகைத்தெருவினும் மாடமறுகினும் பிறர்மனைகளினும் போகி மீளத்திரிந்து கருமக்கழிபலங்கொண்மினெனக் கூவும் அருமறையாட்டியைக் கூவி நீ இங்ஙனமாதற்கு நீயுற்ற விடர்யாது? இக்கூறியதியாதென்று கேட்ப, அம்மாதர் தான் கொலைசெய்தலாற் கொழுநன் பிரிய அவனைக் காணாது மிக்க துன்பமுற்றதனைக்கூறி இத்திறமாகிய பொருளையெழுதிய ஏட்டினை வாங்கிக்கொண்டு கைப்பொருளைத் தந்து எனது கடுந்துயரைக் களைகவென்று சொல்ல, அஞ்சாதொழி; நின் துயரை யானே களைகேன்; நின்னெஞ்சின் மிக்க துயரத்தை இனி நீங்குவாயாகவெனச் சொல்லி அப்பொழுதே தருமாசனத்தோர் உரைத்த நூல்வழியே அப்பார்ப்பனிக்கு உளதாகிய கொலைப்பாவம் நீங்குதற்குத் தானத்தையுஞ்செய்து அவள் துன்பநீக்கிக் காட்டுநெறிக்கட்போன கணவனையும் கூட்டி அவர்க்கு மேலுள்ள காலத்திற்குத் தளராத [2]பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையும் [3]கொடுத்து வேள்வியையும் செய்வித்த தொலையாத செல்வனே!

வடதிசைப்பெயர்தல்-கங்கையாடப்போதல். கை-ஒழுக்கம்;கையான் உண்டொழுகும் இல்வாழ்க்கையெனவுமாம். வடமொழி - ஆரியம். வாசகம் - கவி; ஆவது "अपरीक्ष्य न कर्तव्यं कर्तव्यं सुपरीक्षितं, पश्चाद्भवति सन्तापं *ब्राह्मणी नकुलं यथा" (பஞ்சதந்திரம், 5 : 18

---

[1] "ஒய்யெனப் பெறலருங் குஞ்சர மேறலின்" (சீவக. 1833)

[2] "படைப்புப் பலபடைத்து" (புறநா. 188 : 1)

[3] கோவலன் கொடையிற் சிறந்தவனென்பது, "கொடைகெழு தாதை கோலவன்" (மணி. 26 : 3) என்பதனாலும் அறியலாகும்.

(பி - ம்.)* 'ब्राह्मण्या नकुलादिव'

ஸ்லோகம்) [அபரீக்ஷ்ய ந கர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம், பஸ்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம் யதா] என்பது. ஏடு-இக் கவியையெழுதிய ஏடு. மறுகி - சுழன்று. கருமக் கழிபலம் - பாவத்தைக் கழிக்கும் புண்ணியம். கருமம் - அவள்கொன்ற கொலை. அதனைக் கழிக்கையாவது போனகணவனைக் கூடுதல். பலங்கொள்கை - அவன் வரும்படி தானம் பண்ண வேண்டும் பொருள் தருதல். தீத்திறம் - கொலைத்திறம். ஒல்காச் செல்வமுடையோனுதலாலே [1] உறுபொருள் கொடுத்தென்றுமாம்.

## 76 - 90. பத்தினியொருத்தி......இல்லோர் செம்மல்

(இ - ள்.) ஒரு பத்தினி பொய்ப்பழியெய்துதற்கு அறிவிலாதா னொருவன் அவள் கணவனுக்குப் பொய்ச்சான்றேறுதலாலே [2]தவமறைந் தொழுகுவோர் முதலாகிய அறுவகையோரையும் புடைத்துண்ணும் பூதத்தினுடைய கரிய பாசத்தினிடத்தே அவன் அகப்பட அங்ஙனம் அகப்பட்டோனுடைய தாய் படாநின்ற துயரத்தைக்கண்டு அவனைக் கட்டிய பாசத்தினுள்ளே விரையத் தான்புகுந்து, பூதநாதனே, நினக் குணவாக என்னுயிரைக் கைக்கொண்டு இவனுயிரைத்தருவாயாக வென்று இரப்பவும், பூதம் நல்காதாய் இக்கீழ்மகனுடைய உயிர்க்கு நினது நல்லுயிரைக்கொண்டு மேலான கதியை இழக்கும் முறைமை என்பால் இல்லை; ஆதலால் நீ இக்கருத்தையொழிவாயாக; நின் முன்பே இவனைப்புடைத்துண்பேனெனப் புடைத்து விழுங்கிற்றாக; அதனால் நெஞ்சழிந்த இடும்பையோளோடு மீண்டுபோந்து அவனுடையசுற்றத்தி னுள்ளார்க்கும் தொடர்புபட்ட [3]கிளைகட்கும் நெஞ்சாற்பற்றிய நின்கிளை ஞரைப் போல அன்புபட்டுப் பசியாகிய பிணியைத்தீர்த்துப் பல்யாண்டு பாதுகாத்த இல்லத்தோர் தலைவனே!

படிறு - பொய். அறியாக்கரி - பொய்க்கரி. தவ்வை - தாய். நரகன் - நரகிற்கேதுவான வினையையுடையவன்.

தன்னை வணங்கிய கோவலனை, மாடலன் கடகளிறடக்கிய கருணை மறவ! நல்வழிப்படுத்த செல்லாச்செல்வ! பல்யாண்டு புரந்த இல்லோர் செம்மலெனப் புகழ்ந்து மேலும் சொல்லுவான் :—

## 91 - 4. இம்மைச் செய்தன......நீயென வினவ

(இ - ள்.) கோபால! யான்றிய இப்பிறப்பிற் செய்தவெல்லாம் நல் வினையாகவும் இம்மாணிக்கக்கொழுந்துடன் நீபோந்துஒருதனியுழந்தது உம்மைத் தீவினைப்பயனோதானென்று வினவினவளவிலேயென்க.

உம்மை - முற்பிறப்பு. ஒருதனியுழத்தல் - உசாவில்லாத்துன்பம். திருத்தகுமாமணி - முழுமாணிக்கம். கொழுந்தென்றான், அவள் இளமைபற்றி. விருத்த - ஞானவிருத்தனே.

## 95 - 106. கோவலன் கூறும்......கடிதீங் குறுமென

(இ-ள்.) மாடலன் உம்மைப்பயனோவென்ற வினாவிற்குக் கோவலன்

---

[1] குறள், 756 [2] சிலப். 5 : 128–34. [3] தாயத்தார்.

கூறுவான் :—ஒரு கீழ்மகனால் இக்காவல்வேந்தனுடைய இந்நகர்தன்னிலே மணம்பொருந்திய ஐவகைக்கூந்தலையுடைய இவள் நடுங்கித் துயருற யான் உடுத்த கூறை பிறர்கொள்ளப்பட்டுக் கோட்டினையுடைய கிடாவின்மேலே யேறவும் அணிபெறவகுக்கத்தக்க புரிந்த குழலையுடைய ஆயிழையுடனே பற்றற்றோர் பெறும்பேற்றை யான்பெறவும் காமக்கடவுள் மலர்வாளியை வெறுநிலத்தேயெறிந்து செயலற்று ஏங்கும்படி போதியறவோனிடத்தே 'மணிமேகலையை மாதவியளிப்பவும் மெய்போலச் செறிந்த இருளையுடைய வைகறை யாமத்தே கனவுகண்டேனாதலான் அது நன்றன்று; இப்பொழுதே வந்துறுமென்று சொல்லவென்க.

குறுமை : ஈண்டுப்பண்பன்று; சிறுமையென்னும் பொருட்டாய்க் குலத்திற்கடியாய் அதன் உயர்பின்மையுணர்த்திநின்றது. காவல் வேந்தன் கடிநகரென்பதற்கு, இகரச்சுட்டுவருவித்து உரைக்க. கோட்படுதல் - பிறரால் கொள்ளப்படுதல். கோட்டுமா - எருமையேற்றை; என்னை? "சொல்லத் தகுமுகட் டொட்டகம் வெட்டுந் துணைமருப்பார், இல்லத் தெருமை கழுதைக ளென்றிவை யேறிநின்றே, மெல்லத் தரையிலிழிவதன் முன்னம் விழித்திடுமேல், கொல்லத் தலைவரு மாற்றருஞ் சீற்றத்துக் கூற்றுவனே" (கனாநூல், 15) என்றாராகலின். இனிப் பன்றியெனவுமாம்; "களிறுமேற் கொள்ளவுங் காழக நீப்பவும்...... கனவி னரியன காணா" (41 : 9-11) என்றார் புறத்தினு மாதலால் களிறென்றது ஈண்டுப்பன்றியை; என்னை? "மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு, தொக்கன தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச், சக்கர வர்த்திக ளாற்பய முண்டெனுந் தம்மயிர்கள், உக்கன வாதல் செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே" (கனாநூல், 10) என்றாராகலின். கோட்டுமாவென்பதனை யானையெனின்,—"ஓதும் பசுவு மிடபமும் யானையு மோங்கல்களும், சீர்துன்று கோயிலு மேறிடக் காணினுந் தீமலத்தை, மீதொன்ற மேனியிற் பூசிடக் காணினு மெல்லியலார், சூதொன்று கொங்கை புணரினும் வாழ்வென்று சொல்லினரே" (கனாநூல், 4) என்பதனால் யானை யன்மையறிக. பிணிப்பு - [1] பற்று; ஆவது அன்பாகிய ஒரு தளை. அதனையறுத்தோர் அருளுடையோர்; அவர்பெற்றியாவது சுவர்க்க மெனக்கொள்க; "அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" (குறள், 247) என்றாராகலின். வாளி - வாளியை. வறுநிலம் - வெறுநிலம் [நிலங் கண்டும் அல்லாமை கூறிற்று]; கையற்று - செயலற்று. போதியறவோன் - புத்தன். நள் : நளியென்னுமுரிச்சொல் ஈறு திரிபு; செறிவின்கண் வந்தது; எனவே வைகறையாமமென்பதாயிற்று. கடிது - பொல்லாத தொன்று. ஈங்குறும் - இவ்விடத்தே வரும். இனி இக்கனாக் கடையாமத்துக் கண்டதாதலால் இவ்விடத்தே கடிதிற்பலிக்குமென்றுரைனினும் அமையும்; "ஆயிடை, வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே" (219) என்றார் சிந்தாமணியினும். "படைத்தமுற் சாமமோ ராண்டிற் பலிக்கும் பகரிரண்டே, கிடைத்தபிற் சாம மிகுதிங்க ளெட்டிற் கிடைக்குமென்னும், இடைப்பட்ட சாமமோர் மூன்றினிற் றிங்களோர் மூன்றென்பவால், கடைப்பட்ட சாமமு நாள்பத்து ளேபலங் கைபெறுமே" (கனாநூல், 2). இவை கனாநூலாதலாற் கொள்க. இன்னும், கடி தீங்கு - மிக்க தீங்கு; அச்சத்தையுடைய தீங்கெனவுமாம்.

---

[1] திரி. 22.

## 107 - 14. அறத்துறை மாக்கட்கு......கூறுங்காலை

(இ - ள்.) துறவறத்தான் உறையுமாக்கட்கல்லது இந்தப் புறஞ்சிறையிலிருக்கும் இருப்புப் பொருந்தாதாகலின், இவ்வகநகரிடத்து வாணிகர் மாசாத்துவான் மகனென்னும் புகழால் எதிரேற்றுக்கொள்ளுவார்; ஆகலின், இவ்விடத்து நின்னிருப்பையொழிக; இனிக் கதிர் செல்வதன் முன்னே நின்காதலியுடனே மதுரைமாநகர் புகுக வென்று கவுந்தியடிகளும் மாடலனும் கோவலனுக்குக் கூறுகின்ற காலத்தேயென்க.

அறத்துறை - அறத்தின் துறையெனவும், அறத்தின்கண்உறையெனவுமாம். புறஞ்சிறை - புறம்பின்கட்பள்ளி. அகநகர்மருங்கின் அரசர்பின்னோரெனமாறுக. நின்னுரையென்றார், மாசாத்துவான்மகனென்பதனை.

மதுரையாகிய மாநகரென்க.

## 115 - 9. அறம்புரி நெஞ்சின்......கண்டடி தொழலும்

(இ - ள்.) அங்ஙனம் கூறுகின்றுழி, ஆயர்குலத்துப்பிறந்து மாதரியென்று பெயர்கூறப்படுவோள் ஒருமுதுமகள் பூப்போலுங்கண்ணையுடைய [1]இயக்கிக்குப் பான்மடையேற்றி வழிபாட்டோடு வருகின்றவள் அறத்தைப் புரிந்தநெஞ்சினையுடைய அறவோர் பலராயிருக்கின்ற புறமதிற்பள்ளிக்கண் இருந்த கவுந்தியடிகளைக்கண்டு வந்து அடிதொழுதவுடனென்க.

இயக்கி - [2]ஆரியாங்கனை. பான்மடை - பாற்சோறு.

## 120 - 24. ஆகாத் தோம்பி......எண்ணின ளாகி

(இ - ள்.) ஆவைக்காத்தோம்பி அவ்வாவின்பயனை யாவர்க்கும் அளிக்கும் இந்த இடையருடைய இல்வாழ்க்கையில் ஒரு கொடுமைப்பாடும் இல்லை; அதன்மேலும் இவள் நவது உரைநெறியில் நிற்றலால் மனத்தில் அழுக்காறிலள்; அதுவுமன்றி முதுமகள்; ஔவியமில்லாள்; அளிக்குந்தன்மையையுடையள்; ஆதலான் மாதரியிடத்தே இம்மடந்தையை அடைக்கலமாக இற்றைக்கு வைப்பதற்கு வரும் தீங்கு யாதுமில்லையெனத் தன் மனத்தில் எண்ணினள்ஆகியென்க.

ஆக்களைக் காத்து - வெருவும் பிணியுமுற்றுழிக் காத்து. ஓம்பி - புலத்தலைப் புல்லார்த்தி அலைத்தலை நீரூட்டி. ஆப்பயன் - பால்முதலியன. அளிக்குங்கோவலர் - கன்றருத்தி மிக்கதனை யாவருக்குமளிக்கும் கோவலரென்க. அழுக்காறுவது மனத்தழுக்கு. செவ்வியள் - ஔவியமில்லாள்; ஆவது மனக்கோட்டமிலளென்றபடி. அளியள் - யாவரானும் அளிக்கத்தக்காள்.

---

[1] இயக்கி - யக்ஷிதேவதை; 24-தீர்த்தங்கரர்களுள் ஒவ்வொருவருக்கும் பணிசெய்தற்கு உரியவர்களாக யக்ஷனென்றும் யக்ஷியென்றும் இவ்விருவர் உள்ளாரென்று சைனநூல்கூறும்; இப்பெயர் கன்னியாகுமரிப் பக்க ஊர்களில் இசக்கியென வழங்கும்.

[2] ஆரியாங்கனை - கணவனிருக்கும்பொழுது துறந்தவள்; "கணவனிற்றுறவின் மன்னு மாரியாங் கனைகள்" (திருவிளை. 63 : 17)

### 125 - 30. மாதரி கேள்......அடைக்கலந்தந்தேன்

(இ - ள்.) மாதரி! கேளாய்; இம்மடந்தையுடைய கணவன் தந்தை பெயரைக் கேட்பாராயின், அவன் குலத்திலுள்ள இவ்வூரில்வாழ்வோர் பெறுதற்கரியபொருளைப் பெற்றாரைப்போல நல்விருந்தாக எதிர்கொண்டு கரியபெரிய கண்ணினையுடையாளோடு இவனைத் தங்கள் காவலையுடைய மனையகத்தேகொண்டு சென்று வைத்துக்கொள்வார்கள்; அங்ஙனமாகிய உடைய பெரிய செல்வரது மனையகத்தே.சென்று புகுமளவும் இடைக்குல மடந்தாய்! உனக்கு நான் இவளை அடைக்கலமாகத் தந்தேனென்றாளென்க.

### 131 - 6. மங்கல மடந்தையை......தாங்கு

(இ - ள்.) இவ்வுயர்குடியிற்பிறந்த இவளை நின்கையில் அடைக்கல மாகத் தந்தேனாதலால், இம்மடந்தையை மங்கலநீராலாட்டிச் சிவந்த கயல்போலும் நெடிய கண்ணில் அஞ்சனத்தையுமெழுதி நறிய மெல்லிய கூந்தலிலே சிலவாகிய மலரைப்பெய்து தூய மடிப்புடைவையையுடுத்து இவ்வாயிழைக்கு ஆயமகளிரும் செவிலித்தாயரும் நற்றாயும் நீயேயாய்த் தாங்குவாயாகவென்றாளென்க.

தொல்லோர்சிறப்பினாயம் - பழையோராகச் சிறப்பித்துக் கூறப் பட்ட ஆயம்.

ஆட்டித் தீட்டிப் பெய்து உடீஇத் தாங்கென்றாளென்க.

### 136 - 8. ஈங்கு......அறிந்திலள்

(இ - ள்.) இப்படித்துயருற்று என்னோடுபோந்த இளையகொடி போலும் நங்கையுடைய அழகிய சிறிய அடியை முன்பு மண்மகளும் கண்டறியாள்;

இவளடியைப் பூமிதேவியும் கண்டறியாளென்றது அகம்விட்டுப் புறப்பட்டறியாளென்றவாறு. இனி மண்மகள் இவள் மென்மையைத் தானறிந்து நெகிழ்ந்திலளென்றுமாம். இன்னும் கால் கொப்புளங் கொண்டு நிலத்திற் பாவாமையிற் கூறினாளெனினும் அமையும்.

### 139 - 48. கடுங்கதிர்......யறியாயோ நீ

(இ - ள்.) கதிரின் வெம்மையால் தன் காதலன்மெய் வருந்திய தென்று நடுங்குதுயரமுற்று நாவும்புலர வாடித் தன்துயரென வேறு காணாத பெருமையமைந்த பூங்கொடியை ஒப்பாள்; தம் காதலர்க்கு இனியவாழ்க்கைத்துணையாகிய மாதர்க்கு இன்றியமையாத கற்பைக் கடமாகப்பூண்டு கொண்ட இத்தெய்வமே யல்லது வேறு பொலிவினை யுடைய தெய்வத்தினையாம் கண்டிலேம்; அதுவுமன்றிக் காலமழை பொய்த்தறியாது; வளம் பிழைத்தலையறியாது; வேந்தர் கொற்றம் சிதைந்தறியாது; அஃது எந்த நாடெனிற் பத்தினிப் பெண்டிர் இருந்த நாடென்று நல்லோர் சொல்லும் அத்தகு மிகுதியையுடைய தரும நூலுரையை நீ யறிவையோ அறியாயோ வென்றாளென்க.

இன்பதுன்பம் [1] தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்வருதலின், தன் துயர் காணாவென்றார். கற்பைக் கடமாகப்பூண்ட பூங்கொடியாகிய இத்தெய்வமென்க.

### 149 - 50. தவத்தோ ரடைக்கலம்......கேளாய்

---

[1] "தோகைக்குந் தோன்றற்கு மொன்றாய் வருமின்ப துன்பங்களே" (திருச்சிற். 71)

(இ - ள்.) தவத்தினராயுள்ளோர் தாம்கொடுத்த அடைக்கலந்தான் அப்போது சிறிதாயிருப்பினும் பின்பு மிகப்பேரின்பத்தைத்தரும்; அதை யான் சொல்ல நீ கேளாயென்றுளென்க.

ஆய் : அசை.

### 151 - 5. காவிரிப் படப்பை......சாரணர் தம்முன்

(இ - ள்.) காவிரியைத் தோட்டக் கூற்றிற்கு எல்லையாகவுடைய பட்டினத்துள்ளே பூ விரிந்த பொதுமை நீங்கின அழகிய நிழலையுடைய பிண்டி முதற்கண்ணே சாவகர் ஒருங்கு கூடியிட்ட விளங்கொளிச் சிலாதலத்தின் மீதேயிருந்து தருமத்தை யாவர்க்கும் போதிக்கும் சாரணர் முன்பாகவென்க.

படப்பை - பக்கமுமாம். பொதுநீங்கு திருநிழல் - பிறிதொரு மரத்திற்கின்றித் தனக்கேயுரிய நிழல்; ஆவது ஆதித்தன் சாயச் சாயா நிழல். உலக நோன்பிகள் - துறவாது விரதங்காக்கும் சாவகர். சிலாதலம் - அப்பட்டினத்துச் சிலாதலம்.

### 156 - 60. திருவிலிட்டு......வந்துநின் றோனை

(இ - ள்.) [1]திருவிற்போல ஒளிவிட்டு அழகுதரும் திருமேனியையுடையனாய்த் தாரையுடையனாய் மாலையையுடையனாய்ப் பொற்பூணினையுடையனாய் மக்கள் கண்ணிற்குப் புலப்படாத தேவர் பலரும் தொழும் படிமையுடையவன் ஒரு பாகத்துக் கை கருவிரற் குரங்கின் கையாக வுடைய தேவனொருவன் வந்து நின்றான்; நின்றவனையென்க.

திருவில் - இந்திரவில். வில்லிட்டென்பதற்குத் தருமத்தான ஒளியைப் புறப்படவிட்டென்பாருமுளர்; தார் - பூமாலை. மாலை - மணிமாலை. தார மாலையனெனப் பாடமோதி, மந்தார மாலையையுடையனெனினும் அமையும். படிமை - தெய்வ வடிவு. பெருவிறல் - பெரிய வெற்றி. நின்றோனை : "ஆவோ வாகும்" (தொல். வினை. 14) என்பதனான் முடியும்.

### 161 - 2. சாவக ரெல்லாம்......இறையோன் கூறும்

(இ - ள்.) அச்சிலாதலத்தின் கீழிருந்து அறங்கேட்ட சாவகரெல்லாரும் எழுந்து சாரணரைத் தொழுது இவன் இங்ஙனம் வந்த வரவிற்குக் காரணம் யாதெனக் கேட்பச் சாரணன் கூறுவான் :—

### 163 - 91. எட்டி சாயலன்......தோன்றின னென்றலும்

(இ - ள்.) [2]எட்டிப் பட்டத்தையுடைய சாயலனென்னும் வாணிகன் துறவாது இல்லறத்திருந்தவன்தனது உண்ணாவிரதத்தையுடையோர்

---

[1] "மற்றவன் றேவ னாகி வானிடு சிலையிற் றோன்றி" (சீவக. 951) என்பதும், 'நூல்கள் இந்திரவில் இன்னவாறு தோன்றுமென்று அது தோன்றும் முறைமை கூறுவாகலின், அங்ஙனம் தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று' என்னுமதன் உரையும், "வானிடு வில்லின் வரவறியா" (நாலடி. கடவுள்.) என்பதும் ஈண்டு அறியற்பாலன.

[2] எட்டி என்பது அரசனால் வணிகர் பெறுவதொரு பட்டப் பெயர்; "எட்டி குமர னிருந்தோன்", "எட்டிப்பூப்பெற்று" (மணி. 4 : 58, 22 : 113); "எட்டிகுமரன்", "எட்டிகாவிதிப்பட்டம்" (பெருங். 1. 40 : 116, 2. 3 : 144); "எட்டி காவிதியென்பன தேய வழக்காகிய சிறப்புப் பெயர்" (தொல். தொகை. 12, ந.)

பலரும் புகும் மனையகத்தே அவன் மனைக்கிழத்தி ஒரு பெரிய தவமுதல்வனைத் தன் வினை நீங்க எதிர்கொள்கின்ற பொழுதின்கண் அவ்வூரிடத் துத்துரப்புண்டு உணவும்பெறுது சிறுமையுற்றதொரு கருங்குரங்கு அச்சத்தோடு ஒதுங்கி வந்து உள்புக்கு அருளறத்தின் பகுதிப்பட்ட மாதவனுடைய பாதத்தின் வணங்கி அவன் உண்டொழிந்த அன்னத்தையும் கைகழீஇய நீரையும் சிறிதருந்திப் பெரும்பசி தீர்ந்து எதிர்முக நோக்கிய முகச்செவ்வியைக் கண்டு சலியா உள்ளத்தையுடைய அறிவனும் மனமகிழ்ந்து, இல்லறக் கிழத்தி தன்னை, நீ நின்மக்களின் ஒரு தன்மையாக ஓம்புகவெனக் கைப்படுப்ப, அவளும் மிக்கோனுற் கூறப்பட்ட மெய்ம்மொழியைத் தப்பாமற் பரிகரித்தொழுகாநிற்கின்றுழி, அங்ஙனம் காதலித்த அக்குரங்கு மரிக்க, அதனுடைய ஒரு கூற்றைத் தானஞ் செய்கின்ற மனைக்கிழத்தி இதன் தீய பிறப்பறுகவெனச் செய்தனளாதலானே மத்திம தேசத்து வாரணவாசி யென்னும் நகரியின் உத்தரகௌத்தன் என்னும் அரசனுக்கு ஒரு மகனுய் அழகினேடும் மெய்ப்பொறியோடும் உணர்வோடும் தோன்றி மிக்க தான சூரனுய்ப் பல வகைப்பட்ட தானங்களையும் செய்து அந்த அரசுரிமையிலே முப்பத்திரண்டாண்டிருந்து பின்பு தெய்வ யாக்கை பெற்றனன்; ஆதலானே அங்ஙனம் பெற்ற சீமத்தான பெரும்பயனெல்லாம் தன்னைக் காத்தளித்தவள் செய்த தானத்தாற் பெற்ற சிறப்பென்று உட்கொண்டு முற்பிறப்பிற் கருங்குரங்கான வடிவிற் சிறிய கையைத் தனது பெரிய ஒருபாகத்தே கொண்டு நன்மைக் கூற்றிலே பொருந்திய சாயலனுடைய மனையாள் தலைநாளிற் செய்த தானத்தாலே இந்த வடிவாயினேன்; இதனை நீங்கள் அறிமினென்று சாவக நோன்பிகட்கெல்லாம் விளங்க அறிவித்தற்குத் தேவகுமாரன் இங்ஙனம் தோன்றினனென்று சொல்லவுமென்க.

பட்டினி நோன்பிகள்[1] இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதிகள். சிறு குரங்கு - மெலிந்த குரங்கு. கடை நாள் - மரணம். ஒருகூறென்றுர், பிள்ளைகளொரு பாதியை. உத்தரன் கவிப்பற் கொரு மகனுகி யெனப் பாடமோதி, இக்குரங்கு உத்தரனென்னும் பெயரோடு கவிப்பனென்னும் வாணிகனுக்கு ஒரு மகனுகப் பிறந்ததென்பாருமுளர்.

## 192-7. சாரணர் கூறிய......முடிவுல கெய்தினர்

(இ - ள்.) அங்ஙனம் சாரணர் கூறிய பெருமையமைந்த நன்மொழியைத் தெய்வவாக்கியமாகக் கொண்டு அறத்தின்கண் தலைப்பட்டு அப்பதியிலிருந்த அருந்தவ மாக்களும் தவத்தினர்க்கெல்லாம் பொதுப்பட்ட வாழ்க்கையையுடைய சாவகமாக்களும் தானமிட்ட எட்டியும் மனைவியும் முட்டாத இன்பத்தையுடைய வீட்டுலகத்தைப் பெற்றுர்கள் காணென்றுளென்க.

'தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு, மிகப்பே ரின்பந் தருமதுகேளாய்' (15 : 149-50) என்றவள் இங்ஙனங் கூறினுளென்க. தன்றெறல் வாழ்க்கை - தனதென்னுந் தன்மையில்லாத வாழ்க்கை; "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர், வெல்போர்ச் சேஎய் பெருவிற

[1] "ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட் டொழுக்கங் காத்தல், தாவாத் தவமென்றுர்" (சீவக. 1547)

லுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமென " (492 - 4) என்றார் **மலைபடு கடாத்திலும்.**

## 198 - 200. கேட்டனை யாயின்......ஏத்தி

(இ - ள்.) இவ்வடைக்கலத்தின் பயனை நீ கேட்டியாயின் இந்தத் தோடார் குழலினையுடையாளுடனே பொழுதுசொல்லுமளவும் நீட்டித்து இவ்விடத்திராது நீ போவாயாகவென்று கவுந்தியடிகள்கூறத் தான் பெற்ற கையடைக்கு உவந்தனளாய்க் கவுந்தியடிகளையேத்தியென்க.

தோட்டார் : விகாரம்.

## 201 - 6. வளரிள வனமுலை...சிலர்புறஞ் சூழ

(இ - ள்.) வளராநின்ற இளைய அழகிய முலையினையும் அமையின் அழகை வாங்கிக்கொண்டு பூரித்த தோளினையும் இளைய முளையெயிற்றினையும் சிறிய பருவத்தே பெரிய அறிவினையுமுடைய நங்கையுடனே அத்தகிரிக்கண் சென்ற ஞாயிற்றினது சுருங்கின சுடரையுடைய மாலைப் பொழுதிலே மடிசுரந்து கன்றைத் தேடிவாராநின்ற பசுக்களினுடைய முழங்கு குரல்கள் இயம்ப ஆட்டுமறியையும் கோடரியையுமுடைய தோளிலே உறிகட்டின காவையுடைய இடையருடனே கூடப் பால் சுமந்துவரும் செறிந்த வளையையுடைய இடைச்சியரிற்சிலர் இவளழகு கண்டு புறஞ்சூழ்ந்து வாராநிற்பவென்க.

207. மிளையும்—(இ - ள்.) காவற்காடும்,

கிடங்கும்—(இ - ள்.) அகழியும்.

வளைவிற் பொறியும்—

(இ - ள்.) வளைந்து தானேயெய்யும் எந்திரவில்லும்,

208. கருவிர லூகமும்—(இ - ள்.) கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும்,

கல்லுமிழ் கவணும்—(இ - ள்.) கல்லையுமிழும் கவணும்,

209. பரிவுறு வெந்நெயும்—

(இ - ள்.) காய்ந்திறைத்தலாற் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்யும்,

பாகடு குழிசியும்—(இ - ள்.) செம்புருக்குமிடாவும்,

அன்றி அங்ஙனமிறைத்தற்குப் பாகுகாயும் குழிசிகளுமாம்.

210. காய்பொன் னுலையும்—

(இ - ள்.) உருகக்காய்ச்சியெறிதற்கு எஃகு பட்டிருக்கும் உலைகளும்,

கல்லிடு கூடையும்—

(இ - ள்.) இடங்கணிப்பொறிக்குக் கல்லிட்டு வைக்குங்கூடையும்,

211. தூண்டிலும்—(இ - ள்.) தூண்டில்வடிவாகப் பண்ணிப் போகட்டுவைத்துக் கிடங்கு நீங்கி மதில்பற்றுவாரைக் கோத்து வலிக்குங் கருவியும்,

தொடக்கும்—

(இ - ள்) †கழுக்கோல்போலக் கழுத்திற்பூட்டி முறுக்குஞ்சங்கிலியும்; கயிற்றுத் தொடக்குமாம்.

ஆண்டலை யடுப்பும்—(இ - ள்.) [1]ஆண்டலைப்புள்வடிவாகப் பண்ணிப் பறக்கவிட உச்சியைக்கொத்தி மூளையைக்கடிக்கும் பொறி நிரைகளும்,

212. கவையும்—

(இ - ள்.) கிடங்கிலேறின் மறியத்தள்ளும் இருப்புக்கவையும்,

கழுவும்—(இ - ள்.) கழுக்கோலும்,

கழுகும் பாடம்.

புதையும்—(இ - ள்.) அம்புக்கட்டும்,

"அப்புப் புதையு மணிவரிச் சிலையும்" (பெருங். 1 : 52 : 16) என்றார் கதையினும்.

புழையும்—(இ - ள்.) ஏவறைகளும்,

213. ஐயவித் துலாமும்—

(இ - ள்.) பற்றுக்கை தூக்கிப்போகட்ட விட்டமும்,

அன்றிக் கதவையணுகாதபடி கற்கவிதொடங்கி நாற்றும் துலாமுமாம்; சாணம்புக்கூடென்பாரும், சிற்றம்புகள் வைத்தெய்யும் இயந்திரமென்பாருமுளர்.

கைபெயரூசியும்—(இ - ள்.) மதிற்றலையைப் பற்றுவாரைக் கையைப் ‡பொதுக்கும் ஊசிப்பொறிகளும்,

இனிக்கதவொடு சேராதபடிவைத்த நிரைக்கழுவெனினும் அமையும்.

214. சென்றெறி சிரலும்—(இ - ள்.) மாற்றார்மேற் சென்று கண்ணைக்கொத்தும் சிச்சிலிப்பொறியும்,

பன்றியும்—(இ - ள்.) மதிற்றலையினேறினார் உடலைக் கோட்டாற் கிழிக்க இரும்பாற் செய்துவைத்த பன்றிப்பொறியும்,

பணையும்—(இ - ள்.) வேய் வடிவாகப்பண்ணி அடித்தற்கமைத்த பொறியும்,

215. எழுவுஞ் சீப்பும்—(இ - ள்.) கதவுக்குவலியாக உள்வாயிற் படியிலே நிலத்திலேவீழ விடுமரங்களும்,

திறக்குங்காலத்து மேலேயெழுப்புகையால் 'எழுவுஞ்சீப்பும்' என்றார்; "சீப்புப் படியுறின்" என்றார் கதையினும்.

---

[1] ஆண்டலைப்புள் - ஆண்மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒருவகைப் பறவை - கலித். 94 : 6; "நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த நெடுங்குஞ்சித் தலையைத்தன் னினமென் றெண்ணி, ஆண்டலைப்புள்ளருகணைந்து பார்க்குமாலோ" (கலிங்க. கோயில். 16.)

(பி - ம்.) † 'கழிகோல்' ‡ 'பொதிர்க்கும்'

முழுவிறற் கணையமும்—(இ - ள்.) கணையமரமும், இனிச் சீப்பு அகப்படக் குறுக்கே போடக் கடவ மரமுமாம்.

216. கோலும்—(இ - ள்.) விட்டேறும்,

குந்தமும்—(இ - ள்.) சிறுசவளமும்,

வேலும்—(இ - ள்.) வல்லையமும்; ஈட்டி முதலியனவுமாம்.

பிறவும்—(இ - ள்.) சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப் பொறி, விழுங்கும்பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறியென்பனவும்,

சதக்கினி - நூற்றுவரைக்கொல்லி.

217. ஞாயிலும்—(இ - ள்.) குருவித்தலைகளும்,

இதனை ஏவறையென்பாருமுளர்.

சிறந்து—(இ - ள்.) இவை சிறப்பெய்தப்பட்டு; மிக்கென்றுமாம்.

"மாற்றவர்......கோண்மா" (101) எனவும், "விற்பொறிகள்......மரநிலையே" (102) எனவும், "செம்புருகு......பொறியே" (103) எனவும், "கரும்பொனியல்......திருந்தின்றே" (104) எனவும் சொன்னார் சிந்தாமணியிலும்.

217 - 9. நாட்கொடி நுடங்கும்......புணர்ந்தென்.

(இ - ள்.) நாடோறும், [1] வென்றுவென்றெடுத்த கொடிதானுடங்கும் மதில்வாயிலைக் கழிந்து மாதரி தன்மனையிடத்தே புக்காளென்க.

இடைக்குலமடந்தைக்கு மனைப்புகுமளவும் அடைக்கலம் தந்தேன்; ஆதலால் ஆட்டித்தீட்டிப் பெய்து உடஇத் தாங்கு; அறியாயோ நீ; தரு மதுகேளாய்; முடிவுலகெய்தினர்; நீபோகென, முதுக்குறை நங்கையொடு கனைகுரலியம்பச் சிலர் புறஞ்சூழக் கோவலர் மடந்தை வாயில்கழிந்து தன்மனை புக்கனளென்க.

ஆல் : அன்றேயென்னும் அசை.

இஃது எல்லாவடியும் முதனடுவிறுதி அளவடியான் முடிதலின், நிலைமண்டில வாசிரியப்பா.

(கரு) அடைக்கலக் காதை முற்றிற்று.

---

[1] "செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி" (முருகு. 67); "விசய வெல்கொடி யுயரி" (முல்லை. 91); "நாடோ றெடுத்த நலம் பெறு புனைகொடி...நுடங்க" (மதுரைக். 368); "மலைநீர், வென்றெழு கொடியிற் றோன்றும்" (மலைபடு. 581 - 2); "மலையுறழ் யானை வான் றோய் வெல்கொடி......நுடங்க" (பதிற். 69.)

## பதினாறாவது

# கொலைக்களக் காதை

அரும்பெறற் பாவையை யடைக்கலம் பெற்ற
இரும்பே ருவகையி னிடைக்குல மடந்தை
அளைவிலை யுணவி னாய்ச்சியர் தம்மொடு
மிளைசூழ் கோவல ரிருக்கை யன்றிப்
பூவ லூட்டிய புனைமாண் பந்தர்க்
காவற் சிற்றிற் கடிமனைப் படுத்துச்
செறிவளை யாய்ச்சியர் சிலருடன் கூடி
நறுமலர்க் கோதையை நாணீ ராட்டிக்
கூடன் மகளிர் கோலங் கொள்ளும்
ஆடகப் பைம்பூ ணருவிலை யழிப்பச்
செய்யாக் கோலமொடு வந்தீர்க் கென்மகள்
ஐயை காணீ ரடித்தொழி லாட்டி
பொன்னிற் பொதிந்தேன் புனைபூங் கோதை
என்னுட னங்கையீங் கிருக்கெனத் தொழுது

---

3. அளை - மோர்.

5-6. பூவலூட்டிய சிற்றில் - செம்மண்ணூட்டிய சிற்றில்; புதிதாகச் செம்மண் பூசிய சிற்றிலாகிய காவன்மனையிலே இருத்தி.

9. கூடலென்றாள்; தான் அறியும் ஊர் அதுவாகலின்.

10-11. ஆபரணத்தின் உயர்ச்சியை அழித்தற்குப் பிறவியழகொடு வந்தீர்க்கு; செய்யாக் கோலம் - பிறவியழகு.

14. நங்கை - நங்காய்.

---

அடி, 3. "அளவிலை யுணவிற் கிளையுட னருத்தி" (பெரும்பாண். 163)

அடி, 5. "இல்பூவலூட்டி" (கலித். 114 : 12); "முடக்காற்பந் தர்ப், புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்" (அகநா. 394 : 8-9)

அடி, 7 : சிலப். 15 : 206.

அடி, 11. கம்ப. கோலங்காண். 3

அடி, 13. "தன்னுடம்பு தார மடைக்கலந்தான் தன்னுயிர்க்கென், றுன்னித்து வைத்த பொருளோ டிவைநான்கும், பொன்னினைப் போற் போற்றிக் காத்துய்க்க வுய்யாக்கால் அன்றே விழுமந் தரும்" (ஆசார. 99)

மாதவத் தாட்டி வழித்துயர் நீக்கி
ஏத மில்லா விடந்தலைப் படுத்தினள்
நோதக வுண்டோ நும்மக ளார்க்கினிச்
சாவக நோன்பிக ளடிக ளாதலின்
நாத்தூ ணங்கையொடு நாள்வழிப் படூஉம்
அடிசி லாக்குதற் கமைந்தநற் கலங்கள்
நெடியா தளிமி னீரெனக் கூற
இடைக்குல மடந்தைய ரியல்பிற் குன்றா
மடைக்கலந் தன்னொடு மாண்புடை மரபிற்
கோளிப் பாகற் கொழுங்கனித் திரள்காய்
வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி
சாலி யரிசி தம்பாற் பயனொடு
கோல்வளை மாதே கொள்கெனக் கொடுப்ப
மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்

---

15. மாதவத்தாட்டியென்றது கவுந்தியை.

18. அடிகளென்றது கோவலனை.

19. நாத்தூணங்கை - மாதரிமகள் ஐயை.

19 - 20. நாள்வழிப் படூஉமடிசில் - காலத்திலே ஆக்கும் அடிசில்.

18 - 21. சாவக நோன்பிகளாதலின் இரவுண்ணாரென்பது.

23. மடைக்கலம் - ஆக்குங்கலம்.

22 - 3. இயல்பிற் குன்றாக் கலமென்றார், புதுக்கலத்தை; மடைமேல் ஏற்றுவாருமுளர்.

24. கோளிப்பாகல் - பூவாதே காய்க்கும் பலா; வெளிப்படை; கனிக்காய் - முதாரிக்காய்; கனிக்கு ஆன காய்.

25. (பா) வால்வரிக் கொடுங்காய் - வெள்வரிக்காய். மாதுளங்காய் - கொம்மட்டி மாதுளங்காய்; புளித்த கறி ஆக்குதற்குக் கொம்மட்டி மாதுளங்காய் சிறக்கும்.

27. (பா) தன்பாற்பயன் - தனக்குள்ள பாலாகிய பயன்.

---

அடி, 17, கணவனை மகன் எனல் : மணி. 21 : 29. அடி, 19. நாத்தூண் - கணவனுடன் பிறந்தவள் : சேதுபுராணம், தேவிபுர. 5. அடி. 24 : பெரும்பாண். 407-8. அடி, 27. சாலியரிசி : பெருங். 1. 43 : 182.

கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்
திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன
கரிபுற வட்டில் கண்டனள் பெயர
வையெரி மூட்டிய வையை தன்னொடு
கையறி மடைமையிற் காதலற் காக்கித்
தாலப் புல்லின் வால்வெண் டோட்டுக்
கைவன் மகடூஉக் கவின்பெறப் புனைந்த
செய்வினைத் தவிசிற் செல்வ னிருந்தபின்
கடிமல ரங்கையிற் காதல னடிநீர்
சுடுமண் மண்டையிற் றொழுதனன் மாற்றி
மண்ணக மடந்தையை மயக்கொழிப் பனள்போல்
தண்ணீர் தெளித்துத் தன்கையாற் றடவிக்
† குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்
கமுத முண்க வடிக ளீங்கென
அரசர் பின்னோர்க் கருமறை மருங்கின்
உரிய வெல்லா மொருமுறை கழித்தாங்

---

30. குயம் - அரிவாள். விடுவாய்செய்தல் - அரிதல்.

32. பெயர - புகை கண்டறியாதபடியாலே திரும்ப.

33. வை - வைக்கோல்.

(32) அட்டிலைக்கண்டு பெயரும்படி (33) வைக்கோலால் எரிமூட்டிய வென்க; தீமூட்டுவது வைக்கோலாதலால்.........

34. கையறி மடைமையின் - தன்கைவல்ல அளவாலே.

(30) விடுவாய்செய்ய (31) முகம் வியர்த்தது; (32) கரிந்த இடத்தை யுடைய அட்டிலைக்கணோடு பெயர்ந்த வளவிலே (31) கண் சேந்தன; இவ் வாறாகவும் (34) கையறிமடைமையிற் காதலற்கு ஆக்கி.

35. தாலப்புல் - பனையாகிய [1] புறக்காழ்மரம். 37. தவிசு - தடுக்கு.

(38) அங்கையின் (39) மாற்றி.

40. மயக்கொழித்தல் - இவர்க்கு நிகழ்வனவறிந்து மயங்கின மயக்கம் தீர்த்தல்; அனந்தல் தீர்க்கையுமாம்.

42. குமரி வாழை - ஈனாத வாழை.

44 - 5. அருமறை மருங்கின் உரியவெல்லாம் - பலியிடுதல் முதலியன; வாய்பூசல் முதலாயினவுமாம். தன்னூரிற் செய்வன வெல்லாம் செய்யப்பெறாமையின், 'ஒருமுறை கழித்து' என்றார்.

---

[1] "புறக்கா ழனவே புல்லென மொழிப" (தொல். மரபு. 85)

(பி - ம்.) † 'குமரி வாழைக் குருத்தகம் விரித்தாங், கமிழ்த முண்மி னடிக ணீரென'

காயர் பாடியி னசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணு நம்பி யீங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
தொழுனை யாற்றினுட் டுமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென
ஐயையுந் தவ்வையும் விம்மித மெய்திக்
கண்கொளா நமக்கிவர் காட்சி யீங்கென
உண்டினி திருந்த வுயர்பே ராளற்
கம்மென் றிரையலோ டடைக்கா யீத்த
மையீ ரோதியை வருகெனப் பொருந்திக்
கல்லத ரத்தங் கடக்க யாவதும்
வல்லுந கொல்லோ மடந்தைமெல் லடியென
வெம்முனை யருஞ்சுரம் போந்ததற் கிரங்கி
எம்முது குரவ ரென்னுற் றனர்கொல்
மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ
யானுளங் கலங்கி யாவது மறியேன்
வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்

---

52. தவ்வை - தமக்கை; தாயுமாம்; முறையன்று. விம்மிதம்: வியப்பு.
(45) ஒருமுறைகழித்து (54) உண்டினிதிருந்தவெனக்கூட்டுக.
55. திரையல் - வெற்றிலைச்சுருள்.
57 - 60. கல்லதரத்தம்.........என்னுற் றனரென்றது, வல்லவோ அடியென இரங்கி என்னுற்றனரோவென்றுனென்க.
62. நின்னை இவ்வாறு தனியாக்குதற்குக் காரணமாம் என்பொருட் டொலைவால் வந்த பான்மையினை இன்னதென்று ஒன்றுமறிகிலேன்.
63. வறுமொழி; பயனில் சொல். (பா) வம்பமாந்தர் - ஒன்றிற் படாத மாந்தர்.
64. குறுமொழிக்கோட்டி - சிறு சொல்லையுடையார். நெடுநகை - மிக்க நகை.

---

அடி, 50. "தொழுனைத் துறைவனோ டாடிய பின்னை", "வஞ்சஞ் செய்தான் றொழுனைப் புனலுள், நெஞ்சங் கவர்ந்தாள்" [17 : (22), (24)]; "விழுமிழை நல்லார் வெருள்பிணைபோ னோக்கம், கெழுமிய நாணை மறைக்கும் - தொழுனையுள், மாலையுண் மாலை மயக்குறுத் தாளஃதாற், சால்பினைச் சால்பறுக்கு மாறு" (பழ. 12)
அடி. 57. கல்லதரத்தம் : "கல்பிறங்கத்தம்" (குறுந். 66 : 2; அகநா. 79 : 16); "கல்லதர்ச் சிறுநெறி" (அகநா. 72 : 17); "கல்லத ரத்தங் கடவா நின்றுழி' (மணி. 13 : 39)
அடி, 63 : "வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு" (10 : 219); மணி : 7 : 50.

பொச்சாப் புண்டு பொருளுரை யாளர்
நச்சுக்கொன் றேற்கு நன்னெறி யுண்டோ
இருமுது குரவ ரேவலும் பிழைத்தேன்
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்
வழுவெனும் பாரேன் மாநகர் மருங்கீண்
டெழுகென வெழுந்தா யென்செய் தனையென
அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும்
துறவோர்க் † கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னையும்
பெருமக டன்னொடும் பெரும்பெயர்த் தலைத்தாள்
‡ மன்பெருஞ் சிறப்பின் மாநிதிக் கிழவன்
முந்தை நில்லா முனிவிகந் தனரா

---

65. பொச்சாப்புண்டு - மறவியிற்பொருந்தி.

66. நச்சப்படுபொருளை நச்சென்றார்.

65 - 6. பொருளுரையாளர் நச்சுக்கொன்றேற்கு - மெய்யுரைக்கும் சான்றோரால் நச்சப்படுந்தொழிலைக் கெடுத்தேனுக்கு ; ஆவது ஆசாரம்.

68. சிறுமுதுக் குறைவிக்கு - சிறிய வயதிலே பெரிய அறிவினை யுடைய உனக்கு. சிறுமை - நோய்.

69. மாநகர்மருங்கு - நம் மாநகர் மருங்கினின்றும். ஈண்டு - இவ் விடத்து ; என்றது மதுரையை.

70. என்செய்தனை யென்றது செய்த அருமை என்னென்று வியந்தது.

69-70. வழியிடை நினக்குவரும் தீங்கு ஒன்றும் கருதாது எழுக வென்று யான் சொல்ல......................

71. ‘அறவோர்க்களித்தல்’ என்பது முதற் கண்ணகி வார்த்தை. அறவோர் - துறவாது விரதங் காத்தோர்.

72. துறவோர்க்கு - துறந்தோரை.

74. பெருமகள் - கோவலன் மாதா.

74 - 5. பெரிய புகழையும் தலையான உற்சாகத்தையுமுடைய மாநிதிக் கிழவன் - கோவலன் பிதா ; பெரிய பொருளைத் தன்னிடத்தே யுடைய மாநிதிக் கிழவனென்றுமாம்.

76 - 9. கரந்தொழுகினவாறே அவர்கள் இருவரும் இக்குணத்தைக் கண்டு அற்புளஞ்சிறந்து.

---

(அடி.) 71-3. குறள், 8-ஆம் அதிகாரம், பரிமேல். மேற்.

73. “விருந்து என்பது உயர்திணையிருபாலையும் உணர்த்தும்’ (தொல். கிளவி. 57, ந.)

(பி - ம்.) † ‘கீதலுந்’ ‡ ‘வண்பெருஞ்’

அற்புளஞ் சிறந்தாங் †கருண்மொழி யளைஇ
எற்பா ராட்ட யானகத் தொளித்த
நோயுந் துன்பமு நொடிவது போலுமென்
‡வாயன் முறுவற்கவ ருள்ளகம் வருந்தப்
போற்றா வொழுக்கம் § புரிந்தீர் யாவதும்
மாற்றா வுள்ள வாழ்க்கையே னாதலின்
ஏற்றெழுந் தனன்யா னென்றவள் கூறக்
குடிமுதற் சுற்றமுங் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கு மாயமு நீங்கி
நாணமு மடனு நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி
சீறடிச் சிலம்பி னொன்றுகொண் டியான்போய்

---

79. நோய் - உடம்பின்மெலிவு. துன்பம் - மனத்தளர்ச்சி.

81 - 2. (பா) நீர் போற்றா வொழுக்கத்தை மேவினீராயிருக்கவும் மாற்றாவுள்ள வாழ்க்கையையுடையேனாதலாலே.

83. ஏற்று - உடன்பட்டு.

76 - 83. நீர் என்முன்பு நில்லாமையாலுள்ள வெறுப்பைக் கரந்தொழுகினேனாக, அதனை அறிந்து அவர்களுடைய உள்ளஞ்சிறந்து ஆங்கு அருண்மொழியளைஇ எற்பாராட்ட யான் நெஞ்சத்தடக்கிய நும்பிரிவையும் அதனால் வந்த ஆற்றாமையையும் சொல்லுவதுபோலும் என் மெய்யல்லா முறுவல்காரணமாக அவர் வருந்தும்படி போற்றா ஒழுக்கத்தை மேவினீர்; மாற்றாத உள்ளத்தேன் ஆகையாலே உடன்பட்டுப் போந்தேன்.

84. குற்றிளையோர் - குற்றேவன்மகளிர்; [1] எடுத்துக்கை நீட்டு வாருமாம்.

85. அடியோர்பாங்கு - அடியோர் பகுதி; சேவிக்கும் பெயர். ஆயம் - தோழிமார்; சேவிக்குந்தோழிமாருமாம்.

86. நல்லோரேத்து - நல்லோராலே ஏத்தப்படுந்தன்மை.

84 - 7. சுற்றமுதலான நான்குக்கும் நான்கும் துணையாக.

90. நாணினையுடைய பாவாய்; சாரியை நிற்க உருபுதொக்கது.

---

அடி, 80. "வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்" (அகநா. 5 : 5)
[1] திருக்குற்றால. 1. 13 : 80
(பி - ம்.) † 'கருமொழி' ‡ 'வாயின்' § 'புரிந்தா ராவது'

மாறி வருவன் மயங்கா தொழிகெனக்
கருங்கய னெடுங்கட் காதலி தன்னை
ஒருங்குடன் றழீஇ யுழையோ ரில்லா
ஒருதனி கண்டுதன் னுள்ளகம் வெதும்பி
வருபனி கரந்த கண்ண னாகிப்
பல்லான் கோவல ரில்ல நீங்கி
வல்லா நடையின் மறுகிற் செல்வோன்
இமிலே றெதிர்ந்த திழுக்கென வறியான்
தன்குல மறியுந் தகுதியன் றாதலின்
தாதெரு மன்றந் தானுடன் கழிந்து
மாதர் வீதி மறுகிடை நடந்து
பீடிகைத் தெருவிற் பெயர்வோ னாங்கண்
கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய
நுண்வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர
மெய்ப்பை புக்கு விலங்குநடைச் செலவிற்
கைக்கோற் கொல்லனைக் கண்டன னாகித்
தென்னவன் பெயரொடு சிறப்புப் பெற்ற
பொன்வினைக் கொல்ல னிவனெனப் பொருந்திக்
காவலன் றேவிக் காவதோர் காற்கணி
† நீவிலை யிடுதற் காதி யோவென
அடியே னறியே னாயினும் ‡வேந்தர்
முடிமுதற் கலன்கள் §சமைப்பேன் யானெனக்

95. ஒருங்குடன்தழீஇ - மேனிமுழுதும் தழுவி.
95 - 6. துணையில்லாத தனிமையைக்கண்டு விட்டு நீங்கமாட்டாமையால் மனம் வெதும்பி. 99. வல்லா நடை - மாட்டா நடை.
100 - 101. ஏறு எதிர்தல் இடையரறியும் நிமித்தமாதலின் அறிந்திலன்.
103. மாதர் வீதி - தளிப்பெண்டுகள் தெரு.
105 - 6. சிற்பத்தொழிலெல்லாம் துறைபோகிய கொல்லர்; கம்மாளரது வினையாவது - சிற்பம்.
107. மெய்ப்பை - சட்டை. விலங்கு நடைச்செலவு - இழிகுலத்தோனாதலின், உயர்ந்தோர்வந்தவிடமெங்கும் விலங்கி நடத்தல்.
108. கைக்கோல் - பற்றுக்கொடிறு. 109. சிறப்பு - வரிசை.
112. ஆதியோ - ஆவையோ.

அடி, 95 - 7. மனைவியர்க்குத் தமது வருத்தம் தோன்றாமல் கணவர் மறைத்தல் : புறநா. 41 : 14-5. அடி, 102. தாதெருமன்றம் : 17 : (28) : 4; மலைபடு. 531; நற். 343 : 3; குறுந். 46 : 3 - 4; கலித். 103 : 62; புறநா. 33 : 11. அடி, 104. பீடிகைத்தெரு : 5 : 41. அடி, 105. கண்ணுள் வினைஞர் : கலித். 85 : 7; பெருங். 5. 9 : 30; அடி, 107. "மெய்ப்பைபுக்க வெருவருந் தோற்றத்து" (முல்லை. 60)
(பி - ம்.) † 'நீவிலை தெரிதற்' ‡ 'வேந்தற்கு' § 'அமைப்பேன்'

கூற்றத் தூதன் கைதொழு தேத்தப்
†போற்றருஞ் சிலம்பின் பொதிவா யவிழ்த்தனன்
மத்தக மணியொடு வயிரங் கட்டிய
பத்திக் கேவணப் ‡பசும்பொற் குடைச்சூற்
சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்
\$பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துட னோக்கிக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்பு
யாப்புற வில்லை யெனமுன் போந்து
விறன்மிகு வேந்தற்கு விளம்பியான் §வரவென்
சிறுகுடி லங்க ணிருமி னீரெனக்
கோவலன் சென்றக் குறுமக னிருக்கையோர்
தேவ கோட்டச் சிறையகம் புக்கபின்
கரந்தியான் கொண்ட காலணி யீங்குப்
பரந்து வெளிப்படா முன்ன ¶மன்னற்குப்
புலம்பெயர் புதுவனிற் போக்குவ னியானெனக்
கலங்கா வுள்ளங் கரந்தனன் செல்வோன்
கூடன் மகளி ராடற் றேற்றமும்
பாடற் பகுதியும் பண்ணின் பயங்களும்
காவல னுள்ளங் கவர்ந்தன வென்றுதன்
ஊட லுள்ள முள்கரந் தொளித்துத்

---

116. பொதிவாய் - கட்டின வாய். 117. மத்தகமணி - தலையானமணி.

118. பத்தியாக வகுத்த கேவணம்; கேவணம் - கல்லழுத்துங்குழி. குடைச்சூல் - புடைதாழ்த்தல்; உள்ளுள் தாழ்த்தலுமாம்.

120. கொல்லன் புரிந்துடனோக்கி - கொல்லன் தான் மறைத்த சிலம் போடு ஒக்கும்படியைப் பார்த்து.

122. போந்து - போய்.

124. சிறுகுடிலங்கண் - சிறுகுடிலுக்கு அருகான அவ்விடம்; ஆவது அவனிருக்கையருகான தேவகோட்டம்.

125 - 6.........அக்கசாலை..........

128. மன்னற்கு வெளிப்படாமுன்னென்க.

129. புலம்பெயர் புதுவன் - வேறொரு தேசத்தினின்றும் வந்தவன்; பரதேசி.

---

(பி - ம்.) † 'பொற்றஞ் சிறப்பிற் பொதிவாயவிழ்த்து' ‡ 'பசும் பொற்சூடகச், சித்திரச்' \$ 'பொற்றொழிற் கொல்லன் புரிந்து நோக்கி' § 'வருவேன், சிறுகுடி லாங்க' ¶ 'மன்னவற்குப்'

தலைநோய் வருத்தந் தன்மே லிட்டுக்
குலமுதற் றேவி கூடா தேக
மந்திரச் சுற்ற நீங்கி மன்னவன்
சிந்தரி நெடுங்கட் சிலதியர் தம்மொடு
கோப்பெருந் தேவி கோயி †னோக்கிக்
காப்புடை வாயிற் கடைகா ‡ணகவையின்
வீழ்ந்தனன் கிடந்து தாழ்ந்துபல வேத்திக்
$கன்னக மின்றியுங் கவைக்கோ லின்றியும்
துன்னிய மந்திரந் துணையெனக் கொண்டு
வாயி லாளரை மயக்குதுயி லுறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்தென்
சில்லைச் சிறுகுடி லகத்திருந் தோனென
வினைவிளை கால மாதலின் யாவதும்
சினையலர் வேம்பன் றேரா னாகி
ஊர்காப் பாளரைக் §கூவி யீங்கென்
தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கைய தாகிற்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்கெனக்
காவல னேவக் கருந்தொழிற் கொல்லனும்

---

131 - 41. அரசனுக்கு ஆடிப் பாடினாருள் ஒருத்திமேல் உள்ளஞ் சென்றதென்று தேவி ஊடி நீங்க மந்திரச்சுற்றம் நீங்கி அரசன் அவள் வயிற் குறுகினவளவிலே தட்டான் தொழுதேத்தி.

(130) செல்வோன் (141) வீழ்ந்தனன் கிடந்தென்க.

142. கன்னகம் - அகழ்கருவி. கவைக்கோல் - குத்துக்கோல், கொடிறு, மண்வாங்குங்கருவி.

143. மந்திரம் - துயின்மந்திரம். 147. சில்லை - இழிவு.

150 - 51. என் கோதை - என்தேவி.

152. கன்றிய கள்வன் - களவிற்றழும்பினவன்.

---

அடி, 148 : இந்நூற்பதிகத்தின் 27-ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க; 'வினைவிளைந்தது' (தொல். கிளவி. 57, சே. ந.) என்பது இங்கே அறிதற்பாலது.

(பி - ம்.) † 'னோக்கக்' ‡ 'ணகவயின்' $ 'கன்ன மின்றியுங்' § 'கூமி னீங்கென்'

ஏவ லுள்ளத் தெண்ணியது முடித்தெனத்
† தீவினை முதிர்வலைச் சென்றுபட் டிருந்த
கோவலன் றன்னைக் குறுகின னாகி
வலம்படு தானை மன்னவ னேவச்
சிலம்பு காணிய வந்தோ ரிவரெனச்
செய்வினைச் சிலம்பின் செய்தி யெல்லாம்
பொய்வினைக் கொல்லன் புரிந்துடன் காட்ட
இலக்கண முறைமையி னிருந்தோ னீங்கிவன்
கொலைப்படு மகனல னென்று ‡ கூறும்
அருந்திறன் மாக்களை யகநகைத் துரைத்துக்
கருந்தொழிற் கொல்லன் காட்டின னுரைப்போன்
மந்திரந் தெய்வ மருந்தே நிமித்தம்
தந்திர மிடனே காலங் கருவியென்
றெட்டுட னன்றே யிழுக்குடை மரபிற்
கட்டுண் மாக்க டுணையெனத் * திரிவது
மருந்திற் பட்ட ராயின் யாவரும்
பெரும்பெயர் மன்னனிற் பெருநவைப் பட்டீர்
மந்திர நாவிடை வழுத்துவ ராயின்
இந்திர § குமரரின் யாங்காண் குவமோ
தெய்வத் தோற்றந் தெளிகுவ ராயிற்

---

155. ஏவலுள்ளத்து - ஏவப்பட்ட உள்ளத்தோடே. எண்ணியது முடித்தென - எண்ணியது முடித்தேனென்று; முடித்து: தன்மைவினை.

156. தீவினையாகி வந்து நிற்கிற வலை. 157. குறுகினனாகி - குறுகி.

164. (பா) அருந்திறன் மாக்கட்கு அகநகவுரைத்து - இவனிருந்த படியாற் கள்வனல்லனென்று உரைத்தவர்கள் மனம் பிரியமாக உடம் படும்படி வார்த்தைகள் சொல்லி.

165. காட்டினன் - ஏதுக்களைக்காட்டி.

170. மருந்திற் பட்டராயின் - இவன் மருந்தினால் தப்பினவிடத்து.

173. இந்திரகுமரர் அகப்படாததுபோல... நாமும் காணமாட்டோம்.

174 - 5. கள்ளர் தங்கள் தெய்வத்தோற்றத்தினை நினைப்பாராயின், கையிலகப்பட்ட பொருளைக் காட்டியும் தப்புவர்; அகங்கையை அவர்க் குக் காட்டியும் பெயர்குவரென்றுமாம்.

---

அடி, 156 - 7: 'குறுகுதல் அணுகுதலென்னும் பொருளில் வரும்' (தொல். முதற்சூத்திரவிருத்தி, மேற்.)

(பி - ம்.) † 'தீவினை வலையிற்' ‡ 'கூறலு, மருந்திரண் மாக்க ளகனக வுரைத்துக்' * 'திரிவ, மந்திர நாவிடை வழுத்துவர்' § 'திருவின் யாங்காண் குவமோ'

†கையகத் துறுபொருள் காட்டியும் பெயர்குவர்
மருந்தி னங்கண் மயக்குவ ராயின்
இருந்தோம் பெயரு மிடனுமா ருண்டோ
நிமித்தம் வாய்த்திடி னல்ல தியாவதும்
‡புகற்கில ரரும்பொருள் வந்துகைப் புகுதினும்
தந்திர கரண மெண்ணுவ ராயின்
இந்திரன் *மோர்பத் தாரமு மெய்துவர்
§இவ்விட மிப்பொருள் கோடற் கிடமெனின்
அவ்விடத் தவரை யார்காண் கிற்பார்
காலங் கருதி யவர்பொருள் கையுறின்
||மேலோ ராயினும் விலக்கலு முண்டோ
கருவி கொண்டவ ரரும்பொருள் கையுறின்
இருநில மருங்கி னியார்காண் கிற்பார்
இரவே பகலே யென்றிரண் டில்லை
கரவிடங் கேட்பினோர் புகலிட மில்லை
¶தூதர்கோ லத்து வாயிலி னிருந்து
‖மாதர்கோ லத்து வல்லிருட் புக்கு
விளக்கு நிழலிற் றுளக்கிலன் ††சென்றாங்
கிளங்கோ வேந்தன் றுளங்கொளி யாரம்
‡‡வெயிலிடு வயிரத்து மின்னின் வாங்கத்
துயில்கண் விழித்தோன் றோளிற் காணான்

---

176-7. நம்மிடத்து மயக்குவரென்றால், இருந்த நாம் எழுந்திருந்து போகலாமிடமும் உண்டோ; இருந்த நாம் பெயர்ந்து போகவுமாட்டோமென்றுமாம்.

179. புகற்கிலர் - புகார்கள்; பொருள்வந்து கைப்புகுதினும் அதனை விரும்பாரென்றுமாம்.

180. தந்திரகரணம் - கரவடநூல்; களவுநூலிற் சொல்லுகிற கிரியையுமாம்:

185. மேலோர் - தேவர்.

189. கரவிடம் - களவின்பகுதி. புகலிடம் - ஒளிக்கும்பரப்பு; புகலிடமில்லை - சொல்லின் முடிவில்லை யென்றுமாம். (பா) பரவிடமில்லை - புகழ்ந்து முடியவொண்ணாதென்க.

193. இளங்கோவேந்தன் - தென்னவன் தம்பி.

194. வெயிலிடு வயிர ஆரத்தை வாங்கவென்க; ஆரத்தை வயிரத்தொளியே ஒளியாகச் சென்று வாங்கவென்றுமாம்.

---

(பி-ம்.) †'கையகத் துப்பொருள்' ‡'புகற்கி லரும்பொருள் வந்துகை கூடா' *'மார்பி லாரமு' §'இவ்விடத் திப்பொருள்' ||'மேலோ ராலும்' ¶'தூதர்க்கோலத்து' ‖'மாதர்க்கோலத்து' ††'சென்றீங்' ‡‡'வில்லிடு'

உடைவா ளுருவ வுறைகை வாங்கி
எறிதொறுஞ் செறித்த வியல்பிற் கரற்றான்
மல்லிற் காண மணித்தூண் காட்டிக்
கல்வியிற் பெயர்ந்த கள்வன் றன்னைக்
கண்டோ ருளரெனிற் காட்டு மீங்கிவர்க்
குண்டோ வுலகத் தொப்போ ரென்றக்
கருந்தொழிற் கொல்லன் சொல்ல வாங்கோர்
திருந்துவேற் றடக்கை யிளையோன் †கூறும்
நிலனக முளிய நீலத் தானையன்
கலனசை வேட்கையிற் கடும்புலி போன்று
மாரி நடுநாள் வல்லிருண் மயக்கத்
தூர்மடி கங்கு லொருவன் றோன்றக்
கைவா ளுருவவென் கைவாள் வாங்க
வெவ்வாய் மருங்கினும் யானவற் கண்டிலேன்
அரிதிவர் செய்தி யலைக்கும் வேந்தனும்
உரியதொன் றுரைமி னுறுபடை யீரெனக்
கல்லாக் களிமக னொருவன் கையில்
வெள்வா ளெறிந்தனன் விலங்கூ டறுத்தது
புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப
மண்ணக மடந்தை வான்றுயர் கூரக்
காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்
கோவலன் பண்டை யூழ்வினை யுருத்தென்.

---

196 - 9. அவன் உடையாளுருவ உறையைத் தன் கையிலேவாங்கி அவ்வாளெறிய வாங்குந்தோறும் உறையைச் செறித்தான்; அதிலே (பா) அலசிப் பின்பு மல்லாலே காண நினைத்தவனை நின்ற தூணைக்காட்டித் தான் மறைந்தான். 200. இவர்க்கென்றான், இவனையும் கள்ளனாக்கி.

202-3. அங்கு வந்து இவர்களுடன் நின்றொருவன் சொல்லுவான்.

211. உரியது - இனிச்செய்வது.

212. கல்லாக்களிமகன் - கல்வியின்மையின் மயங்கின மகன்.

213. வாளெறிந்தனன்................விலங்கூடறுத்தது - குறுக்காக ஊடறுத்தது அந்தவாளென்க; அறுத்தது : முற்று.

216. அதனாலே விழுந்தான்.

207 - 16. ஒரு கள்ளனை யான் கண்டேன்; கைவாளை உறைவிட்டு நீக்க அவனை ஓரிடத்திலுங் கண்டிலேன்; ஆதலின் இவர் செய்தி தெரியாது; இவனை நாம் கொல்லாதே தப்பவிடில் அரசன் நம்மை வருத்தும்; இனி உரியது செய்க வென, ஒருவன் வாளாலெறிந்தான்; அது விலங்க ஊடறுத்தது; விழுந்தான். 217. உருத்து - உருப்ப.

---

அடி, 204-5 : **மதுரைக்.** 639-42. அடி, 207. **ஊர் மடிகங்குல் : கலித்.** 65 : 3. அடி, 217. **வினை உருத்தல் : மணி.** 8 : 40.

(பி - ம்.) † ‘சொல்லும்’

நேரிசை வெண்பா

நண்ணு மிருவினையு நண்ணுமின்க ணல்லறமே
கண்ணகி தன்கேள்வன் †காரணத்தான் - மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.

---

"நண்ணும்": கண்ணகிதன் கேள்வன்காரணமாக வளைந்தது; இது பண்டை வினை; இருவினையும் நண்ணும்; ஆதலால் உலகத்தீர், அறஞ்செய்மினென்று இளங்கோவடிகள் அருளிச்செய்தது.

---

### 1-2. அரும்பெறற் பாவையை......மடந்தை

(இ - ள்.) தனக்குப் பெறுதற்கரிய பாவைபோல்வாளைக் கவுந்தியடிகளால் அடைக்கலங் கொடுக்கப்பெற்ற மிகவும் பெரியதாகிய உவகையையுடைய இடையர்குலத்திற் பிறந்த மாதரியாகிய மடந்தை.

மடந்தை, பருவமன்று; பெண்பாற்பெயர்.

### 3-6. அளைவிலை யுணவின்......மனைப்படுத்து

(இ - ள்.) மோர்விலையை உணவாகவுடைய ஆய்ச்சியரோடு இடையர் குடியிருந்த இல்லினன்றிக் கட்டுவேலிசூழ்ந்த காவலையும் அழகு பெறவிட்ட குளிர்ந்த காவணத்தையுமுடைய செம்மண்பூசப்பட்ட சிறிய இல்லாகிய புதிய மனையிலேயிருத்தியென்க.

அளை - மோர். மிளை - கட்டுவேலி. பூவல் - செம்மண்; "பூவற் படுவிற் கூவற் றோண்டிய" (319 : 1) என்றார் புறத்தினும்.

### 7-8. செறிவளை யாய்ச்சியர்......நாணீ ராட்டி

(இ - ள்.) தன்சுற்றத்திலுள்ள செறிந்த வளையையுடைய ஆய்ச்சியர் சிலருடனே தான் நின்று நறிய மலர்க்கோதையினையுடையாளைப் புது நீரால் மஞ்சனஞ்செய்வித்தென்க.

### 9-14. கூடன் மகளிர்......தொழுது

(இ - ள்.) இக்கூடல்நகரிடத்து மகளிர் கொள்ளும் அருவிலை ஆடகப் பைம்பூணுற்செய்த கோலமழித்தற்குச் செய்யாக்கோலமொடுவந்த உமக்கு அடித்தொழிலாட்டி இல்லையென்று கருதற்பாலீரல்லீர்; என்மகள் ஐயை காணும் அடித்தொழிலாட்டி; யான் உம்மைப் பொன்போலப் பொதிந்து கொள்வேன்; பூங்கோதையையுடைய நங்காய், இங்ஙனமாதலான், இனி ஒன்றற்கும் கவலாது இருப்பீராகவென்று சொல்லித் தொழுவதுஞ்செய்தென்க.

---

(பி - ம்.) † 'காரணமா மண்ணில்'

கூடன் மகளிரென்றாள், தானறியுமூர் அதுவாகலின். இனிக் கூடன் மகளிர்க்கு அழகைக் கொடுக்கும் ஆடகப் பைம்பூணினது அருவிலையை யழித்தற்குச் செய்யாக்கோலமொடு வந்தீர்க்கெனினும் அமையும். செய் யாக்கோலம் - புனையாதவழகு; ஆவது [1] இயற்கையழகு. வந்தீர்க் கென்றும், காணீரென்றும் உயர் சொல்லால் ஒருவரைக்கூறும் பன்மை யாற் கூறினவள் ஈண்டு நங்கையென்றது ஒருமை பன்மை மயக்க மெனின்,—அற்றன்று; நம்பியெனப் [2] பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயர் நங்கையென்று புதல்வர்மனைவியரைக்கூறும் முறைப்பெயராத லின், நங்கையென்றாளென்க; "நாத்தூ ணங்கையொடு" (16 : 19) என்ப மேலும். இஃது அக்கால வழக்கு. கோவலனைத் தனக்கு மகனாகக் கருதி இங்ஙனம் கூறினாள். இனி வந்தாய்க்கெனவும், காணினெனவும் பாடங் கூறுவாருமுளர்.

## 15 - 7. மாதவத்தாட்டி......மகனார்க்கினி

(இ - ள்.) மாதவத்தாட்டி தீங்குள்ள நெறியில் ஒரு தீங்குமுறாமற் காத்து வருத்தம் சிறிதுமில்லாவிடத்தே கூட்டினாளாதலான், இனி நின் கொழுநற்கு இவ்விடத்தில் மனக்கவலை யுறுதலுண்டோ வென்றாளென்க.

இடந்தலைப்படுதல் - கூட்டுதல். புறனடைவிதியான் (தொல். குற்றி யல். 78) நோவுதகவு [3] நோதகவாயிற்று. நும்மகனார்க்கு : மகனென்பது ஆண்பாற் பெயர்; நும்முடைய புருடனுக்கென்பதாயிற்று; "நினக் கிவன் மகனாய்த் தோன்றியதூஉம், மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம், பண்டும் பண்டும் பலபிறப் புளவாற், கண்ட பிறவியே யல்ல காரிகை" (21 : 29-32) என்றார் மணிமேகலையிலும். "கண்போன்ற மாமன் மகள்" (26) என்றார் சிந்தாமணியிலும். ஓகாரம் : எதிர்மறை.

## 18 - 21. சாவக நோன்பிகள்......நீரெனக் கூற

(இ - ள்.) அடிகள் சாவக நோன்பிகளாதலின், நங்கையார் நாத்தூ ணாருடனே நீங்களும் பகற்பொழுதேயுண்ணும் அடிசில் சமைத்தற்குப் பொருந்தின நல்ல புதுக்கலங்களை விரையக் கொண்டுவந்து கொடுப்பீ ராகவென்று சொன்னாளாகவென்க.

சாவகநோன்பு - துறவாது விரதங்காத்தல். அடிகளென்றார். கோவல னரை. நாத்தூணங்கை - நங்கை நாத்தூணென்க. நாத்தூணொடு நங்கை அடிசிலாக்குதற்கெனினும் அமையும். நாள்வழிப் படுமடிசில் - போசனம். அமைந்த கலமென்றாள், தாங்கள் ஆளுங்கலமன்றி மேன் மக்கள் ஆளும் மடைக்கலங்களை. நற்கலம் - புதுக்கலம். நெடித்தல் - நீட்டித்தல். நீரளிமினென்றாள், தனக்கு [4] நெய்ம்முறையாதலின்.

---

[1] "உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்" (கம்ப. கோலங்காண். 3). [2] தொல். பெயர். 11.

[3] "நோதக விருங்குயி லாலுமரோ" (கலித். 32 : 24)

[4] "நெய்ம்முறை நமக்கின்றாமென்" [17 : (1) : 7]

இத்துணையுங்கூறியது, இவர்கள்சென்ற அன்றிரவு செய்தனவும் மேற்செய்வனவும்.

இனி மற்றைநாளைச்செய்தி கூறுகின்றார்.

## 22 - 8. இடைக்குல மடந்தையர்......கொடுப்ப

(இ - ள்.) ஐயைமுதலாகிய இடைக்குலமடந்தையர் மாதரி கூறிய இயல்பிற் குன்றா மடைக்கலத்துடனே [1] மாட்சிமையுடையோர் கொடுக்கும் மரபு போலப் பூவாதுகாய்க்கும் பாகலினுடைய கொழுவிய திரண்ட களைக்காயும் வளைந்த வரியையுடைய வெள்ளரிக்காயும் கொம்மட்டி மாதுளங்காயும் இனிய மாங்கனியும் வாழைக்கனியும் செந்நெலரிசியும் தம்மிடத்துள்ள பாலும் நெய்யும் என்னும் இவற்றைக்கொண்டு சென்று நேரிய வளையையுடைய மாதே, இவற்றைக் கொள்வாயாகவென்று கொடுக்கவென்க.

கோளிப்பாகல், வெளிப்படை; கோளி - பூவாது காய்க்கும் மரம். என்னை? "கோளி யாலத்து" (புறநா. 58 : 2) என்றார்; பாகல் - பலா; "முளிதயிர் மிசைபாகன் மென்பழம்" எனவும். "பைம்பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி" (பொருந. 191-2) எனவுஞ் சொன்னார் பாட்டினும். கனிக்காய் - [2] † முதாரிக்காய். வால்வரிக்கொடுங்காயென்று பாடமோதி, வெள்வரிக்காயென்பாருமுளர்; "அணில்வரிக்கொடுங்காய்" (246 : 4) எனப் புறத்தினுங் காட்டினராதலின், கொடுங்காயென்பது பெயர். வரி : அடை. மாதுளங்காய் கூறினர், புளித்தகறி பண்ணுதற்கு. பாற்பயன் - பாலும் பயனும்; எண்ணும்மை தொக்கு ஒடுவிரிந்து உடனிகழ் பொருளாயிற்று.

## 29 - 34. மெல்விரல் சிவப்ப......காதலற் காக்கி

(இ - ள்.) அங்ஙனம் அவர்கொடுத்த பலவேறு வகைப்பட்ட பசுங்காய்களைக் கொடுவாய்க்குயத்தின் மெல்விரல் சிவப்ப விடுவாய் செய்யத் திருமுகம் வியர்த்தது; செங்கண் சேந்தன; கரிய இடத்தேயுடைய அட்டிலைக் கண்டனளாய் முகமாறிப் பெயரும்வகை வைக்கோலால் எரி மூட்டிய ஐயையுடனே தன்கை வல்ல மாத்திரத்தாலே காதலனுக்கு ஆக்கியென்க.

கொடுவாய்க்குயம் - கோடிய வாயையுடைய அரிவாள்; "கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து" (242) என்றார் பொருநராற்றுப்படையினும். விடுவாய் செய்தல் - அரிதரல். திரு - அழகு; பெயருமாம். சேந்தன - சிவந்தன. கரிபுறவட்டில் - புறம் கரிதான அட்டில்; புறம் - இடம். வையெரி மூட்டிய - வைக்கோலால் எரியை மூட்டிய. கையறி மடமை பாடமாயின், கை அறிந்ததும் அறியாததுமாகவென்க; முன்பு ஆக்கிக் கைதேறினாற்போல வெனவும் அமையும்.

---

[1] மாட்சிமை யுடையோர் கொடுக்குமரபு சொல்லாமலே கொடுத்தல்; "சொல்லாம லேபெரியர் சொல்லிச் சிறியர்செய்வர், சொல்லியுஞ் செய்யார் கயவரே - நல்ல, குலாமாவை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற் பலாமாவைப் பாதிரியைப் பார்" (ஔவையார் பாடல்)

[2] முதாரி - முதுமை; "முதாரிப்பாண" (புறநா. 198); இது வழக்கிலுமுள்ளது. (பி - ம்.) † 'உதாயக்காய்'

## 35 - 43. தாலப் புல்லின்......அடிக ளீங்கென

(இ - ள்.) புற்களில் தாலப் புல்லினது மிகவும் வெள்ளிய தோட்டாலே கைவன்மையையுடைய மகள் அழகுபெறப் புனைந்து செய்த தொழிலையுடைய தவிசிலே தனது செல்வன் வந்திருந்தபின்பு கடிமலரங் கையாற் சுடுமண்மண்டையாற் காதலனடிமலர் கழீஇய நீரைத் தான் தொழுதனளாய் மாற்றி மண்ணகமடந்தையுற்ற மயக்கத்தைத்தான் ஒழிக்கின்றாள்போலத் தன்கையாற் குளிர்ந்த நீரைத் தெளித்துத் தடவி மண்டலமிட்டு ஈருவாழையினது குருத்தை விரித்து அதனகத்தே அமுதைப் பெய்து, அடிகள் ஈங்கு அமுது செய்தருளுகவென்று சொல்ல வென்க.

"புறக்கா ழனவே புல்லென மொழிப" (தொல். மரபு. 85) என்றாராகலின், தாலப்புல்லென்றார். வால்வெண்டோடு - இளைய வெள்ளிய தோடெனினும் அமையும்; "ஊர்தி வால்வெள் ளேறே" (புறநா. கடவுள்.) என்றாராகலின். மகடூஉ : பெண்பாற் பொதுச்சொல். தவிசு - தடுக்கு. அங்கை - அகங்கை ; "அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே, முதனிலை யொழிய முன்னவை கெடுதலும், வரைநிலை யின்றே யாசிரியற்க, மெல்லெழுத்து மிகுத லாவயி னான" (தொல். புள்ளிமயங்கு. 20) என்பதனான் முடிக்க. கழீஇய வென்பதூஉம், அமுதைப் பெய்தென்பதூஉம் [1] முன்னத்தி னுணரும் கிளவியாற் குறிப்பாற்கொள்ளப்பட்டன. மண்டையென்னாது சுடுமண்மண்டையென்றார், புதுக்கலமாதல்தோன்ற. இதனை மண்டையென இழித்துக்கூறினார், முன்னர்ப் பொன் வெள்ளி முதலியன வழங்குதலின். வழிபாடு தோன்றத் தொழுதனள் மாற்றி யென்றார். மண்ணகம் : ஒரு சொல். மயக்கொழிப்பனள்போல் - மண் மடந்தை தங்கட்கு எதிர்வதுணர்ந்து மயங்கினாளை மயக்கொழிப்பாள் போல. மயக்கம் - அனந்தரென்பாருமுளர். குமரிவாழை : இது பெயரின்வந்த [2] சமாதியென்னு மலங்காரம். உண்க : இரந்துகோடற் குறிப்பின்கண் வந்த ககரவீற்று வியங்கோள். ஈங்கு அமுதமுண்க வென்றது, இவையும் பொறுக்கவற்றேயென்னும் இரக்கம்.

ஆக்கி இருந்தபின் மாற்றித் தெளித்துத் தடவி விரித்து அமுதமுண்க என்றாளென்க.

## 44 - 53. அரசர் பின்னோர்க்கும்......காட்சி யீங்கென

(இ - ள்.) ஓதவும் உணரவுமரிய மறையிடத்து அரசர் பின்னோர்க்குரியவாக விதித்த வாய்ப்பூச்சுப் பலியிடுதல் முதலியவெல்லாம் ஒருமுறையாற் கழித்தபின்பு புறத்துநின்ற ஐயையும் மாதரியும் இந்த மதுரையில் இவ்வாயர்பாடியில் யாம்பெற்ற இந்நல்லமுதம் உண்கின்ற இந்த நம்பி அந்த மதுரையில் ஆயர்பாடியில் அசோதைபெற்ற அந்த நல்லமுதமுண்ணும் புதிய காயாம்பூப்போலும் வண்ணத்தையுடைய கண்ணனோதான் ; இவன் துயர்தீர்த்த இப்பல்வளைத் தோளியும் காளிந்தி

---

[1] தொல். எச்ச. 63. [2] "உரிய பொருளன்றி யொப்புடைப் பொருண்மேல், தரும்வினை புணர்ப்பது சமாதி யாகும்" (தண்டி. 25)

யாற்றின்கண் தூய நீலமணி வண்ணனைத் துயர்தீர்த்த பின்னையென்னும் விளக்கோதானென்று உவகை பொங்கி இவரழகு நம் கண்களின் அடங்காவென்று புகழ்ந்து கூறவென்க.

அரசர் பின்னோர் - வணிகர். தவ்வை - தாய். விம்மிதம் - அதிசயமுமாம்.

### 54 - 6. உண்டினிதிருந்த......வருகெனப் பொருந்தி

(இ - ள்.) அங்ஙனம் அவர் புகழ இனிது உண்டிருந்த மிக்க புகழையுடைய கோவலனுக்கு அழகிய மெல்லிய சுருளோடே பிளவையும் கொடுத்து நின்ற கரிய பெரிய ஓதியையுடையாளை வருகவென்று அருகணைத்தென்க. ஓதி : ஆகுபெயர்.

### 57 - 62. கல்லத ரத்தம்......யாவது மறியேன்

(இ - ள்.) எம்முடைய முதுகுரவர், பருக்கை பொருந்திய சின்னெறியையுடைய அருநெறியைக் கடத்தற்குச் சிறிதும் வன்மையையுடையனவோ மடந்தையுடைய அடியென்று இவ்வெம்மையையுடைய எயினர் ஆறலைக்குஞ் சுரத்தினெறியிற் போந்ததற்கு இரங்கி என்ன இடும்பை யுற்றார்களோ! யாம் இங்ஙனமுற்றது கனவோ! நனவாமாயின் முன்செய்த தீவினைப்பயனோ! யான் இப்பொழுது உள்ளங் கலங்குதலான் இவற்றினொன்றையும் அறிகின்றிலேன்;

என்னுற்றனர்கொல் - இறந்துபட்டார்களோ. மாயம் - கனவு. யாவதும் - யாதும்; பகுதிப்பொருள் விகுதி.

### 63 - 70. வறுமொழி யாளரொடு......என்செய் தனையென

(இ - ள்.) வீணரோடும் பரத்தரோடும்கூடிப் பிறரைப் புறங்கூறும் அவையின்கண் வெடிசிரிப்புக்கு உட்பட்டு மறவியிற்பொருந்தி அமைந்தோர் விரும்பப்படும் பொருளாகிய நல்ல ஒழுக்கத்தைக் கெடுத்தவெனக்கு இனித் தீக்கதியன்றி நற்கதியுண்டாமோ; அதுவேயுமன்றி இருமுது குரவர்க்கும் செய்யும் ஏவலையும் பிழைத்தேன்; நினக்கும் சிறுமை செய்தேன்; இவ்வழுவொழுக்கம் இழுக்கமென்பது சிறிதும் பார்த்திலேன்; யான் இங்ஙனமாயும் நம்முடைய நகரிடத்துநின்றும் இந்நகரிடத்து வருதற்கு எழுகவென்றேனாக, அது முறைமையன்றென மறுது என்னோடு ஒருப்பட்டெழுந்தாயே; நீ என்ன கருமம் செய்தாயெனக் கோவலன் இரங்கிக்கூறவென்க.

வறுமொழியாளர் - பயனில கூறுவோர். [1] வம்பப்பரத்தர் - புதிய காமநுகர்ச்சியை விரும்புங்காமுகர்; பரத்தையை நுகர்வானும் [2]பரத்தன். குறுமொழி - சிறுசொல்; ஆவது பிறரையிகழ்ந்து கூறுதல். நெடுநகைபுக்கு - வெடிசிரிப்புக்கு உட்பட்டு. பொச்சாப்புண்டு - மறவியிற் பொருந்தி. நச்சு - நச்சப்படும் பொருள். இருமுது குரவர் - தந்தை தாயர். ஏவல் பிழைத்தல் - மாதவி நட்பை அவரொழிக்க ஒழியாமை.

---

[1] இறை. 35, உரை.

[2] பரத்தனென்பதற்கு இப்பொருள் கொண்டே, "பெண்ணியலாரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" (குறள், 1311) என்றார்; "பண்பில் காதலன் பரத்தமை" (மணி. 7 : 50)

சிறுமுறுக்குறைவி - சிறிய பிராயத்தே பெரிய அறிவையுடையாள். வழு - பழிப்புரை. எனும் - சிறிதுமென்றபடி. நகர் - தன்மனையுமாம். ஈண்டு எழுகவென்பதற்கு நாம் போதற்கு விரையென்றுனெனினும் அமையும். இத்துணையும் தனது ஒழுக்கத்தை வெறுத்து இவ்வரவிற்கு நீயுமுடன் பட்டாயெனத் தனது அறிவின்மையை அவளொடுபடுத்துக் கூறினான்.

இனிக் கண்ணகி கூறுவாள் :—

## 71 - 83. அறவோர்க் களித்தலும்.......என்றவள்கூற

(இ - ள்.) அறவோர் அந்தணர் துறவோர் விருந்தினரென்னும் இவர்கட்கு அளித்தலும் ஓம்பலும் எதிர்தலும் கோடலுமென்னும் இவற்றை இழந்தவென்னை நும் பெருமகளுடனே இருநிதிக்கிழவன் கண்டு, நீர் என் முன்பு நில்லாமையான் வந்த வெறுப்பைக் கரந்தொழுகினேனாக, அவர்கள் அது தெரிந்து தன் உள்ளத்தின் மிக்க அன்போடே அருள் கலந்த மொழியால் என் பொறையைப் பாராட்ட, யான் இதயத்தே மறைத்த மெய்வருத்தமும் மனக்கவலையும் வெளிப்பட்டு வாய்திறந்து சொல்லுவதுபோலே யிருந்ததென்று என் பொய்ம் முறுவல் கண்டு அவர் வருந்த நீர் போற்றாவொழுக்கம் மேவினீராகவும் உம்முடைய வார்த்தையைச் சிறிதும் மாற்றாத உள்ள வாழ்க்கையையுடையேனாதலாலே யான் அதற்கு உடன்பட்டெழுந்தேனென்று அவள் கூறவென்க.

அறவோர் - சாவகநோன்பிகள். பெருமகள் - கோவலன்மாதா. பெயர் - புகழ். தலைத்தாள் - தலைமையுடைய முயற்சி. மன் - மன்னரால். நீரென ஒரு சொல் வருவிக்க. இகந்தனை - இகந்தேனாக; தன்மை. அற்பு - அன்பு; "மெல்லொற்று..........கிளையொற்றாகும்" (தொல். குற்றியலுகரப். 9) என்பதனால் முடிந்தது. சிறத்தல் - மிகுதல். நொடித்தல் - சொல்லுதல். வாயன்முறுவல் - பொய்ந்நகை. 'ஆற்றாவுள்ள வாழ்க்கையீ ராதலின்' என்பதூஉம் பாடம்.

## 84 - 93. குடிமுதற் சுற்றமும்...மயங்கா தொழிகென

(இ - ள்.) சுற்ற முதலிய நான்கினையும் நீங்கி நாண முதலிய நான்கும் துணையாக அறிவற்ற என்னோடு போந்து என் தனிமையைத் தீர்த்த பொன்னே! கொடியே! கோதாய்! பாவாய்! விளக்கே! கொழுந்தே! செல்வி! யான் நின் சீறடிக்கு அணியாகிய சிலம்பில் ஒன்றைக்கொண்டுபோய் விற்றுவருவேன்; வருந்துணையும் நீ தனிமையான் வருந்தாதொழிக வென்றானாக வென்க.

குடிமுதற்சுற்றம் - தாய்தந்தை முதலியோர். குற்றிளையோர் - குற்றேவன் மகளிர். அடியோர்பாங்கு - அடியார் பகுதித்திரள்; என்பார் செவிலித்தாய் முதலிய [1]ஐவர்; "ஐவர் நலனேம்ப" (சீவக. 393) என்றார் பிறரும். ஆயம் - சேவிக்கும் தோழிமார். மடன் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. நல்லோரேத்து - மகளிராம் ஏத்தப்படு மழகு. பேணிய கற்பு........பொன் முதலியவற்றுக்கெல்லாம் உவமம் விரித்துரைக்க.

---

[1] ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என்ற ஐவர்.

94 - 9. கருங்கய னெடுங்கண்...மறுகிற் செல்வோன்

(இ - ள்.) கரிய கயல்போலும் நெடிய கண்ணிணையுடைய தனது காதலியை மெய்முழுதும் தழுவி அவள் அருகில் யாவருமின்றித் தனியிருக்கின்ற அதனைக் கண்டு உள்ளகம் வெதும்புதலாலே மல்கிய கண்ணின் நீரை அவள் காணின் வருந்துமென்று அதனைக்கரந்த கண்ணிணையுடையனாய்ப் பல பசுக்களையும் பல எருமைகளையுமுடைய கோவலர் இல்லத்தை விட்டு நீங்கி மாட்டாநடையோடே அத்தெருவிற் செல்கின்றவனென்க.

இதில், 'உழையோரில்லா' எனவும், 'ஒரு தனிகண்டு' எனவும் கூறினார், ஆய்ச்சியரெல்லாம் குரவையாடப் போனமை தோன்ற.

100 - 101. இமிலே றெதிர்ந்தது...தகுதியன் றாதலின்

(இ - ள்.) அங்ஙனம் செல்கின்றவன் முரிப்பையுடைய கொல்லேறு எதிர்த்துப் பாயவந்ததனை நிமித்தவிரோதமென்று அறிந்திலன்; அஃது இடையர் குலத்தாரன்றித் தன்குலத்துள்ளோர் அறியும் முறைமையன்மை யானென்க. இமில் - முரிப்பு.

102 - 104. தாதெரு மன்றம்......பெயர்வோ னாங்கண்

(இ - ள்.) அம்மறுகில் தாதெருவையுடைய மன்றத்தை யெல்லாம் கழிந்து [1] தளிப்பெண்டுகள் தெருவினடுவே போய்க் கடைத்தெருவிற் பெயர்கின்றவன் அவ்விடத்தே.

105 - 12. கண்ணுள் வினைஞர்.........ஆதியோவென

(இ - ள்.) உருக்குத்தட்டாரும் கைவினைமுற்றிய பணித்தட்டாருமாகிய நூற்றவர் பின்வர அரசவரிசையாகிய சட்டையுடனே ஒதுங்கி நடந்து செல்லும் செலவினையும் கையிற் பிடித்த கொடிற்றையுமுடைய பொற்கொல்லனைக் கண்டனனாகிப் பாண்டியன் பெயரோடு வரிசைபெற்ற பொற்கொல்லன் இவனெனக் கருதி அணுகச்சென்று, அரசன் தேவிக்குப் பூணலாவதொரு சிலம்பினை விலைமதித்தற்கு நீ வல்லையோவென்று கேட்பவென்க.

மெய்ப்பை - சட்டை. விலங்குநடைச் செலவு - மேன்மக்களைக்கண்டு ஒதுங்கி நடத்தல். கைக்கோல் - கொடிறு. ஆதியோ - ஆவையோ; கருத்தனோவென்றுமாம். ஆதியோவென்றான், தன் சிலம்பினது அருவிலை கருதி. இவனைக்கண்டாலும் துந்நிமித்தமென்பார் பின்வர முன் கண்டனனாகியென்றார்.

இனிப் பொற்கொல்லன் கூறுவான் :—

113 - 6. அடியேனறியேன்......அவிழ்த்தனன்

(இ - ள்.) மகளிருடைய அடிக்கலம் விலைமதித்தற்கறியேனாயினும் வேந்தர் முடிக்கலம் முதலியன சமைப்பேன் யானெனக் கால தூதனாக வந்த பொற்கொல்லன் கையால் தொழுது புகழ்தலானே யாவர்க்கும் புகழுவரிய சிலம்பினைப் பொதிந்த பொதிவாயை அவிழ்த்தனனாகவென்க.

117 - 20. மத்தக மணியொடு.......புரிந்துட னோக்கி

[1] தளிப்பெண்டுகள் தெரு - கோயிலிற் பணிசெய்யும் மகளிர் தெரு; தளித்தெருவெனவும் வழங்கும்.

(இ - ள்.) தலையான மாணிக்கத்தோடு வயிரமும் பத்திபட அழுத்திய கேவணத்தையுடைய கிளிச்சிறையென்னும் பசும்பொன்னாற் செய்த புடை பட்டு உட்கருவையுடைய சித்திரத்தொழிலையுடைத்தாகிய சிலம் பின் தொழிலருமையெல்லாம்........பொய்ச் செய்தி சார்ந்த தொழிலை யுடைய பொற்கொல்லன் நெஞ்சம் [1]இடுவந்திகூறுதலைப் புரிந்து நோக்கக் கண்கள் சிலம்பை நோக்க இவ்விரு நோக்கும் கண்டார்க்கு ஒரு நோக்கம்போல நோக்கியென்க.

மத்தகமணி - சூடிகைமணியுமாம்; சிலம்பின் மத்தகத்தின் மணி யெனினும் அமையும். கேவணம் - மணியழுத்தும் குழி. குடைச்சூல் - குடைபடுதல் என்பாருமுளர். செய்வினை - கைத்தொழில். பொய்த் தொழில் - பொய் சொல்லுதலே தொழிலாகவுடைய வெனினுமாம்.

புரிந்துடனோக்கி யென்பதற்குப் பணியும் விலையும் நோக்காது அவனை இடுவந்தியிடுவதற்கு இசைந்து தான் வஞ்சித்துக்கொண்ட சிலம்போடு ஒக்கும்படியைப் பார்த்தென்பாரும் உளர்.

## 121-6. கோப்பெருந்தேவிக்கு...சிறையகம் புக்கபின்

(இ - ள்.) அரசனுடைய [2]பெருந்தேவிக்கல்லது இப்பெருவிலைச் சிலம்பு வேறொருவர்க்கும் வினைவில்லையென்று சொல்லி, முன்னின்றும் போய் வெற்றிமிக்க வேந்தனுக்கு இதனை யுணர்த்தி யான் வருந்துணை யும் என் புன்குடிலுக்கு அருகாகிய அவ்விடத்தே நீர் இருமெனக் கோவலனும் சென்று அக்கீழ்மகனிருப்பிடத்திற்கு அயலதோர் அக்க சாலைப்பள்ளியின் மதிலுக்குள்ளே புக்கபின் என்க.

ஐ : இடைச்சொல். யாப்புறவு - வினை; பொருத்தமுமாம். என - என்று சொல்லி. முன்போந்து - முன்னின்றும் போய்.

இனி, அவனுட்கோள் கூறுவார் :—

## 126-30. கரந்தியான் கொண்டே......செல்வோன்

(இ - ள்.) யான் முன்பு வஞ்சித்துக்கொண்ட சிலம்பு என்னிடத்ததே யென்பது பலரும் அறிய மன்னற்கு வெளிப்படுவதன் முன்னே வேறொரு தேயத்தினின்றும் வந்த புதியவனோடே போக்குவேன் யானென்று துணிந்த உள்ளத்தைக் கரந்து செல்கின்றவன்.

யாம் கொண்ட வென்றும், போக்குவமென்றும் கூறற்பாலவற்றை இவன் கீழ்மகனாதலால், தனித்தன்மை கூறினார்.

## 131-41. கூடன்மகளி ராடல்...தாழ்ந்துபல வேத்தி

(இ - ள்) கூடலில் நாடகமகளிருடைய ஆடலிடத்துத் தோன்றும் முகத்தோற்றமும் அவர் ஆடல்விகற்பமும் அவ்வாடல் விகற்பத்துக் கேற்ற பாடலின் வேறுபாடும் யாழிசையின் பயன்களும் கோவலனுடைய உள்ளத்தை விரும்புவித்தனவென்று கருதி ஊடியவுள்ளத்தைத் தன்

---

[1] இடுவந்தி - குற்றமில்லாதவன்மேற் குற்றத்தை யேற்றுதல். இஃது இத்தமிழ் நாட்டின் வடபாகத்தே வழங்குகின்றது.

[2] பெருந்தேவி - பட்டத்துத் தேவி.

னுள்ளே கரந்தொடுக்கி வருத்தத்தைச் செய்யும் தலைநோயென்பதனைத் தன்மேலே யிட்டுக்கொண்டு குலப்பிறப்பையுடைய பெருந்தேவி தன்னோடு மேவாதே தனது கோயிற்கண்ணே அந்தப்புரத்திற் சென்று புகுந்துவிடுதலானே அரசன் காமபரவசனாய் அமைச்சர் திரளினின்று நீங்கி அரிசிந்திய கண்ணையுடைய சிலதியர்திரளுடனே கோப்பெருந்தேவியுடைய கோயிலை நோக்கிச் செல்வோனைக் காவலையுடைய வாயிற் கடையிடத்தே கண்டவளவிலே வீழ்ந்து தாழ்ந்து பலகால் ஏத்திச் சொல்கின்றவனென்க.

கலங்கா வுள்ளங் கரந்தனன் செல்வோன், தாழ்ந்து பலவேத்தி யென்க.

## 142-7. கன்னக மின்றியும்......இருந்தோனென

(இ-ள்.) கன்னக்கோலும் கவைக்கோலுமின்றாகவும் தன் மனத்தின்கண் பயின்ற துயின்மந்திரமே களவுக்குத் துணையெனக் கொண்டு வாயில் காவலரை மயக்கமுறுத்தும் துயிலெய்துவித்துக் கோயிற்கண் இருந்த சிலம்பினை அபகரித்துக்கொண்ட கள்வன் இந்த ஒலியையுடைய பெரிய ஊர் காவலருடைய கண்ணை மறைத்து அடியேனுடைய புன்குடிலகத்தே வந்திருக்கிறானென்று அவ்வரசர்குச் சொல்லவென்க.

கன்னகம் - அகழ்கருவி. கவைக்கோல் - கொடிற்றுக்கோல்; ஆவது படைக்கல், இட்டிகை முதலியவற்றைப் பறிக்குங் கருவி; குத்துக்கோலென்பாருமுளர். [1] சில்லை - இழிவு. இன்றியுமென்னும் உம்மை சிறப்பு. துணை - உசா. முன்னாள் தன்னிடத்தில்லை யென்று நிலைநின்றதற்கேற்பக் கோயிற் சிலம்புகொண்ட கள்வனென்றான். விற்கவந்து அகப்பட்டானென்பது தோன்ற, என் சிறு குடிலகத்திருந்தானென்றான்.

## 148-53. வினைவிளை காலம்...கொணர்க வீங்கென

(இ-ள்.) சினையலர் வேம்பன் ஊர்காக்கும் காவலாளரையழைத்து இங்ஙனமாகிய எனது தாழ்பூங்கோதையையுடையாள் தன்னுடைய காலணியாகிய சிலம்பு இவன் சொன்ன களவில் தழும்பிய கள்வனுடைய கையகத்ததாயின், அவனைக் கொல்ல அச்சிலம்போடு ஈங்குக் கொணர்க வெனக் கருதியவன் வினைவிளைகின்ற காலமாதலானே இதனைச் சிறிதும் தேரானாய்த் தேவி கூடாதேகச் சுற்ற நீங்கிச் சிலதியரோடு கோயில் நோக்கிக் காம பரவசனாய் அவன் கடையிடத்தோனாகலானே அவனைக் கொன்று அச்சிலம்பை இவளூடல் தீர்த்தற்கு உதவியாக இவ்விடத்தே கொணர்வீராகவென்று சொல்லவென்க.

யாவதும் - சிறிதும். சினை - கொம்பு. அலர்வேம்பு - வேம்பலரென்க. ஆகுபெயரான் மாலையாயிற்று. வேம்பன், [2] "கொன்றையன்" (திருச்சிற். 400) என்பதுபோல நின்றது. கன்றிய - அடிபட்டவென்றபடி. கொன்று - கொல்லவெனத் திரிப்பினும் அமையும். இனி என் கோதை தன் காற்சிலம்பு அடிப்பட்ட கள்வன் கையதாயிற் கொன்று கொணர்க வெனினும் தன்கட் கொடுங்கோன்மை யின்மை யுணர்க.

---

[1] சில்லைக்க ணன்பினை" (நாலடி 377). [2] கொன்றையனென்பதற்குக் கொன்றைப் பூவின் தன்மையனென்பது பொருள்.

## 154-7. காவல னேவ......குறுகின ளுகி

(இ - ள்.) அங்ஙனம் கூறிய காவலன், வேற்காரரைத் தன்னேடு ஏவுதலாலே கருந்தொழிற்கொல்லனும், ஏவப்பட்டவுள்ளத்தோடே நாம் எண்ணிய வெண்ணம் முடிந்ததன்றே வெனக்கருதித் தீவினையாகிய சூழ்ந்த வலைக்குள்ளே சென்று அகப்பட்டிருந்த கோவலனைக் குறுகச் சென்ருனுகை வென்க.

கருந்தொழில் - கொலைத்தொழில். முடிந்ததென்பது விகாரம். இனி, எதிர்காலத் தன்மை வினையை விரைபொருட்கண் இறந்த காலத்தாற் கூறினன் எனினும் அமையும். முதிர்தல் - சூழ்தல். முதிர்வினையென மாறித் தீய பழவினையாகிய வலைக்குள்ளேயெனினும் அமையும்.

## 158-61. வலம்படு தானை......புரிந்துடன் காட்ட

(இ - ள்.) வெற்றி பொருந்திய தானை மன்னவன் ஏவுதலாற் சிலம்பு காணிய இவர் வந்தார் ; அதனைக் காட்டுமினெனச் சொல்லி அத்தொழில் பொருந்திய சிலம்பின் அருமையெல்லாம் கூறுவான்போலப் பொய்ம்மையைத் தொழிலாகவுடைய கொல்லன் அவரை வேருக அழைத்துக் கோயிலில் இருக்கின்ற தனிச் சிலம்போடே பொருந்தச்சொல்லிக்காட்டவென்க.

காட்டுமினென்பது சொல்லெச்சம். காணிய : வினையெச்சம். புரிந்தெனவே அவனினீங்கி யென்பதும், உடன்காட்டவெனவே அச்சிலம் போடு ஒரு தன்மையாக ஒப்புக்கூறியென்பதும் கொள்ளப்பட்டன.

## 162-5. இலக்கண முறைமையின்......உரைப்போன்

(இ - ள்.) இவன் மெய்ப்பொறியானும் இருக்கின்ற முறைமையானும் கள்வனென்று நீ சொல்லப் படுவானுமல்லன் ; கொல்லப் படுவானுமல்ல னென்று சொல்லும் அரிய திறலையுடைய வேற்காரரை நகைத்து இகழ்ந்து கூறிக் கொலைத்தொழில் புரிந்த பொற்கொல்லன் [1] **களவு நூலி**லுள்ள ஏதுக்களைக் காட்டினனுய் உரைக்கின்றவனென்க.

இலக்கண முறைமை - இலக்கணத்தானும் இருந்த முறைமையானு மென உம்மைத் தொகை. கொலைப்படுமகன் - கள்வன். அகநகை - இகழ்ச்சி நகை.

அகநெகவென்று பாடமாயின், நெகவுரைத்தென்க.

## 166-9. மந்திரந் தெய்வம்...துணையெனத் திரிவது

(இ - ள்.) பொல்லா வொழுக்கத்திறற் களவுகண்டு உண்ணும் மாக்கள் மந்திர முதலிய எட்டையுமன்றே படையாகக்கொண்டு திரிவ தென்ருனென்க.

மருந்தே இடனேயென்ற ஏகாரமிரண்டும் எண். அன்றேயென்பது தேற்றம். கட்டுண்மாக்கள் எட்டுடனன்றே துணையெனத் திரிவதென்க.

## 170-71. மருந்திற் பட்டீ ராயின்......பெருநவைப் பட்டீர்

---

[1] களவுநூல் ஸ்தேய சாஸ்திரமென்று வழக்கப்படுகின்றதென்றும், அந்நூலைச் செய்தவர் **கடசரென்பவரின்** ஆசிரியராகிய **கர்ணீ ஸுத**ரென்பவரென்றும் வடமொழியாளர் கூறுவர்.

(இ - ள்.) இவன் வலியையழித்துத் தப்புவதன்றி இவன் மருந்திற் பட்டீராயின், நும் பெரிய புகழையுடைய வேந்தனால் வரும் தண்டம் இப் பொழுதே பட்டீரன்றோ என்றானென்க.

பட்டீர், வினைபொருள் ; சொன்னோம் சொன்னோமென்னும் வழக்கு : இது முற்கூறினான், அவர் அஞ்சிக் கடுகக் கோறற்கு. இனி மந்திர முதலிய எட்டின் வினைவு கூறுவான் :—

## 172 - 3. மந்திர நாவிடை......யாங்காண் குவமோ

(இ - ள்.) தாம் சாதித்த மந்திரத்தை நாவிடத்தே வழுத்துவராயின், தேவ குமாரரைப்போல நாம் காணமாட்டோமென்றானென்க.

வழுத்தல் - அபிமந்திரித்தல். இந்திரகுமரர் காணப்பட்டார் ; அவரைப் போல இவரும் காணப்படார். இந்திரர் - தேவர் ; "இந்தி ரர்க்கும் புகழ்வரிதே" (சீவக. 173) எனவும், "இந்திர ரமுத மியைவ தாயினும்" (புறநா. 182 : 1-2) எனவும் சொன்னார் பிறரும் ; இனி அந்தர குமரரென்பாருமுளர்.

## 174 - 5. தெய்வத் தோற்றம்......பெயர்குவர்

(இ - ள்.) தாங்கள் ஆதரிக்கும் தெய்வம் எப்பொழுதும் தங்களுக்கு முன் நிற்கும்படி மனந்தெளிந்து நினைப்பாராயிற் கையிலேயகப்பட்ட மிக்க பொருளை நமக்குக் காட்டியும் தப்புவரென்றானென்க.

## 176 - 7. மருந்தி னங்கண்......இடனுமா ருண்டோ

(இ - ள்.) இவர் மருந்தினாலே நம்மிடத்து மயக்கம் செய்வாராயின், இருந்த நாம் புடைபெயரும் இடமுமுண்டாமோ வென்றானென்க.

மார் : இடைச்சொல்.

## 178-9. நிமித்தம் வாய்த்திடின்...வந்துகைப் புகுதினும்

(இ - ள்.) தாம் ஆண்ட நிமித்தம் வாய்ப்புப் பெற்றாலல்லது பெறுதற் கரிய பொருள் தானேவந்து கைப்புகுதினும் புகார்களென்றானென்க.

யாவதும் - எளியவிடத்திலும்.

## 180 - 81. தந்திர கரணம்......எய்துவர்

(இ - ள்.) களவுநூலிற் சொல்லிப் போதுகின்ற தொழில்களையறிந்து எண்ணிச் செய்வாராயின், தாம் மண்ணுலகத்திருப்பினும் விண்ணுலகத் திருக்கும் இந்திரனது மார்பிலணிந்த ஆரத்தை எய்தவேண்டின் அதனை யும் எய்துவரென்றானென்க.

தந்திரகரணம் - நூலிற் சொல்லும் கிரியை. எண்ணுதல் - எண் ணிச் செயல்.

## 182 - 3. இவ்விட மிப்பொருள்...யார்காண் கிற்பார்

(இ - ள்.) இப்பொருள் நாம் கோடற்கு இவ்விடமே யிடமென இவர் துணிவாராயின் அவ்விடத்து அவரை யார் கண்ணாற் காணவல்லாரென்றா னென்க.

கிற்றல் - செய்தல்.

## 184 - 5. காலங் கருதி......விலக்கலு முண்டோ

(இ - ள்.) அவர்கள் களவுகொள்ளுங் காலம் இதுவென்று கருதிப் பொருளைக் கைப்பற்றுவாராயின், மேலோராயிருப்பினும் விலக்குதல் உண்டாகுமோ வென்றானென்க.

## 186 - 7. கருவிகொண்டவர்......காண்கிற்பார்

(இ - ள்.) கருவிகளைக்கொண்டு பெறுதற்கரிய பொருளைக் கைப் பற்றுவராயின், இப்பூமியிடத்து யாவர் கண்கொண்டு காணவல்லா ரென்றானென்க.

இங்ஙனமாதலாலென ஒருசொல் வருவிக்க.

## 188 - 9. இரவே பகலே......புகலிட மில்லை

(இ - ள்.) இவர்க்கு இரவுபகலென்று இரண்டில்லை; இக்கரவின் பகுதியை நாம் கேட்பிற் புகன்று முடியாது;

இக்களவுநூலை நாம் கேட்பின், ஒடியொளிக்கலாமிடமில்லை யென்று மாம்.

## 190 - 202. தூதர் கோலத்து......கொல்லன் சொல்ல

இங்ஙனம் களவுநூல் துறைகூறி, முன்னாள் இத்தென்னவன் தம்பி யிடத்து நிகழ்ந்ததொன்றென்று ஒரு பொய்க்கரி கூறுகின்றான்;

(இ - ள்.) முன்னாளிலே ஒருகள்வன் தூதர் உருக்கொண்டுவந்து கொற்றவன் வாயிற்கட் பகற்பொழுதிருந்து இராப்பொழுது மாதர் உருக் கொண்டு உள்புகுந்து விளக்குநீழலிலே பள்ளியறையினுள் அஞ்சாது புக்கு அடங்கி இந்நெடுஞ்செழியற்கு இளங்கோவாகிய வேந்தன் துயில் கின்றவனுடைய மார்பில் வெயிலிடுகின்ற வயிரத்தையுடைய ஆரத்தை விரைய வாங்கினானாக, துயிலுணர்ந்தவன் தோளிற்காணானாய் உடை வாளையுருவினானாக, அதனுறையைக் கள்வன்கையிலே வாங்கி அவன் குத்துந்தோறும் வாளிலே யுறையைச்செறித்தான்; அங்ஙனஞ்செறித் தலின், அதற்கு அரற்றானாய் மற்போராலே அவன் வலியினெல்லையைக் காண, ஆண்டு நின்றதோர் தூணைத்தானாகக்காட்டிக்கழிந்து தன்களவு நூற்கல்வியால் தப்பிய கள்வனைக் கண்டாருண்டாயின் அவர்களைக் காட்டிக்காணீர்; ஆதலான், இவர்க்கு இவரே ஒப்பாதலன்றி இவ்வுலகத் துப் பிறரை ஒப்பாகக்கூறுதலுண்டோவென்று அக் கொலைத்தொழிற் கஞ்சாத பொற்கொல்லன் சொன்னானாகவென்க.

வேந்தன் விழித்தோன் காணான் உருவ வாங்கிச் செறித்த இயல் பிற்கு அரற்றான் காணக் காட்டிப்பெயர்ந்த கள்வனென்க.

இதனால் அரசன் நெஞ்சுணர்ந்தும் நாவெழாமை கூறினான். இவர்க் கென்றான், கள்வரென்றசாதிபற்றி. அ: முன்னறிசுட்டு.

## 202 - 3. ஆங்கோர்......கூறும்

(இ - ள்.) அவ்விடத்து அவர்களில் வேலைக் கையிலேயுடையானோர் இளையவன் சொல்லும்; அஃதியாதெனின்—

## 204 - 11. நிலனக முளியன்......உறுபடை யீரென

(இ - ள்.) முன்னாளிலே, நிலத்தையகழும் உளியையுடையனாய் நீல நிறத்தானையையுடையனாய்ப் பலகலன்களையும் நச்சிய வேட்கையாற்

பற்றிய பொருளைவிடாமையிற் கொடும்பசியால் ஊனைக்கவ்வி விடாத புலிபோன்று சரற்காலத்து இடையாமமாகிய, இருளாற் கண்கள் மயங்கச் செய்தலையுடைய, ஊரெல்லாம் துயிலால் மடிவித்தலைச்செய்யும் இராக் காலத்து ஒரு கள்வன் வந்து தோன்ற, யான் என்கையில் வாளை உறை கழித்தேனாக, அவ்வாளை அவன்வாங்க, அவனையும் என்வாளையும் எவ் விடத்தும் கண்டிலேன்; ஆதலால் இவர்செய்கை யாவர்க்கும் அறிய வரிது; இவனை நாம் நெகிழவிடின், அரசன் நம்மை வருத்தும்; ஆதலான், இனி இதற்குச் செய்தற்குரியதொன்றைத் துணிந்து கூறு மின்; மிக்க படைக்கலத்தையுடையீரென்றானென்க.

"நிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர், மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர், நிலனக ழுளியர் கலனசைஇக் கொட்கும், கண்மா றாடவ ரொடுக்க மொற்றி" (639 - 42) என்றார் மதுரைக்காஞ்சியினும்.

இனி, உளியத்தென்று பாடமோதி, நின்றுவந்த தொகைப்பின் நின்ற போன்றென்பதனை இதனோடு கூட்டி முடிப்பினும் அமையும். இதற்கு நீலத்தானையன் நிலன் அகழ்தலால் உளியம்போன்றும், கலனசை வேட்கையாற் புலிபோன்றுமென்க.

உளியன் தானையன் புலிபோன்று ஒருவன் தோன்ற என்க.

### 212 - 7. கல்லாக் களிமகன்...ஊழ்வினை யுருத்தென்.

(இ - ள்.) இங்ஙனம் இவர்கூறலின், அறிவின்மையாற் கொலையஞ் சான் ஒரு களிமகன் தன்கையில் வெள்வாளாலே வெட்டினானாக, அது குறுக்கே துணித்தது; துணிந்த உடற்குறைப் புண்வழியே கொப்புளிக் கின்ற குருதி குதித்து எங்கும்பரக்க நிலமடந்தை தனக்கு ஆவது உணர்ந்து மிக்கதுயரமுற அக்காவலனுடைய செங்கோல் வளைய முன்னைத்தீவினை முதிர்தலாலே கோவலன் வெட்டுண்டு விழுந்தா னென்க.

வெள்வாள் - மாற்றாரையெறிந்து குருதிக்கறை தட்டாதவாளெனவு மாம்; போர்மாலை சூழ்ந்து புகர் புகாத வாள். விலங்கூடறுத்தது - அவ் வாள் குறுக்கே துணித்தது; முற்று. உமிழ்தல் - கொப்புளித்தல். வானும் கூர்ப்பும் மிகுதி.

இஃது எல்லாவடியும் அளவடியாய் வந்துமுடிதலின், நிலைமண்டில ஆசிரியப்பா.

### நண்ணும்.........வந்தவினை.

(இ - ள்.) பாண்டியன் முன்செய்த தீங்கின் விளைவாகிவந்தவினை யாலே, மண்ணில் வளையாத செங்கோல் கண்ணகிதன் கேள்வன் முன் னிலையாக வளைந்தது; ஆதலால், செய்தானொருவனை இருவினையும் நண்ணுமென்பதனையறிந்து, உலகத்தீர்! நல்வினையே செய்யுமின்க ளென்று அடிகள் கூறினாரென்க.

ஆதலாலென ஒருசொல்வருவிக்க.

## (கசு) கொலைக்களக் காதை முற்றிற்று.

---

## பதினேழாவது

# ஆய்ச்சியர் குரவை

(1) கயலெழுதிய விமய நெற்றியின்
அயலெழுதிய புலியும் வில்லும்
நாவலந் தண்பொழின் †மன்னர்
ஏவல் கேட்பப் பாரர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன் ‡கோயிலிற்
காலை முரசங் கனைகுர லியம்புமாகலின்
நெய்ம்முறை நமக் §கின்றாமென்
றையைதன் மகளைக்கூஉய்க்
கடைகயிறு மத்துங்கொண்
டிடைமுதுமகள் வந்துதோன்றுமன்.

### உரைப்பாட்டு மடை

(2) குடப்பா லுறையா குவியிமி லேற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு ;

---

(1) 2. அயலெழுதிய புலியும் வில்லுமென்றது அவற்றையுடைய அரசரை ; சோழன் சேரன்.

3. மன்னர் - மற்றுள்ள குறுநில மன்னர்.

6. இயம்பும் : முற்று.

8. ஐயையாகிய தன்மகளை. 10. முதுமகள் - மாதரி.

உரைப்பாட்டுமடை - உரையாகிய பாட்டை இடைப்படுத்தது.

(2) உறையா - தோயா.

---

(1) அடி, 3. நாவலந்தண்பொழில் : பெரும்பாண். 465. அடி, 6 : **மதுரைக்**. 232 ; **ஐங்குறு**. 448 : 1.

அடி, 6. இயம்பல் என்பது ஒலித்தற்றொழிற் பண்பில் வரும் (**நன். மயிலை**. 458, சங். 459, மேற்.) அடி, 1-10 : பாட்டிடை வைத்த குறிப் பினான் வந்த உரை (தொல். செய். 165, இளம்.)

(பி - ம்.) † 'மன்னரொ, டேவல் கேட்பவர சாண்ட' ‡ 'கோயிற், காலை முரச மியம்பு மாதலின்', 'கோயிற், காலை முரசியம்பு' § 'கின்றாகு மென, ஐயை'

(3) உறிநறு வெண்ணெ யுருகா †வுருகும்
மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு ;
(4) நான்முலை யாய நடுங்குபு நின்றிரங்கும்
மான்மணி வீழும் வருவதொன் றுண்டு.

### கருப்பம் ‡

(5) குடத்துப்பா லுறையாமையும் குவியிமிலேற்றின் மடக் கண்ணீர் சோர்தலும் உறியில்வெண்ணெ யுருகாமையும் மறி முடங்கி யாடாமையும் மான்மணி நிலத்தற்று வீழ்தலும் வருவ தோர் துன்பமுண்டெனா மகளை நோக்கி மனமயங்காதே மண் ணின் மாதர்க் கணியாகிய கண்ணகியுந் தான்காண ஆயர் $பாடியி லெரு மன்றத்து மாயவனுடன் தம்முனுடிய வால சரிதை நாடகங்களில் வேனெடுங்கட் பின்னையோடாடிய குரவையாடு தும் யாமென்றாள் கறவைகன்று துயர்நீங்குக வெனவே.

### கொளு

(6) § காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ்
வேரி ¶ மலர்க்கோதை யாள், சுட்டு ; (க)
(7) நெற்றிச் செகிலை யடர்த்தாற் குரியவிப்
பொற்றொடி மாதரா டோள் ; (உ)

---

(3) (பா) உருகி - மெலிந்து. உருகி ஆடா - குழைந்து கிடக்கும், உருகியென்பது ஆடாமையென்னும் மறையொடு முடிந்தது.

(4) நான்முலையாயம் - பசு ; ஆயம் மணி வீழும் ; இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்திலே முடிந்தது. மான் மணி - பெரிய மணி ; கழுத்தின் மணி.

கருப்பம் - கேட்டுக்குக் கருப்பம்.

(5) 'உறையாமை' முதலாக எண்ணிய உம்மைகளுக்கு உறையா மையாலுமென்று மூன்றும் வேற்றுமை விரிக்க. மயங்காதே - வருந் தாதே. குரவை - பலர் கூடியாடும்......யைக்கூத்து. வாலசரிதை நாட கம் - பிள்ளைச் சரித நாடகம். மாயவன் தொழுனையாற்றிற் பிள்ளைப் பருவத்துப் பலதேவரோடும் பின்னையோடுமாடின குரவைக் கூத்தைக் கூறுகின்றாள் :—

" குரவையென்பது......இயல்பிற்றென்ப."

கொளு - குரவைக்குக் கருத்து.

(7) செகில் - சிவந்த சுட்டி.

---

(6) "காரிகதனஞ்சான் கொள்பவன்", "காரிகதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே" (கலித். 104 : 21, 74)

(பி - ம்.) † 'மறுகி' ‡ 'ஆங்கு, குடத்து' $ 'பாடியினெரு' § 'ஆங்கு, காரி' ¶ 'மலர்க்குழலாள், நெற்றிச் செதிலை யடர்த்தாற் குரியதிப், பொற் றொடி மாதர் நகை'

(8) மல்லன் மழவிடை யூர்ந்தாற் குரியளிம்
முல்லையம் †பூங்குழ ருன் ; (௩)
(9) நுண்பொறி வெள்ளை ‡யடர்த்தாற்கே யாகுமிப்
பெண்கொடி மாதர்தன் றோள் ; (௪)
(10) பொற்பொறி வெள்ளை §யடர்த்தாற்கே யாகுமிந்
நற்கொடி மென்முலை தான் ; (௫)
(11) வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக்
கொன்றையம் பூங்குழ லாள் ; (௬)
(12) §தூநிற வெள்ளை யடர்த்தாற் குரியளிப்
பூவைப் புது ||மல ராள். (௭)

## எடுத்துக்காட்டு

(13) ஆங்கு,
தொழுவிடை யேறு குறித்து வளர்த்தார்
எழுவ ரிளங் ¶கோதை யார்
என்றுதன் மகளைநோக்கித்
தொன்றுபடு முறையானிறுத்தி
இடைமுது மகளிவர்க்குப்
படைத்துக்கோட் ††பெயரிடுவாள்
குடமுத ‡‡லிடமுறை யாக்குர றுத்தம்
கைக்கிளை யுழையிளி விளரி தாரமென
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே.

---

(8) மல்லல் - வலி. தான் : அசை.

எடுத்துக்காட்டென்பது - இவ்வேறு கொண்டானுக்கு இன்னுன் உரியளென்றல்.

(13) : 8. குடமுதல் - மேற்றிசை முதலாக. வட்டப்பாலை வருமாறு:— [1] "ஆழியு மாரும்போற் கீறிச் சிறுதிகைக்கண், ஊழிடுரோவொன் றுடன்கீறிச்—சூழ, எருதாதி கீழ்த்திசைக்கொண் டீராறு மெண்ணிக், கருதி நிலக்கயிற்றைக் காண்", "இளியிடபங் கற்கடக மாம்விளரி சிங்கம், தளராத தாரமதுவாம் - தளராக், குரல்கோற் றனுத்துத்தங் கும்பங்கிளையாம், வரலா லுழைமீன மாம்", "குரறுலை விற்றுத்தங் கைக்கிளையே கும்பம், பரிய வுழைமீனம் பாவாய்—அரிதாரம், கொல்லே

---

(9) " நுண்பொறி வெள்ளைக், கதனஞ்சான் பாய்ந்த பொதுவன்" (கலித். 101 : 27 - 8)

(10) வெள்ளை : "செம்மறு வெள்ளையும்" (கலித். 105 : 12)

(12) தூநிற வெள்ளை : "பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளை" (கலித். 104 : 8)

[1] சினேந்திரமாலை, ஆருடசக்கரம், 1.

(பி - ம்.) † 'பூங்குழலாள்' ‡'யடர்த்தானுக்காகும்' §'அடர்த்தாற் குரித்தா மிந்' §'தூவுறு வெள்ளை' ||'மலரா, ளாங்கு' ¶'கோதை யார், எடுத்துக்காட்டு' ††'பேரிடுவாள்' ‡‡'லிடைமுறை யாகக் குரல்'

(14) மாயவ னென்றாள் குரலை விறல்வெள்ளை
ஆயவ னென்று ளிளிதன்னை - யாய்மகள்
பின்னையா மென்றாளோர் துத்தத்தை மற்றையார்
முன்னையா மென்றாண் †முறை ;
(15) ‡மாயவன் சீருளார் பிஞ்ஞையுந் தாரமும்
வால்வெள்ளை சீரா ருழையும் விளரியும்
கைக்கிளை பிஞ்ஞை யிடத்தாள் வலத்துளாள்
*முத்தைக்கு நல்விளரி தான் ;
(16) அவருள், வண்டுழாய் மாலையை மாயவன் மேலிட்டுத்
தண்டாக் குரவைதா னுள்படுவாள் - கொண்டசீர்
வைய மளந்தான்றன் மார்பிற் றிரு §நோக்காப்
பெய்வளைக் கையாணம் பின்னைதா னுமென்றே
ஐயென்று ளாயர் மகள்.

---

றிளிவிளரி கற்கடகங் கோப்பமைந்த, தொல்லே ழிசைநரம்பிற் காம்." இப்படி ஏழு நரம்புகளையும் நிறுத்தி 'எழுவ ரிளங்கோதையார்' என்ற ஏழு பெண்களையும் ஏழு நரம்பாக்கி அவர்களை நரம்புநிற்கு நிலைகளிலே நிறுத்தி...............................

அவருள்,—

(14) மாயவ னென்றாள் குரலை; மற்றை வெள்ளை யாயவனென்றாள் இளிநரம்பை; ஆய்மகள் பிஞ்ஞையாமென்றாள் துத்தத்தை; மற்றைப் பெண்களைக் கைக்கிளை உழை விளரி தாரமென்றாள்.

[உழையுளியென்று உழைக்குப் பெயர்]

(15) மாயவனென்ற குரனரம்பைப் பின்னையான துத்தமும் தாரமும் சேரநின்றன; பலதேவராகிய இளிநரம்பை உழையும் விளரியும் சேரநின்றன. கைக்கிளை யென்கின்ற நரம்பு பின்னைக்கு இடப்பக்கமே நின்றது; முந்தையாகிய தாரத்துக்கு வலப்பக்கமே நின்றது விளரி.

["குரன்மருங்கிற் பாகந் தன்மருங்கணைந்து நின்ற வுழைகைக் கிளைகண் மேலொரோவலகு 'செல்லவு மமைப்பது துத்தங் குரலாகவக் குரன்முதலேழு வகை யோசையு நிரல்படப் பிரிந்திசைப்பது நேரிசை மண்டிலம்"]. இது திரிபு சூத்திரம்.

(16) மாயவன் - மாயவனாக நிறுத்தினவள். நோக்காத வளைக்கை யாள். ஐ யென்றாள் - வியந்தாள்.

---

(பி - ம்.) †'முறையவருள்' ‡'மாயவள் சீருள்ளாள் பின்னையுந்' *'முந்தைக்கு நல்வினரிதான் வண்டு' §'நோக்காள், பெய்வளைக் கையாளப்பின்னை தானு'

### கூத்துள்படுதல்

(17) அவர்தாம், செந்நிலைமண்டிலத்தாற்கற்கடகக்கைகோஒத்
† தந்நிலையே யாடற்சீ ராய்ந்துளார் - முன்னைக்
குரற்கொடி தன்கிளையை நோக்கிப் பரப்புற்ற
கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் ‡ பாடும்
முல்லைத்தீம் பாணியென் றாள்.

(18) எனக்,
குரன்மந்த மாக விளிசம னாக
வரன்முறையே துத்தம் வலியா - உரனிலா
மந்தம் விளரி பிடிப்பா \$ ளவணாட்பின்
பின்றைையப் பாட்டெடுப் பாள்.

### பாட்டு

(19) கன்று குணிலாக் § கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ (க)

(20) பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ. (உ)

---

கூத்துள்படுதல் - தான் கூத்துக்குள் ஒத்தாடுதல்

(17) செந்நிலையாவது - சமநிலை. மண்டிலத்தான் - மண்டிலத் தோடே. கற்கடகக்கை - நடுவிரலும் அணிவிரலும் முன்னேநின்று மடித்து மற்றை இரண்டுவிரல்களும் கோத்தல்.

"இருவிரல்க டம்மையுந் தம்முள்ளே கோத்துப், பெருவிரல்க ணீக்கநண் டாம்"

(19) குணில் - குறுந்தடி. கொன்றையந்தீங்குழல் என்றமையான் முன்பினவையும் பண்ணின்மேற்செலுத்தாது கருவிமேற் செலுத்துக; பண்களுமாம்.

(20) ஆம்பன்முதலானவை சில கருவி; ஆம்பல் - பண்ணுமாம். "மொழியாம்பல் வாயாம்பல் முத்தாம்பல்" என்றுசொல்லுவர் பண்ணுக்கு.

---

(19) கொன்றையந்தீங்குழல் : கலித். 106 : 3. (20) ஆம்பலந் தீங் குழல் : குறிஞ்சிப். 222 ; ஐங்குறு. 215 ; கலித். 108 : 62.

"கன்றுகுணிலா", "பாம்புகயிறு", "கொல்லையஞ்சாரல்" [(19), (20), (21)] என்பவை பின்குறிப்பிட்டுள்ள இடங்களில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளன ; தொல். செய். 174, இளம் ; 149, பேர். ந ; யா - வி. செய். 22 ; யா - கா. செய். 9 ; இ - வி. 735, மேற்.

(பி - ம்.) † 'தந்நிலையா ராடியசீ ராய்ந்துளள்' ‡ 'பாடுகோ, முல்லைப் பூம்பாணியென்றாளெனக்' \$ 'ளிவணடைப்பிற், பின்றையோர் பாட்டு' § 'கனியுகுத்த'

(21) கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
†எல்லைநம் மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி; [1] (௩)

(22) தொழுனைத் துறைவனோ டாடிய பின்னை
அணிநிறம் பாடுகேம் யாம்.

(23) இறுமென் சாய னுடங்க நுடங்கி
அறுவை யொளித்தான் வடிவென் கோயாம்
அறுவை யொளித்தா னயர வயரும்
நறுமென் சாயன் முகமென் கோயாம். (க)

(24) வஞ்சஞ் செய்தான் றொழுனைப் புனலுள்
நெஞ்சங் கவர்ந்தா ணிறையென் கோயாம்
நெஞ்சங் கவர்ந்தா ணிறையும் வளையும்
வஞ்சஞ் செய்தான் வடிவென் கோயாம். (௨)

(25) தையல் கலையும் வளையு மிழந்தே
கையி லொளித்தாண் முகமென் கோயாம்
கையி லொளித்தாண் முகங்கண் டழுங்கி
மைய ‡லுழந்தான் வடிவென் கோயாம். (௩)

ஒன்றன்பகுதி

(26) கதிர்திகிரி யான்மறைத்த கடல்வண்ண னிடத்துளாள்
மதிபுரையு நறுமேனித் தம்முனோன் வலத்துளாள்
பொதியவிழ் மலர்க்கூந்தற் $பிஞ்ஞைசீர் புறங்காப்பார்
முதுமறைதேர் நாரதனார் முந்தைமுறை நரம்புளர்வார்.

(27) மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்
§பயிலிதழ் மலர்மேனித் தம்முனோ னிடத்துளாள்
கயிலெருத்தங் கோட்டியநம் பின்னைசீர் புறங்காப்பார்
||குயிலுவரு ணாரதனார் கொளைபுணர்சீர் ¶நரம்புளர்வார்.

---

(22) (பா) "தொழுனைக் கணவனோ டாடிய பின்னை, அணிநிறம் பாடுகம் யாம்" என்று ஒரு குறள்வெண்பா இட்டோதுவாருமுளர்.

ஒன்றன்பகுதி - ஒற்றைத்தாளத்தின் கூறு.

---

(22) தொழுனைத்துறைவன் : 16 : 50.

[1] "கன்று குணிலா" (19) என்பது முதலிய மூன்றும், இரண்டா மடிகளிரட்டிக்கப்பெற்று நந்நான்கடியினவாக மிதிலைப்பட்டிப் பிரதியிற் காணப்படுகின்றன.

(பி - ம்.) † 'எல்லி' ‡ 'லுழந்தான் மனமென்கோ' $ 'பின்னை சீர்' § பயிலிதழ்மாமேனித் தன்முன்னோன்' || 'குயிலுவ நாரதனார்' ¶ 'நரம்புளர்வார் மாயவன்'

## ஆடுநர்ப்புகழ்தல்

(28) மாயவன்றம் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடும்
கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ் †சோர
ஆய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத்
தாதெருமன் றத்தாடுங் ‡குரவையோ தகவுடைத்தே.
எல்லா நாம்,
புள்ளூர் கடவுளைப் போற்றுதும் போற்றுதும்
உள்வரிப் பாணியொன் றுற்று.

## உள்வரிவாழ்த்து

(29) கோவா மலையாரங் கோத்த கடலாரம்
தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே
தேவர்கோன் பூணாரம் ¶பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் §குருந்தொசித்தா னென்பரால். (க)
(30) பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னந் திகிரிப் பொருபடையா னென்பரால். (உ)

---

(28) மாயவன்: எழுவாய். அசோதையார் - இடைச்சேரியில் வளர்த்த தாய்பெயர்.

எல்லா - தோழி; அன்றி நாமெல்லாமென்றுமாம்.

உள்வரிவாழ்த்தென்பது பிறிதோருருவங்கொண்டும் கொள்ளாதும் .........வாழ்த்துவது.

(29) கோவாமலையாரம் - சந்தனம்; வெளிப்படை. கோ - பசு.

(30) " பொன்னிமய "...............

---

(28) " மாமணி வண்ணனுந் தம்முனும் பிஞ்ஞையும், ஆடிய குரவையிஃ தாமென நோக்கியும் " (மணி. 19 : 65-6). தாதெருமன்றம் : சிலப். 16 : 102, குறிப்புரை.

(29) " தன்கடற் பிறந்த முத்தி னாரமு, முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத், தெறலரு மரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த சந்தினாரமும், இருபே ராரமு மெழில்பெற வணியும், திருவீழ் மார்பிற் றென்னவன் " (அகநா. 13 : 1 - 6); " திண்கா ழார நீவிக் கதிர்விடும், ஒண்கா ழாரங் கவைஇய மார்பு " (மதுரைக். 715 - 6)

29 - 31. " கோவாமலையாரம் " முதலிய மூன்றும் தென்னவன் முதலியோரை மாயோனாகக்கூறியது (தொல். புறத். 5, ந); 'அரசரைத் தெய்வமென்றே பரவியது (தொல். செய். 149, ந. மேற்.)

(பி - ம்.) † 'சோரப் பால்வளைக்கைச் சீறடியாரசோதை' ‡ 'குரவையோதகவுடைத்தே ஆடுநர்ப்புகழ்தல்' ¶ 'பூண்டோன்' § 'குருந்தொசிப்பானென்பரால்'

(31) முந்நீரி னுள்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
†மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவிரோ ளோச்சிக் கடல்கடைந்தா னென்பரால். (ங)

முன்னிலைப்பரவல்

(32) வடவரையை மத்தாக்கி வாசுகியை நாக்ஞகிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே. (க)
(33) ‡அறுபொரு ளிவனென்றே யமரர்கணந் தொழுதேத்த
உறுபசியொன் றின்றியே யுலகடைய வுண்டனையே
உண்டவாய் களவினா னுறிவெண்ணெ யுண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே. (உ)
(34) திரண்டமரர் §தொழுதேத்துந் திருமாலின் செங்கமல
இரண்டடியான் மூவுலகு மிருடீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே. (ங)

படர்க்கைப்பரவல்

(35) மூவுலகு மீரடியான் §முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து

---

(31) மூவாக் கடம்பு - வஞ்சத்தால் நின்றதாகலின், மூப்பின்றி ஒரு நாளைப்போல நின்ற கடம்பு.

இம்மூன்றும் பூவைநிலை.

(35) சோவரணம் - அசுரர் நகரம்.

---

(32) 'வயிறு என்பது நடு என்னும்பொருளது' (கலி. 35, மயிலேறு.) (33) உறுபசி : தக்க. 617, உரை. (35) இதுமுதலிய மூன்றும் படர்க்கைப் பரவலாய் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி நான்கடி இற்றபின் ஓரடி மிக்கு வந்த கொச்சக வொருபோகு ; தொல். செய். 149, ந. மேற்.

(பி - ம்.) † 'மன்னர்கோன்சேரன்' ‡ 'அறிபொருள்' § 'தொழுதேத்தத் திருமால்' § 'முறைதிறம்பா வகையன்று, தாவியசே வடி சிவப்பத்'

சோவரணும் †போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே.
(36) பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையுந் ‡திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே.
(37) மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பா லூற்றிசையும் போற்றப்
§படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே.

---

சோவரணை அழித்தது: "சோவி, னருமை யழித்த மகன்" (நான் மணிக். கடவுள்.); கூர்ம. சுவேதவராக. 5; பு. வெ. 101, 228. மால்சீர் கேளாத செவியை இகழ்தல்: "உவப்பினின் னமுத மூறி யொழுகுமால் சரிதங் கேளாச், செவித்துளை நச்சு நாகஞ் செறிவதோர் துளைமற் றுமால்" (பாக. சௌனகாதியர். 6)

(36) "கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயும், செய்ய கரிய திரு மாலே" (விக்கிரம சோழனுலா, 158). கண்ணை இகழ்தல்: "மழை துளி மறுத்த கானின் வற்றனீண் மரமு மந்தண், குழைதர வன்றிண் குன்றுங் குழைதர வமுத மூறும், கழையிசை வடித்தான் செவ்வி காண் கிலாக் கண்கண் மஞ்ஞைத், தொழுதியங் கலவ மேய துஞ்சலில் வறுங்க ணன்றே" (பாக. சௌனகாதியர். 2). "மைதவழ் வெற்பன் மணவணி காணமற், கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ" (கலித். 39 : 41-2); பரி. 13 : 50-51.

(37) நாவை இகழ்தல் : "பொடித்தசெங் கதிர்போற் காந்தி பொழி மணிச் சூட்ட ராவில், நடித்தவ னுமம் பாடா நாவழங் காத நாவே" (பாக. சௌனகாதியர். 4)

---

37. 'வேந்தர் தூதுபோதற் குரியர்' (தொல். அகத். 26, ந.); நம்பி. 75, உரை ; இ. வி. சூ. 443, மேற்.

(பி - ம்.) † 'போய்மடியத்' ‡ 'கனிவாயுஞ்' § 'தொடர்ந்தா'

(38) என்றியாம்
கோத்த குரவையு ளேத்திய †தெய்வநம்
ஆத்தலைப் பட்ட துயர்தீர்க்க வேத்தர்
மருள வைகல் வைகன் மாறட்டு
வெற்றி விளைப்பது மன்னோ கொற்றத்
‡திடிப்படை வானவன் முடித்தலை யுடைத்த
தொடித்தோட் டென்னவன் கடிப்பிகு முரசே.

---

(38) தெய்வம் நம் ஆத்தலைப்பட்ட துயரைத் தீர்ப்பதாக. முரசம் மாறட்டு முழங்குவதாக.

"காலைவாய்த் தழுவிறுள் மாலைவாய்க் கண்டாள்" (19 : 36-7) என்கையால், குரவையாடியது கோவலனுர் கொலையுண்ட அன்றே யென்க.

இது குரவைச்செய்யுள்.

## (1) கயலெழுதிய......வந்து தோன்றுமன்

(இ - ள்.) இமய நெற்றியில் தானெழுதிய கயலுக்கு அயலெழுதிய புலியையும் வில்லையுமுடைய செம்பியன் சேரனென்னும் மன்னரும் நாவலந்தீவின்கண் மன்னரும் மற்றுமுள்ள குறுநில மன்னரும் தன்னேவல் கேட்டொழுக நிலமுழுதும் ஆண்ட முத்தமாலை பொருந்திய வெண்கொற்றக் குடையையுடைய பாண்டியனது கோயிற்கண்ணே பள்ளியெழுச்சி முரசு இயம்பும்; ஆதலாலே, நமக்கு இன்று கோயிலில் நெய்யளக்கும் முறையாமென நினைந்து ஐயையாகிய தன் மகளை யழைத்துக் கடைகயிறும் மத்துங்கொண்டு இடையர் குலத்திற் பிறந்த முதுமகளாகிய மாதரி தயிர்த்தாழி இருக்கின்றவிடத்தே வந்து தோன்றி னாளென்க.

மன்னருமென்னும் உம்மை தொக்கது; இயம்பும் : முற்று. கூஉய்- அழைத்து. அயலென்றது வடக்கும் மேற்கும்; [1] அக்கயலைச் சேவிக்க அயலெழுதிய புலியும் வில்லுமென்க; ஒப்பாக எழுதிற்றிலரென்பதாம். புலியும் வில்லும் மன்னரும் ஏவல் கேட்ப இப்பாருக்குத்தான் அரசனா யாண்ட பாண்டியனென்க.

அங்ஙனம் தோன்றினவள் கூறுவாள் :—

## (2) குடப்பா லுறையா......வருவதொன் றுண்டு

(இ - ள்.) நாம் பிரையிட்ட தாழிகளிற் பாலும் தோயாதொழிந்தன; அதுவுமன்றி நமது நிரையுள் திரண்ட முரிப்பையுடைய விடையின் கண் களும் நீர் உகாநின்றன; இவை இங்ஙனமாதலான் நமக்கு வருவதோர் உற்பாதமுண்டென்றாளென்க.

---

[1] கலிங்க. 18, தக்க. 4. உரை.
(பி - ம்.) † 'தெய்வத, மாத்தலை' ‡ 'திடித்தலை'

குடம் - தயிர்த்தாழி. உறைதல் - தோய்தல். குவிதல் - திரளுதல். இமில் - முரிப்பு. மடம் - ஈண்டு அழகு; "மடவரன் மடமான்" போல.

(3) உறிநறு வெண்ணெய்......வருவதொன்றுண்டு

(இ - ள்.) அங்ஙனம் பாலுறையாமையின் முதல்நாளைவெண்ணெய் உருக வைத்தனவும் உருகுகின்றவில்லை; அதுவுமன்றி ஆட்டுமறிகளும் துள்ளிவிளையாடா; குழைந்துகிடக்கும்; ஆதலான் நமக்கு வருவதோர் உற்பாதமுண்டென்றுளென்க.

உருகுதல் - நெகிழ்தல். உருகும் - குழைந்துகிடக்கும்.

(4) நான்முலை யாயம்......வருவதொன் றுண்டு

(இ - ள்.) நாலுமுலையையுடைய பசுத்திரள் மெய் நடுங்கிநின்று அரற்றும்; அதுவுமன்றிப் பசுக்களின் கழுத்திற் பெரியமணிகளும் வீழா நின்றன; ஆதலான் நமக்கு வருவதோர் உற்பாதமுண்டென்றுளென்க.

ஆயம் - பசுத்திரள். நடுங்குபு - நடுங்கி. மான்மணி - பெரிய மணி.

கருப்பம்—(இ - ள்.) இவை கேட்டிற்குக் கருப்பம்.

(5) குடத்துப்பால்......நீங்குகவெனவே

(இ - ள்.) உறையாமையானும் சோர்தலானும் உருகாமையானும் ஆடாமையானும் வீழ்தலானும் வருவதொரு துன்பமுண்டென்று சொல்லி மகள் முகத்தை நோக்கி அஞ்சாதொழி; முன்னர் ஆயர்பாடியில் எருமன்றத்து மாயவன் தமையனோடாடிய பாலசரித நாடகங்கள் பலவுள; அவற்றுள் வேல்போலும் நெடிய கண்ணையுடைய பிஞ்ஞையோடாடிய குரவை நாடகத்தை மண்ணின் மாதர்க்கெல்லாம் அணிகலமாகிய இக்கண்ணகியும் கண்டு நிற்க யாம் ஆடக்கடவேம்; இக்கறவையும் கன்றும் பிணி நீங்குக என்றுளென்க.

உறையாமையும் சோர்தலும் உருகாமையும் ஆடாமையும் வீழ்தலுமென்றெண்ணிய உம்மைகளில் உறையாமையானுமென மூன்றனுருபு விரிக்க; "உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார்" (தொல். இடை. 43) என்றுராகலின். தான் : அசை.

குரவையாவது - எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடும் கூத்து; "குரவை யென்பது..............................இயல்பிற் றென்ப", "குரவை யென்பது.........ஆடலாகும்" என்றுராகலின்.

கொளுச்சொல்—(இ - ள்.) குரவைக்கூத்திற்குக் கருத்து.

(6) காரி கதனஞ்சான்......கோதையாள்

(இ - ள்.) இக்காரியெருத்தினது சீற்றத்தை [1] அஞ்சானுயக் குறித்துச் சென்று தழுவினுனை விரும்பும், இந்த மலராற்கட்டிய மாலையையுடையாளென்க.

---

1 "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" (கலித். 103) என்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

சுட்டு—(இ - ள்.) இதுமுதற் சுட்டு.

(7) நெற்றிச்செகிலே......மாதராடோள்

(இ - ள்) இச்செகிற்சுட்டியேற்றை வலிதொலைத்தானுக்குரியன, இம் மாதருடைய தோள்களென்க.

நெற்றிச்செகில் - நெற்றியொழிந்த செகில்; சிவந்த சுட்டியுமாம்.

(8) மல்லன் மழவிடை......பூங்குழருன்

(இ - ள்.) இவ்வளவிய இளைய ஏற்றைத்தழுவி ஏறிச்செலுத்திறு னுக்கு உரியாள், இம்முல்லைப்பூங்குழலாளென்க.

தான் : அசை.

(9) நுண்பொறி வெள்ளை......மாதர் தன்றோள்

(இ - ள்.) இச் சிலமறையினேற்றை வலிதொலைத்தானுக்கே ஆம், இப்பெண்கொடியாகிய தன்மையையுடையாளுடைய தோள்களென்க.

(10) பொற்பொறி வெள்ளை......மென்முலைதான்

(இ - ள்.) இம் மறையெருத்தின் சீற்றத்தைக் கெடுத்தவனுக்கு மனைவியாகும், மென்முலையையுடைய நல்ல கொடிபோலுமிவளென்க.

தான் : அசை.

(11) வென்றி மழவிடை......குழலாள்

(இ - ள்.) வென்றியையுடைய இளைய ஏற்றைத் தழுவிச் செலுத்திறு னுக்குரியள், கொன்றைப் பழம்போலும் குழலையுடைய இவளென்க.

"கொன்றைப் பழக்குழற் கோதையர்" என்றார் வளையாபதியினும்.

(12) தூநிற வெள்ளை......மலராள்

(இ - ள்.) இப் பால்வெள்ளையேற்றை வலிதொலைத்தானுக்கு மனைவியாகும், காயாம்பூப்போலும் நிறத்தினையுடைய இவளென்க.

எடுத்துக்காட்டு—(இ - ள்.) இங்ஙனம் சுட்டிக்காட்டுதல்.

(13) ஆங்கு—(இ - ள்.) அப்படியே.

தொழுவிடை...... கோதையார்

(இ - ள்.) இங்ஙனமாகிய [1] தொழுவிடத்துண்டாகிய எழுவகையேற் றைக் குறித்து வளர்த்தார், இக்கோதையையுடைய ஏழுகன்னியரென்க.

என்று தன் மகளை......பெயரிடுவாள்

(இ - ள்.) மாதரி இங்ஙனங்கூறியவள் தன்மகள் ஐயையை நோக்கி இம்மகளிரைப் பழைய நரம்புகள் நிற்குமுறைமைகளிலே நிறுத்தி இவர்க்குப் படைத்துக் கோட்பெயரிடுவாள் :—

---

[1] திருச்சிற். 156, உரை.

குடமுத லிடமுறை......வேண்டிய பெயரே

பாலை நான்கு வகைப்படும்: ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலையென,

என்னை? "ஆயஞ் சதுரந் திரிகோணம் வட்டமெனப், பாய நான்கும் பாலை யாகும்" என்றார்.

அவற்றுள், வட்டப்பாலை வருமாறு: "வட்ட மென்பது வகுக்குங் காலை, ஓரேழ் தொடுத்த மண்டல மாகும்", "சாணளவுகொண்ட தொரு வட்டந் தன்மீது, பேணியிரு நாலு பெருந்திசைக்—கோணத், திருகயிறு மேலோட்டி யொன்பானு மூன்றும், வருமுறையே மண்டலத்தை வை" என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், வட்டப்பாலை மண்டலம் வருமிடத்துச் சாணுக்குச் சாணாக ஒருவட்டம் கீறிப் பெருந்திசைகளின் மேலே இரண்டுவரம்பு கீறி மண்டலம் செய்து பன்னிரண்டு கோணமாக வகுப்பது நுதலிற்று.

"எதிரு மிராசி வலமிட மாக, எதிரா விடமீன மாக—முதிராத, ஈரா றிராசிகளை யிட்டடைவே நோக்கவே, ஏரார்ந்த மண்டலமென் றெண்" என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், இட்ட பன்னிரண்டு கோணத்திற் பன்னிரண்டிராசிகளை நிறுத்தினால் இவற்றுள் நரம்புடன் இயல்வன ஏழென்பது உணர்த்துதல் நுதலிற்று.

"ஏத்து மிடப மலவ னுடன்சீயம், கோற்றனுக் கும்பமொடு மீன மிவை—பார்த்துக், குரன்முதற் றார மிறுவாய்க் கிடந்த, நிரலேழுஞ் செம்பாலை நேர்." இவ்வேழும் இடபம் கற்கடகம் சிங்கம் துலாம் தனு கும்பம் மீனமென இவற்றுள் நிற்கும்.

"துலைநிலைக் குரலுந் தனுநிலைத் துத்தமும், நிலைபெறு கும்பத்து நேர்கைக் கிளையும், மீனத் துழையும் விடைநிலத் திளியும், மானக் கடகத்து மன்னிய விளரியும், அரியிடைத் தாரமு மணைவுறக் கொளலே."

இனி இந்நரம்புகளின் மாத்திரைகள் வருமாறு: "குரறுத்த நான்கு கிளைமூன் றிரண்டாம், குரையா வுழையிளி நான்கு—விரையா, விளரி யெனின் மூன்றிரண்டு தாரமெனச் சொன்னார், களரிசேர் கண்ணுற் றவர்" எனக்கொள்க.

இவற்றுள், தாரத்து உழைபிறக்கும்; உழையிற் குரல் பிறக்கும்; குரலுள் இளிபிறக்கும்; இளியுள் துத்தம் பிறக்கும்; துத்தத்துள் விளரி பிறக்கும்; விளரியுட் கைக்கிளை பிறக்குமெனக் கொள்க. இவற்றுள் முதலில்தோன்றிய நரம்பு தாரம்; இவை விரிப்பிற்பெருகும்; வந்தவழிக் கண்டுகொள்க.

இனி வட்டப்பாலையிலே நாலுபண்ணும் பிறக்கும்; "தாரத் துழை தோன்றப் பாலையாழ் தண்குரல், ஒருமுழை தோன்றக் குறிஞ்சியாழ்—நேரே, இளிகுரலிற் றோன்ற மருதயாழ் துத்தம், இளியிற் பிறக்க நெய்தலியாழ்." இவற்றுள், பாலையாழுள்ளே ஏழுபாலையிசை பிறக்கும். "குரலிளியிற் பாகத்தை வாங்கியோ ரொன்று, வரையாது தாரத் துழைக்கும்—விரைவின்றி, எத்தும் விளரி கிளைக்கீக்க வேந்திழையாய், துத்தங் குரலாகுஞ் சொல்."

இந்நரம்பிற் பாலை பிறக்குமிடத்துக் குரலும் துத்தமும் இளியும் நான்கு மாத்திரை பெறும்; கைக்கிளையும் விளரியும் மூன்று மாத்திரை பெறும்; உழையும் தாரமும் இரண்டு மாத்திரைபெறும்; இவற்றுள் குரல் குரலாய் ஒத்து நின்றது செம்பாலை; இதனிலே குரலிற்பாகத்தை யும் இளியிற்பாகத்தையும் வாங்கிக் கைக்கிளை உழை விளரி தாரத்திற்கு ஒரோவொன்றைக் கொண்டு சேர்க்கத் துத்தம் குரலாய்ப் படுமலைப் பாலையாம்; இவ்வாறே திரிக்க இவ்வேழு பெரும்பாலைகளும் பிறக்கும்; பிறக்குங்கால் திரிந்தகுரல் முதலாக ஏழும் பிறக்கும்.

அவை பிறக்குமாறு:—குரல்குரலாயது செம்பாலை; துத்தம் குரலாயது படுமலைப்பாலை: கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலை; உழைகுரலாயது அரும்பாலை; இளி குரலாயது கோடிப்பாலை; விளரி குரலாயது விளரிப்பாலை: தாரம் குரலாயது மேற்செம்பாலையென வலமுறையே ஏழு பாலையும் கண்டுகொள்க. இதனை †வலமுறையென்றும்; மேற்கே முகமாக இருந்து திரிதலான். கிழக்கே நோக்கியிருக்கின் இடமுறையாமெனக் கொள்க.

(இ - ள்.) குடதிசையிற் குரல்நரம்பு முதலாகக் குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரமென இவர்க்கு நிரலேயிட்ட பெயரே மாதரி விரும்பும் பெயரென்க.

படைத்துக்கோட் பெயரிடுவாள் - இனி ஆளுதற்கு இட்ட இடுகுறிப் பெயர் கூறுவாள்.

## (14) மாயவனென்றாள்......முறை

(இ - ள்.) ..............................

## (15) மாயவன் சீருளார்......விளரிதான்

(இ - ள்.) மாயவனென்று பெயர் கூறப்பட்ட குரனரம்பைச்சேரப் பின்னையென்னும் துத்தமும் தாரமும் நின்றன; வெள்ளையாயவனென்று பெயர்கூறப்பட்ட இளியென்னும் நரம்பைச்சேர உழையும் விளரியும் நின்றன; கைக்கிளையென்னும் நரம்பு பின்னைக்கு இடப்பக்கத்தே நின்றது; ‡முந்தையென்னும் தாரநரம்பிற்கு வலப்பக்கத்தே விளரி நின்றதென்க.

முந்தை - முத்தை; விகாரம்; "முத்தை முதல்வி யடிபிழைத் தாய்" (மணி. 19 : 13) என்றார் பிறரும்.

## (16) அவருள், வண்டுழாய்......ஆயர்மகள்

(இ - ள்.) வளவிய துழாய்மாலையை மாயவன் தோளிட்டு இசை நாடக நூலோரால் இகலப்படாத குரவைக்கூத்திற்கு உட்பட்டாடுவாள் உலகளந்த மாயவன் தன்னுடைய திருமார்பை இடங்கொண்ட அழகை யுடைய திருமகளை நோக்காமைக்குக் காரணமாகிய சிறப்பையுடைய வளைபொருந்திய கையாளாகிய பின்னை தானேயாமென்று மாதரி வியந்தாளென்க.

---

(பி-ம்.) † 'வரன்முறையென்றார்', 'வலமுறையென்றார்' ‡ 'முந்தையாகிய அசோதையென்னுந் தாரநரம்பு'

"நீணிரை நம்பின்னை" (சீவக. 482) என்றார் பிறரும்; நப்பின்னை யென்பாருமுளர். ஐயென்றாள் - வியந்தாள்; "ஐவியப் பாகும்" (தொல். உரி. 87) என்றாராகலின். ஆயர் மகள் - மாதரி.

கூத்துள்படுதல்—(இ - ள்.) ஆடத்தொடங்குதல்.

(17) அவர்தாம்—(இ - ள்.) அம்மகளிர்தாம்,

செந்நிலை மண்டிலத்தால்......பாணியென்றாள்

(இ - ள்.) சமநிலையிலே நின்று நண்டுக்கரத்தைக்கோத்து மண்டல மிருந்து அப்பொழுதே ஆடுதற்குத் தாளவுறுப்பை ஆராய்ந்துள்ளவரில் முதலெண்ணப்பட்ட குரற்றனத்துநின்ற மாயவனாகிய அவள் தனது கிளையாகிய துத்த நரம்பாகிய பின்னையை நோக்கிப் பரந்தகன்ற கொல்லையில் வஞ்சத்தால் வந்துநின்ற குருந்தையொசித்த அவனை முல்லையாகிய இனிய பண்ணாலே பாடியாடக் கடவேமென்றாளென்க.

செந்நிலை - சமநிலை. ஆன் : ஒடு. கற்கடகக்கை - நண்டுக்கை; ஆவது நடுவிரலும் அணிவிரலும் முன்னே மடக்கி மற்றை இரண்டு விரலும் கோத்தல். அந்நிலையே - அப்பொழுதே.

என—(இ - ள்.) என்றிட்டு,

குரன் மந்தமாக......பாட்டெடுப்பாள்

மந்தோச்ச சமம் கூறுவார் :—

(இ - ள்.) பாட்டெடுக்கின்றவள் குரலென்னும் நரம்பு மந்த சுரமாக இளியென்னும் நரம்பு சமசுரமாக வந்தமுறையே துத்தமென்னும் நரம்பு வலி சுரமாக விளரியையும் வலிமையில்லாத மந்தசுரமாகப் பிடிக்கின்றவள்தன் நட்புநரம்பாகிய துத்தநரம்பாயவட்குப் பற்றுப் பாடுகின்றாள்.

பாட்டு—(இ - ள்.) அங்ஙனம் அவள் பாடுகின்ற பாட்டு.

(18) கன்று குணிலா......கேளாமோ தோழீ

(இ - ள்.) தோழீ, நிரை மேய்க்கின்றுழி விளவின்கனியை உதிர்க்க வேண்டி அவ்விடத்தில் மேய்கின்ற பசுவின் கன்றைக் குறுந்தடியாகக் கொண்டு உதிர்த்த மாயவன் நம் வழிபாட்டால் இங்குள்ள பசுநிரையிடத்து வருவன்; அங்ஙனம் வந்தால் அவன் ஊதும் கொன்றையங் குழலோசையைக் கேட்போமென்றாளென்க.

(19) பாம்பு கயிறு......கேளாமோ தோழீ

(இ - ள்.) தோழீ, கடலைக் கடைகின்ற காலத்து மேருவரை மத்தத்திற் சுற்றுக்கயிறு வாசுகியென்னும் பாம்பாகச் சுற்றிக் கடைந்த மாயவன் நம் வழிபாட்டால் ஈங்கு நம்மானிடத்து வருவன்; அங்ஙனம் வந்தால் அவன் ஊதும் இனிய ஆம்பலங் குழலோசையைக் கேட்போமென்றாளென்க.

(20) கொல்லையஞ்சாரல்......கேளாமோ தோழீ

(இ - ள்.) தோழீ, நம்புனக் கொல்லையைச் சார்ந்தவிடத்து வஞ்சனையால் வந்துநின்ற குருந்தை முறித்த மாயவன் நம் வழிபாட்டாற் பசலே இங்குள்ள நம் ஆனிரையுள் வருவன்; அவன் அங்ஙனம் வந்தால் அவன் ஊதும் இனிய முல்லையங்குழலோசையைக் கேட்போமென்றாளென்க.

கொன்றை ஆம்பல் முல்லையென்பன சில கருவி; இனி அவற்றைப் பண்ணென்று கூறுபவெனின், அங்ஙனம் கூறுவாரும் ஆம்பலும் முல்லையுமே பண்ணுதற்குப் பொருந்தக் கூறினல்லது கொன்றையென ஒரு பண் இல்லையாதலானும் கலியுள் முல்லைத்திணையின்கண் ஆறும் பாட்டினுள், "கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண், இமிழிசை மண்டை யுறியொடு தூக்கி, ஒழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர், வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை, பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தர்" (கலித். 106 : 1 - 5) எனக் கருவி கூறினமையானும், "அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகற், கன்றின் குரலுங் கறவை மணிகறங்கக், கொன்றைப் பழக்குழற் கோவல ராம்பலும், ஒன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்" என வளையாபதியுள்ளும் கருவி கூறிப்பண் கூறுதலானும் இவை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வந்த ஒத்தாழிசை யாதலானும் இரண்டு பண்ணும் ஒன்று கருவியுமாகக் கூறின், செய்யுட்கும் பொருட்கும் வழூஉச் சேறலானும் அங்ஙனம் கூறுதல் அமையாதென்க.

இதனுள் குழலென்றது வங்கியத்துப் பொதுப்பெயர். இஃது ஐந்து கூறுபடும் :—

அவை [1]"ஓங்கிய மூங்கில்.........பார்த்து" என்பன.

நீளம் இருபது விரல்; சுற்றளவு நாலரை விரல்; இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதிமர நிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே அணைசு பண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்;

என்னை? "சொல்லு மிதற்களவு...வங்கிய மென்" என்றாராகலின்.

இனி வங்கியத்தின் துளையளவு: நீளம் இருபது விரல்; இதிலே தூம்பு முகத்தின் இரண்டு விரல் நீக்கி முதல்வாய்விட்டு அம்முதல் வாய்க்கு ஏழு அங்குலம் விட்டு வளைவாயினும் இரண்டு விரல் நீக்கி நடுவினின்ற ஒன்பது விரலினும் எட்டுத் துளையிடுக. இவற்றுள் ஒன்று முத்திரையென்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழு விரல் வைத்து ஊதப்படும்; துளைகளின் பரப்பு ஒரு விரல் அகலம் கொள்ளுக;

என்னை? "இருவிரல்க ணீக்கி.........வங்கியத்தின் கூறு" என்றுராகலின்.

இனி வங்கியம் ஊதுமிடத்து வளைவாய்.சேர்ந்த துளையை முத்திரையென்று நீக்கி முன்னின்ற ஏழினையும் ஏழு விரல்பற்றி வாசிக்க.

ஏழு விரலாவன: இடக்கையிற் பெருவிரலிலும் சிறுவிரலும் நீக்கி மற்றை மூன்று விரலும் வலக்கையிற் பெருவிரல் ஒழிந்த நான்கு விரலும் ஆக ஏழும்;

---

[1] சீவக. 975, ந. மேற்.

என்னை? "வளைவாயருகொன்று.........வைத்து" என்றுராகலின்.

இவ்வேழு துளைகளிலும் இசை பிறக்குமாறு: ச ரி க ம ப த நி என்னும் ஏழெழுத்தினும் பிறக்கும்;

என்னை? "சரிகமபதநி...........சுத்தத் துளை" என்றுராகலின்.

ஏழிசையாவன: சட்சம், ரிடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமெனவிவை. இவை பிறந்து இவற்றுள்ளே பண்கள் பிறக்கும். இவற்றுட் கூறியவெல்லாமுணர்ந்து கருவியாதல் கொள்க. அவ்வாறு கொள்ளுங்கால், கருவியென்பதனை இடுகுறியாகக் கோடுமோ காரணக்குறியாகக் கோடுமோவெனில் காரணக் குறியாகக் கோடும்; என்னை காரணமெனிற் கஞ்சத்தாற் குமுத வடிவாக அணைசுபண்ணிச் செறித்தலின் ஆம்பற் குழலாயிற்றெனவும் கொன்றைப் பழத்தைத் துருவித் துளைத்து ஊதலிற் கொன்றைக் குழலாயிற்றெனவும் முல்லைக் கொடியால் முப்புரியாகத் தெற்றியவளையை வளைவாய்க்கட் செறித்து ஊதலின் குழலாயிற்றெனவும் கொள்க.

## (21) தொழுனைத் துறைவனோடு......பாடுகேம் யாம்

(இ - ள்.) .........................................

## (22) இறுமென் சாயல்......முகமென் கோயாம்

(இ - ள்.) கட்புலனுகை நோக்குவார் மென்மையதாகலின் இப்பொழுது இறுமெனத்தகும் இடை நுடங்கும்படி அசைபவளது துகிலை ஒளித்தானுடைய வடிவினழகையே புகழக்கடவேமோ; அன்றி, அங்ஙனம் துகிலை ஒளித்தவன் அவள் துகிலின்மை கண்டு சோர்கின்ற வதனைக்கண்டு சோர்கின்ற நறிய மெல்லிய சாயலையுடையாளது காமக் குறிப்பையுடைய முகத்தினழகையே புகழக் கடவேமோ;

## (23) வஞ்சஞ் செய்தான்......வடிவென் கோயாம்

(இ - ள்.) தொழுனையாற்றினுள் வஞ்சம் செய்தானுடைய நெஞ்சத்தைக் கவர்ந்தாளுடைய அழகையே புகழக்கடவேமோ; அன்றி அங்ஙனம் தன் நெஞ்சத்தைக் கவர்ந்தாளுடைய அழகையும் வளையையுமொளித்துக் கொண்டானுடைய வடிவையே புகழக் கடவேமோ;

## (24) தையல் கலையும்......வடிவென் கோயாம்

(இ - ள்.) கலையையேயன்றி வளையையும் இழந்து நாணல் தன் கையிலே மறைந்தாளாகிய தையலுடைய முகத்தினழகையே புகழக் கடவேமோ; அன்றி அங்ஙனம் கையிலே மறைந்தாளுடைய முகத்தின் தன்மையைக் கண்டு இரங்கி மயக்கத்தை உழந்தானுடைய வடிவையே புகழக்கடவேமோ என்றுரென்க.

**இவை குரவைமகளிர் கூற்று.**

ஒன்றன்பகுதி—(இ - ள்.) ஒற்றைத் தாளத்தின் கூறு.

(25) கதிர்திகிரி......நரம்புளர்வார்

(இ - ள்.) பகற்கதிரைத் தன்கையாழியான் மறைத்த கடல்போலும் வண்ணத்தையுடைய கண்ணன் இடப்பக்கத்துள்ளாள்; மதியையொத்த திருமேனியையுடைய அவன் தமையன் வலப்பக்கத்துள்ளாள்; கட்டவிழ்ந்த மலர் பொருந்திய கூந்தலையுடைய பிஞ்ஞை. அவளுடைய தாளவொற்றறுப்பைப் புறங்காக்கின்றவர் முதிய வேதத்தின் [1] சிக்கையென்னும் அங்கத்தை ஆராயும் முதனரம்பை உருவி வாசிக்கும் நாரதனுரென்க.

சிக்கையென்பது இசை.

(26) மயிலெருத்து......நரம்புளர்வார்

(இ - ள்.) மயிலினது புறக்கழுத்தையொத்த திருமேனியையுடைய மாயவன் வலப்பக்கத்துள்ளாள்; பயின்ற வெள்ளிய மலர்போலும் மேனியையுடைய அவன் தமையன் இடப்பக்கத்துள்ளாள்; சிறுபுறமாகிய எருத்தங்கோட்டிய பின்னை. அவளுடைய 'தாளவறுதியைப் புறங்காக்கின்றவர் குயிலுவருட் செறிப்புப்புணர்ந்திருக்கும் தாளவறுதியையுடைய நரம்பை உருவி வாசிக்கும் நாரதனுரென்க.

கொளையென்பது ஒற்றறுப்பு; அது முன்னர்க் கூறினும்.

(27) மாயவன்றன்......குரவையோ தகவுடைத்தே

(இ - ள்.) மாயவன் தன் தமையனேடும் எழுதிய வளையைக் கையின்கண் உடைய பிஞ்ஞையோடும் கோவலருடைய சிறுமியர்களுடைய மணமாலைகள் புறத்தே வீழ்ந்தசையக் கோத்த கைகளில் அணிந்த வளைகளொலிக்கின்ற தாளத்துக்கு ஒக்க மிதித்திட்டு அசோதைப் பிராட்டியார் தொழுதேத்தத் துவராபதியில் எருமன்றத்தே அன்றுடிய குரவைக் கூத்து மிகவும் பெருமையையுடைத்தாயிருந்ததென மாதரி வியந்தாள்;

ஒடு இரண்டும் : எண்ணெடு. சிறுமியர் - சிறு பெண்கள்; குடநாட்டு வழக்கு. ஒ : வியப்பு.

(28) எல்லா நாம்...

(இ - ள்.) நாமெல்லாம்; எல்லா - ஏட; தோழியென்றுமாம்.

புள்ளூர் கடவுளை......பாணியொன் றுற்று.

(இ - ள்.) கருடப் புள்ளையூர்கின்ற கடவுளை மிகவும் போற்றுவேம்; இக்குரவையுள் உள்வரியாகிய ஒரு பாட்டினுனென்க.

(29) கோவா மலையாரம்......என்பரால்

(இ - ள்.) கோக்கப்படாத தன் பொதியின்மலையிலாரமும் கோக்கப்பட்ட தன் கொற்கைக் கடலிலாரமும் இந்திரன் முனிந்து இட்ட பூணுகிய ஆரமும் இம்மூன்றுவகை ஆரமும் தென்னர்கோன் மார்பிடத்தன; அங்ஙனம் தேவர்கோனுரம் ஈருகவுள்ளன பூண்டான் யாவனென்னின்,

---

[1] இதனை நாரத சிக்ஷை யென்பர் வடநூலார்; நாரத சீக்ஷை யென்றும் வழங்கும்.

வளவிய துவரையிடத்துப் பசுத்திரளை மேய்த்துக் குருந்தையொசித்தா னென்று சொல்லுவர் ;

கோவா கோத்த இரண்டும் வெளிப்படை.

(30) பொன்னிமயக் கோட்டு..............பொருபடையா னென்பரால்

(இ - ள்.) பொன்னுகிய இமயவரைக் கொடுமுடியிலே தன்புலியைப் பொறித்து இப்பாலுள்ள மண்ணையெல்லாம் ஆண்டவன் மதில்சூழ்ந்த புகாரில் வாழும் வளவனுகிய வேந்தன் ; அவன் யாவனெனின், பொற்றி கிரியைத் தான் பொருதற்குப் படையாகவுடைய மாலென்று சொல்லுவர்.

(31) முந்நீரி னுள்புக்கு......கடைந்தா னென்பரால்

(இ - ள்.) கடலினுள்புக்கு மூவாத கடம்பை வெட்டினவன் வளவிய வஞ்சியில் வாழும் வேந்தனுகிய சேரன் ; அவன் யாவனெனின், வரை யென்று சொல்லப்பட்ட தனது தோள்களையோச்சிக் கடலைக்கடைந்த மாலென்று சொல்லுவர்.

[1] முந்நீர் - கடல் ; ஆகுபெயர் ; ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவை யென்பார்க்கு அற்றன்று ; ஆற்றுநீர் மேனீராகலானும் இவ் விரண்டு மில்வழி ஊற்றுநீரும் இன்ருமாதலானும் இவற்றை முந்நீ ரென்றல் பொருந்தியதன்று ; முதிய நீரெனின், "நெடுங்கடலுந் தன் னீர்மை குன்றும்" (குறள். 17) என்பதனுல் அதுவும் மேனீரின்றி அமையாமையின் ஆகாது ; ஆனுல் முந்நீர்க்குப் பொருள் யாதோ வெனின், முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது ; முச்செய்கை யாவன மண்ணைப்படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக் காத்தலுமாம்.

மூவாக் கடம்பு - வஞ்சத்தால் நிற்கின்றதாகலின், மூப்பின்றி ஒரு நாள்போல நின்ற கடம்பு. மூவா : மூத்தவென்னும் பெயரெச்சத்து எதிர்மறை.

**இவை மூன்றும் பூவைநிலை.**

இவற்றுட் சேரனை முற்கூருது பாண்டியனை முற்கூறியதென்னை யெனின், இது மதுரைக்காண்டமாதலானும் இக்காப்பியஞ் செய்தவர் விழைவு வெறுப்பற்ற சேரமுனியாதலானும் 'முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரியது' (பதிகம், 61) எனச் சாத்தர் கூறினமையானு மென்க.

**இவை உள்வரிவாழ்த்து.**

(32) வடவரையை மத்தாக்கி......மாயமோ மருட்கைத்தே

(இ - ள்.) கடல்வண்ணனே ! கமலவுந்தியாய் ! நீ முன்பு ஒருநாள் வடவரையை மத்தாக நாட்டி வாசுகியென்னும் பாம்பைக் கடைகயிருகப் பூட்டிப் பாற்கடலின் நடுவைக் கலக்குவித்தாய் ; அங்ஙனம் கடலைக் கலக்கிய நின் கைகள் அசோதைப்பிராட்டியாருடைய கடைகயிற்ருலே

---

[1] "முந்நீர் விழவின்" (புறநா. 9 : 10) என்பதன் விசேடவுரையை யும், "முந்நீர் நாப்பண்" (பெரும்பாண். 441) என்பதனுரையையும், "முந்நீர்ப் பிறந்த" (சீவக. 5) என்பதன் விசேடவுரையையும் பார்க்க.

கட்டுண்ட கை : இது ஒரு மாயமோ ; மிகவும் மருட்கையுடைத்தாயிரா நின்ற தென்றுரென்க.

கடல்வண்ணன் : அண்மை விளி ; 'அண்மைச் சொல்லே யியற்கை யாகும்' (தொல். விளிமரபு, 10) என்பதனுல். இது மேலுங்கொள்க.

(33) அறுபொரு ளிவனென்றே......மருட்கைத்தே

(இ - ள்.) மாலையாய்! ஐயமற்ற பொருள் இவனென்றே கொண்டு அமரர் திரளெல்லாம் உன்னைத் தொழுதேத்தாநிற்கவும், நீ மிக்க பசி யொன்றுமின்றியே உலகடங்கலும் உண்டாய் ; அங்ஙனமுண்ட வாய் களவிடத்தே உறிவெண்ணெயைப் பெரும்பசியாலே உண்ட வாய் ; இஃது ஒரு மாயமோ? எங்கட்கு மருட்கையையுடைத்தாயிராநின்ற தென்றுரென்க.

அறுபொருள் - அற்றபொருள் ; வினைத்தொகை ; ஐயமற்ற பொரு ளென்றுயிற்று. இனி அறுபொருள் - தீர்ந்த பொருளென்றுமாம் ; "அற்ற காரியம்" என்றுற்போல. இனி அறுபொருள் - அறுவகைச் சமயத்தாரும் துணிந்த பொருளென்றுமாம்.

(34) திரண்டமரர்......மருட்கைத்தே

(இ - ள்.) திருமாலே! அட்டாய்! அமரர் திரண்டு ஏத்தாநிற்கும் நினது செங்கமலம்போலும் இரண்டடியாலே மூன்றுலகமும் இருள் நீங்க நடந்தாய் ; அங்ஙனம் இருள்நீங்க நடந்த அடி பஞ்சபாண்டவர்க்குப் பின்பு தூதாக நடந்தவடி ; இஃது ஒரு மாயமோ ; எங்கட்கு மருட் கையையுடைத்தாயிராநின்ற தென்றுரென்க.

அமரர் திரண்டெென மாறுக. மடங்கல் - நரசிங்கம். மாறு - பகை.

**இவை மூன்றும் முன்னிலைப் பரவல்**

(35) மூவுலகு மீரடியான்......செவியே

(இ - ள்.) இரண்டடிக்குக் குறைபடும்படி மூவுலகையும் முடியத் தாவிய சேவடி சிவக்கும்படி தம்பியோடுங்கூட வனத்தின்கட்போந்து சோவென்னும் அரணமும் அவ்வரணத்துள்ளாரும் போரின்கண் தொலைந்து மடியவும் அதுவேயுமன்றிப் பழைய இலங்கையையும் காவ லழித்த சேவகனுடைய புகழைக் கேளாத செவியும் சில செவியே ; அத் திருமாலுடைய புகழைக் கேளாத செவியும் சில செவியேதாமென்று ரென்க.

உம்மை : எச்சவும்மை. செவியென்ன செவியென்றுர் ; மண்ணினும் மரத்தினும் கல்லினும் செவியுண்டாகலின். போந்து மடியக் கட்டழித்த சேவகனென்க. ஏகாரம் : ஈண்டுப் பிரிநிலை. செவியும் செவியேயென்ற பாடமாயின் செவியுமென்னும் உம்மை இழிவு சிறப்பு.

(36) பெரியவனை மாயவனை.....கண்ணே

(இ - ள்.) எல்லாத் தேவரினும் பெரியவனை மாயங்களை வல்லவனைப் பெரிய உலகனைத்தையும் விரிக்கின்ற கமலவுந்தியையுடைய விண்ண வனைக் கண்முதல் கனிவாயீருகவுள்ளனவெல்லாம் செய்ய கரியவனைக் காணப்பெருத கண்கள் என்ன கண்களோ ; அங்ஙனம் காணுங்கால்

இமையாவது காண்டலின்றி இடையே இமைத்துக் காண்பார்கண்கள் என்ன கண்களோ என்றுரைரெ்க.

விரிகமலம் : வினைத்தொகை. செய்ய கரியவனென்பது விரோதமென்னும் அலங்காரம். என்னகண்களென்றதற்கு முன்னர்க் கூறியவாறே கூறுக! பீலிக்கண்ணுமுண்டாகலின். இனி இமைத்துக்காண்பார் கண்ணென்றது மக்கள் கண்ணையெனினும் அமையும்.

(37) மடந்தாழு நெஞ்சத்து......நாவென்ன நாவே.

(இ - ள்.) மடந்தங்கிய நெஞ்சத்தையுடைய கஞ்சனார்செய்த வஞ்சங்களைக் கடந்தவனைத் திசைநான்கினுமுள்ள தேவர்கள் போற்ற ஆரணம் தொடர்ந்து முழங்கப் பஞ்சவர்க்காக நூற்றவர்பால் தூது நடந்தவனை ஏத்தாத நா என்ன நாவோ! நாராயணாவென்று கூறாத நாவென்ன நாவோ தானென்றுரைரெ்க.

மடமை - அறிவின்மை. தாழ்தல் - தங்குதல். கஞ்சனார், செறலின்கண் பான்மயக்கம்.

என்ன நாவோவென்றதும் அது; சிற்கைநாக் கலப்பைநா இவையுமுண்டாகலின்.

**இவை மூன்றும் படர்க்கைப்பரவல்.**

(38) என்றியாங்கோத்த......கடிப்பிகுமுரசே

(இ - ள்.) என்றுகொண்டு நாம் தொடுத்த குரவைக்கூத்தினுள் நாம் ஏத்திய தெய்வம் நம் ஆவிடத்துத் தலைப்பட்ட பிணிகளைத் தீர்ப்பதாக; கொற்றத்தையுடைய இடியைப் படையாகவுடைய இந்திரனுடைய முடியிடத்தை யுடைத்த தொடிபொருந்திய தோளையுடைய தென்னனுடைய கடிப்பானெறியும் முரசம் வேந்தர் மருள எந்நாளும் மாற்றுரை வென்று முழங்குவதாகவெனச் சொல்லி வாழ்த்திக் குரவைநாடகத்தை ஆடிமுடித்தாரென்க.

**இது கூத்தாற்பெற்ற பெயர்.**

(கஎ) ஆய்ச்சியர் குரவை முற்றிற்று.

---

# பதினெட்டாவது

# துன்பமாலை

ஆங்கு,
ஆயர் முதுமக †ளாடிய சாயலாள்
பூவும் புகையும் ‡புனைசாந்துங் கண்ணியும்
நீடுநீர் வையை நெடுமா ¶லடியேத்தத்
தூவித் துறைபடியப் போயினாண் மேவிக்
குரவை முடிவிலோ ரூரரவங் கேட்டு
விரைவொடு வந்தா ளுளள்
அவடான்,
சொல்லாடாள் சொல்லாடா நின்றாளந் நங்கைக்குச்
சொல்லாடுஞ் சொல்லாடுந் தான்
§எல்லாவோ,
காதலற் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்
ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே

---

1. ஆங்கு - அவ்விடத்து.
2. ஆயர் முதுமகள் - மாதரி. ஆடிய - அசைந்த. சாயலாள் - ஐயை.
4. நீடுநீர்வையைக்கண்ணே. நெடுமால்—ஸ்ரீ இருந்தவளமுடையார்.
3-5. பூ முதலாயினவற்றைத் தூவி. துறைபடிய - தீர்த்தமாட; துறைபடிதல் - பலியிடுதல்..................
7. வந்தாளென்றது ஐயையை; வேறொருத்தியென்றும் கூறுவர்.
9. சொல்லாடாமல் நின்றாள், அந்தக் கண்ணகிக்கு.
10. சொல்லாடும் - சொல்லுதலைச் செய்யும். தான் - அந்நிலை தான்.
9-10. அன்றிச் சொல்லாடாளாய் நின்ற அந்த நங்கைக்குக் கண்ணகிதான் சொல்லாடுமென்றுமாம்.
11. எல்லா - தோழீ..........

---

அடி, 12-3: "காதலர்ப் பிரிந்த மாதர் நோதக, ஊதுலைக் குருகி னுயிர்த்தன ரொடுங்கி," "காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன், றூதுலைக் குருகி னுயிர்த்தன ளுயிர்த்து" (சிலப். 4 : 58-9, 22 : 151-2); "காதலர்...பொத்தி, ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்காது," "செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்து," "வஞ்சினஞ் சாற்றி நெஞ்சு புகையுயிர்த்து" (மணி. 2 : 42-3, 8 : 58, 18 : 37)

(பி-ம்.) †'ளாட்டிய' ‡'புலர்' ¶'லடியேத்தித்' §'எல்லா காதலர்க் காணேன் கலங்குநோய் கைம்மிக, ஊதுலை'

ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சாயின்
ஏதிலார் சொன்ன தெவன் †வாழி யோதோழீ
நன்பகற் போதே ‡நடுக்குநோய் கைம்மிகும்
அன்பனைக் காணா தலவுமென் னெஞ்சன்றே
அன்பனைக் காணா தலவுமென் னெஞ்சாயின்
மன்பதை சொன்ன தெவன்வாழி யோதோழீ
தஞ்சமோ தோழீ தலைவன் வரக்காணேன்
வஞ்சமோ வுண்டு மயங்குமென் னெஞ்சன்றே
வஞ்சமோ வுண்டு மயங்குமென் னெஞ்சாயின்
¶எஞ்சலார் சொன்ன தெவன்வாழி யோதோழீ
சொன்னது :—
அரைசுறை கோயி லணியார் ஞெகிழம்
கரையாமல் வாங்கிய கள்வனா மென்றே
கரையாமல் வாங்கிய கள்வனா மென்றே
குரைகழன் மாக்கள் கொலைகுறித் தனரே
§எனக்கேட்டு,
பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப வழுதாடன் $கேள்வனை
எங்கணாஅ வென்னா வினைந்தேங்கி மாழ்குவாள்

---

15. ஏதிலார் சொன்னது யாதென்று ஐயுற்றாள்; ஏதிலாரென்றது மறையச் சொன்னவர்களை; ஏதிலார் - நகரிலுள்ளாருமாம்; தோழீயென்றது ஐயையை.

20. (பா) தஞ்சமோ காணேன் - வேறு துணை காண்கின்றிலேன்.

21. வஞ்சமோ உண்டு - கிருத்திரிமமானது ஒன்றுண்டு. நெஞ்சு மயங்கும் : முற்று. 22. ஆயின் - ஆதலால்.

23. எஞ்சலார் - அயலார். எவனென்றாள், வருபாட்டைப்பற்றி.

24. சொன்ன - அவர்கள் சொன்னபடி.

25. ஞெகிழம் - சிலம்பு. 26. கரையாமல் - ஓசைப்படாமல்.

28. கொலை குறித்தனரென்றாள், ஐயை

31. திங்கள் முகிலோடு நிலங்கொண்டாற்போல.

33. (பா) எங்கணாய் - எங்குற்றாய். மாழ்குதல் - மயங்குதல்.

---

அடி, 31 : கலித். 64 : 1.

(அடி,) 24-33 : ‘இவை தனிச்சொற் பெற்றுத் தனியே வந்த கொச்சக வொருபோகு’ (தொல். செய். 149, ந. மேற்.)

(பி - ம்.) † ‘வாழிதோழி’ ‡ ‘நடுங்குநோய் கைமிக, அன்பனை’ ¶ ‘எஞ்சிலார் சொன்ன தெவன்வாழி தோழி’ § ‘எனப் பொங்கி’ $ ‘கோவலனை’

இன்புறு தங்கணவ ரிடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை யலர்தூற்ற மன்னவன் றவறிழைப்ப
அன்பனை யிழந்தேன்யா னவலங்கொண் டழிவலோ
நறைமலி வியன்மார்பி னண்பனை யிழந்தேங்கித்
துறை †பல திறமூழ்கித் துயருறு மகளிரைப்போல்
மறனொடு திரியுங்கோன் மன்னவன் றவறிழைப்ப
அறனெனு மடவோயா னவலங்கொண் டழிவலோ
தம்முறு பெருங்கணவன் ‡றழலெரி யகமூழ்கக்
கைம்மைகூர் துறைமூழ்குங் கவலைய மகளிரைப்போல்
செம்மையி னிகந்தகோற் றென்னவன் றவறிழைப்ப
இம்மையு மிசையொரீஇ யினைந்தேங்கி யழிவலோ
காணிகா,
வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டும்
¶ஆய மடமகளி ரெல்லீருங் கேட்டீமின்
ஆய மடமகளி ரெல்லீருங் கேட்டைக்க
பாய்திரை வேலிப் படுபொரு ணீயறிதி
காய்கதிர்ச் செல்வனே கள்வனோ வென்கணவன்
கள்வனோ வல்லன் கருங்கயற்கண் மாதராய்
ஒள்ளெரி யுண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்.

---

34. இடரெரி - இடர்செய்யெரி.
41. அறனென்றது தருமதேவதையை.
43. கைம்மை யொழுக்கத்தினையுடைய நோன்பு.
45. இம்மையுமென்றது பரலோகத்தையும் கருதி.
46. (பா) காணிகா காணிகா : இகவென்பது ஈறு திரிந்தது; இரண்டும் விரைவின்கண் வந்தன.
47. வாய்வதின் வந்த குரவை - புத்தி பூருவமாக எடுத்த குரவை.
49. (பா) கேட்டைக்க கேட்டைக்க - கேட்க கேட்க; இரட்டித்தார், எல்லாரும் கேட்டற்கு.
53. ஊருண்ணு மென்றது முற்று. ஒருகுரல் - அசரீரி.

---

அடி, 34-5: மணி. 2 : 46-7. அடி, 43. கைம்மை நோன்பு: "வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட, வேளை வெந்தை வல்சி யாகப், பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும், உயவற் பெண்டிர்" (புறநா. 246 : 7-10). அடி, 47. வாய்வது : மணி. 11 : 138, 21 : 171.

அடி, 47-53. 'ஐந்தடியின்மேல் ஈரடிமிக்கு வந்த ஒருபோகு' (தொல். செய். 149, ந. மேற்.)

(பி-ம்.) † 'பலதொறு' ‡ 'றழலெரியிடை' ¶ 'ஆயர்மட'

**1. ஆங்கு**—(இ - ள்.) அவ்விடத்து.

**2-7. ஆயர் முதுமகள்......வந்தாளுளள்**

(இ - ள்.) மாதரி, இங்ஙனம் அவராடிய குரவை முடிந்தவளவிலே [1] ஒழுக்கறுத நீரையுடைய வையையாற்றின் கரையிடத்து நெடுமாலடியைப் பூ முதலியவற்றைத் தூவி ஏத்துதற்கு நீராடப் போயினளாக; சாயலாள் வேறொருத்தி உள் நகரத்துப் பிறந்ததொரு வார்த்தை கேட்டுச் சென்றிருந்து கூறுதற்கு விரைவோடு வந்தாளுளளென்க.

ஆடிய சாயலாளெனச் சேர்த்து அசைந்த சாயலாளென்பாருமுளர். புனைசாய்ந்து - மெய்ச்சாந்து. நெடுமால் - **அந்தரவானத்தெம்பெருமான்.** துறை படிதல் - நீராடுதல்; அக்கால வழக்கு. முதுமகள் போயினளுடைய சாயலாள் அரவங்கேட்டு வந்து அவ்விடத்து நின்றுளுளளென ஐயை மேலேற்றுவாருமுளர். போயினள் கேட்டு வந்தாளுளளெனப் [2] பொருண்மை சுட்டலாக்கி மாதரிமேலேற்றலுமொன்று. இது புறஞ்சேரியாதலின், ஊரரவமென்றார்.

**8. அவடான்**—

(இ - ள்.) அங்ஙனம் விரைவோடு வந்து நின்றவள்தான்,

**9-10. சொல்லாடாள்......சொல்லாடுந்தான்**

(இ - ள்.) அங்ஙனங் கேட்டு வந்து கண்ணகிக்குத் தன் வாக்காற் சொல்லாளாய்க் குரவை முடித்து நீராடி வந்து நின்ற ஆயர்மகளிர்க்கு மறையிற் கூறி அவரோடு தானும் விம்முற்று நின்றவள் அவளழகும் இளமையும் தனிமையுங் கண்டு ஆற்றாளாய் நெஞ்சழிந்து சொல்ல நாவெழாதுதான் நிற்குமென்க.

இனி வாக்காற் சொல்லாதவள் தன் மெய்ப்பாட்டாற் சொல்லுமென்றுமாம். இனி அங்ஙனம் நின்றாளாகிய அந்நங்கைக்குக் கண்ணகி தான் சொல்லாடுமெனினும் அமையும். அது மேற்கூறுகின்றார் :—

**11. எல்லாவோ**—(இ - ள்.) ஏடீ; ஓ : இரக்கக் குறிப்பு.

**12-5. காதலற் காண்கிலேன்......வாழியோ தோழீ**

(இ - ள்.) தோழீ, என் காதலனை வரக் காண்கின்றிலேன்; அங்ஙனம் காணாமையின் நெஞ்சு கலங்கி நோய் கைம்மிகா நின்றது; அதுவேயுமன்றி உலையிலூதும் துருத்திமூக்கும் தோற்கும்படி மூச்சும் அழலெழவுயிரா நின்றன; இவை இங்ஙனமாகாநிற்குமாயின் என்னை நோக்கி இவ்வாய்ச்சியர் குறிப்பாற் கூறுகின்றது யாதோவென்றறிகின்றிலேனென இரங்கிக் கூறினளென்க.

அன்றே யென்பது அசை. ஏதிலாரென்றாள், சொன்னவளையும் கேட்கின்றாரையும். வாழி : இடைச்சொல். ஓவென்பது இரக்கக் குறிப்பு. இவை மேலுங்கொள்க. நெஞ்சு கலங்கிக் கைம்மிகும் உயிர்க்குமென்க;

---

[1] "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" (சிலப். 13 : 170); "வையை யன்ன வழக்குடை வாயில்" (மதுரைக். 356)

[2] தொல். வேற்றுமை. 5.

சொன்னதெவனென்று அறிதியோவென்னும் விளுப்பொருண்மை தோன்ற உரைப்பினும் அமையும்.

16-9. நன்பகற்போதே......தோழீ

(இ - ள்.) தோழீ, நன்பகற் பொழுதின்கண்ணே நடுக்கமுறுவிக்கும் நோய் ஒருகாற்கொருகாற் கைம்மிகா நின்றது; அதுவேயுமன்றி என்னால் அன்பு செய்யப்பட்டானையும் வரக் காண்கின்றிலேனாதலால் என்னெஞ்சு வருந்தாநின்றது; இவை இங்ஙனமாகாநிற்குமாயின், குறிப்பால் இம் மகளிர்பலரும் கூறுகின்றது யாதோவென்று அறிகின்றிலேனென்றாளென்க.

கோவலன் போனபோதே தன்னெஞ்சு கலங்குதலால் நன்பகற் போதே யென்றாள்.

20-23. தஞ்சமோ தோழீ......வாழியோ தோழீ

(இ - ள்.) தோழீ, இவ்வயலார் சொல்லுகின்ற மறை எளிதன்று; அதற்கேற்ப என் தலைவனையும் வரக் காண்கின்றிலேனாகலின், என்னை வஞ்சித்ததொன்றுண்டு; அதுவேயுமன்றி என்னெஞ்சு மயங்காநின்றது; இவை இங்ஙனமாகாநிற்குமாயின், குறிப்பால் இவர் சொல்லுகின்றது யாதோவென்று அறிகின்றிலேனென்றாளென்க.

இனி, தோழீ, எனக்கு இனி என்ன தஞ்சமுண்டெனு அழுகையில் தோன்றிய மருட்கையென்னும் மெய்ப்பாடாக்கினும் அமையும்; தஞ்சமாயல்லவென்பதுபோல நின்றது. தோழீயென்றது ஐயையை.

24. சொன்னது—(இ - ள்.) அவள் சொன்னபடி.

25-8. அரைசுறை கோயில்...கொலை குறித்தனரே

(இ - ள்.) இங்ஙனம் இவளிரங்கா நிற்க ஊரரவங் கேட்டு விரைவொடு வந்து சொல்லாடாளாய்ச் சொல்லாடுகின்றவள் அரசன் விரும்பியுறையும் அந்தப்புரத்திலிருக்கும் அழகு நிறைந்த சிலம்பை வருந்தாமல் தன்கைத்தாக்கிக்கொண்ட கள்வன் இவனேயாமென்று ஒலிக்கும் வீரக்கழலையுடைய வேற்காரர் இவனைக் கொலை செய்தலைக் குறித்தனரென்றாளென்க.

கொன்றார்களெனின், இவளுயிர்க்கு இறுதி பயக்குமெனக் கருதிப் பரியாயத்திற் கூறினாளாம். என்றேயென்ற ஏகாரமிரண்டினும் பிறந்த தேற்றத்தைப் பிரிநிலையால் எதிர்மறைத்துக் கூறினாள். இதனை ஐயை கூற்றென்பாருமுளர். அரசன் கோயிலென்றது 'உறைகோயில்' என்றமையான் அந்தப்புரமாயிற்று. கரைதல் - ஓசைப்படுதலுமாம்; அவகாசித்தலுமாம்.

29. எனக்கேட்டு—

(இ - ள்.) என்று அவள் சொல்லக்கேட்டு,

30-33. பொங்கி யெழுந்தாள்......மாழ்குவாள்

(இ - ள்.) தனது ஆற்றாமையான் வசமழிந்து நிலத்தினின்று மெழுந்து மறித்தும் விழுந்து கிடக்கின்றவள் எங்ஙனம் வீழ்ந்து கிடந்தாளெனின், கதிரையுடைய திங்கள், பொழியக் கால்கொண்டு வீழ்ந்த புயலொடு பெரிய நிலத்தில் வீழ்தலைக்கொண்டதென விழுந்தாள்; விழுந்த

வன் தன் கணவன் முன்னர் வருகெனப் பொருந்துதலாற் செவ்வரி பாய்ந்தகண் கலங்கிச் சிவக்கும்படி கையால் மோதிக்கொண்டழுதாள்; பின்பு தன் கொழுநனை நீ எவ்விடத்தாய்தானென்று வருந்திப் பொருமி மயங்கி யாவும் தோன்றாவென்று அழுதாளென்க.

முகத்திற்கும் குலைந்த குழலுக்கும் திங்களும் புயலும் உவமை. எழுந்தனளாய் விழுந்தவள் மாழ்குவாளாய் அழுதாளென்க. ஆண்டு, "கண்ணகி கருங்கண்" (5 : 237) என்றவர் ஈண்டு, "செங்கண்" என்றார், காலையில் தலையளியாற் பிறந்த செவ்வி தோன்ற. ஆஅ - இரக்கக் குறிப்பு.

இனி மாழ்குவாள் எழுந்தாள் கொண்டென விழுந்தாள்; விழுந்தவள் செங்கண் சிவப்பத் தன் கேள்வனை எவ்விடத்தாயோஒ ஆஅவென அழுதாளெனவுமாம்.

## 34 - 7. இன்புறு தங்கணவர்......கொண்டழிவலோ

(இ - ள்.) அங்ஙனம் மருண்டழுதவள், தம்மோடின்புற்ற தம் கணவர் இடரைச் செய்யும் எரியின்கண் மூழ்க அவரோடு அதனிடை மூழ்காது துன்பமுறும் தன்மையவாகிய கைம்மைநோன்பை நோற்று இடர்ப்படும் [1] உயவற் பெண்டிரைப்போல மக்கட்பரப்பினுள்ளோரெல்லாம் தன்னைப் பழிதூற்றும்படி பாண்டியன் தவற்றைச் செய்ய அன்பனையிழந்தேனாகிய யான் இருந்தழுவாள் ஒருத்தியோவென்று தெளிந்திரங்கினாளென்க.

துன்புறுவனவென்றார்; "வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட வேளை வெந்தை வல்சி யாகப், பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்" (246 : 7 - 9) என்பதனை; இது புறம்.

## 38 - 41. நறைமலி......கொண்டழிவலோ

(இ - ள்.) நறைமிக்க அகன்ற மார்பினையுடைய தம் நண்பன் நெருப்பின் மூழ்க அவனை யிழந்து ஏங்கி நீர்த்துறைகள் பலவற்றுள்ளும் தாம் குளிரப் புக்காடித் துயரமுற்றிருந்தழும் உயவன் மகளிரைப்போல, மறத்தொடு பொருந்தி அறத்தில் திரியுஞ் செங்கோலையுடைய பாண்டியன் தவற்றைச் செய்யப் பார்த்திருந்த அறக்கடவுளென்கின்ற அறிவற்றோய்! யான் அங்ஙனம் வருத்தமுற்றிருந்து இரங்குவாளொருத்தியோ; கூறென்றாளென்க.

மூழ்குதல் - அழுக்கறக் குளிரக்குளித்தல். அறனெனுமடவோயென்றாள்; உன்னை நீத்துப் பகையாகிய மறனொடு திரியக்கண்டும் ஆண்டு நின்றாயெனப் புலந்து.

## 42 - 5. தம்முறு பெருங்கணவன்......இனைந்தேங்கி யழிவலோ

(இ - ள்.) தம்மோடொத்த அன்பையுடைய தலைமை பொருந்திய கணவன் அழலும் எரியிடத்தே மூழ்கத் தாம் அவனோடு அவ்வெரியிடத்தே மூழ்காது கைம்மை நோன்பு மிகும் நீர்த்துறைகளிலே குளிர

---

[1] உயவற் பெண்டிர் - வருந்துதலையுடைய மகளிர்; "உயவற் பெண்டிரே மல்லேம்" (புறநா. 246 : 10)

சூழ்கும் உயவற்பெண்டிரைப்போல, செம்மையினின்று நீங்கின கோலை யடைய தென்னவன் தவற்றைச் செய்ய இப்பிறப்பின்கண்ணும் இப் பெயர் படைத்து மிக வருந்தி இங்கிருந்து அழுவாளொருத்தியோ யானென்றுளென்க.

இம்மையுமென்றது பரலோகத்தையும் நினைந்து; ஆவது இம்மை யிற் புகழையும் மறுமையிற் புண்ணியத்தையும் விட்டென்றபடி.

46. காணிகா—(இ - ள்.) காண்பாயாக;

[1] இகவென்னும் முன்னிலையசை இகாவென ஈறு திரிந்து காண்பா யாகவென்பதாயிற்று.

47 - 53. வாய்வதின் வந்த......இவ்வூரென்ற தொரு குரல்.

(இ - ள்.) வாய்ப்புடைத்தாகிய உற்பாதசாந்திப் பொருட்டு ஆடிய இக்குரவையுள் வந்து திரண்ட ஆயருடைய மகளிர் நீரெல்லீரும் கேண் மின்; அங்ஙனமாகிய மகளிரெல்லீரும் கேட்பீராக; பரந்த திரையை யுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகிலுண்டான பொருளில் நீ அறியாத பொருளில்லை. ஆதலாற் கதிர்ச்செல்வனே, நீ அறிய என் கணவன் கள்வனோவென்றுளாக, அவன் அசரீரியாய் நின்று கூறுகின்றவன், நின் கணவனோ கள்வனல்லன், அவனைக் கள்வனென்ற இவ்வூரை மாதராய், எரியுண்ணுங்காணென்றுனென்க.

கேட்டீமின் - கேண்மின்; ஒரு சொல். கேட்டைக்க - கேட்டையென் னும் வினையசைச் சொல், உடனடுக்கி வரற்பாலது கேட்டீமினென்பத னேடு மொழியிடையடுக்காகி ஈற்று வியங்கோட்பொருண்மையாற் கேட்க வென்னும் பொருட்டாயிற்று. பாய்திரை - பரந்த திரை. படுதல் - உண்டாகுதல். ஓகாரம்: பிரிநிலை. ஒள்ளெரி - நின் ஏவல் கேட்குமெரி. இவ்வூர் - இது சொன்ன இவ்வூர்.

இனி ஓகாரத்தை இரக்கக் குறிப்பெனினும் அமையும். உண்ணு மிவ்வூர் - இவ்வூரையுண்ணும்; முற்று.

இது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

(கஅ) துன்பமாலை முற்றிற்று.

---

[1] பரிமேலழகர், நச்சினார்க்கினியர் கொள்கையும் இதுவே; பரி. 11; கலித். 105.

# ஊர்சூழ்வரி

என்றனன் வெய்யோ னிலங்கிர் வளைத்தோளி
நின்றில ணின்ற சிலம்பொன்று கையேந்தி
முறையி லரசன்ற னூரிருந்து வாழும்
†நிறையுடைப் பத்தினிப் பெண்டிகர்கா ளீதொன்று
பட்டேன் படாத துயரம் படுகாலை
உற்றே னுறாத துறுவனே யீதொன்று
கள்வனோ வல்லன் கணவனென் காற்சிலம்பு
கொள்ளும் ‡விலைப்பொருட்டாற் கொன்றாரே யீதொன்று
மாதர்த் தகைய மடவார்கண் முன்னரே
காதற் கணவனைக் காண்பனே யீதொன்று
காதற் கணவனைக் கண்டா லவன்வாயில்
தீதறு நல்லுரை ¶கேட்பனே யீதொன்று
தீதறு நல்லுரை கேளா §தொழிவேனேல்
நோதக்க செய்தாளென் றெள்ள ||லிதுவொன்றென்

---

2. நின்ற சிலம்பு - மற்றைச்சிலம்பு; மற்றைச்சிலம்பைக் கையிலேந்தி நின்றிலளென்க.

5. ஒருவர் படாத துயரம் யான்பட்டேன். படுகாலை - அந்திப் பொழுது.

6. ஒருவருறாததுற்றேன்; நானுறக்கடவேனோ. ஈதொன்று-இஃது ஓர் அநியாயம்.

[ஆதித்தனையும் சான்றுகாட்டி இவன் தீதிலனென்னும் நல் வார்த்தை கேட்பேனென்றமையால், அநியாயஞ் செய்தார்களென்று எல்லோர்க்கும் தோற்றிற்று.]

8. விலைப்பொருட்டால் - விலைகொடாமைக்காக.

12 - 4. தீதிலனென்னும் நல்வார்த்தை கேட்பேன்; கேட்டிலேனாகில், பின்பு நோதக்க செய்தாளென்று இகழ்க. எள்ளல் "பயனில் சொற்பாராட்டுவானை மகனெனல், மக்கட் பதடி யெனல்" (குறள், 196) என்பதுபோலக் கொள்க.

---

அடி, 12. தீது - மரணம்; சீவக. 327.

அடி, 7-8. "கள்வனோ...ஈதொன்று என்றதும் இது வென்னும் சுட்டுமுதல் உகரவீறுதலின், அது செய்யுளகத்துப் புறனடையான் முடியும்" (தொல். உயிர்மயங்கு. 36, ந.; இ - வி. 80, மேற்.)

(பி - ம்.) † 'நிறைவுடைப்' ‡ 'வினைப்பொருட்டாற் கொன்றனே யீதொன்று, காதற்கணவனைக் கண்டாலவன்' ¶ 'கேட்பெனே' § 'தொழிவனேல்' || 'லிதுமோவ்வொன்றென்'

றல்லலுற் ருற்று தழுவாளைக் கண்டேங்கி
மல்லன் மதுரையா ரெல்லாருந் தாமயங்கிக்
களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த திதுவென்கொல்
†மன்னவர் மன்னன் மதிக்குடை வாள்வேந்தன்
தென்னவன் கொற்றஞ் சிதைந்த திதுவென்கொல்
மண் ‡குளிரச் செய்யு மறவே னெடுந்தகை
தண்குடை வெம்மை ¶விளைத்த திதுவென்கொல்
செம்பொற் சிலம்பொன்று கையேந்தி நம்பொருட்டால்
வம்பப் பெருந்தெய்வம் வந்த திதுவென்கொல்
ஐயரி §யுண்கணழு தேங்கி யரற்றுவாள்
தெய்வமுற்றுள் போலுந் தகைய ளிதுவென்கொல்
என்பன சொல்லி யினைந்தேங்கி $யாற்றவும்
வன்பழி தூற்றுங் குடியதே மாமதுரைக்

(16) மதுரையாரெல்லாரும் (18) வளையாத செங்கோல் வளைந்ததிது வென்கொலென்றுர் ; ஆதித்தனையும் சான்றுகாட்டி (14) நோதக்க செய்தாளென்று எள்ளலென்றமையால்.

23. நம்பொருட்டால் - நம்மைக்கெடுத்தற்பொருட்டால் ; ஆவது இனி இவளுடைய பிரகடத்தால் மதுரையில் உள்ளாரும் கெடப்புகுந்த தென்று தோன்றிற்றும்.

26. தெய்வமுற்றுள் - தெய்வத்தன்மையுற்றுள் ; தெய்வமேறினு சென்றுமாம்.

27. என்பனசொல்லி - இன்னசொல்லி.

என்றதனுல், (16) மதுரையாரெல்லாரும் மயங்கிச் (27) சொல்லி இனைந்து ஏங்கி மிகவும்.

27 - 8. (பா.) மிகவும் மன்னவனைப் பழிதூற்றுங்குடியது மதுரை யென முற்றுவிக்க.

அடி, 15 - 6. குறள், 245, 315, 555-ஆம் பாடல்களால் இவ்வடி களின் பொருளை ஆராய்க.

அடி, 21 - 2 : இவ்வடிகளின் பொருளை, "மண்குளிர் கொள்ளக் காக்கு மரபொழிந் தரசர் தங்கள், விண்குளிர் கொள்ள வோங்கும் வெண் குடை வெதும்பு மாயிற், கண்குளிர் கொள்ளப் பூக்குங் கடிகயத் தடமுங் காவும், தண்குளிர் கொள்ளு மேனுந் தான்மிக வெதும்பு மன்றே" (சூளா. மந்திரசாலை. 26) என்னும் செய்யுள் நன்கு விளக்குதல் காண்க.

அடி, 28 : "குடிபழி தூற்றுங் கோலனு மல்லன்" (சிலப். 23 : 34); "குடிபழி தூற்றுங் கோலே னுகுக' (புறநா. 72 : 12)

(பி - ம்.) † 'மன்னவரின் மன்னன் மதிக்குடைவாழ்' ‡ 'குளிர் செய்யு' ¶ 'விளைந்த' § 'யுண்கண்ணுளழுதேங்கி' $ 'யரற்றவு, மன் பழி'

கம்பலே மாக்கள் கணவனைத் தாங்காட்டச்
செம்பொற் கொடி †யனையாள் கண்டாளைத் தான்காணுன்
மல்லன்மா ஞால மிருளூட்டி மாமலைமேற்
‡செவ்வென் கதிர்சுருங்கிச் செங்கதிரோன் சென்றொளிப்
புல்லென் மாலைப் பூங்கொடியாள் பூசலிட [பப்
ஒல்லென் ஒலி ¶படைத்த தூர்
வண்டா ரிருங்குஞ்சி மாலைதன் வார்குழன்மேற்
கொண்டா டழீஇக் கொழுநன்பாற் காலைவாய்ப்
புண்டாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்
கண்டா ளவன்றன்னைக் காணுக் கடுந்துயரம்
என்னுறு துயர்கண்டு மிடருறு மிவளென்னீர்
பொன்னுறு நறுமேனி §பொடியாடிக் கிடப்பதோ
மன்னுறு துயர்செய்த மறவினை யறியாதேற்
கென்னுறு $வினைகாணு விதுவென வுரையாரோ

29. கம்பலைமாக்கள் - வேறுசிலர்.

32. (பா) தான்காணமாட்டது செங்கதிரோனும் சென்றொளித் தான்.

32-3. ஒளித்தான் ; ஒளிக்கப் புல்லென்ற மாலைக்கண்ணே.

36. தழீஇக்கொழுநன் - ஆயர்பாடியினின்றும் போதுகிற போது கொழுநனைத்தழீஇ.

37. புறஞ்சோர - அவ்விரத்தம் புறம்பெல்லாம் விழுந்து நனைப்ப.

38. அவன்முன்பு அறியாத துயரத்தை.

36-8. காலைவாய்த் தழீஇக்கொண்டாள்; கொழுநன்குருதி புறஞ் சோரத் தன்னை அவன் காணுது கிடக்கின்ற கடுந்துயரத்தினை மாலை வாய்க்கண்டாள்.

39. என்னுடைய உறுதுயர் கண்டும். என்னீரென்றது, கோவலனை நோக்கி.

'என்னுறுதுயர்' முதலான மூன்றும் முதுபாலை.

40. பொன்னுறுமேனி - பொன்போலும் மேனி.

42. என்வினைகாணிதுவென்று ஒருவார்த்தை சொல்லார்களோ சான்றோர்..........வினைகாணுவிது; ஆ: அசை. உரையாரோ - இவ் வழக்கை இந்நாட்டிற் சொல்லார்களோ; என்றது ஆருமில்லேனுக்கு இந்நாட்டிற் சொல்லார்களோ என்றதாம்.

அடி, 29. கம்பலைமாக்கள் : மணி. 3 : 147. அடி, 38. கடுந்துயரம் : மணி, 2 : 38, 50, 63.

(பி - ம்.) † 'யன்னுள்' ‡ 'செல்லென்கதிர்', 'செல்லுங்கதிர்' ¶ 'யடைந்ததூர்' § 'புகையாடிக் கிடப்பவோ' $ 'துயர்காணு'

யாருமின் மருண்மாலை யிடருறு தமியேன்முன்
தார்மலி †மணிமார்பந் தரைமூழ்கிக் கிடப்பதோ
பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் றவறிழைப்ப
ஈர்வதோர் வினைகாணு விதுவென வுரையாரோ
கண்பொழி புனல்சோருங் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக் ‡கிடப்பதோ
மன்பதை ¶பழிதூற்ற மன்னவன் றவறிழைப்ப
உண்பதோர் வினைகாணு விதுவென வுரையாரோ
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
கொண்ட §கொழுந ருறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொல்
ஈன்ற குழவி யெடுத்து வளர்க்குறூஉம்
சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொல்
தெய்வமு முண்டுகொ றெய்வமு முண்டுகொல்
வைவாளிற் றப்பிய மன்னவன் கூடலில்
தெய்வமு முண்டுகொ றெய்வமு முண்டுகொல்
என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன்
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்றா னெழுந்து நிறைமதி வாண்முகம்
கன்றிய $தென்றவள் கண்ணீர்கை யான்மாற்ற

---

46. ஈர்வதோர்வினை - வெட்டுவதோர்வினை.

58. வாளிற்றப்பிய - வாளாற்கொன்ற.

51-9. "பெண்டிர்", "சான்றோர்" "தெய்வம்"—'உண்டோ' என்றது - உண்டாயின், இப்படிப் பிறவாது; ஆதலால் இல்லை என்றவாறு.

61. பொன் - சீதேவி. 61-2. கொண்டவளவிலே எழுந்திருந்து நின்றான்; நின்றான் : பெயர்.

---

அடி, 61. பொன்துஞ்சுமார்பம் : சீவக. 14, 908, 1332, 1504.

அடி, 51-6 : 'உண்டு என்னும் வினைக்குறிப்புப் பலர்பாலுக்கும் வரும்' (நன். மயிலை. 338, சங். 339; இ - வி. 240, மேற்.)

60-75. 'இவை தொடர்ந்த பொருளாய் நான்கடுக்கின' (தொல். செய். 149, ந.)

(பி - ம்.) † 'நறுமார்பன்றரைமூழ்கிக்கிடப்பதோ' ‡ 'கிடப்பவோ' ¶ 'யலர்தூற்ற' § 'கொழுநருக் குறுதுயர்தான்கூறும்' $ 'தென்று கண்ணீர் கையான்மாற்றியபி, னழுதேங்கிநிலத்துவீழ்ந்தாயிழையான் கணவன்றன்'

அழுதேங்கி நிலத்தின்வீழ்ந் தாயிழையா டன்கணவன்
தொழுதகைய திருந்தடியைத் துணைவளைக்கை யாற் †பற்றப்
பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளான்
‡எழுதெழின் மலருண்க ணிருந்தைக்க வெனப்போனான்
மாயங்கொல் மற்றென்கொல் ¶மருட்டியதோர் தெய்வங்கொல்
போயெங்கு §நாடுகேன் பொருளுரையோ விதுவன்று
காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
தீவேந்தன் றனைக்கண்டித் திறங்கேட்பல் யானென்றாள்
என்றா ளெழுந்தா ளிடருற்ற தீக்கனா
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர் ‖சோர
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்துடையாச்
சென்றா ளரசன் செழுங்கோயில் வாயின்முன்.

66. பழுதொழிந் தெழுந்திருத்தலாவது - பிணமான தன்மை யொழிந்து நிற்றல். பட்டபொழுதே தெய்வலோகம் புகுகையால், அமரர் குழாத்துள்ளானென்றார். அப்பழுதும் ஒழிந்து எழுந்தானென்று பொருளாக்குக.

67. மலருண்கண் : அண்மைவிளி. இருந்தைக்க - இருக்க.

(60) அழுவாள் (61) கொண்டவளவிலே (66) எழுந்திருந்தான்; அமரர் குழாத்துள்ளானாகிப் (67) போனான்.

69. கணவன் உண்டாயிருக்க, எங்குப்போய் ஆராய்வேன்? இது மெய்யுரையன்றென்றது, தன்பின்பு போதாமைபற்றி; போயெங்கும் - எங்கும்போய். 'இது' என்றது புகார்க்காண்டத்துத் தேவந்திக்குக் கூறின கனாவை (9 : 45 - 54) என்றுமாம்.

72. என்றெழுந்தாள். இடருற்ற தீக்கனாவென்றது, முன்பு தான் கண்டு தேவந்திக்குச் சொன்ன கனாவினை.

73 - 5. நின்று நினைந்தாள்; கனாவை நினைந்து. இனி அவ்வாறே செய்வலென்று சென்றாள்—வழிகாண நீர்துடைத்துச் சென்றாள்.

---

அடி, 66 : "பழுதறு மாதவன்" (மணி. 11 : 145)

(பி - ம்.) †'பற்றிப்' ‡'எழுதுதொழின்மலர்' ¶'மருட்டியதோ தெய்வம்' §'நாடுவேன் பொருளுரையோவிதுவென்று' ‖'சோரச் சென்றா ளரசன் செழுங்கோயில் வாயில்வாய்'

**1 - 4. என்றனன் வெய்யோன்.........பெண்டிர்காளீ தொன்று**

(இ - ள்.) வெய்யோன் கள்வனல்லனென்றுகை, அவ்வளைத்தோளி, மற்றைச் சிலம்பொன்றைத் தன்கையில் ஏந்திக்கொண்டு அவ்வாயர் பாடியினின்றும் ஊர்க்குள்ளே போனவள் ஆண்டுள்ள கற்புடைமகளிரை நோக்கி முறை செய்தலில்லாத அரசனிருக்கின்ற ஊரின்கண் இருந்து வாழும் கற்பையுடைய பெண்டிர்காள்! இஃது அதன் மற்றைச் சிலம்பு காணுங்கோளென்றுளென்க.

நின்றிலள் - போனுள். நின்ற சிலம்பு - மற்றைச்சிலம்பு. முறையில்... பெண்டிர்காள்: இகழ்ச்சி; என்னை ? "அருந்திற லரசர் முறைசெயி னல்லது, பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது" (28 : 207 - 8) என்பதனுனும், "வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது, நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது, பத்தினிப் பெண்டி ரிருந்த நாடு" (15 : 145 - 7) என்பதனுனும் இகழ்ந்தாள். அவனுட்டிலிருந்த மகளிர்க்கும் கற்பின்றுமாகலின், அவனிருக்கின்ற ஊரின்கண் இருந்து வாழ்கின்ற நுமக்கும் கற்புநிறையுண்டாமோவென்றது இகழ்ச்சி. [1] இலங்கீர் வளை - ஈர்ந்திலங்கு வளை. நின்றிலளென்றது ஆதித்தனைச் சான்று காட்டினபின் ஆயர்பாடியில் நின்றிலளென்றவாறு. ஈதொன்று - இஃது அதனிணைச் சிலம்பு; அன்றி இஃதோர் அநியாயமென்றுமாம்.

**5 - 6. பட்டேன் படாத......ஈதொன்று**

(இ - ள்.) உலகிற் பிறந்தாரொருவர் படாத துயரம் பட்டேன்; ஒருவர் உருத துயரமுற்றேன்; உறுகின்ற யான் மரணவேதனை போல வுற்றேன். இங்ஙனமுறக் கடவேன் இனியுறுவது ஒன்றன்றேவென்றுளென்க.

ஏகாரம் : ஈற்றசை.

இனி, படுகாலை - அந்திக்காலத்தெனினும் அமையும். உறுவன் - அல்லீறு அன்னீருயிற்று.

**7 - 8. கள்வனோ வல்லன்...கொன்றாரே யீதொன்று**

(இ - ள்.) என்கணவன் கள்வனல்லன்; என் காற்சிலம்பு பெறும் விலையைக் கைக்கொண்டுவிடுதல் காரணத்தாற் கள்வனென்று ஒரு பெயரையிட்டுக் கொன்றுர்களே; இஃதோர் ஆச்சரியமிருந்தபடி என்னென்றுளென்க.

என் காற்சிலம்பென்றுள்; தான் அரசன்; யான் ஒரு வணிகன் மனைவி; என்காலணியினென்று பெற்றவிலை தாராமைக் கள்வனென்று ஒரு பெயரிட்டுக் கொன்றுர்களேயென்று; இஃதோர் அநியாயமிருந்தபடி என்னவென்று தெளிந்து கூறினுள். கொன்றுரேயெனப் பன்மை கூறினுள்; அரசனேடு அமைச்சரையுங்கருதி. ஓகாரம் : பிரிநிலை.

**9 - 14. மாதர்த் தகைய...எள்ளலிது வொன்று**

(இ - ள்.) தம் காதலர் காதலிக்கும் கற்பையுடைய மனைவியர் முன்னே என்னுடைய கணவனைப் பண்டுபோலக் காண்பேனே,

---

[1] குறுந். 11 : 1.

அங்ஙனம் காண்பேனாயின் இஃதொரு புதுமையன்றோ! அங்ஙனம் அவனைக்கண்டால் அவன் வாக்காற் சொல்லும் குற்றமற்ற நல்லுரையைக் கேட்பேனோ? அங்ஙனம் கேட்பேனாயின் எனக்கு இஃது ஓர் உறுதி; அங்ஙனம் தீதற்ற உரையை அவன் வாக்காற் கேளேனாயின் நோதக்க செய்தாளென்று என்னை இகழுமின்கள்; இது நுங்கட்கு ஒரு வாய்ப்பு.

கேளாதொழிவேனேல் என்றது சவம் எழுந்திருந்து எனக்கு ஒரு வார்த்தை சொல்லக் கேளாதொழிவேனேல் என்றவாறு. எள்ளலென்றது ஆதித்தனைச் சான்று காட்டினவதுவுமன்றிப் பட்ட என் கணவன் எழுந் திருந்து எனக்கு வார்த்தைசொல்லக் கேளேனாகில், "நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள்" என்று நும்மை இகழ்ந்த என்னைக் கள்வன் மனைவி யென்று எள்ளுமின்; எள்ளுதற்கு இது நல்லவிடம் என்றா ளென்க. எள்ளல்: அல்லீற்றுவியங்கோள்; "இற்றெனக் கிளத்தல்" (தொல். கிளவி. 19) போல.

## 14-8. என்று, அல்லலுற்று...வளைந்ததிது வென்கொல்

(இ - ள்.) என்று வருத்தமுற்று ஆற்றாது அழுகின்றவளை மதுரையார் எல்லாருங்கண்டு ஆற்றும்வழி காணாராய்த் தாம் இரங்கி அழுது மயங்கிக் கூறுகின்றவர் இறக்குமளவும் நீங்காத துன்பத்தை இக்காரிகைக்கு உண்டாக்கி அதனானே ஒருகாலும் கோடாத செங்கோல் கோடிற்று; இதனானே மேல் யாது விளையுங்கொல்லோ என்றாரென்க.

அல்லல் - வருத்தம். மல்லல் - வளன். களையாத துன்பம் - கணவனை யிழத்தல். இதுவென்றார், கோடாத செங்கோல் கோடியவதனை.

## 19 - 20. மன்னவர் மன்னன்...இதுவென்கொல்

(இ - ள்.) மன்னர்க்கு மன்னன் மதிபோலும் குளிர்ந்த குடையையும் வெய்ய வாளையுமுடைய வேந்தனாகிய தென்னவனுடைய அரசியல் அழிந்தது; இதனான் மேல் யாது விளையுங்கொல்லோ வென்றாரென்க.

குடையையும் வாளையும் உடையோனெனவே [1]அளியும் தெறலும் உடைமை கூறினார். மதிக்குடை: உவமத்தொகை. வாள் வேந்தன்: வேற்றுமைத் தொகை.

## 21 - 2. மண்குளிரச் செய்யும்......இதுவென்கொல்

(இ - ள்.) உலகிற்கு அறத்தையும் பகைவர்க்கு மறத்தையும் செய் யும் வேலையுடைய நெடுந்தகையுடைய தண்ணளியைச் செய்யும் குடை வெம்மையை விளைத்தது; இதனான் மேல் யாது விளையுங்கொல்லோ வென்றாரென்ச.

## 23 - 4. செம்பொற் சிலம்பொன்று...இது வென்கொல்

(இ - ள்.) செம்பொன்னாலாகிய சிலம்பு ஒன்றைக் கையிலேந்தி நம்மைக் கெடுத்தற் பொருட்டுப் புதுமையையுடைய பெரிய தெய்வம் ஈண்டு வந்தது; இதனால் இனி யாது விளையுங்கொல்லோ வென்றாரென்க.

---

[1] பெரும்பாண். 422.

ஒன்று கையேந்தியெனவே இஃது அதன் இணைபோலும் என்பது கருத்து. பெருந்தெய்வம் - தெய்வத்திலும் பெரியது; கற்புடைத் தெய்வம்; என்னை? "கற்புக் கடம்பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தொழுஅள் கொழுநற் றொழுவாளைத், தெய்வந் தொழுந் தகைமை திண்ணமால்" (23 : இறுதி வெண்பா) எனவும் கூறினமையின். இனி, வம்பு - நிலையின்மையாக்கி, உலாவுந் தெய்வம் என்றலுமொன்று. இனி நம் பொருட்டால் என்பதற்கு இவள் கற்பு நாம் கண்டு பாவித்தற் பொருட்டால் என்பதுமொன்று.

## 25 - 6. ஐயரி யுண்கண்......இதுவென்கொல்

(இ - ள்.) வியப்பையுடைய அரிபரந்த மையுண்ட கண்ணையுடையவள் விம்மி விம்மி வாய்விட்டு அரற்றுகின்றவள் தெய்வமேறினாள்போலும் தகைமையுடையவளாய் இராநின்றாள்; இதனால் மேல் யாது விளையுங் கொல்லோ என்றாரென்க.

இவண்மாட்டு மருளும் தெருளும் கண்டு தெய்வமுற்றாள்போலும் என்றார். இவ்வையங்களால் அரசனை நோக்கி இரங்கினார்.

## 27 - 30. என்பன சொல்லி......தான்காணான்

(இ - ள்.) வளையாத செங்கோல் வளைந்தது என்றல் முதலியன சொல்லி இவள் நிலைமைக்கு வருந்தி மன்னன் நிலைமைக்கு ஏங்கி மிகவும் மன்னன் கோல்கோடின தன்மையால் அவனைப்பழிதூற்றுங் குடியதாகிய மதுரையிற் கம்பலை மாக்கள்தாம் அவள் கணவன் பட்டவனைக் காட்டச் சிவந்த பொற்கொடியை யொத்தவள் தன்னைக் கண்டாளைத் தான் கண்டிலன்;

ஆற்றவும் - மிகவும். கம்பலை மாக்கள் - வேறு சில காட்சி கண்டு திரியுமவர். தான் காணானென்றார், இறந்தமை தோன்ற. மதுரை கம்பலை மாக்களென்று பாடமோதிக் குடியது மதுரையென முற்றுவித்தலுமாம்.

## 31 - 4. மல்லன்மா ஞாலம்...படைத்ததூர்

(இ - ள்.) வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்தை இருளுக்கு ஊட்டி உயர்ந்த அத்தகிரியிடத்தே தனது சிவந்த கதிர்களைச் சுருக்கி அக் கதிரையுடையோன் சென்று மறைய அங்ஙனம் அவன் மறைதலாற் புன்மையுண்டாகப்பட்ட [2] இரவு பகலென்று வரையறுக்கப்படாத மருட்சியையுடைய மாலைக்காலத்தே பூத்து உதிர்த்த கொடியையொத்த கண்ணகி அரசன்மேலே......பூசலை விளைக்க ஒல்லென்னும் ஓசையைப் படைத்தது அவ்வூரென்க.

ஊட்டி - தானுண்ட இருளை உலகை உண்ணப்பண்ணி. ஒல் : அநுகரணம். சுருங்கி : விகாரம். ஊட்டிச் சுருக்கி ஒளிப்பப் புல்லென் மருண் மாலையென்க.

## 35 - 8. வண்டா ரிருங்குஞ்சி...காணாக் கடுந்துயரம்

---

[1] குறள், 55. [2] 'மருண்மாலை' என்பதற்கு இவர் செய்திருக்கும் இப்பொருள் அறிந்து இன்புறற்பாலது.

(இ.- ள்.) காலைப்பொழுதின்கண் ஆயர்பாடியிடத்தே தன் கணவனைத் தழீஇ அதற்குக் கைம்மாருக அவனுடைய வண்டொலிக்குங் குஞ்சியின் மாலையை வாங்கித் தன் வார்குழன்மேற்கொண்ட கண்ணகி மாலைப்பொழுதின்கண்ணே அவன்மெய்யிற் புண்ணினின்றும் குதிக்கின்ற குருதிப் புனல் இடமெல்லாம் நனைப்ப அவன் தன்னைக்காணுத துயரத்தைத் தான் கண்டாளென்க.

அவள், கணவன் தன்னைக்காணுததனைத் தான்கண்டாளென்றது மரணத்தை யென்றபடி. காலைவாய்த் தழீஇ மாலைகொண்டவள் மாலைவாய்ப் புறஞ்சோரத் தன்னைக்காணுத துயரத்தைத் தான் கண்டாளென்க.

39 - 42. என்னுறு துயர்கண்டு......இதுவென வுரையாரோ

(இ - ள்.) என்னுடைய தனிமைமிக்க துயரைக் கண்டுவைத்தும் இதற்கு இவள் இடருறுமென நினைக்கின்றிலீர்; அதுநிற்க; நம்முடைய சந்தனுதிகளால் ஆடப்பட்ட பொன்போலும் திருமேனி பொடியாடிக் கிடக்கத் தகுவதொன்ருே; அஃதற்ருயின், மன்னனுற் செய்யப்பட்ட இக் கொலைத்தொழில் இப்பெற்றியான் முடிந்ததென்றறியாத எனக்கு முற்பவத்திற்செய்த என் தீவினைகாண் இதுவென்று இந்நாட்டிற் சொல்லார்களோவென்க.

இஃது அழுகையைச் சார்ந்தவெகுளி; மேல் வருவனவற்றிற்கும் கொள்க.

43 - 6. யாருமின் மருண்மாலை......இதுவென வுரையாரோ

(இ.- ள்.) துணைப்படுதற்கு ஒருவருமற்ற மருட்சியையுடைய இம் மாலைக்காலத்தே மிக்க துன்பமுருநின்ற தனித்தியேன் கண்முன்பே நும்முடைய மாலைத்திரளுக்குள்ளே முழுகும் திருமார்பம் வெறுநிலத்தே முழுகிக்கிடக்கத் தகுவதொன்ருே; அஃதற்ருயின் பாரிலுள்ளார் மிகவும் பழிதூற்றுதற்குக் காரணமாகப் பாண்டியன் தவற்றையெண்ண வெட்டுவிப்பதோர் தீவினைகாண் இதுவென்று இந்நாட்டிற் சொல்லார்களோவென்ருளென்க.

வெட்டிக் கவிழ்த்தமை தோன்ற மார்பம் தரைமூழ்கிக்கிடப்பதோவென்ருள்.

47 - 50. கண்பொழிபுனல்......இதுவென வுரையாரே

(இ - ள்.) கண்கள் பொழியும்புனலைச் சொரியாநிற்கின்ற தீவினைப் பயனையுடைய [1]என்னுடையகண்முகப்பே வெட்டுவாயினின்றும் குதித்துப் பெருகுகின்ற குருதியையுடையீராய்ப் பொடியாடிக்கிடக்கத் தகுவதொன்ருே; அஃதற்ருயின், மண்ணிலுள்ளோர்பலரும் பழிதூற்றுதற்குக் காரணமாக மன்னவன் தவற்றையெண்ண நுகர்வதோர் வினைகாணிது வென்று இந்நாட்டிற் சொல்லார்களோவென்ருளென்க.

இர்: முன்னிலைப்பன்மைக்கண் வந்து ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாயிற்று. கிடப்பதோ; ஓ: பிரிநிலை. உண்பதோர்வினை

---

[1]என்னுடையகண்முகப்பே-என்னுடைய கண்முன்னே; "எங்கள் கண்முகப்பே" (திவ். பெரிய. 10. 2 : 4.)

யென்பதற்கு உயிரையுண்பதோர் வினையென்பதும் பொருள்; "ஊழ் வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது" (மணி. 6 : 125) என்றார் பிறரும்.

இவைமூன்றும் முதுபாலை; என்னை? "நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து, தனிமகள் புலம்பன் முதுபாலை யாகும்" (பா) (தொல். புறத். 24) என்பதனால்.

## 51 - 3. பெண்டிரு முண்டுகொல்...பெண்டிருமுண்டு கொல்

பெண்டிர் - கற்புடைமகளிர். கொண்டகொழுநர் - தம்மை நெஞ்சினுட் கொண்ட கொழுநர். அவர் உறுகுறையைத்தாங்கும் பெண்டிர் - அவர் உற்ற பிணிக்கும் மனத்துயர்க்கும் மெய்யாகத் தாங்கும் பெண்டிர். அன்றி, உறுகுறைதாங்குதல் - பொதுமகளிரிடைப்பிரிதலும் அவரோடு கலந்தசெவ்வியும் புணர்ச்சிக்குறிகளும் கண்டுழியும் அவர் தெருட்டத் தெருண்டு குறையுறப் பொறுத்தலுமாம். தாங்குறாஉம் : வினைத்திரிசொல்.

## 54 - 6. சான்றோரு முண்டு......சான்றோரு முண்டு கொல்

[ஈன்ற......வளர்க்குறாஉம் - பிள்ளைப்பேறு...வளர்க்கு மென்னும் வழக்கு.]

## 57 - 9. தெய்வமு முண்டுகொல்...தெய்வமு முண்டு கொல்

கொல் : ஐயம்.

(இ - ள்.) கூர்த்தவாளால் என் கொழுநனைத் தவறுசெய்தலாற் [1]கோல் கோடிய மன்னனுடைய இக்கூடலென்னும் நகரிடத்துப்பெண்டிரும் சான்றோரும் தெய்வமுமுண்டோ! உண்டாயின், இவ்வநியாயம் பிறவாது; ஆதலால், இல்லையென்றாளென்க.

## 60 - 67. என்றிவை சொல்லி......எனப்போனான்

(இ - ள்.) என்று இன்னனசொல்லி அழுகின்றவள் தன்கணவனுடைய திருத்துஞ்சுமார்பம் தன்மார்போடு பொருந்தும்படி தழுவிக்கொண்டாளாக; எழுந்திருந்துநின்றவன், நிறைந்தமதிபோலும் ஒளி பொருந்திய முகம் கன்றியதேயென்று வாக்காற்சொல்லிக் கையாலே அவள் கண்ணீரை மாற்றினான்; மாற்றியபின்பு அவ்வாயிழையாள் ஏங்கியழுது நிலத்தின்கண்ணே வீழ்ந்து தன்கணவனுடைய தொழுந்தகையையுடைய திருந்திய அடியினை இரண்டு கையாலும் பூண்டுகொண்டாளாக; இப்பொல்லாதவுடம்பைக் கைவிட்டுச் சுவர்க்கம்புகுதற்கு எழுந்திருந்தவன் நீ இருக்கவென்று சொல்லி பல அமரர்குழாத்துள்ளானானென்க.

பழுது தீதென்ப உடம்புக்குப்பெயர்; "திருந்திய நின்மகன் றீது நீங்கினான்" (சீவக. 327, பா) என்றார்பிறரும். இனி முன்பே பழுதொழிந்தெழுந்திருந்தவன் அமரர்குழாத்துள்ளான்தழீஇக்கொள்ள

---

[1] "கோல்கோடி யவனிழல்" (கலித். 10 : 6)

எழுந்திருந்து நின்றவன் மாற்றப் பின் திருந்தடியைத் துணைவளைக் கையாற் பற்ற, உண்கண், இருந்தைக்கவெனப்போனுனெனக் கூட்டலு மொன்று. எழுந்திருந்தான் குழாத்துள்ளான் நின்றுனென்னும் பெயர் கள் அடுக்கி வந்து போனுனென்னும் பயனிலைகொண்டுமுடிந்தன.

## 68 - 71. மாயங்கொல்...திறங்கேட்பல் யானென்றுள்

(இ - ள்.) இங்ஙனம் எழுந்திருந்து நின்றது மாயமோதான்? அஃதன்றுயிற் பின்னை யாதுதான்? என்மனத்தை மருட்டியதொரு தெய்வமோதான்; ஒன்றையுந்தெளிகின்றிலேன்; ஆதலால் எங்கும் போயாராய்ந்து கூடுவேன்; அங்ஙனங்கூடுதல் எளிதாயினும் எனது மிக்க சினம் தணிந்தாலன்றிக் கூடேன்; இச்சினம் தணிதற்கு அக் கொடிய வேந்தனை யான் சென்று கண்டு என் கணவனைக் கொன்ற இத்தீத்திறம் யாதென்று கேட்பேனென்று தன்னெஞ்சொடு கூறினு ளென்க.

தெய்வங்கொலென்றுள்; இரு துணியாகிய உடல் கூடி ஒருயிர் பெற்று நின்றமைபற்றி. பொருளுரை யன்றென்றுள்; தன்பின் போதாமைபற்றி. கேட்பல் யானென்றுள்; நாணழி பூசல்செயத் துணிந்து.

## 72 - 5. என்று ளெழுந்தாள்...கோயில் வாயின்முன்

(இ - ள்.) இங்ஙனஞ் சொன்னவள் ஆண்டுப்போதற்கெழுந்தாள்; எழுந்தவள் தன்னூரிற்கண்ட தீக்கனவை நின்று நினைந்தாள்; நினைந்தவள் கண் நீர் சோர்தலால் தான் செல்லும் வழி காண்டற்காக அந்நெடிய கயல்போலுங் கண்கள் சொரியும் புனலைத் துடைத்து அரச னுடைய வளவிய கோயில் வாயிலிடத்தே சென்றுளென்க.

என்றுளென்னும் எழுவாய்க்குச் சென்றுளென்பதனைப் பயனிலை யாக்குக.

**இஃது அயன்மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.**

(கக) ஊர்சூழ்வரி முற்றிற்று.

இருபதாவது

# [1]வழக்குரை காதை

ஆங்குக்
குடையொடு கோல்வீழ நின்று நடுங்கும்
†கடைமணி யின்குரல் காண்பென்கா ணெல்லா
திசையிரு நான்கு மதிர்ந்திடு மன்றிக்
கதிரை யிருள்விழுங்கக் காண்பென்கா ணெல்லா
இடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழும்
கடுங்கதிர் மீனிவை காண்பென்கா ‡ணெல்லா
கருப்பம்
செங்கோலும் வெண்குடையும்
செறிநிலத்து மறிந்து ¶வீழ்தரும்
நங்கோன்றன் கொற்றவாயில்
மணிநடுங்க நடுங்குமுள்ளம்
இரவுவில்லிடும் பகன்மீன்விழும்
இருநான்கு திசையுமதிர்ந்திடும்
வருவதோர் துன்பமுண்டு
மன்னவற்கியா §முரைத்துமென
ஆடியேந்தினர் கலனேந்தினர்
அவிர்ந்துவிளங்கு மணியிழையினர்

---

பெருந்தேவி செய்தி கூறுகின்ருர் :

3. காண்பென் - கனவிலே காண்பன். எல்லாவென்று பாண்டியன் தேவி தான் கருத்தாற் கண்ட கனவின் நிலையுரைக்கும்.

5. கதிரை விழுங்குகின்ற இருளைக் காண்பேன்.

6. கொடி வில் - ஒழுங்குபட்ட வில்.

7. கடுங்க்திர் மீன் - ஒளியின் மிகுதி கூறினர் ; கடுங்கதிர் - மிக்க அனலுமாம்.

9. செங்கோலும் குடையுமென்று அவற்றையே பின்னுங் கூறினள்...

11. இரவு வில்லிடும் ; பகல் மீன் விழும் ; இவற்றைக் காண்பேன்.

11 - 2. அதிர்ந்திடுமாதலால், வருவதோர் துன்பமுண்டென்க. யாமென்ருள். [2]தம்பிராட்டியாதலால் ; தன்பெருமிதந்தோன்ற.

13. ஆடி - கண்ணடி.

---

அடி. 2 : சிலப். 20 : 53. அடி, 3. எல்லா - தோழீ. அடி, 11. வில் - வான வில்.

[1] இக்காதை முதலிய பதினென்றற்கும் அடியார்க்கு நல்லாருரை கிடைக்கவில்லை. [2]அரசரைத் தம்பிரானென்றும் அரசர் தேவியைத் தம் பிராட்டிஎன்றும் வழங்கும்வழக்கம் மலைநாட்டில் இப்பொழுதும்உள்ளது.

(பி - ம்.) † 'கடைகணி' ‡ 'ணெல்லா செங்கோலும்' ¶ 'வீழுநங்' § 'முரைத்துமென்ருடி'

கோடியேந்தினர் பட்டேந்தினர்
கொழுந் †திரையலின் செப்பேந்தினர்
வண்ணமேந்தினர் சுண்ணமேந்தினர்
மான்மதத்தின் சாந்தேந்தினர்
கண்ணியேந்தினர் பிணையலேந்தினர்
கவரியேந்தினர் ‡தூபமேந்தினர்
$கூனுங்குறளு மூமுங்கூடிய
குறுந்தொழி §லிளைஞர் செறிந்து சூழ்தர
நரைவிரைஇய நறுங்கூந்தல
ருரைவிரைஇய பலர்வாழ்த்திட
¶ஈண்டுநீர் வையங்காக்கும்
பாண்டியன்பெருந் தேவிவாழ்கென
ஆயமுங் காவலுஞ்சென்
றடியீடு பரசியேத்தக்
கோப்பெருந் தேவி சென்றுதன்
தீக்கனாத் திறமுரைப்ப
அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன்
திருவீழ் மார்பிற் றென்னவர்கோவே; இப்பால்
வாயி லோயே வாயி லோயே

---

(13) அணியிழையினராகிய (17) குறுந்தொழிலிளைஞர் (16) ஏந்தினராய்ச் (17) செறிந்து சூழ்தர.
19. பெருந்தேவி, அண்மைவிளி.
(19) பெருந்தேவி, வாழ்கெனப் (18) பலர் வாழ்த்த (20) ஏத்தச் (21) சென்று உரைப்பவென்க.
(23) தேவியனுண்மையின், திரு விரும்பப்பட்ட மார்பு; திருக்கழிகிற மார்பென்றுமாம்.

---

அடி, 13 - 6. ஆடி முதலியன மங்கலப் பொருள்கள். அடி, 14. கோடி - புதிய ஆடை. திரையல் - வெற்றிலைச் சுருள்; 16 : 55. அடி, 15. வண்ணம் - சாந்துக்கலவை விசேடம். மான்மதம் - கஸ்தூரி. அடி, 17. கூனும்......இளைஞர் : இத்தொடர் அரண்மனையில் இருக்கத் தக்க பணியாட்களின் இலக்கணம் கூறிற்று.
அடி, 19. ஈண்டு நீர் வையம் : சிலப். 27 : 10. அடி, 20. ஆயம் - பெண்கள் கூட்டம். அடி, 22 - 3 : சிலப். 25 : 78 - 9. அடி, 23 : “திருவீழ் மார்பிற் றென்னவன்” (அகநா. 13 : 6). அடி, 24 : புறநா. 206 : 1.
அடி, 24. விளியேற்கும்பொழுது ஆனீறு......ஏகாரம் பெற்றுவந்தது; தொல். விளி. 12, ந; நன். மயிலை. 306. சங். 307, மேற்.
(பி - ம்.) † ‘திரையலஞ் செப்பேந்தினர் கண்ணி’ ‡ ‘சுண்ணமேந்தினர்’ $ ‘கூனு மூமுங் குறளுங்’ § ‘லிளையர் செறிந்து சூழ்வர’ ¶ ‘ஈண்டுநீ ருலகங்’

அறிவறை போகிய †பொறியறு நெஞ்சத்
திறைமுறை பிழைத்தோன் வாயி லோயே
இணையரிச் சிலம்பொன் றேந்திய கையள்
கணவனை யிழந்தாள் கடையகத் தாளென்
றறிவிப் பாயே ‡யறிவிப் பாயே, யென
வாயிலோன், வாழியெங் கொற்கை வேந்தே வாழி
தென்னம் பொருப்பிற் றலைவ வாழி
செழிய வாழி தென்னவ வாழி
பழியொடு படராப் பஞ்சவ வாழி
அடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீட மேறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள்
அறுவர்க் கிளைய நங்கை யிறைவனை
ஆடல்கண் டருளிய வணங்கு சூருடைக்
கானக முகந்த காளி தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்
செற்றனள் போலுஞ் செயிர்த்தனள் போலும்
பொற்றொழிற் சிலம்பொன் றேந்திய கையள்

---

25. அறிவு கீழற்றுப் போகிய. பொறியறு - புண்ணியமற்ற.

26. இறைமுறை - இராச நீதி.

30 - 33. வாழ்த்துப் பலவாயின; வணங்குந்தோறும் சொல்லுதலின் ("நீணில மன்ன போற்றி" (சீவக. 264) என்றாற்போல.

34 - 5. பசுந்துணிப் பிடர்த்தலை - மயிடன்றலை; மயிடம் - கடா. பிடர்த் தலையாகிய பீடம்; அதனைப் பீடமாக ஏறிய மடக்கொடியாகிய (36) கொற்றவை யென்க.

37. அறுவர்க்கிளைய நங்கை - சத்தமாதாக்களில் ஏழாவதிளையாள்; அவள் பிடாரி.

37 - 8 இறைவனை ஆடல்கண்டருளிய அணங்கு - பத்திரகாளி.

(37) நங்கை (38) அணங்கு (39) காளி, பெயர்.

40. அவர்களென்னலாம்; அவர்களில் அல்லள்.

41. செறுகை - முகக்கோட்டம். செயிர்க்கை - மனக்கோபம்.

அன்றி, செற்றனள்போலும் - மாற்சரியமுடையாள் போலும்; செயிர்த்தனள்போலும் - மிக்க கோபமுடையாள் போலு மென்றுமாம்.

---

அடி, 25: "அறைபோகு நெஞ்சுடையார்க்கு" (கலித். 67 : 21). அடி, 30 - 34. 'தன்னினும் மிக்கார்க்கு இன்னாதனவற்றைக் கூறுதற்கு முன் வாழ்த்துதல் மரபு' (சீவக. 264, ந.) அடி, 41. செறுகை, செயிர்க்கை : புறநா. 226 : 1.

(பி - ம்.) † 'பொறியறை' ‡ 'யறிவிப்பாயேவாயிலோன்'

கணவனை யிழந்தாள் கடையகத் தாளே,
கணவனை யிழந்தாள் †கடையகத் தாளே யென
வருக மற்றவட் டருக வீங்கென
வாயில் வந்து கோயில் காட்டக்
கோயின் மன்னனைக் குறுகினள் சென்றுழி
நீர்வார் ‡கண்ணை யெம்முன் வந்தோய்
யாரை யோநீ மடக்கொடி யோவெனத்
தேரா மன்ன செப்புவ துடையேன்
எள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் ¶டீர்த்தோ னன்றியும்

---

43 - 4. கணவனையிழந்தாளொருத்தியென்க.
(27) இணையாகிய அரிச்சிலம்பில் ஒன்றையேந்திய கையளாய்க் (44) கடையகத்தாளென்றுசொல்ல.
45. மற்றுவட்டருக-அவளைப் புகுதவிடுத; அழைப்பாயாக வென்றுமாம்.
48. நீர்வார்கண்ணை - நீர்வார்ந்த கண்ணையுடையாய்.
49. யாரை ; ஐ : இடைச்சொல்.

---

அடி, 47 : மணி. 22 : 12. அடி, 48 : “நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய” (குறுந். 22 : 1)

அடி, 52. புள் - புறா; அஃதுற்ற புன்கணைத் தீர்த்தோன் சிபி (சிலப். 23 : 58, 29 : அம்மானைவரி); “புள்ளுறு புன்கண் டீர்த்த (வெள்வேற், சினங்கெழு தானைச் செம்பியன் மருக”, “புறவி னல்லல் சொல்லிய கறையடி, யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக், கோனிறை துலாஅம் புக்கோன் மருக”, “கொடுஞ்சிறைக், கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇத், தன்னகம் புக்க குறுநடைப் புறவின், தபுதி யஞ்சிச் சீரை புக்க, வரையா வீகை யுரவோன் மருக”, “நீயே, புறவி னல்ல லன்றியும் பிறவும், பலவும் விடுத்தோன் மருகனை” (புறநா. 37, 39, 43, 46); “உடல் கலக்கற வரிந்து தசையிட்டு மொருவன், ஒருதுலைப்புறவொ டொக்க நிறை புக்க புகழும்” (கலிங்க. இராச. 93); “புக்கான், மறு னிறையென்று சரணடைந்த வஞ்சப், புறாநிறை புக்க புகழோன்” (இராசராச சோழனுலா, 5 - 6); “கொலையே றுடம்படையக் கொய்தாலு மெய்தாதீ, துலையேறி வீற்றிருந்த சோழன்” (குலோத்துங்க சோழனுலா, 17); “உலகறியக், காக்குஞ் சிறு புறவுக் காகக் களிகூர்ந்து, தூக்குந் துலைபுக்க தூயோனும்” (விக்கிரம சோழனுலா, 10 - 11); “புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை”, “இவர்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்”, “புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க, மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன்” (கம்ப. திருவவதார. 65, குலமுறை. 7, குப்பகருணன்வதை. 355); ‘என்பும் உரியராதல், தன்னகம் புக்க குறுநடைப் புறவின், தபுதி யஞ்சிச் சீரைபுக்கோன் முதலாயினார்கட் காண்க’ (குறள். 72, பரிமேல்.)

அடி, 47 : குறுகுதல் அணுகுதலென்னும் பொருளில் வரும் (தொல். முதற்சூத்திர விருத்தி, மேற்.)

(பி - ம்.) † ‘கடையகத்தாளே வருகமற்’ ‡ ‘கண்ணினை’ ¶ ‘கெடுத் தோனன்றியும்’

வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் †கடைமணி புகுநீர் நெஞ்சுசுடத் தான்றன்
அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் ‡புகாரென் பதியே யவ்வூர்
ஏசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் *மகனை யாகி
வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்
சூழ்கழன் §மன்ன நின்னகர்ப் புகுந்திங்
கென்காற் சிலம்புபகர்தல் வேண்டி நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதென் ¶பெயரேயெனப், பெண்ண
கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று [ணங்கே
வெள்வேற் கொற்றங் ||காணென வொள்ளிழை
நற்றிறம் படராக் கொற்கை வேந்தே

53. நடுங்க - அசைய. 54. கடைமணி - கண்மணிக்கடை.
56. புகார் எனக்குப்பதி. 58. மகனை ; ஐ : இடைச்சொல்.
58 - 9. செல்வத்துக்கு அவன் மகனுயிருக்கச் செய்தே செல்வம் வேண்டி. வாழ்தல் - சீவித்தல்.
65. வெள்வேற்கொற்றம் - இராசநீதி.
63 - 5. பெண்ணணங்கே, கள்வனைக்கோறல் வெள்வேற்கொற்றம்.
66. நற்றிறம்படரா - நல்ல கூற்றிற் செல்லாத.

அடி, 53 - 5 : "கறவைமுறை செய்தோன்", "கறவை முறை செய்த காவலன்" (சிலப். 23 : 58, 29 : அம்மானைவரி); "சால மறைத்தோம்பிச் சான்றவர் கைகரப்பக், காலை கழிந்ததன் பின்றையு-மேலைக், கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந்தான், முறைமைக்கு மூப்பிளமை யில்" (பழமொழி, 3); "ஒட்டி - அறவாழி மைந்தன்மே லூர்ந்தோன்" (இராசராச. 3); "மருளும் பசுவொன்றின் மம்மர் நோய் தீர, உருளுந் திருத்தே ருரவோன்" (குலோத்துங்க. 2); "மையல்கூர், சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரின், மைந்தனை யூர்ந்த மனுவோனும்" (விக்கிரம. 3 - 4); 'முட்டாமற் செலுத்திய வாறு : மகனை முறைசெய்தான்கண்ணும், தன்கை குறைத்தான் கண்ணும் காண்க' (குறள், 547, பரிமேல்.); "புகழுருவ நிறுத்த வைந்து பொறியுருவஞ் சரணடைந்த புறவுக் கீந்து, மகவிரதத் துருளியினேர் சுரபிதுயர் தணித்திடுவான் மகிழ்வுற் றூர்ந்தும், சகமுழுது மொருதனிக்கோல் செலுத்துமனு குலவேந்தர் தமிழ்ச்சோ ணாட்டில்" (அரிசமயதீபம், 8 : 1). அடி, 54 : "கடைமணியுகுநீர்" (மணி. 3 : 22). அடி, 57. பெருங்குடி - வணிகர் மரபு மூன்றினுள் ஒன்று ; சிலப். 2 : 76. அடி, 59. ஊழ்வினை துரப்ப ; இத்தொடர் "ஊழ்வினை உருத்து வந்தூட்டும்" (பதி. 57) என்ற நீதியை வலியுறுத்த ஆளப்பட்டது. அடி. 62 : பதி. 31.

(பி - ம்.) † 'கடையுகுநீர்' ‡ 'புகாரெம்பதியே', 'புகார் நகரப்பதி' * 'மகனே' § 'மன்னநின்னகர்ப் புகுந்தென்காற்' ¶ 'பெயரேபெண்' || 'கேளென'

†என்காற் பொற்சிலம்பு மணியுடை யரியே, யெனத்
தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே
‡தருகெனத் தந்து தான்முன் வைப்பக்
கண்ணகி யணிமணிக் காற்சிலம் புடைப்ப
மன்னவன் வாய்முதற் றெறித்தது \$மணியே, மணிகண்டு
தாழ்ந்த குடையன் றளர்ந்தசெங் கோலன்
பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
யானோ வரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் னுயுளென
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தன ணடுங்கிக்
கணவனை §யிழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்
றிணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி.

---

67. என்காற் பொற்சிலம்பின் அரி மாணிக்கம்; பொற்சிலம்புடைய அரியென்க.

68. செவ்வை நன்மொழி - செவ்விய வார்த்தை.

70. கொடுவருகவென அழைத்து; அவன் கள்ளனும்படியே செய்வானை வருகவென அழைத்தென்றுமாம்; தான் - அசை. தருகவென வாங்கித் தன்முன் வைப்ப - முத்துடையரியும் மணியுடையரியும் அறிவதாக வாங்கித் தன் முன்னே வைப்ப என்றுமாம்.

71. மணிக்கால் - மணியை இடத்திலேயுடைய; சிலம்பு - தட்டான் வாங்கிக் கள்ளப்படி செய்வார் கையிற்கொடுத்த பொற்சிலம்பு.

72. வாய்முதற் றெறித்தது மணியே-சிலம்பு தானே விண்டு மணி வாய்முதல் தெறித்ததென்க.

77. என்முதல் - என்னைத் தொடங்கி.

80. கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்றது - தந்தை தாய் முதலாயினோரை இழந்தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம்; இஃது அவ்வாறு வாக்கானும் சொல்லலாகாமையின், காட்டுவதில்லென்றாள்.

---

அடி, 74. "பொன்செய் கொல்லன்", "பொன்வினைக் கொல்லன்" (சிலப். பதி. 22, 16 : 110). அடி, 76. "மன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த, தென்புலங் காவலின்" (புறநா. 71 : 17 - 8).

(பி - ம்.) † 'என்காற் சிலம்பு மணியுடை யரியே, தேமொழி யுரைத்தனை' ‡ 'தருக வீங்கெனத் தந்துதம் முன்வைத்த, மணிக்காற் சிலம்பு புடைப்ப' \$ 'மணியேயது கண்டு' § 'யிழந்தாற்குக் காட்டுவதில்லென வினை'

**வெண்பா**

1. அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும்
பல்லவையோர் சொல்லும் †பழுதன்றே—பொல்லா
வடுவினையே செய்த வயவேந்தன் றேவி
கடுவினையேன் செய்வதூஉங் காண்.

2. காவி யுகுநீருங் கையிற் றனிச்சிலம்பும்
‡ஆவி குடிபோன வவ்வடிவும்—பாவியேன்
காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலுங் §கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான்.

3. மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையிற் றனிச்சிலம்புங் கண்ணீரும்—வையைக்கோன்
கண்டளவே தோற்றானக் காரிகைதன் சொற்செவியில்
உண்டளவே தோற்றா னுயிர்.

---

1. கடுவினையேன் - பாவத்தைப் பண்ணினேன். செய்வதூஉம் காணென்க.

இதில், இராசாத் துஞ்சின பின்பு கண்ணகி தன் கைச்சிலம்பைத் தேவி முன்னே யெறிந்தாள்.

(உ௦) வழக்குரை காதை முற்றிற்று.

---

---

1. சிலப். பதி. 55; நான்மணிக். 84; மூதுரை, 27.

2. கூடாயினான் - உயிர் பிரிந்து உடல் மாத்திரையாயினான்; கூடு - உடல்.

1. குவ்வுருபு பகைதொடர் பொருளில் வந்தது (நன். மயிலை. 297, மேற்.)

(பி - ம்.) † 'பழுதன்று நல்லாய்' ‡ 'ஆவி யுகக்காட்டுமவ்' § 'கண்டத்தக்'

## இருபத்தொன்றாவது

# வஞ்சினமாலை



[கற்புடைமங்கையர் எழுவர்]

கோவேந்தன் றேவி கொடுவினை யாட்டியேன்
யாவுந் தெரியா வியல்பினே னாயினும்
†முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
‡பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகா ணற்பகலே
வன்னி மரமு மடைப்பளியுஞ் சான்றாக
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள் பொன்னிக்
கரையின் மணற்பாவை நின்கணவ னாமென்
றுரைசெய்த மாதரொடும் போகா டிரைவந்
தழியாது சூழ்போக வாங்குந்தி நின்ற

---

1. கோவேந்தன்தேவி; விளி. கொடுவினையாட்டியேன், பேருமாம்.

2. யாவும் தெரியா இயல்பினே னாயினும் - ஒன்றுமறியாத தன்மையே னாயினும்.

4. காண்குறூஉம் பெற்றிய - காணலுறுந்தன்மைய. நற்பகலென்றது பிரகாசமான பகலென்பதனை.

9. சூழ்போக...சூழ்போதலால் உந்திக்கண்நின்ற; உந்திநின்ற - ஆற்றின் நடுவு குறையாம்படி நின்ற வென்றுமாம்.

---

அடி, 1 - 4: "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" (குறள், 319); "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" (கொன்றைவேந்தன்); "முற்பகல் செய்வினை பிற்பக லுறுநரின்" (பெருங். 1. 56 : 259)

அடி, 5-6. ஒரு கற்புடை மங்கைக்கு வன்னிமரம் முதலியன சான்று பகர்ந்தமை திருப்புறம்பயத்தும், திருமருகலிலும் இன்றும் கன்ன பரம்பரையில் வழங்குகின்றது; அந்நிகழ்ச்சியைப் புலப்படுத்தும் சின்னங்களும் அவ்விடங்களில் உள்ளன; திருப்புறம்பயத்துள்ள சிவலிங்கப் பெருமானுக்கு ஸ்ரீ சாட்சிநாதரென்பது திருநாமம்.

(பி - ம்.) † 'முன்பகல்' ‡ 'பின்பகல்......பெற்றியகா ணன்பகலே'

வரியா ரகலல்குன் மாத ருரைசான்ற
மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவி ரேளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாண் மன்னி

அடி, 11 - 5 : கரிகால் வளவன்மகள் - ஆதிமந்தியாரென்பார்; இப்பெயர் மந்தியெனவும் வழங்கும்; ஔவையார்க்குக் காலத்தால் இவர் முற்பட்டவர்; நல்லிசைப்புலமை வாய்ந்தோர். வஞ்சிக்கோன் - ஆட்டனத்தியென்பான்; இப்பெயர் அத்தியெனவும் வழங்கும். ஆதிமந்தியார் நீர்விழவொன்றில் கழாரென்னும்ஊரைச்சார்ந்த காவிரித்துறையில் கணவனுகிய அத்தியுடன் நீராடுகையில், அவனைக் காவிரி வெள்ளம் கவர்ந்து கொள்ள, இவர் அவனைக் காணுது பல இடத்தும் தேடித்தேடிச் சென்று கடற்கரையில் அரற்றிக்கொண்டு நிற்கையில், இவரது கற்பின் பெருமையால் கடல் அவனைக் கரைக்கு அணித்தான இடத்திற் கொணர்ந்து சேர்த்து நிறுத்திக்காட்ட இவருடைய துயரத்தை அறிந்தவளும்,அங்கே நீராடிக் கொண்டிருந்தவளுமாகிய மருதியென்பவள் கண்டு அவனை அழைத்துவந்து இவர்பாற் சேர்க்கப் புகழ்பெற்றனரென்பது பண்டைவரலாறு:—“மள்ளர் குழீஇய விழவி னானும், மகளிர் தழீஇய துணங்கை யானும், யாண்டுங் காணேன் மாண்டக் கோனை, யானுமோ ராடுகள மகளே யென்கைக், கோடீரிலங்குவளை நெகிழ்த்த, பீடுகெழு குருசிலுமோ ராடுகள மகனே” (குறுந். 31) என்னும் இவர் பாடலானும், “காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந், தாதி மந்தி போலப் பேதுற், றலந்தனெ னுழல்வேன் கொல்லோ”, “கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன், வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற், சுரியலம் பொருநனைக் கண்டி ரோவென, ஆதிமந்தி பேதுற் றினையச், சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும், அந்தண் காவிரி போலக், கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே”, “கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடு, மீட்டெழிற் பொலிந்த வேந்துகுவவு மொய்ம்பின், ஆட்ட னத்தி நலனயந் துரைஇத், தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின், மாதிரந் துழைஇ மதிமருண்டிட ருழந்த, ஆதி மந்தி காதலற் காட்டிப், படுகடல் புக்க பாடல் சால் சிறப்பின், மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்”, “அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக், கொடுங்குழை மகளிரி ஞெடுங்கிய விருக்கை, அறியாமையி னழிந்த நெஞ்சின், ஏற்றிய லெழினடைப் பொலிந்த முன்பிற், றோட்டிருஞ் சுரியன் மணந்த பித்தை, ஆட்ட னத்தியைக் காணீரோவென, நாட்டிடுநட்டி னூரி னூரிற், கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக், கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த, ஆதி மந்தி போல”, “ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக், கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத், தண்பதங்கொண்டு தவிர்ந்த வின்னிசை, ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக், கருங்கச் சியாத்த காண்பி னவ்வயிற், றரும்பொலம் பாண்டின் மணியொடு தெளிர்ப்பப், புனனயந்தாடு மத்தி யணிநயந்து, காவிரி கொண்டொளித் தாங்கு”, “மந்தி, பனிவார் கண்ணள் பலபுலந் துறையக், கடுந்திறலத்தி யாடணி நசைஇ, நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்கு” (அகநா. 45, 76, 222, 236, 376, 396); “மள்ளர்குழீஇய...களமகனே - இது, காதலற்கெடுத்த ஆதி மந்தியார்பாட்டு” என்பர்; தொல். அகத். 54, ந.

மணன்மலி பூங்கானல் †வருகலன்க ணோக்கிக்
கணவன்வரக் கல்லுருவ நீத்தா ‡ளிணையாய
மாற்றாள் குழவிவிழத் தன்குழவி யுங்கிணற்று [ருவன்
வீழ்த்தேற்றுக் கொண்டெடுத்த வேற்கண்ணாள் \$வேற்றொ
நீணோக்கங் கண்டு நிறைமதி வாண் §முகத்தைத்
தானோர் குரக்குமுக மாகென்று போன
கொழுநன் வரவே குரக்குமுக நீத்த
பழுமணி யல்குற்பூம் பாவை விழுமிய
பெண்ணறி வென்பது பேதைமைத்தே யென்றுரைத்த
நுண்ணறிவி னோர்நோக்க ||நோக்காதே யெண்ணிலேன்
வண்ட லயர்விடத் தியானோர் ¶மகட்பெற்றால்
ஒண்டொடி நீயோர் ††மகற்பெறிற் கொண்ட
கொழுந னவளுக்கென் ‡‡றியானுரைத்த மாற்றம்
கெழுமி யவளுரைப்பக் கேட்ட விழுமத்தாற்
சிந்தைநோய் கூருந் திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய் \$\$முந்தியோர்

20. நீணோக்கம் - விடாமற் பார்த்தல்.

23. பழுமணி - பழுத்த மணி; சிவந்த மணி; மாணிக்கம்.

29. கெழுமியவளென்றது, பிள்ளை தாயாகிய தன்தோழியை.

26 - 30. இளங்காலத்து விளையாட்டிற் சொன்ன வார்த்தையை அவன் மெய்யாகக் கொண்டு பேசக் கேட்ட விழுமத்தாலே நோய் கூரும்; இன்னும் யானுரைத்த மாற்றத்தைப் பொருந்தக் கேட்டவள் உரைப்பக் கேட்ட.........திருவிலேற்கெனினுமாம்; சிந்தை நோய் கூரும் : முற்று. என்றெடுத்து - பிரகாசிக்க........

31. முந்தி - தந்தைக்கும் தாய்க்கும் முற்பட்டு; கொடுப்பவும் அடுப்பவுமின்றித் தானே முற்பட்டென்றுமாம்.

அடி, 16 - 7. "மணன்மலி........கல்லுருவ நீத்தாள்" என்பதனால் குலமட மாதரொடு கலமிசைச்சேற லாகாமையறிக" (நம்பி. 85; இ - வி. 453, உரை)

அடி, 24. "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பே தைமைத்தே" (இறை. 23; நன். மயிலை. 264; சங். 265; இ - வி. 167); "நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னாலும், பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லால்" (திருவிளை. 45 : 34)

(பி - ம்.) † 'வருகல னோக்கிக்' ‡ 'ளிணையான' \$ 'வேற்றொரு நீணோக்கங்' § 'முகத்தானோர்' || 'நோக்காதவெண்ணிலென' ¶ 'மகப் பெற்றால்' †† 'மகப்பெறிற்' ‡‡ 'றியாயுரைத்த' \$\$ 'முந்தையோர்'

கோடிக் கலிங்க முடுத்துக் குழல்கட்டி
நீடித் தலையை வணங்கித் தலைசுமந்த
ஆடகப்பூம் பாவையவள் †போல்வார் நீடிய
மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்
பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டே னரசோ டொழிப்பேன் மதுரையுமென்
பட்டிமையுங் காண்குறுவாய் நீயென்று விட்டகலா
நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்
வானக் கடவுளரு மாதவருங் ‡கேட்டீமின்

---

33. நீடித் தலையை வணங்கி - விடாமே நெடிதாகத் தலையை வணங்கி; நீடித் தலைசுமந்தவெனக் கூட்டி, விடாமல் தலையாற் சுமந்த வென்றலுமாம்.
36. பட்டாங்காகில் - உண்மையாகில்.
37. ஒட்டேன் - இசையேன்; ஒட்டேனென்பதற்கு இனிதிருக்க வென வருவிக்க. அரசனோடு மதுரையையும் அழிப்பேன்.
38. பட்டிமை - படிறு.
40. வானக்கடவுளர் - தேவமுனிவர்கள்; "சுடரொடு திரிதரு முனிவரும்" [12 : (18)] என்றுராதலால். இன்னும் வானக்கடவுளர் வெளிப்படையுமாம். மாதவர் : இங்குள்ளோர்.

---

அடி, 5 - 35. இவ்வடிகளிற் கூறப்பெற்றுள்ள கற்புடைப் பெண்டிர் எழுவருடைய வரலாற்றைப் **பட்டினத்துப் பிள்ளையார் புராணத்துப்** பூம்புகார்ச் சருக்கத்துப் பாடல்களும் ஒருவாறு தெரிவிக்கின்றன; அவை வருமாறு :—

1. கரிகாலன் பெருவளவன் மகள்கேள்வன் கடல்புக்கான்
திருவேயோ வெனவழைத்துத் திரைக்கரத்தாற் றரக்கொண்டாள்
வரைகேள்வன் கலநோக்கி வருமளவுங் கல்லானுள்
புரைதீரப் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.
2. வன்னிமடைப் பளியோடு சான்றாக வரவழைத்தாள்
பன்னியகா விரிமணல்வாய்ப் பாவையைநுன் கேள்வனெனும்
கன்னியர்க ளொடும்போகா டிரைகரையா வகைகாத்தாள்
பொன்னனையாள் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.
3. கூவலிற்போய் மாற்றாள் குழவிவிழத் தன்குழவி
ஆவலின்வீழ்த் தேற்றெடுத்தா ளயனேக்கம் வேறென்று
மேவினுள் குரக்குமுகம் வீடுடையோன் வரவிடுத்தாள்
பூவின்மேற் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.
4. முற்றாத முலையிருவர் முத்துவண்ட லயர்விடத்துப்
பெற்றாற்று மாண்பெண் பிறர்மணஞ்செய் யாவண்ணம்
சொற்றார்கள் பிறந்தபெண் ணுயகனைத் தலைசுமந்தாள்
பொற்றாலி பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

அடி, 39. நான்மாடங்களாவன : திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; கன்னி, கரியமால், காளி, ஆலவாயென் பனவுமாம் (கலித். 92, ந.); "கன்னிதிரு மால்காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" (திருவால. பயன், 5)

(பி - ம்.) † 'போல்வாணீடிய' ‡ 'கேட்டீர்மின்'

யானமர் காதலன் றன்னைத் தவறிழைத்த
† கோநகர் சீறினேன் குற்றமிலேன் யானென்
றிடமுலை கையாற் றிருகி மதுரை
வலமுறை மும்முறை ‡வாரா வலமந்து
மட்டார் மறுகின் *மணிமுலையை வட்டித்து
§விட்டா ளெறிந்தாள் விளங்கிழையாள் வட்டித்த
நீல ||நிறத்துத் திரிசெக்கர் வார்சடைப்
பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலத்து
மாலை ¶யெரியங்கி வானவன் றான்றோன்றி
†† மாபத் தினிநின்னை மாணப் பிழைத்தநாள்
பாயெரி யிந்தப் பதியூட்டப் பண்டேயோர்
ஏவ ‡‡லுடையேனா லியார்பிழைப்பா ரீங்கென்னப்
பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்

---

43. கையால் திருகி - வலக்கையால் திருகி.

45. வட்டித்து - பிரதிக்கினைபண்ணி; சுழற்றியென்றுமாம்; வர்த்தனை வட்டணையா......யிற்று.

46. விட்டாளெறிந்தாள் - விட்டெறிந்தாள்.

47. திரிசடை - திரித்த சடை; திரித்தல் - முறுக்கல்.

49. மாலை - ஒழுங்கு.

(46) வட்டித்ததனால் வந்த (49) வானவன்; இன்னும் வட்டித்த - எழுதினாலொத்தவென்றுமாம்.

50. மாண - திண்ணிதாக.

52. உடையேனால் - உடையேனாதலால். யார் பிழைப்பார் - யார் தப்புவார்.

---

அடி, 43 : மணி. 2 : 52-3. அடி, 44 : மணி. 9 : 5. அடி, 53-5 : 'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார், மூத்தா ரிளையார் பசுப் பெண்டிர்'' (ஆசாரக். 65)

அடி, 53-5. திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிந்தது (தொல். கிளவி. 51, ந.; நன். மயிலை. 377; இ - வி. 298, மேற்.)

(பி - ம்.) † 'கோனவற்குற்றமிலெனியானென்று' ‡ 'வாராவலம் வந்து' * 'வனமுலை' § 'விட்டெறிந்தாளந்த' || 'நிறத்து நிமிர்செக்கர்' ¶ 'யெரியாகி' †† 'மாபத்தினியுன்னை' ‡‡ 'லுடையேன்மற்றியார்'

தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று †காய்த்திய
பொற்றொடி யேவப் புகை ‡யழன் மண்டிற்றே
நற்றேரான் கூட னகர்.

### வெண்பா

[1] பொற்பு வழுதியுந்தன் பூவையரு மாளிகையும்
விற்பொலியுஞ் சேனையுமா வேழமுங்—கற்புண்ணத்
தீத்தரு வெங்கூடற் றெய்வக் கடவுளரும்
மாத்துவத் தான்மறைந்தார் மற்று.

---

55. காய்த்திய - சுடவேண்டி; கோவித்தவென்றுமாம்.

56. ஏவ...........................................................

(உக) வஞ்சினமாலை முற்றிற்று.

---

[1] இவ்வெண்பா சில ஏட்டுப்பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) † 'காய்த் தீயைப்' ‡ 'யழற்பொங்கிற்றே'

## இருபத்திரண்டாவது

# அழற்படு காதை



ஏவற் றெய்வத் தெரிமுகந் †திறந்தது
காவற் றெய்வங் கடைமுக மடைத்தன
அரைசர் பெருமா னடுபோர்ச் செழியன்
வளைகோ லிழுக்கத் துயிராணி கொடுத்தாங்
கிருநில மடந்தைக்குச் செங்கோல் ‡காட்டப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுடன்
அரைசு கட்டிலிற் றுஞ்சிய ¶தறியா
தாசான் பெருங்கணி யறக்களத் தந்தணர்
காவிதி §மந்திரக் கணக்கர் தம்மொடு
கோயின் மாக்களுங் குறுந்தொடி மகளிரும்
§§ஓவியச் சுற்றத் துரையவிந் திருப்பக்
காழோர் வாதுவர் கடுந்தே ரூருநர்
வாய்வாண் மறவர் மயங்கினர் மலிந்து
கோமகன் கோயிற் கொற்ற வாயில்

---

1. ஏவற்றெய்வம் - அங்கி; அக்கினியுடைய எரியின்கூறு பிரகாசித்தது; அங்கி அடக்கம் நீங்கி வெளிப்பட்டதென்றுமாம்.

2. காவற்றெய்வம் - நகரிகாவற்றெய்வமாகிய நான்கு வருணப் பூதங்கள். கடைமுகமடைத்தன - கோட்டைவாயிலை நோக்குவதொழிந்தன; நகரிகாவற்றெய்வங்கள் கோட்டைவாயில்களைக் காவாவாயின வென்றுமாம்.

4. வளைகோல் - வளைந்த கோல். இழுக்கத்து - இழுக்கத்தையுற்ற அவ்வளவிலே. உயிராகிய ஆணி - ஆதாரம். ஆங்கு - அவ்விடத்து.

7. அரசுகட்டில் - சிங்காதனம். துஞ்சியதறியாது - செழியன் துஞ்சியதை அறியாமல்.

8. ஆசான் - புரோகிதன். பெருங்கணி - கணிதவிவர்த்தகன். அறக்களத்தந்தணர் - தன்மாசனத்துக் கருத்தாக்கள்.

9. காவிதி - வரியிலார். மந்திரக்கணக்கர் - மந்திரவோலை எழுதுவார்.

11. ஓவியச்சுற்றத்து - சித்திரத் திரள்போல.

12. காழோர் - பரிக்காரர். வாதுவர் - வாசிவாரியர்.

---

அடி, 4 - 5. வினையால் வளைந்த கோலைப் பாண்டியனது உயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது; சிலப். 25 : 98 - 9. அடி, 7 : "அரசு கட்டிலிற்றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்" (மதுரைக்காண்ட இறுதிக் கட்டுரை.)

(பி - ம்.) † 'திறந்தன' ‡ 'காட்டிப்' ¶ 'தறியாராசான்' § 'மந்திரிக்' §§ 'ஓவியர்'

தீமுகங் கண்டு தாம்விடை கொள்ள
[1][நித்திலப் பைம்பூ ணிலாத்திக ழவிரொளித்
தண்கதிர் மதியத் தன்ன மேனியன்
ஒண்கதிர் நித்திலம் பூணொடு புனைந்து
வெண்ணிறத் தாமரை யறுகை நந்தியென்
றின்னவை முடித்த நன்னிறச் சென்னியன்
நுரையென விரிந்த நுண்பூங் கலிங்கம்
புலரா துடுத்த வுடையினன் மலரா
வட்டிகை விளம்பொரி வன்னிகைச் சந்தனம்
கொட்டமோ டரைத்துக் கொண்ட மார்பினன்
தேனும் பாலுங் கட்டியும் பெட்பச்
சேர்வன பெறாஉந் தீம்புகை மடையினன்
தீர்த்தக் கரையுந் தேவர் கோட்டமும்
ஓத்தின் சாலையு மொருங்குட னின்று
பின்பகற் பொழுதிற் பேணின னூர்வோன்
நன்பகல் வரவடி யூன்றிய காலினன்
விரிகுடை தண்டே குண்டிகை காட்டம்
பிரியாத் தருப்பை பிடித்த கையினன்
நாவினு மார்பினு நவின்ற நூலினன்]
முத்தீ வாழ்க்கை முறைமையின் வழாஅ
வேத முதல்வன் வேள்விக் கருவியோ
டாதிப் பூதத் ததிபதிக் கடவுளும்

15. விடைகொள்ள - அரசனை உட்கொண்டு நீங்க; அன்றி, மிடைகொள்ள - நெருப்பவித்தற்கு வந்து மிடையவென்றுமாம்.

(16) "நித்திலப்பைம்பூண்" முதலாகப் (36) "பூதத் ததிபதிக் கடவுள்" ஈறாகப் பிராமண பூதத்தைக் கூறிற்று; அப்பூதத்துக்கு நிறம் வெள்ளை.

35. வேதமுதல்வன் - பிரமன். கருவி - சமிதை முதலாயின.

34 - 6. பிரமன் வேள்விக்குச் சொன்ன உறுப்புக்களோடு முத்தீ வாழ்க்கை முறைமையின் வழுவாத ஆதிப்பூதக் கடவுளும்.

(35) கருவியோடு (34) முறைமையின் வழுவாவெனக் கூட்டுக.

(16) நித்திலக்கோவை நிலாவொளிபோலத் திகழ்கின்ற (36) ஆதிப்பூதம்; (34) முத்தீ வாழ்க்கை வழுவாத (36) ஆதிப்பூதம்.

[1] [ ] இந்த அடையாளத்துக்கு உட்பட்ட பகுதிகள் சில பிரதிகளில் இல்லை.

அடி, 21. ஆடைக்கு நுரை: "தீம்பா னுரைபோற் றிகழ்வெண்பட்டுடுத்து" (சீவக. 3046); "நுரைபுரை கலிங்கம்" (பெருங். 2. 5 : 86)

அடி, 24. கொட்டம் - ஐவகை வாசனைப் பொருள்களில் ஒன்று; சிலப். 5 : 14, உரை.

அடி, 31-2: "தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப், படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (குறுந். 156 : 3 - 4); "எறித்தரு கதிர் தாங்கி யேந்திய குடைநீழல், உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்" (கலித். 9 : 1-2)

அடி, 33: மார்பின் நவின்ற நூல் - பூணூல்.

[வென்றி வெங்கதிர் புரையு மேனியன்
குன்று †மணிபுனை பூணினன் பூணொடு
முடிமுதற் கலன்கள் பூண்டனன் முடியொடு
சண்பகங் கருவிளை செங்கூ தாளம்
தண்கமழ் பூநீர்ச் சாதியோ டினையவை
கட்டுங் கண்ணியுந் தொடுத்த மாலையும்
ஒட்டிய திரணையோ டொசிந்த பூவினன்
அங்குலி கையெறிந் தஞ்சுமகன் விரித்த
குங்கும வருணங் கொண்ட மார்பினன்
பொங்கொளி யரத்தப் பூம்பட் டுடையினன்
முகிழ்த்தகைச்
சாலி யயினி பொற்கலத் தேந்தி
ஏலு நற்சுவை யியல்புளிக் கொணர்ந்து
வெம்மையிற் கொள்ளு மடையினன் செம்மையிற்]
பவளச் செஞ்சுடர் திகழொளி மேனியன்
ஆழ்கடன் ஞால மாள்வோன் றன்னின்
முரைசொடு வெண்குடை கவரி நெடுங்கொடி
உரைசா லங்குசம் வடிவேல் ‡வடிகயி
றெனவிவை பிடித்த கையின னாகி
எண்ணருஞ் சிறப்பின் மன்னரை யோட்டி
மண்ணகங் கொண்டு செங்கோ லோச்சிக்
கொடுந்தொழில் கடிந்து கொற்றங் கொண்டு
¶நடும்புகழ் வளர்த்து நானிலம் புரக்கும்

(51) 'பவளச் செஞ்சுடர்' முதலாக (16) 'அருந்திறற் கடவுள்' ஈறாக அரசபூதத்தைக் கூறிற்று. அப்பூதத்துக்கு நிறம் பவளம்.

52. ஆள்வோன் - அருச்சுனன்.

54. வடிக்கை - புரவியை வசமாக்குகை.

53 - 5. முரசு முதலானவேழும் இராசாக்களுக்கும் இப்பூதத்திற்கும் உரியன. 56. மன்னர் - துரியோதனாதிகள்.

(52) இவனிடத்துச் சாரதியாய் நின்று (53) முரசு முதலாகிய (55) பிடித்த கையினனாகி (56) மன்னரையோட்டி (57) ஓச்சிக் (58) கடிந்து கொற்றங்கொண்டு (59) புரக்கும் (60) உரையமைந்த சிறப்பையுடைய நெடியோனை யொத்த கடவுட் பூதமென்க. இவற்றால் உலகளந்தோனை ஒத்த பூதமென்க.

[இன்னும் பாண்டியனுடைய கையினிலக்கணம் பூதத்துக்கும் பிடித்தன. ஏனைய இருவர்க்கும் ஒத்த பண்பென்றுமாம்.]

51 - 61. பவள......அருந்திறற் கடவுளும் - பவள வொளி திகழ்தரு மேனியையுடைய அரச பூதமாகிய கடவுளும்.

அடி, 48. சாலி அயினி - நெல்லுணவு.

(பி-ம்.) † 'மணியொடுபுனைந்த பூணினன்' ‡ 'வடிக்கயி' ¶ 'நெடும்புகழ்'

உரைசால் சிறப்பி னெடியோ னன்ன
அரைச பூதத் தருந்திறற் கடவுளும்
†செந்நிறப் பசும்பொன் புரையு ‡மேனியன்
மன்னிய சிறப்பின் மறவேன் மன்னவர்
அரைசுமுடி யொழிய வமைத்த பூணினன்
வாணிக மரபி னீணில மோம்பி
நாஞ்சிலுந் துலாமு மேந்திய கையினன்
[உரைசால் பொன்னிறங் கொண்ட வுடையினன்
வெட்சி தாழை கட்கம ழாம்பல்
சேட னெய்தல் பூளை மருதம்
கூட முடித்த சென்னிய னீடொளிப்
பொன்னென விரிந்த நன்னிறச் சாந்தம்
தன்னொடு புனைந்த மின்னிற மார்பினன்
கொள்ளும் பயறுந் துவரையு முழுந்தும்
நள்ளியம் பலவு நயந்துட னளைஇக்
கொள்ளெனக் கொள்ளு மடையினன் புடைதரு
நெல்லுடைக் களனே புள்ளுடைக் கழனி
வாணிகப் பீடிகை நீணிழற் காஞ்சிப்
பாணிகைக் கொண்டு முற்பகற் பொழுதின்
உண்மகிழ்ந் துண்ணு வோனே யவனே
நாஞ்சிலம் படையும் வாய்ந்துறை துலாமுன்
சூழொளித் தாலு மியாழு மேந்தி
விளைந்துபத மிகுந்து விருந்துபதந் தந்து
மலையவுங் கடலவு மரும்பலங் கொணர்ந்து
விலைய வாக வேண்டுநர்க் களித்தாங்]
குழவுதொழி லுதவும் ¶பழுதில் வாழ்க்கைக்

(62) 'செந்நிறப் பசும்பொன்' முதலாக (88) 'வியன்பெருங் கடவுள்' ஈறாக வணிக பூதத்தைக் கூறிற்று. அப்பூதத்துக்கு நிறம் பொன்.

64. பூணினன் - பூணினனாய்.

65. மரபின் - மரபால். 66. துலாம் - துலாக்கோல்.

(62) பொன்புரையு மேனிக் (88) கடவுள்

(66) நாஞ்சிலும் துலாக்கோலுமேந்திய கையினனாய்

(85) வாழ்க்கைக்கு

அடி, 60, உரைசால்சிறப்பினெடியோன் : கலித். 103 : 76. நெடியோன் : மதுரைக். 61; பதிற். 15 : 39; புறநா. 9 : 10.

அடி, 64 : பெருங். 2, 2 : 159. அடி, 77. பீடிகை - கடை.

(பி-ம்.) † 'செந்நீர்ப்' ‡ 'மேனி' ¶ 'பழுதில்லாடகக்கிழவன்'

கிழவ னென்போன் கிளரொளிச் †சென்னியின்
இளம்பிறை சூடிய விறையவன் வடிவினேர்
விளங்கொளிப் பூத வியன்பெருங் கடவுளும்
[கருவிளை புரையு மேனிய னரியொடு
வெள்ளி புனைந்த பூணினன் றெள்ளொளிக்
காழகஞ் செறிந்த வுடையினன் காழகிற்
சாந்துபுலர்ந் தகன்ற மார்பின னேந்திய
கோட்டினுங் கொடியினு நீரினு நிலத்தினும்
காட்டிய பூவிற் கலந்த பித்தையன்
கம்மியர் செய்வினைக் கலப்பை யேந்திச்
செம்மையின் வரூஉஞ் சிறப்புப் பொருந்தி]
மண்ணுறு திருமணி புரையு மேனியன்
ஒண்ணிறக் காழகஞ் சேர்ந்த வுடையினன்
ஆடற் கமைந்த வவற்றொடு பொருந்திப்
பாடற் கமைந்த பலதுறை போகிக்
கலிகெழு கூடற் பலிபெறு பூதத்
தலைவ னென்போன் றானுந் தோன்றிக்
கோமுறை பிழைத்த நாளி லிந்நகர்
தீமுறை யுண்பதோர் திறனுண் ‡டென்ப
தாமுறை யாக வறிந்தன மாதலின்
யாமுறை போவ தியல்பன் றோவெனக்
கொங்கை குறித்த கொற்ற நங்கைமுன்
நாற்பாற் பூதமும் பாற்பாற் பெயரக்
கூல மறுகுங் கொடித்தேர் வீதியும்

---

(86) உரியோனென்று சொல்லப்படுவோனாகிய (88) பூதக்கடவுளுமென்க.

(97) 'மண்ணுறுதிருமணி' முதலாகப் (101 - 2) 'பலிபெறுபூதத் தலைவன்' ஈறாக வேளாண்பூதத்தைக் கூறிற்று; அதற்கு நிறம் நீலம்.

97. திருமணி - நீலமணி. 99. ஆடற்கமைந்தவை - வாச்சியம்.

100. துறைபோகல் - முடியவறிதல்.

(100) முடியப்போகிப் (101) பலிபெறு பூதமென்க.

36 - 102. இந்நால்வரும் தோன்றி.

104. தீமுறையுண்பது - நெருப்பு நியாயமாகவுண்பது.

105. ஆமுறையாக - ஆவதொரு நியாயமாக; இன்னும், ஆமுறை யாக அறிந்தனம் - மேல் வரக்கடவதொரு விதியென்று முன்னே யறிந்தேம்.

---

அடி, 93-4: நால்வகைப் பூக்கள். அடி, 97: புறநா. 56: 5.

அடி, 109: சிலப். 14: 211.

(பி - ம்.) † 'சென்னியன்' ‡ 'டென்ப, தியாமுறை யாக வறிந்தன மன்றே, நாற்பாற்'

†பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும்
[உரக்குரங் குயர்த்த வொண்சிலை யுரவோன்]
காவெரி யூட்டிய நாள்போற் ‡கலங்க
அறவோர் மருங்கி னழற்கொடி விடாது
மறவோர் சேரி மயங்கெரி மண்டக்
கறவையுங் கன்றுங் கனலெரி சேரா
அறவை யாய ரகன்றெரு வடைந்தன
மறவெங் களிறு மடப்பிடி நிரைகளும்
விரைபரிக் குதிரையும் புறமதிற் பெயர்ந்தன
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை
மைத்தடங் கண்ணார் மைந்தர் தம்முடன்
செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை
நறுமல ரவிழ்ந்த நாறிரு ¶முச்சித்
துறுமலர்ப் பிணையல் சொரிந்த பூந்துகள்
குங்கும மெழுதிய கொங்கை முன்றிற்
பைங்கா ழாரம் பரிந்தன பரந்த
தூமென் சேக்கைத் §துனிப்பதம் பாராக்
காமக் கள்ளாட் டடங்கினர் மயங்கத்
திதலை யல்குற் றேங்கமழ் குழலியர்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வரொடு

110. நால்வேறுதெரு - நால்வகை வருணத்தார் தெரு.
112. கா - காண்டாவனம்.
113. அறவோரிடத்து அழற்கொடி விடாதாய்.
116. அறவை - அறத்தையுடைய.
115-6. கனலெரி சேராவாய் ஆயர்தெருவில் அடைந்தன.
121. செப்பு வாய்திறந்து சொரிந்த விரை - சாந்து, புழுகுநெய் முதலாயின.
121-3. செப்பிலே வாய் அவிழ்ந்த பிணையலெனக்கூட்டி, நறு விரையையுடைய பிணையல், முச்சிப் பிணையலென்றுமாம். நறுமலரவிழ்தல், முச்சிக்கடை. 126. துனியின் செவ்வி பார்க்கவேண்டாத; துனியளவு விட்டிராத வென்றுமாம்; இவர் பிள்ளை பெருதவர்.
125-6. பரிந்தன பரந்த சேக்கை - கையற்றுப் பரந்த சேக்கை.
127. அடங்கினர் மயங்க - ஒழிந்து சோர.

அடி, 110 : சிலப். 14 : 212.
அடி, 112 : சிறுபாண். 238. 116. அறவையாயர் : சிலப். 15 : 120-21.
அடி, 121. செப்பு - மலரும் அரும்புகள் வைத்திருக்கும் பூஞ் செப்பு ; மதுரைக். 421 : 3 ; நற். 337 : 6 ; குறுந். 9 : 2 ; மணி. 4 : 65 ; சூளா. மந்திர. 56 ; பெருங். 1. 33.: 76 ; கலித். 68 : 15.
அடி, 127. " தருக்கிய காமக்கள்ளாட்டு " (மணி. 25 : 91)
அடி, 129 : மணி. 7 : 57.
(பி - ம்.) † 'பால்வகை தெரிந்த நால்வேறு தெருவுங், காவெரி யுண்ட நாட்' ‡ 'கலங்கி' ¶ 'முச்சிப்புதுமலர்' § 'துனிபதங் காமக், கடவுள்கள்'

†பஞ்சியா ரமளியிற் றுஞ்சுதுயி லெடுப்பி
வானரைக் கூந்தன் மகளிரொடு ‡போத
வருவிருந் தோம்பி மனையற முட்டாப்
பெருமனைக் கிழத்தியர் பெருமகிழ் வெய்தி
இலங்குபூண் மார்பிற் கணவனை யிழந்து
சிலம்பின் வென்ற சேயிழை நங்கை
கொங்கைப் பூசல் கொடிதோ ¶வன்றெனப்
பொங்கெரி வானவற் றொழுதன ரேத்தினர்
எண்ணென் கிரட்டி யிருங்கலை பயின்ற
பண்ணியன் மடந்தையர் பயங்கெழு வீதித்
தண்ணுமை முழவந் தாழ்தரு தீங்குழல்
பண்ணுக்கிளை பயிரும் §பண்ணியாழ்ப் பாணியொடு
நாடக மடந்தைய ராடரங் கிழந்தாங்
கெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
இந்நாட் டிவ்வூ ரிறைவனை யிழந்து
தேரா மன்னனைச் சிலம்பின் வென்றிவ்
வூர்தீ யூட்டிய வொருமக $ளென்ன
அந்தி விழவு மாரண வோதையும்
செந்தீ ††வேட்டலுந் தெய்வம் பரவலும்
மனைவிளக் குறுத்தலு மாலை யயர்தலும்
வழங்குகுரன் முரசமு மடிந்த மாநகர்க்
காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன்
றூதுலைக் குருகி னுயிர்த்தன ளுயிர்த்து
மறுகிடை மறுகுங் கவலையிற் ‡‡கவலும்

136. கொடிதன்று - நியாயம்.
139. பண்ணியன் மடந்தையர் - இசையறிவார்.
142. நாடகமடந்தையர் - தளியிலார்.
(139) வீதியிடத்து (142) அரங்கிழந்து.
147. அந்திவிழவு - சீபலி.
148. தெய்வம்பரவல் - தெய்வபூசனை.
153. மறுகிடை மறுகும் - மறுகிலே சுழன்று திரியும். கவலை - குறுந்தெரு. கவலும்.........போம்.

அடி, 132 : குறள், 86. அடி, 138 : "எண்ணெண்கலையோர்" (சிலப். 14 : 167); சீவக. 2107 ; மணி. 2 : 29 ; "யாழ்முத லாக வறுபத் தொருநான்' கேரிள மகளிர்க் கியற்கை" (பெருங். 1. 35 : 84-5)
அடி, 141 : மணி. 7 : 46. அடி, 152 : சிலப். 13 : 45 ; "ஊதுலைக் குருகு னுயிர்த்தகத் தடங்காது" (மணி. 2 : 43)
(பி - ம்.) † 'பாலாரமளித்,' 'பல்லாரமளித்' ‡ 'மயங்க' ¶ 'வின்றெனப்' § 'பணையாழ்ப்பாணரொடு' $ 'ளெனவுமந்தி' †† 'வேட்கையின்' ‡‡ 'கவலையும்'

இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும்
ஆரஞ ருற்ற வீரபத் தினிமுன்
கொந்தழல் வெம்மைக் கூரெரி †பொருஅள்
வந்து தோன்றினண் மதுரா பதியென்.

வெண்பா

[1] மாமகளு நாமகளு மாமயிடற் செற்றுகந்த
கோமகளுந் தாம்படைத்த கொற்றத்தாள்—நாம
முதிரா முலைகுறைத்தாண் முன்னரே வந்தாள்
[2] மதுரா பதியென்னு ‡மாது.

---

(139) விலைமடந்தையரது வீதியில் (142) மடந்தையர் (140) தண்ணுமை முழவு குழல் (141) யாழ்ப்பாணி இவற்றுடனே (142) ஆடும் அரங்கினை இழந்து (146) இவ்வொரு மகள் (143) எந்நாட்டாள்கொல்? யார்மகள் கொல்? (146) என்ன (150) நகரியிலே (154) இயங்குதலையுஞ் செய்யும்; மயங்குதலையுஞ் செய்யும்; இவ்வகை (155) ஆரஞருற்ற வீரபத்தினிமுன் (156) ஊர் எரியுண்டதற்குப் பொருளாய் (157) வந்து தோற்றினள், மதுராபதியென்னும் தேவதையென்க.

வெண்பா :—தாம் படைத்த கொற்றத்தாள் - இவர்கள் படைத்த கொன்றமெல்லாமுடையாள்; "நாவினுந்...வாளினும்" என்ற மூவகை வென்றியும்; மாமகள் - சீதேவி. நாமமுலை - அச்சத்தைச் செய்யும் முலை.

(உஉ) அழற்படு காதை முற்றிற்று.

---

அடி, 154: "சுழலலுஞ் சுழலு மோடலு மோடும்" (மணி 3. : 111-2)

அடி, 155, மு : சிலப். பதி. 42.

[1] இச்செய்யுளிலுள்ள முறைப்படியே, "திருவின் செல்வி யொரு தனிக் கொழுந, புலமை சான்ற கலைமகள் கணவ, வீரிய மடந்தை பேரிசைக் கிழவ" என ஞானமிருதம், 46-ஆம் செய்யுளிலும் அமைந்திருத்தல் காண்க.

[2] "மதுரா பதியென்னு மாபெருந் தெய்வம்" (மணி. 26 : 13)

(பி - ம்.) † 'போன்றுள்' ‡ 'மான்'

## இருபத்து மூன்றுவது

# கட்டுரை காதை



சடையும் பிறையுந் தாழ்ந்த †சென்னிக்
குவளை யுண்கட் டவளவாண் முகத்தி
கடையெயி றரும்பிய பவளச் ‡செவ் வாய்த்தி
இடைநிலா விரிந்த நித்தில \$நகைத்தி
இடமருங் கிருண்ட நீல மாயினும்
வலமருங்கு பொன்னிறம் புரையு மேனியள்
இடக்கை பொலம்பூந் தாமரை யேந்தினும்
வலக்கை யஞ்சுடர்க் §கொடுவாள் பிடித்தோள்
வலக்கால் புனைகழல் கட்டினு மிடக்கால்
தனிச்சிலம் பரற்றுந் தகைமையள் பனித்துறைக்
கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்
பொற்கோட்டு வரம்பன் பொதியிற் பொருப்பன்
குலமுதற் கிழத்தி யாதலி னலமந்
தொருமுலை குறைத்த திருமா பத்தினி
அலமரு திருமுகத் தாயிழை நங்கைதன்
||முன்னிலை யீயாள் பின்னிலைத் தோன்றிக்
கேட்டிசின் வாழி நங்கையென் குறையென
வாட்டிய திருமுகம் வலவயிற் கோட்டி
¶யாரைநீ யென்பின் வருவோ யென்னுடை
ஆரஞ ரெவ்வ மறிதி யோவென

---

1. சடையும் பிறையும் - சடையிடத்தே பிறையும்.

3. கடையெயிறு - பன்றிக் கொம்புபோலப் புறப்பட்ட எயிறு.

8. கொடுவாள் - மழு.

13. குலமுதலாதலின் - அடியே தொடங்கி இரட்சித்தற்குரியளாதலின்.

16. முன்னிலையீயாள் - முன் நில்லாள்; அவளுக்கு முன்னிற்றலைச் செய்யாள்.

---

அடி, 1: "தருண வாணிலா வீசுசடில மோலிமாகாளி" (தக்க. 107)

அடி, 1-10. மதுராபதியின் கேசாதிபாத வருணனை; இவளுக்கு வீரத்தின் அறிகுறியான கூறு வலப்புறம் என்று தோன்றுகிறது.

அடி, 9. கழல் - வீரக்கழல்; வீரர் ஒரு காலில் மட்டும் கழலணிவர்; **கம்ப.** மாயாசனகப். 8. அடி, 11-2. பாண்டியன் பெயர்கள்.

அடி, 20. அஞரெவ்வம் : ஒரு பொருட்பன்மொழி.

(பி - ம்.) † 'செந்நிறக்' † 'செவ்வாய், இடைநிலா' \$ 'நகைச்சியிடை' § 'நெடுவாள் பிடித்தன, ளிடக்காற் றனிச்சிலம் பரற்றினும் வலக்காற், புனைகழல் கட்டுந் தகைமையள்' || 'பின்னிலைஇ யாண முன்னிலைத் தோன்றி' ¶ 'யாரிவ ளென்முன் முந்தா ளிவளெ, ளுரஞ ரெவ்வ மறியா தாளென'

ஆரஞ ரெவ்வ மறிந்தே †னணியிழாஅய்
மாபெருங் கூடன் மதுரா பதியென்பேன்
கட்டுரை யாட்டியேன் ‡யானின் கணவற்குப்
பட்ட கவற்சியேன் பைந்தொடி கேட்டி
பெருந்தகைப் பெண்ணொன்று கேளாயென் னெஞ்சம்
வருந்திப் புலம்புறு நோய்
தோழிநீ §யீதொன்று கேட்டியெங் கோமகற்
கூழ்வினை வந்தக் கடை
மாதரா யீதொன்று கேளுநின் கணவற்குத்
தீதுற வந்த வினை ; காதில்
மறைநா வோசை யல்ல தியாவது
மணிநா வோசை கேட்டது மிலனே
அடிதொழு திறைஞ்சா மன்ன ரல்லது
குடிபழி தூற்றுங் கோலனு மல்லன்
இன்னுங் கேட்டி நன்னுதன் மடந்தையர்
மடங்கெழு நோக்கின் §மதமுகந் திறப்புண்
டிடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் ||பாகன் கையகப் படாஅ
தொல்கா ¶வுள்ளத் தோடு மாயினும்
ஒழுக்கொடு புணர்ந்தவிவ் விழுக்குடிப் பிறந்தோர்க்

---

23. கட்டுரையாட்டியேன் - ஒரு வார்த்தை சொல்லுதலுடையேன்.

23-4. நின் கணவற்குப்பட்ட கவற்சியுடையேன்; ஆயினும் நீ கேளென்க.

27 - 8. ஊழ்வினை வந்தபடி கேளாய்; வந்தக்கடை - ககரவொற்று விகாரம்.

(30) வினை (29) கேளென்க.

(31) மறை நா - அந்தணர் நா; ஓசை - ஓதினுர் வாயில்வரும் நியமமான வார்த்தை.

33. மன்னர் பழி தூற்றுவதல்லது.

36. மடங்கெழு நோக்கின் - மகளிருடைய பார்வையாலே……… சிலேடையாக்குக.

---

அடி, 22 : மணி. 26 : 13. அடி, 31 : " ஓத லந்தணர் வேதம் பாட " (மதுரைக். 656); " நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப, ஏம வின்றுயி லெழுத லல்லதை, வாழிய வஞ்சியுங் கோழியும் போலக், கோழியினெழாதெம் பேரூர் துயிலே " (பரி. திரட்டு, 7). அடி, 34 : புறநா. 72 : 12. அடி, 37 : " இடங்கழி காமமொ டடங்கான் " (மணி. 10 : 22, 18 : 119). அடி, 38 : " கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி " (மணி. 18 : 165)

(பி-ம்.) † 'னணியிழாய், மாபெருங் கூடன் மதுரா பதியெனுங், கட்டுரை யாட்டியேன்' ‡ 'யானுன்' § 'இஃதொன்று கேளாயெங்,' § 'மதிமுகந்' || 'பாகர் கையகப்படா' ¶ 'வுள்ளமொடோடுமாயினும்', 'உள்ள மோடுமாயினும்'

கிழுக்கந் தாரா திதுவுங் கேட்டி
உதவா வாழ்க்கைக் †கீரந்தை மனைவி
புதவக் கதவம் ‡புடைத்தன ளொருநாள்
அரைச வேலி யல்ல தியாவதும்
புரைதீர் வேலி யில்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீ ரவ்வழி
இன்றவ் வேலி காவா தோவெனச்
செவிச்சூட் டாணியிற் புகையழல் *பொத்தி
நெஞ்சஞ் சுடுதலி னஞ்சி நடுக்குற்று
வச்சிரத் தடக்கை யமரர் கோமான்
உச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை
§குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்
திறைக்குடிப் பிறந்தோர்க் கிழுக்க மின்மை
இன்னுங் ||கேட்டி நன்வா யாகுதல்
பெருஞ்சோறு பயந்த திருந்துவேற் றடக்கை

---

42. உதவா வாழ்க்கை - பிறர்க்கு உதவமாட்டாத மிடிவாழ்க்கை.

43. புதவக்கதவம் - கதவில்லா வீடு; குழை...........

46. மன்றம் - [1] அரணில்லாத வீடு. அவ்வழி - நீர் போகின்ற அக்காலத்து.

48. செவிச்சூட்டாணி - செவியைச் சுடுவதாகிய ஆணி; சுடுதலுள்ள இறைச்சி சூட்டிறைச்சியானாற்போல.

51 - 2. கை குறைத்தசெங்கோல் - கை குறைத்தற்குக் காரணமாகிய செங்கோலையும். 54. நன்வாயாகுதல் - நன்றாகிய மெய்யாதல்.

55. பெருஞ்சோறு பயந்த - பாண்டவர்கள் படைக்கும் துரியோதனன் படைக்கும் சேரன் சோறிட்டதனை.

---

அடி, 42 : உதவா வாழ்க்கை : அகநா. 125 : 2. அடி, 47 : தக்க. 217. அடி, 48-9 : கலித். 34 : 11. அடி, 42-52. பாண்டியன் கை குறைத்த செய்தி (பதி. 27-30, அடிக்குறிப்பு); "கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தால், எய்யுஞ் சிலைக்கை யிரங்கேசா", "கொற்கையான் மாறன் குலசேகரவழுதி, பொற்கையா னகதை போதாதோ" என்றூர் பிறரும்; திருவால. 57 : 4. அடி, 48 : "சுடுநா ராசஞ் செவி செறித் தாங்கு" (பெருங். 1. 47 : 238). அடி, 50 : சிலப். 11 : 26. அடி, 55 : 'பெருஞ்சோறு பயந்த' என்றது சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் பாரத யுத்தத்தில் எல்லோர்க்கும் உணவளித்த செய்தியை; "ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த சேரன்" (29 : ஊசல்வரி); "உதியஞ் சேரல், பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" (அகநா. 233 : 9-10); 'அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை, ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப், பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறநா. 2 : 13-6)

1 "அம்பலந் தாழ்கூட்டு வார்" (பழ. 136)

(பி - ம்.) † 'கீரத்தன் மனைவி' ‡ 'புடைத்தனளொருது' * 'பொங்கி, நெஞ்சகஞ்' § 'குறைத்துச்' || 'கேட்டியோர்நன்'

திருநிலை பெற்ற பெருநா ளிருக்கை
அறனறி செங்கோன் மறநெறி நெடுவாள்
புறவுநிறை புக்கோன் கறவைமுறை செய்தோன்
பூம்புனற் பழனப் †புகார்நகர் வேந்தன்
தாங்கா விளையு ‡ணன்று டதனுள்
வலவைப் பார்ப்பான் பராசர னென்போன்
குலவுவேற் சேரன் கொடைத்திறங் கேட்டு
வண்டமிழ் மறையோற்கு ¶வானுறை கொடுத்த
திண்டிற னெடுவேற் §சேரலற் காண்கெனக்
காடு நாடு மூரும் போகி
நீடுநிலை மலயம் பிற்படச் சென்றாங்
கொன்றுபுரி கொள்கை யிருபிறப் பாளர்
முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி
ஐம்பெரு வேள்வியுஞ் செய்தொழி லோம்பும்
அறுதொழி லந்தணர் பெறுமுறை $வகுக்க

56. பெருநாளிருக்கை - பெரிய நாளோலக்கத்து இருக்கை.
57. மறநெறி நெடுவாள் - மறத்திலே யொழுகின வாள்.
66. நீடுநிலை மலயம் - போகிய நிலையையுடைய மலயம்.
67. ஒன்று - முத்தி. இருபிறப்பு - உபநயனத்துக்கு முன்னும் பின்னும்.
68. முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி.
70. அறு தொழிலாளர் பெறுமுறை - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என இக்குணங்களையுடையார் பெறு முறையை. வகுக்க - அவனுக்குக் கூறுபடுத்த.

அடி, 56. பெருநாளிருக்கை - சேரனுடைய காலையோலக்கம்; "தண் கட னாட னொண்பூங் கோதை, பெருநா ளிருக்கை" (மதுரைக். 524-5) என அந்நாளோலக்கம் பாராட்டப் பெற்றிருத்தல் காண்க.

அடி, 63. மறையோனென்றது பாலைக்கௌதமனாரை; இவருக்குச் சுவர்க்கங்கொடுத்த சேரன் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனென்பவன்; "நான்மறை யாளன் செய்யுட் கொண்டு, மேனிலை யுலகம் விடுத்தோன்" (சிலப். 28. : 137-8); 'பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக்கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு ......... பாடிப் பெற்ற பரிசில்; நீர் வேண்டியது கொண்மினென யானும் என் பார்ப் பனியும் சுவர்க்கம் புகல் வேண்டுமெனப் பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பித்துப் பத்தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினார்' (பதிற். 3-ஆம் பத்து, இறுதி வாக்கியம்); "துறக்க மெய்திய தொய்யா நல்லிசை, முதியர்ப் பேணிய வுதியஞ் சேரல்" (அகநா. 233 : 7-8); பழமொழி, 316; தொல். புறத். 25, ந.

அடி, 67 , புறநா. 367 : 12-3. அடி, 68 : முருகு. 181-2.

(பி - ம்.) † 'புகாஅர் வேந்தன்' ‡ 'நன்னாட்டதனுள், பலவைப் பாசான்' ¶ 'வானகங் கொடுத்த' § 'சேரற்காண்கென' $ 'யெய்தி'

நாவலங் கொண்டு நண்ணு ரோட்டிப்
பார்ப்பன வாகை சூடி யேற்புற
நன்கலங் கொண்டு தன்பதிப் பெயர்வோன்
செங்கோற் †றென்னன் றிருந்துதொழின் மறையவர்
தங்கா லென்ப தூரே யவ்வூர்ப்
பாசிலை பொதுளிய போதிமன் றத்துத்
தண்டே குண்டிகை ‡வெண்குடை காட்டம்
பண்டச் சிறுபொதி பாதக் காப்பொடு
களைந்தன னிருப்போன் காவல் வெண்குடை
விளைந்துமுதிர் கொற்றத்து விறலோன் வாழி
கடற்கடம் பெறிந்த காவலன் வாழி
விடர்ச்சிலை §பொறித்த வேந்தன் வாழி
பூந்தண் பொருநைப் பொறையன் வாழி
மாந்தரஞ் சேரன் மன்னவன் வாழ்கெனக்
குழலுங் குடுமியு மழலைச் செவ்வாய்த்
தளர்நடை யாயத்துத் தமர்முத னீங்கி
விளையாடு சிறாஅ ரெல்லாஞ் சூழ்தரக்

---

71. நா வலங்கொண்டு - தருக்கஞ்சொல்லி நாவெற்றியையுடையோனாய்; நா வலம் - நாவெற்றியென்க.

(70) பெறுமுறைவகுத்த (73) நன்கலங்கொண்டென்க.

(71) நாவலங்கொண்டு ஓட்டிச் (72) சூடிக் (73) கொண்டு தன்பதிப் பெயர்வோன்; பெயர்வோன் பெயர்தர.

74. திருந்துதொழில் மறையவர் - பஞ்சக்கிராமிகள்.

75. தங்கால் - திருத்தங்காலூர்.

76. அரசுநிற்குமன்று. 77. காட்டம் - சமித்து.

(79) குடையையும் (80) கொற்றத்தையுமுடைய விறலோன்.

84. வாழ்கென - வாழ்கவென்று சொல்ல.

87. சிறுர் சூழ்தர - தன்னைச்சிறுரெல்லாம் சூழ்தர.

---

அடி, 72. பார்ப்பனவாகையினியல்பு: "கேள்வியாற் சிறப்பெய்தியானை, வேள்வியான் வியன்மிகுத்தன்று", "ஓதங் கரைதவழ்நீர் வேலியுலகினுள், வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும்-ஏதம், சுடுசுடர்தானாகிச் சொல்லவே வீழ்ந்த, விடுசுடர் வேள்வி யகத்து" (பு. வெ. 163)

அடி, 81 - 2. சிலப். 25 : 187-8, 28 : 135 - 6.

(பி - ம்.) † 'றென்னவன் றிருத்தொழில்' ‡ 'யொண்குடை' § 'பொறித்த விறலோன் வாழி'

†குண்டப் பார்ப்பீ ரென்னோ டோதியென்
பண்டச் சிறுபொதி கொண்டு ‡போ மின்னெனச்
சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வன்
ஆலமர் செல்வன் §பெயர்கொண்டு வளர்ந்தோன்
பாறு செவ்வாய்ப் படியோர் முன்னர்த்
தளர்நா வாயினு மறைவிளி வழாஅ
துளமலி யுவகையோ டொப்ப வோதத்
$தக்கிணன் றன்னை மிக்கோன் வியந்து
முத்தப் பூணூ லத்தகு புனைகலம்
கடகந் தோட்டொடு கையுறை யீத்துத்
தன்பதிப் பெயர்ந்தன னாக நன்கலன்
புனைபவும் பூண்பவும் பொறாஅ ராகி
வார்த்திகன் றன்னைக் காத்தன ரோம்பிக்
கோத்தொழி லிளையவர் கோமுறை ||யன்றிப்
படுபொருள் வௌவிய பார்ப்பா னிவனென
விடுசிறைக் ¶கோட்டத் திட்டன ராக
வார்த்திகன் மனைவி கார்த்திகை யென்போள்
அலந்தன ளேங்கி யழுதன ணிலத்திற்
புலந்தனள் புரண்டனள் பொங்கின ளதுகண்டு
மையறு சிறப்பி னையை கோயிற்

---

88. குண்டப்பார்ப்பீர் - பிழுக்கை மாணிகாள்; சிறுமாணிகாள், சிறு பிள்ளைகாளென்னினுமாம்.

91. ஆலமர் செல்வன் பெயர் - தக்கிணாமூர்த்தி.

92. பால்நாறு செவ்வாயையுடைய பிரமசாரிகள்; [1] படிமம், படி யென்றாயிற்று. படியோர் - தன்னை இளமையாலொப்பாருமாம்; படி - வேடமுமாம்.

99. புனைவனவும் பூண்பனவுமாக வேறுபடுதலின் புனைபவும் பூண்பவும் என்றார்.

101. கோமுறையன்றி - இராசநீதி யன்றி.

102. படுபொருள் - புதையல்; களவுப்பொருளென்றுமாம்.

107. ஐயைகோயில் - மதுரையில் துர்க்கை கோயில்.

---

[1] சிலப், 30 : 179, உரை.

(பி - ம்.) † 'குண்டைப்பார்ப்பீர்' ‡ 'போமினென' § 'பேர்' $ 'தெக்கணன்றன்னை மிக்கென', 'தக்கன்' || 'யன்றியும்' ¶ 'கோட்ட மிட்டன'

†செய்வினைக் கதவந் திறவா தாகலின்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவம்
மறவேன் மன்னவன் கேட்டனன் மயங்கிக்
கொடுங்‡கோ லுண்டுகொல் கொற்றவைக் குற்ற
இடும்பை யாவது மறிந்தீ மின்னென
ஏவ லிளையவர் காவலற் றொழுது
வார்த்திகற் கொணர்ந்த §வாய்மொழி யுரைப்ப
நீர்த்தன் றிதுவென நெடுமொழி கூறி
அறியா மாக்களின் முறைநிலை திரிந்தவென்
இறைமுறை பிழைத்தது பொறுத்தலுங் கடனெனத்
தடம்புனற் கழனித் தங்கா றன்னுடன்
மடங்கா விளையுள் வயலூர் நல்கிக்
கார்த்திகை கணவன் வார்த்திகன் முன்னர்
இருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கியவள்
தணியா வேட்கையுஞ் சிறிதுதணித் தனனே
நிலைகெழு கூட னீணெடு மறுகின்
மலைபுரை மாட மெங்கணுங் கேட்பக்
கலையமர் செல்வி கதவந் திறந்தது
$ சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதும்
|| கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்
¶ இடுபொரு ளாயினும் படுபொரு ளாயினும்

115. நெடுமொழிகூறி - புகழ்ந்து சொல்லி.

119. வயலூர் : ஓர் ஊரின் பெயர். (விட்டு.

118 - 9. இவன் பிறந்த தங்காலுடன் வயலூரென்பதோர் ஊரும்

121. திருமார்பு நல்குகை - தண்டனிடுகை. அவளென்றது நிலமடந்தையை. அவளைப் பணிந்தென்பார், இருநிலமடந்தைக்குத் திருமார்பு நல்கி யென்றார்.

122. மார்பினைப் பெருமையால் தணியாத வேட்கை.

127. கறை - கடமை.

128. இடுபொருள் - பிறர் வரவிட்ட பொருள். படுபொருள் - புதையல்; அன்றித் தன் தேட்டத்தால் மிக்க பொருளுமாம்; "படுபயன் வெஃகி" (குறள், 172) என்றாற்போல.

அடி, 115, நீர்த்து - நீர்மையது. அடி, 125 : "கலைகாமுறுவி" (பெருங். 1. 52 : 24); "கலையுகைப்பாள்" (தக்க. 75). அடி, 126 : மணி. 19 : 161.

(பி - ம்.) † 'செய்வுறு' ‡ 'கோல்கண்டுகொல்.........உற்றதிடும்பை யாவது மறிமி னின்றென' § 'வாய்மொழி யுரைப்ப, வறியா மக்களின்' $ 'சிறைபடு' || 'கறைபடு' ¶ 'படுபொரு ளாயினு மிடுபொரு'

உற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென
யானை யெருத்தத் தணிமுர சிரீஇக்
கோன்முறை யறைந்த கொற்ற வேந்தன்
தான்முறை பிழைத்த †தகுதியுங் கேணீ
ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்
தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
உரைசான் மதுரையோ டரைசுகே டுறுமெனும்
உரையு ‡முண்டே நிரைதொடி யோயே
கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு
வடிவேற் றடக்கை வசுவுங் குமரனும்
தீம்புனற் பழனச் சிங்க புரத்தினும்
காம்பெழு கானக் கபில புரத்தினும்
¶ அரைசாள் செல்வத்து நிரைதார் வேந்தர்
வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த
தாய வேந்தர் தம்முட் பகையுற
இருமுக் காவதத் திடைநிலத் தியாங்கணும்
செருவல் வென்றியிற் செல்வோ ரின்மையின்
அரும்பொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து
கரந்துறை மாக்களிற் காதலி §தன்னொடு

---

129. உற்றவர்க்கு - எடுத்தார்க்கு. பெற்றவர்க்கு - கொண்டவர்களுக்கு; அவ்விருவர்க்கும் உறுதி ஆமென்க.

ஆதலால், தமக்காகா; உற்றவர்க்குப் பெற்றவர்க்காமென்று அறைவித்தான்.

131. கோன்முறையறைந்த - இராசநீதியாகச் சொன்ன.

133. பேரிருட்பக்கம் - கிருட்டின பக்கம்.

134. அழல்சேர்குட்டம் - [கார்த்திகைபரணி]

137. உரை - சோதிட வார்த்தை; உரையு முண்டென்றது எதிரது தழீஇய எச்சவும்மை.

139-44. வசுவும் குமரனுமாகிய வேந்தரிருவர் தம்மில் தாய வேந்தர்.

146. இருவரது மலைவு வேல்வென்றி நிகழுகை காரணமாகச் செல்வோரின்மையால்.

(148) கரந்துறைமாக்களைப்போல (147) ஆபரணங்களைச் சுமந்து போந்து; போந்தென்று ஒரு சொல் வருவிக்க.

---

அடி, 134 : "அழற்குட்டத்து" (புறநா. 229 : 1)
அடி, 133. நன். மயிலை. 175, மேற்.
(பி - ம்.) † 'தகுதிகேட்டிநீ' ‡ 'முண்டுநிரை' ¶ 'உரைசால் செல்வத்து நிரைதார் வேந்தன், வீயாச் சிறப்பின்' § 'தன்னுடன், சிங்கா'

சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினோர்
† அங்கா டிப்பட் டருங்கலன் பகரும்
சங்கம னென்னும் வாணிகன் றன்னை
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவன்
‡ வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்
பரத னென்னும் பெயரனக் கோவலன்
விரத நீங்கிய வெறுப்பின னாதலின்
ஒற்ற னிவனெனப் பற்றினன் கொண்டு
வெற்றிவேன் மன்னற்குக் காட்டிக் § கொல்வுழிக்
கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களங் காணா ணீலி யென்போள்
அரசர் முறையோ பரதர் முறையோ
ஊரீர் முறையோ சேரியீர் முறையோவென
மன்றினு மறுகினுஞ் சென்றனள் பூசலிட்
டெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
தொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி
மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணியில்
|| கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோள்
எம்முறு துயரஞ் செய்தோ ரியாவதும்
தம்முறு துயரமிற் ¶ றுறுக வென்றே

149 - 50. சிங்கபுரத்தின் ஓர் அங்காடியிடத்தானாகியிருந்து.
152. பைந்தொடி : முன்னிலை.
154. பரதனென்றது கோவலனது முற்பெயர்.
155. விரதநீங்கிய - கொல்லாவிரதத்தால் நீங்கிய. வெறுப்பினனாதலின் - வெறுக்கப்படுபவனாதலால்.
165. விசும்பேணியில் - விசும்பெல்லையில்; "நளியிரு முந்நீ ரேணி யாக" (புறநா. 35 : 1) என்றார்.
166. தலைமகனைக் கூடுவதாக நின்றவள்.
167. செய்தோரென்னுமெழுவாய் படுவார்களாகவென்னும் வியங்கோள் வருவித்தலோடு முடிந்தது. யாவதும் - எப்படியானும்.
168. தம்முறு துயரமிற்றுறுக - தாங்களும் இப்படிப் படுவார்களாக; நான் பட்டதே படுகவென்றது பழியிட்ட படியைக்கொண்டு.
(165) ஏறி (169) விழுவோளென்க.

அடி, 163 - 4, மு : 193 - 4.

(பி - ம்.) † 'அங்காடிப்படவிருந்துகலன்' ‡ 'வெந்தொழில்' § 'கொல்வுழிஇக்' $ 'யேறிமால்' || 'குலத்தலை' ¶ 'றுறுகவென'

விழுவோ ளிட்ட வழுவில் சாபம்
பட்டனி ராதலிற் கட்டுரை கேணீ
உம்மை வினைவந் துருத்த காலைச்
செம்மையி லோர்க்குச் செய்தவ முதவாது
†வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
ஈரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி ல்லதை
ஈனோர் ‡வடிவிற் காண்ட லில்லென
மதுரைமா தெய்வ மாபத் தினிக்கு
விதிமுறை சொல்லி யழல்வீடு கொண்டபின்
கருத்துறு கணவர் கண்டபி னல்ல
திருத்தலு ¶மில்லே னிற்றலு மிலனெனக்
கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்துக்

---

171 - 2. உம்மைவினை......யுதவாது - உம்மையிற் செவ்விய மனமில்லாதோர்க்கு அக்காலத்துச் செய்தவினை வந்து பலிக்குங்காலத்து முன்பு செய்த நல்வினை யாதும் உதவாது; இத்தீவினைவந்து கொடுப்பதற்கு முன்னே வந்துதவுதல் பின்புதவுதல் செய்யுமித்தனை; அந்நல்வினையும் உதவாமற் போகாது; பாவமானதும் தனியே அனுபவிக்க வேண்டும்.

176. ஈனோர் - ஈங்குள்ளோர். 176 - 8. இல்லென்று மதுரைமா தெய்வம் சொல்ல.

181. பொற்றொடி - பொலிவினையுடைய சங்க வளை; துர்க்கை கோயில் வாயிலிலே தன்கைவளையைத் தகர்த்து.

---

அடி, 138 - 9: இச்சாபவரலாற்றை இப்படியே மணிமேகலையில் வஞ்சிமாநகர்புக்க காதையிலும் மணிமேகலைக்குக் கண்ணகி கூறியதாகக் கூறினர்; அது வருமாறு:—"வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து, வணங்கி நின்று குணம்பல வேத்தி, அற்புக்கட னில்லாது நற்றவம் படராது, கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த, தருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப, ஒருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போள், எம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது, வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாள், மதுராபதியெனு மாபெருந் தெய்வம், இதுநீர் முன்செய் வினையின் பயனாற், காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத், தாய மன்னவர் வசுவுங் குமரனும், சிங்கபுரமுஞ் செழுநீர்க் கபிலையும், அங்காள் கின்றோரடற்செரு வுறுநாள், மூவிரு காவத முன்னுந ரின்றி, யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப், பல்கலங் கொண்டு பலரறி யாமல், எல்வளை யாளோ டரிபுர மெய்திப், பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக், கண்டனர் கூறத் தையனின் கணவன், பார்த்திபன் றொழில்செயும் பரத னென்னும், தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி, ஒற்ற னிவனென வுரைத்து மன்னற்குக், குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டனன், ஆங்கவன் மனைவி யழுதன ளரற்றி, ஏங்கிமெய் பெயர்ப்போ ளிறுவரை யேறி, இட்ட சாபங் கட்டிய தாகும், உம்மை வினைவந் துருத்தலொழி யாதெனும், மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னும், சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன்" (5 : 34). அடி, 173 - 6. மு: சிலப். பதிகம், 50 - 53.

(பி - ம்.) † 'வாருறு கூந்தன்மணமகன்' ‡ 'வடிவினிற்' ¶ 'மிலனே யிறத்தலும்'

கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் †பெயர்கென
இரவும் பகலு மயங்கினள் கையற்
றுரவுநீர் வையை யொருகரைக் கொண்டாங்
‡கவல வென்னு ளவலித் திழிதலின்
¶மிசைய வென்னுண் மிசைவைத் தேறலின்
கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு §பிளந்தாங்
கவுணரைக் கடந்த சுடரிலை நெடுவேல்
நெடுவேள் குன்ற மடிவைத் தேறிப்
பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழோர்
தீத்தொழி லாட்டியேன் யானென் றேங்கி
எழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
தொழுநா ளிதுவெனத் ||தோன்ற வாழ்த்திப்
பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்
கமரர்க் கரசன் றமர்வந் $தேத்தக்

---

183. தமியேனைப் பெயராநின்றேனெனச் சொல்லி.
184. இரவும் பகலுமயங்கினன் - இரவும் பகலும் அறியாது மயங்கி.
186. பதறி இழிதலாற் குழியென்று பார்க்கிலள்.
190. நெடுவேள்குன்று - திருச்செங்கோடு. அடிவைத்தேறி யென்றார், அதற்குமுன்பு வருத்தத்தாற் கால் நிலத்துப் பாவாமையால்.
191. வேங்கையின் கீழே நின்றென்க.
192. குறத்தியர்கேட்கத் தீத்தொழிலாட்டியேன் யானென்று சொல்லி; ஏங்கியென்றது - சொல்லியென்றபடி.
193. எழுநாளிரட்டி - வேங்கை நீழலினின்ற நாளளவு. எல்லை யென்றது பகலை. அவணின்ற நாளளவு, அன்று பதினாலாநாளாயிற்று. பதினாலாநாள் பகற்பொழுது சென்றபின் என்க; பதிகத்திலும், "ஈரேழ் நாளகத்தெல்லை" (51) என்றார்.
194 - 7. அமரர்க்கரசன் தமர்வந்து, கண்ணகி தன்கணவனைத் தோன்றவாழ்த்தித் தொழுநாளிதுவெனக்கருதி இவள்பெயரைச் சொல்லி மலரைத்தூவி ஏத்தினர்; இவள் பெயர் மந்திரோத்தியாதலால்; இன்னும், கண்ணகி கோவலனைத் தோன்றவாழ்த்தி வானவூர்தியேறினா ளென்றுமாம்.
194 - 9. பெரும்பெயரேத்தி மலர்மாரிபெய்து தமர்வந்தேத்த வான வூர்தி ஏறினாளென்க.

---

அடி, 188 - 9: குறுந். கடவுள். 4 - 5. அடி, 190. நெடுவேள்: பெரும்பாண். 75.
அடி, 193 - 4. மு : 163 - 4. அடி, 197 : சிலப். பதி. 6.
(பி - ம்.) † 'பெயர்வனென்று' ‡ 'கவலென்னுளலைத்திழிதலின்' ¶ 'மிசையாமென்னுண்' § 'பிளந்தே யவுணரை' || 'தொழுது வாழ்த்திப்' $ 'தேத்திக்'

கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வான வூர்தி †யேறினண் மாதோ
கானமர் புரிகுழற் கண்ணகி தானென்.

---

### வெண்பா

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை ‡திண்ணிதால்—¶தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

### கட்டுரை

§முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோர்
அறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி ||சிறப்பும் விண்ணவர் வரவும்
ஒடியா வின்பத் தவருடை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம்
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலும்
ஆரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியும்
நேரத் தோன்றும் வரியுங் குரவையும்
$என்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் ††தனிக்கோ ணிலைமையும்
வடவாரியர் ‡‡படைகடந்து
தென்றமிழ்நா டொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுடன்
அரைசு கட்டிலிற் §§றுஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியனோ டொரு பரிசா
நோக்கிக் கிடந்த
மதுரைக் காண்ட முற்றிற்று.

**இரண்டாவது, மதுரைக்காண்டம் முற்றிற்று.**

---

வெண்பா :—மண்ணகமாதர் - உலகத்துக் கற்புடைமகளிர். விண்ணக மாதர்க்கு விருந்தானாள் ; ஆதலால் தெய்வந்தொழுகை திண்ணிதென்க.

---

வெண்பா : குறள், 55. அடி, 1. சிலப். பக். 265, கட்டுரை, 1; புறநா. 35 : 4. அடி, 4. "பழவிறன் மூதூர்" (மணி. 7 : 63).

(பி - ம்.) † 'யேறினள், கானமர்' ‡ 'திண்ணமால்' ¶ 'தெய்வமா, மண்' § 'முடியுடை' || 'சிறப்பின் வானவர் வரவும், வையைப்பேரி யாற்று' $ 'என்றிவ்வனைத்தும்' †† 'தன்கோ' ‡‡ 'படைதந்து' §§ 'றுஞ்சிய நெடுஞ் செழியனோ டொருபரிசு'

மூன்றாவது

# வஞ்சிக்காண்டம்

## உச—குன்றக்குரவை

### உரைப்பாட்டுமடை

(1) குருவியோப்பியுங்கிளிகடிந்துங்குன்றத்துச்சென்று †வைகி
அருவியாடியுஞ் சுனைகுடைந்து ‡மலவுற்று வருவேமுன்
மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர் மனநடுங்க
முலையிழந்து ¶வந்துநின்றீர் யாவிரோவென முனியாதே
மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்றாள்
என்றலு மிறைஞ்சியஞ்சி யிணைவளைக்கை யெதிர்கூப்பி
நின்ற §வெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டு ||நிற்பக் கொழுநனொடு கொண்டு
[போயினர்
இவள்போலு ‡‡நங்குலக்கோ ரிருந்தெய்வ மில்லையாதலின்

---

1. குன்றத்துச் சென்று தங்கிக் குருவியோப்பியுமென்க.

3. வள்ளி - வல்லி; தங்கள் வள்ளியென்கின்ற பெண்ணுமாம்; என்றது குமரவேள் தேவியை.

4 நின்றீர், யாவிர்; இவை உயர்த்துக் கூறினர். முனியாதே - அவர்கள் கேட்டதற்கு வெறாதே.

5. [1] மணமதுரை - கலியாணமதுரை.

9. போயினர்: முற்று.

முன் தேவருடன் போனபடியை விரியக்கூறினது இது.

---

குன்றக்குரவை: நற். 276; அகநா. 232; முருகு. 196-7; மதுரைக். 615; மலைபடு. 320-22; திருச்சிற். 127.

உரைப்பாட்டுமடை - உரையாகிய பாட்டை இடையேயுடையது; சிலப். பக். 437.

அடி, 2. அலவுற்று - வருத்தமுற்று. அடி, 5: "ஒட்டே னரசோ டொழிப்பேன் மதுரையும்" (சிலப். 21 : 37)

[1] மணமதுரை - நறுமணத்தையுடைய மதுரையுமாம். (சிலப். 13 : 115 - 33); "நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத், தென்ற லசை வரூஉஞ் செம்மற்றே யம்மநின், குன்றத்தாற் கூடல் வரவு" (பரி. 8 : 26 - 8)

(பி - ம்.) †'வைகியுமருவி' ‡'மலவுற்றும் வருவேம்' ¶'வந்துநின்ற நீரியாவிரோ' §'வெல்லையில்' ||'நிற்கவே கொழுநனொடுங்கொண்டு' ‡‡'நங்குலத்துக்கோரிருந்'

†சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே
நிறங்கிள ரருவிப் பறம்பின் றாழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை ‡நிறுமின்
பரவலும் பரவுமின் ¶விரவுமலர் தூவுமின்
ஒருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே.

## கொளுச்சொல்

(2) ஆங்கொன்று காணா யணியிழா யீங்கிதுகாண்
அஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியற்
சிந்துரச் சுண்ணஞ் செறியத்தூய்த் தேங்கமழ்ந்
திந்திர வில்லி னெழில்கொண் டிழுமென்று
வந்தீங் கிழியு மலையருவி யாடுதுமே.

---

13. பறம்பின் தாழ்வரை - நெடுவேள்குன்றமாகிய பறப்பின் தாழ் வரையில்.
14 - 5. வேங்கைக்கீழ் ஒரு தெய்வமாகப் பண்ணிக்கொள்ளுமின்.
16. தொடுத்தல் - வாசித்தல்.
17. கோடு - கடமாக்கொம்பு. கொடுமணி - ஓசைகடிதான மணி.
19. காப்பு - சுற்றுமதில். கடை - வாயில். சுற்றுமதிலிட்டு வாசலும் செய்ம்மின். [னென்று முன்னே கூட்டுக.
(22) வளம் துஞ்சாது சுரக்கவென்று (21) நங்கைக்குச் (19) செய்ம்மி
கொளுச்சொலென்றது, மேற்சொல்லுகின்ற மூன்று பாட்டின் சொற்களைப் போதந்......இப்பாட்டின் கருத்தென்றுமாம்.
(2) ஆங்கொன்று காணாயென்றது, தூரநின்றது. கிட்டச்சென்று, ஈங்கிதுவென்றாள். இதுவென்றாள், கண்ணகி அங்கே வந்தவளவிலே மழை பெய்தலால் விழுகிற அருவியை. அவ்வருவி தூங்கக்கண்டு தங்களை யணுக வந்தபடியே............3. செறிய - செறியாநிற்க.
5. ஆடுதுமே : ஏகாரம் தேற்றம். அவன் கொடுமை கிடக்கச்செய்தேயும்

---

அடி, 16. "தொண்டகச் சிறுபறை" (முருகு. 197) [246
அடி, 17. "கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி" (முருகு.
அடி, 18. "நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" (முருகு. 239); "நறையி னறும்புகை நனியமர்ந் தோயே" (பரி. 14 : 20)
அடி, 19. பூப்பலி : "மலர்ப்பலிதூஉய்", "பூப்பலி செய்து காப்புக் கடை நிறுத்தி" (28 : 5, 231); "பூப்பலிவிட்டகடவுளை" (கலித். 93 : 24)
அடி, 20 : "பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்" (குறிஞ்சிப். 5)
(2) : 2. "அஞ்சனத் திரளு மணியரி தாரமும்" (25 : 40)
அடி, 4-5. "இழுமென விழிதரும் பறைக்குர லருவி" (பதிற். 70 :
(பி - ம்.) †'சிறுகுடீரே' ‡'நிறுத்துமின்' ¶'விரைமலர்' [24.

(3) ஆடுதுமே தோழி யாடுதுமே தோழி
அஞ்சலோம் பென்று நலனுண்டு †நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே.

(சிறைப்புறம்)

(4) என்றென்றுங் காணேம் புலத்த லவர்மலைக்
கற்றீண்டி வந்த புதுப்புனல்
கற்றீண்டி வந்த புதுப்புனன் மற்றையார்
உற்ருடி னேந்தோழி நெஞ்சன்றே; (க)
(5) என்னென்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
பொன்னாடி வந்த புதுப்புனன் மற்றையார்
முன்னாடி னேந்தோழி நெஞ்சன்றே; (உ)
(6) யாதொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
போதாடி வந்த புதுப்புனல்
போதாடி வந்த புதுப்புனன் மற்றையார்
மீதாடி னேந்தோழி நெஞ்சன்றே. (ங)

பாட்டுமடை

(7) உரையினி மாதரா யுண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் ‡தாடினே மாயின்
உரவுநீர் மாகொன்ற \$வேலேந்தி யேத்திக்
குரவை தொடுத்தொன்று §பாடுகம்வா தோழி.

---

அவனுடைய மலையருவியை ஆடவேண்டிற்றேயென்ருள். (3) அஞ்சலோம்பு - அஞ்சுதலைப் பரிகரி.

(4) ..................அவர் செய்த கொடுமையால் நாம் அவர் மலையின் வந்த புதுப்புனலோடு புலத்தற்குச் சிறிதும் காரணமில்லை. மற்றையாரென்றது அருவியாடுவாருள் தன்னையொழிய முன் அந்நீரிற் குளித்த மகளிரை. தனக்கு முற்பட வாடினவரொடு நெஞ்சுதான் வேறுபட்டுப் புலத்தற்குக் காரணம் என்னென்ருள். அன்றேயென்றது இசை நிறைக் கிளவி.

(5) என்னென்றும் - எவனென்றும் : விகாரம்.

'எற்றென்றும்' (4) என்பது முதலாக மூன்றும் சிறைப்புறம்; **தோழிக்குத் தலைமகள் சொல்லியது; முன்னிலைப்புறமொழியுமாம்.**

(7) உரையினி - இனிச் சொல்.

---

(3) "பெண்டிர் நலம்வெளவித் தண்சாரற் ருதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" (**கலித்.** 40 : 24 - 5)

(7) "உரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்" (**கலித்.** 27 : 15 - 6)

**(பி - ம்.)** †'நல்காதார்' ‡'தாடின' \$'வேலேத்தி' §'பாடுதும் யாம், பாட்டு, மடை சீர்கெழு'

## தெய்வம் பராஅயது

(8) சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே; (க)

(9) அணிமுகங்க ளோராறு மீராறு கையும்
†இணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே; (உ)

(10) ‡சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் றிருக்கைவே லன்றே
§வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன் றங் கொன்ற நெடுவேலே. (ரு)

---

(8) செந்தில் - திருச்செந்தில். செங்கோடு - திருச்செங்கோடு. வெண்குன்றம் - சுவாமிமலை. ஏரகம் - ......சூர் மா - சூரனாகிய மா. சுடரிலைய; அ: இடைச்சொல்; சுடரிலை வேல், இறைவன் வேலென்க.
(9) இவ்வடிவு பிறர்க்கு இல்லாமையாற் பிறரொப்பில்லாதான். பிணி முகம் - மயில். (10) சரவணப் பூம்பள்ளியறை - சரவணப் பொய்கை யில் தாமரையாகிய பள்ளியறை. அறுவர் - கார்த்திகையார். திகிரி கோலவுணன் - மலையைச் சூழவரும் அவுணன். பிளந்து - பிளக்க. குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்ச பருப்பதம்.

---

(8): "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பு" (முருகு. 125); "முருகன் நீம்புன லலைவாய்" ("பையுண்மாலை" தொல். களவு. 23, ந. மேற்.); "திருமணி விளக்கி னலைவாய்ச், செருமிகு சேஎய்" (அகநா. 266); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. 55 : 18-9); "நஞ்செந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்" (தே. மறைக்காடு). 3-4: "பத்திரா பதிமிசைக் பனிக்கடற் பிறந்த, வெஞ்சூர் தடிந்த வஞ்சுவரு சீற்றத்து, முருகவேள்" (பெருங். 1. 42 : 229-31)
ஏரகம்; ஏரகத் துறைதலு முரியன்" (முருகு. 189) என்ற விடத்து ஏரகம் மலைநாட்டகத்ததொரு திருப்பதியென்றுர், நச்சினார்க் கினியர்.
"பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" (முருகு. 45-6); "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப் புக்கு" (பரி. 5 : 1); "பார்முதிர் பனிக்கடல்" (பாகவத. 3. கருத்த மன். 50)
(9) பீடு - பெருமை. மணி விசும்பு - நீலமணி போன்றவானம். கோன் - இந்திரன். பிணிமுகம்: "பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" (கல். 7). பிணிமுகம் - முருகக் கடவுள் ஊரும் யானையுமாம்; "சேயுயர் பிணிமுக மூர்ந்து (பரி. 5 : 2); "பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. 56 : 8); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. 247)
(10) சரவணப்பூம்பள்ளி: "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ் சுனை,......அறுவர் பயந்த வாறமர் செல்வ" (முருகு. 253-5); "கடவு

(பி - ம்.) † 'இணையன்றித்' ‡ 'சரவணப் பள்ளியிசைத்தாய்மார்' § 'வருதிகிரிபோலவுணன் மார்பம்', 'திகிரியோனவுணன்'

பாட்டுமடை (அறத்தொடு நிலை)

(11) இறைவளை நல்லா யிதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
அறியாண்மற் றன்னை யலர்கடம்ப னென்றே
வெறியாட லுன்விரும்பி வேலன்வரு கென்றாள்:† (க)

(12) ஆய்வளை நல்லா யிதுநகை யாகின்றே
மாமலை வெற்பனோய் தீர்க்கவரும் வேலன்
வருமாயின் வேலன் மடவ னவனிற்
குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்; (உ)

(13) செறிவளைக்கை நல்லா யிதுநகையா கின்றே
வெறிகமழ் வெற்பனோய் தீர்க்கவரும் வேலன்
வேலன் மடவ னவனினுந் தான்மடவன்
ஆலமர் செல்வன் புதல்வன் வருமாயின்; (ங)

(14) நேரிழை நல்லாய் நகையா மலைநாடன்
மார்பு ‡தருவெந்நோய் தீர்க்க வரும்வேலன்
தீர்க்க வரும்வேலன் றன்னினுந் தான்மடவன்
கார்க்கடப்பந் தாரெங் கடவுள் வருமாயின்; (ச)

---

"சீர்கெழுசெந்தில்" (8) முதலிய மூன்றும் வரைவு முடிவதாகத் தெய்வம் பராயது.

'இறைவளை நல்லாய்' (11) முதல், 'என்றியாம்பாட' (19) இறுதி அறத்தொடு நிலை. (12) : 2. வெற்பன் நோய் - வெற்பனால் வந்த நோய்.

---

ளொருமீன் சாலினியொழிய வறுவர் மற்றையோரும்......நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப், பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்" (பரி. 5 : 44 - 9). குருகுபெயர்க்குன்றத்தைக் கொன்றது : "குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து, மலையாற்றுப் படுத்த மூவிரு கயந் தலை" (பரி. 5 : 9-10); "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (முருகு. 269); "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன்" (மணி. 5 : 13); "குருகுபெயர்க் குன்றத் துடல்பக வெறிந்த, நெடுவேற் கடவுட்கு" (கல். "பொருப்புவளன்")

அறத்தொடு நிற்றல் - உண்மை கூறல்; உண்மை கூறுதலே அற மாதலின் இஃது இப்பெயர் பெற்றது; 'அறம் என்பது தக்கது; தக்க தனைச் சொல்லி நிற்றல்......; அல்லதூஉம் பெண்டிர்க்கு அறமென்பது கற்பு; கற்பின்றலை நிற்றல் என்பதூஉமாம்' என்பர் இறையனாரகப் பொருளுரையாசிரியர்.

(12) 2-4. "வேலன் வேண்ட வெறிமனை வந்தோய், கடவு ளாயினு மாக, மடவை மன்ற வாழிய முருகே" (நற். 34 : 9-11)

(13) 4. ஆலமர் செல்வன் புதல்வன் : "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்", "ஆலமர் செல்வ னணிசான் மகன்" (கலித். 81, 83); "ஆல்கெழு கடவுட் புதல்வ" (முருகு. 256); "ஆலமர் செல்வன் மகன்" (மணி. 3 : 144)

(14) 1-2. "நாடன், மார்புதர வந்த படர்மலி யருநோய்" (நற். 34 : 5-6). 4. கார்க்கடப்பந்தார் - கார்காலத்திற்குரிய கடம்பின்மாலை; "கார்கோண் முகந்த......இருள்படப் பொதுளிய பராரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" (முருகு. 7-11); "கார்நறுங்

(பி - ம்.) † 'பாட்டுமடையாய்வளை' ‡ 'தருநோய்'

பாட்டுமடை

(15) வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமே னேரிழை தன்னோடும்
ஆலமர் செல்வன் புதல்வன் வரும்வந்தால்
மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே; (ரு)
(16) கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல்
மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார்
†செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
அயன்மண மொழி ‡யரு ளவர்மண மெனவே; (சு)
(17) மலைமகண் மகனைநின் மதிநுதன் மடவரல்
குலமலை யுறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுணின் னிணையடி தொழுதேம்
பலரறி மணமவர் படுகுவ ரெனவே; (எ)
(18) குறமக ளவளெம குலமக ளவளொடும்
அறுமுக வொருவநின் னடியிணை தொழுதேம்
¶துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
பெறுகநன் மணம்விடு பிழைமண மெனவே; (அ)

பாட்டுமடை

(19) என்றியாம் பாட மறைநின்று கேட்டருளி
மன்றலங் கண்ணி மலைநாடன் போவான்முன்

---

(15) 2. நீலப்பறவை - மயில். (16) 1. மகனை; ஐ: இடைச்சொல். 4. அயன்மணம் - பிராசாபத்தியம். ஒழி - இதனை விலக்குவாய்.

(17) 4. பலரறி மணமென்றார், இதற்கு முன்பு களவாதலால். படுகுவர் - உடன் படுகுவாராக. அவரென்றது தலைவனை.

(18) 3. துறை - நீர்த்துறை; "யாறுங்குளனும்" (முருகு. 224) என்றாராதலின். நின் திருவடி தொடுநரென்றது சூளுற்ற தலைவனை.

(19) 1. மறைநின்று - மறையச் சிறைப்புறமாக நின்று.

3. சென்றேன் - சென்று நின்றேன். நின்றேன் - நின்ற நான்.

---

கடம்பின் கண்ணி சூடி......முருகே" (நற். 34 : 8-11); "கார்நறுங் கடம்பின்......தெரியற், சூர்நவை முருகன்" (புறநா. 23 : 1 : 4); "காரலர் கடம்பன்" (மணி. 4 : 49)

(15) 4 : "மாமலைவெற்பன்மணவணி வேண்டுதுமே" 24 : (22) : 6.

(17) 4 : "நேரிறை முன்கை பற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கம்" (குறிஞ்சிப். 231 - 2); "பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து" (நாலடி. 86)

(18) 3 : "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும், கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும், அவ்வவை மேய வேறுவேறு பெயரோய், எவ்வயி னோயுநீயே" (பரி. 4 : 67-71); "துறையு மாலமுந் தொல்வலி மராமும், முறையுளி பராஅய்" (கலித். 101 : 14)

(19) 1 : "என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்" (கலித். 42 : 28.

(16) : "குன்றக்குரவையுள், 'சீர்கெழுசெந்தில்' (8) என்னும் தாழிசை முதற் பல அடுக்கி வந்து பின்னர், 'என்றியாம் பாட...கேட்டு' (பி - ம்.) † 'செயலைமென்' ‡ 'யருள் பலர்மணம்' ¶ 'துறையுறை மிசைநின திருவடி தொழுமவர்'

சென்றே னவன்றன் றிருவடி கைதொழுது
நின்றே னுரைத்தது கேள்வாழி தோழி. (கூ)

(20) கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
மடந்தை பொருட்டால் †வருவ திவ்வூர்
அறுமுக மில்லை யணிமயி லில்லை
குறமக ளில்லை செறிதோ ளில்லை
கடம்பூண் டெய்வ மாக நேரார்
மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே.

பாட்டுமடை

(21) என்றீங்
கலர்பாடு பெற்றமை யானுரைப்பக் கேட்டுப்
புலர்வாடு நெஞ்சம் ‡புறங்கொடுத்துப் போன
மலர்தலை வெற்பன் வரைவானும் போலும்
முலையினான் மாமதுரை கோளிழைத்தாள் காதல்
தலைவனை வானோர் ¶தமராருங் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும் யாம்.

(22) பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகம்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுங்கால்
மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே.

---

(20) இப்படிச்சூடி ஏந்தி இவ்வூர் வருவது, தன்னை முருகனென்று கண்டார் கருதுதல்வேண்டி.......இச்சிறு குடியோர் தெய்வமாக உடன் படார். ஆதலால், அறியார்; மடவர் - அறியார். அன்றி, இச்சிறு குடி யோராதலால்........சொல்லுமாறு: அறுமுகமில்லை; அணிமயிலில்லை யென்று சொல்லுவார்களென்று வேறு காட்டினாள்; தலைமகன் கடம்பு சூடி உடம்பிடியேந்தித் தன்னைக் குமரனென்று பிறர் கருத வந்த காரணம், "பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி" (முருகு. 289 - 90) என்றாராதலால்.

(21) 3. புலர்வாடு நெஞ்சம் - புலரும் நெஞ்சம். புறங்கொடுத்துப் போன - தன் பின்னே கிடக்கப்போன; ஒழியப்போன வென்றுமாம். தமராரும் கூடி - தமரெல்லாருங்கூடி. நிலை - தன்மை.

(22) அத்தன்மையினை நாம் பாடுமிடத்து இதனை வேண்டிக்கொள்ளுவோமென்றார்.

---

என்று அடக்கியற் பொருள் பெற்று முடிந்தவாறு காண்க" (தொல். செய். 149, ந. மேற்.)

(22) 1: "படுகம் வாவாழி தோழி" (கலித். 41 : 1)

6 "மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே" [24. (15) : 4]

(பி - ம்.) † 'வருவதிவ்வூர்க் கடம்பூண்......குடியோரே யறுமுக மில்லையணி......இல்லை' ‡ 'புறக்கொடுத்துப்' ¶ 'தமராகக் கூட்டிப்'

(23) பாடுற்றுப்
பத்தினிப் பெண்டிர் பரவித் தொழுவாளோர்
பைத்தர வல்குனம் பைம்புனத் துள்ளாளே
பைத்தர வல்குல் கணவனை வானோர்கள்
உய்த்துக் †கொடுத்து முறையோ வொழியாரே.
(24) வானக வாழ்க்கை யமரர் தொழுதேத்தக்
‡கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை ¶மறுதரவோ வில்லாளே.
(25) மறுதர வில்லாளை யேத்திநாம் பாடப்
பெறுகதில் லம்ம §விவ்வூரு மோர்பெற்றி
பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்.
(26) என்றியாம்
கொண்டு நிலைபாடி யாடுங் குரவையைக்
கண்டுநங் காதலர் $கைவந்தா ராறு
துண்டு மகிழ்ந்தாறு வைகலும் வாழியர்
வில்லெழுதிய விமயத்தொடு
கொல்லி யாண்ட குடவர் கோவே.

(உச) குன்றக்குரவை முற்றிற்று.

---

(23) பாடுற்று – பெருமையுற்று.
வானோர் கொடுத்த பின்பும் அவளைப் புகழலொழியார்.
(25) மறுதரவு – மீட்சி. இவ்வூரும் ஒரு விரதம்பெறுக. கணவன் மணம் – வரைவு.
(26) : 2. கொண்டுநிலை – பொருளைக்கொண்டு நிற்கும்நிலை. 3. கை வந்தார் – அவன் பிரசாதத்தாலே நம் வழியிலே புகுந்தார். 4. உண்டு – வீரபானத்தையுண்டு. ஆறு வைகல்தொறும் வாழ்வாறுக.
இவ்வுறுப்புக்களையுடைய கொச்சகப்பாத் தலைமகட்குத் தோழி வரைவு கூறியது.

---

(25) "பெறுகதில் லம்ம யானே" (குறுந். 14 : 3)
(26) கொண்டுநிலை – ஒருவகைச் செய்யுளென்பர்; "குரவை தழீ இயாமாடுங் குரவையுட், கொண்டு நிலைபாடிக் காண்" (கலித். 39 : 28 - 9) என்பதன் உரையைப் பார்க்க.
(26) 6 : "கொல்லிப் பொருந" (பதிற். 73 : 11); "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. 209 : 12-5), "ஓங்கு கொல்லியோ ரடுபொருந" (புறநா. 22 : 28) என்பவற்றாற் கொல்லிமலை சேரபரம்பரையினர்க்குரித்தாதல் காண்க.
6. குடவர்கோ : "குடவர் கோவே கொடித்தே ரண்ணல்" (பதிற். 55 : 9)
(பி - ம்.) † 'கொடுத்தவுரை' ‡ 'கானனறு' ¶ 'மறுதரலோ' § 'விவ்வூர் பெற்றியுடையதே' $ 'கைவந்தா, ருண்டு'

## இருபத்தைந்தாவது

# காட்சிக் காதை

மாநீர் வேலிக் கடம்பெறிந் திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்
துஞ்சா முழவி னருவி யொலிக்கும்
மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
† பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்
வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பும்

---

1. மாநீர் வேலிக் கடம்பு - இருண்ட நீரை வேலியாகவுடைய கடம்பு.

4. இலவந்தி – நீராவி.

5. இளங்கோவேண்மாள் : பெயர் ; ' நன்னன்வேண்மாள் ', ' உதியன் வேண்மாள் ' என்பனபோல ; வேண்மாளுடனிருந்து, இளங்கோவை அருளிப்பாடிட்டு என்றுமாம்.

---

அடி, 1. கடம்பெறிந்தமை : "வலம்படு முரசிற் சேர லாதன், முந்நீரோட்டிக் கடம்பறுத் திமயத்து, முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து ", " சால்பெருந் தானைச் சேர லாதன், மால்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமை முரசு " (அகநா. 127 : 3-5, 347 : 3-5) ; " பமர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுத றுமிய வேஎய், வென்றெறி...சேர லாத ", " அரசுதலை பனிப்பக், கடம்பு முத றடிந்த கடுஞ்சின வேந்தே ", " மாக்கட னிக்கிக், கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை...தொடித்தேர ளியவர் ", " இருமுந்நீர்த் துருத்தியுள், முரணியோர்த் தலைச்சென்று, கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பின், நெடுஞ்சேரலாதன் " (பதிற். 11 : 12-6, 12 : 2-3, 17 : 4-7, 20 : 2-5)

அடி, 1-2. இமயத்து விற்பொறித்தமை : " விற்றலைக் கொண்ட வியன் பேரிமயத்து " (சிலப். 25 : 118) ; "இமயம் விற்பொறித்து" (பதிற். 2 - ஆம்பத்துப்பதிகம்) ; " ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி " (அகநா. 396 : 16-9)

அடி, 5 : " வதுவை வேண்மாண் மங்கல மடந்தை " (சிலப். 28 : 51)

அடி, 6 : " முழவின் னிசை மூரிமுழங்கருவி " (சீவக. 1193)

அடி, 7 : சிலப். 24 (2) : 4.

அடி, 9 : " வளந்தலை மயங்கிய வஞ்சி முற்றம் " (சிலப். 25 : 34)

(பி - ம்.) † ) பஞ்சடியாயமொடு '

இலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவும்
அரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி
ஒருநூற்று நாற்பதி யோசனை † விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகந் திலக நறுங்கா ழாரம்
‡ உதிர்பூம் பரப்பி னொழுகுபுன லொளித்து
மதுகர ஞிமிறொடு ¶ வண்டினம் பாட
நெடியோன் மார்பி லாரம் §போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை
இடுமண லெக்க ரியைந்தொருங் கிருப்பக்
குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியும்
நறவுக்கண் ணுடைத்த குறவ ※ரோதையும்
பறையிசை யருவிப் பயங்கெழு மோதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக வோதையும்
கலிகெழு மீமிசைச் சேணோ னோதையும்

14. அரங்கு - நாடகசாலை. பள்ளி மண்டபம்.
(3) செங்குட்டுவன் (7) மலைகாண்குவமென்றுசொல்லி (11) இந்திரன் (16) பெயர்வோன் போன்று.
12 - 6. பூங்கா முதலானவற்றை யானைமேலுளவாக நிருமித்து.
(16) களிற்றிலே (12 - 4) இவற்றைப் பரப்பி (16) பெயர்வோனென்க.
(18) கோங்கம் முதலியன உதிர்ந்த (19) பூம்பரப்பாற் புனல் ஒளித்து.
22. மலையை விலங்கிய யாறு; பேர்யாறு; இஃது ஓர் யாற்றின் பெயர்.
23. எக்கர் - எக்கரிடத்து; இயைந்தொருங்கிருப்ப - மூவருங் கூடியிருப்ப.
25. செவ்வேள் வேலன் - செவ்வேளுடைய வேலன்; வேலன் - படி
30. சேணோன் - பரணின் மேலோன். [மத்தான்.

அடி. 21 : "மாயோன் மார்பி னாரம் போல" (தொல். செய். 35, 78, பேர். மேற்.)
அடி, 28 : "பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந", "பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்" (புறநா. 126 : 9, 229 : 14); "பறைக் குர லருவி" (பதிற். 70 : 24)
அடி, 30 : "கலிகெழு மரமிசைச் சேணோன்" (குறிஞ்சிப். 40)
(பி - ம்.) † 'விலங்கு, பருமால் களிற்றிற் பெயர்வோன்' ‡ 'முதுபூஞ் செம்மலி னொழுகுபுனல்' ¶ 'வண்டின மார்ப்ப' § 'போலப்' ※ 'ரோதையும் புலியொடு'

பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையும்
இயங்குபடை யரவமோ டியாங்கணு மொலிப்ப
அளந்துகடை யறியா வருங்கலஞ் சுமந்து
வளந்தலை மயங்கிய வஞ்சி †முற்றத்
திறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து ‡நிற்குந் தெவ்வர் போல
யானைவெண் கோடு மகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியு மதுவின் குடங்களும்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியும்
அஞ்சனத் திரளு மணியரி தாரமும்
ஏல வல்லியு மிருங்கறி வல்லியும்
¶கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையும்
§தெங்கின் பழனுந் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமுங் கரும்பும் பூமலி கொடியும்
$கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையி னிருங்கனித் தாறும்
ஆளியி னணங்கு மரியின் குருளையும்
வாள்வரிப் பறழு மதகரிக் களபமும்

---

31. பயம்பு - யானையைப் படுக்குங்குழி. 32. ஒலிப்ப - ஒலியாநிற்க.
33. 'அளந்துகடை யறியா' என்பது முதல் திறையிடுவார்க்கு அடை.
38. மான்மயிராகிய வெண்சாமரை. மதுவின்குடம் - தேன்குடம்.
42. கூவைநூறு - கூவைக் கிழங்கினீறு.
44. பைங்கொடிப் படலை - பச்சிலைமாலை.
45. காயம் - வெள்ளுள்ளி. பூமலிகொடி - பூங்கொடி.
48. அணங்கு - குட்டி.
49. வாள்வரி - புலி. கரிக்களபம் - யானைக்கன்று.

---

அடி, 40: "அஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியல்" [சிலப். 24. (2) 2]. அடி, 42. கூவைநூறு: "நூறொடு குழீஇயின கூவை" (மலைபடு. 137); "பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்" (பெருங். 1. 51 : 23). அடி, 44: 'பைங்கொடி பச்சிலைக்கொடி; எல்லாவற்றிலும் பசுத்திருத்தலிற் பச்சிலையென்று பெயர் பெற்றது; பச்சிலையென்னாது சினைவினை முதன்மேலேற்றிப் பைங்கொடி யென்றார்' (முருகு. 190, ந.) என்பது ஈண்டு அறியற்பாலது.

(பி - ம்.) † 'மன்றத்' ‡ 'நிற்குமன்னர்' ¶ 'கூவைநீறுங்', 'கூலக்கிழங்குங்கொடி' § 'தெங்கம்பழனுந்' $ 'கருந்தாட்'

குரங்கின் குட்டியுங் குடாவடி யுளியமும்
வரையாடு வருடையு மடமான் மறியும்
காசறைக் கருவு மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையும்
கானக் கோழியுந் †தேன்மொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்க டலைமிசைக் கொண்டாங்
கேழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றம்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற ‡மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்
எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்க ளினைப்பினு மறியேம்
பன்னூ ராயிரத் தாண்டுவா ழியரென
மண்களி நெடுவேன் மன்னவற் கண்டு

---

50. குடாவடியுளியம் - பிள்ளைக்கரடி; திசைச்சொல்; கரடிக்குட்டி.
51. காசறைக்கரு - கத்தூரிக்குட்டி. 59. மன் - கணவன்.

---

அடி, 50. குடாவடி - வளைந்த அடிகளையுடையது; **மலைபடு 501, ந.** அடி, 51. வரையாடுவருடை - மலையிற் பாய்ந்து விளையாடுகின்ற வருடைமான்; "சிலம்புபாய் வருடையொடு", "குன்றின்மேல் வருடை பாய்ந் துழக்கலின்" (சீவக. 1238, 1299); வருடைக்குக் கால்கள் முதுகினுமுள்ளனவென்றும் கால்கள் எட்டென்றும் வேறு நூல்களால் தெரிகின்றன; "மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர்" (**மலைபடு. 502-3**) என்பதனுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க; 'எட்டுக் காலுடையன வருடை; ஆறுகாலுடையன கழிப்பாம்பு' (நீல. தரும. செய். 54, உரை)

அடி, 55-60: சிலப். பதிகம், 3-8.

அடி, 37-55: குழிப்படு வேழக் கூன்மருப் பிரட்டையும், வரைப்படு தேனுஞ் சினைப்படு கனியும், வீணைத் தண்டும் வேய்படு முத்தும், கானத் தகிலு மேனத்தெறியும், பொறிப்புலித் தோலு மறுப்பிய லூகமும், மந்திப் பிணையொடு மற்றவை பிறவும், தந்திறை தந்து முந்துசிறைப் பட்ட, வற்ற காலத்து முற்ற நோக்கி, அடியுறை செய்தொழிற் குடிமுதல் பிழைத்தல், இருநிலம் பெயரினு மெம்மாட் டிலவெனப், பெருமகன் றமரொடு தெளிவனர் தேற்றி" (பெருங். 1. 58:83-93); **மலைபடு. 500**-ஆம் அடி முதலியனவும் இந்தப் பகுதியை ஒத்துள்ளன.

**(பி - ம்.)** † 'தேமொழிக்' ‡ 'தன்மகிழ்நனொடுகூடின ளென்னாட் டாள்', 'கூடிப் போயினளெந்நாட்'

கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கும்
ஒண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாம்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்
தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்
அரிமா னேந்திய வமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்றுயர் பொருஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்

---

65. கண்களிமயக்கம் - கண் களித்தற்குக் காரணமான ஆச்சரியம்; மயக்கம் - கண்டாரை மயங்கப்பண்ணுதல்.

64-5. காண்டலின், விசாரமில்லேமென்று.

(63) வேடர் சொன்னவளவிலே (67) உற்றதையெல்லாம் (91) ஒழிவின்று (66) உரைக்குமென்க; உரைக்குமென்றது முற்று.

69. தீவினைச்சிலம்பு - இவர் தீவினை பலித்தற்குக் காரணமான சிலம்பு.

(70) உற்றதும், (72) வழக்கும், (77) சுட்டதும் சொல்லியென ஒரு சொல் வருவிக்க.

80-81. இணர்க்கோதை - கண்ணகி. பொருனாய் மயங்கினனோ.

82. தலைத்தாணெடுமொழி - கண்ணகி சொல்லிய வீரமொழி; மரித்தபடியால், அவள் சொல்லியது முடியக் கேட்டிலன்.

---

அடி, 65 : "கண்களி கொள்ளுங் காட்சியை" (சிலப். 26 : 73)

அடி, 66 : "அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" (சிலப். பதி. 10)

அடி, 69 : "சூழ்வினைச் சிலம்பு காரண மாக" (சிலப். பதி. 58)

அடி, 78 - 9 : "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன், திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே" (சிலப். 20 : 22 – 3)

அடி, 80 : "தயங்கிணர்க் கோதை" (மணி. 7 : 100)

கலக்கங் கொள்ளாள் †கடுந்துயர் பொருஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டு மொருங்குடன் ‡மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோற் றன்மை
இற்றெனக் காட்டி யிறைக்குரைப் பனள்போல்
தன்னாட் டாங்கட் டனிமையிற் செல்லாள்
நின்னாட் டகவயி னடைந்தன ணங்கை ¶யென்
றொழிவின் றுரைத்தீண் டூழி யூழி
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றமெனத்
தென்னர் கோமான் றீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போன்
எம்மோ ரன்ன §வேந்தற் குற்ற
செம்மையி ||னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் $பெயர்த்தமை யுறுக வீங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது
மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்

---

83. கலக்கங்கொள்ளாளென்றார், கடுக மரித்தாளென்றது தோன்ற.
88. இறை : முன்னிலைப் பெயர்.
95. எம்மோரன்ன என்றது உட்கோள்.
95-7. பாண்டியனது உயிரை உடம்பினின்று நீக்கினமை இப்பொழுது கடுகச் சென்றுற வேண்டுமென.
99. ஆக்கியது : முற்று.

---

அடி, 78 - 86 : "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா தின்னுயி ரீவர்......பத்தினிப் பெண்டிர்" (மணி. 2 : 42-8). அடி, 92. "வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" (மதுரைக். 194)

அடி, 97. உயிர்பதிப் பெயர்த்தல் - உயிரை உடம்பினின்றும் நீக்குதல்; "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்" (சிலப். 27: 83); "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" (மணி. 14 : 95)

அடி, 98-9 : "வளைகோ லிழுக்கத் துயிராணி கொடுத்தாங், கிருநில மடந்தைக்குச் செங்கோல் காட்ட" (சிலப். 22 : 4 - 5)

அடி, 100 - 105 : "ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான், தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன், மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன், அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்" (பெரிய. திருவாரூர். 44)

அடி, 84. மெய்யீற்று முன் உயிர்வருங்கால் உடம்படுமெய்யன்றெனப்படும் வகரம் தோன்றுமென்பதற்கு, 'செல்வுழிச் செல்க' என்பது மேற்கோள் (நன். 163, சங்.)

(பி - ம்.) † 'கடுந்துயருருள், மன்னன்' ‡ 'அமர்ந்ததும்' ¶ 'மென வொழி' § 'வேந்தர்க்கிற்றெனச்' || 'னிழந்தகொல் செவி' $ 'பெயர்ந்தமை'

பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கு நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பந் †துணிந்துவந் துரைத்த
நன்னூற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற வொருமக டன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி
காதலன் றுன்பங் காணாது ‡கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக ¶வானகத்
தத்திற நிற்கநம் மகனா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென
மாலை வெண்குடை மன்னவன் விரும்பி
நூலறி புலவரை நோக்க வாங்கவர்
ஒற்கா மரபிற் பொதியி லன்றியும்
விற்றலைக் கொண்ட வியன்பே §ரிமயத்துக்
கற்கால் கொள்ளினுங் கடவு $ளாகும்
கங்கைப்பேர் யாற்றினுங் காவிரிப் புனலினும்

---

101. *பிழையுயிரெய்தின்* - உயிர்கள் யாதானுமொன்றால் வருந்தின்.
105. துன்னிய துன்பம் - கண்ணகிக்குத் துன்னிய துன்பத்தை.
104 - 5. தொழுதகவில்லென வந்துரைத்த.
109. நன்னுதல்: முன்னிலைப்பெயர். 111. காதலன் - பாண்டியன்.
112 - 4. மாதர் - அவன்தேவி; அவள் வானிலே திருவுறுக; அது கூற வேண்டா; இவளைக் கொண்டாடவேண்டுமென்று தேவி சொல்ல.
116. [1] நூலறி புலவர் - அமைச்சர்.
117 - 21. இமயக்கல்லுக்குக் கங்கை; பொதியிற்கல்லுக்குக் காவிரி.

---

அடி, 106. நன்னூற்புலவன் - சாத்தனார்; **மணிமேகலை** நூலாசிரியர்.

அடி, 118 - 9. "*விற்றலைக் கொண்ட வியன்பே ரியமத்தொர், கற்*கொண்டு பெயருமெங் காவலன்" (சிலப். 25 : 183 - 4); "கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டி" (பதிற். 5-ஆம் பத்துப் பதிகம்)

[1] "நூலவர் பாகமாக" (சூளா. மந்திர. 7)

(பி - ம்.) † 'துணைந்து' ‡ 'கரந்த' ¶ 'வானத்' § 'ரியமத்துங்' $ 'ளாகுமெனக்'

தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் †கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தல்
‡மறத்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் §செய்கையோ வன்று
புன்மயிர்ச் சடைமுடிப் புலரா வுடுக்கை
முந்நூன் ‖மார்பின் முத்தீச் செல்வத்
திருபிறப் பாளரொடு பெருமலை யரசன்
மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
¶கடவு ளெழுதவோர் கற்கு ரானெனின்
வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கை
கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியும்
முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை
மதிமுடிக் களித்த மகட்பாற் காஞ்சியும்
தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்

---

128. இருபிறப்பாளர் - தேவவிருடிகள்.
128 - 30. பார்ப்பாருடனே மகட்டருதனுக்கி இருபிறப்பாளரோடு கல் தாராநுயினென்றான். 130. [1] எழுத - பண்ண.
131 - 2. நிலைநின்று பயன்படாத வாழ்க்கையை மரித்தோர் இருந்தோர்க்குக் காட்டிய நிலையாமையும்.
134. மதிமுடி - தேவன். மகட்பாற் காஞ்சி - தான் இனியனுய்க் கொடுத்த காஞ்சியும்.
135 - 6. தென்றிசைக்கண்ணே மேற்செலவு. அவன் எதிரூன்றலை உயர்த்தான்.

---

அடி, 126 - 7 : "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண், புலராக் காழகம் புலர வுடீஇ" (முருகு. 183 - 4)

அடி, 132 : "கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல். புறத். 24) என்பதையும் அதன் உரைகளையும் பார்க்க.

அடி, 134. மகட்பாற் காஞ்சி : "ஏந்திழையாட் டருகென்னும், வேந்தனொடு வேறுநின்றன்று" (பு. வெ. 184)

அடி, 136 : "எதிரூன்றல் காஞ்சி" (பழைய பாடல்)

பெருங்காஞ்சி : "தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல், வீங்கு பெரும் படையின் வெளிப்படுத் தன்று" (பு. வெ. 66)

[1] "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்", "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (சிலப். 25 : 169, 26 : 14); "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, அந்தி லெழுதிய வற்புதப் பாவை", "கடவு ளெழுதிய, அந்திற்பாவை" (மணி. 7 : 94 - 5, 15 - 33 - 4)

(பி - ம்.) † 'கற்கொண்டு பெயர்ந்து' ‡ 'மறத்தகு' § 'செய்தியோ' ‖ 'மார்பத்து' ¶ 'கடவுளாகவோர்'

நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி
அலர்மந் தாரமோ டாங்கயன் மலர்ந்த
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
மேம்பட மலைதலுங் †காண்குவ லீங்கெனக்
குடைநிலை வஞ்சியுங் கொற்ற வஞ்சியும்
நெடுமா ராய நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன்பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் பெருஞ்சோற்று ‡வஞ்சியும்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்

---

137 - 40. சென்னியிலே மந்தாரமாலையோடு வேங்கைப்பூ இடையிட்டுத் தொடுத்த மாலையைத் தான் சூடிநிற்குமதுவுங் காண்பேன்; [அவையும் வெட்டுவனென்பதாம்.] 146. வட்கர் போகிய - இடையில் முரிவில்லாத; நேராதார் போகைக்குக் காரணமாகிய போந்தையென்றுமாம்.

---

அடி, 137 "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி" (சிலப். 26 : 54)

அடி, 141. குடைநிலைவஞ்சி - குடைநாட்கோடல்; "பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று" (பு - வெ. 38). கொற்றவஞ்சி - அரசனது வெற்றியின் மிகுதி; "வையகம் வணங்க வாளோச் சினனெனச், செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று" (பு - வெ. 42)

அடி, 142. மாராயவஞ்சி - அரசனாற் சிறப்பெய்துநிலை; "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத். 8, இளம். ந.); "மறவேந்தனிற் சிறப்பெய்திய, விறல்வேலோர் நிலையுரைத்தன்று" (பு. வெ. 46)

அடி, 143. பெருவஞ்சி - பகைவர்நாட்டைக்கொளுத்தல்; "முன்னடையார் வளநாட்டைப், பின்னருமுடன் றெரிகொளீஇயன்று" (பு. வெ. 57)

அடி, 144. பெருஞ்சோற்றுவஞ்சி - வீரர்களுக்குப் பெருஞ்சோறளித்தல்; "பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்" (தொல். புறத். 8, இளம். ந.); "திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப், பெருஞ்சோறுடவர் பெறுமுறை வகுத்தன்று" (பு. வெ. 58)

அடி, 145. கொற்றவள்ளை - அரசன் பிரதாபத்தைக் கூறுவதுடன் பகைவர்நாடு அழிந்ததற்கு இரங்கல்; "குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்" (தொல். புறத். 8, இளம். ந.); "மன்னவன் புகழ்கிளந், தொன்னார்நா டழிபிரங்கின்று" (பு. வெ. 43). அடி, 146. "வட்கர் போகிய வளரிளம் போந்தை" (புறநா. 100). அடி. 146-7 : அரசர் தமக்குரிய அடையாளப் பூக்கள் முதலியவற்றுடன் புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம் சூட்டிக்கொள்ளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும் மரபு; இதனை, "பொலந்தோட்டுப் பைந்தும்பை, மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ", "வேம்பி னொண்டளிர், நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து", "போந்தை, யுச்சிக் கொண்ட வூசி வெண்டோட்டு, வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச், சுரியிரும் பித்தை பொலியச் சூடி" (புறநா. 22, 77, 100); "இளவரிக் கவட்டிலை

(பி - ம்.) † 'காண்குவ மீங்கெனக், கொடை' ‡ 'வஞ்சியும், வட்கார் வான்பணைத் தோட்டுடன் பூட்கை'

புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாண் மலைந்த வஞ்சிசூ டுதுமெனப்
பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென
வில்லவன் கோதை வேந்தற் குரைக்கும்
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி
†பகைபுறத்துத் தந்தன ராயினு மாங்கவை
திசைமுக வேழத்தின் செவியகம் ‡புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
¶பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது
கங்கைப் பேர்யாற்றுக் கடும்புன னீத்தம்
எங்கோ மகளை யாட்டிய §வந்நாள்
ஆரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்
கொருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்

---

147. பூட்கை - மேற்கோள்; புட்கை : விகாரம்.
(141) 'குடைநிலைவஞ்சி' முதலாக, (144) 'பெருஞ்சோற்றுவஞ்சி' ஈறாகத் தன்சேனைக்குச் (147) சூட்டி.
148. பூவாவஞ்சி - கருவூர்.
150-51. 'பல்யாண்டு வாழ்க' என்று இனிச் சொல்லுகின்றான், வில்லவன் கோதையென்னும் மந்திரி.
152. நும்மையொக்கும் வேந்தரென்றான், குலம்பற்றி.
153-5. புலிக்கொடியும் கயற்கொடியும் பகைக்களத்திலே உனக்குத் தந்து ஓடினாராயினும் அவை எங்கும் பரந்து திக்கயங்களின் செவியகம் புக்கன. 158. தமிழ்ப்படை மயங்கிய செருக்களம்.
159. கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது - நீ நின்யானையை விட்டபடி என் கண்ணினின்றும் போகாது.
161. எங்கோமகளென்றது செங்குட்டுவன்மாதாவை; அவளை இவன் கொண்டுபோய்த் தீர்த்தமாட்டினது ஒரு கதை.
162-4. ஆரியவரசர் ஆயிரவர்க்கு நீயொருவனாகச்செய்த போர்க் கோலங்கண்டது கூற்றமன்றோ.

---

யாரொ டேர்பெறத், துளவிய றும்பையுஞ் சுழியச் சூடினான்" (கம்ப. முதற்போர், 115) என்பவற்றாலுமுணர்க.
அடி, 148: "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி" (சிலப். 26 : 50); "பூவா வஞ்சியுந் தருகுவன்" (புறநா. 32 : 2); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்" (மணி. 26 : 78)
அடி, 157. கங்கர் கட்டியர் - தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றரசர் மரபினர்; "நன்ன னேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகநா. 44 : 7-8)
(பி-ம்.) † 'பகைப்புறத்துத்' ‡ 'புக்கெனக்கொங்கர்' ¶ 'வங்களர் கங்கர் வல்வேற்' § 'நன்னாள்'

இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை †யாயி னேற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
இமய மால்வரைக் கெங்கோன் செல்வது
கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் ‡கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென
நாவலந் தண்பொழி னண்ணா ரொற்றுநம்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா
வம்பணி யானை வேந்த ரொற்றே
தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றோ
அறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப
நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த
வாடா வஞ்சி மாநகர் புக்கபின்

---

168. செல்வது - செல்லுகிறபடியை.

165-72. இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடாக்கவேண்டி இமயத்தே கற்கால் கொளக்கருதின், ஏற்பார் யாரென்று அரசனுக்குச்சொல்லி ஓலை யெழுதுகவென்றான்.

171-2. வில்லுக் கயல் புலி இவையிற்றினையுடைய இலச்சினை மண்ணேற்ற ஓலைகளை மன்னர்க்கெல்லாம் வரைகவென.

மேல் அழும்பில்வேள் கூற்று :—

173-7. நண்ணார் வரவிட்ட ஒற்றுப்பிரியா ; ஆகையால் அவ் வொற்றே அரசர்செவிக்கு அறிவிக்கும் தன்மையையுடைய ; வடதிசைக் குச் செலவு ஆனைமேல் இங்கே பறையறைய அடுக்குமென்றான்.

178. பகைமேற்செல்பொழுது நிறுத்துதலரிய தானை. நேர்ந்து - உடன்பட்டு.

179-80. வஞ்சிக்கூட்டு - எடுத்துச்செலவாற்கொண்ட திறை ; அதனாற் பொலிவுபெற்ற கருவூரிலே திரியச்சென்று புக்கபின்.

அரசன் பேராற்றங்கரையினின்றும் போந்து புக்கபின் என்க.

---

அடி, 165. சிலப். 3 : 37 ; **பதிற்.** 2-ஆம் பத்துப் பதிகம் ; **மணி.** 17 : 62.

அடி, 166-7 : "இதுநீ கண்ணிய தாயி னிருநிலத், தியார்கொ லளியர் தாமே" (புறநா. 52 : 7-8). அடி, 169 : சிலப். 26 : 151. அடி, 173. நாவலந் தண்பொழில் : சிலப். 17. (1) : 3, கு-ரை.; **மணி.** 22 : 29.

அடி, 177 : "அழும்பில் வேளோ டாயக் கணக்கரை" (சிலப். 28 : 205) ; "பெரும்பூட் சென்னி, அழும்பி லன்ன வருஅ யாணர்" (அகநா. 44 : 14-5) ; "மான விறல்வேள், அழும்பில் ; (மதுரைக். 344-5)

அடி, 178. "நிறையருந் தானை" (புறநா. 156 : 5 ; மணி. 9 : 26)

**(பி-ம்.)** † 'யாகலினெதிர்ப்பவர்' ‡ 'கயல்புலிமண்டலையொற்றுவருக'

வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதொ றூழி யுலகங் †காக்கென
விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு ‡பெயருமெங் காவல னாதலின்
வடதிசை மருங்கின் மன்ன ரெல்லாம்
இடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற்
கடற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையும்
கேட்டு வாழுமின் கேளீ ராயின்
தோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின்
தாழ்கழன் மன்னன் றன்றிரு ¶மேனி
வாழ்க சேனா முகமென வாழ்த்தி
இறையிக லியானை யெருத்தத் தேற்றி
அறைபறை யெழுந்ததா லணிநகர் மருங்கென்.

---

181. 'வாழ்க' என்றதுமுதல் பறையறைகின்றார் வார்த்தை.

184. எங்காவலன் பெயருமென்பதை முற்றாக்கி ஆதலினென்க.

186 - 9. எதிரேற்றுக் காணீராயின், கடலுட்புக்கும் மலையிலேறியும் உறைமினென்பார், இரண்டு வார்த்தையும் கேட்டு வாழுமினென்றார். [அவ்விடத்துப்படை அதன் புகழேயாதலான், அவ்விடங்களிற் செல்லாது ஈண்டே உறைமினென்பார், அரசன் போர் கருதினதிசையிற் போம்படியைக் கேளீராயினென்றார்.]

190. தோட்டுணை - மகளிர். துறவு - தவம்.

191 - 2. திருமேனியாகிய சேனாமுகம்; சேனாமுகம் அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்றார்.

193. இறையிகலியானை - பட்டவர்த்தனம்.

194. பறை - பறையொலி. காட்சி - கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல்.

(உ௬) காட்சிக்காதை முற்றிற்று.

---

அடி, 181 - 2 : சிலப். 11 : 15 - 6, 27 : 139 - 40, 28 : 185 - 6.
அடி, 183 - 4 : சிலப். 25 : 118 - 9
அடி, 185 : சிலப். 25 : 170, 26 : 13.
அடி, 187 - 8 : சிலப். 23 : 81 - 2, 28 : 135 - 6.
(பி-ம்.) † 'காக்கவில்' ‡ 'பெயருங்காவலன்' ¶ 'மேனியாயசேனா'

இருபத்தாறுவது

# கால்கோட் காதை

அறைபறை யெழுந்தபி னரிமா னேந்திய
முறைமுதற் கட்டி விறைமக னேற
ஆசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி
முன்னிய †திசையின் முறைமொழி கேட்ப
‡வியம்படு தானை விறலோர்க் கெல்லாம்
உயர்ந்தோங்கு வெண்குடை யுரவோன் கூறும்
இமையத் தாபத ரெமக்கீங் ¶குணர்த்திய
அமையா வாழ்க்கை யரைசர் வாய்மொழி
நம்பா §லொழிகுவ தாயி னாங்கஃ
தெம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
‖செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்

---

3-6. தானைத்தலைவர் தம்மொடு ஆசான் பெருங்கணி அருந்திறல் அமைச்சர் கூடி ஏத்திக் கேட்ப.

(7) ஏவப்பட்ட தானைத்தலைவர்க்கெல்லாம் (8) கூறுமென்க.

9. தாபதர் - தீர்த்தமாட இமயத்தினின்றும் வந்த தாபதர்.

10. அமையா வாழ்க்கை - நிரம்பாத உயிர் வாழ்க்கை ; பலமில்லாத வாழ்க்கை யெனலுமாம். அங்குள்ள ஆரியமன்னர் சொன்ன வார்த்தை.

11-2. நம்பால் ஒழிகுவதாயின் - அது நம்மிடத்தே கிடப்பதொரு வார்த்தையாயின் ; [அவர்க்குப் பலியாது] நம்மிடத்தே கிடந்துவிடிற் சோழ பாண்டியரிடத்தில் இகழ்ச்சியும் தரும்.

---

அடி, 9-15: "தென்றமிழ் நாடாளும் வேந்தர்......நங்கைதன்னை நீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மை நீங்கி" (சிலப். 29 : உரைப்பாட்டு மடை)

அடி, 17-8: "பழியொடு படராப் பஞ்சவ வாழி", "வேத்தின நடுக்கும் வேலோன்" (சிலப். 20 : 33, 26 : 127)

(பி-ம்.) † 'திசைமென்' ‡ 'வியன்படு' ¶ 'குரைத்த' § 'லொழிவ தாயி' ‖ 'செருகழல் புனைந்து'

†குடிநடுக் குறூஉங் கோலே னாகென
ஆர்புனை தெரியலு மலர்தார் வேம்பும்
சீர்கெழு மணிமுடிக் கணிந்தோ ரல்லால்
அஞ்சினர்க் களிக்கு மடுபோ ரண்ணனின்
வஞ்சினத் தெதிரு மன்னரு முளரோ
இமைய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்லர்
அமைகநின் சினமென வாசான் கூற
ஆறிரு மதியினுங் காருக வடிப்பயின்
‡றைந்து கேள்வியு மமைந்தோ னெழுந்து
வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்றம்
இருநில மருங்கின் மன்ன¶ரெல் லாநின்
திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்
முழுத்த மீங்கிது முன்னிய திசைமேல்
எழுச்சிப் பாலை §யாகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென
உரவுமண் சுமந்த வரவுத்தலை பனிப்பப்

18. ஆகவென்று சொல்ல.

19-24. இமயவரம்ப! சோழபாண்டியரை யல்லது நின்னை இகழ்ந்து கூறினரல்லர்; அடுபோரண்ணலே? நீ வஞ்சினங் கூறுதற்கு நின்னுடன் எதிர்க்கும் மன்னரும் உளரோ; ஆதலால், நின் சினம் தணிகவென்றான்; இது புரோகிதன் வார்த்தை.

25. ஆறிரு மதியினும் - இராசி பன்னிரண்டிலும். காருகவடி - கிரகநிலை.

26. ஐந்து கேள்வி - திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம்; நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசக்கோளுமாம். அமைந்தவன் - [1]மௌத்திகன்.

30-31. இது [2]முழுத்தம்; எழும் பக்கத்தையாகவெனச் சொல்ல.

34. உரவு மண் - உரத்த மண்.

அடி, 18 சிலப். 19:28, கு-ரை. அடி, 21. அஞ்சினர்க்களித்தல்: **சிறுபாண்.** 210, அடி, 25-31: முல்லை. 55-8.

அடி, 33. "வாளுங் குடையு மயிர்க்கண் முரசும், நாளொடு பெயர்த்து," "மறமிகு வாளு மாலைவெண்குடையும். புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்தி" (சிலப். 5:91-2. 26:44-5); "குடைநாட் கொளல் வாணாட்கொளல் குறியாவர சவுணன், உடைநாளழி வறியாதவ னுரனென்றிய வாழிப், படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயாய், அடையாவமர் வுற்றுலன முடிமீக்குடை நிழல" (**தணிகைப்.** சீபரி. 63)

[1] மௌத்திகன் - மௌகூர்த்திகன்.

[2] முழுத்தம் - முகூர்த்தம்; இது மூகிழ்த்தமெனவும் வழங்கும்.

(பி-ம்.) † 'குடிநடுக்குறுக்குங்' ‡ 'ருறைந்து' ¶ 'ரெல்லாந்திரு' § 'யேகென்'

பொருந ரார்ப்பொடு முரசெழுந் †தொலிப்ப
இரவிடங் கெடுத்த ‡நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோ
டைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
¶வெம்பரி யானை வேந்தற் கோங்கிய
கரும வினைஞருங் கணக்கியல் வினைஞரும்
தரும வினைஞருந் தந்திர வினைஞரும்
மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்
பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் வஞ்சி போதையிற் றொடுப்போன்
அரைசுவிளங் கவைய §முறையிற் புகுதர
அரும்படைத் தானை யமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் பெருஞ்சோறு வகுத்துப்
பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து

---

36. இரவிடங்கெடுத்த விளக்கிலே யென்றதி..........விடுகிறபடியாலே.................

37. நிரயத்தானை - மாற்றார்க்கு நரக வேதனையைச் செய்யும் தானை.

40. கரும வினைஞர் - புரோகிதர்.

43. பிண்டமுண்ணும் பெருங்களிறு - ..........பிண்டத்துக்குரிய களிறு; பட்டவர்த்தனம்.

45. புகுத்தி - புகவிட்டு. 46. தொடுப்போன் - சேரன்.

---

அடி, 37. நிரயத்தானை : "நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்" (குறுந். 258 : 6); "நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்" (பதிற். 15 : 4)

அடி, 38 : சிலப். 5 : 157; மணி. 1 : 17; பெருங். 2. 5 : 6, 13 : 3; தொல். களவி. 57, ந. மேற்.

அடி 42 : "மண்டிணிந்த நிலனும்" (புறநா. 2 : 1), பு. வெ. 35.

அடி, 46. அரசர், தமக்குரிய அடையாளப்பூ முதலியவற்றோடு புறத்திணைக்குரிய பூ முதலியவற்றையும் விரவுவித்து அணிந்து கொள்ளுதல் மரபு : 25 : 145 - 6, கு - ரை.

அடி, 47. "அரசுவிளங் கவையத்து" (சிலப். 26 : 95)

அடி, 49 : சிலப். 25 : 146; "பெருஞ்சோ றுகுத்தற் கெறியும், கடுஞ்சின வேந்தே" (பதிற். 30 : 43-4)

அடி, 50 : சிலப். 25 : 148.

(பி - ம்.) † 'தார்ப்ப' ‡ 'மாமணி' ¶ 'வெம்பரித் தானை வேந்தர்க்' § 'முறைமையிற்'

ஞாலங் காவலர் நாட்டிறை பயிரும்
காலை முரசங் கடைமுகத் தெழுதலும்
நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு†புனைந்
திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
‡மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
ஆடக மாடத் தறிதுயி ¶லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் §றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
நாடக மடந்தைய ராடரங் கியாங்கணும்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

---

52-3. அரசர் இடும் திறையை அழைக்கும் முரசம்.
58. ஏந்திய-எடுத்த. புகை-அக்கினி கோத்திரம்.
57-8. அக்கினி கோத்திரங்களையும் நமக்கரித்து.
62. ஆடகமாடம் - திருவனந்தபுரம் : இரவிபுரம் என்பாரும் உளர்.
(60) ஏறினன் (67) தாங்கினனாகிச் செல்வுழி.
69. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக் கை.

---

அடி, 53 : சிலப். 17 : 5-6, கு-ரை. அடி, 54 : சிலப். 25 : 137. அடி, 55-7, இறைவனை யன்றிப் பிறரை வணங்காச் சென்னி : “ கடவுளை வழிபடி னல்லது, வணக்க மில்லா வணித்தகு சென்னி ” (பெருங். 1. 42 : 8-9) ; இறைவன் கோயிலை வலம்வந்து வணங்கல்: “ பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே ” (புறநா. 6 : 17-8). அடி., 61 : “ குடக்கோச் சேரலன் குட்டுவன் பெருந் தகை ” (மணி. 28 : 103). அடி, 62 : “ ஆடக மாடத் தரவணைக் கிடந் தோன் ” (சிலப். 30-51) ; “ ஆடகமாடம் ” (இறை. 23, மேற்.) அடி, 68 : சிலப். 27 : 245-50.

(பி-ம்.) † ‘பொருந்தி, யிறைஞ்சாச்’ ‡ ‘மறையோ ராக்கிய வாகுதி நறும்புகை, நறைகெழு மாலை நல்லகம்’ ¶ ‘லமைந்தோன்’ § ‘றேத்த, நாடக மடந்தையர்’

வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ
டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை †கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
மாகதப் புலவரும் ‡வைதா ளிகரும்
சூதரும் நல்வலந் தோன்ற வாழ்த்த
யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாள் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
¶தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
வெண்டலைப் §புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுது குநெளிய நிலைநா டதர்பட
உலக மன்னவ னொருங்குடன் சென்றாங்
காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்
பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்றன்
இருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்

70 - 71. அரசர்சூடுவன யானைக்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பையும் போந்தையோடு நின் யானைமுகத்து ஓங்கித் தோன்ற வென்றார்.

(68) நாடகமடந்தையர் (73) காட்சியை யுடையையாகவென வாழ்த்தா நிற்க.

75. நல்வலம் - களவெற்றி. 78. தானவர் - அசுரர்.

80. தார் - தூசிப்படை. 81. கடற்கரை அருகே போத.

85. நீலகிரி : ஒருமலை. 88. நடுவுநிலை விரும்புவோன்.

88 - 9. சேரன் தான் ஆள்கின்ற பூமிதேவிக்குத் திருவடியளித்து; அங்கே யானையினின்றிழிந்து கால் நிலம் தோயச்செய்தலால்.........

அடி, 70 : “போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை”, “தோடார் போந்தை தும்பையொடு முடித்து” சிலப். 26 : 219, 27 : 45)

அடி, 74 - 5 : “சூதர் மாகதர் வேதா ளிகரொடு” (சிலப். 5 : 48); “சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு” (மதுரைக். 670 - 71)

அடி, 77 : “வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த” (சிறுபாண். 212)

அடி, 80, தலைத்தார்ச்சேனை : மணி. 19 : 123.

அடி, 81 : “வெண்டலைப் புணரி” (புறநா. 2 : 10, 31 : 14)

அடி, 86 : ஆடியல்யானை : புறநா. 165 : 7 ; பெருங். 2. 10 : 15.

(பி - ம்.) † ‘கவருங்கண்’ ‡ ‘வேதாளியரும்’ ¶ ‘தண்டத் தலைவருந் தலைச்சார்ச் சேனை’ § ‘புணரி விசும்புசூழ் போக’

கருந்திறன் மாக்க ளடியீ டேத்தப்
பெரும்பே ரமளி யேறிய பின்னர்
இயங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப
விசும்பியங்கு முனிவர் வியனில மாளும்
இந்திர திருவனைக் †காண்குது மென்றே
அந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து
மின்னொளி மயக்கு மேனியொடு தோன்ற
மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்
செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய ‡வானவ கேளாய்
மலயத் தேகுதும் வான்பே ரிமய
நிலயத் தேகுத னின்கருத் தாகலின்
அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர்
¶பெருநில மன்ன காத்தனின் கடனென்
றுங்கவர் வாழ்த்திப் போந்ததற் பின்னர்
வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடரும்
§தங்குலக் கோதிய தகைசா லணியினர்
இருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய வொலியன் மாலையர்
வடஞ்சுமந் தோங்கிய வளரிள வனமுலைக்
கருங்கய னெடுங்கட் காரிகை யாரோ
டிருங்குயி லால வினவண் டியாழ்செய

92. இயங்குபடை - சேனை; வெளிப்படை. இசைப்ப - இசைத்தலால்.

101. நிலயத்து - நிற்கிறவிடத்து.

102-4. அங்கு அந்தணர் வாழ்வாருளர்; அவர்களை நலியாது காத்தல் நினது கடனென்று பெயர்ந்தபின்.

106. கொங்கணதேசத்துக்கூத்தர்.

107. குலத்திற்கு ஓதிய ஒப்பனையினராய். 108. குஞ்சியிடத்து.

109. ஒலியன்மாலை - தழைத்த மாலை.

அடி, 95. அரசுவிளங்கவையம் : சிலப். 26 : 47.

அடி, 98-9: "ஆனே றூர்ந்தோ னருளிற் றோன்றி, மாநிலம் விளக்கிய மன்னவன்" (சிலப். 30 : 141-2). அடி, 105 : சிலப். 26 : 155, 173.

அடி, 106. பிரயோக. 2, உரை, மேற்.

அடி, 108 : "இருள்படப் பொதுளிய" (முருகு. 10)

(பி-ம்) † 'காண்குவ' ‡ 'வானவன்' ¶ 'பெருநிலை' § 'தன்குலக் கெழுதிய'

அரும்பவிழ் வேனில் வந்தது வாரார்
காதல ரென்னு மேதகு சிறப்பின்
மாதர்ப் பாணி வரியொடு தோன்றக்
கோல்வளை மாதே கோலங் கொள்ளாய்
காலங் காணாய் கடிதிடித் துரறிக்
காரோ வந்தது காதல ரேறிய
தேரோ வந்தது செய்வினை முடித்தெனக்
காஅர்க் குரவையொடு கருங்கய னெடுங்கண்
கோற்றொடி மாதரொடு குடகர் தோன்றத்
தாழ்தரு கோலத்துத் †தமரொடு சிறந்து
வாள்வினை முடித்து மறவாள் வேந்தன்
ஊழி வாழியென் றோவர் தோன்றக்
கூத்துள் ‡படுவோன் காட்டிய முறைமையின்
ஏத்தின ரறியா விருங்கல ¶னல்கி
வேத்தின நடுக்கும் வேலோ னிருந்துழி
நாடக மகளிரீ ரைம்பத் திருவரும்
§கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மரும்
தொண்ணூற் றறுவகைப் பாசண் டத்துறை
நண்ணிய நூற்றுவர் நகைவே ழம்பரும்
கொடுஞ்சி நெடுந்தே ரைம்பதிற் றிரட்டியும்
கடுங்களி யானை யோரைஞ் ஞூறும்
ஐயீ ராயிரங் கொய்யுளைப் புரவியும்
எய்யா வடவளத் திருபதி னாயிரம்
$கண்ணெழுத்துப் படுத்தன கைபுனை சகடமும்

115. பாணிவரி - இப்பொருள் வைத்த உரு.
(120) கார்காலத்தைப் பாடின பாட்டோடு (121) இவர்கள் தோன்ற; இவர் குடகர்.
124. ஓவர்-ஏத்தாளர். 125. கூத்துள்படுவோன் - ஆடலாசிரியன்.
135. எய்யா வளம் - புறம்பு ஓரிடத்தும் கண்டறியா வளம்; அது தான் வடக்கிற் பாகுடம்.
136. இன்னசரக்கென்று எழுத்துப்படுத்தன: சகடம் - கொல்லாப் பண்டி.

அடி, 127 : சிலப். 26 : 17 - 8. அடி, 130 : சிலப். 9 : 14-5, அடி, 131. நகை வேழம்பர் : சிலப். 5 : 53. [அடியார்.
அடி, 136. "கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதி" (சிலப். 5 : 112)
(பி - ம்.) † 'தமரொடுஞ் சிறந்து, வாழ்வினை' ‡ 'படுவோள்' ¶ 'நல்க வேத்தினர் நடுக்கும்' § 'கூடைக் குயிலுவ' $ 'கண்ணெழுவுடையன கைபுனை சகடமும்'

சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக †முதல்வரீ ரைஞ்ஞூற் றுவரும்
சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே
வாயி லோரென வாயில்வந் திசைப்ப
நாடக மகளிரு நலத்தகு மாக்களும்
‡கூடிசைக் குயிலுவக் கருவி யாளரும்
சஞ்சயன் றன்னொடு வருக வீங்கெனச்
செங்கோல் வேந்தன் றிருவிளங் கவையத்துச்
சஞ்சயன் புகுந்து தாழ்ந்துபல வேத்தி
ஆணையிற் ¶புகுந்தவீ ரைம்பத் திருவரொடு
மாண்வினை யாளரை வகைபெறக் காட்டி
வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னருங் §கோற்றொழில் வேந்தே
வடதிசை ||மருங்கின் வானவன் பெயர்வது
கடவு ளெழுதவோர் கற்கே §§யாயின்
ஓங்கிய விமயத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்
கியாந்தரு மாற்றல மென்றனர் என்று
வீங்குநீர் ஞால மாள்வோய் வாழ்கென
அடல்வேன் மன்ன ராருயி ருண்ணும்
கடலந் தானைக் காவல னுரைக்கும்
பால குமரன் மக்கண் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்

---

137. சஞ்சயன் - தூதரில் தலையாயவன். தலைக்கீடு - மயிர்க்கட்டு.

138. கஞ்சுகமுதல்வர் - சட்டையிட்ட பிரதானர்.

146. ஆணையிற் புகுந்த ஈரைம்பத்திருவரென்றது முன்சொன்ன நாடக மகளிரை ; கன்னரென்பார் வரக்காட்டினர்.

158 - 9. பாலகுமரன் மக்கள் - கனகனும் விசயனுமென்பார்.

---

அடி, 150 - 51 : “இமய மால்வரைக் கெங்கோன் செல்வது, கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்” (சிலப். 25 : 168 - 9). அடி, 155. சிலப். 26 : 105, 173.

அடி, 159 : “யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு” (குறள், 127); “ஆக்கப் படுக்கு மருந்தனை வாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும், காக் கப்படுவன விந்திய மைந்தினும், நாக்கல தில்லை நனிவெல்லு மாறே” (வளையாபதி)

பி- ம்.) † ‘முதல்வ ரைஞ்ஞூற் றுவரும்’ ‡ ‘கூடிய குயிலுவக்’ ¶ ‘புகுந்தவைம்பதி...னரமாண்வினை’ § ‘கோத்தொழில்’ || ‘மருங்கு வான்பே ரிமையத்துக்’ §§ ‘யாகி, லோங்கியர்’

விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கெனக்
†கூற்றக் கொண்டிச் சேனை செல்வது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்கள்
எஞ்சா நாவின ரீரைஞ் ஞாற்றுவர்
சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்தும்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து
‡கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
மண்ணுடை ¶முடங்கலம் மன்னவர்க் களித்தாங்
காங்கவ ரேகிய பின்னர் மன்னிய
வீங்குநீர் ஞால மாள்வோ னோங்கிய
நாடாள் செல்வர் நலவல னேத்தப்
பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து

---

160. விருந்தின் மன்னர் - தமிழ் வேந்தர் ஆற்றல் அறியாத புதிய அரசர்.

160-61. இவருடன் கூடித் தமிழ் வேந்தரை இகழ்ந்து உரைத்தார்.

162. கூற்றம்போலும் கொண்டிச்சேனை. 'கூற்றங் கொண்டிச் சேனை செல்வது' என்று பாடமாயின், கூற்றம் பின்செல்ல இப்படை செல்லுகிறபடியையென்க.

161-2. அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலரென்று சேனை செல்வதெனச் சேனை மேலிட்டுக் கூறினான்; தனக்கு அவர் நிகரன்மையின்.

166. கஞ்சுகமாக்கள் - தன் தூதர்.

167. எஞ்சா நாவினர் - வார்த்தை தப்பாத நாவினர்; அரசன் நினைவு தப்பாத நாவினரென்றுமாம்.

168. தாழ்நீர் - தங்குநீர்மை.

168-9. சந்தும் முத்துமாகிய தென்னரிட்ட திறை.

169. கொணர்ந்து - கொணர.

170. கண்ணெழுத்தாளர் - திருமுகமெழுதுவார்.

170-72. இவர் வரைந்து இலச்சினையிட்டு அவர்கைக்கொடுப்பத் திருமுகங்கொண்டு அவர் போயபின்.

171. அளித்து - அளிப்ப.

---

அடி. 161. தமிழ் - தமிழப்படை; **சிலப்.** 27 : 5; **பதிற்.** 63 : 9; **புறநா.** 19 : 2. அடி, 168. சந்தனமும் முத்தும் தென்னர்க்குரியன : **சிலப்.** 17 : (29) கு - ரை.

அடி, 171 : "மண்ணுடை முடங்கன் மாதவி யீத்ததும்" (**சிலப்.** 13 : 76)

அடி, 173 : **சிலப்.** 26 : 105, 155.

(பி - ம்.) † 'சீற்றங்கொண்டு' ‡ 'கண்ணெழுத் தாளரொடு காவல்' ¶ 'முடங்கன் மன்னவற்கு'

கங்கைப்பே ரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் †கெய்தி
ஆங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங்
கோங்குநீர் வேலி யுத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை ‡யிருந்த
தகைப்பருந் தானை மறவோன் றன்முன்
உத்தரன் விசித்திர னுருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் ¶றனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாம்
தென்றமி ழாற்றல் §காண்குதும் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
இரைதேர் வேட்டத் தெழுந்த வரிமாக்
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேன் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
||வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயிர்
$இடிக்குரன் முரச மிழுமென் பாண்டில்
உயிர்ப்பலி யுண்ணி முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்

---

179. உத்தரம் - வடபூமி.

182 - 4. உத்தரன் விசித்திரன் முதலான மன்னவர்கள் கனகவிசயர்க்குத் துணையான அரசர்.

185 - 7. தமிழாற்றலைக் காண்டுமெனக் கனகவிசயர் தானையுடனே ஒத்துவர.

190. பாய்ந்த பண்புபோல.

191. காஞ்சித்தானை - [1]எதிரூன்றிய தானை.

194. பாண்டில் - கஞ்சதாளம்.

196. மாதிரமதிர்தல் - இவை அதிரத் தானுமதிர்தல்.

194 - 6. முரசமுதலிய இவையிற்றோடு.

---

அடி, 184. கனகனும் விசயனும் : மணி. 26 : 86 ; சிலப். 26 : 13.

அடி, 187 : " நிலந்திரைக்குங் கடற்றானை " (புறநா. 97 : 14)

அடி, 195 - 6 : " உயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து,

[1] " உட்காது, எதிரூன்றல் காஞ்சி " (பழம்பாடல்)

(பி - ம்.) † 'கேறி, யாங்கவ ரெதிர்கொள வவர நாடுகழிந், தோங்கு நீர்' ‡ 'இராஅத், தகைப்பெருந்தானை' ¶ 'றநுத்திரன்' § 'காண்குவநா மெனக்' || 'வெயிற்கொடி' $ 'இடிக்கண்'

† சிலைத்தோ ளாடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தே ரூருநர்
வெண்கோட் டியானையர் ‡ விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மா நிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
§ விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவும்
நடுங்குதொழி லொழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாருந் தாருந் || தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோண் மறவ ¶ ருடற்பொறை யடுக்கத்
தெறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
$ பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்
பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்
கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட
†† அடுந்தேர்த் தானை யாரிய வரசர்

198. கறைத்தோல் - கருங்கடகு.
202. கொடிநந்து - கொடியும் சங்கும் முகத்துக்கட்டுவர்போலும்: 'சங்கின் நா' என்றார், பேசுதலால்; ஒலிபற்றி.
203. ஒழிந்து - ஒழிய. உள்ளே துகள் செறிய.
206. உடற்பொறை - உடற்பாரம். 207. எறிபிணம் - வெட்டுண்ட பிணம்.
208. பேய்மகள் தாளத்துக்குக் கவந்தம் ஆட.

மயிர்க்கண் முரசு" (சிலப். 5 : 87-8); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" (மதுரைக். 732-3); "உருமிடி முரசமொடு" (முருகு. 121); "ஏற்றுரி போர்த்த...... முரசு" (மணி. 1 : 29-31); "சாற்றிடங் கொண்ட வேற்றுரி முரசும்", "ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" (பெருங். 1. 38 : 100, 33 : 195); "ஏற்றுரி முரச நாண" (சீவக. 2142). அடி, 204. 'தார் - தூசிப்படை; தூசிப்படைக்கிலக்கணம், துன்னூசியின் முகம் போல நேர்ந்து நெடுகி இடை பரந்து கடைதிரண்டு பரந்து சுழன்று வெளிப் பட்டிருத்தல்' (தக்க. 515, உரை). அடி, 208. "பறையன்ன விழித்த கண்ணுள்" (தகடூர்யாத்திரை). "பேய்க்க ணன்ன பிளிறுகடி முரசம்" (பட்டினப். 236). அடி, 209-10. "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப், பிணந்தின் யாக்கைப் பேய்மகள்" (பட்டினப். 259-60)

(பி - ம்.) † 'சிலைக்கோ ளாடவர்' ‡ 'விடுபரிக்' § 'விளங்கொளி' || 'தம்மிடை' ¶ 'ருடற்பொறி' $ பறைக்குரற்' †† 'நெடுந்தேர்த்'

கடும்படை மாக்களைக் கொன்றுகளங் †குவித்து
நெடுந்தேர்க் கொடுஞ்சியுங் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட
எருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை
ஒருபக லெல்லையி னுண்ணு மென்ப
தாரிய வரச ரமர்க்களத் தறிய
நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
ஓங்கிருஞ் சென்னி மேம்பட ‡மலைய
வாய்வா ளாமையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனுங் விசயனும்
ஐம்பத் திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட் டுவன்றன் சினவலைப் ¶படுதலும்
சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர்
பீடிகைப் பீலிப் பெருநோன் §பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளினர்
ஆடு கூத்த ராகி யெங்கணும்
ஏத்துவா ளொழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் || படர்தரக்

215. எருமையாகிய பரியூர்வோன் - கூற்றுவன்.
218. நூழிலாட்டுவதாக.
221. வாய் வாளாமை - வாய் வறிது இராமை.
225. உடையினர் - காஷாய முதலிய உடையினர் ; சந்நியாசிகள்.

அடி, 215-8 : “மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையும், நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய” (புறநா. 19 : 3-4)
அடி, 216 : “ஒருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட”, “ஒருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி” (சிலப். 27 : 12, 130)
அடி, 217 - 8 : “ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித் தோன் வஞ்சி” (அகநா. 396 : 16-9)
அடி. 220 : “ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த” (பொருந. 145)
அடி, 221 - 2 : “அரியிற் போந்தை யருந்தமி ழாற்றல், தெரியாது மலைந்த கனக விசயரை” (சிலப். 27 : 189-90)
அடி, 225-8 : “மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழி தொறு மேய்வுற்றார், ஊனார் பறவையின் வடிவுற் றார்சிலர் சிலர் நான் மறையவ ருருவானார், மானார் கண்ணிள மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றார், ஆனார் சிலர்சில ரையா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்” (கம்ப. அக்க. 40)
(பி - ம்.) † ‘குவித்து, நூழிலாட்டிய’ ‡ ‘மலைந்து’ ¶ ‘படுத்தலும்’ § ‘பாளரிற்’ || ‘படர்ந்த’

கச்சை யானைக் காவலர் நடுங்கக்
†கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
‡ஆளழி வாங்கி யதரி திரித்த
வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தித்
தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி
முடியுடைக் கருந்தலை ¶முந்துற வேந்திக்
கடல்வயிறு கலக்கிய ஞாட்புங் கடலகழ்
இலங்கையி லெழுந்த சமரமுங் கடல்வணன்
தேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப்
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை
முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்
தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு
மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்டச்

---

232. யானை எருதாக வாள் பிடிக்கும் கோலாக.
233. ஆளழிவாங்கி - ஆளாகியபோரை இறங்கவிட்டு. அதரிதிரித்த - கடாவிட்ட.
235. தொடிக்கை - பேய்க்கை. தூங்க - அசைய.
236. முந்துற - முன்னுக.
237 - 9. கடல்வயிறு கலக்கிய போர்முதல் மூன்றும் மாயவன் செய்தன. இவன் மேலேற்றிப் பூவைநிலையாற்பாடுதல்.
240 - 41. முன்றேர்க்குரவையிலே முதல்வனை வாழ்த்திப் பின்றேர்க் குரவையிலே ஆடுதலிற் பேய்க்குரவையாயிற்று.
242. பிடர்த்தலையாகிய தாழி.
244. பேய்வாலுவன் - பேய்க்குச்சோறிடு மடையன்.

---

அடி, 231. கச்சையானை : தக்க. 180.
அடி, 232, "யானை யெருத்தின் வாண்மட லோச்சி, அதரி திரித்த" (புறநா. 371 : 15-6)
அடி, 234 : வாளேருழவன் : புறநா. 368 : 13.
அடி, 237 - 9 : சிலப். 27 : 8 - 10, கு - ரை.
அடி, 242 - 3 : "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண் குருதி, சினத்தீயிற் பெயர்புபொங்கத், தெறலருங் கடுந்துப்பின், விறல் விளங்கிய விழுச்சூர்ப்பிற், றொடித்தோட்கை துடுப்பாக, ஆடுற்ற வூன் சோறு, நெறியறிந்த கடிவாலுவன், அடியொதுங்கிப் பிற்பெயராப், படையோர்க்கு முருகயர" (மதுரைக். 29 - 38). "முடித்தலை யடுப் பாகப், புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சி" (புறநா. 26 : 8-10); பு. வெ. 160.
(மேற்.) 233. தக்க. 439, உரை.
(பி - ம்.) † 'கோட்டுமாபூட்டி' ‡ 'வாளரி வாங்கியதிரி திரித்த' ¶ 'முன்னுற'

சிறப்பூண் கடியினஞ் செங்கோற் கொற்றத்
தறக்களஞ் செய்தோ னூழி வாழ்கென
மறக்கள முடித்த வாய்வாட் குட்டுவன்
வடதிசை மருங்கின் மறைகாத் தோம்புநர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கை
காற்றூ தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல வேவிப்
பொற்கோட் டிமயத்துப் †பொருவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னாங்கென்.

249. வாழ்க்கையென்றது, முன்புவந்த ஆகாசசாரிகள் சொன்ன வார்த்தையை (26 : 93-103) நினைந்து.

250. காற்றூதாளரை நீர் போற்றிக் காமினெனச் சொல்லி.

254. கால்கொள்கையாவது - கடவுள் வடிவெழுதத் தொடங்குதல்.

(251) வில்லவன் கோதையோடே (252) படையையேவிக் (254) கற் செய்தலை அடிக்கொண்டான்.

(௨௬) ‡கால்கோட் காதை முற்றிற்று.

---

அடி, 248-9 : "அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர், பெரு நில மன்ன பேணனின் கடனென்று" (சிலப். 26 : 102-3)

அடி, 249. தடவுத்தீ : தடா = தடவு - தூபமுட்டி ; புறநா. 201 : 8; சீவக. 2373. அடி, 253-4 : பதிற். 5-ஆம்பத்துப் பதிகம், 4.

(பி-ம்.) † 'பொதுவறு' ‡ 'கற்கால்கொள்காதை'

## இருபத்தேழாவது

# நீர்ப்படைக் காதை



வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச்
செறிகழல் வேந்தன் றென்றமி ழாற்றல்
அறியாது மலைந்த வாரிய மன்னரைச்
செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த்தொகை †யுண்ட வொன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியு நாளுங் கடிகையும்
ஈண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கின்
ஒருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட
செங்குட்டு வன்றன் ‡சினவேற் றானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நாற் ¶றிறன் மாக்களி னீர்ப்படை செய்து

---

2. கடவுட்பத்தினி - பத்தினியாகிய கடவுள்.

7. செயிர்த்தொழின் முதியோன் - கூற்றுவன்.

8 - 10. [1] உயிர்த்தொகை உண்டனவாகிய ஆண்டும் மதியும் நாளும் கடிகையும் ஒன்பதிற்றிரட்டியென்று அவற்றோடே கூட்டி யெண்ண - தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டிலும், இராமராவணயுத்தம் பதினெட்டு மாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்றெண்ண.

(6) மன்னரை (12) உயிர்த்தொகையுண்ட (13) செங்குட்டுவன்.

---

அடி, 5. தமிழ் - தமிழப்படை; சிலப். 26 : 161, கு - ரை.

அடி, 5 - 6 : சிலப். 27 : 189 - 90.

அடி, 12 : " ஒருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி " (சிலப். 27 : 130)

[1] இக்குறிப்பு, "எண்கொண்ட நாட்பு" (சீவக. 2353) என்னும் மூலத்தாலும், அதற்கு, 'தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்ற போர்' என்றெழுதிய உரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே" (கலிங்க. களம். 1) என்பதனாலும் அழகுற்றுப் பொருட்டொடர்புபெற்று விளங்குதல் காண்க.

அடி, 15 - 6 : பதிற். 5-ஆம் பத்துப் பதிகம், 4 - 7.

(பி - ம்.) † 'யுண்டன னென்பதிற்' ‡ 'செருவேற்' ¶ 'றிறமாக்கள்'

மன்பெருங் கோயிலு மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரும்
உரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையும்
திருமலர்ப் பொய்கையும் வரிகா ணரங்கமும்
பேரிசை †மன்னர்க் கேற்பவை பிறவும்
ஆரிய மன்ன ரழகுற வமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில ‡மன்னர் நெஞ்சுபுக லழித்து
¶வானவ மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோர்
உலையா வெஞ்சம மூர்ந்தம ருழக்கித்
தலையுந் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ணல்லம ரழுவத்து
வாள்வினை முடித்து மறத்தொடு §முடிந்தோ
குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
கிளைக டம்மொடு கிளர்பூ ணகைத்து
வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்
மலைத்துத் தலைவந்தோர் வாளொடு மடியந்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழப்
புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக்

24. வெள்ளிடைப்பாடி - வெளியான நிலத்துப் பாசறை.
26. தெய்வமகளிரால் மாலை சூட்டப்பட்டோராவார் - வீரஞ் செய்து பட்டவர்.
27. ஊர்ந்து - அடர்ந்து.
28. விலைபெற - அரசர்கண்டு நேயத்தோராம்படி.
29. அமரழுவம் - சமரபூமிப் பரப்பு.
30. வாளாற்செய்யும் வினைகளெல்லாவற்றையும் செய்துமுடித்து.
32. வழிமருங்கேத்த - வழியிலுள்ளாரையேத்த.
33. கிளைகள் - போரில் உடனின்று பட்டவர்கள்.
33-4. உறவான வீரர் தம்மொடு மடிந்தோர்; ஸ்திரீகள்மடிய மடிந்தோர்.
36. தலைத்தார் - [1] தூசி. வாகையணிந்தோர் - மாற்றார் புறத்தைத் தாங்கள் பெற்றவளவிலே மீண்டோர்.

[1] தூசி : சிலப். 26 : 204, கு - ரை.

(பி - ம்.) † 'மன்னாற் கொப்பவை' ‡ 'மறவர்' ¶ 'வானவர்' § 'மடிந்தோர்'

கூற்றுக்கண் ணோட வரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொடு நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாள் மறவர்
வருக தாமென வாகைப் பொலந்தோடு
பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்துப்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தன்
ஆடுகொண் †மார்போ டரசுவிளங் கிருக்கையின்
மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்தம்
முடித்தலை ‡நெரித்தது முதுநீர் ஞாலம்
அடிப்படுத் தாண்ட வரசே வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் ¶பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாளா
யாதுநீ கூறிய §வுரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்கும்
கானலந் தண்டுறைக் கடல்விளை யாட்டினுள்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோ
டூடற் காலத் தூழ்வினை யுருத்தெழக்

---

44. பெரியநாளிற் கொடுக்கும் பொழுது ஒழிய நெடும்பொழு திருந்து கொடுத்து; 'பெருநாள்' என்றார் கொடுக்கிற நாளாதலால்.

(26) 'வதுவை சூட்டயர்ந்தோர்' முதல் (34) 'வளையோர் மடிய மடிந்தோர்' இறுதி பட்டவர்களையெண்ணி இவர்கள் மைந்தரென ஓரெண்ணாக்கி மேல் படாது பொருது வென்றவர்களையும் கூட்டி யெண்ணி இவர்களுக்கு (43 - 4) வாகை கொடுத்தென்றார்.

46. வீரரைப்பாடும் புறத்துறையெல்லா முடித்துப் பாட்டுண்ட வேந்தன்.

47. வெற்றிகொண்ட மார்போடே.

53 - 4. மாற்றரசர் பலரும் அறியாத சிரிப்பின் கூறென்றது (51) நெரித்ததென்றதனை. 'நானறியாத நகை' என்னாது 'மன்னர் பலருமறியாத' என்றான் இராசபாவத்தாலே.

---

அடி, 40 : "கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை" (புறநா. 19 : 16)

அடி, 43 : சிலப். 26 : 70 - 71, கு - ரை.

அடி, 45 : சிலப். 27 : 112.

அடி, 46 : "பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்வி" (சிறுபாண். 228); மு. புறநா. 21 : 11.

(பி - ம்.) †'மகளிரோ' ‡'யேற்றி' ¶'பரிசீங் கறியாது' §'வுரை யீங்கென்னென'

கூடாது †பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்
கிலைத்தார் வேந்த ‡னெழில்வா னெய்தக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
குடவர் கோவே நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி *யேறினள்
இன்னுங் கேட்டரு ளிகல்வேற் றடக்கை
மன்னர் கோவே யான் §வருங் காரணம்
மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வேன்
ஊழ்வினைப் பயன்கொ லுரைசால் சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற் சென்றேன்
வலம்படு தானை மன்னவன் றன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை யென்றலும்
தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து
கோவலன் றீதிலன் கோமகன் பிழைத்தான்
அடைக்கல மிழந்தே னிடைக்குல மாக்காள்
குடையுங் கோலும் பிழைத்த வோவென
இடையிரு ளியாமத் தெரியகம் புக்கதும்
தவந்தரு சிறப்பிற் ||கவுந்தி சீற்றம்
நிவந்தோங்கு செங்கோ னீணில வேந்தன்
போகுயிர் ¶தாங்கப் பொறைசா லாட்டி
††என்னோ டிவர்வினை யுருத்த தோவென
உண்ணா நோன்போ ‡‡டுயிர்பதிப் பெயர்த்ததும்
பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்
குற்றது மெல்லா மொழிவின் றுணர்ந்தாங்

---

77. 'பிழைத்தவோ' என்றாள், முன் பிழையாமைபற்றி.
79. சீற்றம் - சீற்றத்தை.
81. சபியாதபடி தணித்தது அவன் மரணம்.
83. ஊணும் மாற்றிப்போய்.

---

அடி, 63 : சிலப். பதி. 31.

அடி, 64 : "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை" (மணி. 28 : 103)

அடி, 74. தாதெருமன்றம் : சிலப். 16 : 102, கு - ரை.

அடி, 83 : "உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக" (சிலப். 25 : 97); "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" (மணி. 14 : 95)

(பி - ம்.) † 'பிரிந்த' ‡ 'லுயர்வா னெய்தக்' * 'யேற்றினள்' § 'வருகாரண, மமரமுனிவனமலை' || 'கவுந்தியடிகள்' ¶ 'தாங்காப்' †† 'என்னொடுவர்வினை' ‡‡ 'டுயர்பதிப் பெயர்ந்ததும்'

கென்பதிப் பெயர்ந்தே னென்றுயர் †போற்றிச்
செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் ‡குரைக்க
மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதும்
செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
¶மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங்
கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் §பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவும்
துறந்தோன் மனைவி மகன்றுயர் பொறாஅள்
‖இறந்ததுய ரெய்தி யிரங்கிமெய் விடவும்
கண்ணகி தாதை கடவுளர் கோலத்
தண்ணலம் பெருந்தவத் தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவும்
தானம் புரிந்தோன் றன்மனைக் கிழத்தி
$நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவும்
மற்றது கேட்டு மாதவி மடந்தை

---

92. இந்திரவிகாரம் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு.

93 - 5. ஆறைம்பதின்மர், அவர் தாம் முன்பு பிறந்துவருகிற யாக்கை பிறப்பற முயன்று துறந்தாரென்று விசேடணம்.

102. நாள்விடூஉ - நாளைவிட்டு; வினையெச்சம்.

---

அடி, 92-3 : "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்றும், இந்திர விகார மேழுடன் போகி" (சிலப். 10 : 13-4); "இந்திர விகார மேழுமேத் துதலின்", "அந்தர சாரிக ளமர்ந்தினி துறையும், இந்திர விகார மென வெழில் பெற்று" (மணி. 26 : 55, 28 : 69-70)

அடி, 99. ஆசீவகம் - சமணமதத்தின் பாகுபாடுகளுள் ஒன்று; இம் மதத்தினர்க்குத் தெய்வம் மற்கலி என்றும், நூல் நவகதிர் என்றும் கூறுவர்; "என்றலு மற்கலி தானே யிறையினி, ஒன்பது வாங்கதிர் நூல்யா முடையன, மன்பெரு நுண்பொரு ளைந்தியல் பாயவை, இஃ்து நிகழ்ச்சியுங்காழ்ப்பா டெனச்சொல" (நீலகேசி. ஆசீவக. 13)

அடி, 103-8. கோவலன் இறந்தமை கேட்டு மாதவி பௌத்தப்பள் ளியையடைந்து துறவு பூண்டமை, "போதியின்கீழ் மாதவர்முன் புண் ணியத்தா னம்புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழீ" [சிலப். 29 : (17)]; "ஈங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன், மறவண நீத்த மாசறு கேள்வி, அறவண வடிக ளடிமிசை வீழ்ந்து, மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக், காதல னுற்ற கடுந்துயர் கூற......உரவோ னருளி னன்", "கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி, மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்" (மணி. 2 : 59-69, 18 : 7-8) என்னுமிடங்களி லும் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) † 'போலச்' ‡ 'குரைப்ப' ¶ 'மாபெருந் தான மாண்பொரு ளீய்ந்தாங்' § 'பதின்மர்முன்' ‖ 'இறந்துயிர் நீங்கி' $ 'நாள்விடு'

†நற்ருய் தனக்கு நற்றிறம் படர்கேன்
மணிமே கலையை வான்றுய ருறுக்கும்
கணிகையர் கோலங் ‡காணு தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்
என்வாய்க் கேட்டோ ரிறந்தோ ருண்மையின்
நன்னீர்க் கங்கை யாடப் போந்தேன்
மன்னர் கோவே வாழ்க வீங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் பெருந்தகை
மன்னவ னிறந்தபின் வளங்கெழு சிறப்பின்
§தென்னவ ஞடு செய்ததீங் குரையென
நீடுவா ழியரோ நீணில ||வேந்தென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குநின்
மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த ¶பண்பின ரொன்பது மன்னர்
இளவரசு பொருஅ ரேவல் ††கேளார்
வளநா டழிக்கு மாண்பின ராதலின்
ஒன்பது குடையு மொருபக லொழித்தவன்

---

104. நற்றிறம்படர்கேன் - நற்றிறம் படரக்கடவேன்.
105 - 6. மணிமேகலையை கணிகையர்கோலங் காணுதொழிக வென்று நற்ருய்க்குச் சொல்லி; துன்பத்தைச் செய்யும் கணிகையர் கோலமென்ருள், அக்கோலத்தால் தான் துன்பமுறுதலால்.
90-110. அவர்கள் இப்படிச் செய்யாநிற்க அவரின் இறந்தோருண் டாகையாற் கங்கையாடப் போந்தேனென்ருன்.
111. ஈங்கு - இப்பூமியின். 114. மன்னவன் - பாண்டியன்.
119. தவற்ருல் ஒத்த பண்பினையுடையர்.

---

அடி, 105-8 : “ மணிமேகலை, அருந்தவப் படுத்த லல்ல தியாவதும், திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள் ” (மணி. 2 : 55-7)
அடி, 112 : சிலப். 27 : 45.
அடி, 122 : “ ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை, நேரி வாயி னிலைச்செரு வென்று ” (சிலப். 28 : 116-7) ; “ ஆராச் செருவிற் சோழர் குடிக்குரியோர், ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து, நிலைச்செருவி னாற்றலை யறுத்து ” (பதிற். 5-ஆம் பத்துப்பதிகம்)
(பி - ம்.) † ‘ நற்றவர் தமக்கு நற்றவம் படர்கென ’ ‡ ‘ காணுயதேர் கெனக் ’ $ ‘ யாடிய ’ § ‘ தென்னவநன்ஞடு ’ || ‘ வேந்தென்று ’ ¶ ‘ பண்பினென்பது ’ †† ‘ கொள்ளார் ’

பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்
பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு
வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள்
கொற்கையி லிருந்த†வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்ல ‡ரீரைஞ் ஞூற்றுவர்
ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்
கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
உரைசெல ¶வெறுத்த மதுரை மூதூர்
அரைசுகெடுத் தலம்வரு மல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலின்
நிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினன்
ஊழிதொ றூழி யுலகங் காத்து
வாழ்க வெங்கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லாம்
இறையோன் கேட்டாங் கிருந்த வெல்லையுள்
அகல்வாய் ஞால மாரிருள் விழுங்கப்

---

124 - 5. பழையன் - குறுநிலமன்னன்; அவன் வேம்பு.
128. ஈரைஞ்ஞூற்றுவர் - ஆயிரவரை.
131. புகழ் எங்கும் பரக்கும்படி மிக்க மதுரை.

---

அடி, 124: "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முழாரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். 5-ஆம் பத்துப் பதிகம்); "மோகூர்ப், பணியா மையிற் பகைதலை வந்த, மரகெழு தானை வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த" (அகநா. 251 : 10 - 13); "பழையன் மோகூர்" (மதுரைக். 508). அடி, 124 - 5. பகைவர் களுடைய காவல் மரங்களை அழித்தல் : மதுரைக். 152 - 3; பதிற். 11 : 12 - 3, 12 : 1 - 3, 49 : 16; புறநா. 23 : 8 - 9, 36 : 7 - 9, 57 : 10.

அடி, 127. "கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக் குப் பொற்கொல்லர் ஆயிரவரைக்கொன்று களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந்துன்பமும் நீங்கியது" (சிலப். உரை பெறுகட்டுரை, 1)

அடி, 130 : சிலப். 27 : 12. அடி, 132. மு. சிலப். 4 : 8. அடி, 139. மு : சிலப். 30 : 145.

(பி - ம்.) † 'விளங்கோசச்' ‡ 'ஈரைந்நூற்றுவரை' ¶ 'வறுத்த'

பகல்செல †முதிர்ந்த படர்கூர் மாலைச்
செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
அந்திச் செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க
இறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போன்
எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது
மண்ணாள் வேந்தே வாழ்கென் றேத்த
நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் ‡கொடித்தேர் வீதியுள்
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
உறையுண் முடுக்க ரொருதிறம் போகி
¶வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயி லிருக்கைக் கோமக னேறி
வாயி லாளரின் மாடலற் §கூஉய்
இளங்கோ வேந்த ‖ரிறந்ததற் பின்னர்
வளங்கெழு நன்னாட்டு மன்னவன் கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றேவென
எங்கோ வேந்தே வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன் மாடல னுரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப

---

144 - 6. தன்னியல்பு முதிர்ந்த மாலையாகிய செந்தீப் பரந்த மேலைத்திசை விளங்கப் பிறைதோன்ற.

147. பிறையெழுந்தபடியை. 151. நிரல் - ஒழுங்கு.

152. படம் - படங்கு. படங்கை மதிலாகவுடைய வீதி.

154. உறையுள் - உறையுமிடம். 156. பீடிகை - சிங்காதனம்.

159. இளங்கோவேந்தர் - பட்ட ஒன்பதின்மர்.

---

அடி, 151. நெடுங்காழ்க்கண்டம் - நெடிய குத்துக்கோலுடனே பல நிறத்தாற் கூறுபட்ட திரைச்சீலை; கண்டம் : ஆகுபெயர்; முல்லை. 44, ந.; "கண்டங் குத்திய மண்டப வெழினியுள்", "கண்டப் பூந்திரை காழ்முதற் கொளீஇ" (பெருங். 1. 37 : 103, 2. 4 : 134); சீவக. 647, 873.

அடி, 153. மு : மணி. 6 : 58.

(பி - ம்.) † 'முரஞ்சிய' ‡ 'கொடிதங்கேர் வீதியிற்' ¶ 'வித்தகன்' § 'கூவி' ‖ 'ரிறந்த பின்னர்'

எயில்மூன் †றெறிந்த விகல்வேற் கொற்றமும்
குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர
எறிதரு பருந்தி னிடும்பை நீங்க
அரிந்துடம் பிட்டோ னறந்தரு கோலும்
திரிந்துவே ருகுங் காலமு முண்டோ
தீதோ வில்லைச் செல்லற் காலையும்
காவிரி புரக்கு நாடுகிழ வோற் ‡கென்
றருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்
காடகப் ¶பெருநிறை யையைந் திரட்டித்
தோடார் போந்தை வேலோன் றன்னிறை
மாடல மறையோன் கொள்கென் றளித்தாங்
காரிய மன்ன ரையிரு பதின்மரைச்
சீர்கெழு நன்னாட்டுச் செல்கவென் §றேவித்
தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த
மாபெருந் தானை மன்ன குமரர்

---

174. ஐம்பது துலாம்பாரம் பொன்.

177. ஐயிருபதின்மர் - முன்சொன்னகன்னகர்......

---

அடி, 165: "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்" [சிலப். 29: (17)]; "ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்த நின் னூங்கணோர்" (புறநா. 39: 5 - 6); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில், தூங்கு மெயிலுந் தொலைத்தலால்" (பழ. 49); "ஒன்னா, ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியும், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச்செம்பியன்" (சிறுபாண். 79-82); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. 1: 4); "தேங்கு தூங்கெயி லெறிந்த வவனும்" (கலிங்க. இராச. 17); "வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்தகோன்" (இராசராச. 13); "தூங்கு மெயி லெறிந்த சோழனும்" (விக்கிரம. 9)

அடி, 166. புறவின் துயர்தீர்த்தது: சிலப். 20: 52, கு - ரை.

அடி, 171: "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" (பொருந. 248; புறநா. 393: 23)

அடி, 177. சிலப். 26: 163. அடி, 179: சிலப். 26: 22 - 56.

(பி - ம்.) † 'றெறிந்த வியறேர்க் கொற்றக்' ‡ 'கென, வருமறை' ¶ 'பசுநிறை' § 'றேவிக், கருங்கய னெடுங்கட் கவின்பெறு காதில், விரி வெண்'

சுருளிடு தாடி மருள்படு பூங்குழல்
அரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள்
வளரிள வனமுலைத் †தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி யாரியப் பேடியோ
டெஞ்சா ‡மன்ன ரிறைமொழி மறுக்கும்
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவர்
அரியிற் போந்தை யருந்தமி ழாற்றல்
தெரியாது மலைந்த கனக விசயரை
இருபெரு வேந்தர்க்கு ¶காட்டிட வேவித்
திருந்துதுயில் கொள்ளா வளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசடைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய
வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
குடதிசை யாளுங் கொற்ற வேந்தன்
வடதிசைத் தும்பை வாகையொடு §முடித்துத்
தென்றிசைப் ‖பெயர்ந்த வென்றித் தானையொடு
நிதிதுஞ்சு வியனகர் நீடுநிலை நிவந்து

---

181. தாடி - மோவாய்.
183. வெண்தோடு - சங்கினாற் செய்த காதாபரணம்.
187. எஞ்சாமன்னர் - மறத்திறலொழியாத மன்னர்.
188 - 8. இறைமொழிமறுக்குங் கஞ்சுகமுதல்வர் - மேலான வார்த்தை பொருது மறுத்துரைக்குந் தூதர்.
189. அரியில் - அரிதரலில். ஆற்றல் - இவர்களை வென்று கைக்கொண்ட வலி.
188 - 91. தூதர் காட்டிட ஏவி.
192. கொள்ளா அளவை, கடுமை கூறிற்று.
193. கங்கையைச்சூழ்ந்த பழனம். 200. நகர் - கோயில்.

---

அடி, 181 - 6. பேடி : "சுரியற் றாடி மருள்படு பூங்குழல், பவளச் செவ்வாய்த் தவள வாணகை, ஒள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதல், காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை, அகன்ற வல்கு லந்நுண் மருங்குல், இகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன் பேரூர் மறுகிடைத் தோன்றி, நீணில மளந்தோன் மகன்முன் னாடிய, பேடிக் கோலத்துப் பேடு" (மணி. 3 : 116-25)

அடி, 189 - 90. சிலப். 27 : 5 - 6.

அடி, 198. "வாகை தும்பை வடதிசைச் சூடிய" (சிலப். 27 : 221)

(பி - ம்.) † 'தளரின' ‡ 'மன்னர்க் கிறைமொழி யிறுக்கும்' ¶ 'காட்ட' § 'முடித்தோன்' ‖ 'பெயர்ந்தனன்'

கதிர்செல வொழித்த †கனக மாளிகை
முத்து‡நிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை
இலங்கொளி மணிநிரை யிடையிடை வகுத்த
¶விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு போகிய
மடையமை செறுவின் வான்பொற் கட்டில்
புடைதிர டமனியப் பொற்கா §லமளிமிசை
இணைபுண ரெகினத் ||திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்
கெறிந்துகளங் கொண்ட வியறேர்க் கொற்றம்
அறிந்துரை பயின்ற வாயச் செவிலியர்
தோட்டுணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்யாண்டு வாழ்த்தச்
சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று
பெருகநின் செவ்வி பெருமகன் வந்தான்
நறுமலர்க் கூந்த னாளணி பெறுகென
அமைவிளை தேறன் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் $காவல் கைவிட
வீங்குபுன முணீஇய வேண்டி வந்த
††ஓங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை தும்பை வடதிசைச் சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்

201. மாளிகை - அந்தப்புரம். கதிர்செலவொழித்தல் - உயர்தல்.
202. கொடித்தொடர் - சல்லியும் தூக்கும்.
205. விலங்கொளி - பக்கமோடுகிற ஒளி. பொலந்தகடு - பொற்றகடு. போகிய - ஒழுகிய.
209. துயிலைப்போக்கி.
216. கூந்தல் நாளொப்பனை பெறுக. என - என்று சொல்ல.

அடி, 208-9; சிலப். 4 : 66, கு - ரை.
அடி, 214 : "கூனுங் குறளு மூமுங் கூடிய, குறுந்தொழி லிளைஞர்", "கூனுங் குறளுங் கொண்டன" (சிலப். 20 : 17. 28 : 58); பெருங். 1. 46 : 256 – 63.
அடி, 221 : சிலப். 27 : 198.
அடி, 222 : "வேக யானையின் மீமிசைப் பொலிந்து" (சிலப். 27 : 254)
(பி - ம்.) † 'தமனிய மாளிகை' ‡ 'நிரைத்தொடர் முழுவதும் வளைஇச்' ¶ 'விளங்கொளி.........தகடுபோக்கி, மடையமை செறிவன வான்பொற் றகட்டிற்' § 'லமளியிணை' || 'தினமயிர்' $ 'காவலன்' †† 'வாங்குநிலை யானை நூங்குதுயி'

திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்
கவடி வித்திய கழுதையே ருழவன்
குடவர் கோமான் வந்தா னாளைப்
படுநுகம் பூணாய் பகடே மன்னர்
அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனும்
தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்
† தண்ணான் பொருநை யாடுந ரிட்ட
வண்ணமுஞ் சுண்ணமு மலரும் பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுண மலர்ந்த மணித்தோட்டுக் குவளை
முண்டகக் கோதையொடு முடித்த ‡ குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் ¶ தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப்
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்
காவல னானிரை நீர்த்துறை § படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தம்

---

(218) காவல்கைவிடுதலாற் (219) புனமுண்ணவந்த (220) யானை துயிலெய்தப் (224) பாடிய குறிஞ்சிப் பாடலும்.
(228) பூணாய் - பூண்டல் செய்வாய். பகடே : விளி.
229. வெள்ளணி - பிறந்தநாளொப்பனை.
230. தொடுப்பேருழவர் - விளாக்கொண்டு உழுமுழவர் ; ஏருழவர் : ஒரு சொல். 239. பல்லானிரை - வடக்கு நின்றும் கொண்டு போந்த நிரை ; அவற்றோடு நீருஞ்சேர்வீர்.
240. படீஇ - படுத்தி. 243. புன்னை - புன்னையிடத்தே.

---

அடி, 217 - 24 : அகநா. 102.
அடி, 225 - 6. பகைவர் மதிலை அழித்துக் கழுதையேரால் உழுது வெள்ளை வரகும் கொள்ளும் வித்துதல் மரபு ; புறநா. 15 : 2 - 3, 392 : 9 - 11 ; பதிற். 75 : 11 ; பு - வெ. 120. அடி, 226. கவடி - வெள்ளைவரகு.
அடி, 230 : தொடுப்பு - விதைப்புமாம் ; "தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய" (மதுரைக். 11) ; "தத்துநீ ரடைகரைச் சங்குழு தொடுப்பின், முத்துவிளை கழனி" (மணி. 8 : 3 - 4)
அடி, 244 : "ஆடுங்கழங்கும்" அம்பிகாபதி.
(பி - ம்.) † 'தண்ணம்பொருநை' ‡ 'குஞ்சியன்' ¶ 'தேயக்' 'படியாக்'

கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி
வானவன் வந்தான் வளரிள வனமுலை
தோணல †முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனும்
அஞ்சொற் ‡கிளவிய ரந்தீம் பாணியும்
ஓர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
குஞ்சர வொழுகையிற் கோநக ரெதிர்கொள
¶வஞ்சியுட் புகுந்தனன் செங்குட் டுவனென்.

(246) 'ஏந்தி' என்னும் வினையெச்சம் (249) 'எனும்' என்னும் பெயரெச்ச வினையோடு முடிந்தது.

248. உணீஇய - உண்ணும்படி.

(248) உண்ணும்படி (249) பாடுதுமென்க.

[1]பாட்டால் தம்மிடத்து வருவானென்று. (224-50) குறிஞ்சி முதலாக நாலுநிலத்துப் பாணியும் (251) ஓர்த்து உறங்காத தேவியென்றது நாலுநில அணிமையுங் கூறிற்று.

(198) வடதிசைக்கண் தும்பைத்துறையையும் வாகைத்துறையையும் முடிவு செய்து (251) தன்றேவி (252) கைவளைசெறிய வலம்புரி முழங்க (253) வாகைச் சென்னியனாய் (254) யானைமிசைப்பொலிந்து (255) திருநகரெதிர் கொள்ளத் (199) தானையொடு (256) வஞ்சியிற் புகுந்தனனெனக் கூட்டுக.

**(உஎ) நீர்ப்படைக்காதை முற்றிற்று.**

---

அடி, 248. தோள்நலம் உண்ணல் : பரி. 12 : 46; கலித். 23 : 8, 147 : 7.

அடி, 254 : சிலப். 27 : 222.

அடி, 255 : "களிறுபல பூட்டி யொழுகை யுய்த்த" (பதிற். 44 : 16-7) பரி. 14 : 23-4.

(பி - ம்.) † 'முண்ணிய தும்பை' ‡ 'கிளவியந்தீம்' ¶ 'வஞ்சியிற்'

## இருபத்தெட்டாவது

# நடுகற் காதை



தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணக †நிழற்செய மறவா ளேந்திய
நிலந்தரு திருவி னெடியோன் ‡றனுது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூர்
ஒண்டொடித் தடக்கையி னெண்மலர்ப் பலிதூஉய்
வெண்டிரி விளக்க மேந்திய மகளிர்
உலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
¶வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்தர்
யானை வெண்கோ டழுத்திய மார்பும்
நீள்வேல் கிழித்த நெடும்புண் §ணகமும்
எய்கணை கிழித்த பகட்டெழி லகலமும்
வைவாள் கிழித்த மணிப்பூண் $மார்பமும்
மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்

---

1. தமனிய நெடுங்குடை யென்றது காம்பும் முகப்பும் பொன்னு தலால்.

2. மறம் - வீரம்.

---

அடி, 3: "நிலந்தரு திருவி னெடியோய்" (பதிற். 82 : 16), "நிலந்தரு திருவி னெடியோன்" (மதுரைக். 763)

அடி, 5 - 8 : "அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த, மாலை" (சிலப். 9 : 1-3) என்பதையும் அதன் குறிப்புரையையும் பார்க்க.

அடி, 6 : "கன்னியர் கைவிளக் கேந்தக் காவலன், பொன்னியல் வளநகர் பொலியத் தோன்றினுர்" (சூளா. சீய. 244)

அடி, 9 - 10 : "வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப், போந்தைக் கண்ணிநி னூங்கணோர்" (சிலப். 28 : 133-4) அடி, 13 : "எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பு" (புறநா. 13 : 3)

(பி - ம்.) † 'நிழற்ற' ‡ 'முனுது' ¶ 'வேய்ந்துவினை' § 'ணகமும்' $ 'புயமும்'

கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ
‡அகிலுண விரித்த வம்மென் கூந்தல்
முகினுழை மதியத்து $முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த §செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென்||றேத்த
இருங்கனித் துவர்வா யிளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழுங் காமர் செவ்வியில்
திருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலும்
மாந்தளிர் மேனி மடவோர் ¶தம்மால்
ஏந்துபூண் ††மார்பி னிளையோர்க் களித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
குழலுங் கோதையுங் கோலமுங் கண்மார்
நிழல்கான் மண்டிலந் தம்மெதிர் நிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் ‡‡வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல்குர லாக வருமுறைப் $$பாலையில்

---

(16) உறீஇ (21) ஏத்தவென்னுமெச்சம், (24) அரும்பியவென்னும் பெயரெச்சத் தொழிலோடு முடிந்தன.

(3) நெடியோன் (4) மூதூரில் (8) வந்த மாலை (9) தெரியல் (10) வேந்து வாள்வலத்தர் (11-4) மார்பை (15) மடந்தையர்தம் (16) முலையால் வேது கொண்டு இவருடைய (20) கட்கடையாகிய தூது (21) முன் பாசறைக்கண் நமக்கு வருத்தஞ் செய்ததேயன்றி இம்மாலைக்கண் அதற்கு மருந்து மாகியதென்று (26) இளையர் (21) ஏத்த (24) அரும்பிய மூரலையும் (26) அவ்விளையோர்க்கு (25) அம்மடவோராலே (26) அளிப்பதுஞ் செய்தென்க.

---

அடி, 16 : "கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇ" (நெடுநல். 69); கலித். 106 : 35; "தங்குகண் வேல்செய்த புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியும், செங்கனி வாய்மருந் தூட்டுவீர் செம்பொனெடுங்கடை திறமினோ" (கலிங்க. கடை. 35)

அடி, 17 : "அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்" (சிறுபாண். 263)

அடி, 29 - 30 : "மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும், தேசுமொளியுந் திகழ நோக்கி" (பரி. 12 : 20-21)

அடி, 30 : "நிழல்கான் மண்டில நோக்கி யழல்புனை, அவிரிழை திருத்துவாள்" (பரி. 21 : 23-4); நிழல்கான் மண்டிலத்து" (அகநா. 71 : 13)

(பி - ம்.) † 'வெய்துறீஇ' ‡ 'அகிலுண விருந்த' $ 'மூரிவெஞ்' § 'செங்கடைத்' || 'றேத்தி' ¶ 'தத்த, மேந்து' †† 'மார்பி னினியோர்க்' ‡‡ 'வாங்குபுடைத் தழீஇப், புரிபுரி' $$ 'பாலை'

துத்தங் †குரலாத் தொன்முறை யியற்கையின்
அந்தீங் குறிஞ்சி யகவன் ‡மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சுங் கழற்காற் ¶குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல
உலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்
பலர்புகழ் §மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரு மகளிரும் வழிமொழி கேட்ப
ஐங்கணை நெடுவே ளரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ் சேக்கையும்
மண்ணீட் டரங்கமு மலர்ப்பூம் பந்தரும்
வெண்கா லமளியும் விதானவே திகைகளும்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப்
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலை மேருவிற்
கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய
தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்
வதுவை வேண்மாண் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி

---

(30) நிறுத்தித் (31) தழீஇயென்னுமெச்சங்கள் (35) அகவன் மகளி ரென்னும் பெயரில் அகவுதற்றொழிலோடு முடிந்தன.

(29) போகத்தாற் குலைந்த குழல் முதலியன திருத்திக் காணவேண் டிக் (30) கண்ணாடிபார்த்து (31) யாழைத்தழீஇக் (35) குறிஞ்சியை அகவுதலைச் செய்யும் மகளிராலே (36) மைந்தர்க்கு விருந்தயர்ந்தென்க.

(8) பலர் தொழ வந்த மலரவிழ் மாலை, (26) இளையோர்க்கு (25) மடவோராலே (24) மூரலையும் (26) அளித்து (36) மைந்தர்க்கு (35) அகவன் மகளிராலே (36) விருந்தும் அயர்ந்து (40) மூதூரிடத்து (39) மதியத்தைக் (40) காட்டிநீங்க, அந்தமதியம் (43) வெண்ணிலாமுன்றில் முதலானவற்றை (46) விளக்காநிற்க (52) அம்மதியத்தெழுச்சியை (51) வேண்மாள் (52) காண்டற்கு வருவழி (50) அரங்கின்.........பெற்றன ஒருபக்கமென்க.

---

அடி, 38-9. அரசன் முகம் மதிக்கு உவமை : "அடுபோ ரண்ணல், நாடுதலை யளிக்கு மொண்முகம் போலக், கோடுகூடு மதியம்" (புறநா. 67 : 2-4)

அடி, 45 : "விதானித்துப் படுத்த வெண்கா லமளி" (சிலப். 6 : 170); பெருங். 1. 33 : 63.

அடி, 50-51 : "விளங்கில வந்தி வெள்ளி மாடத், திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளி" (சிலப். 25 : 4-5)

(பி - ம்.) † 'குரலாற் றொன்முறை யியக்கி, யந்தீங்' ‡ 'மகளிர், மைந்தர்க் கோக்கிய வருவிருந் தயர' ¶ 'குடவன்' § 'மூதூர் காட்டி யாங்கு'

எல்வளை மகளி ரேந்திய †விளக்கம்
பல்லாண் டேத்தப் பரந்தன வொருசார்
மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்
பண் ‡கனி பாடலும் பரந்தன வொருசார்
மான்மதச் சாந்தும் வரிவெண் \$சாந்தும்
கூனுங் குறளுங் கொண்டன வொருசார்
வண்ணமுஞ் சுண்ணமு §மலர்பூம் பிணையலும்
பெண்ணணிப் பேடிய ரேந்தின ரொருசார்
பூவும் புகையு மேவிய விரையும்
தூவியஞ் ||சேக்கை சூழ்ந்தன வொருசார்
ஆடியு மாடையு மணிதரு கலன்களும்
சேடியர் ¶செவ்வியி னேந்தின ரொருசார்
ஆங்கவ டன்னுட னணிமணி யரங்கம்
வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்
திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
††பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவும்

---

65. மணியரங்கம் - நிலா முற்றம்.

---

அடி, 53-4 : "பஞ்சிலங்கு மல்குலார் பலாண்டுகூற", "தழு மலர்க்கோதை நல்லார் பலாண்டிசை ததும்ப வாழ்த்த", "பங்கயமுகத் தவர் பலாண்டிசை பராவ" (சூளா. தூது. 65 ; கல்யாண. 141, 267)

அடி, 58 : சிலப். 27 : 214, கு - ரை.

அடி, 60 : "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" (நாலடி. 251)

அடி, 61 : மு. சிலப். 5 : 14, 12 : 38, 30 : 153.

அடி, 66 : மு. சிலப் 26 : 105, 155, 173 ; "வீங்குநீர் ஞால மாள் வோய்" (மணி. 5 : 31)

அடி, 67 – 75 : "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, எரிமுகப் பேரம் பேவல் கேட்ப, உமையவ ளொருதிற னாக வோங்கிய, இமையவ னாடிய கொடுகொட்டி யாடலும்" (சிலப். 6 : 40-43); கொட்டி கொடு விடையோ னாடிற் றதற்குறுப், பொட்டிய நான்கா மெனல்" (சிலப். 3 : 14, மேற்.); "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ, கொடு கொட்டி யாடுங்கால்...கொண்டசீர் தருவாளோ" (கலித். கடவுள். 5-7); "கொட்டி யாடற் றோற்ற மொட்டிய, உமையவ ளொருபா லாக வொரு பால், இமையா நாட்டத்திறைவ னாகி, அமையா வுட்கும் வியப்பும் விழை வும், பொலிவும்...பொருந்த நோக்கித், தொக்க அவுண ரின்னுயி ரிழப்ப, வக்களம், பொலிய வாடினனென்ப" (கலித். கடவுள். 5-7, மேற்.)

(பி – ம்.) † 'விளக்கமொடு, பல்யாண் டேத்தப் பரந்தனர்' ‡ 'கனிப்பாடலும்' \$ 'கலவையும்' § 'மலர்ப்பூம்' || 'சேக்கைத் தந்தனர்' ¶ 'செல்வியி' †† 'புரிதரு'

செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை †யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவ னாடிய ‡கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
$கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவன்
ஏத்தி நீங்க விருநில மாள்வோன்
§வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
நீலன் முதலிய கஞ்சுக மாக்கள்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி
வாயி லாளரின் மன்னவற் கிசைத்தபின்
கோயின் மாக்களிற் கொற்றவற் றொழுது
தும்பை வெம் ||போர்ச் சூழ்கழல் வேந்தே
செம்பியன் மூதூர்ச் சென்றுபுக் காங்கு
வச்சிர மவந்தி மகதமொடு ¶குழீஇய
சித்திர மண்டபத் திருக்க வேந்தன்
அமரகத் துடைந்த வாரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க

---

75. கொட்டிச்சேதம் - கொடுகொட்டிக் கூத்து.

76-7. இதனை, பகுத்தலரிய நான்மறையோரது பறையூரிற் கூத்தச் சாக்கையன் ஆடுதலின் மகிழ்ந்தென்க.

79. வேத்தியன் மண்டபம் - அரசிருப்பாய பேரோலக்க மண்டபம்.

86-7. வச்சிரம் அவந்தி மகதமொடு திரண்ட மண்டபம் - இந் நாடு மூன்றுமுடையோர் திறையிட்ட பந்தர் தோரணவாயில் பட்டி மண்டபம்; இவை கூடிய மண்டபம்;......ஆகலான், ஆகுபெயர்; பிறந்த வழிக்கூறல்.

89. தமரிற்சென்று - சங்கோச பரிவாரத்துக்குக் கடவாருடன் சென்று.

---

அடி, 70: "எண்டிக் களந்து கொண்டன வென்னப், புரிந்த செஞ் சடை நிமிர்ந்து சுழல" (கல். 'உழைநின்றீரும்')

அடி, 77. சாக்கையரென்னும் ஒருவகைச் சாதியார் இப்பொழுதும் கூத்துநிகழ்த்தும் தொழிலையுடையராக மலைநாட்டிலுள்ளாரென்று தெரிகின்றது.

அடி, 86-7: "வச்சிர நன்னாட்டுக், கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும், மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன், பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும், அவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த, நிவந் தோங்கு மரபிற் றோரண வாயிலும்" (சிலப். 5: 99-104)

(பி - ம்.) † 'யியங்காது' ‡ 'கொடுகொட்டிச்' $ 'கூத்தைச் சகையோ னாடலின்' § 'வேந்தியன் மண்டப மேறிய' || 'போர்சூழ்' ¶ 'குழீஇச்'

நீளம ரழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் †தொழித்துக்
கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்
தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
சிலைத்தா ரகலத்துச் செம்பியர் பெருந்தகை
ஆங்குநின் றகன்றபி னறக்கோல் வேந்தே
ஓங்குசீர் மதுரை மன்னவற் காண
‡ஆரிய மன்ன ரமர்க்களத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் *காம்புநனி சிறந்த
சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் §கவிகையிற் காட்டி
இமையச் சிமையத் திருங் ‖குயி லாலுவத்
துமையொரு பாகத் தொருவனை வணங்கி
அமர்க்கள ¶மரசன தாகத் துறந்து
தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேல்

---

93. போரிடத்துப் பிடித்துக்கோடல். 97. காண - கண்டவளவிலே.
102. குயிலாலுவம் - இமவான்பக்கத்து ஒரு பகுதி.

(98) ஆரியமன்னரென்னுந் தொகுதி யொற்றுமைபற்றிக் (101) காட்டி (103) வணங்கிக் (105) கொண்டோரெனச் சிலர்வினை வேறுசிலர் வினையொடு முடிந்தது.

---

அடி, 92. கொல்லாக் கோலங்கள்: "சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர், பீடிகைப் பீலிப் பெருநோன் பாளர்", "தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த, மாபெருந் தானை மன்ன குமரர்", "தவப்பெருங் கோலங் கொண்டோர்" (சிலப். 26 : 225 - 6, 27 : 179 - 80, 28 : 105)

அடி, 93. வெற்றம் - வெற்றி.

அடி, 98 - 9: "பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த, சீரியல் வெண்குடைக் காம்புநனி கொண்டு" (சிலப். 3 : 114 - 5)

அடி, 100: "தெய்வ மால்வரைத் திருமுனி யருள, எய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றானத்துச் சாபம்", "மன்னவன் கோயில், இந்திர சிறுவன் சயந்த னாகென" (சிலப். 3 : 1 -3, 118 - 9)

அடி, 102: குயிலாலுவம்: நீல. மொக்கலவாதச் சருக்கம், 190-ஆம் பாட்டுரையில், 'குயிலாலபுரம்' என்று ஓர் இடப்பெயர் காணப்படுகிறது.

அடி, 104: வென்றோர்க்குரியது போர்க்களம் என்பர்; "தேன் மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" (சீவக. 279) என்பதையும், 'இத்துணையும் இவன் வெற்றியாதலின் இவன்களம் என்றார்' (சீவக. 279, ந.) என்னும் அதன் விசேட உரையையும், பு. வெ. 180 உரையையும், "ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு. வெ. 225) என்பதையும் பார்க்க.

அடி, 105: சிலப். 28 : 92, கு - ரை.

(பி - ம்.) † 'தொளித்துக்' ‡ 'ஆரியமாக்களமர்க்' * 'காம்பினிற் சிறந்த' § 'கவிகை காட்ட' ‖ 'கயிலாயத்' ¶ 'மரசரனுகத்துரந்து'

கொதியழற் சீற்றங் கொண்டோன் கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற் செழியனென்
றேனை மன்ன ரிருவருங் கூறிய
நீண்மொழி யெல்லா நீலன் கூறத்
தாமரைச் செங்கண் டழனிறங் கொள்ளக்
கோமக னகுதலுங் குறையாக் கேள்வி
மாடல னெழுந்து மன்னவர் மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்
கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையின்
சிறுகுர னெய்தல் †வியலூ ரெறிந்தபின்
ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை
நேரி வாயி னிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொ ‡டிடும்பிற்புறத் திறுத்துக்
கொடும்போர் கடந்து நெடுங்கட லோட்டி
உடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே

98 - 107. ஆரியமன்னர் அமர்க்களத்தில் தங்களுக்கெடுத்த குடையிற் காம்பைக் கையிலே பிடித்து ஆனைக்கழுத்தில் இருத்திய ஆசிரியன் கையில் தலைக்கோலாகக் காட்டியும், குயிலாலுவமென்னும்................ அமர்க்களம் அரசனதாகத் துறந்தும், தவப்பெருங்கோலம் கொண்டாராயினர் தம்மேற் சீற்றங்கொண்டோன் கொற்றம் புதிதென்றான்.
114 - 5. யானையினையுடைய வியலூர்.
117. நேரிவாயில் - உறையூர்த் தெற்கில்வாயிலதோரூர். 120. ஆரியமன்னரென்றது முன்னொருகால் இவனுக்குத் தோற்றார்சிலரை.

அடி, 114. கறிவளர்சிலம்பு : குறுந். 91 : 2, 288 : 1; கலித். 52 : 17.
அடி, 115. "சிறுகுர னெய்தல் வியலூர் நூறி" (பதிற். 5-ஆம் பத்துப் பதிகம், 11)
அடி, 116-7 : "நின், மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா, ஒத்த பண்பின ரொன்பது மன்னர், இளவரசு பொறாஅ ரேவல் கேளார், வளநா டழிக்கு மாண்பின ராதலின், ஒன்பது குடையு மொருபக லொழித்தவன், பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்" (சிலப். 27 : 117 - 23 ; பதிற். 5-ஆம் பத்துப் பதிகம், 18 - 9)
அடி, 119 - 21 : 'மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு, பொங்கிரும் பரப்பிற் கடல்பிறக் கோட்டிக், கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய, செங்குட்டுவன்" (சிலப். 30 : கட்டுரை, 11 - 5); "கோடுநரல் பௌவங் கலங்க வேலிட், டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய, வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்", "கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக், கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ" (பதிற். 46 : 11-3, 48 : 3-4); "மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்......செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி, ஓங்குதிரைப் பௌவ நீங்க வோட்டிய, நீர்மா ணெஃக நிறத்துச் சென் றழுந்த" (அகநா. 212 : 16 - 20); புறநா. 369-ஆம் பாட்டிலும் இக்கருத்து வந்துள்ளது.
(பி - ம்.) † 'வீயலூ' ‡ 'டிடும்பியாத்திறுத்துக், கடம்போர்'

புரையோர் †தம்மொடு பொருந்த வுணர்ந்த
அரைச ரேறே யமைகநின் சீற்றம்
மண்ணாள் வேந்தே ‡நின்வா ணாட்கள்
தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க
அகழ்கடன் ஞால மாள்வோய் வாழி
இகழா தென்சொற் கேட்டல் வேண்டும்
வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யா தியாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினை
வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிநி ¶னூங்கணோர் மருங்கில்
கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடர்ச்சிலை பொறித்த விறலோ னாயினும்
நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் §விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் $முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னாயினும்
வன்சொல் யவனர் வளநா டாண்டு

---

123. புரையோர் - உயர்ந்தோர்.

---

அடி, 125-6. ஆற்று மணலினும் வாழ்க என்றல் : "எங்கோ வாழிய... பஃறுளி மணலினும் பலவே", "சிறக்கநின் னாயுள், மிக்குவரு மின்னீர்க் காவிரி, எக்க ரிட்ட மணலினும் பலவே", "நீ நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர், வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவே ளிலைஅய காமர் வியன்றுறைக், கடுவளி தொகுப்ப வீண்டிய வடுவா ழெக்கர் மணலினும் பலவே" (புறநா. 9 : 8-11, 43 : 21-3, 55 : 17-21); பதிற். 48 : 17-8.

அடி, 126. ஆன்பொருநை - சேரநாட்டிலுள்ளதொரு நதி; இஃது ஆன் பொருந்தமெனவும் வழங்கும்; "வாழிவருபுனனீரான்பொருநை சூழ்தரும் வஞ்சியார்கோமான்" [சிலப். 29 : (14)]; பதிற். 50 : 7, உரை; "தண்ணான் பொருநை மணலினும் பலவே" (அகநா. 93:23); "தண்பொருநைப் புனல்பாயும், விண்பொருபுகழ் விறல்வஞ்சி", "தண்ணான் பொருநை வெண்மணல்", "வஞ்சிப் புறமதி லலைக்குங், கல்லென் பொருநை" (புறநா. 11 : 5-6, 36 : 5, 387 : 33-4); 'ஆன்பொருநையும் வையையும் போலும் யாற்றிலும்' (தொல். கற்பு. சூ. 10, ந.)

அடி, 133 - 4 : சிலப். 28 : 9 - 10.

அடி, 135-6 : சிலப். 23 : 81 - 3, 25 : 1 - 2, கு - ரை. "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை, விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" (மணி. 28 : 103 - 4) சிறுபாண். 48-9.

அடி, 137 : சிலப். 23 : 63, கு - ரை.

அடி, 141 : "வன்சொல் யவனர் வளநாடு வண்பெருங்கல், தென் குமரியாண்ட" (சிலப். 28 : ஊசல்வரி); பதிற். 2-ஆம் பத்துப் பதிகம், 8.

(பி - ம்.) † 'தம்மொழி பொருந்தா துணர்ந்த' ‡ 'நீநின்வாழ்நா, டண்ணார் பொருநை' ¶ 'னூங்கனூர் மருங்கும்' § 'கொடுத்தோ' $ 'முறைமையிற்'

பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்
†மிகப்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
அகப்பா வெறிந்த வருந்திற லாயினும்
உருகெழு மரபி னயிரை மண்ணி
இருகட னீரு மாடினோ னாயினும்
சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினும்
மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் ‡மருங்கில்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்
கண்டனை யல்லையோ காவல் வேந்தே
இளமை நில்லா தென்பதை யெடுத்தீங்
*குணர்வுடை மாக்க ளுரைக்கல் வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் §மறிக்கினு மறிக்கும்
மக்கள் யாக்கை பூண்ட ||மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்
விலங்கின் யாக்கை ¶விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்
ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது

---

145. அயிரை : ஓர்யாறு. அதிலே குளித்து.

147. சதுக்கப்பூதர் - அமராபதியிற் பூதங்கள்.

149. மீக்கூற்றாளர் - மேற்பட்ட வார்த்தையையுடையவர்கள்.

---

அடி, 144. குட்டுவன் அகப்பாவென்னும் அரணத்தை எறிந்தது; "குட்டுவன் அகப்பா வழிய நூறி" (நற். 14 : 3-4); "அண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த, பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ", "அகப்பா வெறிந்து பகற்றீ வேட்டு" (பதிற். 22 : 26-7, 3-ஆம் பத்துப் பதிகம், 3)

அடி, 145. அயிரையை ஒருமலையென்றுங் கூறுவர்; "இருகட னீரு மொருபக லாடி, அயிரை பரைஇ" (பதிற். 3-ஆம் பத்துப் பதி.); "கடவு ளயிரையி னிலைஇ", "உருகெழு மரபி னயிரை பரைஇ", (பதிற். 79, 88, 90). அடி, 147 : பதிற். 9-ம் பத்துப் பதிகம், 13-4.

அடி, 165 - 6 : "ஆடுங் கூத்த ரணியே போல, வேற்றோ ரணியொடு வந்தீ ரோவென" (மணி. 12 : 51-2)

(பி - ம்.) † 'மிகற்பெருந்' ‡ 'மருங்கு' * 'குரனுடை மாக்க ளுரைக்க வேண்டா' § 'மறிக்கலு' || 'விவ்வுயிர், மிக்கோர்' ¶ 'யெய்து மிவ்வுயிர்'

செய்வினை †வழித்தா யுயிர்செலு மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்
எழுமுடி மார்பநீ யேந்திய திகிரி
வழிவழிச் சிறந்த வயவாள் வேந்தே
அரும்பொருட் ‡பரிசிலே னல்லே னியானும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் துயிர்போகு பொதுநெறி
புலவரை யிறந்தோய் போகுதல் ¶பொறேஎன்
வானவர் போற்றும் வழிநினக் களிக்கும்
நான்மறை §மருங்கின் வேள்விப் பார்ப்பான்
$அருமறை மருங்கி னரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்

---

168. பொருளுரை - மெய்யுரை.
169. எழுமுடி - எழுமுடியாற் செய்த ஆரம்.
171. பொருள் பரிசிலாக வருவேனல்லேன்; அதுகாரணமாகச் சொல்லலுற்றேனல்லேன்.
173. பொதுநெறி - பிறந்திறப்போரெல்லாரும் போம்வழி.
174. புல வரை இறந்தோய் - அறிவெல்லை கடந்தோய்.
175. வானவர் போற்றும்வழி - மோட்சமார்க்கம்.
(175) அளிக்கும் (176) வேள்விப்பார்ப்பானென்க.
178. வேள்வி - இராசசூயம்.

---

அடி, 167-8: "ஐய முண்டோ வாகுயிர் போனுற், செய்வினை மருங்கிற் சென்றுபிறப் பெய்துதல்" (மணி. 6 : 158-9)

அடி, 168. பொருளுரை : மணி. 12 : 107, 22 : 61.

அடி, 169. எழுமுடி இன்னதென்பதை, "எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து, நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை", "எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப் புரையோர்", "எழுமுடி மார்பி னெய்திய சேரல்" (பதிற். 14, 16, 45) என்பவற்றுலும், 'எழுமுடியென்பது, ஏழு அரசரைவென்று அவர்கள் ஏழுமுடியானுஞ் செய்ததோ ராரமாம்' (பதிற். 14, உரை) என்பதனுலுமுணர்க.

அடி, 171 : "அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை, அவைபெறல் வேண்டேம்" (புறநா. 146 : 1-2)

அடி, 173 : "உயிர்வழங்கு பெருநெறி" (மணி. 12 : 62)

அடி, 174. புல வரை : பரி. 15 : 1; புறநா. 21 : 1; "புலவரை யிறந்த புகார்" (மணி. 5 : 109)

(பி-ம்.) † 'வழியே, வழிவழிசிறக்கவாய்வாள்' ‡ 'பரிசிலல்லேன் யானுன், பெரும்பெயர்' ¶ 'போற்றேன்' § 'மரபின்' $ 'அருமறை மரபி னரசர்க் கோக்கிய'

நாளைச் செய்குவ †மறமெனி னின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கும்
இதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி யிவளொடுங் கூடித்
தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
ஊழியோ டூழி யுலகங் காத்து
‡நீடுவா ழியரோ நெடுந்தகை யென்று
மறையோன் மறைநா §வுழுது வான்பொருள்
இறையோன் செவிசெறு வாக வித்தலின்
வித்திய பெரும்பதம் விளைந்துபத மிகுத்துத்
துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்தன்
நான்மறை மரபி னயந்தெரி நாவின்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய முறைமையின்
§வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி
ஆரிய ||வரசரை யருஞ்சிறை நீக்கிப்
பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ் ¶நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
††வேளா விக்கோ மாளிகை காட்டி
‡‡நன்பெரு வேள்வி முடித்ததற் பின்னாள்

---

..........ஆரியன்மன்னர்க்காட்டி விடுதலீருய்........

180. கேள்வியளவேயான நல்லுயிர்.

182. உலகில் ஓரிடத்திலுமில்லை.

183. வேள்விக்கிழத்தி: வேண்மாள். 189. பதம் - உணவு.

198. வேளாவிக்கோமாளிகை - வேள் ஆவிக்கோ மந்திரம்.

---

அடி, 179 - 80. "காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப் பிடித்துச், சாலச்செய் வாரே தலைப்படுவார் - மாலைக், கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொல், அறங்காலைச் செய்யாத வாறு" (அறநெறிச். 67)

அடி, 181 - 2: "கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லை" (கலித். 12 : 15)

அடி, 184: "தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற" (சிலப். 30 : 169).

அடி, 185: சிலப். 30 : 145 - 6.

அடி, 187 - 8, "செவிசெறு வாக, முதுமொழி நீராப் புலனா வுழவர்" (கலித். 68 : 3 - 4)

அடி, 196 - 8: புறநா. 13, அவதாரிகை.

(பி - ம்.) † 'மறனெனன் றெண்ணிற், கேள்வி யின்னுயிர் நீங்கென நீங்கும்' ‡ 'நீவா ழியரோ' § 'வுழுத' § 'வேட்கைச் சாந்தியின் விழாக் கோள் செய்கென' || 'வரச ரருஞ்சிறை' ¶ 'நீர்க்கேணித்' †† 'வேள்விக் கான மாளிகை,கட்டி' ‡‡ 'நம்பெரு வேள்வி முடித்த பின்னாள்'

தம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் †சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புட னேவிச்
சிறையோர் கோட்டஞ் ‡சீமின் யாங்கணும்
கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென
அழும்பில் வேளோ டாயக் கணக்கரை
முழங்குநீர் வேலி மூதூ ரேவி
அருந்திற *லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோ ருரைத்த §தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி யாதலின்
ஆர்புனை சென்னி யரசற் களித்துச்
செங்கோல் வளைய வுயிர்வா ழாமை
தென்புலங் காவன் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்த ||ரென்பதை
வடதிசை மருங்கின் மன்னவ ரறியக்
குடதிசை ¶வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் ††விளைத்து

---

(194) விழாக்கொளவேவி (202) வில்லவன் கோதையை யேவியென்க
205-6. அழும்பில்வேள்.....மூதூர்களிலே இப்படிச் செய்யுமென்று ஏவியென்க.

---

அடி, 203: "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதும், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்" (சிலப். 23:126-7); "கறையோ ரில்லாச் சிறையோர் கோட்டம்" (மணி. 16:161); "தம்பியை முகத்து நோக்கி, ஊர்பிணி கோட்டஞ் சீப்பித் துருதவ ஞண்ட நாட்டைப், பார்பிணி கறையி னீங்கப் படாமுர சறைவி யென்றான்" (சீவக. 2372)

அடி, 205: சிலப். 25:177; "விளங்குபெருந் திருவின் மான விறல்வேள், அழும்பில்" (மதுரைக். 344-5)

அடி, 207-8: "மாதவர் நோன்பு மடவார் கற்பும், காவலன் காவ லின்றெனி னின்றால்" (மணி. 22:208-9); குறள், 543, பரிமேல்.

அடி, 212: "செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியர்" [சிலப். 29:(11)]

அடி, 219: சிலப். பதி. 44.

(பி-ம்.) † 'சொல்லி, மன்னியற்கொப்பன செய்க நீரென' ‡ 'சீமி னெங்கணும், கறைகெழு நல்லூர்க்' * 'லரசன்' § 'தண்டா நல்லுரைப்' || 'ரென்பது' ¶ 'யாளுங்' †† 'வீழ்த்து'

நன்னா டணைந்து †நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை
அறக்களத் தந்தண ராசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையு நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையவ ருறையு மிமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் ‡பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து
வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை ¶நன்கல முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி
வேள்வியும் விழாவு நாடொறும் வகுத்துக்
கடவுண் மங்கலஞ் செய்கென வேவினன்
வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்.

(உஅ) நடுகற் காதை முற்றிற்று.

---

222. ஆசான் - புரோகிதன்.
224. நூனெறிமாக்கள் - §தபதிகள்
(224) இவர் (222-3) அந்தணர் முதலாயினாரோடு சென்று (225) வகுத்த பத்தினிக்கோயிலில் (228) கைத்தொழில் மிகுத்த படிமத்திலே (230) ஆபரணங்கள் பூட்டி.
231. பூப்பலி - அருச்சனை. காப்பு - திக்கிற்றேவதைகள்; கடை நிறுத்தி - கடைவாயிலில் நிறுத்தி.
232. வேள்வி - ஓமம். விழா - உற்சவம்.
233. கடவுள் மங்கலம் - பிரதிட்டை.
......(222) நங்கையைப் (225) பத்தினிக்கோட்டத்துத் (228) தெய்வப் படிமத்திலே (233) கடவுள் மங்கலம் செய்கென ஏவினனென்க.

---

அடி, 228: "கடவு ளெழுதிய படிமங் காணிய, வேட்கை" (மணி. 26 : 4-5)
அடி, 229: "வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரம்" (மணி. 3 : 167-8, 19 : 5-6)
அடி, 231: சிலப். 24 : 19, கு-ரை.; "கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடைகொள" (மணி. 7 : 122)
அடி, 232: "விழவொலியும் வேள்வொலியு மானான் கண்டாய்" (தே. நா. மழபாடி); "சாறும் வேள்வியுந் தலைமயங்குமே" (கம்ப. நாடு. 56)
அடி, 233: "கடவுண் மங்கலஞ் செய்த பின்னாள்" (சிலப். 29 : உரைப்பாட்டுமடை)
அடி, 254: "வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை" (சிலப். 30 : 1)
(பி-ம்.) † 'நளிசினை' ‡ 'பாசச், கைவினை..........படிவத்து' ¶ 'நன்கலன்' § 'சம்பந்திகள்'

## இருபத்தொன்பதாவது

# வாழ்த்துக் காதை



### உரைப்பாட்டுமடை

(1) குமரியோடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச் சோழன்மக ளீன்ற மைந்தன் கொங்கர்செங் களம்வேட்டுக் † கங்கைப் பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன் சினஞ் செருக்கி வஞ்சியுள்வந் திருந்த காலை வடவாரிய மன்னராங்கோர் மடவரலை மாலைசூட்டி யுடனுறைந்த விருக்கைதன்னி லொன்று ‡ மொழிநகையினராய்த் தென்றமிழ் நாடாளும் வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து மின்றவழு மிமயநெற்றியில் விளங்கு விற்புலி கயல்பொறித்தநா ளெம்போலு முடி ¶ மன்னரீங் கில்லைபோலு மென்றவார்த்தை யங்குவாழுமாதவர்வந் தறிவுறுத்த விடத்தாங்க ணுருள்கின்ற மணிவட்டைக் குணில்கொண்டு துரந்ததுபோ லிமய மால்வரைக் கற்கடவுளா மென்ற வார்த்தை யிடந்துரப்ப வாரியநாட்டர

---

குமரியினும் வடவிமயத்தினுமெனவே இடை சொல்ல வேண்டா வாயிற்று.

ஒரு மொழி - தன் ஆணையினை.

ஞாயிற்றுச்சோழன் - சூரியவங்கிசத்துச் சோழன்.

சோழன் மகள் மைந்தனாகிய செங்குட்டுவன்.

சினஞ்செருக்கி - ஆரியமன்னரிடத்தே சினத்தை மிகுத்து.

அதனை விட்டு வஞ்சியிலே வந்திருந்த காலை.

ஒன்றுமொழி நகையினராய் - தம்மில் ஒத்த வார்த்தையுடனே சிரிப்பினராய்.

இடந்துரப்ப - இடத்தினின்றும் துரப்ப.

---

1. குமரி முதல் இமயமிறுதியாக ஆண்ட குட்டுவன் : சிலப். பக்கம், 12. "ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம், தென்னங் குமரியொ டாயிடை, மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே", "வடதிசை யெல்லை யிமய மாகத், தென்னங் குமரியொ டாயிடை யரசர், முரசுடைப் பெருஞ் சமந் ததையவார்ப்பெழ...குட்டுவ" (பதிற். 11, 43). ஒருமொழி-ஆணை; கலித். 104 : 80.

கங்கை......குட்டுவன் : "கங்கைப் பேர்யாற்றுக்கரைபோகிய செங் குட்டுவன்" (சிலப். 30 : கட்டுரை, 13-4)

(பி - ம்.) † 'கங்கையாற்றுக்கரை' ‡ 'மொழியுந்தகை' ¶ 'மன்னரில்லைபோலு மீங்கென்ற'

சோட்டி யவர்முடித்தலை யணங்காகிய பேரிமயக் கற்சுமத்திப் பெயர்ந்துபோந்து நயந்த கொள்கையிற் கங்கைப்பேர் யாற் றிருந்து நங்கைதன்னை † நீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மை நீங்கி வஞ்சிமா நகர்புகுந்து நிலவரசர் நீண்முடியாற் பலர் தொழு ‡ படிமங்காட்டித் தடமுலைப் பூசலாட்டியைக் [1] கடவுண் மங்கலஞ் செய்தபின்னாட் கண்ணகி தன் கோட்டத்து மண்ண ரசர் திறை கேட்புழி யலம்வந்த மதி $ முகத்திற் சில செங்கய னீருமிழப் பொடியாடிய கருமுகிறன் புறம் புதைப்ப வறம் பழித்துக் [2] கோவலன்றன் வினையுருத்துக் குறுமகனாற் கொலை யுண்ணக் காவலன்ற னிடஞ்சென்ற கண்ணகி தன் கண்ணீர் கண்டு மண்ணரசர் பெருந்தோன்ற லுண்ணீரற் றுயிரிழந்தமை மாமறையோன் வாய்க்கேட்டு [3] மாசாத்துவான் § றான் றுறப்பவு மனைக்கிழத்தியுயிரிழப்பவு மெனைப்பெருந் || துன்பமெய்திக் காவற் பெண்டும் அடித்தோழியுங் கடவுட்சாத்த னுடனுறைந்த தேவந் தியு முடன்கூடிச் சேயிழையைக் காண்டுமென்று மதுரைமா நகர் புகுந்து முதிராமுலைப்பூசல் ¶ கேட்டாங் கடைக்கலமிழந் துயிரிழந்த விடைக்குலமக ளிடமெய்தி †† யையையவண் மக ளோடும் வையையொரு வழிக்கொண்டு மாமலைமீமிசையேறிக் கோமகடன் கோயில்புக்கு நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டு வற்குத் திறமுரைப்பர்மன்.

---

அணங்கென்றார், சிலாதெய்வமாதலால்.

'வடவாரியர்' என்பது முதலாக, 'கடவுண்மங்கலஞ் செய்தபின் னாள்' என்பதீறாக முன்பு செய்ததனைக் கொண்டு கூறியதாக்கி யுரைக்க.

அறம்பழித்து - தன்மதேவதையை இகழ்ந்து; "அறனென்னு மட வோய்" (சிலப். 18 : 41) என்று வைதது. காவற்பெண்டு - செவிலித் தாய்.

முதிராமுலைப்பூசல் - ஊர் வெந்தபடி.

இஃது உரைப்பாட்டு; இதனை முன்னே மடுத்தலான் மடையாயிற்று.

---

[1] சிலப். 28 : 233. [2] சிலப். பக். 576.

[3] "கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்" (மணி. 28 : 73).

(பி - ம்.) † 'நீர்ப்படுத்து வெஞ்சின வேல் வேட்கை நீங்க' ‡ 'படிவங்' $ 'முகத்துச்சில' § 'றான் றுறக்கவும்......இழக்கவு' || 'துய ரெய்தி......மடிந்தொழியுங்' ¶ 'கண்டாங்கடைக்கல மிழந்துயிருலந்த' †† 'யையை யிவண்மகளோடுவையை......மலைமிசை'

தேவந்திசொல்

(2) முடிமன்னர் மூவருங் †காத்தோம்புந் தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து
கடுவரற் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
சோணாட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர்;

‡ காவற்பெண்டுசொல்

(3) மடம்படு சாயலாள் மாதவி தன்னைக்
கடம்படாள் காதற் கணவன் ¶கைப்பற்றிக்
குடம்புகாக் கூவற் கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணிக்குத் தாயர்நான் கண்டீர்
தண்புகார்ப் பாவைக்குத் தாயர்நான் கண்டீர்;

அடித்தோழிசொல்

(4) §தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கு மெனக்குமோர் சொல்லில்லைக்
கற்புக் $கடம்பூண்டு காதலன் பின்போந்த
பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்
பூம்புகார்ப் பாவைக்குத் தோழிநான் கண்டீர்;

---

(2) முடிமன்னர் மூவருங் காத்தோம்புமலை. தமது இலாஞ்சனை யிட்டுக் காத்த மலை.

(3) மடம்படு சாயலாள் - கண்ணகி. கடம்படாள் - கோபித்து வெகுளாள். நீரின்மையின், குடம்புகாக் கூவலென்றார்.

(4) சொல்லில்லை: முற்று. இவ்வாறு கற்பைக் கடனாக மேற் கொண்டு.

---

(3) : 3. "குடம்புகாக் கூவல் குடிகாக்கும்" (தொல். அகத். 42, ந. மேற்.)

(4) : 3. "கற்புக் கடம்பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்" (சிலப். 15 : 143-4) என்பதையும் அதன் குறிப்புரையையும் பார்க்க.

(பி - ம்.) † 'காத்தோம்பு தெய்வ' ‡ 'காவற்பெண்டிர் பாட்டு' ¶ 'கைபற்றி' § 'தற்பயந்தார்க் கில்லைத் தன்புறங் காத்த, வெற்பயந் தார்க்கு' $ 'கடன்'

### தேவந்தியரற்று

(5) செய்தவ மில்லாதேன் றீக்கனுக் கேட்டநாள்
எய்த வுணரா திருந்தேன்மற் †றென்செய்தேன்
மொய்குழன் மங்கை முலைப்பூசல் கேட்டநாள்
அவ்வை யுயிர்வீவுங் கேட்டாயோ தோழீ
அம்மாமி தன்வீவுங் கேட்டாயோ தோழீ ;

### ‡காவற்பெண்டரற்று

(6) கோவலன் றன்னைக் குறுமகன் $கோளிழைப்பக்
காவலன் றன்னுயிர் நீத்ததுதான் கேட்டேங்கிச்
சாவதுதான் வாழ்வென்று தானம் பலசெய்து
மாசாத்து வான்றுறவுங் கேட்டாயோ வன்னை
மாநாய்கன் §றன்றுறவுங் கேட்டாயோ வன்னை ;

### அடித்தோழியரற்று

(7) ||காதலன் றன்வீவுங் காதலிநீ பட்டதூஉம்
ஏதிலார் தாங்கூறு மேச்சுரையுங் கேட்டேங்கிப்
போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த
மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழீ
மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழீ ;

### தேவந்தி ஐயையைக் ¶காட்டியரற்றியது

(8) ‡‡ஐயந்தீர் காட்சி யடைக்கலங் காத்தோம்ப
வல்லாதேன் பெற்றேன் மயலென் றுயிர்நீத்த
அவ்வை ††மகளிவடா னம்மணம் பட்டிலா
வையெயிற் றையையைக் கண்டாயோ தோழீ
மாமி மடமகளைக் கண்டாயோ தோழீ ;

---

(6) இவ்வாழ்வு கெடுவதாகவென்று.

(8) ஐயந்தீர்காட்சி - கவுந்தியடிகள். உயிர்நீத்த அவ்வை - உன் மேல் அன்பால் உயிர்விட்ட மாதரி. மணம்பட்டிலா ஐயையென்றது, மாதரி இறந்தமையால் மணம்படுத்துவாரின்மையின்.

---

(6) சிலப். பக். 570. (7) மாதவி துறவு : மணி. 18 : 7-8.

(பி - ம்.) †'றென்செய்கோ' ‡'காவற்பெண்டிரரற்று' $'றீங்கிழைப் பக், காவலன் றன்னுயிர் நீத்ததுங் கேட்டஞ்சிச், சாவதிவ்' § 'றன்னுற வுங்' || 'காதல னின்னுயிருங்' ¶ 'காட்டியது' ‡‡ 'கவ்வைதீர்' †† 'மகளிவடான் மணம் பட்டிலாள்'

செங்குட்டுவன் கூற்று

(9) †என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால் ;

செங்குட்டுவற்குக் கண்ணகியார் ‡கடவுணல்லணி காட்டியது

(10) தென்னவன் றீதிலன் றேவர்கோன் றன்கோயில்
நல்விருந் தாயினா னவன் றன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு *யானகலேன்
என்னோடுந் §தோழிமீ ரெல்லீரும் வம்மெல்லாம் ;

வஞ்சி மகளிர் சொல்

(11) வஞ்சியீர் வஞ்சி யிடையீர் மறவேலான்
பஞ்சடி யாயத்தீ ரெல்லீரும் ||வம்மெல்லாம்
கொங்கையாற் கூடற் பதிசிதைத்துக் கோவேந்தைச்
செஞ்சிலம்பால் வென்றாளைப் பாடுதும் ||வம்மெல்லாம்
தென்னவன் றன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம் ;
செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியரென்
றெங்கோ ¶முறைநா வியம்பவிந் நாடடைந்த
பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்மெல்லாம்
பாண்டியன் றன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம் ;††

---

(9) என்னேயிஃது என்னே யென்பது செங்குட்டுவன்கூற்று. மின்னுக்கொடி - கண்ணகி.

(10) முன் மானிட யாக்கையிற்கொண்ட சிவப்பாறித் தெய்வ யாக்கை பெறுதற்குக் காரணமாயினானென்பதுபற்றி, நான் அவன் மகளென்றாள். வென்வேலான் குன்று - செங்கோடு. நான் குன்றில் வந்து விளையாடுவேன் ; நீங்களும் அங்கே வாருங்கோளென்றாள்.

(11) செங்குட்டுவன் பரிகரத்தின் மகளிர். (11) : 8 எங்கோ - சேரன். முறைநா - முறையையுடைய நா. முன் அவன் மரித்தற்கு இவன் புகழ்ந்தபடியோடு கூறினர்.

---

(10 : 3.) "வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்" (கலித். 27 : 16)

(11) 6 - 7. "செங்கோல் வளைய வுயிர்வா ழாமை, தென்புலங் காவன் மன்னவன்" (சிலப். 28 : 212-3)

(பி - ம்.) † 'நோதகோ, என்னேயீ தென்னேயீ தென்னெனென்கொல்' ‡ 'கடவுண்மங்கலங் காட்டியது, வானோர்வரவு' * 'நான்' § 'தோழீரெல்லீரும்...என்று செங்குட்டுவற்கு......காட்டியது' || 'வம்மெலாம்' ¶ 'மணிநா' †† 'வேறு ஆயத்தார்'

ஆயத்தார்சொல்

(12) வானவ னெங்கோ †மகளென்றும் வையையார்
கோனவன்றான் பெற்ற ‡கொடியென்றாள் - வானவனை
வாழ்த்துவோ நாமாக வையையார் கோமானை
வாழ்த்துவா $தேவ மகள்.

வாழ்த்து

(13) தொல்லை வினையாற் றுயருழந்தாள் கண்ணினீர்
கொல்ல வுயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ
வாழியரோ வாழி வருபுனனீர் வையை
சூழு மதுரையார் கோமான்றன் றொல்குலமே;
(14) மலையரையன் பெற்ற மடப்பாவை தன்னை
§நிலவரசர் நீண்முடிமே லேற்றினான் வாழியரோ
வாழியரோ வாழி வருபுன||னீ ரான்பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான்றன் றொல்குலமே;
(15) எல்லா நாம்:
காவிரி நாடனைப் பாடுதும் பாடுதும்
பூவிரி ¶கூந்தல் புகார்.

அம்மானைவரி

(16) வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த வுரவோன்யா ரம்மானை
ஓங்கரணங் காத்த ††வுரவோ னுயர்விசும்பில்
தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை;

---

(12) எங்கோனாகியவன் பிரதிட்டித்தமையால் நாம் இவ்வாறு கூறினேம்.

(15) எல்லா நாம் - தோழிநாம். கூந்தல் - கூந்தால். புகார் பாடுவேம்.

---

(12) இவ்வெண்பா சில பிரதிகளிற் காணப்படவில்லை.

(14): 3. சிலப். 28: 123, கு - ரை.

(16): சிலப். 27: 165, கு - ரை.

(பி - ம்.) † 'மகனென்றாள்' ‡ 'கொம்பென்றாள்' $ 'டேவர்மகள்' § 'நிலவரசனீண்முடி' || 'னீர்த்தண்பொருனை சூழ்தருவஞ்சி' ¶ 'சோலைப்புகார்' †† 'வுரவோனொளிவிசும்பு'

(17) புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்முன் வந்த
கறவை முறைசெய்த காவலன்கா ணம்மானை
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை ;
(18) கடவரைக ளோரெட்டுங் கண்ணிமையா காண
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்யா ரம்மானை
வடவரைமேல் வாள்வேங்கை யொற்றினன்றிக் கெட்டும்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்கா ணம்மானை
†கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோ ரம்மானை
(19) அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோ ரம்மானை
தம்மனையிற் பாடுந் தகையெலாந் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேற் கூடவே யம்மானை
கொம்மை வரிமுலைமேற் ‡கூடிற் குலவேந்தன்
அம்மென் புகார்நகரம் பாடேலோ ரம்மானை ;

## கந்துகவரி

(20) பொன்னிலங்கு பூங் ¶கொடி பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைக ளார்ப்பவார்ப்ப வெங்கணும்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந் §தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே ;

---

(18) திக்கயமெட்டும்.
அம்மனை முன்னிலையாகக் கூறியது ; தம்வேட்கை மிகுதியால்.
(19) அம்மனையாடுகின்றுரைக் கண்டபின்பு தாமும் அம்மனையாடு கின்றுர் சொல்லியது.
ஏனும் ஒரும் : அசை. பாடு...வியங்கோள்.
(20) பொன்னிலங்கு பூங்கொடி : பெயர். பந்து - தெறிக்கும் பந்து.

---

(17) 1 : சிலப். 20 : 52, கு - ரை.
(17) 4 : 20 : 53-5, கு - ரை.
(18) 2 : “ இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக், கொடுவரி யொற்றி ” (சிலப். 5 : 97-8) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.
(20) பந்தாட்டத்தைத் தெரிவிப்பதற்குச் சீவகசிந்தாமணி (150-51) யிலும் இச்சந்தமே வந்துள்ளது.
(பி - ம்.) † ‘கொற்றவன் பூம்’ ‡ கூடிக்குலவேந்தன், வம்மென்’ ¶ ‘கொடிப்பொலஞ்’ § ‘தடிக்குமே’

(21) பின்னுமுன்னு மெங்கணும் பெயர்ந்துவந் தெழுந் †துலாய்
மின்னுமின் னிளங்கொடி ‡வியனிலத் திழிந்தெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே;
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே;

(22) துன்னிவந்து கைத்தலத் திருந்ததில்லை நீணிலம்
தன்னினின்று மந்தரத் தெழுந்ததில்லை தானெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே;

ஊசல்வரி

(23) வடங்கொண் மணியூசன் மேலிரீஇ யையை
உடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்கக்
கடம்பு முதறடிந்த காதலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ வாடாமோ வூசல்
*கொடுவிற் பொறிபாடி யாடாமோ வூசல்;

(24) ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றுது தானளித்த
சேரன் பொறையன் மலையன் றிறம்பாடிக்
கார்செய் §குழலாட வடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி யாடாமோ வூசல்

(25) வன்சொல் யவனர் வள ||நாடு வன்பெருங்கல்
தென்குமரி யாண்ட செருவிற் கயற்புலியான்
மன்பதைகாக் குங் ¶கோமான் மன்னன் றிறம்பாடி
மின்செ யிடைநுடங்க வாடாமோ வூசல்
விறல்விற் ††பொறிபாடி யாடாமோ வூசல்;

---

(21) பெயர்ந்து உலாவி. மின்னுமின் - ஒளிவிடுகிற மின். நிலத்து - நிலமீது.

(22) கைத்தலத்திருந்ததில்லை, நிலமீதெழுந்ததில்லை: என்றது, விரைவு பற்றி.

(23) உடங்கொருவர் - ஐயையுடன் நின்றாரிலொருவர். ஒற்றை - ஒற்றைத்தாளம்.

---

(23) சிலப். 24 : 135-6, கு - ரை.
(24) 1 : சிலப். 23 : 55, கு - ரை.
(25) 1 : "வன்சொல் யவனர் வளநா டாண்டு" (சிலப். 28 : 141); "நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து" (பதிற். 2-ஆம் பத்துப் பதிகம்)
(25) : 2. கயற்புலியான் : சிலப். 25 : 171.
(பி - ம்.) † 'துராய்' ‡ 'மீநிலத்' * 'கோவிற்' § 'குழலசைய' || 'நாட்டு வடபெருங்கல்' ¶ 'செங்கோலான் றிறம்பாடி' †† 'திறம்பாடி'

வள்ளைப்பாட்டு

(26) தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழ லவைப்பார் புகார்மகளிர்
ஆழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்
பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல் ;
பாவைமா † ராரிக்கும் பாடலே பாடல்

(27) பாடல்சான் முத்தம் பவழ வுலக்கையான்
மாட மதுரை மகளிர் குறுவரே
வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
வேப்பந்தார் நெஞ் ‡ சுணக்கும் பாடலே பாடல்

(28) சந்துரற் பெய்து தகைசா லணி முத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்
$ கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
§ படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல்
பனந்தோ டுளங்கவரும் பாடலே பாடல் ;

(29) ஆங்கு, நீணில மன்னர் ¶ நெடுவிற் பொறையனல்
தாடொழார் வாழ்த்த றமக்கரிது சூழொளிய
எங்கோ மடந்தையு மேத்தினு ணீடூழி
செங்குட் டுவன்வாழ்க வென்று.

(உகூ) வாழ்த்துக் காதை முற்றிற்று.

---

வள்ளை - உலக்கைப்பாட்டு.

---

(27) 1 : "பவள வுலக்கை கையாற் பற்றித், தவள முத்தங் குறு வாள்" (சிலப். 7 : 20)

(பி - ம்.) † 'ரார்க்கும்' ‡ 'சுவக்கும்பாடலோ' $ 'கடந்தடுபோர்ச்' § 'படர்ந்து' ¶ 'பொறியாற்குத், தாள்'

## முப்பதாவது

# வரந்தரு காதை



வடதிசை வணக்கிய † வானவர் பெருந்தகை
கடவுட் கோலங் கட்புலம் புக்கபின்
‡ தேவந் திகையைச் செவ்விதி னோக்கி
வாயெடுத் தரற்றிய மணிமே கலையரர்
யாதவ டுறத்தற் கேதுவீங் குரையெனக்
கோமகன் கொற்றங் குறைவின் றோங்கி
நாடு பெருவளஞ் சுரக்கென் றேத்தி
அணிமே கலையா ராயத் தோங்கிய
மணிமே கலைதன் வான்றுற வுரைக்கும்
மையீ ரோதி வகைபெறு வனப்பின்
ஐவகை வகுக்கும் பருவங் $ கொண்டது.
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
அவ்விய மறிந்தன வதுதா § னறிந்திலள்
ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
நித்தில விளநகை நிரம்பா வளவின
புணர்முலை || விழுந்தன புல்லக மகன்றது
தளரிடை ¶ நுணுகலுந் தகையல்குல் பரந்தது
குறங்கிணை திரண்டன கோலம் பொறாஅ
நிறங்கிளர் சீறடி நெய்தோய் †† தளிரின
தலைக்கோ லாசான் பின்னுள ளாகக்

---

1. வடதிசை வணக்கிய - வடதிசையிலுள்ளாரை வணக்கிய.
2. கட்புலம் புகுகை - கண்ணறிவிற்கு வெளிப்படுகை.
16. விழுந்தன - நேராக வெழுந்தனவில்லை. புல்லகம் - புல்லப்படுகிற மார்பு.
18. ஆபரணம் பொறுவென்றது இளமையால்.
19. அடி தளிர் நெய்தோய்த்த தன்மையவாயின.
20 தலைக்கோலாசானென்றது நட்டுவனை.

---

அடி, 1: "வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்" (சிலப். 28 : 234)

அடி, 5: "மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழீ" (சிலப். 29 : 7)

(பி - ம்.) † 'மன்னவர்' ‡ 'தேவந்தியையைச்' $ 'கொண்டில' § 'னறிந்தில' || 'யுருத்தன' ¶ 'நுடங்கின' †† 'தளிரன'

குலத்தலை மாக்கள் கொள்கையிற் † கொள்ளார்
யாது நின்கருத் தென்செய் கோவென
மாதவி நற்றாய் மாதவிக் குரைப்ப
வருகவென் ‡ மடமகண் மணிமே கலையென்
றுருவி லாள னொருபெருஞ் சிலையொடு
விரைமலர் வாளி வெறுநிலத் தெறியக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்
ஆங்கது கேட்ட வரசனு நகரமும்
ஓங்கிய நன்மணி யுறுகடல் வீழ்த்தோர்
தம்மிற் றுன்பந் தாநனி யெய்தச்
செம்மொழி மாதவர் சேயிழை நங்கை
தன்றுற வெமக்குச் ¶ சாற்றின ளென்றே
அன்புறு நன்மொழி யருளொடுங் கூறினர்
பருவ மன்றியும் பைந்தொடி நங்கை
§ திருவிழை கோல நீங்கின ளாதலின்
அரற்றினெ னென்றாங் கரசற் குரைத்தபின்

---

20 – 21. பின்னுள்ளுகைச் சிரமஞ்செய்து முடியாமையாலே தலைக் கோற்றரம்பெறுந் தன்மையில்லை; ஆதலால், குலத்தலைமாக்கள் கொள்ள நினைக்கின்றாரில்லை.

25 – 6. இவளாலே தவசிகளையும் சயிக்க நினைத்திருந்த காமன் கையற வென்க.

30 – 31. வீழ்த்தோர் தம்மையொப்ப.

32. செம்மொழிமாதவர்-தவம்படுத்தின சங்கத்தாரான **அறவண வடிகள்**. சேயிழை – மணிமேகலை.

33. துறவுசொல்லுதல் – வைராக்கியஞ்சொல்லுதல்.

(5) யாதவடுறத்தற் கேதுவீங் குரையெனச் (9) சொல்லுகின்றாள், (36) திருவிழைகோலம் நீங்கினபடியாலே (37) அரற்றினேனென்றாள்.

---

அடி, 25 : "உருவி லாள னொருபெருங் கருப்புவில்" (சிலப். 2 : 44)

அடி, 25-6 : "காமன் கையறக் கடுநவை யறுக்கும், மாபெருந் தவக்கொடி யீன்றனை" (மணி. 7 : 36 - 7)

அடி, 27-8 : "கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்" (சிலப். 27 : 107-8)

அடி, 30-31 : "அரும்பெறன் மாமணி, ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று, மைய னெஞ்சமொடு" (மணி. 2 : 72-4)

(பி - ம்.) † 'கொள்ளாளியாது' ‡ 'மகண்மணிமேகலையென, வுருவி' ¶ 'சாற்றின தொன்றே, யன்புட னன்மொழி யருளுடன் கூறு னள், பருவ மன்றிப்' § 'திருவீழ் கோல'

குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழத்
† துடித்தனள் புருவந் துவரிதழ்ச் செவ்வாய்
மடித்தெயி றரும்பினள் வருமொழி மயங்கினள்
திருமுகம் ‡ வியர்த்தனள் செங்கண் சிவந்தனள்
கைவிட் டோச்சினள் கால்பெயர்த் தெழுந்தனள்
பலரறி வாராத் தெருட்சியண் மருட்சியள்
உலறிய நாவின ளுயர்மொழி 8கூறித்
தெய்வமுற் றெழுந்த தேவந் திகைதான்
கொய்தளிர்க் குறிஞ்சிக் கோமான் றன்முன்
கடவுண் மங்கலங் காணிய வந்த
§ மடமொழி நல்லார் மாணிழை யோருள்
அரட்டன் செட்டித னுயிழை யீன்ற
இரட்டையம் பெண்க ளிருவரு மன்றியும்
ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்
|| சேடக் குடும்பியின் சிறுமக ளீங்குளள்
மங்கல மடந்தை ¶ கோட்டத் தாங்கண்
செங்கோட் டுயர்வரைச் சேணுயர் சிலம்பிற்
பிணிமுக நெடுங்கற் பிடர்த்தலை நிரம்பிய

---

38. குரற்றலைக்கூந்தல் - கொத்துக்களைத் தன்னிடத்திலேயுடைய கூந்தல்.

45. தெய்வமுற்று - தெய்வமேறி.

49-52 அரட்டன் செட்டி......மாகிய......கைக்கொண்டு......குடும்பத்தையுடையான்; திருவடி பிடிப்பான்.

53. மங்கலமடந்தை - [1]மங்கலாதேவி.

54. செங்கோடு - செவ்விதான கோடு.

55. பிணிமுகநெடுங்கல் [முளம்பின்முகம்; இது வில்முகம்]

---

அடி. 38. "குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்தி" (சிலப். 14 : 87); "குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ" (மணி. 8 : 36)

அடி, 39-45 : "தெய்வமுற்றேனவிநயம்.........உணர்ந்தோரே" (சிலப். பக். 86)

அடி, 49-50 சிலப். 30 : 129-31.

அடி, 51 : சிலப். 26 : 62, கு - ரை.

அடி, 52 : சிலப். 30 : 135.

[1] மங்கலா தேவியென்றது கண்ணகியை; மங்கலாபுரம் அல்லது மங்களூரென்பது இத்தேவி காரணமாகவந்த பெயரென்பர்.

(பி - ம்.) † 'துடித்தன' ‡ 'வியர்த்தன செங்கண் சிவந்தன' 8 'கூறினள்' § 'வடமொழி' || 'சேடக்குடும்பியன் சிறுமகளங்கு', 'சேடக் குடுமியன்' ¶ 'பீடத் தாங்கண்'

அணிகயம் பலவுள வாங்கவை யிடையது
கடிப்பகை †நுண்கலுங் கவிரிதழ்க் குறுங்கலும்
இடிக்*கலப் பன்ன விழைந்துகு நீரும்
உண்டோர் சுனையத னுள்புக் காடினர்
பண்டைப் பிறவிய ராகுவ ராதலின்
ஆங்கது ‡கொணர்ந்தாங் காயிழை கோட்டத்
தோங்கிருங் கோட்டி §யிருந்தோ யுன்கைக்
குறிக்கோட் டகையது கொள்கெனத் தந்தேன்
உறித்தாழ் கரகமு முன்கைய தன்றே
கதிரொழி காறுங் கடவுட் டன்மை
முதிரா தந்நீர் முத்திற மகளிரைத்
தெளித்தனை §யாட்டினிச் சிறுகுறு மகளிர்
ஒளித்த பிறப்பின ராகுவர் காணாய்
பாசண் டன்யான் பார்ப்பனி தன்மேல்
மாடல ||மறையோய் வந்தே னென்றலும்
மன்னவன் விம்மித மெய்தியம் மாடலன்
தன்முக நோக்கலுந் தானனி மகிழ்ந்து
கேளிது ¶மன்னா கெடுகநின் றீயது
மாலதி யென்பாண் மாற்றாள் குழவியைப்
பால்சுரந் தூட்டப் பழவினை யுருத்துக்
கூற்றுயிர் கொள்ளக் குழவிக் கிரங்கி

---

57. கடிப்பகைநுண்கல் - வெண்சிறுகடுகுபோன்ற நுண்ணிய கல். கவிரிதழ்க் குறுங்கல் - முருக்கம்பூப்போன்ற நிறத்தையுடைய குறிய கல்.

58. இடிக்கலப்பன்ன - மாவைக் கரைத்தாலொத்த. இழைந்துகு...

61. ஆயிழைகோட்டம் - மங்கலாதேவிகோயில்.

62. கோட்டி - கோயில்வாயில்.

65 - 6. சந்திராதித்தருள்ள அளவும் அதன் கடவுட்டன்மையொழியாது.

66 - 8. உன் கையதாகிய கரகத்துநீரை இம்மூவர் பெண்கள் மேலும் தெளித்தறியென்று தெய்வம் சொல்லுதலும்.

---

அடி 58 : சிலப். 6 : 146 ; "இடியினுங் கொடியினு மயங்கி" (சீவக. 196); "இழையினுங் கொடியினு மிடியினும் பிணங்கி" (பெருங். 1. 32 : 43)

அடி 64 : சிலப். 30 : 90 ; "உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்" (கலித். 9 : 2)

அடி 68 : "ஒளித்த பிறப்புவந் துற்றதை யாதலின்" (சிலப். 30 : 97)

அடி 74-87 : சிலப். 9 : 5 - 36-ஆம் அடிகளை இப்பகுதியுடன் ஒப்பிடுக.

(பி - ம்.) † 'நணுகலுங் கவரிதழ் குறுகலும்', 'நுணுகலும்' ‡ 'கொணர்ந்தங்' § 'யிருந்தோ யினகைக், குறிக்கோட டக்கையது' § 'யாட்டிச் சிறிய மகளி, ரொளித்த பிறப்பு முணர்குவர்' ||'மறையோன்' ¶'மன்னே'

ஆற்றாத் தன்மைய ளாரஞ †ரெய்திப்
பாசண் டன்பாற் பாடு கிடந்தாட்
காசில் குழவி யதன்வடி வாகி
வந்தன னன்னைநீ வான்றுய ரொழிகெனச்
செந்திறம் புரிந்தோன் செல்ல னீக்கிப்
பார்ப்பனி தன்னொடு ‡பண்டைத் தாய்பாற்
காப்பியத் தொல்குடிக் கவின்பெற வளர்ந்து
தேவந் திகையைத் தீவலஞ் செய்து
நாலீ ராண்டு நடந்ததற் பின்னர்
மூவா விளநலங் காட்டியென் கோட்டத்து
நீவா வென்றே நீங்கிய சாத்தன்
மங்கல மடந்தை கோட்டத் தாங்கண்
*அங்குறை மறையோ னாகத் தோன்றி
உறித்தாழ் §கரகமு மென்கைத் தந்து
குறிக் ||கோள் கூறிப் போயினன் வாரான்
ஆங்கது கொண்டு போந்தே னாதலின்
¶ஈங்கிம் மறையோ டன்மேற் றோன்றி
அந்நீர் தெளி **யென் றறிந்தோன் கூறினன்
மன்னர் கோவே மடந்தையர் தம்மேல்
தெளித்தீங் ††கறிகுவ மென்றவன் றெளிப்ப
ஒளித்த பிறப்புவந் துற்றதை யாதலிற்
புகழ்ந்த காதலன் போற்றா வொழுக்கின்
நிகழ்ந்ததற் கிரங்கு மென்னையு நோக்காய்
ஏதி னன்னாட் டியாருமி லொருதனிக்
காதலன் றன்னொடு கடுந்துய ‡‡ருழந்தாய்
யான்பெறு மகளே யென்றுணைத் தோழீ

---

96 - 7. நீரை அப்பெண்கள்மேலே தெளித்தலும் கழிந்த பிறப்பு வந்து உற்றது அவர்க்கு.

(98) 'புகழ்ந்தகாதலன்' என்னுஞ் சொல் முதலாக (103) 'மாதே வாராய்' என்னும் துணையும் கண்ணகிதாய் கூற்று.

---

அடி. 78. பாடுகிடத்தல் - வரங்கிடத்தல்: "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" (சிலப். 9 : 15); "பன்னா ளாயினும் பாடு கிடப்பேன்" (மணி. 18 : 158)

அடி 83. காப்பியக்குடி யென்பது சீகாழிக்குத் தென்கிழக்கிலுள்ள தோரூர்.

(பி-ம்.) † 'ரெய்துபாசாண்டன்' ‡ 'பண்டை மரபாற்' * 'நங்குல மறை யோனாகித்' § 'கரக மென்கைத்' || 'கோட்கூறிப்' ¶ 'நீங்கிய மனை யோடன்' ** 'யெனவறிந்தோன்' †† 'அறிகுவனென்றவன்' ‡‡ 'ரெய்திய'

வான்றுயர் நீக்கு மாதே வாராய்
என்னோ டிருந்த விலங்கிழை நங்கை
தன்னோ டிடையிருட் டனித்துய ருழந்து
†போனதற் கிரங்கிப் புலம்புறு நெஞ்சம்
யானது பொறேஎ னென்மகன் ‡வாராய்
வருபுனல் வையை வான்றுறைப் பெயர்ந்தேன்
உருகெழு மூதூ ரூர்க்குறு மாக்களின்
வந்தேன் கேட்டேன் மனையிற் காணேன்
எந்தா யிளையா யெங்கொளித் தாயோ
என்றாங் கரற்றி *யினைந்தினைந் தேங்கிப்
பொன்றா ழகலத்துப் §போர்வெய் யோன்முன்
குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்
||முதியோர் மொழியின் முன்றி னின்றழத்
¶தோடலர் போந்தைத் தொடுகழல் வேந்தன்
மாடல மறையோன் றன்முக நோக்க
மன்னர் கோவே வாழ்கென் றேத்தி
முந்நூன் மார்பன் முன்னிய துரைப்போன்
மறையோ னுற்ற வான்றுயர் நீங்க
உறைகவுள் வேழக் கையகம் புக்கு
வானோர் வடிவம் பெற்றவன் பெற்ற
காதலி தன்மேற் காதல ராதலின்
மேனிலை யுலகத் தவருடன் போகும்

---

(104) 'என்னோடிருந்த' ஆதி (107) 'என்மகன்வாராய்' இறுதியாகக் கோவலன்மாதா வார்த்தை.

(108) 'வருபுனல் வையை வான்றுறைப் பெயர்ந்தேன்' என்பது முதலாக (111) 'எங்கொளித்தாயோ' என்பதீறாக மாதரிவார்த்தை.

114. குதலை - இளமொழி.

121. உறை கவுள் - மதம் துளிக்கின்ற கவுள்.

122. வானோர் வடிவம் பெற்றவன் - கோவலன்.

123. காதலி - கண்ணகி.

---

அடி, 120 - 22 : "மறையோன் றன்னைப், பாகுகழிந் தியாங்கணும் பறைபட வரூஉம், வேக யானை வெம்மையிற் கைக்கொள, ஒய்யெனத் தெழித்தாங் குயர்பிறப் பாளனைக், கையகத் தொழித்ததன் கையகம் புக்கு......அடக்கிய கருணைமறவ" (சிலப். 15 : 45 - 53)

(பி - ம்.) † 'போந்ததற்' ‡ 'வாரான், வருபுனல் வையை வாவறைப் பெயர்ந்தே' * 'யினைந்துநைந்தேங்கிப்' § 'போர்வேந்தன் முன்' || 'முதிரா' ¶ 'தோடார்'

தாவா நல்லறஞ் செய்தில ரதனால்
அஞ்செஞ் சாய †லஞ்சா தணுகும்
வஞ்சி மூதூர் மாநகர் மருங்கிற்
பொற்கொடி தன்மேற் பொருந்திய காதலின்
அற்புளஞ் சிறந்தாங் ‡கரட்டன் செட்டி
மடமொழி நல்லாண் மனமகிழ் சிறப்பின்
உடன்வயிற் றோரா யொருங்குடன் றோன்றினர்
ஆயர் முதுமக ளாயிழை தன்மேற்
போய பிறப்பிற் பொருந்திய காதலின்
ஆடிய குரவையி னரவணைக் கிடந்தோன்
சேடக் $குடும்பியின் சிறுமக ளாயினள்
நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்
அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலு மறப்பயன் விளைதலும்
§பிறந்தவ ரிறத்தலு மிறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே ‖தொன்றியல் வாழ்க்கை
ஆனே றூர்ந்தோ னருளிற் றோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவ னாதலிற்
செய்தவப் பயன்களுஞ் சிறந்தோர் படிவமும்
கையகத் தனபோற் கண்டனை யன்றே

---

123 - 31. காதலராகையாலே அறஞ்செய்திலர்; அதனாற் காதலியாகிய அஞ்செஞ்சாயல் அஞ்சாதணுகும் வஞ்சிமூதூரிற் பிறந்தார்.

132 - 5. ஆடிய குரவையின்பயத்தால் திருவடி பிடிப்பான் குலத்திற் பிறந்தாள் மாதரி.

ஆதலால்,

136. பொற்படி - பொன்னுலகம்.

137. அற்புளம் - அன்புடையவுள்ளம். பற்றுவழிச்சேறல் - பூமியிற் பற்றுள்ளவிடத்தே பிறத்தல்.

---

அடி, 131 : சிலப். 10 : 227.

அடி, 138 : "பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலும், அறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்" (மணி. 21 : 19 - 20)

அடி, 140 : "புதுவ தன்றே புலனுடை மாந்திர்" (கலித். 22 : 4); புதுவ "தன்றிவ் வுலகத் தியற்கை" (புறநா. 76)

அடி, 141 - 2 : "செஞ்சடை வானவ னருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவ" (சிலப். 26 : 98 - 9)

(பி - ம்.) † 'லகலா தணுகும்', 'லருகா நணுகும்'. ‡ 'கருட்டன்' $ 'குடும்பியன்' § 'பிறந்தவர் சாதலு மிறந்தவர்' ‖ 'யொன்றியல்'

ஊழிதோ றூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை யென்ற
மாடல மறையோன் றன்னொடு மகிழ்ந்து
பாடல்சால் சிறப்பிற் †பாண்டி நன் னாட்டுக்
கலிகெழு கூடல் கதழெரி மண்ட
முலைமுகந் திருகிய மூவா மேனிப்
பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து
நித்தல் விழாவணி நிகழ்கென் றேவிப்
பூவும் புகையு மேவிய விரையும்
தேவந் திகையைச் செய்கென் றருளி
வலமுறை மும்முறை வந்தனன் வணங்கி
உலக மன்னவ னின்றோன் முன்னர்
அருஞ்சிறை நீங்கிய வாரிய மன்னரும்
பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்
‡குடகக் கொங்கரு மாளுவ வேந்தரும்
கடல்சூ ழிலங்கைக் ႘கயவாகு வேந்தனும்
எந்நாட் டாங்க §ணிமைய வரம்பனின்
நன்னாட் செய்த நாளணி வேள்வியில்
வந்தீ கென்றே வணங்கினர் வேண்டத்
தந்தேன் வரமென் றெழுந்த ¶தொருகுரல்

---

151. படிப்புறம் - அர்ச்சனாபோகம்.

158. சிறைக்கோட்டம் பிரிந்த மன்னர் - பண்டே வஞ்சியிற் சிறை கிடந்த மன்னர்.

162 - 3. வேள்வியில் வரவேண்டுமென்றார்.

---

அடி, 145 : சிலப். 25 : 181 - 2, கு - ரை.

அடி, 151 : " பத்தினிக் கோட்டமுஞ் சமைத்து, நித்தல் விழாவணி நிகழ்வித் தோனே " (சிலப். உரைபெறு கட்டுரை, 4)

அடி, 153 : சிலப். 28 : 61, கு - ரை.

அடி, 159-60 : " அதுகேட்டுக், கொங்கிளங் கோசர் தங்கணாட் டகத்து, நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய, மழைதொழி லென்றும் மாறாதாயிற்று ", " அது கேட்டுக், கடல்சூ ழிலங்கைக் கயவாகு வென் பான், நங்கைக்கு, நாட்பலி பீடிகைக் கோட்டமுந் துறுத்தாங்கு, அரந்தை கெடுத்து வரந்தரு மிவளென, ஆடித் திங்க ளகவையி னாங் கோர், பாடி விழாக்கோள் பன்முறை யெடுப்ப, மழைவீற் றிருந்து வளம்பல பெருகிப், பிழையா விளையு ளாடா யிற்று " (சிலப். உரைபெறு கட்டுரை, 3)

(பி - ம்.) † 'பாண்டியன் றன்னாட்டுக்' ‡ 'குடகருங்' ႘ 'காவல் வேந்தன்' § 'ணிமையவர் தம்மி, னன்னாட் செய்த நாளணி வேள்வி யுள்' ¶ 'தோர்குரல்'

ஆங்கது கேட்ட வரசனு மரசரும்
ஓங்கிருந் தானையு முறையோ டேத்த
வீடுகண் டவர்போன் மெய்ந்நெறி விரும்பிய
மாடல மறையோன் றன்னொடுங் கூடித்
தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற
வேள்விச் சாலையின் வேந்தன் போந்தபின்
யானுஞ் †சென்றே னென்னெதி ரெழுந்து
தேவந் திகைமேற் றிகழ்ந்து தோன்றி
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை
நுந்தை தாணிழ லிருந்தோய் நின்னை
அரைசுவீற் றிருக்குந் திருப்பொறி யுண்டென்
றுரைசெய் தவன் ‡மே லுருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்றன் செல்ல னீங்கப்
பகல் ‖செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் §பார மகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்
தந்தமி லின்பத் ¶தரசாள் வேந்தென்
றென்றிற முரைத்த விமையோ ரிளங்கொடி
தன்றிற முரைத்த தகைசா னன்மொழி

---

170. யாகசாலைக்கண் அரசன்போந்தபின்.

171. யானென்றது இளங்கோவடிகளை.

179. ஆதித்தன் தோன்றுகிற குணக்காகிய திக்கினாலே பேருடைய குணவாயில். படிமமென்றது பூதம்; அது கடைகுறைந்து படியென நின்று அதனையுடையோர்க்குப் படியோராயிற்று.

(173) ‘வஞ்சிமூதூர்’ என்றது முதலாக (182) ‘அந்தமி லின்பத் தரசாள் வேந்து’ என்பதீறாக இளங்கோவடிகள் தெய்வம் சொன்ன தனைக் கொண்டு கூறினார்.

174 - 85. நுந்தையாகிய சேரலனிடத்தே நீயிருக்க, ஒருநிமித்தி கன்வந்து நின்னைப்பார்த்து அரசுவீற்றிருக்கும் இலக்கணமுண்டென்று

---

அடி, 169 : “ தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற ” (சிலப். 28 : 184)

அடி, 170 - 83 : “ குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த, குடக் கோச் சேர லிளங்கோ வடிகள் ” (சிலப். பதி. 1-2) என்பதையும் அதன் உரைகள் முதலியவற்றையும் பார்க்க ; பக்கம், 5, 12, 13.

(பி - ம்.) † ‘சென்றே னெதிரேன் றெழுந்து’ ‡ ‘மேற்கறுத்து நோக்கிய’ ‖ ‘செய்வாயிற்’ § ‘பார மகன்று போந்து’ ¶ ‘தரசாயினை வேந்தென வென்’

தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்
பரிவு மிடுக்கணும் பாங்குற † நீங்குமின்
தெய்வந் தெளிமின் றெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் டுறமி னுயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் றவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் றீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென்.

(௩௦) வரந்தரு காதை முற்றிற்று.

---

சொல்ல, என் தமையனாகிய செங்குட்டுவன் இருக்க இவ்வாறு முறைமை கெடச் சொன்னாயென்று அந்நிமித்திகனை வெகுண்டுநோக்கிச் செங்குட்டுவனுக்குத் துன்பம் வாராதபடி குணவாயிலிடத்துத் துறந்திருக்கின்ற கடவுளர் முன் வந்து இராச்சியபாரத்தை விட்டு நீங்கி மோட்சமாகிய இராச்சியத்தை ஆளக்கடவ வேந்தனல்லேயோவென்று முன்பின் நிகழ்ந்ததும் மேல் நிகழ்வதுமாகிய என் திறமுரைத்த இமையோரிளங்கொடி தன்திறமுரைத்த கதையைத் தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீரெனக் கூட்டுக.

188. புறஞ்சொற் சொல்லாதபடி பரிகரிமின்.
192. பொருண்மொழி - மெய்வார்த்தை.
195. பிழையுயிர் - மரிக்கிற உயிர். 196. அறமனை - மனையறம்.
198. வெள்ளைக்கோட்டி-பயனிலுரைக்கோட்டி; கோட்டி தவிர்மின்.
200. உள்ளநாள் [1] வீழ்நாள் படாமை இயலுமதனைக் கைவிடாது.
202. மல்லன்மா ஞாலத்துவாழ்வீ ரீங்கென்.........

சிலப்பதிகார அரும்பதவுரை முற்றிற்று.

---

அடி, 197 : "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும், உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை" (மணி. 24 : 77-8)

அடி, 199 : "இளமையு நில்லா யாக்கையு நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா" (மணி. 22 : 135-6)

அடி, 201 : "தன்னொடு செல்வது வேண்டி னறஞ்செய்க" (நான்மணிக். 15)

[1] "வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன், வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள், 38) (பி - ம்.) † 'நீங்குதிர்'

## கட்டுரை

முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
†குடதிசை யாளுங் கொற்றங் குன்ரு
ஆர மார்பிற் ‡சேரகுலத் துதித்தோர்
அறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் \$பண்புமேம் படுதலும்
விழவுமலி §சிறப்பும் விண்ணவர் வரவும்
ஒடியா வின்பத் தவருறை நாட்டுக்
||குடியின் செல்வமுங் கூழின் பெருக்கமும்
வரியுங் குரவையும் விரவிய கொள்கையிற்
¶புறத்துறை மருங்கி னறத்தொடு பொருந்திய
மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு
பொங்கிரும் பரப்பிற் கடல்பிறக் கோட்டிக்
§§கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய
††செங்குட் டுவனோ டொருபரிசு நோக்கிக்
கிடந்த வஞ்சிக் காண்ட ‡‡முற்றிற்று.

மூன்ருவது
வஞ்சிக்காண்டம் முற்றிற்று.

---

அடி, 1, 4-8. மு. சிலப். பக். 265, 508.

அடி, 11-5 : "கொடும்போர் கடந்து நெடுங்கட லோட்டி, யுடன்று மேல் வந்த வாரிய மன்னரைக், கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்ரோய்" (சிலப். 28 : 119-21) என்பதையும் அதன் குறிப்புரையையும் பார்க்க.

அடி, 13 : "கங்கைப் பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன்" (சிலப். பக். 569)

(பி - ம்.) † 'குடகருங்கண்டு' ‡ 'சேரர்குலத்' \$ 'பண்புண்டாத லும்' § 'சிறப்பின் வானவர்வரவு, மொழியா' || 'குடியுங்கூழின் பெருக் கமுமவர்தம்' ¶ 'புறத்திறை மருங்கிற் §§ 'கங்கையாற்றுக்கரை' †† 'செங்குட்டுவனை நோக்கி' ‡‡ 'முற்றும்'

# நூற்கட்டுரை



குமரி வேங்கடங் குணகுட கடலா
மண்டிணி மருங்கிற் றண்டமிழ் வரைப்பிற்
செந்தமிழ் கொடுந்தமி ழென்றிரு பகுதியின்
ஐந்திணை மருங்கி னறம்பொரு ளின்பம்
மக்க டேவ ரெனவிரு சார்க்கும்
ஒத்த மரபி னொழுக்கொடு புணர
எழுத்தொடு புணர்ந்தசொல் லகத்தெழு பொருளை
இழுக்காய யாப்பி னகனும் புறனும்
அவற்று வழிப்படூஉஞ் செவ்விசிறந் தோங்கிய
பாடலு மெழாலும் பண்ணும் பாணியும்
அரங்கு விலக்கே யாடலென் றனைத்தும்
ஒருங்குடன் றழீஇ யுடம்படக் கிடந்த
வரியுங் குரவையுஞ் சேதமு மென்றிவை
தெரிவுறு வகையாற் செந்தமி ழியற்கையில்
ஆடிநன் னிழலி னீடிருங் குன்றம்
காட்டு வார்போற் கருத்துவெளிப் படுத்து
மணிமே கலைமே லுரைப்பொருண் முற்றிய
சிலப்பதிகார முற்றும்.

**சிலப்பதிகாரம் முற்றிற்று.**



அடி, 5; மு. மணி. 12 : 116.

அடி, 15-6: "நீடிருங் குன்ற நிழல்காலு மண்டிலத்துக், கோடு கோடாய்த் தோன்றுங் கொள்கைத்தே" (சிலப். நூற்சிறப்புப் பாயிரம்)

# விளங்கா மேற்கோளகராதி

[எண் - பக்க எண்]

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[எண் - பக்க எண்]

# *அநுபந்தம்

## பதிகம்

| பழைய பிரதியில் உள்ளது | | வேறுபாடு |
|---|---|---|
| **1. மங்கல வாழ்த்துப் பாடல்** | | |
| 2 சேரற்கு | ... | சேரனுக்கு |
| 4 (7) காட்டி | ... | காட்ட |
| 8 புலம் | ... | புலங்காண |
| 8 இடம் | ... | இடம் அதுபட்டது |
| 25 கொண்ட | ... | கொண்ட பிறனோர் கள்வன் |
| 32 நெடுங்கணீருகுத்து நெடுங்கண்ணால் நீருகுத்து | ... | நெடுங்கண்ணனது நீருக நிற்ப |
| 33 பத்தினியாகலின் | ... | பத்தினியாதலின் |
| 36 பத்தினியாகுமிவளென்று | ... | பத்தினியாகுமென்று |
| 39 அதிராச் சிறப்பு | ... | அதிகாரச் சிறப்பு |
| 40 சடைமுடி : ஆகுபெயர் | ... | சடை : ஆகுபெயர் |
| 40–41 வெள்ளியம்பலம் | ... | வெள்ளயம்பலம் |
| 46–9 கணவனொடு கட்டியதென்க | ... | கணவனொடு காட்டியதென்க |
| 53 காண்டலில்லையென்று சொல்ல | ... | காண்டலில்லெனச் சொன்ன |
| 57 வெளிப்பட்டுவந்து | ... | வழிப்பட்டுவந்து |
| 58 சூழ்ந்த சிற்பத் தொழில் | ... | சூழ்ந்த சிறப்புத்தொழில் |
| 62 அடிகளென்றது | ... | அவரென்றது |
| 62 சொன்னாக அவனுக்கு | ... | சொன்னாக |
| 71 வினைவியதிறத்தையுடைய | ... | வினவியதிறத்தினையுடைய |
| 73 தோடு அலர் | ... | கோடலர் |
| 78 நண்பகற் | ... | நன்பகற் |
| 87 அதுகேட்டு, அரசியல் | ... | அதுகேட்டடிகளரசியல் |
| 87 அறங்கூற்றென்பதூம் பத்தினி மகளிர் | ... | அறங்கூற்றென தர்மபத்தினி |
| 87 ஏனை இரு வேந்தர் | ... | ஏனைவேந்தர் |
| 87 னென்க | ... | னென்கபதிகமுற்றும் |

## உரைபெறு கட்டுரை

| | | |
|---|---|---|
| 3 பலிபீடிகைக் கோட்டம் | ... | பலிபீடிகை |
| 4 கோழி - உறையூர் | ... | ... ... ... |

* சென்னைத் துரைத்தனத்துக் கையெழுத்துப்புத்தகசாலையில் உள்ள அரும்பதவுரையுடன் ஒப்புநோக்கியதன் பயனாக இவ்வநுபந்தம் இங்கே சேர்க்கப்பெற்றுள்ளது.

## 1. மங்கல வாழ்த்துப் பாடல்

| | | |
|---|---|---|
| 1–12 நான்கு சிந்தியல் | ... | நான்குஞ் சிந்தியல் |
| 31–3 எனவே தமக்கு | ... | எனத் தனக்கு |
| வணிகரென்றவாருயிற்று | ... | வணிகர் |

## 2. மனையறம்படுத்த காதை

| | | |
|---|---|---|
| 4 தவா | ... | தவாத |
| 6 தேம் ஒருங்கு | ... | தேயமொருங்கு |
| 9–10 தோன்றிய | ... | தோற்றிய |
| செல்வர்க்குத் தோன்றிய | ... | சொல்லுதற்குத் தோன்றிய |
| 35 இருவரது புணர்ச்சி | ... | இவர் தோன்றுதலால் உத்தர குருவாயின விதித்தலென்பது முதலாக இங்கே யெழுத்து மயங்கியும் இருவரது புணர்ச்சி |
| இனி நயப்புக் கூறுகின்றது | ... | கையற்றென நயப்புக் கூறு கின்றன |
| 49 இவ்வாறு...இயல்பினுனென்றே... | | இவ்வாருேருரிமையின்றி யேற எம்மைவருத்துமியில்பினனுயு மன்றே குமர வேடன் கையில் வேலொன்றையு மிரண்டாக் கித் தந்தது |
| 64 பிறிதணி அணிதலாற் | ... | பிறிதணிதலாற் |
| 70 உற்றதை | ... | உற்றது |
| 72 என்னபித்தேறினுர் | ... | என்னபித்தேறினர் |

## 3. அரங்கேற்று காதை

| | | |
|---|---|---|
| கூத்தியதமைதி கூறுகின்றது | ... | தெய்வமால்வரை.......மன்னர்க் குக் காட்டல்வேண்டி :கூத்திய தமைதி கூறுகின்றது தெய்வமால்வரை – மகளிர் |
| 2 (1) அருளாற்சாப | ... | அருளாலோர் |
| 2 போனுளென்க | ... | போனுள் |
| 4 என்றுராயிற்று | ... | என்றுயிற்று |
| 8–9 என்றது | ... | என்பது |
| ஒன்றும் குறைபடாமல் | ... | ஒன்று குறைபடாமல் |
| 10 ஐயாண்டு நிரம்பிய | ... | யையிரண்டு நிரம்பிய |
| 12–25 உறுப்புக்களைச்சேர | ... | உறுப்புக்களையுஞ்சேர |
| கொடுகொட்டி | ... | கோடுகொட்டி |
| தம்மிற்கூடி | ... | தன்னிற்கூடி |

| | | |
|---|---|---|
| அந்த நான்கினை | ... | அந்நான்கினை |
| கூறுபாட்டையறிந்து | ... | கூறுபாட்டையுமறிந்து |
| 12 உடைய கூத்தை | ... | உடையவக் கூத்தை |
| 13 நகைக் கூத்து | ... | கைக்கூத்து |
| 13 புணர்த்தலென்றது | ... | புணர்த்தலது |
| 13 சேதம் | ... | தசம் |
| 14–5 விளங்கவறிந்து | ... | விளங்கவறிதல் |
| 14 இரண்டுகூறு | ... | அவை இரண்டுகூறு |
| 14 இவை அசுரரை | ... | அவை அசுரரை |
| 15 நூல்களில் விதித்தவழியே | ... | இவையிற்றை நூல்களின் வழியே |
| 16 ஆடலுமென்றது | ... | ஆடலாவது |
| கீற்றுகடிசரிமுதலாக | ... | கீற்றுகடிசசசி(ச)ரி முதலாக |
| குறிக்கோளும் | ... | குறிகளும் |
| பதிறுறு மாத்திரை | ... | பதினு மாத்திரை |
| ஆறன்மட்டம் | ... | புறக்கூத்திற்குரியவாறன்மட்டம் |
| தாளவொரியல் | ... | தாழவொரியல் |
| கழாற்றுக்கு | ... | தாழாற்றுக்கு |
| 18 அவைதாமெழிற்கை பொருளாகும்மே | ... | அவைதாமெழிற்கை அழகே தொழிற்கைதேரிற்பொருட்கை கவியிற் பொருளாகும்மே |
| 26–36 பொருளான இயக்கம் நான்கினையும் | ... | பொருளான வியக்கத்தக்க நான்கினையும் |
| விரிக்கவும் வல்லனுயுள்ள | ... | விரிக்கவும் தொடுக்கவும் வல்லனுயுள்ள |
| 47 அறிந்தென்றவாறு | ... | அறிந்து செய்து காட்டவல்லானென்றவாறு |
| 55 கருவியாசிரியன் | ... | கருவி செய்தமைக்கப்பட்ட வாசிரியன் |
| 56 சொல்லிய வியல்பினிற் சித்திர வஞ்சனை | ... | சொல்லிய மரபிற்குழலொன்றுனுஞ் சொல்லிய மரபிற்சித்திர வஞ்சனை |
| 70–71 ஈரேழ்தொடுத்த செம்முறைக் கேள்வி | ... | ஈரேழ்தொடுத்த புலமையோனுடனீரேழ் தொடுத்தசெம்முறைக் கேள்வி |
| 93–4 இசை செய்ய | ... | கவி செய்ய |
| 114–5 பேரிசை மன்னர் | ... | இனித்தலைக்கோல்விதி கூறுகின்றது. பேரிசை மன்னர் |
| பறிக்கப்பட்ட வழகிய | ... | பறிக்கப்பட்ட கொடுத்தவழகிய |
| 137–8 தெய்வப் பாடலின் ஈற்றிலே நின்று | ... | தெய்வப்பாடலிலே நின்று |

| | | |
|---|---|---|
| 145 தேசிக்கூத்தை | ... | தேசிகத்தை |
| 147 அந்தரக் கொட்டுட | ... | அந்தரக் கோட்டுட |
| 148 அளவு கெடாத | ... | அளவு கொடாத (கோடாத) |
| 152 அழகிய மண்டில நிலையா லென்றவாறு முடித்தென்க. இனிமார்க்கம் | ... | தேசிக்கூலெல்லாமழகியமண்டல நிலையிலே வருமென்றவாறு முடித்தற்பின். முடித்த தே மாறுகையாகையான் மயங்கிய வென்ருர். இனிமார்க்கம். |
| 160 அன்றியுமரசனுடைய | ... | அன்றியுமிலைப் பூங்கோதை யரசனுடைய |
| 175 என்னென்றது ஈற்றசை | ... | காட்டல் வேண்டி ஆடலாசிரியனொடு இசையோனு மியற்புலவனுந் தண்ணுமை முதல்வனும் பொன்வியக்கொ...யாழாசிரியனுடனுங் கூத்துப் பயின்றவர்களோடு ஆங்குச் சமைத்தரங்கேறியித்தனையும் பழகிக் கடைபிடித்துக் காட்டினளாதலாலேயறிப் பெற்றனளெனக் கொடுத்து வாங்கிப்புக்கு விடுத்தலில்லா விருப்பினனுனென்க |

## 4. அந்திமாலைச் சிறப்புச்செய்காதை

| | | |
|---|---|---|
| 68 தங்களையுடைய | ... | உடைப்பெருங்கொழுநர் தங்களையுடைய |
| 75–8 புறநீர்மை | ... | நோதிறம்புறநீர்மை |

## 5. இந்திரவிழவூரெடுத்த காதை

| | | |
|---|---|---|
| 112–3 கருந்தாழாகிய காவலும் | ... | கருந்தாழாகிய வாயிலும் |
| 134 பூதம்திரிகின்ற | ... | நான்கு பூதமும் திரிகின்ற |
| 137 நவை—குற்றம் குற்றத்துக்காகக் கண்ணீருகுக்கையால் | ... | நவநீருகுக்கும்—புதிதாக வுண்டான குற்றத்திற்காய்க் கண்ணீருகுக்கையான் நவநீரென்ருர் |
| 171 வால்வளை மேனி | ... | வால்வெள்ளை மேனி |
| 188–203 அமர்ந்து | ... | அயர்ந்து |
| 225–6 அவரெழுதுவரிக்கோலம் | ... | பின்பு தன் மனைகளிலேபுக்கு அவிரெழுது வரிக்கோலம் |

## 6. கடலாடு காதை

| | | |
|---|---|---|
| 4 விஞ்சை வீரன்—விச்சாதர வீரன் | ... | விஞ்சையர்வேந்தன்—விச்சாதரருக்கு வேந்தன் |
| 11 வஞ்சம்—இருளாக | ... | இருள்கூரவஞ்சம்—இருளாக |
| 99 வீரச்சங்கிலி | ... | வயிரச்சங்கிலி |

## 7. கானல்வரி

| | | |
|---|---|---|
| 28 செவ்வாய் முறுவலை ஒவ்வாவேனும் வாங்கும் | ... | செவ்வாய் முறுவலை மணி யொவ்வாவேனும். மணியென்றது முத்தை. வாங்கும். |
| 29 ஆம்பல் என்றுர் | ... | ஆம்பலவிழுமென்றுர் |
| ஊதுமென்க உண்டா | ... | ஊதுமென்க உண்டு கண்டாரில் ஒரு கூறுதலாலென்று முரைப்பாருமுளர் |
| 32 மறக்கமாட்டேமென்றது ஒருசொல் | ... | மாட்டேமாலென்றது ஒரு சொல் |

## 9. கனாத்திற முரைத்தகாதை

| | | |
|---|---|---|
| 15 கோயிலிலே | ... | கோயிலிலே பாடுகிடந்தாளுக்கு பிணந்தின்னு மிடாகினிப்பேய் |

## 10. நாடுகாண் காதை

| | | |
|---|---|---|
| 18 ஐந்து கோயிலாய் | ... | ஐந்து சிறு கோயிலாய் |
| 68–71 பொங்கர் பரிகரி | ... | பொங்கர் உண்டாக்கிப் பரிகரி |
| 132–5 யென்றுமாம் | ... | யென்றுமாம் பழிநீத்தொழுகுவார்-தண்டார் |
| 219 கொல்லுவான் | ... | கொல்லுவான். பரத்தையரென்றது வரமாம் |
| 226 வருந்தினர் | ... | வருந்தினர். கை (வாழ்க்கை) ஒழுக்கம் |

## 11. காடுகாண்காதை

| | | |
|---|---|---|
| 17 காட்டி அன்றி | ... | காட்டிவேலானுமெறிந்த பகையன்றியும் |
| 76 மூங்கில் | ... | மூங்கிலும் கரிபுறக்கிடக்கை இப்படி யொத்துவரி மரற்றிரங்கி கானம் |

| | | |
|---|---|---|
| 155 மெய்ப்பாட்டியற்கை—பரமாகமம்-பரமாகமத்தில் இந்திரன் நூலினைக் காணலாம் | ... | மெய்ப்பாட்டியற்கை குறிப்பனதியல்பு. அதனையுருபு தொக்கது. இந்திர நூலில் காணலாம். |
| 172 நயந்த | ... | தீதிலனும் அரிதிறப்பவெழுத்திலென அன்றிநயந்த |
| 181 ஞானி | ... | ஞாதி |
| 180-83 அவர்கள் | ... | அன்றி அவர்கள் |

## 13. புறஞ்சேரியிறுத்தகாதை

| | | |
|---|---|---|
| 83 இலச்சினையிடுவார்...யாலிடுவதும் | ... | இலச்சினை யிடுவார்க்குப் புறநடையாலிடுவதும் |
| 90–91 இரவிடை | ... | விதனங் களைதற்கிரண்டு கடுகுவாயால் இரவிடை |
| 151–60 வேனிற் | ... | மேகலைக்குவமை. வேனிற் |

## 14. ஊர்காண்காதை

| | | |
|---|---|---|
| 33 போக்கவொண்ணாத வினை | ... | ஒய்யாவினைப்பயன் உண்ணுங்காலை. வினையைச் செலுத்திமேலிதனை யுண்ணுமிடத்து. |
| 40 | ... | கொள்ளாத் துன்பம் – அதனால் தரிக்கமுடியாத துன்பம் |
| 49 வார்த்தை | ... | பெருவார்த்தை |
| 99 இந்தளம் | ... | இந்தனம் |
| 110–11 புகுந்துகாணும் | ... | புகுந்துகாமன்காணும் |
| 118–9 ஐந்துகாலமும் | ... | அக்காலத்துத் தன் கணவரோடிருந்து கார்காலந் துடங்குவதற்கு முதலான வைந்து |
| 124–5 ஓசனிக்கின்றவன்னம் | ... | வாரணம் |
| 169 தோட்டி | ... | கொடி |

## 15. அடைக்கலக்காதை

| | | |
|---|---|---|
| 2 கௌரியர்-பாண்டியர் | ... | முருகர்பழு இந்திரனாலே பெற்றுப் பூமியிலே யுண்டாக்கினான். பாண்டியன் காரணம் விளங்கிய மூதூர் |
| 64 இவ்வேடு என்னென்று சொல்ல | ... | இவ்வேடு கணவெனெனச் சொல்லி |
| 213 வைத்தெய்யும் | ... | வையாதெய்யும் |
| 214 வேய் | ... | பேய் |

## 16. கொலைக்களக்காதை

| | | |
|---|---|---|
| 125–6 அக்கசாலை | ... | அக்கசாலையர் |
| 156 தீவினையாகிவந்து | ... | தீவினையாகியவந்து |
| 173 இந்திரகுமர | ... | அந்திரகுமர |

## 17. ஆய்ச்சியர்குரவை

| | | |
|---|---|---|
| 22 இட்டோது வாருமுளர் | ... | விட்டோதுவாருமுளர். நறுமென் சாயலவளுகஞ் செய்தையல். ஆகுபெயர் கலை. |

## 18. துன்பமாலை

| | | |
|---|---|---|
| 7 ஐயையை | ... | ஓர் இடைச்சியை |

## 22. அழற்படுகாதை

| | | |
|---|---|---|
| ௧. வெளிப்பட்டதென்றுமாம் | ... | இன்னும் எரிமுகம் அடக்கம் நீங்கி வெளிப்பட்டு நகரி காவற் றெய்வங்களினுடைய கோட்டை வாயில்களடைத்தன. அவை காவாவாயின |

## 23. கட்டுரைகாதை

| | | |
|---|---|---|
| 16 முன்னிற்றலை | ... | பின்னிற்றலை |
| 36 மகளிருடைய பார்வையாலே சிலேடையாக்குக | ... | மகளிருடைய பார்வையா லெழுந்த முகளுறியாத விசா ரத்தால் மதமுவகம்இதனு மரு தன வழிக்கல்லா நெஞ்சத்தை யுடையயானை. இன்னும் இடங் கழியானை சர்வ தொழிலிலே நெஞ்சியுடைய விளமையாகிய யானை கல்லிப்பா......விளமை யிழுக்கந்தாரர்...து அறியாதே கருத்தாலே மதத்தா......... இனின்றுங் கழிந்த யானை நெஞ்சம் முன்னூர் மிளமையு முன்னுரமு முடைய...... சிலேடையாக்குக. |

| | | |
|---|---|---|
| 55 ………… | … | திருந்துவேற்றடக்கை - சேரன் |
| 154 பரதனென்றது கோவலனது முற்பெயர் | … | பார்தகனென்றது கோவலனை முறைப் பெயர் கோவலன் அ……… துப்பாதகனென்றும் பெயருடையனுதலால். |

## 28. நடுகற்காதை

| | | |
|---|---|---|
| 98–107 குயிலாலுவமென்னும்… அமர்க் | … | குயிலாலுவமென்னும் திருப்பதி யிலிறைவனை வணங்கிஞராகக் காட்டியுமமர்க்களம் |
| 205–6 அழும்பில்வேள்… மூதூர் | … | அழும்பில்வேள் - புனவரிக் கூறு மூதூர் |

## 30. வரந்தருகாதை

| | | |
|---|---|---|
| 179 (173) வஞ்சி மூதூர் என்றது … முதலாக | | யானுஞ் சென்றேனென்றது முதலாக |